# ஆதிசங்கரர்

அருளிய

# கீதைப்பேருரை

தமிழாக்கம்

இரா.சு.முத்து எம்.ஏ.

**ஆதிசங்கரர்**

அருளிய

# கீதைப்பேருரை

மூல சமஸ்கிருத சுலோகம், தமிழ் உச்சரிப்பு வடிவம்
மொழிபெயர்ப்பு மற்றும் விரிவான
பொருளுரைகளுடன்


தமிழாக்கம்

**இரா.சு. முத்து** எம்.ஏ.



**சித்தாந்த பதிப்பகம்**

28. டாக்டர். பெசன்ட் சாலை,

சென்னை - 600 014.

# சமர்ப்பணம்



எனது மானசீக ஞானகுரு

# மகாகவி பாரதி க்கு

பொருளடக்கம்

# முன்னுரை

"கீதா ... கீதா ... கீதா ..." என்று வேகமாகச் சொல்லும்போது "தாகீ ... தாகீ ... தாகீ ..." என்று ஒலிக்கும். தியாகீ என்றால் எல்லாவற்றையும் தியாகம் செய்துவிட வேண்டும்; முற்றிலும் துறந்துவிட வேண்டும் என்று பொருளாகும்."

*- பகவான் இராமகிருஷ்ணர்.*

"ஸ்ரீ சங்கராச்சாரியார் மகத்தான தமது விளக்க உரையை எழுதி பிரபலமாக்குவதற்கு முன் கீதை மக்களுக்கு அதிகமாகத் தெரியாமலிருந்தது."

"சங்கரரே கீதையை இயற்றியவர் என்றும், அவரே அதை மகாபாரதத்தில் திணித்தார் என்றும் கூறுபவர்கள் உண்டு."

"கீதை ஓர் அழகிய மலர் மாலையைப் போலவோ, சிறந்த மலர்களினாலான பூங்கொத்தைப் போலவோ விளங்குகிறது என்று கூறலாம். உண்மைகள் அவ்வளவு அழகு மிளிர அங்கே தொடுத்து வைக்கப்பட்டுள்ளன."

மேலே கூறப்பட்டவையெல்லாம், இருபதாம் நூற்றாண்டின் சிறந்த துறவியும், இணையற்ற ஞானியுமான சுவாமி விவேகானந்தரின் வார்த்தைகளாகும். மேலும் அவர்,

**க்லைப்யம் மா ஸ்ம கம: பார்த்த நைதத்த்வய்யுபபத்யதே ।**
**க்ஷுத்ரம் ஹ்ருதயதௌர்பல்யம் த்யக்த்வோத்திஷ்ட பரந்தப ॥**

*(2-3)*

"பார்த்தா! பேடித்தன்மையடையாதே. இது நினக்குப் பொருந்தாது. இழிபட்ட மனத்தளர்ச்சியை நீக்கி எழுந்து நில்; பகைவரைச் சுடுவோனே!"

கீதையின் முழுச் சாரமும் இந்த ஒரு சுலோகத்தில் அடங்கியுள்ளதாகவும் கூறுகிறார்.

அப்படிப்பட்ட மகிமை வாய்ந்த இந்த கீதைக்கு ஆதிசங்கரர், இராமானுஜர், மத்வர் தொடங்கி மகாத்மாகாந்தி, வினோபாவே என்று பல மகான்கள் விளக்கவுரை எழுதியுள்ளனர்.

மகாகவி பாரதி, கீதையின் எழுநூறு சுலோகங்களையும், எளிய, இனிய, தேன்சொட்டும் தமிழில் பெயர்த்துள்ளார்.

இவ்வாறு பற்பலராலும் எழுதப்பட்ட விளக்க உரைகளில் முதலும். மூத்ததுமான விளக்க உரை ஆதிசங்கரர் எழுதியதேயாகும். இருந்தும், அதுவே இன்றும் பலருக்குப் புரிந்து கொள்வதற்கு சற்றுக் கடினமானதாகவும் விளங்குகின்றது.

இரண்டாம் அத்தியாயத்தின் பதினோராம் சுலோகத்தில், "துயரப்படத் தகாதார் பொருட்டு துயரப்படுகின்றாய், ஞான உரைகளும் உரைக்கின்றாய், இறந்தார்க்கேனும், இருந்தார்க்கேனும் துயர் கொள்ளார் அறிஞர்" என்று அர்ஜுனனிடம் கூறுகிறார் பகவான்.

இச்சுலோகம் ஒன்றிலேயே பகவத்கீதை முழுவதற்கும் அங்குரார்ப்பணம் செய்யப்படுகிறது என்று கூறலாம். காரணம் இச்சுலோகமே, துயரப்படத் தகுந்தவர் யார்? தகாதவர் யார்? இறந்தார் யார்? இருப்பார் யார்? ஞானமொழி என்றால் என்ன? அறிஞர் என்பார் யார்? என்று கீதையின் பதினெட்டாம் அத்தியாயம் வரை விரிந்து விகசிக்கிறது ஆதலின். அதனாற்றானோ என்னவோ ஆதிசங்கரரும் தமது விளக்க உரையை இச்சுலோகத்திலிருந்தே தொடங்குகிறார்.

ஆத்மாவைப் பற்றிக் கூறுமிடத்தும்,

"இவன் பிறப்பதுமில்லை; எப்போதும் இறப்பதுமில்லை; இவன் ஒருமுறையிருந்து பின்னர் இல்லாது போவதுமில்லை; இவன் பிறப்பற்றான்; அனவரதன்; இவன் சாசுவதன்; பழையோன்; உடம்பு கொல்லப்படுகையில் இவன் கொல்லப்படான்" (2-20). "நைந்த துணிகளைக் கழற்றி எறிந்துவிட்டு மனிதன் புதிய துணிகளை அணிந்து கொள்வதைப் போல் ஆத்மா நைந்த உடல்களைக் களைந்து புதிய உடல்களை எய்துகிறான்" (2-22) என்னும் சுலோகங்களுக்கும் ஆதிசங்கரர் அருமையான விளக்கமளிக்கிறார்.

அவ்வாறே மூன்றாம் அத்தியாயமாகிய கர்மயோகத்திலும், அவரவர்க்குரிய சுதர்மத்தைச் செய்தலே சிறந்ததென்றும், பிறர் தர்மம் தனது தர்மத்தை விடச் செய்வதற்கு எளிதாக இருப்பினும் விஷத்தில் பூத்த புழுக்கள் எங்ஙனம் விஷத்தினால் தீமை எய்துவதில்லையோ அங்ஙனம் தனது தர்மத்தினாலும் கேடு வராது என்று எடுத்துரைத்தும், அத்தகைய கர்மத்தைச் செய்வதினாலுண்டாகும் நன்மை, தீமை, பாவம், புண்ணியம் என்பவையான பலன்களை இறைவனுக்கு அர்ப்பணித்து பலனில் பற்றின்றி கர்மயோகியாகக் கர்மத்தைச் செய்ய வேண்டும் என்றும் விளக்கமளிக்கிறார்.

ஞானகர்ம சந்யாச யோகம் என்னும் நான்காம் அத்தியாயத்தில் "செய்கையில் செயலின்மையையும், செயலின்மையில்

செய்கையையும் எவன் காண்கிறானோ, அவனே மனிதரில் அறிவுடையோன். அவன் எத்தொழில் செய்கையிலும் யோகத்திலிருப்பான்'' (4-18) என்னும் சுலோகத்திற்கு விளக்கமளிக்கையில் 'இது எங்ஙனம் சாத்தியம்? இது முரணன்றோ?' என்று அவரே கேள்விகேட்டு, 'இது முரணில்லை. படகில் பயணம் செய்பவனுக்கு கரையில் நிற்கும் மரங்கள் பின்னோக்கி ஓடுவதுபோன்றும், ஓடுகின்ற படகு போன்றவை நிற்பது போன்றும் தெரிகின்றதே அது போன்றதுதான்' என்று அழகான உவமைகளைக் கூறி மிக அருமையான விரிவான விளக்கமளிக்கிறார்.

அங்ஙனமே, சந்யாச யோகம் என்னும் அத்தியாயத்தில், 'உண்மை அறிந்த யோகி, நான் எதனையும் செய்வதில்லை என்று எண்ணக்கடவான். காண்கினும், கேட்கினும், தீண்டினும், மோப்பினும், உண்பினும், நடப்பினும், உயிர்ப்பினும், உறங்கினும், புலம்பினும், விடினும், வாங்கினும், இமைகளைத் திறப்பினும், மூடினும், எதிலும் ''இந்திரியங்கள் தம்முடைய விஷயங்களில் சலிக்கின்றன'' என்று கருதியிருக்கக் கடவான்' (5-8,9) என்னும் சுலோகங்களுக்கு, உண்மை அறிந்த யோகி செயலில் செயலின்மையைக் காண்பதற்கு மிகச் சிறப்பான விளக்கங்களை அருளியுள்ளார்.

அதன் பின்னர் தியான யோகம், ஞான விஞ்ஞான யோகம், அக்ஷரப் பிரம்ம யோகம், ராஜ வித்தியா ராஜ ரகசிய யோகம், விபூதி யோகம், போன்ற அத்தியாயங்களுக்கு அருமையான விளக்கமளித்து விசுவரூப தரிசன யோகத்தில், பகவானின் விசுவரூப தரிசனத்தின் சிறப்புகளை எடுத்துக் கூறி, கர்மம், ஞானம், தியானம் என்பவற்றையெல்லாம் விட பக்தி எங்ஙனம் உயர்ந்தது என்பதை பக்தியோகத்தின் மூலம் எடுத்துக் காட்டி, க்ஷேத்ரம் என்பது என்ன? க்ஷேத்ரக்ஞன் யார்? என்பதற்கு க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகத்தில் விடையளித்து, முக்குணங்கள் என்பவை யாவை? அவை எங்ஙனம் செயல்படுகின்றன என்பதைச் சுட்டும் குணத்ரய விபாக யோகத்திற்கு விளக்கமளித்து, புருஷோத்தம யோகம், தெய்வாசுரசம்பத் விபாக யோகம், சிரந்தாத்ரய விபாக யோகம் முதலியவற்றை விளக்கி இறுதியில் பதினெட்டாம் அத்தியாயமாகிய மோக்ஷ சந்யாச யோகத்திற்கு மாபெரும் விளக்கமளித்துள்ளார்.

அப்பதினெட்டாம் அத்தியாயத்திலும், ''குந்தி மகனே, இயல்பான தொழில் குறையுடையதாயினும் அதைக் கைவிடலாகாது. தீயைப் புகை சூழ்ந்திருப்பதுபோல் எல்லாத் தொழில்களையும் குறைகள் சூழ்ந்துள்ளன'' (18-48).

"சித்தியடைந்தவன் எங்ஙனம் பிரம்மத்தில் கலப்பதாகிய மிகச் சிறந்த ஞான நிலை எய்துவான் என்பதைக் கேள்" (18-50).

"தர்மம் அனைத்தையும் துறந்துவிடு, சரணம் எனைநீ அடைந்துவிடு. கர்மவினைகள் பாவங்கள், களைவேன் இனிநீ அஞ்சாதே" (18-66) என்னும் மூன்று சுலோகங்களுக்கும் விரிவான, அருமையான விளக்கம் அருளியுள்ளார்.

இத்தகு சிறப்புடைய, பகவான் ஸ்ரீ ஆதிசங்கரரின் கீதா பாஷ்யம், பெரும்பாலோரால் ஆங்கில மொழியிலேயே பெயர்க்கப்பட்டுள்ளது. தமிழில் சற்றேறத்தாழ 92 ஆண்டுகளுக்கு முன் ஓர் மொழிபெயர்ப்பு வந்துள்ளது. அது சமஸ்கிருதமும், தமிழும் கலந்த மணிப்பிரவாள நடையில் இருப்பதால், இன்றைய கணிப்பொறி உலக இளைஞர்கள் இவ்வரிய இலக்கியத்தை எங்கே அறியாமல் இருந்து விடுவார்களோ என்னும் ஆதங்கத்தில் எல்லோருக்கும் புரியும் வண்ணம் எளிய, இனிய தமிழில் மொழிபெயர்த்துள்ளேன். இதன் தமிழ் நடை மட்டுமே எனக்குச் சொந்தம். கருத்துக்கள் அனைத்தும் பகவான் ஸ்ரீகிருஷ்ணருக்கும், ஆதிசங்கரருக்கும் உரியவையாகும்.

இந்நூல் அச்சிட்டு வெளிவருவதற்கு நிதிஉதவி செய்த திருமலை திருப்பதி தேவஸ்தானத்தின் ஆசிரியர் மற்றும் நிர்வாகத்தினருக்கும், இதனைப் பரிந்துரை செய்த அறிஞர் குழுவிற்கும் நான் எனது நெஞ்சார்ந்த நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

அடுத்து இதனை தமிழில் மொழிபெயர்க்க, எனக்கு ஊக்கமளித்து, பிழைதிருத்தி, நிதிஉதவி செய்து உற்றுழி உதவிபுரிந்த எனது மைத்துனர் ஸ்ரீராமராமானுஜ தாசன் இல்லையேல் இது புத்தகமாக வெளிவந்திருக்காது. அன்னாருக்கு நன்றி கூறுதல் எம்மை அன்னியப்படுத்தும் ஆதலினால் அவரும், அவர்தம் குடும்பத்தினரும் எல்லா நலமும் வளமும் பெற்று பல்லாண்டு காலம் வாழ திருவரங்கத்தான் திருவருளினை வேண்டுகின்றேன், வாழ்த்துகின்றேன்.

எந்தவொரு நூலையும் கற்கலாம், எழுதலாம், ஆனால் அதன்வழி நிற்பது என்பது எல்லோருக்கும் வாய்க்காது, எல்லோராலும் முடியாது. கீதைவழி நிற்கின்ற, கீதைவழி வாழ்கின்ற சென்னை இராமகிருஷ்ணா மடத்தைச் சேர்ந்த தவத்திரு. சுவாமி கமலாத்மானந்தர் அவர்களும், சென்னை விவேகானந்தா கல்லூரியின் சமஸ்கிருதத்துறை தலைவரும், மொழியியல் அறிஞரும், பன்மொழிப் புலவருமான டாக்டர். எஸ். இராமரத்தினம், எம்.ஏ., பி.எச்டி., அவர்களும் இந்நூலுக்கு மிகச் சிறந்த

அணிந்துரைகள் நல்கியுள்ளனர். அவர்களை வணங்கி, அவர்களுக்கு எனது நன்றியினைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

இந்நூலுக்கு லேசர் ஒளி அச்சு செய்து கொடுத்த ‘கே.சி.கே. சிஸ்டம்ஸ்’ திரு. சந்திரசேகரன் அவர்களுக்கும், இதனை மிகச் சிறந்த முறையில் அச்சிட்டுக் கொடுத்த ‘‘பாரதி எண்டர்பிரைசஸ்’’ நிறுவனத்தினருக்கும் எனது நன்றி என்றும் உரித்தாகும்.

**இரா.சு. முத்து**

ஸ்ரீராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர்
சென்னை - 4.
சுவாமி கமலாத்மானந்தர்

# அணிந்துரை

இந்துமதம் தோற்றுவித்த அருள் நூல்களிலேயே தலையாய முக்கியத்துவம் பகவத்கீதைக்குத்தான் உண்டு. 'இந்து மதத்தின் இதயம்' என்று அதைத் துணிந்து கூறலாம்.

அத்தகைய கீதையை மகாபாதரம் தனது மணிமகுடமாகக் கொண்டிருக்கிறது.

இந்துமதம் உலகிலேயே தொன்மை வாய்ந்த மதம். வேதகாலம் முதல் இன்று வரையில் இந்து மதத்தில் தோன்றிய அருள் நூல்கள் எண்ணற்றவை. இவற்றுள் பிரஸ்தானத்திரயம் எனப்படும் 1.உபநிஷதங்கள், 2.பகவத்கீதை, 3.பிரம்மசூத்திரம் ஆகியவை தலையாய முக்கியத்துவம் பெறுகின்றன.

இந்த மூன்றிலும் கூட நடுநாயகமாக இருக்கும் கீதை முதன்மையான இடத்தைப் பெறுகிறது.

பகவத்கீதை ஒரு மோக்ஷக்ரந்தம் (அதாவது, ஒரு முக்திநூல்). இதன் நடை அழகானது; மிகவும் எளிமையானது.

தத்துவச் சிந்தனைகளில் ஆர்வம் கொண்ட எல்லோருக்கும் எப்போதும் பகவத்கீதை நல்ல ஓர் ஆன்மிக விருந்தாகத் திகழ்ந்து வருகிறது.

இந்தியாவில் தோன்றிய சிந்தனையாளர்களில் பலர், ஆச்சாரியர்களில் பலர், பகவத்கீதைக்கு விளக்கம் எழுதியிருக்கிறார்கள். இந்த விளக்கவுரைகளைப் படிக்கும் ஆத்மசாதகர்கள் காலமெல்லாம் மகத்தான பெரும் பயன்களை அடைந்து வருகிறார்கள்.

''கீதை புகட்டும் அறிவுரை என்ன? 'கீதா', 'கீதா' என்று திரும்பத் திரும்பக் கூறினால், 'தாகி, தாகி' (தியாகி, தியாகி) என்ற சொல் வருகிறது. வாழ்க்கையில் எவன் பெண், பொன் ஆசையைத் துறந்துவிட்டானோ, எவன் இறைவனிடத்தில் முழுமையான பக்தியைக் கொண்டுள்ளானோ அவனே கீதையின் ரகசியத்தை அறிந்தவன். கீதை முழுவதையும் படிக்க வேண்டிய அவசியமில்லை. அது கூறும் தியாகத்தைக் கடைப்பிடித்தாலே அதைப் படித்ததன் பயன் கிடைக்கும்'' என்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் சொல்வது வழக்கம்.

சுவாமி விவேகானந்தருக்கு மிகவும் பிடித்த, ''வீரனாக எழுந்து நில்!'' என்ற கருத்துடன் பகவத்கீதை துவங்குகிறது. வீரனாக விளங்குவதுதான் ஒருவரது ஆன்மிக வாழ்க்கையின் ஆரம்பம்.

''தர்மங்களையெல்லாம் அறவே விட்டு என்னையே சரணடைவாயாக. எல்லாப் பாவங்களிலிருந்தும் உன்னை நான் விடுவிப்பேன் வருந்தாதே'' என்று சரணாகதி தத்துவத்தைக் கூறி கீதை (18-66) முடிவு பெறுகிறது. இந்தச் சுலோகம் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது என்பதால் அதை 'சரம சுலோகம்' என்று பெரியோர்கள் கூறுவது வழக்கம்.

ஆச்சாரியர்கள் பலரும் ஆத்மசாதகர்கள் பலரும் கீதையின் சாரம் என்றும், கீதை உலகிற்கு வழங்கும் முக்கியச் செய்தி என்றும் சரணாகதியையே கருதுகிறார்கள்.

இந்துமதத்தில் தோன்றிய அருள் நூல்களின் சாரம் பகவத்கீதை. உலகில் தோன்றிய எல்லா அருள் நூல்களின் சாரமும் பகவத்கீதைதான். அப்படிப்பட்ட பகவத்கீதையின் சாரமாக சரணாகதி விளங்குகிறது. எனவே உலகில் தோன்றிய அனைத்து ஆன்மிகச் சிந்தனைகளின் சாரம் - மனிதன் உலகில் வாழ வேண்டிய ஆன்மிக வாழ்வின் இறுதி நிலை சரணாகதிதான்; இறைவனிடம் சரண் புகுந்து உலகில் நமக்கு வாய்த்த கடமைகளைச் செய்து வாழ்வதுதான் என்று நாம் கொள்ள வேண்டியிருக்கிறது.

சுவாமி விவேகானந்தர் அமெரிக்கா செல்வதற்கு முன்பு, சுமார் ஆறு ஆண்டுகள் இந்தியா முழுவதும் கால்நடையாகப் பிரயாணம் செய்தார். அந்தத் தம்முடைய பரிவ்ராஜிக வாழ்க்கையில் தம்மிடம் எதையுமே வைத்துக் கொள்ளாத சுவாமி விவேகானந்தர், ஒரு பகவத்கீதைப் பிரதியை மட்டும் தம்மிடம் வைத்திருந்தார்.

''ஒரு சந்நியாசி தன்னிடம் எதையுமே வைத்துக் கொள்ளாமல் இருந்தாலும் - ஒரு சந்நியாசியிடம் எதுவுமே இல்லாமல் இருந்தாலும் - பகவத் கீதை இருக்க வேண்டும்'' என்று பகவான் ஸ்ரீராமகிருஷ்ணர் கூறியிருக்கிறார்.

ஸ்ரீராமகிருஷ்ண மிஷன் தனது ஆரம்ப காலத்திலிருந்து நூல்களின் மூலம் - முக்கியமாகச் சொற்பொழிவுகளின் மூலம் - பகவத்கீதையைப் பிரசாரம் செய்வதைத் தனது ஒரு முக்கியப் பணியாகக் கொண்டிருக்கிறது. ஸ்ரீராமகிருஷ்ண - விவேகானந்த இயக்கம் தோன்றிய பிறகுதான், பகவத்கீதை மக்களிடையே இந்த அளவுக்குப் பிரபலமாயிற்று.

மகாத்மா காந்திஜி கீதையைத் தன்னுடைய சொந்தத் தாயாகவே கருதினார்; ''கீதை என் தாய்'' என்று அனுபவித்துக் கூறிய அவர், அதில் பூரண மனநிறைவையும் பெற்றிருந்ததை நாம் பார்த்தோம். கீதை காட்டிய வழியில் வாழ்வதற்கு அவர் மனப்பூர்வமாகப் பயிற்சியும் செய்துவந்தார். அதுவே அவர் அடைந்த அனைத்து வெற்றிகளுக்கும் அடிப்படையாக விளங்கியது.

காந்திஜியைப் போலவே வினோபாவும் கீதையில் ஆர்வம் கொண்டிருந்தார்; கீதை வழியில் வாழ்வதற்குப் பழகினார்; கீதையைப் பிரசாரம் செய்தார்.

தினந்தோறும் செய்தித் தாள்களைப் படிக்கிறோம்; மறுநாளே அவற்றை மறந்து விடுகிறோம்; தூரப் போட்டு விடுகிறோம். இதைப் போன்ற ஒரு தொடர்புதான் நமக்கும் பல நூல்களுக்கும் கூட இருக்கிறது. காரணம், திரும்பத் திரும்ப படிப்பதற்குரிய - திரும்பத் திரும்பச் சிந்திப்பதற்குரிய - அரிய கருத்துக்கள் அவற்றில் இல்லை என்பதுதான்.

ஆனால் பகவத்கீதை அப்படிப்பட்ட ஒரு நூல் அல்ல. ''பகவத்கீதையை நான் படித்து முடித்து விட்டேன்' என்று ஞானசாதகர்கள் எவரும் சொல்லவில்லை; சொல்லமாட்டார்கள். சொல்லவும் கூடாது.

ஏனென்றால், கீதை படித்து முடிக்க வேண்டிய ஒரு நூல் அல்ல; மாறாக, வாழ்நாள் முழுவதும் ஒருவர் படிக்கவும் சிந்திக்கவும் வேண்டிய ஒரு சாஸ்திரம் தான் பகவத்கீதை.

நல்ல உணவை உட்கொண்டால் உடல் ஆரோக்கிய நிலையில் இருக்கிறது. பொருந்தாத உணவை உட்கொண்டால் உடல் நலம் கெடுகிறது.

அதுபோல் வியாபார ரீதியில் எழுதப்படும் மனிதனின் மிருக இயல்பைத் தூண்டும் தீயநூல்கள் பொருந்தாத உணவு போன்றவை. அவற்றைப் படிப்பதால் மனிதனின் மனநிலை பாதிக்கப்படும்; அறியாமை என்ற இருள் மேலும் மேலும் சூழ்ந்து கொள்ளும். மனதின் ஆற்றல்கள் சிதைந்துபோகும்; உயர்ந்த சிந்தனைகளைச் சிந்திக்க இயலாத நிலை ஏற்படும்; குறிக்கோளிலிருந்து நழுவும் நிலை ஏற்படும்; உடல் நலம் பாதிக்கப்படும்.

இதற்கு மாறாக நல்ல உணவு மனிதனின் உடல் நலத்தை உறுதிப்படுத்துவது போல், மனிதன் தன்னிடமுள்ள தெய்விக இயல்புகளை வெளிப்படுத்த உதவும் பெருநூல் கீதை.

கீதையைக் கற்பது மனதை வளப்படுத்தும்; முடிவில் ஆத்மஞானத்தில் கொண்டு போய்ச் சேர்க்கும்.

''எவனால் பகவத்கீதை சிறிதேனும் படிக்கப்பட்டதோ, கங்கா தீர்த்தம் துளியேனும் பருகப்பட்டதோ, விஷ்ணுவின் அர்ச்சனை ஒரு தடவையேனும் செய்யப்பட்டதோ அவனுக்கு யமனிடம் பயப்பட வேண்டிய நிலை ஏற்படாது'' என்று பஜகோவிந்தம் கீதையின் முக்கியத்துவத்தை இரத்தினச் சுருக்கமாகக் கூறுகிறது.

கீதையிலிருந்து தினமும் ஓர் அத்தியாயத்தைப் பாராயணம் செய்வது - தினமும் ஒரு சுலோகத்தை மனப்பாடம் செய்து அதன் பொருளை ஆழ்ந்து சிந்திப்பது - ஆகியவை ஆரோக்கியம் வாய்ந்த மிகவும் நல்ல பழக்கங்களாகும். இதை ஆத்மசாதகர்கள் தமது அன்றாட வாழ்க்கையில் ஓர் அங்கமாகவே கடைப்பிடிக்க வேண்டும்.

இவ்விதம் செய்வது நமது தனிமனித வாழ்க்கைக்கு ஆன்மிக வளம் சேர்ப்பதோடு சமுதாய நலனையும் மேன்மைப் பெறச் செய்யும்.

ஆதிசங்கரர் பகவத்கீதைக்கு எழுதிய விளக்கவுரை உலகப் புகழ் பெற்றது. அதற்கு நல்ல ஒரு தமிழாக்கம் தேவை என்ற நீண்ட நாளைய குறையை இப்போது இரா.சு.முத்து தீர்த்து வைத்திருக்கிறார். அவரது எளிய தமிழ்நடை மனதாரப் பாராட்டும் வகையில் அமைந்துள்ளது.

'ஆதிசங்கரர் அருளிய கீதைப் பேருரை' என்ற இந்த நூல் பகவத்கீதை மீது ஈடுபாடு கொண்ட அனைவருக்கும் ஒரு வரப்பிரசாதமாகும்.

இந்த நூலைத் தமிழில் மொழிபெயர்த்து வழங்கியதன் மூலம் தமிழுக்கும் அன்பர் இரா.சு.முத்து சிறந்த தொண்டு புரிந்திருக்கிறார்.

அவருக்கு எனது பூரண நல்வாழ்த்துகள்.

கடவுள் தொண்டில்
தங்களன்புள்ள
சுவாமி கமலாத்மானந்த
(சுவாமி கமலாத்மானந்தர்)

23-6-1999
ஸ்ரீராமகிருஷ்ண மடம்
மயிலாப்பூர், சென்னை - 600 004.

## அணிந்துரை

முனைவர் **சு.இராமரத்தினம்,** எம்.ஏ., பிஎச்.டி.,
(சமஸ்கிருதம்), பேராசிரியர் மற்றும் சமஸ்கிருத துறையின் முதுகலை
மற்றும் ஆய்வுப்பிரிவின் தலைவர்,
**இராமகிருஷ்ணா மிஷன் விவேகாநந்தா கல்லூரி,**
சென்னை - 600 004.

ஒவ்வோர் மதத்திற்கும், அதன் கொள்கைகளை விளக்கும் வகையில் புராண நூல்களும், தத்துவ நூல்களும், தேவைப்படுகின்றன. புராணங்கள், பாமர மக்களுக்கும், தத்துவ நூல்கள் கற்றோருக்கும் பெருமளவில் பயன்படுகின்றன.

இந்து மதத்தைப் பொறுத்தவரை அதன் தத்துவங்களை விளக்குபவை முக்கியமாக மூன்று நூல்கள். அவை பிரம்ம சூத்திரம், உபநிடதங்கள், பகவத்கீதை ஆகியவை. பிரம்ம சூத்திரங்களின் கருத்தைப் புரிந்து கொள்வது சற்று கடினம். உபநிடதங்கள் மிகவும் விஸ்தாரமானவை. ஆனால் பகவத்கீதையோ மற்ற இரண்டு தொகுதிகளின் கருத்துக்களை கரும்பைப் பிழிந்து சாற்றினைக் கொடுப்பதுபோல, எளிமையான முறையில் சுமார் எழுநூறு செய்யுள்களில் வடித்துக் கொடுக்கப்பட்டிருக்கிறது. 'பகவத்' என்றால் இறைவனுடைய என்று பொருள். 'கீதை' என்றால் பாடல் என்று பொருள். பகவான் ஸ்ரீ கிருஷ்ணருடைய திருவாயிலிருந்து தேனமுதமாய் வெளிவந்த கருத்துக்களின் தொகுப்பு பகவத்கீதை எனப்படுகிறது.

பகவத் கீதை மஹாபாரதத்தின் ஓர் அங்கம். குரு வம்சத்து அரசனான திருதராஷ்டிரனுக்கு பார்வை கிடையாது. எனவே அவர் தனது தம்பியான பாண்டுவுக்கு அரசுரிமையை அளிக்கிறார். ஆனால் பாண்டு துர்மரணம் அடைய நேரிடவே திருதராஷ்டிரனே மறுபடியும் அரசுரிமையை ஏற்கிறார் பாண்டுவின் புதல்வர்கள் ஐவர். அவர்கள் பாண்டவர்கள் எனப்பட்டனர். திருதராஷ்டிரனுக்கு நூறு புதல்வர்கள். அவர்கள் கௌரவர்கள் எனப்பட்டனர். ராஜ்ஜியம் பிரிக்கப்படுகிறது. எனினும் அரசுரிமைப் போட்டியில் சச்சரவு ஏற்பட்டு இரு தரப்பினரிடையே பெரும் போர் மூள்கிறது. பாண்டவர்களில் நடுவரான அர்ச்சுனன் பெரும் வீரன். விற்போரில் வல்லவன். அவனது தேரோட்டியாக வந்து அமைகிறார் ஸ்ரீ கிருஷ்ணர். முதல் நாள் போரன்று இருபடைகளும் நேருக்கு நேர் வியூகம் அமைத்து நிற்கின்றன. அர்ச்சுனன்

எதிரிப் படையை ஒரு நோட்டம் விடுகிறான். அவனது பாட்டனார் பீஷ்மர், ஆசிரியர் துரோணர் ஆகியோர் எதிர்த்தரப்பில், நிற்கின்றனர்.

கௌரவர்களும் அவனது அண்ணன் தம்பிகளே. இவர்கள் அனைவரையும் கொன்று ராஜ்ஜியத்தை அடைவதால் என்ன பயன் என்று யோசிக்கிறான். பெரும் பாபம் அல்லவா தன்னை வந்து சேரும் என்று கலங்குகிறான். அவனது மனம் மருகுகிறது. கைகள் துவள்கின்றன. கண்களில் கண்ணீர் பெருகுகிறது. நான் இனி போர் செய்ய மாட்டேன் என்று கூறிவிட்டு, தன் மனக் குழப்பத்திற்கு ஸ்ரீ கிருஷ்ணரிடம் விடை கேட்கிறான். அவனுக்கு ஸ்ரீ கிருஷ்ணர் எடுத்துரைத்த அறிவுரைகள் தான் பகவத் கீதையாக உருவெடுக்கிறது.

பகவத் கீதையின் முக்கிய கருத்துக்கள் என்னவென்றால் - கடமையைச் செய், பலனை எதிர்பார்க்காதே. உடல்தான் அழியக்கூடியதே அன்றி ஆன்மா அழிவற்றது. அந்த ஆன்மாவைப் பற்றி முழுமையாக அறிபவனே குறையற்ற ஆனந்தத்தை அடையமுடியும். அந்த ஆன்ம நிலையை அடைய கர்ம மார்க்கம், ஞான மார்க்கம், பக்தி மார்க்கம் இம்மூன்றில் எதை வேண்டுமானாலும் மேற்கொள்ளலாம்.

ஆன்மஞானம் அடைவது எப்படி என்று பகவத்கீதை விரிவாக எடுத்துரைக்கிறது. ஆன்ம ஞானத்தை யார் வேண்டுமானாலும் அடைய முயற்சிக்கலாம். இதற்கு ஜாதி மத பேதங்களோ, ஆண், பெண், சிறியவர், பெரியவர் ஆகிய வித்தியாசங்களோ கிடையாது. பகவத் கீதையின் கருத்துக்கள் எக்காலத்திற்கும், எந்நாட்டவர்க்கும் பொருந்தும் வகையில் அமைந்திருக்கின்றன. எனவே, உலக அளவில் பெரும் வரவேற்பைப் பெற்ற நூலாக இன்றளவும் விளங்குகிறது பகவத்கீதை. பகவத் கீதைக்கு பல்வேறு அறிஞர்களும், மகான்களும், உரைநூல்கள் எழுதியிருக்கின்றனர். அவற்றுள் ஸ்ரீசங்கரர், ஸ்ரீராமானுஜர், ஸ்ரீமத்வர் ஆகியோர் எழுதிய உரைகள் குறிப்பிடத்தக்கவை. அனேகமாக உலக நாடுகளின் அத்துணை மொழிகளிலும் இந்நூல் மொழிபெயர்க்கப்பட்டிருக்கிறது.

பகவத் கீதையின் உரைநூல்களில் ஆதிசங்கரர் எழுதிய உரை சிறப்பிடம் பெறுகிறது. இவ்வுரையும் பல்வேறு மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்டிருக்கிறது. இந்நூற்றாண்டில் இராமகிருஷ்ண மடத்திலிருந்து வெளிவந்த ஆங்கில உரை நூல்கள் சிறப்பான முறையில் அமைந்திருக்கின்றன. தமிழைப் பொறுத்த வரை அதிக நூல்கள் வெளிவரவில்லை. பெரியகுளம் சுந்தரராஜ சர்மா என்பார் 1909 ஆம் ஆண்டில் ஆதிசங்கரர் உரையை தமிழில் மொழி பெயர்த்து வெளியிட்டிருக்கிறார். ஆனால் அது மணிப்ரவாள முறையில் அமைந்திருக்கிறது. இரா.சு.முத்து அவர்களால் தற்போது வெளியிடப்பட்டுள்ள இப்புதியநூல் பகவத்கீதை மற்றும் ஸ்ரீசங்கரரின் உரையை எளிய தமிழில் தருகிறது. இதற்காக தமிழ் கூறும் நல்லுலகம் திரு.முத்து அவர்களுக்கு என்றென்றும் கடமைப்பட்டிருக்கும். எல்லா மொழி நூல்களும் தமிழில் பெயர்த்திட வேண்டும் என்ற கருத்தை

மகாகவி பாரதியார் வலியுறுத்தியிருக்கிறார். அவரது கனவை நினைவாக்கும் வகையில் அமைந்திருக்கிறது இந்நூல்.

மொழிபெயர்ப்பில் ஆசிரியர் பல எளிய வழிமுறைகளைக் கையாண்டிருக்கிறார். பல இடங்களில் எல்லோருக்கும் புரிந்த சம்ஸ்க்ருத வார்த்தைகளை அப்படியே கையாண்டிருக்கிறார். (உதாரணம் : பக்கம் 18 - சத்திரிய தர்மம், பரதர்ம விதி) இது போற்றத்தகுந்த அம்சம். ஏனெனில் ஒவ்வோர் மொழியிலும் சில சிறப்பு சொற்றொடர்கள் இருக்கின்றன. அவற்றை மற்றோர் மொழியில் பெயர்ப்பது கடினம், அச்சொற்றொடர்களை அப்படியே எடுத்துக் கையாள்வது தான் சாலச் சிறந்தது. வேண்டும் இடங்களில் ஆசிரியர் தமிழ் மொழி பெயர்ப்புச் சொல்லை அடைப்புக்குறிகளிடையே கொடுத்திருக்கிறார். (உதாரணம் : பக்கம் 33 - புராண: (பழையோன்)). பல இடங்களில் ஆசிரியரின் மொழிபெயர்ப்பு கவிதை நயத்துடன் அமைந்திருக்கிறது. (உதாரணம்: பக்கம் 21 - துறந்து பின்னர் அவர்கள் இரந்து வாழ்கின்றனர்).

மூல உரையில் பல நீண்ட வாக்கியங்கள் காணப்படுகின்றன. தமிழ் உரையில் அவை சிறு சிறு வாக்கியங்களாக பிரிக்கப்பட்டு எளிமைப்படுத்தப்பட்டிருக்கின்றன. சரியான தமிழ்ச்சொல் இருக்கும் இடங்களில் அவையே எடுத்தாளப்பட்டிருக்கின்றன. உதாரணமாக யக்ஞம் என்பதற்கு 'வேள்வி', ஸந்நியாஸம் என்பதற்கு 'துறவு' போன்றன.

சம்ஸ்க்ருத ஸ்லோகங்கள் தேவநாகரியிலும் தொடர்ந்து தமிழ் லிபியிலும் கொடுக்கப்பட்டிருப்பது ஒரு சிறப்பு அம்சம். தேவநாகிரி லிபியை அறியாதவர்களுக்கும் மூல ஸ்லோகங்களை படிக்க உதவுகிறது. தமிழில் தரும்போது வேண்டும் இடங்களில் சந்தி பிரிக்கப்பட்டிருப்பதைப் பாராட்ட வேண்டும். (உதாரணம்: பக்கம் 38-ஜீர்ணானி அந்யானி) அத்துடன் ஸ, ஶ, ஷ, ஹ, ஜ, ஸ்ரீ போன்ற எழுத்துக்கள் உபயோகப்பட்டிருப்பதை வரவேற்க வேண்டும். இவை உச்சரிப்பு சுத்தத்திற்கு உதவுகின்றன. இன்னும் ஒருபடி மேலே போய், क, ख, ग, घ இவைகளை வித்தியாசப்படுத்தும் வகையில் $க_1$, $க_2$, $க_3$, $க_4$ என்ற குறிகளை உபயோகப்படுத்தியிருந்தால் சிறப்பாக இருந்திருக்கும்.

இந்நூலைத் தயாரிக்க ஆசிரியர் எடுத்துக் கொண்டிருககும் அயராத உழைப்பையும், விடாமுயற்சியையும், பெரிதும் பாராட்டுகிறோம். இத்தகைய நூல்கள் தமிழில் மேன்மேலும் வரவேண்டும். அதற்கு இந்நூல் ஒரு முன்னோடியாக இருக்கும் என்பதில் ஐயமில்லை. திரு. இரா.சு.முத்து அவர்களின் பணி தொடரவேண்டும். இதுபோன்ற பற்பல நூல்களை அவர் வெளியிடவேண்டுமென்று வாழ்த்துகிறோம். அவரை ஊக்குவிக்கும் வகையில் தமிழர்கள் அனைவரும் இந்நூலை வாங்கிப் படித்துப் பயன்பெறவேண்டும் என்று கேட்டுக் கொள்கிறோம்.

சு. இராமரத்தினம்

## கீதையின் சாரம்

கிருஷ்ண துவைபாயனர் எனப்படும் வேதவியாசரால் இயற்றப்பட்ட ஐந்தாம் வேதம் என்று புகழப்படும் மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் (அத்.25-42) குருக்ஷேத்திர யுத்தக் களத்தில் ஸ்ரீகிருஷ்ணக்கும், அர்ஜுனனுக்கும் இடையே நடைபெற்ற உரையாடலின் வடிவமே பகவத் கீதையாகும். இது மொத்தம் 700 சுலோகங்கள் கொண்ட 18 அத்தியாயங்களினால் ஆனதாகும்.

## அத்தியாயம் 1

முதலாம் அத்தியாயமாகிய அர்ஜுன விஷாத யோகத்தில் 47 சுலோகங்கள் உள்ளன. இதில் கௌரவர்களின் தந்தையாகிய திருதராஷ்டிரன், தனது உதவியாளனும், வேதவியாசரால் தெய்வீகப் பார்வை அளிக்கப்பட்டவனுமாகிய சஞ்சயனிடம், குருக்ஷேத்திர யுத்தக் களத்தில் நடைபெறும் நிகழ்வுகளைப் பார்த்துச் சொல்லுமாறு பணிக்கிறான். சஞ்சயன் தனது தெய்வீகப் பார்வையினால் கண்டு கூறியது. குருக்ஷேத்திரத்தில் மிகப் பிரம்மாண்டமான இரு படைகள் அணிவகுத்து போர் செய்யத் தயாராக நிற்கின்றன. திருதராஷ்டிரனின் மைந்தனாகிய துரியோதனன் துரோணாச்சாரியாரிடம் சென்று இருதிறத்துப் படை வீரர்களைப் பற்றி எடுத்துக்கூறி, தனது படைத்தளபதியாகிய பீஷ்மரை எல்லோரும் காத்தல் செய்ய வேண்டுமென்று வேண்டுகிறான். எதிர் தரப்பில் பாண்டவர்களில் சிறந்த வில்லாளியாகிய அர்ச்சுனன் தனது ரத சாரதியான ஸ்ரீகிருஷ்ணரிடம், ரதத்தை இருபடைகளுக்கும் நடுவில் கொண்டு நிறுத்துமாறு வேண்டுகிறான். கிருஷ்ணரும் அவ்வாறே செய்கிறார். தனக்கு எதிரே போர் சன்னதத்தில் தன் பாட்டனராகிய பீஷ்மரும், தனக்கு வித்தை கற்றுக் கொடுத்த குரு துரோணரும், தனது சோதரரும், மாதுலரும் மற்றும் பல் உறவினரும் நிற்பதைக் கண்ட அர்ச்சுனன், பாசமயக்கத்தின் காரணமாகப் 'போர் இனிப்புரியேன்' என்று வில்லையும் அம்புகளையும் கீழே போட்டுவிட்டு வாய்புதைத்து மௌனியாகத் தேர்த்தட்டில் அமர்ந்து கொள்கிறான்.

## அத்தியாயம் 2

இரண்டாம் அத்தியாயம் ''சாங்கிய யோகமாகும்' இதில் மொத்தம் 72 சுலோகங்கள் உள்ளன. இதில் சோகத்துடன் அமர்ந்திருந்த அர்ஜுனனைப் பார்த்துப் பகவான் கிருஷ்ணர், ''இம்முட்டுதலில் இவ்உளச் சோர்வை நீ

எங்ஙனம் பெற்றாய், இது ஆரியருக்குத் தகாது, அபகீர்த்தி தருவது அதனால் போர் செய்வாக'' என்று கூறுகிறார். அதற்கு அர்ஜுனன், ''பெரியோர்களாகிய பீஷ்மரையும், துரோணரையும், குருகுலத்தாரையும் கொன்று துய்க்கும் இன்பம் உதிரம் தோய்ந்தது, இவர்களை நான் எங்ஙனம் கொல்வேன், எனக்கு அறம் என்னவென்பது நிச்சயமாய் தெரியவில்லை. அதனை உணர்த்துக. நீயே என் குரு. உன்னைச் சரணடைந்தேன்''. என்று துயரத்துடன் வேண்டிக் கொள்கிறான். அதற்கு பகவான் ''துயரப் படத்தகாதார் பொருட்டு துயர்ப்படுகின்றாய். நீ கொல்லப் போவதாகக் கருதும் இவர்களின் உடல்களே அழிகின்றன. இவர்களின் ஆன்மாக்கள் அழிவதில்லை'' என்று தொடங்கி ஆன்மாவின் அழிவற்றத் தன்மைகளையெல்லாம் எடுத்துக் கூறி க்ஷத்திரியனுக்கு சுதர்மம், போர் செய்தலே என்றும், பலன் கருதி செய்யப்படும் கர்மங்களே பந்தப்படுத்துகின்றனவென்றும், பலன்கருதாது சமப்பார்வையுடன் செய்யப்படும் கர்மம் விடுதலை நல்குமென்றும், அதுவே 'புத்தியோகம்' என்றும் அறிவுறுத்துகிறார்.

அப்போது அர்ஜுனன் புத்தியிலே உறுதியுடைய ஸ்திதப் பிரக்ஞனைப் பற்றிக் கேட்க, அதற்கு பகவான், ஆசைகள் அனைத்தையும் துறந்து தன்னில்தான் மகிழ்ந்து, இன்ப துன்பம் எனும் இருமைகளற்று, காமமும், சினமும் தவிர்த்து, புலன்களை வென்று, உலகமெல்லாம் உறங்கும் ஆன்மீக நிலைப்பேறில் விழிப்புடன் இருந்து, இறுதிக்காலத்தில் கூட, பிரம்மத்தில் நிலைபெற்றிருப்பவனே, ஸ்திதப்பிரக்ஞன் என்று விளக்கியருள்கிறார்.

## அத்தியாயம் 3

மூன்றாம் அத்தியாயமாகிய ''கர்ம யோகம்'' 43 சுலோகங்கள் கொண்டதாகும். இதில் அர்ஜுனன் பகவானைப் பார்த்து, ''புத்தியே சிறந்தது என்பது நின் கொள்கையானால், என்னை ஏன் இக்கொடிய கர்மத்தில் கொண்டு புகுத்துகிறாய்?'' என்று கேட்கிறான்.

அதற்கு பகவான், ''இவ்வுலகில் இரண்டு விதமான நிஷ்டைகள் என்னால் முதலில் கூறப்பட்டன. ஒன்று சாங்கியர்களின் ஞானயோகத்தால் எய்துவது மற்றொன்று யோகிகளின் கர்மயோகத்தால் எய்துவது'' என்று தொடங்கி, ''ஞான யோகத்திற்குக் கர்மங்கள் அனைத்தையும் துறத்தல் வேண்டும். இது எல்லோர்க்கும் முடியாது, ஒரு சிலரே அவ்வாறு செய்ய முடியும். ஆனால் மனதினை அடக்கி உலகின் நன்மைக்காக தனக்குரிய கர்மத்தைச் செய்வது எல்லோர்க்கும் எளிதானதும், நலம் பயப்பதுமாகும். ஜனகர் முதலானோர் கர்மத்தினாலேயே, சித்தி பெற்றனர். மூவுலகிலும் எனக்கு யாதொரு கடமையுமில்லை. எனினும் நான் எப்போதும் கர்மத்தில்தான் இயங்குகின்றேன். கர்மம் அனைத்தையும் பற்று நீக்கி எனக்கு அர்ப்பணித்துச் செய்யவும், அப்போது கர்மபலன் உன்னை அண்டாது. நன்றாகச் செய்யப்படும் பரதர்மத்தைக் காட்டிலும் குறைவுடையதாயினும் சுதர்மமே சிறந்ததாகும். சுதர்மத்தைச் செய்ய விடாது ஒருவனைத் தீமையில் புகுத்துவது அவனது விருப்பமும் சினமுமேயாகும். இவற்றைப் புலன்களை அடக்கி மனதினை ஆத்மநிலைக்கு உயர்த்துவதன் மூலமே வெல்ல முடியும்'' என்று கூறுகிறார்.

## அத்தியாயம் 4

நான்காம் அத்தியாயமாகிய "ஞானகர்ம சந்நியாச யோகம்" என்னும் அத்தியாயத்தில் மொத்தம் 42 சுலோகங்கள் உள்ளன. இதில் பகவான் கிருஷ்ணர் தாம் இக்கர்மயோகத்தை ஆதியில் விவஸ்வானுக்கு அருளினார் என்றும், அவன் அதனை மனுவிற்கும், மனு இக்ஷ்வாகு மன்னனுக்கும் எடுத்துரைத்தனர் என்றும் பரம்பரையாக வந்த இந்த யோகம், நாளாவட்டத்தில் இவ்வுலகில் இழக்கப்பட்டு விட்டதென்றும் கூறுகிறார். அதற்கு அர்ஜுனன், ஸ்ரீகிருஷ்ணர் இப்போது இருப்பவர், இவர் எப்படி முற்காலத்தில் வாழ்ந்த விவஸ்வான், மனு போன்றவர்களுக்கு எடுத்துரைத்திருக்க முடியும் என்று ஐயம் கொள்கிறான். அதைப் பகவானிடமும் கேட்கிறான். அதற்கு பகவான், தமக்கும் அர்ஜுனனுக்கும் பல பிறப்புக்கள் கழிந்துள்ளனவென்றும், தமக்கு அவை தெரியுமென்றும் ஆனால் அர்ஜுனனுக்குத் தெரியாது என்றும் பதிலிறுக்கிறார். மேலும் எப்போதெல்லாம் தர்மம் அழிந்து அதர்மம் தலை தூக்குகிறதோ அப்போதெல்லாம் அவர் தம்மைப் பிறப்பித்துக் கொள்வதாகவும் கூறுகிறார். தமது அவதாரத்தின் உண்மையை உணர்ந்து கொண்டவன் முக்தியடைகிறான் என்றும் கூறுகிறார்.

அடுத்து எது கர்மம், எது கர்மமன்று என்று கர்மத்தின் இயல்பினை எடுத்துரைக்கிறார். செய்கையில் செயலின்மையையும், செயலின்மையில் செய்கையையும் காணவேண்டும் என்றும், பயனில் பற்றின்றி எப்போதும் திருப்தியுடையோனாய் கர்மத்தைச் செய்யவேண்டும் என்றும் கூறுகிறார். இதன் தொடர்பாகப் பல்வேறு வகையான யக்ஞங்களைப் பற்றியும் எடுத்துரைக்கிறார். எல்லா யக்ஞங்களிலும் ஞானயக்ஞமே மிகவும் சிறந்ததென்றும், அதனை ஞானிகளைச் சரண்புகுந்து அறிந்து கொள்ள வேண்டுமென்றும், யோகத்தால் செயல்களைத் துறந்து, ஞானத்தால் ஐயத்தை அறுத்துத் தன்னைத்தான் ஆள்வோனை கர்மங்கள் கட்டுப்படுத்துவதில்லை என்றும் விளக்கி அருள்கிறார்.

## அத்தியாயம் 5

ஐந்தாம் அத்தியாயமாகிய "சந்நியாச யோகம்" 29 சுலோகங்கள் கொண்டதாகும். இதில் அர்ஜுனனுக்கு கர்மயோகம் சிறந்ததா அல்லது கர்ம சந்நியாசம் சிறந்ததா என்னும் ஐயம் எழுகிறது. அதை அவன் கிருஷ்ணரிடம் கேட்க, அவர் இவ்விரண்டுமே நன்மை பயப்பனவாயினும், கர்மத்துறவைக் காட்டிலும் கர்மயோகமே சிறந்ததென்று பதில் கூறுகிறார். மேலும் இவ்விரண்டிற்கும் வேறுபாடு அறியாமையுடைமையினாலேயே காணப்படுகிறதென்றும், கர்ம யோகத்தின் துணையின்றி கர்ம சந்நியாசம் எய்துவது கடினமென்றும், சமபார்வையுடையோனாய், விருப்பமும், சினமும் தவிர்த்து, புலன்களை வென்று, பிரம்மத்தில் நிலைபெறுவதே இதற்குப் பெரிதும் துணைசெய்வனவென்றும் எடுத்துரைக்கிறார்.

## அத்தியாயம் 6

ஆறாம் அத்தியாயமாகிய "தியான யோகம்" 47 சுலோகங்கள் கொண்டதாகும். சென்ற அத்தியாயத்தில் விளக்கப்பட்ட சந்நியாசம் மற்றும் யோகத்தின் தொடர்ச்சியே இந்த அத்தியாயம் எனலாம். சந்நியாசம் மற்றும் யோகம் என்னும் இரண்டிற்கும் அடிப்படையாக செய்கையின் பலனைத் துறத்தலே இருப்பதால் இரண்டும் ஒன்றே என்று கூறலாம். ஸ்ரீ கிருஷ்ணர், "பாண்டவா, எதனை சந்நியாசமென்கிறார்களோ அதனை யோகம் என்றறி. தன் கோட்பாடுகளைத் துறக்காத எவனும் யோகியாக மாட்டான். யோகியானவன் சுத்தமான இடத்தில் ஆசனம் சமைத்துக் கொண்டு அங்கு மனதை ஒருமுகமாக்கி, உள்ளத்தையும், புலச் செயல்களையும் நன்கு கட்டுப்படுத்தி ஆசனத்து அமர்ந்து ஆத்மா நன்கு தூய்மையாகும்படி யோகத்திலே பொருந்தக் கடவான். இவ்வாறு இருக்கும் யோகி என்பால் நிலைபெற்றதாகிய ஆறுதலை அறிவான். யோகத்தில் நிலைபெற்றவன் எங்கும் சமப்பார்வை உடையவனாய், எல்லா உயிர்களிடத்தும் தானிருப்பதையும், தன்னுள் எல்லா உயிர்களும் இருப்பதையும் காண்கிறான். எவன் எங்கும் என்னைக் க: ண்கிறானோ, எல்லாப் பொருட்களையும் என்னிடத்தே காண்கிறானோ அந்த யோகி என்னுள்ளேயே இயலுகிறான்" என்று கூறுகிறார்.

இப்போது அர்ஜுனன் கேட்கிறான் "மதுசூதனா, மனம் சஞ்சலமுடையது, காற்றைக் கட்டுவதுபோல் மிகவும் கடினமானது. அதனை எங்ஙனம் கட்டுப்படுத்துவது?" அதற்கு பகவான், 'குந்தி மைந்த! மனம் கட்டுதற்கரியதுதான். ஆனால் பழக்கத்தாலும் பற்றின்மையாலும் அதனைக் கட்டிவிடலாம்' என்று பதிலிறுக்கிறார். அர்ஜுனன் மீண்டும் "கண்ணா! மனம் வழுவி யோகத்தினின்று தவறி விழும் யோகி எக்கதி அடைகிறான்?" என்று கேட்க, பகவான் "யோகத்தில் தவறியவன் புண்ணியம் செய்வோரின் உலகங்களை எய்தி அங்கு பல காலம் வாழ்ந்து தூய்மையுடைய செல்வர்கள் அல்லது யோகிகளின் குடும்பத்தில் பிறந்து மீண்டும் முயன்று தனது லட்சியத்தை அடைகிறான். தவஞ்செய்வோரிலும் யோகி சிறந்தோன்; ஞானிகளிலும் அவன் சிறந்தோனாகக் கருதப்படுகிறான். கர்மிகளிலும் அவன் சிறந்தோன்; அதனால் அர்ஜுனா, யோகி ஆகுக" என்று கூறுகிறார்.

## அத்தியாயம் 7

ஏழாம் அத்தியாயம் "ஞான விஞ்ஞான யோகமாகும்" இதில் 30 சுலோகங்கள் உள்ளன. "பார்த்தா, என்பால் இசைந்த மனத்தினனாய், என்னைச் சார்ந்து யோகத்தில் நிலைபெற்றவன் என்னை எங்ஙனம் முழுதும் உணர்கிறான் என்பதைக் கேளாய்" என்று கூறி பகவான் ஞான விஞ்ஞான யோகத்தை விளக்கத் தொடங்குகிறார். அவர் கூறுகிறார்: "பல்லாயிரம் மனதரில் ஒருவன் சித்தி பெற முயல்கிறான், அங்ஙனம் முயலும் சித்தர் பல்லாயிரவரில் ஒருவன் என்னை உள்ளபடி அறிகிறான். எனது கீழ்இயற்கை மற்றும் மேல்இயற்கையினால் இவ்உலகும் உயிர்களும் படைக்கப் படுகின்றன. என்னைவிட உயர்ந்த பொருள் ஒன்றுமில்லை. நூலில் மணிகளைப் போல் உலகங்களெல்லாம் என்மீது கோர்க்கப்பட்டுள்ளன. சத்துவம், ரஜஸ், தமோ

குணங்களினாலான மாயையினால் இவ் உலகம் மயக்குற்று என்னை உணராதிருக்கிறது. இத்தேவமாயை கடத்தற்கரியது, என்னையே யாவர் சரணடைவரோ, அவர்களே இந்த மாயையைக் கடக்கிறார்கள். என்னைச் சரண்புகாத மூடர்களும், தீயவர்களும் என்னை அடைவதில்லை. துன்புற்றோர், அறிவை விரும்புவோர், பயனை வேண்டுவோர், ஞானி என நால்வகையான பக்தர்கள் என்னை வழிபடுகின்றனர். அவர்களில் ஞானி சிறந்தவன். மக்கள் தங்கள் விருப்பங்களைப் பூர்த்தி செய்வதற்காக அன்னிய தேவதைகளை வழிபடுகின்றனர். எனினும் அத்தேவதைகளின் வடிவில் அவர்களின் விருப்பத்தை நிறைவேற்றுவோன் நானே. யோக மாயையினால் சூழப்பட்டிருப்பதால் பிறப்பும் கேடுமற்ற என்னை மூடஉலகம் அறிவதில்லை. பாவந்தீர்ந்து புண்ணியம் செய்பவரே இருமை மயக்கந் தெளிந்து விடுதலை பெறுவதற்காக என்னை வழிபடுகின்றனர்''

## அத்தியாயம் 8

எட்டாம் அத்தியாயம் 'அக்ஷர பிரம்ம யோகம்'' ஆகும். இதில் மொத்தம் 28 சுலோகங்கள் உள்ளன. இதன் ஆரம்பத்தில் அர்ஜுனன் பகவானிடம், பிரம்மம், ஆத்மஞானம், கர்மம், பூதஞானம், தேவஞானம், யாகஞானம் இவற்றைப் பற்றி விளக்கியருள வேண்டுகிறான். அவனுக்கு விளக்கமளிக்கும் முகத்தான் பகவான், ''அழிவற்றப் பரம்பொருளே பிரம்மம், அதனியல்பை அறிதல் ஆத்ம ஞானம், உயிர்த்தன்மை விளைவிக்கும் இயற்கை கர்மம், அழிவுபடும் இயற்கை பற்றியது பூதஞானம், புருஷனைப் பற்றியது தேவஞானம், உடம்புக்குள் என்னையறிதல் யாக ஞானம், இறுதிக் காலத்தில் உடம்பைத் துறந்து எனது நினைவுடன் இறப்போன் எனதியல்பை எய்துகிறான். ஆதலால் எல்லாக் காலங்களிலும் என்னை நினை. போர்செய். மனதில் சலனமின்றி யோகம் பயிலும் சித்தத்துடன் சிந்தனை செய்து கொண்டிருப்போன் தேவனாகிய பரமபுருஷனை அடைகிறான். 'ஓம்' என்னும் பிரம்ம எழுத்தை மட்டுமே ஜபித்துக் கொண்டு, என்னையே நினைத்து இறுதியில் தன்னுடல் துறப்போன் பரமகதி பெறுகிறான். என்னை அடைந்தவனுக்கு மறுபிறப்பு இல்லை. ஒளிவழி, இருள்வழி என்று இருவழிகள் உள்ளன. ஒளி வழி சென்று பிரம்ம லோகத்தை அடைபவன் மீண்டும் இங்கு பிறப்பதில்லை. ஆனால் இருள்வழி சென்று பித்ரு லோகத்தை அடைந்தவன் மீண்டும் இவ்வுலகில் பிறக்கிறான். இவ்விரு வழிகளையும் உணர்ந்த ஞானி மயங்குவதில்லை. ஆதலால் அர்ஜுன எப்போதும் யோகத்தில் கலந்திரு'' என்று பதில் கூறுகிறார்.

## அத்தியாயம் 9

''ராஜ வித்தியா ராஜ ரகசிய யோகம்'' என்னும் ஒன்பதாம் அத்தியாயத்தில் மொத்தம் 34 சுலோகங்கள் உள்ளன. இதில் பகவான் அர்ஜுனனிடம் ''குற்றமற்ற உனக்கு இந்த அதிரகசியமான ஞானத்தை விஞ்ஞானத்துடன் சொல்லுகிறேன். இதனை அறிவதால் தீமையினின்று விடுபடுவாய். ராஜ வித்தை ராஜ ரகசியம், தூய்மை தருவதில் மிக மாண்புடையது, கண்ணெதிரே காண்டற்குரியது, அறத்துக்கிசைந்தது,

செய்தற்கு மிக எளிது அழிவற்றது. அவ்யக்த வடிவாய் நான் இவ் உலகமுழுவதையும் சூழ்ந்திருக்கிறேன். என்னிடத்தே பூதங்களெல்லாம் நிலைபெற்றன. அவற்றுட்பட்டதன்று என் நிலை. குந்தி மகனே, எனது மேற்பார்வையில் சக்தி அசையும் அசையா உலகங்களைப் படைக்கிறாள். இதன் காரணமாகவே உலகம் சுழல்கிறது. மனித சரீரம் தரித்ததினால் மூடர்கள் என்னைப் புறக்கணிக்கின்றனர். உயிர்களுக்கெல்லாம் உயர்தலைவன் நான் என்ற என் பரமநிலையை அவர்கள் அறிகிலர். தெய்வீக இயல்பை கைக்கொண்ட மகாத்மாக்கள் உறுதியான மனத்துடன் என்னையே வழிபடுகின்றனர். இவ்உலகின் தந்தை நான்; தாய் நான்; ஓங்காரம் நான்; ரிக், யஜுர், சாமம் என்னும் வேதங்கள் நான். பிறிதோர் சிந்தனையின்றி எப்போதும் என்னை வழிபடுவோரின் . வளத்திற்கும், நலத்திற்கும் நான் பொறுப்பேற்கிறேன். அன்னிய தேவதைகளை வழிபடுவோர் அவற்றை எய்துகின்றனர். என்னை வழிபடுவோன் என்னை எய்துகிறான். இலையேனும், பூவேனும், கனியேனும், நீரேனும் அன்புடன் எனக்கு ஒருவனால் அளிக்கப்படின் அவன் அளித்ததை நான் உண்பேன். மிகக் கொடிய பாவியாயினும், தனது தவறை உணர்ந்து என்னை வழிபடுவானாகில் அவனும் நல்லோனேயாவான். குந்தியின் மகனே குறிக் கொள். எனதன்பன் ஒருநாளும் சாக மாட்டான். அதனால் என்னையே வழிபடுவாயாக'' என்று கூறுகிறார்.

## அத்தியாயம் 10

பத்தாம் அத்தியாயம் ''விபூதி யோகம்'' ஆகும். இதில் மொத்தம் 42 சுலோகங்கள் உள்ளன. இந்த அத்தியாயத்தில் அர்ஜுனனிடம் பகவான் கூறுகிறார். ''நீ எனக்கு மிகவும் இனியன். ஆதலினால் உனது நன்மைக்காக நான் இதனைக் கூறுகிறேன். தேவரும், முனிவரும் யாவரும் என் மகிமையை உணரார். முன்னை மகரிஷிகள் எழுவரும், நான்கு மனுக்களும் என்னிடமிருந்தே தோன்றினர். அவர் தம் மரபினரே இம்மக்கள் எல்லோரும். என்னிடமிருந்தே உயிரின் தொடக்கம், என்னிடமிருந்தே எல்லாம் இயலும், இதனை உணர்ந்த புத்திமான்கள் என்னையே அன்புடன் வழிபடுகின்றனர். எப்போதும் யோகத்திலிருக்கும் அன்னவர்க்கு நான் புத்தி யோகம் அளிப்பேன் அதனால் அவர்கள் என்னை எய்துவர்''

இப்போது அர்ஜுனன் பகவானிடம் கேட்கிறான் : ''எந்த மகிமைகளால் நீ இவ் உலகங்களைச் சூழ்ந்திருக்கின்றாயோ அவற்றை எனக்கு மிச்சமின்றி உணர்த்த வேண்டுகிறேன்''

அதற்கு பகவான் ''அர்ஜுனா! உயிர்கள் அனைத்தின் உள்ளே நிற்கும் ஆத்மா நான். ஆதித்யர்களில் நான் விஷ்ணு; ஒளிப் பொருள்களில் நான் ஞாயிறு; காற்றுக்களில் நான் மரீசி; நட்சத்திரங்களில் சந்திரன்; வேதங்களில் நான் சாமவேதம்; தேவரில் இந்திரன்; ருத்திரர்களில் சங்கரன்; தேவப் புரோகிதர்களில் நான் பிருகஸ்பதி; படைத்தலைவரில் நான் கந்தன்; மகரிஷிகளில் நான் பிருகு; வாக்குகளில் நான் ''ஓம்''; யக்ஞங்களில் நான் ஜப யக்ஞம்; பாண்டவருள் நான் அர்ஜுனன்'' என்று உன்னத மகிமையுடைய அனைத்தும் தானென்று கூறுகிறார். தமது அம்சத்தின் ஒரு பகுதியால் இவ்வையகத்தைத் தாம் தாங்குவதாகவும் உணர்த்துகிறார்.

## அத்தியாயம் 11

"விசுவ ரூப தரிசன யோகம்" என்னும் பதினோராம் அத்தியாயத்தில் மொத்தம் 55 சுலோகங்கள் உள்ளன. பத்தாம் அத்தியாயத்தில் பகவானின் பெருமைகளையெல்லாம் கேட்டு விதிர்த்துப் போன அர்ஜுனன் இப்போது பகவானிடம், "பரமேசுவரா, புருஷோத்தமா, நின்னைப் பற்றி நீ எனக்குச் சொல்லியபடியே நின் ஈசுவர ரூபத்தைக் காண விரும்புகிறேன்" என்று வேண்டிக் கொள்கிறான். அவன் வேண்டுகோளை ஏற்றுக் கொண்ட பகவான் "பல நூறாகவும், பல்லாயிரமாகவும், வகை பல, நிறம்பல, அளவு பலவாகும் என் திவ்ய ரூபங்களைப் பார். உனது ஊனக் கண்களால் என்னைப் பார்க்க முடியாது. உனக்கு நான் ஞானக்கண் தருகிறேன், அதன் மூலம் எனது ஈசுவர யோகத்தைப் பார்" என்று கூறி மிக உயர்ந்த தன் கடவுள் வடிவைக் காட்டினார். அவ்வடிவினைக் கண்டு அதிர்ச்சியும், வியப்பும் ஒருங்கே அடைந்த அர்ஜுனன் அதனைப் பலப்பலவாகப் போற்றி துதிக்கிறான். அவ்வடிவம் பல்வேறு கரங்களும், பல்வேறு விழிகளும், பல்வேறு முகங்களும் கொண்டு கண்ணைக் கூசும் ஒளிமிக்கதாக விளங்கியது. அதனைக் கண்டு உலகங்கள் நடுங்கின. அனைத்துத் தேவர்களும், முனிவர்களும் தத்தம் கரங்கள் கூப்பி அதனைப் போற்றித் துதித்தனர். அதனைக் கண்டு அஞ்சி நடுங்கிய அர்ஜுனன் அவர் தான் யார் என்பதைத் தனக்கு காட்டியருள வேண்டுகிறான். அவன் மீது கருணை கொண்டு பகவான், "அர்ஜுனா, உலகை அழிக்கத் தலைப்பட்டக் காலம் நான்தான். எதிர் அணியிலுள்ள வீரர்கள் அனைவரையும் அழிப்பதற்காக நான் வந்துள்ளேன். உனது துணையின்றியே என்னால் அவர்களை அழிக்க முடியும். புறக்காரணமாக மட்டும் நின்று நீ போர் செய்து புகழ் எய்துவாயாக" என்று கூறி அருளினார். அதனைக் கேட்டு அர்ஜுனன் நட்பின் காரணமாக உன்னை நான் கேலியும், உதாசீனமும், அவமரியாதையும் செய்துள்ளேன். அவற்றையெல்லாம் பொறுத்தருள வேண்டும் என்று கூறி மீண்டும் அவர் தமது பழைய வடிவிற்கு வரவேண்டுமென்று வேண்டுகிறான். அதற்கேற்ப தமது முன்னைய வடிவம் கொண்ட பகவான், வேதங்களாலும், தவத்தாலும், தானத்தாலும், வேள்வியாலும் தம்மைக் காண முடியாது என்றும், ஏகாக்கிரக சிந்தையுடன் கூடிய தூய பக்தியால் மட்டுமே தம்மைக் காணமுடியும் என்றும் அர்ஜுனனிடம் கூறுகிறார்.

## அத்தியாயம் 12

"பக்தி யோகம்" எனப்படும் பன்னிரண்டாம் அத்தியாயத்தில் மொத்தம் 20 சுலோகங்கள் உள்ளன. இதில் அர்ஜுனன் பகவானிடம், "எப்போதும் யோகத்தமர்ந்து நின்னை வழிபடுவோர் அல்லது அழியாத 'அவ்யக்த' பொருளை வழிபடுவோர், இவ்விருவரில் யார் சிறந்தோர்?" என்று கேட்கிறான். அதற்கு பகவான் "சிந்தையை எப்போதும் என்மீது வைத்து, நித்திய யோகிகளாய், உயர்ந்த நம்பிக்கையுடன் என்னை வழிபடுவோரே சிறந்தவர் என்று நான் கருதுகிறேன். எனினும் அவ்யக்தத்தை வழிபடுவோரும் என்னையே எய்துகின்றனர். புலன்களை வென்று, சமபுத்தி கொண்டு இவ்வாறு அவ்யக்தத்தை வழிபடுவோருக்குத் தொல்லைகள் அதிகம். அது மிகவும்

கடினமாகும். மாறாக எல்லாச் செயல்களையும் எனக்கே அர்ப்பணித்து, மாறாத யோகத்தால் என்னை வழிபடுவோரை நான் மரணசம்சாரக் கடலினின்று விரைவில் தூக்கிவிடுவேன். அதனால் மனதை என்பால் நிறுத்து; மதியை என்னுட் புகுத்து; இனி நீ என்னுள்ளே உறைவாய்; ஐயமில்லை. சித்தத்தை என்பால் செலுத்த முடியாதென்றால் பழகிப் பழகி என்னை அடைய முயல்வாயாக. இதுவும் உனக்குக் கடினமென்றால் என் பொருட்டுக் கர்மங்கள் செய்வாயாக. அதுவும் கூட என்னிடம் நின்னைச் சேர்க்கும். கர்மம் செய்தலும் நினக்குக் கடினமானதென்றால், தன்னைத்தான் வென்று கர்மப் பலன்களை எனக்கர்ப்பணித்து என்னில் லயித்திரு'' என்று கூறுகிறார். பின்னர் பகவான் ஓர் உண்மையான பக்தன் எதையும் வெறுப்பதில்லை, எல்லோரிடமும் நட்பு பாராட்டுகிறான். அவன் பற்றுதலற்றான், கவலையற்றான், சுக துக்கங்களை சமமாகக் கொள்வான், நண்பனையும், பகைவரையும், சமமாகக் காண்பான். புகழையும், இகழையும் நிகராகக் கொள்வான், ஸ்திர புத்தியுடையான் அப்படிப்பட்டப் பக்தனே தமக்கு மிகவும் இனியவன் எனறு கூறி தூய பக்தனின் சிறப்பியல்புகளை விளக்கியருள்கிறார்.

## அத்தியாயம் 13

"க்ஷேத்ர-க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்'' என்னும் பதின்மூன்றாம் அத்தியாயத்தில் மொத்தம் 34 சுலோகங்கள் உள்ளன. இதில் அர்ஜுனன் பகவானிடம் "பிரகிருதி, புருஷன், க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன், ஞானம், ஞேயம் இவற்றை அறிய விரும்புகிறேன்'' என்று கூறுகிறான். அதற்கு பகவான் "குந்தி மைந்த! இந்த உடல் க்ஷேத்ரமாகும். இதில் உறையும் ஆத்மாவை க்ஷேத்ரக்ஞன் என்று பிரம்ம ஞானிகள் கூறுகின்றனர். எல்லா க்ஷேத்ரங்களிலும், க்ஷேத்ரக்ஞன் நானே என்று அறிவாயாக. மகாபூதங்கள், அகங்காரம், புத்தி, அவ்யக்தம், பதினோரு இந்திரியங்கள், இந்திரிய நிலங்கள் ஐந்து, உடல், உணர்வு, இன்பம், துன்பம், இவையனைத்தும் க்ஷேத்ரத்தைச் சேர்ந்தவையாகும். பணிவு, எளிமை, அஹிம்சை, பொறுமை, நேர்மை, ஆசாரியனை வழிபடுதல், தூய்மை, தன்னை அடக்குதல், ஸ்திரத்தன்மை, அகங்காரம் இல்லாமை, சமபார்வையுடைமை, என்னிடம் பக்தியுடைமை, தனியிடத்தை நாடுதல், மக்கள் கூட்டத்தைத் தவிர்த்தல், ஆத்ம ஞானத்தில் எப்போதும் நழுவாமை, தத்துவ ஞானத்தில் பொருளுணர்வு இவை ஞானமாகும். இவற்றினின்று வேறுபட்டது அஞ்ஞானமாகும்'' என்று கூறிய பகவான் அடுத்து ஞேயம் என்றால் என்னவென்று விளக்குகிறார்.

"ஞேயம் என்பது என்னவென்று அறிந்தால் உனக்கு மரணமில்லை. அநாதியாகியப் பரப்பிரம்மம் அதை 'சத்' என்பதுமில்லை. 'அசத்' என்பதுமில்லை. அது எங்கும் கைகால்களுடையது. எங்கும் கண்ணும், தலையும், வாயுமுடையது; எங்கும் செவியுடையது; இவ் உலகம் யாவையும் வியாபித்திருப்பது, எல்லா இந்திரிய குணங்களும் வாய்ந்தொளிர்வது; எல்லா இந்திரியங்களுக்கும் புறம்பானது; பற்றில்லாதது; உயிர்களின் உள்ளும் புறமுமாவது. ஒளிகளுக்கெல்லாம் ஒளியாவது; ஞானத்தால் எய்தப்படும் அதுவே ஞேயமாகும்'' என்று ஞேயத்திற்கு விளக்கமளிக்கிறார்.

அடுத்து பிரகிருதி புருஷன் இவற்றைப் பற்றி விளக்கும்போது 'இவையிரண்டும் அநாதி என்றுணர். இன்ப துன்ப அனுபவத்திற்கு ஏது புருஷனேயாவான். புருஷன் பிரகிருதியில் நின்றுகொண்டு பிரகிருதியினிடம் பிறக்கும் குணங்களைத் துய்க்கிறான். குணங்களிடம் இவனுக்குள்ள பற்றுதலே இவன் நல்லனவும், தீயனவுமாகிய ஜன்மங்களில் பிறப்பதற்குக் காரணமாகிறது. இங்ஙனம் புருஷனையும், பிரகிருதியையும் அறிவோனுக்கு மறுபிறப்பு இல்லை. சிலர் ஆத்மாவை ஆத்மாவால் அறிகின்றனர். வேறு சிலர் சாங்கிய யோகத்தாலும் இன்னும் சிலர் கர்ம யோகத்தாலும் அறிகின்றனர். அவர்களும் மரணத்தை வெல்வர். க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ இணைப்பினாலேயே இவ்உலகில் எல்லாம் பிறக்கின்றன. பரமேசுவரன் எல்லா உயிர்களிலும் சரிசமமாக நிற்கிறான். அவனைக் காண்போனே காட்சியுடையான். பிரகிருதியே உண்மையில் செயல்படுகின்றது. அதனால் கர்த்தா இல்லையென்று காண்பானே காட்சியுடையான். எங்கும் இருந்தாலும் வானம் தன் நுண்மையால் பற்றற்று நிற்பதுபோல் உடம்பில் ஆத்மா எங்கனுமிருந்தாலும் பற்றுறுவதில்லை. சூரியன் உலகை ஒளியுறச் செய்வதுபோல், க்ஷேத்ரக்ஞன் க்ஷேத்ரத்தை ஒளியுறச் செய்கிறான்'. க்ஷேத்ரத்திற்கும், க்ஷேத்ரக்ஞனுக்குமிடையே வேற்றுமை உணர்வோன் பிரம்மத்தை எய்துகிறான்' என்று பகவான் கூறுகிறார்.

## அத்தியாயம் 14

பதினான்காம் அத்தியாயம் ''குணத்ரய விபாக யோகமாகும்' இதில் 27 சுலோகங்கள் உள்ளன. இதில் பகவான் கூறுகிறார். "ஞானங்களனைத்திலும் மேலான பரம ஞானத்தை நான் உனக்கு மீண்டும் உரைக்கிறேன். அதையறிந்து முனிவர்கள் எல்லோரும் இவ் உலகிலேயே சித்தி பெற்றுள்ளனர். எல்லாக் கருக்களிலும் பிறக்கும் வடிவங்கள் அனைத்திற்கும் பிரம்மமே பெரிய காரணம். நான் விதை தரும் பிதா. சத்துவம், ரஜஸ், தமஸ், இம் முக்குணங்களும் பிரகிருதியில் எழுவன. இவை உடம்பில் அழிவற்ற ஆத்மாவைப் பிணிக்கின்றன. அவற்றுள் சத்துவம் நிர்மலத் தன்மையால் ஒளியுடையது. அது இன்பம் மற்றும் ஞானத்தால் ஆத்மாவைக் கட்டுகிறது. ரஜோ குணம் விருப்ப இயல்புடையது. அவாவின் சேர்க்கையால் பிறப்பது அது செயலின் மூலம் ஆத்மாவைக் கட்டுகிறது. தமோ குணம் அஞ்ஞானத்தில் பிறப்பதென்று உணர். அனைத்து உயிர்களையும் அது மயங்கச் செய்கிறது. தவறுதலாலும், சோம்பராலும், உறக்கத்தாலும் அது ஆத்மாவைக் கட்டுகிறது.

பாரதா! (சிலவேளை) ரஜோ குணத்தையும், தமோ குணத்தையும் அடக்கி சத்துவம் மேலெழுகிறது. (சிலவேளை) சத்துவ குணத்தையும், தமோ குணத்தையும் அடக்கி ரஜஸ் மேலெழுகிறது. அவ்வாறே சத்துவ குணத்தையும் ரஜோ குணத்தையும் அடக்கி தமோ குணம் மேலெழுகிறது. சத்துவ குணம் ஓங்கி நிற்கையில் மரிப்போன் மாசற்ற உத்தம ஞானிகளின் உலகங்களை அடைகிறான். ரஜோ குணத்தில் இறப்போன் கர்மப் பற்றுடையோரிடையே பிறக்கிறான். தமோ குணம் ஓங்கி நிற்கையில் இறப்போன் மூட கர்ப்பங்களில் தோன்றுகிறான். குணங்களே செயல்புரிகின்றன. ஆத்மாவை அவை தொடுவதில்லை என்று உணர்ந்தவன் என்னை அடைகிறான்'.

இந்த இடத்தில் அர்ஜுனன் பகவானிடம் "இறைவனே, முக்குணங்களையும் கடந்த குணாதீதன் எங்ஙனமிருப்பான்? முக்குணங்களையும் அவன் எங்ஙனம் கடக்கிறான்?" என்று கேட்கிறான். அதற்கு பகவான் "மூன்று குணங்களினாலும் பாதிக்கப்படாதவன் எவனோ அவனே குணாதீதன் ஆவான். அவன் குணங்களால் சலிப்படையான். துன்பத்தையும், இன்பத்தையும் நிகராகக் கொள்வான். தன்னிலையில் நிற்பான். ஓட்டையும், கல்லையும், பொன்னையும் சமமாகக் காண்பான். நண்பனையும், பகைவனையும், நேராகக் கொள்வான். புகழையும், இகழையும் நிகராகக் கருதுவான். அவனே குணங்களைக் கடந்த குணாதீதன் எனப்படுகிறான். அவனே பிரம்ம நிலை எய்துதற்கு உரியோனாவான்" என்று கூறுகிறார்.

## அத்தியாயம் 15

'புருஷோத்தம யோகம்" என்னும் பதினைந்தாம் அத்தியாயத்தில் மொத்தம் 20 சுலோகங்கள் உள்ளன. சம்சாரம் அல்லது இந்த ஜகத், மேலே வேர்களும் கீழே கிளைகளுமுடையதோர் அரச மரம் போன்றது என்று ஸ்ரீ கிருஷ்ணர் இதில் குறிப்பிடுகிறார். அவர் கூறுகிறார். "அதன் மேலேயுள்ள வேர்களே பிரம்மமாகும். மூன்று குணங்களும் அதன் கிளைகளாகும். வேதங்களே அதன் இலைகளாகும். எனினும் இவ்வுலகில் இதற்கு வடிவம் காணப்படுவதில்லை. இதன் ஆதியும், அந்தமும், இருப்பும் புலப்படுவதில்லை. இந்த அரச மரத்தைப் பற்றின்மை என்னும், வலிய வாளால் வெட்டி எறிந்து விட்டு, எங்கே சென்றால் மீண்டும் திரும்பி வரவேண்டாமோ அந்த இடத்தைச் தேடுதல் வேண்டும். சம்சாரமாகிய இந்த மரம் யாரிடமிருந்து தோன்றியதோ அந்த ஆதிபகவானைச் சரண் புகவேண்டும். செருக்கும் மயக்கமும் அற்றோர், சார்புக்குற்றங்களை எல்லாம் வென்றோர், ஆத்ம ஞானத்தில் எப்போதும் நிற்போர், விருப்பங்களினின்று நீங்கியோர், சுகதுக்கக் குறிப்புகளையுடைய இரட்டைகளினின்று விடுபட்டோர், மடமையற்றோர் போன்றோரே அந்த அழிவற்றப் பதத்தை எய்துகின்றனர். அதற்கு சூரியனும், சந்திரனும், தீயும் ஒளியேற்றுவதில்லை. எதனை எய்தியோர் மீள்வதில்லையோ அதுவே என் பரமபதம்."

"எனது அம்சமே ஜீவலோகத்தில் என்றுமுள்ள ஜீவனாகி, இயற்கையிலுள்ளனவாகிய மனதுட்பட்ட ஆறு இந்திரியங்களையும் கவர்கிறது. மணங்களைக் காற்று பற்றிச் செல்வதுபோல், இவ்உடலிலுள்ள ஜீவன் அந்த உடலைவிட்டு நீங்கும்போது இந்திரியங்களையும் பற்றிச் செல்கிறது. கேட்டல், காண்டல், தீண்டுதல், சுவை, மோப்பு, மனம் இவற்றில் நிலைகொண்டு ஜீவன் விஷயங்களைத் தொடர்ந்து நடத்துகிறது. ஜீவனை மூடர் காண்பதில்லை. ஞான விழியுடையோர் காண்கின்றனர். முயற்சியுடைய யோகிகள் அதனைத் தம்முள்ளே காண்கின்றனர்.'

பகவான் மேலும் கூறுகிறார். "சூரியன், சந்திரன், அக்னி - இவற்றிற்கு ஒளி கொடுப்பவன் நானே. நான் பூமியுட் புகுந்து உயிர்களை வீரியத்தால் தாங்குகிறேன். ரச வடிவமுள்ள சோமமாகிப் பூண்டுகளையெல்லாம் வளர்க்கிறேன். நான் வைசுவாநரனாய் உயிர்களின் உடல்களைச்

சார்ந்திருக்கிறேன். பிராணன், அபானன் என்ற வாயுக்களுடன் கூடி நால்வகைப்பட்ட அன்னத்தை ஜீர்ணமாக்குகிறேன். எல்லோருடைய அகத்திலும் நானே உறைகின்றேன். வேதங்களால் அறியப்படுபவன் நானே. வேதாந்தத்தை ஆக்கியோன் நானே. க்ஷர (அழிவது) அக்ஷர (அழியாதது) என்று உலகில் இருவகைப் புருஷருளர். இவரில் வேறுபட்டு மூவுலகங்களையும் வியாபித்திருக்கும் பரமாத்மா நானே. புருஷோத்தமனும் நானே. என்னை இங்ஙனம் எவன் அறிவானோ அவன் எல்லாம் அறிந்தவனாவான். அவன் என்னை எல்லா வழிகளிலும் வழிபடுகின்றான்.'

## அத்தியாயம் 16

"தெய்வாசுர சம்பத் விபாக யோகம்" என்னும் பதினாறாம் அத்தியாயத்தில் மொத்தம் 24 சுலோகங்கள் உள்ளன. இந்த அத்தியாயத்தில் பகவான் கிருஷ்ணர் மேலே கூறியுள்ள தத்துவங்களை தெய்வத்தன்மை வாய்ந்தவர்களே உணர்வார்கள். அசுரத்தன்மை வாய்ந்தவர்கள்அல்லர் என்று தெய்வத்தன்மை, அசுரத்தன்மை உடையவர்களைப் பற்றி விளக்குகிறார். பகவான் கூறுகிறார், "அஞ்சாமை, உள்ளத்தூய்மை, ஞானயோகத்தில் உறுதி, ஈகை, தன்னடக்கம், வேள்வி, வேதங்கற்றல், தவம், நேர்மை, கொல்லாமை, வாய்மை, சினவாமை, துறவு, ஆறுதல், வன்மை, ஜீவதயை, அவாவின்மை, மென்மை, நாணுடைமை, சலியாமை, ஒளி, பொறை, உறுதி, சுத்தம், துரோகமின்மை, இத்தன்மைகளெல்லாம் தெய்வ சம்பத்தை எய்தியவனிடம் காணப்படுகின்றன. ஆடம்பரம், இறுமாப்பு, கர்வம், சினம், கடுமை, அஞ்ஞானம் போன்றவையெல்லாம் அசுர சம்பத்தை எய்தியவனிடம் காணப்படுகின்றன.

இவ்வுலகில் உயிர்ப் படைப்பு தெய்வத்தன்மை கொண்டது, அசுரத்தன்மை கொண்டது என இருவகைப்படும். பார்த்தா, அசுரத்தன்மை கொண்டவர்களிடம் தூய்மையேனும் ஒழுக்கமேனும் வாய்மையேனும் காணப்படுவதில்லை. அவர்கள் இவ்உலகம் உண்மையற்றதென்றும், நிலையற்றதென்றும் கடவுளற்றதென்றும் வெறும் காமத்தை மட்டுமே ஏதுவாக உடையதென்றும் கூறுகின்றனர். இவர்கள், இன்று இன்ன லாபமடைந்தேன், இன்ன மனோரதத்தை இனி எய்துவேன், இன்னதையுடையேன், இன்ன பொருளை இனிப் பெறுவேன், நான் செல்வன், எனக்கு நிகர் யாவருளர்? என்று அகங்காரத்தையும், பலத்தையும், செருக்கையும் விருப்பத்தையும், சினத்தையும், உடையவர்களாய் எங்கும் வியாபித்திருக்கும் என்னைப் பகைக்கின்றனர். இக்கொடியோரை எப்போதும் நான் அசுரப் பிறப்புக்களில் எறிகிறேன். காமம், சினம், அவா, இம்மூன்றும் நரகத்தின் வாயில்களாகும். இம்மூன்று இருள் வாயில்களினின்று விடுபட்டோன் பரகதி அடைகிறான். சாஸ்திர விதியை மீறி விருப்பத்தால் தொழில் புரிவோன் சித்தி பெறான், அவன் இன்பமெய்தான், பரகதி அடையான், அதனால் சாஸ்திரத்தைப் பிரமாணமாகக் கொண்டு அதில் கூறப்பட்டுள்ள தொழிலை நம்பிக்கையுடன் செய்யக் கடவாய்!"

## அத்தியாயம் 17

"சிரத்தாத்ரய விபாக யோகம்" என்னும் பதினேழாம் அத்தியாயத்தில் மொத்தம் 28 சுலோகங்கள் உள்ளன. இதில் அர்ஜுனன் பகவானிடம் "கண்ணா, சாஸ்திர விதியை மீறி ஆனாலும் நம்பிக்கையுடன் வேள்வி செய்வோருக்கு என்ன நிலை கிடைக்கிறது? ஒளி நிலையா? (சத்துவமா) கிளர்ச்சி நிலையா? (ரஜஸா) அல்லது இருள் நிலையா? (தமஸா) என்று கேட்கிறான். அதற்கு பகவான், "ஜீவர்களிடம் இயற்கையால் நம்பிக்கை மூன்று வகையாகத் தோன்றுகிறது, சாத்விகம், ராஜஸம், தாமஸம் என; அதைக் கேள் பாரதா, எல்லோருக்கும் தத்தம் உள்ளியல்புக்கு ஏற்றவாறே நம்பிக்கை அமைகிறது. எவன் எந்தப் பொருளில் நம்பிக்கையுடையவனோ, அந்தப் பொருளே தான் ஆகிறான். ஒளியியல்புடைய சத்துவ குணத்தார் வானவர்க்கு வேள்வி செய்கின்றனர். ரஜோ குணத்தார் யக்ஷர்களுக்கும், ராக்ஷஸருக்கும் வேள்வி செய்கின்றனர். மற்றுத் தமோ குணமுடையோர் பிரேத பூத கணங்களுக்கு வேள்வி செய்கின்றனர்.

சிரத்தை அல்லது நம்பிக்கையைப் போல் உணவும் மூன்று வகைப்படும். அவ்வாறே வேள்வி, தவம், தானம் இவையும் மூவகைப்படும். ஆரோக்கியம், வலிமை, மனத்தூய்மை இவற்றை மிகுதிப்படுத்துவனவும், உளம் உகந்தனவும் சத்துவ குணமுடையனவாகும். கசப்பு, புளிப்பு, உப்பு, உறைப்பு அதிகச்சூடு, உலர்ந்தன, எரிச்சலுடையன, இவை ரஜோ குணமுடைய உணவுகளாகும். பழையது, சுவையற்றது, அழுகியது, கெட்டுப் போனது, எச்சில் செய்தது, அசுத்தமுடையது, இவை தமோ குணமுடைய உணவுகளாகும்.

பயனை விரும்பாதவர்களாய் வேள்வி புரிதல் கடமையென்று மனந்தேறி, விதிகள் சொல்லியபடி இயற்றுவாரின் வேள்வி சத்துவ குணமுடைத்து, பயனைக் குறித்தெனினும், ஆடம்பரத்துக்கெனினும் செய்யப்படும் வேள்வி ராஜஸம் என்று உணர். விதி தவறியது, பிறர்க்குணவு தாராதது, மந்திரமற்றது, தக்ஷிணையற்றது, நம்பிக்கையின்றிச் செய்யப்படுவது, இத்தகைய வேள்வியை தாமஸமென்பார்.

தேவர், அந்தணர், குருக்கள், அறிஞர் போன்றோருக்குப் பூஜை செய்தல், தூய்மை, நேர்மை, பிரம்மச்சரியம், கொல்லாமை, இவை உடம்பைப் பற்றியத் தவம் எனப்படும். சினத்தை விளைவிக்காததும், உண்மையுடையதும், இனியதும், நலங்கருதியதுமாகிய சொல்லல், கல்விப் பயிற்சி இவை வாக்குத் தவம் எனப்படும். மன அமைதி, மகிழ்ச்சி, மௌனம், தன்னைக் கட்டுதல், எண்ணத்தூய்மை, இவை மனத்தவம் எனப்படும். இம்மூன்றுவகைத் தவங்களும் நம்பிக்கையுடனும், பலனில் பற்றின்றியும் செய்யப்படும்பொழுது அவை சாத்விகம் ஆகும். மதிப்பையும், புகழையும் வேண்டி ஆடம்பரமாகச் செய்யப்படும் தவம் ராஜஸமாகும். மூடக்கொள்கையுடன் தன்னைத்தான் வருத்திக் கொண்டு, பிறருக்குக் கேடு விளைவிக்கச் செய்யப்படும் தவம் தாமஸமாகும்.

கைம்மாறு கருதாது, கடமையென்று கருதி, தகுந்த இடத்தையும், காலத்தையும், பாத்திரத்தையும் நோக்கிச் செய்யப்படும் தானம் சாத்விகம் ஆகும். கைம்மாறு வேண்டியும், பயனைக் கருதியும், கிலேசத்துடனும் கொடுக்கப்படும் தானம் ராஜஸமாகும். தகாத இடத்தில் தகாத காலத்தில் தகாதார்க்கு மதிப்பின்றியும், இகழ்ச்சியுடனும் செய்யப்படும் தானம் தாமஸமாகும்.

'ஓம், தத், ஸத்' என்ற மும்மைப் பெயர் பிரம்மத்தைக் குறிப்பதென்பர். அதனால் 'ஓம், தத், ஸத்' என்று உச்சரித்து வேள்வி, தவம், தானம், போன்றவை செய்யப்படின், அவை அவற்றிலுள்ளக் குறைகளைக் களைந்து நிறைவுடையனவாக்கும்.

## அத்தியாயம் 18

"மோக்ஷ சந்நியாஸ" யோகம் என்னும் பதினெட்டாம் அத்தியாயத்தில் மொத்தம் 78 சுலோகங்கள் உள்ளன. இதர விஷயங்களைப் பற்றியும் எடுத்துக் கூறி கீதையினை நிறைவு செய்யும் இது எல்லாவற்றையும் விடப் பெரிய அத்தியாயமாகும்.

இதன் ஆரம்பத்தில் அர்ஜுனன் பகவானிடம் "உயர்புயத்தாய், கண்ணா, கேசியைக் கொன்றாய், சந்நியாஸத்தின் (துறவு) இயல்பையும் தியாகத்தின் (விடுதல்) இயல்பையும் பிரித்துக் கேட்க விரும்புகிறேன்" என்று கூறுகிறான். அதற்கு பகவான் "விருப்பத்தால் செய்யப்படும் சலுகைகளைத் துறப்பது சந்நியாஸமென்று புலவர் தெரிந்துளர். எல்லாவிதச் செயல்களின் பலன்களையும் துறந்துவிடுதல் தியாகமென்று ஞானிகள் கூறுவர். சில அறிஞர் செய்கையைக் குற்றம் போலே கருதி விட்டுவிட வேண்டும் என்கிறார்கள். வேறு சிலர் 'வேள்வி, தானம், தவம் என்ற செயல்களை விடக்கூடாது' என்கிறார்கள். என்னைப் பொருத்தமட்டில் வேள்வி, தானம், தவம் என்ற செயல்களை விடக்கூடாது. வேள்வியும், தானமும், தவமும் அறிவுடையோரைத் தூய்மைப்படுத்துகின்றன. ஆனால் அவற்றைப் பயன்கருதாது ஒட்டின்றி செய்ய வேண்டுமென்பது என் நிச்சயமானக் கொள்கையாகும். நியமத்தின்படியுள்ள செய்கைகளை மதிமயக்கத்தாலோ அல்லது உடம்புக்கு வருத்தம் நேரும் என்ற பயத்தாலோ அவற்றைச் செய்யாமல் விட்டுவிடக்கூடாது.

உடம்பெடுத்தவனால் செய்கைகளை முழுதுமே விட்டுவிட முடியாது. எவன் செய்கைகளின் பயனைத் துறக்கிறானோ அவன் தியாகி எனப்படுகிறான். இன்பமானது, துன்பமானது, இரண்டும் கலந்தது என மூன்று வகையானக் கர்மப் பயன்களை தியாகிகளைத் தவிர மற்றவர்கள் இறந்த பின்னர் எய்துகின்றனர். அவை சந்நியாஸிகளை ஒருபோதும் பாதிப்பதில்லை.

ஒரு செயல் செய்யப்படுவதற்கு மனம், வாக்கு, காயம் உள்ளிட்ட ஐந்து விதமானக் காரணங்கள் உள்ளன. அதனால் ஆத்மாவைக் கர்த்தாவாகக் கருதுவது அறிவீனமாகும். 'நான்' என்பது தீர்ந்து, பற்றுதலற்ற மதியுடன் ஒருவன் செய்யும் செயல் அவனைப் பந்தப்படுத்தாது. குணங்களை

நோக்குமிடத்து ஞானம், கர்மம், கர்த்தா, இவை குணபேதங்களால் மும்மூன்று வகைப்படும். அவற்றையும் கேட்பாயாக.

பிரிவுபட்டு நிற்கும் எல்லா உயிர்களிலும் பிரிவற்ற நாசமற்ற ஒரே இயல்பைக் காணும் ஞானம் சாத்விகமாகும். உயிர்களனைத்திலும் வெவ்வேறு வகைப்பட்ட பல இயல்புகள் இருப்பதாகப் பிரித்துக் காணும் ஞானம் ராஜஸமாகும். காரணம் கருதாமல் யாதேனும் ஒற்றைக் காரியத்தை அனைத்துமாகக் கருதிப் பற்றுதலெய்துவதும், உண்மையியலறியாததும், அற்பத்தன்மையுடையதும் ஆகிய ஞானம் தாமஸமாகும்.

பயன்களை வேண்டாதான் ஒருவன் பற்றுதலின்றி, விருப்பு வெறுப்பின்றிச் செய்யும் விதி தழுவிய செய்கை சாத்விகக் கர்மமாகும். விருப்பங்களுக்கு வசப்பட்டவனால் அல்லது அகங்காரமுடையவனால் செய்யப்படும் மிகுந்த ஆயாசத்துக்கிடமான செய்கை ராஜஸக் கர்மமாகும். செய்கையின் பின்விளைவுகளும், அதனால் பிறருக்கு நேரக்கூடிய நாசத்தையும், துன்பத்தையும், செய்பவனது திறமையையுங் கருதாமல், அறிவின்மையால் செய்யப்படும் செய்கை தாமஸக் கர்மமாகும்.

பற்றுதலற்றான், நானென்பதற்றான், முயற்சியும் ஊக்கமுமுடையான், வெற்றி தோல்வியில் வேறுபாடற்றான், இங்ஙனமாகியக் கர்த்தா சாத்விகன் ஆவான். வேட்கையுடையோன், செய்கைப் பயன்களை விரும்புவோன், லோபி, இடர் செய்வோன், தூய்மையற்றோன், இன்பதுன்பத்திற்கு வசப்பட்டோன், இப்படிப்பட்டக் கர்த்தா ராஜஸன் ஆவான். யோக நிலைபெறாதோன், அநாகரிகன், முரடன், வஞ்சகன், பொறாமையுடையோன், சோம்பேறி, ஏக்கம் பிடித்தவன், காலத்தை நீட்டித்துக் கொண்டே போவான், இவ்வியல்புகளுடையக் கர்த்தா தாமஸன் ஆவான்.

அர்ஜுனா, புத்தி மற்றும் மனஉறுதியும் இங்கு மூவகைப்படும். அவற்றையும் கேட்பாயாக. சாத்விக புத்தி பந்தமெது, மோக்ஷமெது என்பதை அறியும். ராஜஸிக புத்திக்கு தர்ம, அதர்ம பேதம் தெரியாது. தாமஸ புத்தி எல்லாவற்றையும் நேருக்கு மாறாகக் காணும்.

சாத்விக மனஉறுதி சுயக்கட்டுப்பாட்டிற்குத் துணைசெய்யும். ராஜஸ மனஉறுதி விஷயங்களின் மீதுப் பற்றுதலை உண்டாக்கும். தாமஸிக மனஉறுதி ஒருவனை துக்கத்திலும், தூக்கத்திலும் அச்சத்திலும் ஆழ்த்தும்.

பரதக்காளையே, இப்போது மூன்று விதமான இன்பங்களைச் சொல்லுகிறேன், கேள். எது முதலில் விஷம் ஒத்து முடிவில் அமிர்தம் ஒத்ததாய், மனதை ஆத்மாவில் நிலைபெறச் செய்கிறதோ அந்த இன்பம் சாத்விகமாகும். விஷயங்களில் புலன்களைப் பொருத்துவதன் மூலம் தொடக்கத்தில் அமுதைப் போலிருந்து இறுதியில் நஞ்சு போன்றதாய் முடியும் இன்பம் ராஜஸமாகும். தொடக்கத்திலும், இறுதியிலும் ஒருங்கே ஆத்மாவுக்கு மயக்கம் விளைவிப்பதாய், உறக்கத்தினின்றும், சோம்பரினின்றும், தவறுதலினின்றும் பிறக்கும் இன்பம் தாமஸமாகும்.

இயற்கையில் தோன்றும் இம்மூன்று குணங்களினின்றும் விடுபட்ட உயிர் மண்ணுலகத்திலுமில்லை. விண்ணுலகத்தில் தேவருள்ளேயுமில்லை.

பரந்தபா! பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் இவர்களுடையக் கர்மங்கள் அவரவரின் இயல்பில் விளையும் குணங்களின்படி வகுப்புற்றனவாம். அகக்கரணத்தை அடக்குதல், புறக்கரணத்தை அடக்குதல், தவம், ஞானம், இவை இயல்பிலே தோன்றும் பிராமணக் கர்மங்களாகும். வீரம், உறுதி, திறமை இவை இயற்கையில் தோன்றும் க்ஷத்திரியக் கர்மங்களாகும். உழவு, பசுக்காத்தல், வாணிகம் இவை இயற்கையில் பிறக்கும் வைசியக் கர்மங்களாகும். தொண்டு புரிதல், சூத்திரனுக்கு இயற்கையில் தோன்றும் கர்மமாகும்.

கடவுளைத் தனக்குரிய கர்மத்தால் பூஜை செய்யும் மனிதன், சித்தியடைகிறான். பிறர்க்குரிய தர்மத்தை நன்கு செய்வதைக் காட்டிலும் தனக்குரிய தர்மத்தை பிழையுடன் செய்தலும் நன்று.

மனம், வாக்கு, காயத்தை அடக்கி, தனியிடத்தில் வாழ்ந்து தியானயோகத்தில் ஈடுபடுபவன் பிரம்ம நிலை எய்துவதற்குத் தகுதியுடையவனாவான். அவனே ஆனந்தமுடையோன், துயரற்றோன், விருப்பற்றோன், எல்லா உயிர்களையும் சமமாகப் பார்ப்போன், அப்படிப்பட்டவனே என் பக்தியை அடைகிறான். எல்லாச் செயல்களையும் எனக்கெனத் துறந்து புத்தியோகத்தில் சார்புற்று எப்போதும் என்னையே சிந்தித்துக் கொண்டிருப்பாயாக. அகங்காரத்தால் இதனை நீ அலட்சியம் செய்வாயெனில் பெரிய நாசத்தை அடைவாய். நீ அகங்காரத்தால் "இனிப் போர் புரியேன்" என்று துணிவாயாயின், உனது துணிவு பொய்ம்மைப்பட்டுப் போம். இயற்கை உன்னைப் போரில் பிணிக்கும்.

அர்ஜுனா! எல்லா உயிர்களுக்கும் ஈசன் உள்ளத்தில் நிற்கிறான்; மாயையால் அவன் எல்லா உயிர்களையும் சக்கரத்திலேற்றிச் சுழற்றுகிறான். எல்லா வழிகளிலும் அவனையே சரண் எய்து. அவனருளால் பரம சாந்தியாகிய நித்திய ஸ்தானத்தை எய்துவாய். இவ்வாறு ரகசியத்திலும் ரகசியமாகிய ஞானத்தை உனக்குரைத்தேன். இதனை நீ முற்றிலும் ஆராய்ந்து உனக்கு எப்படி இஷ்டமோ அப்படிச் செய்.

**தர்மம் அனைத்தையும் துறந்துவிடு**
**சரணம் எனைநீ அடைந்துவிடு**
**கர்மவினைகள் பாவங்கள்**
**களைவேன் இனிநீ அஞ்சாதே.**

இந்தப் பரமரகசியத்தை தவமில்லாதோனுக்கும், பக்தியில்லாதோனுக்கும் சொல்லாதே. என்பக்தர்களிடையே சொல்லுவோன் என்னை அடைவான். நம்முடைய தர்மமயமான இவ் உரையாடலை எவன் படிப்பானோ அவன் செய்யும் அந்த ஞான யக்ஞத்தால் நான் திருப்தியடைவேன். இஃதென் கொள்கை" என்று கூறி முடிக்கிறார்.

இப்போது அர்ஜுனன் சொல்லுகிறான். ''மயக்கமழிந்தது உன் அருளாலே. அச்சுதா, நான் நினைவு அடைந்தேன்; ஐயம் விலகி நிற்கிறேன்; நீ செய்யச் சொல்வது செய்வேன்''

சஞ்சயன் திருதராஷ்டிரனிடம் ''அரசே, நான் வாசுதேவருக்கும், அர்ஜுனனுக்கும் இடையே நிகழ்ந்த அற்புதமான உரையாடலைக் கேட்டேன். ஹரியின் அந்த அற்புதமான விசுவரூபத்தை நினைக்க நினைக்க எனக்கு ஆச்சரியமுண்டாகிறது. எங்கே யோகேசுவரனாகிய கிருஷ்ணரும், வில்லை ஏந்திய அர்ஜுனனும் இருக்கின்றனரோ, அங்கே திருவும், ஆக்கமும், வெற்றியும், நிலைதவறாத நீதியும் இருக்கும். இது என் கொள்கை.



# கீதையின் மகத்துவம்

விக்கினங்கள் நீக்கும் விநாயகன் றன்றாளும்
சக்கரங் கைக்கொண்டான் தண்ணடியும் சென்னிவைப்பாம்

**மண்மகள் கூறினாள்**

1. கரும வினைப்பயனால் கட்டுண்டு நிற்பவன்நின்
அருமை அறிந்துநின்மேல் அன்புவைப்ப தெங்ஙனங்கொல்?

**ஸ்ரீ விஷ்ணு கூறினார்**

2. முன்னை வினைப்பயன்றான் மூண்டிடினும் நாளுமவன்
என்னை நினைந்து எழில்கீதைக் காட்டுநெறி
தன்னில் நடந்தால் தரணியிலோர் முக்தனாவான்
பின்னை அவனைப் பெருவினைதான் என்செய்யும்?

3. செந்தா மரைஇலைமேல் தெண்ணீர் படுவதில்லை
வந்தோர் வினைஅவனை வாட்டுவ தேதம்மா

4-5. எங்கே எழில்கீதை ஏற்றம் உரைத்தாலும்
அங்கே புண்ணிய ஆறுக ளெலாங்கூடும்
பிரயாகைப் போன்ற பெருஞ்சேத் திரம்சேரும்
மரியா தைமிக்க மாமுனிவர் தேவர்முதல்
பன்னவர் களோடு பழமுனிவர் நாரதரும்
கின்னரர் கிம்புருடர் கீதைசொன்ன உத்தவரும்
ஆயர் குலத்தோரும் ஆய்ச்சியராங் கோபியரும்
நேயமுடன் ஆங்கே நெருங்கினின்று கேட்டிடுவார்

6. கீதை உரைக்குமிடம் கேளாமல் நன்மைவரும்
கீதை தனைப்பற்றிக் கேட்டாலும் சொன்னாலும்
கற்றாலும் மற்றவர்க்குக் கற்றுக் கொடுத்தாலும்
எற்றேனு மந்த இடத்தினிலே யானிருப்பேன்

7. கீதையே என்றனுக்குக் கேடில் அடைக்கலமாம்
கீதையே என்றனுக்குக் கேடில் உறைவிடமாம்
கீதைதரு ஞானம் சிரமேற்கொண் டேயானும்
கீதைவழி உலகைக் கேடின்றிக் காக்கின்றேன்

8-9. என்றன் பரஞானம் என்றன் பிரம்மரூபம்
என்றுமிக் கீதை எனில்ஐயம் ஏதுமில்லை
உரைத்தற் கரியயென் ஒப்பில் நிலையிலது
அருமை பொருந்தியது அதனாலே நித்தியமாம்
மும்மறையின் ஞானம் முழுதும் உடையதது
செம்மையுடன் ஆன்ம சிறப்பனைத்தும் சொல்லுவது
குறைவில்லா ஆனந்தம் கொண்டதது என்றன்று
இறைவனாம் கண்ணன் எழில்அர்ச் சுனர்க்குரைத்தான்

10. மதியில் தெளிவோடு மற்றும் அதிலுள்ள
பதினெண் இயல்களையும் நித்தமும் பாங்குடனே
கற்பவனை மெய்ஞானம் கட்டாயம் வந்தெய்தும்
சிற்பரமாம் தேவனவன் தெய்வப் பதமருளும்

11. முற்றுமே கற்க முடியாது போனாலும்
பற்றுடனே நித்தமதில் பாதிகற் றால்கூட
பூதானம் உள்ளிட்டப் புன்மைதீர் தானங்களில்
கோதானப் புண்ணியத்தை நாளும் கொடுத்தருளும்

12. மூன்றிலொரு பாகம் முயன்று முடித்தாலும்
தோன்றுபலன் கங்கைநதி தோய்ந்த பலனாகும்
ஆறிலொரு பாகம் அதுதான் முடியுமென்றால்
வேறென்ன சோமநல் வேள்விபலன் வந்தெய்தும்

13. ஓரியலே நித்தம்நீ ஓதினால் கூடஅது
சீரிய தெய்வச் சிவபதத்தைத் தந்தருளும்

14. மண்மகளே ஓரியலில் பாதியிலும் பாதியினை
எண்ணிப் படித்தாலும் இல்லையொரு செய்யுளிலே
நாலில் ஒருபாகம் நாளும் படித்தாலும்
கோல மனிதஉரு கொண்டிங்கோர் மன்வந்த்ரம்
வாழ்வது சத்தியமாம் மற்றிதிலே ஐயம்என்
தாழ்வும் மனத்துயரும் தானெய்த மாட்டானே

15-16. பத்து இலைஏழு பத்தில் ஒருபாதி
மொத்தமொரு நாலு முடிந்தில தேல்மூன்று
கற்க அதுவும் கடினமெ னில்இரண்டு
நற்சுலோ கங்களையே நாளும் படித்தாலும்
ஒன்றேதான் போதுமென ஓதி உணர்ந்தாலும்
ஒன்றுமுடி யாது ஐயனே ஒருபாதிச்
செய்யுளே நானிங்கு செப்புவேன் என்றாலும்
உய்வுண்டு திங்கள் ஒளிவீசு மண்டலத்தில்
பத்தா யிரமாண்டு பாங்குடனே வாழ்ந்திடுவான்
செத்தாலும் இந்தச் செகத்தில்நர னாய்பிறப்பான்

17. மீண்டும் அவனிந்த மேன்மைமிகு கீதையினை
யாண்டும் ஓத இணையிலா நன்முக்தி
எய்துவான் கீதையென ஏங்கி இறப்பவனும்
உய்வான் பரகதிதான் உண்மையில் எய்துவனே

18. நாவும் சொலநடுங்கும் நானா விதப்பாவம்
யாவுமே செய்த இழிஞனுங் கீதையினை
செவியாரக் கேட்பதில் சிந்தைகொடுத் தானென்றால்
நவில்வேன்நான் என்னுடை நற்பதம்பெற் றானென்றே

19. கர்மத் தளைவிழுந்து கட்டுண்டான் கூடஇத்
தர்மமாம் கீதைபுகல் தத்துவமுற் றோதினனேல்
தேகம் இருக்கையிலே சீவன்முக்த னாகிப்பின்
தேகம் அழிந்தவுடன் சென்றடைவான் என்பதமே

20. சனகர் முதலான சாற்றரிய மன்னர்களும்
மனம்மெய் வாக்கினால் வாணாள் முழுவதுமே
கீதை தனைஎய்திக் கீழ்மை தனைக்களைந்து
பாதை தெரிந்து பரமபதம் எய்தினரே

21. கீதையதன் மேன்மையைக் கிஞ்சிற்றும் ஓராமல்
கீதை முழுவதையுங் கீழ்மேலாய்க் கற்றாலும்
எல்லாமே வீண்தான் எதுவும் பயனில்லை
கல்லா திருப்பதே கற்பதினும் நல்லதம்மா

22. சாத்திரமாம் கீதைதனை சாற்றுமதன் மாண்புடனே
சேர்த்துப் படிப்போனை தெய்வநிலை வந்தெய்தும்
யாரும் அடைவதற்கு என்றும் அரிதான
பேராப் பெருநிலையும் பெட்புடனே வந்தெய்தும்

**சூதர் கூறினார்**

23. கீதையெனும் நூலையதன் கீர்த்தியறிந் தேகற்போன்
வாதனைக ளற்று(உ)யர் வானபதம் தானடைவான்
உண்மை இதைநீவீர் ஓர்ந்து அறிந்திடுக
வண்மைமிகு சாத்திரத்தின் மாண்பதனை தேர்ந்திடுக

வராக புராணத்தில் உள்ள "**கீதையின் மகத்துவம்**"
என்னும் பகுதி இவ்வாறு நிறைவு பெறுகிறது.



## ஆதிசங்கரர் அருளிய
## குருவணக்கம்

1. திண்ணமுற உடலிருந்தும் சீர்த்திமிகுந் திருந்தும்
மண்ணிலுள்ள திரவியங்கள் மலையளவு இருந்தும்
எண்ணம்குரு திருவடியில் என்றும்நிலைத் திலதேல்
என்னபயன்? என்னபயன்? என்னபயன்? அம்மா!

2. மண்ணில்நல்ல செல்வமுடன் மனைவிமக் களுமே
எண்ணிலாத சுற்றத்துடன் யாவும்பெற்றப் போதும்
எண்ணம்குரு திருவடியில் என்றும்நிலைத் திலதேல்
என்னபயன்? என்னபயன்? என்னபயன்? அம்மா!

3. வண்ணமிகு மறைமொழியும் வாயனென்ற போதும்
நண்ணுகவி மழைபொழியும் நாவனென்ற போதும்
எண்ணம்குரு திருவடியில் என்றும்நிலைத் திலதேல்
என்னபயன்? என்னபயன்? என்னபயன்? அம்மா!

4. உன்னையிந்த நாடுமற்று உலகுபுகழ்ந் தாலும்
உன்னுடைய செயல்களெலாம் நன்செயலென் றாலும்
எண்ணம்குரு திருவடியில் என்றும்நிலைத் திலதேல்
என்னபயன்? என்னபயன்? என்னபயன்? அம்மா!

5. மண்டலத்து ஆட்சியுந்தன் வசமிருந்த போதும்
மன்னரெலாம் உனக்கடிமை செய்துவாழ்ந்த போதும்
எண்ணம்குரு திருவடியில் என்றும்நிலைத் திலதேல்
என்னபயன்? என்னபயன்? என்னபயன்? அம்மா!

6. உன்னுடைய புகழையிந்த உலகுமுழங்கிற் றென்றால்
உன்னுடைய செயலினாலா? குருவின்கரு ணையாலா?
எண்ணம்குரு திருவடியில் என்றும்நிலைத் திலதேல்
என்னபயன்? என்னபயன்? என்னபயன்? அம்மா!

7. எண்ணிலாத போகவின்பம் யாகயோக பலன்கள்
நண்ணுகிலேன் நஞ்செனவே கொள்வேன்நானென் றாலும்
எண்ணம்குரு திருவடியில் என்றும்நிலைத் திலதேல்
என்னபயன்? என்னபயன்? என்னபயன்? அம்மா!

8. சின்னமுறும் உடல்வெறுத்து செயல்விடுத்து நாளும்
உன்னுடைய மனம்விடுத்து வனமுறைந்த போதும்
எண்ணம்குரு திருவடியில் என்றும்நிலைத் திலதேல்
என்னபயன்? என்னபயன்? என்னபயன்? அம்மா!

9. மன்னன்என்ன? சின்னன்என்ன? மறைமுனிவன் என்ன?
நன்னெறியில் இல்லறத்தை நடத்துபவன் என்ன?
அன்புடனே குருவணக்கம் அதனில்மனம் லயித்து
என்றுமவர் வழிநடந்தால் எய்தும்பிரம்ம நிலையே.

## ஆதிசங்கரர் அருளிய
## விஷ்ணு வணக்கம்

1. அகந்தை தன்னை அழித்துவிடு
அலையும் மனத்தை அடக்கிவிடு
சுகமே நிதமும் அதுதேடும்
சுடரில் புழுப்போல் அதுவீழும்
இகத்தில் உழலும் உயிர்களுக்கு
இரக்கம் காட்டி அருள்பவனே
அகத்தில் உறையும் பெருமாளே
அடியேன் பவக்கடல் கெடுத்திடுவாய்

2. திருவடி யிரண்டும் தாமரைப்பூ
சிதறும் தேன்துளி கங்கைநதி
பரிமள சுகந்தம் அஃதிங்கு
பரவும் சச்சித் தானந்தம்
திருமகள் மணாளன் திருவடியில்
தினமும் சிந்தை தனைவைத்து
ஒருமுக மாக வணங்கிடுவேன்
உலகக் கவலை மறந்திடுவேன்

3. மனதில் பேதம் ஒருசிறிதும்
மறந்தும் கருதேன் என்றாலும்
எனையுன் னடிமை என்பதல்லால்
என்றும் நீயென் னடிமையில்லை
நனிஎழு கடலலை ஒவ்வொன்றும்
நாளும் கடலைச் சார்ந்தவையே
பனைமரம் உயரம் எழுந்தாலும்
பௌவம் அலையைச் சார்வதில்லை

4. மலையைக் கையில் எடுத்தவனே
மாயா அசுரரை அழித்தவனே
கலையெழில் கொஞ்சும் விழியிரண்டில்
கதிரும் நிலவும் உடையவனே
சிலைவளை வீரா செகந்நாதா
திருமா லேயுன் தரிசனத்தால்
நிலையில் மாயா வாழ்வழியும்
நிமலா இதிலென் ஐயமுமே

5. திருவவ தாரம் பலவெடுத்து
செகத்தைக் காக்கும் பெருமானே
இருவினைப் பயனால் இங்குற்ற
எம்மை யாரே காத்திடுவார்?
கருமம் எதுவென் றறியாது
கதறும் என்னை ஐயாநீ
எரியும் பிறவி நெருப்பினின்று
என்றும் காத்தல் செய்திடுவாய்

6. உரலில் கட்டுண் டுயர்ந்தோனே
உலகைக் காக்கும் கோவிந்தா
தரும தயாளா நவநீதா
தாமரைக் கண்ணா எழில்மன்னா
திரும்பத் திரும்ப எமையிந்த
தீரா பவக்கடல் கடைவோனே
அருள்விழி திறந்து பார்த்திடுவாய்
அடியேன் அச்சம் தீர்த்திடுவாய்

7. கருணா கரனே எனைநாளும்
காக்கும் இறையே பெருமானே
இருதாள் சரணம் சரணமென
என்னை அடைக்கலம் தந்துவிட்டேன்
ஒருநா ளும்நான் மறவாமல்
ஓதிய பாடல் இருமூன்றும்
நிரல்நிர லாகஎன் இதழ்க்கமலம்
நின்று ஞிமிறென நிலவட்டும்.



ஆதிசங்கரர் அருளிய

# ஸ்ரீமத் பகவத் கீதைப் பேருரை

## பாயிரம்

### கடவுள் வாழ்த்து

**நாராயண: பரோ(அ)வ்யக்தாத் அண்டமவ்யக்தஸம்பவம் ।**
**அண்டஸ்யாந்தஸ்த்விமே லோகா: ஸப்தத்வீபா ச மேதினீ ॥**

"பகவான் ஸ்ரீ நாராயணர் அவ்யக்தத்திற்கு அப்பால் இருக்கின்றார். அவ்யக்தத்தினின்றே அண்டம் உருவாகின்றது. அந்த அண்டத்தினுள் ஏழு தீவுகளை உடைய பூமியும் இருக்கின்றன"[1].

இவ்வுலகைப் படைத்து அதனை நிலைபெறச் செய்ய விரும்பிய அந்த பகவான், மரீசி முதலிய பிரஜாபதிகளைத் தோற்றுவித்து அவர்கள் வேதங்கள் கூறும் பிரவிருத்தி தர்மத்தை

---

*1. இச்சுலோகம் இப்பிரபஞ்சத்திற்கு ஆதாரமாகவும், அனைத்துயிர்களின் அகங்களிலும் பரமாத்மாவாக விளங்கு பவருமான பகவான் ஸ்ரீ நாராயணரை போற்றி அவரது ஆசியினை யாசிக்கின்றது. இது பிரம்மாண்ட புராணத்தில் காணப்படுவதாக, மனுஸ்மிருதியின் முதல் அத்தியாயம் பத்தாம் சுலோகத்தின் உரையில் ஸ்ரீராகவானந்தர் குறிப்பிடுகின்றார்.*

*இப்பூமியின் கண் உள்ள ஏழுதீவுகள் ஜம்பு, பிலக்ஷம், குசம், கிரௌஞ்சம், சாகம், சால்மலம், மற்றும் புஷ்கரம் என்பனவாகும்.*

(கர்மத்தை) மேற்கொள்ளுமாறு செய்தார். அதன் பின்னர் சனகர், சநந்தனர்[2] போன்ற மற்றவர்களைப் படைத்து ஞானம் மற்றும் வைராக்கியத்தைச் சிறப்பாகவுடைய நிவ்ருத்தி தர்மத்தை (கர்மத்துறவை) அவர்கள் மேற்கொள்ளுமாறு செய்தார். இவ்வுலகம் நிலைபெறுவதற்கு வேதங்கள் இருவகையான தர்மங்களையே எடுத்துரைக்கின்றன. அவை பிரவிருத்தியும், நிவ்ருத்தியுமேயாகும். அத்தர்மமே உயிர்களுக்கான உறுதியான நன்மையை நேரடியாகத் தருவதாகவும் பிராமணர் உள்ளிட்ட வர்ணத்தாராலும், ஆச்ரமத்தாராலும் நீண்ட நெடுங்காலமாக மேற்கொள்ளப்பட்டு வருகின்றது.

காலம் பல கழிந்தபின் அத்தர்மத்தைப் பின்பற்றுபவர்களிடம் ஓங்கி வளர்ந்த காமத்தால் அவர்தம் விவேகம் அழிந்து, அதர்மம் விளைந்தது. இவ்வாறு தர்மம் தாழ்ந்து அதர்மம் கோலோச்சியபொழுது, இவ்உலகைக் காத்தற்பொருட்டு, நாராயணன் எனப்படும் ஆதிகர்த்தாவாகிய பகவான் ஸ்ரீ விஷ்ணு இப்புவிக்குரிய பிரம்மமாகிய பிராமணத்துவத்தை நிலைநிறுத்துவதற்காக வசுதேவருக்கும், தேவகிக்கும் மைந்தனாகத் தமது அம்சத்தால் ஸ்ரீ கிருஷ்ணராக அவதரித்தார். ஏனெனில், பிராமணத்துவம் நிலைபெற்றாலேயே வேததர்மம் பாதுகாக்கப்படும். மேலும் வர்ணாச்சிரம தர்மங்கள் அதனைச் சார்ந்தன்றோ நிற்கின்றன.

ஞானம், ஐசுவர்யம், சக்தி, வலிமை, பேராண்மை, ஒளி, என்பவற்றை எப்போதும் தம்மகத்தேயுடைய பகவான், முக்குண வடிவமும், ஸ்ரீ விஷ்ணுவிற்குரியதுமான தமது மாயை என்னும் மூலப் பிரகிருதியை வசப்படுத்தி உண்மையில் பிறப்பற்றவராகவும், அழிவற்றவராகவும், எல்லா உயிர்களுக்கும் ஈசுவரராகவும், இயல்பாகவே நித்யராகவும், பரிசுத்தராகவும், புத்தராகவும், முக்தராகவும் இருந்தபோதிலும், உலகின் நன்மைக்காக தமது மாயையினால் உடல்பெற்றார் போன்றும், பிறந்தவர் போன்றும் காணப்படுகின்றார்.

---

*2. சனகர், சநந்தனர், சநாதனர், சனத்குமாரர் என்னும் நால்வரும் நித்திய குமாரர்களாவர். இவர்கள் பிரஜாவிருத்தியில் ஈடுபடாமல், காம குரோதாதிகளை ஒழித்து ஞானநிஷ்டையில் நாளும் ஆழ்ந்தவர்களாவர்.*

அவருக்கு அதனால் ஒருபயனும் இல்லை என்ற போதிலும், அனைத்துயிர்களின் நன்மைக்காக, வேதங்கள் கூறுகின்ற இருவகையான தர்மத்தை சோகமோகக் கடலில் மூழ்கிக் கிடந்த அர்ஜுனனுக்கு, நற்குணமிக்கவரால் ஏற்றுக் கொள்ளப்பட்டு, பின்பற்றப்பட்டாலேயே தர்மம் நிச்சயம் பரவும் என்ற கருத்தில் உபதேசித்தருளினார். முற்றும் உணர்ந்தவரான வேதவியாசர், பகவான் உபதேசித்த அத்தர்மத்தை எழுநூறு சுலோகங்களில் பகவத்கீதை என்னும் பெயரில் தொகுத்தளித்தார். புகழ்மிக்க இக்கீதையில் வேதங்கள் கூறும் பொருள்களனைத்தும் அடங்கியுள்ளன. எனினும் அது அறிவதற்கு அரியதாக இருக்கின்றது. அதன் உட்பொருளை விளக்கும் முகத்தான் பலரால் அதன் சொல், சொற்பொருள், சொற்றொடரின் பொருள், நியாயம் முதலியனவெல்லாம் விளக்கப் பெற்றிருந்தும், சாதாரண மனிதர்களால் அது முன்னுக்குப்பின் முரணாகப் புரிந்து கொள்ளப்படுவது கண்டு, அதன் பொருளை தெளிவாக நிர்ணயிக்க வேண்டுமென்று சற்று விரிவாக அதற்கு உரை செய்கின்றேன்.

புகழ்மிக்க இக்கீதா சாத்திரத்தின் முக்கிய நோக்கமாக, சம்சாரமும், அதன் காரணங்களும் முற்றிலும் ஒழிவதன் மூலம் பெறப்படும் முக்தியே விரிவாக விளக்கப்படுகின்றது. அது அனைத்துத் தர்மங்களையும் துறப்பதின் மூலம் பெறும் ஆத்ம ஞான நிஷ்டையினின்றே உண்டாகின்றது. கீதையின் உட்பொருளாகிய இத்தர்மத்தைக் கருத்திற் கொண்டே பகவான் "பிரம்மத்தின் நிலை எய்துவதற்கு இத்தர்மமே போதுமாம்" (ம.பா.அசுவ.16.12) என்று அனுகீதையில் கூறியருளினார். மேலும் அதில், "எவன் ஒன்றில் உறுதியுடன் இருப்பவனாய், ஒன்றும் சிந்தியாதவனாய் சொல்லறச் சும்மா இருக்கின்றானோ அவனுக்குப் புண்ணியமில்லை, பாவமில்லை, நன்மை இல்லை தீமை இல்லை" என்றும், (ம.பா.அசுவ.19.17) "துறவின் மூலமே ஞானம் அடையாளம் காணப்படுகின்றது".(ம.பா.அசுவ.43.25) என்றும் கூறியுள்ளார். இங்கு கீதையிலும் இறுதியில் "தர்மம் அனைத்தையும் துறந்துவிடு, சரணம் எனை நீ அடைந்துவிடு" (18.66) என்று அர்ஜுனனுக்கு அறிவுறுத்துகின்றார்.

கர்மத்தை வலியுறுத்தும் பிரவிருத்தி தர்மமானது பல வர்ணங்களையும் ஆச்ரமங்களையும் கருத்திற்கொண்டு விதிக்கப்பட்டதாகும். அது செல்வம் பெறுவதற்கும், சொர்க்கத்திற்குச் செல்வதற்கும் உரியதாக இருந்தபோதிலும் பயன் கருதாது, ஈசுவரார்ப்பணமாகச் செய்யப்படும்பொழுது சித்த சுத்தியை உண்டுபண்ணும். சித்தசுத்தி என்னும் பரிசுத்தமான மனம் ஞானநிஷ்டைக்குத் தகுதி பெறுகின்றது. இவ்வாறு ஞானம் பெறச் செய்வதின் மூலம் அது முக்திக்குக் காரணமாகின்றது. இதனைக் கருத்திற்கொண்டே பகவான் ''எல்லாக் கர்மங்களையும் பிரம்மத்திற்கு அர்ப்பணித்து'' என்றும், ''யோகிகள் பற்று நீங்கி, ஆத்ம சுத்திக்காகக் கர்மம் செய்கின்றனர்'' (5.10-11) என்றும் கூறியுள்ளார்.

கீதா சாத்திரம், முக்தியை நோக்கமாகக் கொண்ட இவ்விருவகை தர்மத்தைப் பொதுவாகவும், தனது உட்பொருளாகக் கொண்ட பரப்பிரம்மமாகிய வாசுதேவன் என்னும் பரமார்த்த தத்துவத்தைச் சிறப்பாகவும் வெளிப்படுத்துகின்றது. அதனால் இது சிறப்புப் பயனும், சிறப்புத் தொடர்பும், சிறப்புப் பொருளும்[1] உடையதாகும். இதன் பொருளைக் கற்றுத் தேர்வதின் மூலம் சகலபுருஷார்த்தங்களும் கைவரப் பெறும் ஆதலினால் நான் இதற்கு உரை செய்ய முயல்கின்றேன்.

---

*1. நூலின் பொருள்(விஷயம்) பயன் (பிரயோஜனம்) கேட்பதற்குத் தகுதியுடையவன்(அதிகாரி), தொடர்பு (ஸம்பந்தம்) என்பவை உணர்த்தபட வேண்டும். இவற்றை 'அநுபந்த சதுஷ்டயம்' என்பர்.*

## சுருக்க விளக்கம்

| | | |
|---|---|---|
| ஆ | = | ஆனந்தகிரி |
| ஈ.உ. | = | ஈசாவாஸ்ய உபநிஷத் |
| கட.உ. | = | கடோபநிஷத் |
| கே.உ | = | கேநோபநிஷத் |
| கௌ.உ. | = | கௌஷீதகீ உபநிஷத் |
| சுவே.உ. | = | சுவேதாச்வதரோபநிஷத் |
| ச.ப. | = | சதபத ப்ராஹ்மணம் |
| சா.உ. | = | சாந்தோக்ய உபநிஷத் |
| சாரீ | = | சாரீரக பாஷ்யம் |
| ஜா.உ. | = | ஜாபாலோபநிஷத் |
| தை.உ. | = | தைத்திரீயோபநிஷத் |
| தை.ஆ. | = | தைத்திரீய ஆரண்யகம் |
| தை-ஸம் | = | தைத்திரீய ஸம்ஹிதா |
| தை-ப்ரா | = | தைத்திரீய ப்ராஹ்மணம் |
| பி.உ. | = | பிருஹதாரண்யக உபநிஷத் |
| பு-ஸூ | = | புருஷஸூக்தம் |
| போ | = | போதாயந தர்மஸூத்ரம் |
| ம | = | மதுஸூதனஸரஸ்வதி |
| ம-அச்வ | = | மஹாபாரதம், அச்வமேதபர்வம் |
| மகா-சா-மோ | = | மகாபாரதம், சாந்தி பர்வம், மோக்ஷதர்மம் |
| மநு | = | மநு ஸ்ம்ருதி |
| ம-சா | = | மஹாபாரதம், சாந்தி பர்வம் |
| ம-ஸ்திரீ | = | மஹாபாரதம், ஸ்திரீ பர்வம் |
| மு.உ. | = | முண்டகோபநிஷத் |
| மோ | = | மோக்ஷதர்மம் (மஹாபாரதம்) |
| யா-உப | = | யாஜ்ஞிகீ உபநிஷத் |
| யோ-சா | = | யோகசாஸ்திரம் |
| ருக் | = | ருக் வேதம் |
| வி | = | விஷ்ணு புராணம் |
| வே | = | வேதாந்த தர்சநம் (ப்ரஹ்ம ஸூத்ரம்) |

## அத்தியாயம் ஒன்று

## அர்ஜுன விஷாத யோகம்

धृतराष्ट्र उवाच

धर्मक्षेत्रे कुरुक्षेत्रे समवेता युयुत्सवः ।
मामकाः पाण्डवाश्चैव किमकुर्वत सञ्जय ॥१॥

*த்ருதராஷ்ட்ர உவாச*

தர்ம க்ஷேத்ரே குரு க்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ:
மாமகா: பாண்டவாஸ் சைவ கிம் அகுர்வத ஸஞ்ஜய ॥ 1॥

*திருதராஷ்டிரன் கூறுகிறான்*

*ஓ, சஞ்சயனே, அறநிலமாகியக் குருநிலந்தன்னில், போர் செய்வதற்காக விரும்பிக் கூடியிருக்கும் எனைச் சார்ந்தோரும், பாண்டுவின் மைந்தர்களும் என்ன செய்தனர்?*

सञ्जय उवाच

दृष्ट्वा तु पाण्डवानीकं व्यूढं दुर्योधनस्तदा ।
आचार्यमुपसङ्गम्य राजा वचनमब्रवीत् ॥२॥

*சஞ்ஜய உவாச*

த்ருஷ்ட்வா து பாண்டவானீகம் வ்யூடம் துர்யோதனஸ்ததா ।
ஆச்சார்யமுபஸங்கம்ய ராஜா வசனமப்ரவீத் ॥ 2॥

*சஞ்சயன் கூறுகிறான்*

*அப்போது அணிவகுத்து நிற்கும் பாண்டவர்தம் படையைப் பார்த்த துரியோதனன் தனது குருவினிடத்துச் (துரோணர்) சென்று (பின்வருமாறு) கூறலாயினன்.*

पश्यैतां पाण्डुपुत्राणामाचार्य महतीं चमूम् ।
व्यूढां द्रुपदपुत्रेण तव शिष्येण धीमता ॥३॥

பஶ்யைதாம் பாண்டுபுத்ராணாமாசார்ய மஹதீம் சமூம் ।
வ்யூடாம் த்ருபத புத்ரேண தவ ஶிஷ்யேண தீமதா ॥ 3॥

*ஆச்சாரியரே, துருபதன் மைந்தனும், உமது சீடனுமாகிய புத்திமான் திட்டத்துய்ம்னனால் அணிவகுக்கப்பட்டிருக்கும் இப்பெரிய பாண்டவர் படையைக் காண்பீராக!*

अत्र शूरा महेष्वासा भीमार्जुनसमा युधि ।
युयुधानो विराटश्च द्रुपदश्च महारथः ॥ ४॥

அத்ர ஶூரா மஹேஷ்வாஸா பீமார் ஜுனஸமா யுதி ।
யுயுதானோ விராடஶ்ச த்ருபதஶ்ச மஹாரத: ॥ 4॥

*இப்பெரிய பாண்டவர் படையில் யுத்தம் செய்வதில் பீமனையும், அர்ஜுனனையும் நிகர்த்த பெரும் வில்லாளிகள் மற்றும் யுயுதானன்(சாத்யகி) விராடன் மற்றும் மகாரதனாகிய துருபதன்;*

धृष्टकेतुश्चेकितानः काशिराजश्च वीर्यवान् ।
पुरुजित्कुन्तिभोजश्च शैब्यश्च नरपुङ्गवः ॥ ५॥

த்ருஷ்டகேதுஶ் சேகிதான: காஶிராஜஸ்ச வீர்யவான் ।
புருஜித் குந்திபோஜஶ்ச ஶைப்யஶ்ச நரபுங்கவ: ॥ 5॥

*திருஷ்டகேது, சேகிதானன், வீரியமிக்கக் காசிராஜன், புருஜித், குந்தி போஜன், மனிதரேறாகிய சைவியன்,*

युधामन्युश्च विक्रान्त उत्तमौजाश्च वीर्यवान् ।
सौभद्रो द्रौपदेयाश्च सर्व एव महारथाः ॥ ६॥

யுதாமன்யுஶ் ச விக்ராந்த உத்தமௌஜாஶ் ச வீர்யவான் ।
ஸௌபத்ரோ த்ரௌபதேயாஶ் ச ஸர்வ ஏவ மஹா-ரதா: ॥ 6॥

*வீரமிக்க யுதாமந்யு, வலிமை மிக்க உத்தமௌஜா, சுபத்திரையின் புத்திரர்கள், திரௌபதியின் புதல்வர்கள் அனைவருமே மகாரதர்கள் ஆவர்.*

अस्माकं तु विशिष्टा ये तान्निबोध द्विजोत्तम ।
नायका मम सैन्यस्य सञ्ज्ञार्थं तान्ब्रवीमि ते ॥ ७॥

அஸ்மாகம் து விஶிஷ்டா யே தான் நிபோத த்விஜோத்தம ।
நாயகா மம ஸைன்யஸ்ய ஸம்ஜ்ஞார்தம் தான் ப்ரவீமிதே ॥ 7॥

*இருபிறப்பாளரில் சிறந்த அந்தணரே, எனது படைக்குத் தலைவர்களாக விளங்கும் தனிச்சிறப்பு மிக்கவர்களைப் பற்றியும் நீர் அறிந்து கொள்வதற்காக உமக்கு எடுத்துரைக்கிறேன்.*

भवान्भीष्मश्च कर्णश्च कृपश्च समितिञ्जय: ।
अश्वत्थामा विकर्णश्च सौमदत्तिस्तथैव च ॥८॥

பவான்பீஷ்மஶ் ச கர்ணஶ் ச க்ருபஶ் ச ஸமிதிம் - ஜய: ।
அஸ்வத்தாமா விகர்ணஶ் ச ஸௌமதத்திஸ் ததைவ ச ॥ 8॥

*நீர், பீஷ்மன், கர்ணன், பொருநர் தம்மைப் புறங்காணும் கிருபன், அஸ்வத்தாமன், விகர்ணன், சோமதத்தன் மைந்தன் பூரிசிரவசு மற்றும் ஜெயத்ரதன்.*

अन्ये च बहव: शूरा मदर्थे त्यक्तजीविता: ।
नानाशस्त्रप्रहरणा: सर्वे युद्धविशारदा: ॥९॥

அன்யே ச பஹவ: ஶூரா மத் - அர்தே த்யக்த ஜீவிதா: ।
நானா - ஶஸ்த்ர - ப்ரஹரணா: ஸர்வே யுத்த விஶாரதா: ॥ 9 ॥

*என்பொருட்டு உயிரையும் தரச் சித்தமாயிருக்கும் ஏராளமான வீரர்கள் இங்கே இருக்கின்றனர். பல்வேறு வகையான ஆயுதங்களைத் தரித்திருக்கும் இவர்கள், யுத்தத்தில் பெரும் வல்லுநர்களும் ஆவர்.*

अपर्याप्तं तदस्माकं बलं भीष्माभिरक्षितम् ।
पर्याप्तं त्विदमेतेषां बलं भीमाभिरक्षितम् ॥१०॥

அபர்யாப்தம் தத் அஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் ।
பர்யாப்தம் த்வ இதம் ஏதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் ॥ 10॥

*(ஆயினும்) பீஷ்மனால் பாதுகாக்கப்படும் நமது படையோ அளவிடற்கரியதாகவும், பீமனால் பாதுகாக்கப்படும் இவர்களுடைய படையோ அளவிடற்குரியதாகவும் இருக்கின்றது.*

अयनेषु च सर्वेषु यथाभागमवस्थिता: ।
भीष्ममेवाभिरक्षन्तु भवन्त: सर्व एव हि ॥११॥

அயனேஷு ச ஸர்வேஷு யதா - பாகம் அவஸ்திதா: ।
பீஷ்மம் ஏவாபிரக்ஷந்து பவந்த: ஸர்வ ஏவ ஹி ॥ 11॥

*நீங்கள் அனைவரும் அவரவர்க்கு நியமிக்கப்பட்ட இடங்களில் உறுதியாக இருந்த வண்ணம் பீஷ்மரைக் காத்தல் செய்வீராக.*

तस्य सञ्जनयन्हर्षं कुरुवृद्धः पितामहः ।
सिंहनादं विनद्योच्चैः शङ्खं दध्मौ प्रतापवान् ॥ १२॥

தஸ்ய ஸஞ்சயன் ஹர்ஷம் குரு வ்ருத்த: பிதாமஹ: ।
ஸிம்ஹ-நாதம் விநத்யோச்சை: ஶங்கம் தத்மௌ ப்ரதாபவான் ॥ 12॥

*பின்னர் துரியோதனன் மனம் மகிழ்ச்சியடையும் வண்ணம் குருவம்சத்துப் பெரியோனும் கீர்த்தி மிக்கவனுமான பீஷ்மன் சிங்கம் கர்ஜிப்பது போன்று தனது சங்கை ஊதிப் பேரொலி எழுப்பினான்.*

ततः शङ्खाश्च भेर्यश्च पणवानकगोमुखाः ।
सहसैवाभ्यहन्यन्त स शब्दस्तुमुलोऽभवत् ॥ १३॥

தத: ஶங்காஶ் ச பேர்யஶ் ச பணவானக-கோமுகா: ।
ஸஹஸைவாப்யஹன்யந்த ஸ ஶப்தஸ் துமுலோ (அ)பவத் ॥ 13॥

*அதன் பின்னர் திடீரென்று ஒலித்த சங்குகளும் பேரிகைகளும், தம்பட்டங்களும், பறைகளும், கொம்புகளும் ஆரவாரமிக்கப் பேரோசையினை எழுப்பின.*

ततः श्वेतैर्हयैर्युक्ते महति स्यन्दने स्थितौ ।
माधवः पाण्डवश्चैव दिव्यौ शङ्खौ प्रदध्मतुः ॥ १४॥

தத: ஶ்வேதைர் ஹயைர் யுக்தே மஹதி ஸ்யந்தனே ஸ்திதௌ ।
மாதவ: பாண்டவஶ் சைவ திவ்யௌ ஶங்கௌ ப்ரதத்மது: ॥ 14॥

*பின்னர் வெள்ளைக் குதிரைகள் பூட்டிய மகத்தான இரதத்தில் நின்றவண்ணம் மாதவனும், அர்ஜுனனும் தமது தெய்வீக சங்குகளை முழங்கினர்.*

पाञ्चजन्यं हृषीकेशो देवदत्तं धनञ्जयः ।
पौण्ड्रं दध्मौ महाशङ्खं भीमकर्मा वृकोदरः ॥ १५॥

பாஞ்சஜன்யம் ஹ்ருஷீகேஸோ தேவதத்தம் தனஞ்ஜய: ।
பௌண்ட்ரம் தத்மௌ மஹா-ஸங்கம் பீம - கர்மா வ்ருகோதர: ॥15॥

*ரிஷீகேசனான கிருஷ்ணர் பாஞ்சஜன்யம் என்னும் சங்கினையும், தனஞ்ஜயன் தேவதத்தம் என்னும் சங்கினையும், அஞ்சுதற்குரிய செயல்களைச் செய்யும் ஒநாய் வயிற்று பீமன் பௌண்ட்ரம் என்னும் பெருஞ்சங்கினையும் ஊதினர்.*

अनन्तविजयं राजा कुन्तीपुत्रो युधिष्ठिरः ।
नकुलः सहदेवश्च सुघोषमणिपुष्पकौ ॥१६॥

அநந்த விஜயம் ராஜா குந்தீ - புத்ரோ யுதிஷ்டிர: ।
நகுல: ஸஹதேவஸ் ச ஸுகோஷ - மணிபுஷ்பகௌ ॥ 16॥

*குந்தி மைந்தனாகிய அரசன் யுதிஷ்டிரன் அநந்த விஜயம் என்னும் சங்கையும், நகுலனும், சகதேவனும் சுகோஷம் மணிபுஷ்பகம் என்னும் சங்கினையும் ஊதினர்.*

काश्यश्च परमेष्वासः शिखण्डी च महारथः ।
धृष्टद्युम्नो विराटश्च सात्यकिश्चापराजितः ॥१७॥

காஸ்யஸ் ச பரமேஷ்வ - ஆஸ: ஸிகண்டீ ச மஹாரத: ।
த்ருஷ்டத்யும்னோ விராடஸ் ச ஸாத்யகிஸ் சாபராஜித: ॥ 17॥

*வில்லாளிகளில் மிகச் சிறந்த காசிராஜனும், மகாரதனாகிய சிகண்டியும், திருஷ்டத்யும்நனும், விராடனும் எவராலும் வெல்லப்படாத சாத்யகியும்,*

द्रुपदो द्रौपदेयाश्च सर्वशः पृथिवीपते ।
सौभद्रश्च महाबाहुः शङ्खान्दध्मुः पृथक् पृथक् ॥१८॥

த்ருபதோ த்ரௌபதேயாஸ் ச ஸர்வஸ: ப்ருதிவீ - பதே ।
ஸௌபத்ரஸ் ச மஹா - பாஹு: ஸங்கான் தத்மு: ப்ருதக் ப்ருதக் ॥ 18॥

*துருபதனும், திரௌபதி மைந்தர்களும், புஜபலபராக்கிரமனான சுபத்திரை மைந்தனும், ஒ, பூமிக்குத் தலைவனே, தத்தம் சங்குகளை தனித்தனியே ஊதினர்.*

स घोषो धार्तराष्ट्राणां हृदयानि व्यदारयत् ।
नभश्च पृथिवीं चैव तुमुलो व्यनुनादयन् ॥१९॥

ஸ கோஷோ தார்தராஷ்ட்ராணாம் ஹ்ருதயானி வ்யதாரயத் ।
நபஶ் ச ப்ருத்வீம் சைவ துமுலோ வ்யனுனாதயன் ॥ 19॥

*அப்பேரொலி விண்ணிலும், மண்ணிலும் எதிரொலித்து திருதராஷ்டிரன் கூட்டத்தினரின் நெஞ்சங்களைப் பிளந்தன.*

अथ व्यवस्थितान्दृष्ट्वा धार्तराष्ट्रान् कपिध्वजः ।
प्रवृत्ते शस्त्रसम्पाते धनुरुद्यम्य पाण्डवः ।
हृषीकेशं तदा वाक्यमिदमाह महीपते ॥ २०॥

அத வ்யவஸ்திதான் த்ருஷ்ட்வா தார்தராஷ்ட்ரான் கபித்வஜ: ।
ப்ரவ்ருத்தே ஶஸ்த்ர - ஸம்பாதே தனுர் உத்யம்ய பாண்டவ: ।
ஹ்ருஷீகேஶம் ததா வாக்யம் இதம் ஆஹ மஹீ - பதே. ॥ 20॥

*அச்சமயம் குரங்குக் கொடியுடைய தனது இரதத்தில் இருந்த பாண்டு மைந்தன் அர்ஜுனன், தனது வில்லையும் அம்புகளையும் எடுத்துக் கொண்டு திருதராஷ்டிரக் கூட்டத்தினரை நோக்கிய வண்ணம், ஸ்ரீகிருஷ்ணரிடம் பின்வரும் வார்த்தைகள் கூறலுற்றான்.*

अर्जुन उवाच

सेनयोरुभयोर्मध्ये रथं स्थापय मेऽच्युत ।
यावदेतान्निरीक्षेऽहं योद्धुकामानवस्थितान् ॥ (२१)॥
कैर्मया सह योद्धव्यमस्मिन्रणसमुद्यमे ॥ (२२)॥

*அர்ஜுன உவாச*

ஸேனயோர் உபயோர் மத்யே ரதம் ஸ்தாபய மே(அ)ச்யுத ।
யாவத் ஏதான் நிரீக்ஷே (அ)ஹம் யோத்து - காமான் அவஸ்தி தான் ॥ 21॥
கைர் மயா ஸஹ யோத்தவ்யம் அஸ்மின் ரண-ஸமுத்யமே ॥ 22॥

*அர்ஜுனன் கூறினான்:*

*'அச்சுதா, இருதிறத்துப் படையினர்க்கும் இடையில் எனது இரதத்தினைக் கொண்டு நிறுத்துக. அப்போதுதான் சமர் புரியும் வேட்கையுடன் நிற்போரையும், நான் யாருடன் பொருத வேண்டும் என்பதையும் என்னால் காண இயலும்.*

योत्स्यमानानवेक्षेऽहं य एतेऽत्र समागताः ।
धार्तराष्ट्रस्य दुर्बुद्धेर्युद्धे प्रियचिकीर्षवः ॥ (२३)॥

யோத்ஸ்யமானான் அவேக்ஷே (அ)ஹம் ய ஏதே (அ)ரத்ர-ஸமாகதா:।
தார்தராஷ்ட்ரஸ்ய துர்புத்தேர் யுத்தே ப்ரிய - சிகீர்ஷவ: ॥ 23॥

*துர்ப்புத்தியுடைய துரியோதனன் மனம் மகிழுமாறு இங்கு சமர் நாடி வந்திருப்போரை நான் காணவேண்டும்.*

सञ्जय उवाच

एवमुक्तो हृषीकेशो गुडाकेशेन भारत ।
सेनयोरुभयोर्मध्ये स्थापयित्वा रथोत्तमम् ॥ २४॥

*ஸஞ்ஜய உவாச*

ஏவம் உக்தோ ஹ்ருஷீகேஶோ குடாகேஶேனே பாரத ।
ஸேனயோர் உபயோர் மத்யே ஸ்தாபயித்வா ரதோத்தமம் ॥ 24॥

*சஞ்ஜயன் கூறினான்*

*ஓ, பரத குலத்தோரே, இங்ஙனம் அர்ஜுனன் உரைத்தது கேட்டதும், ரிஷிகேசனாகிய ஸ்ரீகிருஷ்ணர் படைகள் இரண்டிற்கும் நடுவில் கொண்டு அம்மேன்மைமிக்க இரதத்தினை நிறுத்தினார்.*

भीष्मद्रोणप्रमुखतः सर्वेषां च महीक्षिताम् ।
उवाच पार्थ पश्यैतान् समवेतान्कुरूनिति ॥ (२५)॥

பீஷ்ம - த்ரோண - ப்ரமுகத: ஸர்வேஷாம் ச மஹீ - க்ஷிதாம் ।
உவாச பார்த பஶ்யைதான் ஸமவேதான் குரூன் இதி ॥ 25॥

*பீஷ்மருக்கும், துரோணருக்கும், பிறநாட்டு மன்னர்கள் அனைவருக்கும் எதிரே இரதத்தினைக் கொண்டு நிறுத்தி "இங்கு கூடி நிற்கும் கௌரவர்களைப் பார்!" என்று கூறினார்.*

तत्रापश्यत्स्थितान् पार्थः पितृनथ पितामहान् ।
आचार्यान्मातुलान्भ्रातृन्पुत्रान्पौत्रान्सखींस्तथा ॥ (२६)॥

தத்ராபஶ்யத் ஸ்திதான் பார்த்த: பித்ரூனத பிதாமஹான் ।
ஆசார்யான் மாதுலான் ப்ராத்ரூன் புத்ரான்
பௌத்ரான் ஸகீம் ஸ்ததா ॥ 26॥

*பார்த்தன் அங்கே பூரிசிரவசு போன்ற தந்தை முறை உடையவர்களையும், பீஷ்மர் போன்ற பாட்டன் முறை உள்ளவர்களையும், துரோணாச்சாரியர் போன்ற குருமார்களையும், சல்லியன் போன்ற தாய்வழி மாமன்களையும், துரியோதனன் போன்ற சகோதரன் முறை உடையவர்களையும், துரியோதனன் மைந்தன் இலக்கணகுமரன் போன்ற புத்திரன் முறை உள்ளவர்களையும், இலக்கணகுமரனின் மைந்தர்களைப் போன்ற பேரன் முறை உடையவர்களையும் அசுவத்தாமா போன்ற தோழர்களையும் கண்டான்.*

श्वशुरान् सुहृदश्चैव सेनयोरुभयोरपि ।
तान्समीक्ष्य स कौन्तेयः सर्वान्बन्धूनवस्थितान् ॥ २७॥

**ஶ்வஶுரான் ஸுஹ்ருதஶ் சைவ ஸேனயோர் உபயோர் அபி ।**
**தான் ஸமீக்ஷ்ய ஸ கௌந்தேய: ஸர்வான் பந்தூன் அவஸ்திதான் ॥ 27॥**

*அதுபோல் இரண்டு படை வரிசைகளிலுமுள்ள துருபதன் போன்ற பெண் கொடுத்த மாமன்மாரையும், பயன்கருதாது நட்புக் கொள்ளும் கிருதவர்மா போன்ற தோழர்களையும், பல்வேறு உறவினர்களையும் கண்ட அர்ஜுனன்.*

अर्जुन उवाच

कृपया परयाविष्टो विषीदन्निदमब्रवीत् ।
दृष्ट्वेमं स्वजनं कृष्ण युयुत्सुं समुपस्थितम् ॥ २८॥

*அர்ஜுன உவாச -*

**க்ருபயா பரயாவிஷ்டோ விஷீதன் இதம் அப்ரவீத் ।**
**த்ருஷ்ட்வேமம் ஸ்வ-ஜனம் க்ருஷ்ண யுயுத்ஸும் ஸமுபஸ்திதம் ॥28॥**

கருணை மீதூற உணர்ச்சி வயப்பட்டவனாகக் கூறலுற்றான்:

*அர்ஜுனன் கூறுகிறான்:*

*"கிருஷ்ணரே, போர் செய்யும் உத்வேகத்துடன் இங்கு கூடி நிற்கும் எனது உறவினர்களையும், நண்பர்களையும் கண்ட பின்னர்,*

सीदन्ति मम गात्राणि मुखं च परिशुष्यति ।
वेपथुश्च शरीरे मे रोमहर्षश्च जायते ॥ २९॥

**ஸீதந்தி மம காத்ராணி முகம் ச பரிஶுஷ்யதி ।**
**வேபதுஶ் ச ஶரீரே மே ரோம - ஹர்ஷஶ் ச ஜாயதே ॥ 29॥**

*எனது அவயங்கள் சோர்வுறுகின்றன; எனது வாய் உலர்ந்து போகிறது; எனது உடல் நடுங்குகின்றது; மயிர் சிலிர்க்கின்றது.*

गाण्डीवं स्रंसते हस्तात्त्वक्चैव परिदह्यते ।
न च शक्नोम्यवस्थातुं भ्रमतीव च मे मनः ॥ ३०॥

**காண்டீவம் ஸ்ரம்ஸதே ஹஸ்தாத் த்வக் சைவ பரிதஹ்யதே ।**
**ந ச ஶக்னோமி அவஸ்தாதும் ப்ரமதீவ ச மே மன: ॥ 30॥**

*காண்டீவம் கரத்தினின்று நழுவுகின்றது. உடல் முழுதும் தீப்பற்றினாற்போல் எரிகின்றது; என்னால் நிற்க முடியவில்லை; என் மனம் சுழல்கின்றது; பிரம்மை பிடித்தவன் போல் என்னை நான் மறக்கின்றேன்.*

निमित्तानि च पश्यामि विपरीतानि केशव ।
न च श्रेयोऽनुपश्यामि हत्वा स्वजनमाहवे ॥ ३१॥

**நிமித்தானி ச பஶ்யாமி விபரீதானி கேஶவ ।**
**ந ச ஶ்ரேயோ (அ)னுபஶ்யாமி ஹத்வா ஸ்வ-ஜனம்ஆஹவே ॥ 31॥**

*விபரீதமான சகுனங்கள் பல காண்கிறேன். ஓ, கேசி என்னும் அசுரனைக் கொன்ற கேசவனே! போரில் சுற்றத்தாரை மாய்ப்பதில் எந்தவிதமா ர நன்மையும் விளையுமென்று எனக்குத் தோன்றவில்லை.*

न काङ्क्षे विजयं कृष्ण न च राज्यं सुखानि च ।
किं नो राज्येन गोविन्द किं भोगैर्जीवितेन वा ॥ ३२॥

**ந காங்க்ஷே விஜயம் க்ருஷ்ண ந ச ராஜ்யம் ஸுகானி ச ।**
**கிம் நோ ராஜ்யேன கோவிந்த கிம் போகைர் ஜீவிதேன வா ॥ 32॥**

*அதனால் போரில் வெற்றியை நான் வேண்டேன்; வெற்றியினால் வரும் இராஜ்ஜியத்தையும் அதன் சுகங்களையும் கூட நான் வேண்டேன்; ஓ, கோவிந்தா, இராஜ்ஜியத்தாலும், போகங்களினாலும், வாழ்க்கையினாலும் நமக்கு விளைவதென்ன?*

येषामर्थे काङ्क्षितं नो राज्यं भोगाः सुखानिच ।
त इमेऽवस्थिता युद्धे प्राणांस्त्यक्त्वा धनानि च ॥ ३३॥

**யேஷாம் அர்தே காங்க்ஷிதம் நோ ராஜ்யம் போகா: ஸுகானி ச ।**
**த இமே (அ)வஸ்திதா யுத்தே ப்ராணாம்ஸ் த்யக்த்வா தனானி ச ॥ 33॥**

*எவர் பொருட்டு இந்த இராஜ்ஜியமும், போகங்களும், சுகங்களும் நம்மால் விரும்பப்படுகின்றனவோ, அவர்கள் எல்லாம் இந்த யுத்த களத்தில் தங்கள் இன்னுயிரையும், செல்வங்களையும் துறந்தவர்களாக நிற்கின்றனர்.*

आचार्याः पितरः पुत्रास्तथैव च पितामहाः ।
मातुलाः श्वशुराः पौत्राः स्यालाः सम्बन्धिनस्तथा ॥ ३४॥

ஆச்சார்யா: பிதர: புத்ராஸ் ததைவ ச பிதாமஹா : ।
மாதுலா: ஶ்வஶுரா: பௌத்ரா: ஸ்யாலா: ஸம்பந்தினஸ்ததா ॥ 34॥

*அதுபோல ஆசிரியர்களும், தந்தையரும், புத்திரர்களும், பாட்டன்மாரும், அம்மான்மாரும், மாமன்மாரும், பேரன்மாரும், மைத்துனர்களும், சம்பந்திமார்களும் (இங்குளர்).*

एतान्न हन्तुमिच्छामि घ्नतोऽपि मधुसूदन ।
अपि त्रैलोक्यराज्यस्य हेतोः किं नु महीकृते ॥ ३५॥

ஏதான் ந ஹந்தும் இச்சாமி க்னதோ (அ)பி மதுஸூதன ।
அபி த்ரைலோக்ய - ராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீ க்ருதே ॥ 35 ॥

*ஓ, மதுசூதனா நான் கொல்லப்படினும் இவர்களைக் கொல்வதற்கு நான் விரும்புகிலேன். மூவுலகங்களின் ஆட்சி பெறுவதற்கெனினுங் கூட நான் இவர்களைக் கொல்ல விரும்புகிலேன். அற்ப பூமியின் பொருட்டு நான் இதனைச் செய்வேனா?*

निहत्य धार्तराष्ट्रान्नः का प्रीतिः स्याज्जनार्दन ।
पापमेवाश्रयेदस्मान्हत्वैतानाततायिनः ॥ ३६॥

நிஹத்ய தார்தராஷ்ட்ரான் ந: கா ப்ரீதி: ஸ்யாஜ் ஜநார்தன ।
பாபம் ஏவதஶ்ரயேத் அஸ்மான் ஹத்வைதான் ஆததாயின: ॥ 36॥

*ஓ, ஜநார்த்தன, திருதராஷ்டிரக் கூட்டத்தினரைக் கொன்று நாம் என்ன இன்பத்தை அடையப் போகிறோம்? இப்பகைவர்களைக் கொல்வதால் நம்மைப் பாவமே சாரும்.*

तस्मान्नार्हा वयं हन्तुं धार्तराष्ट्रान् स्वबान्धवान् ।
स्वजनं हि कथं हत्वा सुखिनः स्याम माधव ॥ ३७॥

தஸ்மான் நார்ஹா வயம் ஹந்தும் தார்தராஷ்ட்ரான் ஸ்வபாந்தவான் ।
ஸ்வ-ஜனம் ஹி கதம் ஹத்வா ஸுகின: ஸ்யாம மாதவ ॥ 37॥

*ஆதலினால் உறவினர்களாகிய திருதராஷ்டிரக் கூட்டத்தினரைக் கொல்வது நமக்கு உரியதாகாது. மாதவா! சுற்றத்தினரைக் கொன்றபின் நாம் எவ்வாறு இன்புற்றிருத்தல் கூடும்?*

यद्यप्येते न पश्यन्ति लोभोपहतचेतसः ।
कुलक्षयकृतं दोषं मित्रद्रोहे च पातकम् ॥ ३८॥

யதி அபி ஏதே ந பஶ்யந்தி லோபோபஹத - சேதஸ: ।
குல - க்ஷய - க்ருதம் தோஷம் மித்ர - த்ரோஹே ச பாதகம் ॥ 38 ॥

*பேரவாவினால் இவர்களது இதயங்கள் நிரப்பப்பட்டிருப்பதினால், குலத்தை அழிப்பதில் விளையும் தீங்கினையும், நண்பர்க்குத் துரோகம் செய்வதிலுள்ள பாதகத்தையும் இவர்கள் காணகிலராயினும்*

कथं न ज्ञेयमस्माभिः पापादस्मान्निवर्तितुम् ।
कुलक्षयकृतं दोषं प्रपश्यद्भिर्जनार्दन ॥ ३९॥

கதம் ந ஜ்ஞேயம் அஸ்மாபி: பாபாத் அஸ்மான் நிவர்திதும் ।
குல - க்ஷய - க்ருதம் தோஷம் ப்ரபஶ்யத்பிர் ஜநார்தன ॥ 39॥

*குல நாசத்தால் விளையும் குற்றத்தை அறிந்த நாம் இப்பாவத்திலிருந்து நிவர்த்தி பெற வழியறியாதிருப்பதென்ன, ஓ, ஜநார்தனனே.*

कुलक्षये प्रणश्यन्ति कुलधर्माः सनातनाः ।
धर्मे नष्टे कुलं कृत्स्नमधर्मोऽभिभवत्युत ॥ ४०॥

குல - க்ஷயே ப்ரணஶ்யந்தி குல தர்மா: ஸநாதனா: ।
தர்மே நஷ்டே குலம் க்ருத்ஸ்னம் அதர்மோ (அ)பிபவதிஉத ॥ 40॥

*குல நாசத்தால் நித்தியமான குல தர்மங்கள் அழிகின்றன. தர்மம் அழிவதினால், மீந்திருக்கும் குலத்தை அதர்மம் சூழ்கின்றது.*

अधर्माभिभवात्कृष्ण प्रदुष्यन्ति कुलस्त्रियः ।
स्त्रीषु दुष्टासु वार्ष्णेय जायते वर्णसङ्करः ॥ ४१॥

அதர்மாபிபாத் க்ருஷ்ண ப்ரதுஷ்யந்தி குல - ஸ்த்ரிய: ।
ஸ்த்ரீஷு துஷ்டாஸு வார்ஷ்ணேய ஜாயதே வர்ண - ஸங்கர: ॥ 41॥

*ஓ, கிருஷ்ணா, அதர்மம் சூழ்வதினால் குலமகளிர் கெடுகின்றனர். விருஷ்ணி குலத் தோன்றலே குல மகளிர் கெடுவதினால் வர்ணக் குழப்பம் உண்டாகின்றது.*

सङ्करो नरकायैव कुलघ्नानां कुलस्य च ।
पतन्ति पितरो ह्येषां लुप्तपिण्डोदकक्रिया: ॥ ४२॥

ஸங்கரோ நரகாயைவ குல -க்னானாம் குலஸ்ய ச ।
பதந்தி பிதரோ ஹி ஏஷாம் லுப்த - பிண்டோதக - க்ரியா: ॥ 42॥

*இக் குழப்பத்தால் குலத்தார்க்கும் அதனை அழித்தார்க்கும் நரகமே கிட்டுகிறது. இவர்களுடைய பித்ருக்கள் பிண்டமும், நீரும் இடும் கிரியைகள் செய்வாரின்றி வீழ்ச்சி பெறுகின்றனர்.*

दोषैरेतै: कुलघ्नानां वर्णसङ्करकारकै: ।
उत्साद्यन्ते जातिधर्मा: कुलधर्माश्च शाश्वता: ॥ ४३॥

தோஷைர் ஏதை: குல - க்னானாம் வர்ண - ஸங்கர - காரகை: ।
உத்ஸாத்யந்தே ஜாதி - தர்மா: குல - தர்மாஶ் ச ஶாஶ்வதா: ॥ 43॥

*வர்ணக் குழப்பம் உண்டாகுமாறு குலநாசம் செய்வோரின் இத்தகைய குற்றங்களினால் ஜாதி தர்மங்களும், நித்தியமாக என்றுமுள குலதர்மங்களும் அழிக்கப் படுகின்றன.*

उत्सन्नकुलधर्माणां मनुष्याणां जनार्दन ।
नरकेऽनियतं वासो भवतीत्यनुशुश्रुम ॥ ४४॥

உத்ஸன்ன - குல - தர்மாணாம் மனுஷ்யாணாம் ஜநார்தன ।
நரகே நியதம் வாஸோ பவதீதி அனுஶுஶ்ரும ॥ 44॥

*ஓ, ஜநார்தன, குலதர்மங்கள் அழிந்துபோன மனிதர்க்கு எந்நாளும் நரகமே இருப்பு என்று கேள்விப்படுகின்றோம்.*

अहो बत महत्पापं कर्तुं व्यवसिता वयम् ।
यद्राज्यसुखलोभेन हन्तुं स्वजनमुद्यता : ॥ ४५॥

**அஹோ பத மஹத் பாபம் கர்தும் வ்யவஸிதா வயம் ।**
**யத் ராஜ்ய-ஸுக-லோபேன ஹந்தும் ஸ்வ - ஜனம்-உத்யதா: ॥ 45॥**

*அந்தோ! அரசவின்பத்திற்கான அவாவினால் உந்தப்பட்டுச் சுற்றத்தாரைக் கொல்லத் தலைப்படும் நாம் பெரும் பாவம் செய்ய முயல்வது என்னே விந்தை!*

यदि मामप्रतीकारमशस्त्रं शस्त्रपाणय: ।
धार्तराष्ट्रा रणे हन्युस्तन्मे क्षेमतरं भवेत् ॥४६॥

**யதிமாம் அப்ரதீகாரம் அஶஸ்த்ரம் ஶஸ்த்ர - பாணய: ।**
**தார்தராஷ்ட்ரா ரணே ஹன்யுஸ் தன் மே க்ஷேமதரம் பவேத் ॥ 46॥**

*யாரையும் எதிர்க்காது நிராயுத பாணியாக நிற்கும் என்னை ஆயுதபாணிகளான திருதராஷ்டிரக் கூட்டத்தார் கொன்று விடினும் கூட அது எனக்கு நன்மையே ஆகும்.*

सञ्जय उवाच

एवमुक्त्वार्जुन: सङ्ख्ये रथोपस्थ उपाविशत् ।
विसृज्य सशरं चापं शोकसंविग्नमानस: ॥ (४७)॥

*ஸஞ்ஜய உவாச*

**ஏவம் உக்த்வார்ஜுன: ஸங்க்யே ரதோபஸ்த உபாவிஶத் ।**
**விஸ்ருஜ்ய ஸ - ஶரம் சாபம் ஶோக - ஸம்விக்ன - மானஸ: ॥47॥**

*சஞ்ஜயன் கூறுகிறான்:*

***யுத்த களத்தில் இவ்வாறு கூறிய அர்ஜுனன் தனது வில்லையும் அம்புகளையும் கீழே எறிந்துவிட்டு துயரில் மூழ்கிய மனத்தினனாய், இரதத்தில் உள்ள பீடத்தின் மீது மீண்டும் அமர்ந்து கொண்டான்.***

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்மபர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத்கீதையில் "அர்ஜுன விஷாத யோகம்" என்னும் முதல் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.





## அத்தியாயம் - இரண்(

## சாங்கிய யோகம்

सञ्जय उवाच

तं तथा कृपयाविष्टमश्रुपूर्णाकुलेक्षणम् ।
विषीदन्तमिदं वाक्यमुवाच मधुसूदनः ॥१॥

*ஸஞ்ஜய உவாச*

தம் ததா க்ருபயாவிஷ்டம் அஶ்ரு - பூர்ணாகுலேக்ஷணம் ।
விஷீதந்தம் இதம் வாக்யம் உவாச மதுஸூதன: ॥ 1॥

*சஞ்ஜயன் கூறுகிறான்:*

*இவ்வாறு இரக்கமுற்றவனாகவும், மனதில் வருத்தமுற்ற வனாகவும், விழிகளில் நீர் நிரம்பியவனாகவும் நின்ற அர்ஜுனனைக் கண்டு மதுசூதனன் கூறுகிறார்.*

श्रीभगवानुवाच

कुतस्त्वा कश्मलमिदं विषमे समुपस्थितम् ।
अनार्यजुष्टमस्वर्ग्यमकीर्तिकरमर्जुन ॥२॥

*ஶ்ரீபகவான் உவாச*

குதஸ் த்வா கஶ்மலம் இதம் விஷமே ஸமுபஸ்திதம் ।
அனார்ய - ஜுஷ்டம் அஸ்வர்க்யம் அகீர்தி-கரம் அர்ஜுன ॥ 2॥

*ஸ்ரீபகவான் கூறுகிறார்:*

*அர்ஜுனா! இந்தச் சிக்கலான நிலையில் இம்மனக்குழப்பம் உனக்கு எங்கிருந்து வந்தது? இது மேன்மக்களுக்கு ஒவ்வாதது வானவர் நாட்டின் வழியை அடைப்பது, அபகீர்த்தி தருவது.*

क्लैब्यं मा स्म गमः पार्थ नैतत्त्वय्युपपद्यते ।
क्षुद्रं हृदयदौर्बल्यं त्यक्त्वोत्तिष्ठ परन्तप ॥३॥

க்லைப்யம் மா ஸ்ம கம: பார்த நைதத் த்வயி உபபத்யதே ।
க்ஷுத்ரம் ஹ்ருதய - தௌர்பல்யம் த்யக்வோத்திஷ்ட பரந்தப ॥ 3॥

*பார்த்தா, பேடித் தன்மை அடையாதே; உனக்கு சிறிதும் இது பொருந்தாது. இழிவான மனத் தளர்ச்சியினை ஒழித்து, எழுந்து நில்! பகைவரைச் சுடுவோய்.*

अर्जुन उवाच

कथं भीष्ममहं सङ्ख्ये द्रोणं च मधुसूदन ।
इषुभिः प्रति योत्स्यामि पूजार्हावरिसूदन ॥ ४॥

*அர்ஜுன உவாச*

கதம் பீஷ்மம் அஹம் ஸங்க்யே த்ரோணம் ச மதுஸூதன ।
இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவ் அரி-ஸூதன ॥ 4॥

*அர்ஜுனன் கூறுகிறான்:*

மதுசூதனா, பீஷ்மரையும், துரோணரையும் போரில் அம்புகளால் எப்படி எதிர்ப்பேன்? இவர்கள் வணங்குதற்குரியோராவர், பகைவரை அழிப்பவரே

गुरूनहत्वा हि महानुभावान् श्रेयो भोक्तुं
भैक्ष्यमपीह लोके ।
हत्वार्थकामांस्तु गुरूनिहैव भुञ्जीय भोगान्
रुधिरप्रदिग्धान् ॥ ५॥

குருன் அஹத்வா ஹி மஹானுபாவான் ஶ்ரேயோ
போக்தும் பைக்ஷ்யம் அபீஹலோகே ।
ஹத்வார்த - காமாம்ஸ் து குருன் இஹைவ
புஞ்ஜீய போகான் ருதிர - ப்ரதிக்தான் ॥ 5॥

*உயர்ந்தோராகிய குருக்களைக் கொல்லாமல் இவ்வுலகில் பிச்சை ஏற்று உண்ணலும் நன்று. மேலும் குருக்களைக் கொன்று நாம் அனுபவிக்கும் பொருளும் இன்பமும் இரத்தம் தோய்ந்தவையாகும்.*

न चैतद्विद्मः कतरन्नो गरीयो- यद्वा जयेम
यदि वा नो जयेयुः ।
यानेव हत्वा न जिजीविषाम- स्तेऽवस्थिताः
प्रमुखे धार्तराष्ट्राः ॥ ६॥

ந சைதத் வித்ம: கதரன் நோகரீயோ யத் வா
ஜயேம யதி வா நோ ஜயேயு: ।
யான் ஏவ ஹத்வா ந ஜிஜீவிஷாமஸ் தே (அ)வஸ்திதா:
ப்ரமுகே தார்தராஷ்ட்ரா: ॥ 6 ॥

*நாம் இவர்களை வெல்வது அல்லது இவர்கள் நம்மை வெல்வது இவை இரண்டில் எது சிறந்ததென்று விளங்கவில்லை. எவர்களைக் கொன்று நாம் உயிர் வாழ விரும்போமோ அந்த திருதராஷ்டிரக் கூட்டத்தினர் எதிரில் நிற்கின்றனர்.*

कार्पण्यदोषोपहतस्वभावः पृच्छामि त्वां
धर्मसम्मूढचेताः ।
यच्छ्रेयः स्यान्निश्चितं ब्रूहि तन्मे शिष्यस्तेऽहं
शाधि मां त्वां प्रपन्नम् ॥ ७॥

கார்பண்ய - தோஷோபஹத - ஸ்வபாவ: ப்ருச்சாமி
த்வாம் தர்ம - ஸம்மூட - சேதா: ।
யச் ச்ரேய: ஸ்யான் நிஶ்சிதம் ப்ரூஹி தன்மே ஶிஷ்யஸ்
தே (அ)ஹம் ஶாதி மாம் த்வாம் ப்ரபன்னம் ॥ 7 ॥

*சிறுமையாகிய பலவீனத்தால் பாதிக்கப்பட்ட சுபாவமுடைய வனாக தர்மம் இன்னதென்று அறியாத குழம்பிய மனத்தினனாக நான் உம்மைக் கேட்கின்றேன். எது எனக்கு நன்மையளிக்கக்கூடியது என்பதை உறுதிபடக் கூறுக. நான் உமது சீடன்; உம்மைச் சரண் புகுந்தவன்; உபதேசித்தருள்க.*

न हि प्रपश्यामि ममापनुद्याद् यच्छोकमुच्छोषणमिन्द्रियाणाम् ।
अवाप्य भूमावसपत्नमृद्धं- राज्यं सुराणामपि चाधिपत्यम् ॥ ८॥

ந ஹி ப்ரபஶ்யாமி மமாபனுத்யாத் யச் சோகம் உச்சோஷணம்
இந்த்ரியாணாம் ।
அவாப்ய பூமாவ் அஸபத்னம் ருத்தம் ராஜ்யம்
ஸுராணாம் அபி சாதிபத்யம் ॥ 8 ॥

*பூமியின் மேல் வளங்கள் பல உடையதாகவும், பகையற்றதுமான இராஜ்யமும், வானுலகில் தேவர்களின் ஆட்சியும் எனக்குக் கிடைப்பினும் எனது புலன்களை வறட்சிப்படுத்தும் இத்துயரம் நீங்குதற்கு மார்க்கம் எதுவும் நான் அறியேன்.*

सञ्जय उवाच

एवमुक्त्वा हृषीकेशं गुडाकेशः परन्तप ।
न योत्स्य इति गोविन्दमुक्त्वा तूष्णीं बभूव ह ॥ ९॥

*ஸஞ்ஜய உவாச*

ஏவம் உக்த்வா ஹ்ருஷீகேஶம் குடாகேஶ: பரந்தப: ।
ந யோத்ஸ்ய இதி கோவிந்தம் உக்த்வா தூஷ்ணீம் பபூவ ஹ ॥ 9॥

*சஞ்ஜயன் கூறுகிறான்:*

*எதிரிகளைச் சுட்டெரிப்பவனும் நித்திரையை வென்றவனுமாகிய அர்ஜுனன், புலன்களின் நாயகனான ஸ்ரீகிருஷ்ணரிடம் இனிப் போர்புரியேன் என்று கூறி வாய்புதைத்து மௌனத்தில் ஆழ்ந்தான்.*

तमुवाच हृषीकेशः प्रहसन्निव भारत ।
सेनयोरुभयोर्मध्ये विषीदन्तमिदं वचः ॥ १०॥

தம் உவாச ஹ்ருஷீகேஶ: ப்ரஹஸன்ன் இவ பாரத ।
ஸேனயோர் உபயோர் மத்யே விஷீதந்தம் இதம் வச: ॥ 10॥

*பாரதா! அப்போது இரண்டு படைகளுக்கும் நடுவே துயருற்று நிற்கும் அர்ஜுனனைப் பார்த்து புன்னகை பூத்த முகத்தினனாக ஸ்ரீகிருஷ்ணர் பின்வரும் வார்த்தை கூறலுற்றார் :*

கீதையின் முதல் அத்தியாயத்தின் ஆரம்பத்தில் "பாண்டவர்களின் படையினைக் கண்டு" (1.2) என்று தொடங்கி கோவிந்தனிடம் "இனிப் போர் புரியேன் என்று கூறி வாய்புதைத்து மௌனத்தில் ஆழ்ந்தான்". (2.9) என்பது வரையிலான பகுதியானது அனைத்து உயிர்க் குலங்களின் பிறப்பு இறப்பு சுழற்சிக்கான வித்து உருவாவதற்குக் காரணமாக விளங்கும் துயரம், மயக்கம் போன்ற குற்றங்களின் ஆணிவேரை அலசிப்பார்ப்பதற்கான முன்மாதிரியாகவே விளக்கப்படல் வேண்டும். இதனைப் பின்வருமாறு விளக்கலாம்: ஆட்சி, ஆசிரியர்கள், சந்ததியினர், நண்பர்கள், சுற்றத்தினர் மற்றும் உறவினர் மீது வைத்திருக்கும் பாசத்திற்கு எங்கே ஓர் முற்றுப்புள்ளி வைக்க நேரிடுமோ என்னும் அச்சத்தின் விளைவே அர்ஜுனன் வெளிப்படுத்தியத் துயரமும் மயக்கமுமாகும். இப்பாசமானது "நான் அவர்களைச் சேர்ந்தவன்" "இவர்கள் என்னுடையவர்கள்" அதுபோல் "பீஷ்மரை நான் எவ்வாறு யுத்தத்தில் எதிர்ப்பேன்" என்பன போன்ற பொய்ம்மை உறவுகளிலிருந்து கிளைத்ததாகும். தனது பகைவர்களுடன் போர் புரிய வேண்டும் என்னும் சத்திரிய தர்மத்தினை மேற்கொண்டவனாக இருந்தும் அதற்குப் பதிலாக பிச்சை ஏற்று வாழ்வதற்கும் தயாராக இருந்தது, பரதர்ம விதிக்கு உடன் படுவதை உறுதி செய்கின்றது. இதன் காரணம் என்னவெனில் அர்ஜுனனின் துயரமும், மயக்கமும் அவனது

வேறுபடுத்தி உணரும் திறன் மற்றும் நடைமுறை அறிவினைப் புதையச் செய்ததினாலேயாம். அதனால் தான் அவன் யுத்தத்திலிருந்து தன்னை விலக்கிக் கொண்டதாகும். இவ்வாறு துயரம் மற்றும் மயக்கத்தினால் பற்றப்பட்டிருக்கும் மனதினை உடைய உயிர்கள் அனைத்தும் தமது வாழ்க்கை விதிகளைப் புறக்கணித்து தடை செய்யப்பட்டச் செயல்களைத் தழுவிக் கொள்கின்றன. தமக்குரிய சுதர்மத்தின்படி அவர்கள் வாழ்ந்த போதிலும் கூட அவர்களது மனம், வாக்கு காயம் போன்றவற்றின் செயல்கள், ஆணவத்திலிருந்து உண்டாகும் செயல்கள் மற்றும் பலன்களின் மீது கொண்ட ஆசையினால் நிச்சயம் உந்தப்படுகின்றன. இச்சூழ்நிலைகளில் சேர்ந்திருக்கும் தர்ம அதர்மங்களின் கடனைத் தீர்ப்பதற்காக பிறப்பு, இறப்புக் கொண்ட வாழ்க்கையானது முடிவின்றித் தொடர்கிறது. ஆகையினால்தான், ஒருடலிலிருந்து மற்றோர் உடலுக்கு மாறுதல் என்னும் இடம் பெயரும் வாழ்க்கையின் வித்துக்களாக துயரமும், மயக்கமும் இருக்கின்றன. இவற்றுடனானத் தொடர்பினை ஆத்மஞானம் ஒன்றினைத் தவிர வேறு எவ்வழியிலும் நீக்க முடியாது. இந்த ஆத்ம ஞானத்திற்கு முந்தைய நிலை எல்லாச் செயல்களையும் துறத்தல் என்பதாகும்! அதனால்தான் ஒட்டுமொத்த உலகின் நலனுக்காக அந்த ஞானத்தினை விளக்குவதற்காகவே பகவான் கிருஷ்ணர் அனைவருக்கும் கூற வேண்டிய ஒன்றினை அர்ஜுனனுக்குக் கூறுவதுபோல ''துயரப்படத் தகாதார் பொருட்டுத் துயர்ப்படுகின்றாய்'' (2,11) என்று கூறுகிறார். இதற்கு மாறாகச் சிலர் பின்வருமாறு வாதிடலாம்: செயல்களைத் துறத்தல் என்பதற்குப் பின்வரும் ஆத்மஞானத்துடன் ஒன்றியிருத்தலால் மட்டுமே முக்தி (கைவல்யம்) என்பது உறுதியாகக் கிடைத்துவிடாது. இதற்கு மாறாக, கீதையின் அழுத்தமான முடிவு என்னவெனில், முக்தியானது வேதங்கள் மற்றும் ஸ்மிருதிகளில் கூறப்பட்டிருக்கும் அக்னி ஹோத்திரம் போன்ற சடங்குகள் மற்றும் கடமைகளுடன் தொடர்புடைய ஞானத்தின் மூலமாகப் பெறப்படுகிறது என்பதாகும். அவர்கள் மேலும் பகவத் கீதையின் இவ்வுணர்வினைப் பின்வரும் பத்திகளில் இருந்தும் சுட்டிக் காட்டுகின்றனர். ''இதற்கு மாறாக இத்தர்மயுத்தத்தினை நீ செய்யவில்லை என்றால்'' (2.33) ''செயல்களைச் செய்வது மட்டுமே நினது கடமையாகும்'' (2.47); ''ஆகையினால் செயலலை மட்டும் செய்வாயாக'' (4.15) போன்றவையாகும். வேதங்கள் கூறும் செயல்கள் வேதனையினை உருவாக்குகின்றன. அதனால் அவை அதர்மத்தை வளர்க்கின்றனவென்று விளக்கமளிக்கத் தேவையில்லை. ஏன்? போரில் ஒரு சத்திரியன், தன்னுடைய ஆசாரியர்கள், சகோதரர்கள், குழந்தைகள் போன்றோரைக் கொல்வதற்குத் துணியும் செயலானது, மிகக் கொடியதாகத் தோன்றிய போதிலும் அது அதர்மமாகாது. ஏனென்றால் ஒரு சத்திரியனின் தர்மம் போர் செய்தலாகும். இதற்கு மாறாக போர் புரிய மறுத்தால் ''உனது தர்மம் மற்றும் பெருமையினை அழித்துக் கொள்வதோடு, பாவத்திற்கும் ஆளாகிறாய்'' (2.33) ஆகையினால் இவற்றை வலியுறுத்துவதற்காகவே பகவான் மிகவும் அழுத்தந்திருத்தமாக உயிருவள்ளவரைச் செய்யவேண்டிய வேதமுறை சார்ந்த செயல்கள் (அக்னிஹோத்ரம் முதலியன) அவை மிருகங்களைப் பலியிடுவதாயினும் அல்லது இதுபோன்ற வேறெச் செயலாயினும், அச்செயல்கள் பாவமாகமாட்டா. தன்மையினால், அவையும்

செய்தற்குக் கடப்பாடுடையனவே என்று உறுதிபடக் கூறுகிறார், என்றும் கூறலாம்.

இம்மறுப்பிற்குப் பதில் : மேலே கூறப்பட்டிருக்கும் அனைத்தும் பொருட்செறிவற்றனவாகும். ஏனெனில் ஞானத்தில் நிலை பெறுதல், புத்தியில் நிலைபெறுதல் என்னும் இரண்டும் இரு வெவ்வேறு புத்திகளை அடிப்படையாகக் கொண்டவையாகும். ''எவர் பொருட்டு நீ வருந்தக் கூடாதோ'' (2.11) என்று தொடங்கி, ''உனது சுதர்மத்தினைக் கருத்தில் கொண்டாலும்'' (2.31) என்பது வரையிலான சுலோகங்களில் பகவான் ஆத்மாவின் நித்திய சத்தியத்தைத் தெளிவுபடுத்துகிறார். இதுவே சாங்கியமாகும். ஜனனம் மரணம் போன்ற ஆறுவகையான மாற்றங்களுக்கு உள்ளாகாதிருக்கும் ஆத்மா அகர்த்தா ஆவான் என்று இது போதிக்கிறது. மேற்கண்ட சுலோகங்களின் பொருள் தொடர்புடைய கல்வியினால் உண்டாகும் ஞானமே சாங்கிய ஞானமாகும். இந்த ஞானம் எவரிடத்துப் பொருந்தியிருக்கிறதோ அவர்களே சாங்கியர்கள் ஆவர். இந்த ஞானம் பிறப்பதற்கு முன்பு விடுதலைக்குரிய கருவிச் செயல்களினால் ஒரு யோக நிலை ஏற்படுகின்றது. இச்செயல்கள் தர்மாதர்மங்களுக்கிடையிலான வேறுபாட்டினை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன; இது ஆத்மா உடலிலிருந்து வேறானது என்றும், செயல்கர்த்தா ஆதலினால் செயல்களின் பலன்களை அனுபவிப்பவன் என்னும் கருத்தினைச் சார்ந்திருக்கிறது,

இவ்வகைப்பட்ட ஞானமே யோக-ஞானமாகும். இது எவர்க்குப் பொருந்துகிறதோ அவர்கள் யோகிகள் ஆவர். இதனைப் பொருத்து பகவான் - சாங்கியத்தை அறிந்து கொள்வதில் ஆழங்கால்பட்ட சாங்கியர்களின் ஞானம் மற்றும் யோகத்தில் ஆழங்கால்பட்ட யோகிகளின் ஞானம் என்னும் இருவகை ஞானங்களுக்கு இடையே மிகத் தெளிவான வேறுபாட்டினை உருவாக்கி இருக்கிறார். ஒரே மனிதனிடம் ஒரே சமயத்தில் ஞானம் மற்றும் கர்மம் என்னும் இரண்டும் இருக்காது என்பதை உணர்ந்து கொண்டும், சாங்கியம் மற்றும் யோகம் என்பவற்றைச் சரியாக அறிந்து கொண்டும் பகவான் இவ்விரண்டையும் வேறுபடுத்தி இருக்கிறார்.கர்த்தா என்னும் உணர்வையும் அனேகம் என்னும் உணர்வையும் சார்ந்து நிற்பதான கர்மமும், அகர்த்தா என்னும் உணர்வையும் ஏகமென்னும் உணர்வையும் சார்ந்து நிற்பதான ஞானமும் ஒருவனையே ஒருங்குசார்ந்து நிற்க முடியாது என்று கண்டு பகவான் சாங்கிய புத்தியையும், யோக புத்தியையும் பிரித்துக் கூறியுள்ளார்.

வேறுபாட்டினைப் பற்றிய இவ்வுபதேசம் ''சதபத பிராமணத்தில்' அருளப்பட்டது போன்றதேயாகும். அதாவது ''இவ்வுலகினை மட்டுமே விரும்பி (ஆன்ம உலகம்) ரிஷிகளும், பிராம்மணர்களும் தங்கள் இல்லங்களைத் துறக்கின்றனர்.'' (பி.உ.4.4.22) இவ்வாறு சடங்குகளையும் கடமைகளையும் துறந்த பின்னர் ''இவ்வுலகில் ஆத்மாவை அடையப் பெற்றிருக்கும் நாம் நமது குழந்தைகளின் மூலம் எதைச் சாதிக்கப் போகிறோம்'' என்றும் அது மேலும் கூறுகிறது. மேலும் அதில் ஒரு மனிதன் அவன் திருமணத்திற்கு முன்பு அவனது இயற்கை நிலையில் இருக்கிறான் என்றும்

கூறப்பட்டிருக்கிறது. பின்னர் சடங்குகள், கடமைகள் என்பவை பற்றிய அவனது தேடுதல்களுக்குப் பிறகு மூவுலகங்களையும் அடைவதற்காக அவன் ஒரு மைந்தனையும், மனித செல்வம், தேவ செல்வம் என்னும் இருவகைச் செல்வங்களையும் நாடுகிறான். இவற்றுள் சடங்குகளையும், கடமைகளையும் தன்னகத்தேக் கொண்ட மனித செல்வம் பித்ரு லோகத்திற்கு இட்டுச் செல்கிறது. ஞானத்தினைத் தன்னகத்தேக் கொண்ட தேவ செல்வம் தேவ லோகத்திற்கு இட்டுச் செல்கிறது. இவ்வாறு வேதங்களினால் கட்டளையிடப்பட்டிருக்கும் சடங்குகளும், கடமைகளும் ஞானமின்றி, ஆசைகளை மட்டுமே கொண்டிருப்பவனுக்குரிய வழிகள் என்று எடுத்துக்காட்டுகின்றன. மேலும் அதில் "துறந்த பின்னர் அவர்கள் இரந்து வாழ்கின்றனர்" (பி.உ.4.4.22) என்பதானது துறவு நெறிக்கான கட்டளை ஆன்ம உலகினை மட்டுமே விரும்பி, பிற நாட்டங்களை விட்டொழித்தவர்க்கு மட்டுமே உரியது என்னும் பொருளில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இங்கே பகவானின் எண்ணம், வேதத்தின் செயல்களையும், ஞானத்தையும் ஒருங்கிணைப்பதாக இருந்திருந்தால், ஞானத்திற்கும் கர்மத்திற்கும் இடையிலுள்ள வேறுபாடு பற்றிய அவரது கூற்று அர்த்தமற்றதாக இருந்திருக்கும்.

"உனது எண்ணத்தின்படி கர்மத்தைவிட ஞானம் உயர்ந்ததோ?" என்னும், (3.1) அர்ஜுனனின் கேள்வியில் நியாயம் இல்லை. ஏனெனில் ஞானம், கர்மம் என்னும் இரண்டினையும் ஒரே மனிதன் பின்பற்றுவது அசாத்தியம் என்று பகவான் இதுவரை ஒன்றுமே கூறவில்லை. அப்படியிருக்க அர்ஜுனன் "உனது எண்ணத்தின்படி கர்மத்தைவிட ஞானம் சிறந்தது...." என்று கேட்டதின் மூலம் ஒரு தவறானக் கூற்றினை ஏற்றிச் சொல்கிறான். பகவான் கர்மத்தை விட ஞானம் சிறந்ததென்று தெளிவாகக் கூறுவதற்கு முன்பே அர்ஜுனன் இவ்வாறு கேட்டானென்றால், பகவான் இரண்டினையும் உறுதி செய்கிறார் என்று அவன் தவறாகப் புரிந்து கொண்டதினாலேயாம்.

மேலும் எல்லோருக்காகவும் ஞானம் மற்றும் கர்மத்தின் இணைப்புப் பற்றிப் பேசப்பட்டிருந்தால், அதில் அர்ஜுனனும் அடங்கவே செய்வான். ஆகையினால் இவ்விரண்டினையுமே அப்பியசிக்க வேண்டுமென்று உபதேசிக்கப்பட்டிருந்தால், "இருக்கும் இவ்விரண்டில் எதனை ஏற்றுக் கொள்வதினால் எனக்கு நன்மை பிறக்கும் என்பதைத் தெளிவாகக் கூறுவாயாக?" (3.2) எனும் கேள்வி எங்ஙனம் எழுதல்கூடும்? தனது பித்த நோயினைத் தீர்ப்பதற்காக வந்தவனிடம் மருத்துவன் இதமும், இனிமையும் உள்ளவற்றை உண்பாயாக என்று கூறும்பொழுது, இவ்விரண்டில் எதனை நான் உண்டால் எனது பித்த நோய் குணமாகும் என்னும் வேண்டுதல் எழுதுவதற்குச் சாத்தியமேஇல்லை. மேலும் அர்ஜுனன் பகவான் கூறியதின் பொருளினைத் தெளிவாகப் புரிந்து கொள்ளாது இக்கேள்வியைக் கேட்டிருப்பான் என்று கற்பனையாக நாம் கருதினால் அதற்குப் பகவான் "ஞானம் மற்றும் கர்மத்தின் இணைப்புப் பற்றி என்னால் உரைக்கப்பட்டிருக்கிறது. - நீ ஏன் இதில் குழப்பமடைய வேண்டும்?" என்று பதில் கூறியிருப்பார். மாறாக, "இரண்டு வகையான யோகங்கள் என்னால் ஆதியில் உரைக்கப்பட்டன என்று கூறியதின்

மூலம் அவனது கேள்விக்கு இப்பதில் முற்றிலும் முரணும், வேறுபாடும் உடையதாக இருக்கிறது.

ஸ்மிருதிகளினால் கட்டளையிடப் பட்டிருக்கும் கர்மங்களுடன் ஞானம் இணைக்கப்பட வேண்டும் என்பதே உள்நோக்கமாக இருந்திருந்தால் மேலே கூறப்பட்டக் கூற்றுக்கள் அனைத்தும் அர்த்தமற்றவையாகும். ஸ்மிருதிகளின் படி போர்செய்வதே சத்திரிய தர்மம் என்பதை அர்ஜுனன் நன்கறிந்திருந்தும் "நீ ஏன் என்னை இப்படுபாதகச் செயலில் ஈடுபடும்படி தூண்டுகிறாய்?' என்னும் அவனது குற்றச்சாட்டும் அர்த்தமற்றதாகும்.

ஆகையினால் கீதை விஞ்ஞானத்தில் சுருதி அல்லது ஸ்மிருதிகளில் கூறப்பட்டிருக்கும் கர்மத்துடன், ஞானத்தின் இணைப்புப் பற்றிய நோக்கம் இருக்கிறதென்று ஒருவராலும் எடுத்தியம்ப முடியாது.

இதற்கு மாறாக, அறியாமையின் காரணமாகவோ, அல்லது பற்றுவைத்தல் போன்ற குற்றங்களின் காரணமாகவோ ஒருவன் கர்மத்தினைச் செய்யத் தொடங்குகிறான், அக்காலத்தில் அவனது மனம் வேள்விகள், தானம், தவம் போன்றவற்றைச் செய்வதினால் தூய்மையடைகிறது. பின்னர் பரமமெய்ப்பொருள் பற்றிய ஞானம் உதயமாகிறது. அந்த ஞானத்தின் உட்பொருளாக "இவ்வுலகிலுள்ள அனைத்தும் ஒரே பிரம்மம் என்னும் அகர்த்தாவே ஆகும்" என்பதாக இருக்கிறது. அவனுக்கு கர்மம் மற்றும் அதன் பலன் இவ்வாறு ஒழிகின்றன. மேலும் உலகின் நன்மைக்காகப் பிரம்மத்தை உணர்ந்தவன் முன்புபோலவே தனது கர்மத்தில் தொடர்ந்து ஈடுபட்டுக் கொண்டிருப்பவனாகக் காணப்படலாம். இவன் செய்யும் கர்மம், புத்தியும் இணையக் கூடிய உண்மையானக் கர்மமாகக் காணப்படுவதில்லை. இதற்கு உதாரணமாக, ஒரு சத்திரியனாக இருந்து கிருஷ்ணர் நிறைவேற்றிய சுதர்மத்தினை எடுத்துக் கொள்ளலாம். மனித இலட்சியமான விடுதலைக்காக புத்தியுடன் இணைந்த கர்மமன்று அது. பகவானைப் போன்றே ஆத்ம உணர்வு பெற்ற எவனும் ஆணவம் மற்றும் கர்மபலன்களின் மீதான ஆசை போன்றவற்றிலிருந்து விடுதலை பெற்றவனாகிறான். ஆத்மாவின் உண்மையினை உணர்ந்தவன் "நான் கர்மத்தைச் செய்பவனல்ல" என்று நினைப்பதோடு கர்மத்தின் பலன்களையும் அவன் நாடுவதில்லை. இவனது நிலை, சொர்க்கம் போன்றவற்றை அடைவதற்காக வேள்விகள் செய்யும் இல்லறத்தான் பாதியில் அவற்றின் மீதானப் பற்றினை ஒழித்து அவ்வேள்வியினைத் தொடர்ந்து செய்வது போன்றதாகும். இப்போது அவ்வேள்வியானது பலன் எதிர்பாராத வேள்வியாகிறது. இவ்வாறு பல்வேறு இடங்களில் பகவான், "கர்மத்தைச் செய்தபோதிலும் அதன் கர்த்தா கறைபடியாதவனாகிறான்" (5.7) என்றும், "அவன் கர்மத்தினைச் செய்வதுமில்லை, கறைபடிவதுமில்லை" (13.31) எனறும் உறுதி செய்கிறார். 'உனது முன்னோர்கள் செய்ததைப் போன்று' (4.15) என்றும் 'ஜனகர் போன்றவர்கள் கர்மத்தின் மூலமாகவே நிறைவெய்தினர்' (3.20) என்றும் கூறிய கூற்றுக்களில் இருந்து மேற்கூறியவற்றை வேறுபடுத்தி உணரவேண்டும். எவ்வாறு? புறத்தோற்றத்தில் ஜனகர் போன்ற ஞானிகள் முன்னாளில் கர்மம் செய்தவர்களாகக் காணப்பட்ட போதிலும் அவர்கள் முழுநிறைவு

பெறுவதற்கும் மற்றும் உலகின் நன்மைக்காகவுமே அவ்வாறு செய்தனர். அவர்கள் 'குணங்கள் குணங்களில் இயலுகின்றன' (3.28) என்பதை நன்கறிந்திருந்தனர். அதாவது, எல்லாக் கர்மங்களையும் துறப்பதே அவர்களுக்கு சாலப் பொருந்துவதாயினும், அவர்கள் அந்நிறைவினை கர்ம வழியின் மூலமே நாடினர். அவர்கள் செயலைத் துறக்கவில்லை. இப்பத்தியின் சாரம் இதுவேயாகும். மாறாக ஜனகர் போன்றவர்கள் ஞானமற்றவர்களாக இருந்திருந்தால், அதன் விளக்கம் இவ்வாறு இருந்தல் வேண்டும் :

ஜனகர் போன்றவர்கள் 'ஸம்ஸித்தி' என்னும் மனத் தூய்மையினை தங்களது செயல்களை இறைவனுக்கு அர்ப்பணித்ததின் மூலமே எய்தினர் என்றும் பொருள் கொள்ளலாம். இங்கே 'ஸம்ஸித்தி' என்பது ஆத்ம ஞானத்தின் உதயத்தைக் குறிக்கின்றது. இதே கருத்து பகவானால் ''மனதினைத் தூய்மை செய்வதற்கே அவர்கள் செயற்படுகின்றனர்'' (5.11) என்னும் வார்த்தைகளில் உணர்த்தப்படும். 'கடவுளைத் தனக்குரிய கர்மத்தால் வழிபடுபவன் ஸித்தியடைகிறான்' என்றும் (18.46) இவ்வாறு ஸித்தி பெற்றவனுக்கு அவர் ஞான நிஷ்டையினைப் பரிந்துரைத்து 'இவ்வழியே ஸித்தியடைந்தவன் பிரம்மத்தினை எய்துகிறான்' (18.50) என்றும் கூறியதாகக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. ஆகையினால் கீதா விஞ்ஞானத்தின்படி பரம சத்தியம் பற்றிய சுய ஞானத்தின் மூலமே விடுதலையானது எய்தப்படுகிறது. இதுவே ஐயந்திரிபற்றக் கோட்பாடாகும். இக் கோட்பாட்டினை நாம் பகவத்கீதையின் பல்வேறு சுலோகங்களைக் கொண்டு உறுதி செய்யலாம்.

செய்யத்தக்கது யாது என்பதறியாது குழப்பமுற்று துக்கக் கடலினுள் மூழ்கியிருக்கும் அர்ஜுனனை அதனின்று மீட்க விரும்பிய பகவான் கிருஷ்ணர் ஆத்ம ஞானம் ஒன்றைத் தவிர வேறு எவ்வழியிலும் அர்ஜுனனை மீட்க முடியாது என்று தீர்மானித்தார். அதன் பேரில் அவனுக்கு ஆத்ம ஞானத்தினை எடுத்துரைத்தார்.

श्री भगवानुवाच

**अशोच्यानन्वशोचस्त्वं प्रज्ञावादांश्च भाषसे ।**
**गतासूनगतासूंश्च नानुशोचन्ति पण्डिताः ॥ ११॥**

*ஸ்ரீபகவான் உவாச*

**அஶோச்யான் அன்வஶோசஸ் த்வம் ப்ரஜ்ஞா வாதாம்ஶ் ச பாஷஸே**
**கதாஸூன் அகதாஸூம்ஶ் ச நானுஶோசந்தி பண்டிதா: ॥ 11॥**

*ஸ்ரீபகவான் கூறினார்:*

***துயரப்படத்தகாதவர் பொருட்டு துயரப்படுகின்றாய் ஞான மொழிகளும் பேசுகின்றாய் இறந்தார்க்கேனும் இருப்பார்க்கேனும் அறிஞர்கள் துக்கப்படுவதில்லை.***

பீஷ்மர், துரோணாச்சாரியர் போன்றவர்கள் துயரப்படத் தகாதவர் ஆவர். காரணம் அவர்கள் உயர்ந்த ஒழுக்கமுடையோர் என்பதோடு இயற்கையிலேயே அவர்கள் நித்தியர். இவர்கள் மரிப்பதற்கு நானன்றோ காரணம் என்று துக்கிப்பதும், ஞானமொழிகள் பேசுவதும், புத்தியிலே தெளிவில்லாதவன் போன்ற மாறுபாட்டினைக் காட்டுகின்றது. ஏனென்றால், ஆத்ம ஞானம் உணர்ந்த அறிஞர் பெருமக்கள் (பி.உ.3.5.1) இறந்தோரையும், இருப்போரையும் குறித்து துயரப்படமாட்டார். அஃதாவது இரண்டும் அவர்களுக்கு ஒன்றே என்பதாம். ஆகையினால் நீ ஓர் மதியிலி ஆவாய்.

அவர்கள் ஏன் துயரப்படத்தகாதார் என்றழைக்கப்படுகின்றனர்? ஏனென்றால் அவர்கள் நித்தியர் ஆவார். எவ்வாறு?

**न त्वेवाहं जातु नासं न त्वं नेमे जनाधिपा: ।**
**न चैव न भविष्याम: सर्वे वयमत: परम् ॥१२॥**

**ந த்வ ஏவாஹம் ஜாதுநாஸம் ந த்வம் நேமே ஜனாதிபா: ।**
**ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயம் அத: பரம் ॥ 12॥**

***இதற்கு முன் எக்காலத்திலும் நான் இல்லாமல் இருந்ததில்லை. அவ்வாறே நீயும் இல்லாமலிருந்ததில்லை. இவ்வரசர்களும் இல்லாமல் இருந்ததில்லை. இனி நாம் எல்லோரும் இல்லாமலிருக்கப் போவதும் இல்லை.***

இதற்கு முன் எக்காலத்திலும் நான் இல்லாமல் இருந்ததில்லையென்றால், நான் எப்போதும் இருப்பவன் என்று பொருளாகும். எனது உடல்கள் ஆதியில் தோன்றி, மறைந்த போதிலும் அவற்றுள் எல்லாம் நான் நித்திய ஜீவனாக இருந்தேன். இது எதைப் போலென்றால் பானையில் ஆகாயம் இருப்பது போன்றதாகும். இதுவே கருத்தாகும். அதுபோல நீ இல்லாமல் இருந்ததும் இல்லை. நிச்சயமாக நீயும் இருந்தாய். அவ்வாறே இவ்வரசர்கள் அனைவரும் இல்லாமல் இருந்ததில்லை. அவர்களும் கூட இருந்தனர். இது நிச்சயம். ஆகையினால் இவ்வுலகம் அழிந்த பின்பும் இல்லாமல் இருக்கப் போவதுமில்லை. மாறாக எதிர்காலத்திலும் தொடர்ந்து இருப்போம். இதன் உட்பொருள் என்னவென்றால் ஆத்மாவாக நாம் காலத்தின் மூன்று பிரிவுகளிலும் இருக்கின்றோம் என்பதாம். இச்சுலோகத்தில் பயன்படுத்தப்பட்டிருக்கும் மரியாதைப் பன்மை மொழி (நாம் என்பது) உடலைப் பற்றியதே அன்றி ஆத்மாவைப் பற்றியதல்ல. எல்லா உடல்களிலும் ஆத்மா என்னவோ ஒன்றுதான்.

எந்நிலையில் ஆத்மா நித்தியன்? ஓர் உதாரணம் தரப்படுகிறது.

**देहिनोऽस्मिन्यथा देहे कौमारं यौवनं जरा ।**
**तथा देहान्तरप्राप्तिर्धीरस्तत्र न मुह्यति ॥१३॥**

**தேஹினோ (அ)ஸ்மின் யதா தேஹே கௌமாரம் யௌவனம் ஜரா ।**
**ததா தேஹாந்தர - ப்ராப்திர் தீரஸ் தத்ர ந முஹ்யதி ॥ 13॥**

***உடலில் உறையும் ஆத்மாவிற்கு குழந்தைப் பருவமும், இளமைப் பருவமும், முதுமைப் பருவமும் எங்ஙனம் தோன்றுகிறதோ அங்ஙனமே மற்றொரு உடலும் தோன்றுகிறது ஞானி இதில் மயங்கமாட்டான்.***

உடல் பெற்ற ஆத்மா, 'தேஹீ' என்றழைக்கப்படுகிறான். உடல் பெற்ற ஆத்மா, தான் இப்போதிருக்கும் உடலில் குழந்தை நிலையினையும், இளமை நிலையினையும் முதுமை நிலையினையும் அடைகின்றது. இம்மூன்று நிலைகளும் ஒன்றிற்கொன்று வேறுபட்டவையாம். இதில் முதல் நிலை முடிவுறும் பொழுது ஆத்மா அழிவதில்லை; இரண்டாம் நிலை உருவாகும் பொழுது ஆத்மாவும் உருவாவதில்லை. அதாவது குழந்தைப் பருவ நிலை மாறினாலும் ஆத்மா எவ்வித மாற்றமுமின்றி இரண்டாம், மூன்றாம் நிலைகளை அடையக் காண்கின்றோம். அப்படியே ஆத்மா மாறுபாட்டிற்காளாகாது மற்றோர் உடலினையும் அடைகின்றது. இதன் காரணமாகவே ஞானி (சுருதி, ஸ்மிருதி, யுக்திகளினால் ஆத்மா நித்தியன் என்று அறிந்தவன்) மயங்குவதில்லை.

ஆத்மா நித்தியன் என்று அறிந்து கொண்ட மனிதனுக்கு ஆத்மா அழிந்துவிடும் என்னும் மயக்கம் ஏற்படுவதற்குச் சாத்தியமில்லை; எனினும் பாமர மனிதர்களிடம் காணப்படும் சீதம், உஷ்ணம், இன்பம், துன்பம் என்பவற்றின் காரணமாகத் தோன்றும் மயக்கம் இவனிடமும் காணப்படும். அதேபோன்று வாழ்வின் மகிழ்ச்சிகளிலிருந்து பிரிந்ததின் காரணமாக எழும் மயக்கமும், வேதனையுடன் கொண்ட தொடர்பினால் உண்டாகும் துக்கமும் இவனிடம் காணப்படும். அர்ஜுனன் இக்கேள்வியினைக் கேட்கலாம் என்று எதிர்பார்த்த, பகவான் கூறுகிறார்.

**मात्रास्पर्शास्तु कौन्तेय शीतोष्णसुखदुःखदाः ।**
**आगमापायिनोऽनित्यास्तांस्तितिक्षस्व भारत ॥ (१४)॥**

**மாத்ரா ஸ்பர்ஶாஸ் து கௌந்தேய ஶீதோஷ்ண - ஸுக - து:க - தா: ।**
**ஆகமாபாயினோ (அ) நித்யாஸ் தாம்ஸ் திதிக்ஷஸ்வ பாரத ॥ 14॥**

***குந்தி மைந்த! புலன்கள் தத்தம் விஷயங்களுடன் இணையும் நிலைகளே சீதம், உஷ்ணம், இன்பம், துன்பம் போன்ற உணர்ச்சிகளைத் தருகின்றன. அவை தோன்றி மறைபவை, நிலையற்றவை, ஆதலினால் பரத குலத் தோன்றலே, அவற்றைப் பொறுத்துக் கொள்வாயாக.***

"மாத்ரா - ஸ்பர்ஸா :" என்றால் புலன்கள் விஷயங்களுடன் கொள்ளும் தொடர்பு என்று பொருள்; இவையே சீதம், உஷ்ணம், சுகம், துக்கம் என்பவற்றை உருவாக்குகின்றன. 'மாத்ரா:' என்றால் செவி போன்ற புலன்களாகும். இவற்றின் மூலமே 'ஒலி' போன்ற விஷயங்கள் உணரப்படுகின்றன. 'ஸ்பர்ஸா:' என்றால் தொடர்பு கொள்ளப்படும் விஷயங்கள் என்று பொருள், அதாவது ஒலி

போன்றவை. இச்சுலோகத்தில் உள்ள 'தா' என்னும் சொல் சீதம், உஷ்ணம் போன்ற உணர்வினைத் தருவதைக் குறிக்கின்றது. சீதம் சில சமயம் இன்பமும், சில சமயம் துன்பமும் தருகிறது. உஷ்ணமும் அது போன்றே நிலையற்றதாகும். இதற்கு மாறாக இன்ப,துன்பங்கள் தமது தன்மையினால் மாறுவதில்லை. ஆதலினால், இவை (இன்ப, துன்பம்) முற்கூறப்பட்ட இரண்டிலிருந்தும் (சீதம், உஷ்ணம்) தனித்துக் குறிப்பிடப்பட்டிருக்கிறது. இப்புலன்களும் அவற்றின் விஷயங்களும் தன்மையினால் தோன்றி மறையும் இயல்புடையன. இவை நிலையற்றவை. ஆகையினால் சீதம், உஷ்ணம் போன்ற விஷயங்களை பொறுத்துக் கொள்வாயாக. இச்சுலோகத்தின் சாரம்: இவற்றின் காரணமாக இன்ப துன்பம் அடையாதே என்பதாம்.

சீதோஷ்ணாதிகளைப் பொறுத்துக் கொள்பவனுக்கு என்ன நேர்கிறது?

கேட்பாயாக:

**यं हि न व्यथयन्त्येते पुरुषं पुरुषर्षभ ।**
**समदुःखसुखं धीरं सोऽमृतत्वाय कल्पते ॥१५॥**

**யம் ஹி ந வ்யதயந்தி ஏதே புருஷம் புருஷர்ஷப ।**
**ஸம-து:க-ஸுகம் தீரம் ஸோ (அ)ம்ருதத்வாய கல்பதே ॥ 15॥**

***மனிதர் ஏறே! இன்பதுன்பங்களைச் சமமாகக் கருதுபவனும், தீரனுமாகிய யாவன் இவற்றால் கலக்கமடைவதில்லையோ அவன் நித்திய வீடுபேறு பெறுவதற்கு உரியவனாகிறான்.***

உண்மையில், தீரனுக்கு சுகமும் துக்கமும் ஒன்றுதான். இன்பமோ, துன்பமோ நேர்கையில் அவன் சுக துக்கமற்றவனாக இருக்கிறான். இவை அவனை கொந்தளிக்கச் செய்வதில்லை; ஆத்ம உணர்விலிருந்து அவன் வீழ்ச்சியடைவதில்லை. நித்திய ஆத்மாவை உணர்வதில் அவன் தன்னை அர்ப்பணித்துக் கொண்டு எல்லா இருமைகளையும் தாங்கிக் கொள்வதினால் அவன் வீடு பேறு (மோட்சம்) பெறுவதற்கு உரியவனாகிறான். சீதோஷ்ணாதிகளைப் பொறுத்துக் கொள்பவனுக்கு என்ன நேர்கிறது? கேட்பாயாக:

**नासतो विद्यते भावो नाभावो विद्यते सतः ।**
**उभयोरपि दृष्टोऽन्तस्त्वनयोस्तत्त्वदर्शिभिः ॥१६॥**

**நாஸதோ வித்யதே பாவோ நாபாவோ வித்யதே ஸத: ।**
**உபயோர் அபி த்ருஷ்டோ (அ)ந்தஸ் த்வ அனயோஸ்**
**தத்த்வ - தர்ஸிபி: ॥ 16॥**

*இல்லாதது இருப்பதாகாது, இருப்பது இல்லாததாகாது இவ்விரண்டினுடைய இயற்கையும் உண்மை அறிந்தவர்களால் உணரப்பட்டதாகும்.*

சீதோஷ்ணமும் அவற்றின் காரணமும் உண்மையில் இல்லாதவையாகும். எனவே அவை இல்லாதது (பொய்ப் பொருள்) ஆகும். மேற்கூறிய சீதோஷ்ணமும் அவற்றின் காரணமான நீர், நெருப்பு முதலியவைகளும் ஆதாரங்களின் அடிப்படையில் ஆராயுங்கால் உண்மையானவை இல்லை; ஏனெனில் அவைமாறும் தன்மையன. இவற்றினை உருவாக்கப்பட்ட ஒரு மண்பானை என்று எடுத்துக் கொண்டு, கண்களினால் காணும்பொழுது மண்ணிலிருந்து பானை வேறுபட்டதாகத் தெரிவதில்லை. அதுபோல் மாறும் தன்மை கொண்ட அனைத்தும் அவற்றின் பௌதீகக் காரணங்களிலிருந்து வேறாக உணரப்படுவதில்லை. ஆகையினால் விளைவுகளான அவை உண்மையன்று. அதுபோல் அவற்றின் காரணங்களிலிருந்து வேறுபடுத்திக் காண முடியாத அனைத்து மாற்றங்களும் கூட உண்மையற்றனவாகும். பானை போன்ற விளைவுகளும் கூட உண்மையன்று. ஏனெனில் அவற்றின் தோற்றத்திற்கு முன்பும் அதுபோல் அழிவிற்குப் பின்பும் அஃவ்' உணரப்படுவதில்லை. பானைக்குப் பொருந்துவதே அதன் காரணமாகிய மண்ணிற்கும் பொருந்தும் ஏனெனில் காரணங்கள் கூட அவற்றின் காரணங்களிலிருந்து வேறுபடுத்தி அறியப்படுவதில்லை.

மறுப்பு: காரணங்களும் அவற்றின் விளைவுகளும் பொய் என்னும்போது எல்லாமே பொய்யாகிவிடுமே.

பதில்: இல்லை. எல்லாவற்றிலும் இரண்டுவகையான புத்திகள் இருக்கின்றன. அவை 1. 'சத்'புத்தி 2. 'அசத்'புத்தி என்பவையாகும். எதைப் பற்றி நிற்கும் புத்தி மாறுபடுவதில்லையோ அது, சத் புத்தியாகும். எதைப் பற்றி நிற்கும் புத்தி மாறுபடுகின்றதோ அது அசத் புத்தியாகும். இவ்வாறு சத், அசத் என்னும் பேதம் புத்தியைப் பொருத்ததாகின்றன. ஆகையினால் நடைமுறை அனுபவத்தில் ஒரே பொருளுக்கு ஒவ்வொருவருக்கும் இரண்டுவித புத்திகள் இருக்கின்றன. உதாரணமாக "உள்ளது பானை' 'உள்ளது ஆடை' 'உள்ளது யானை' என்னும் உணர்வுகளும் ஒரு நீலோத்பல மலரின் உணர்வும் ஒன்றாகாது. ஏனெனில் நடைமுறை அனுபவத்தில் நீலோத்பல மலருக்கு பொருள் (வடிவம்) மற்றும் குணம் (அதன் வண்ணம்) என்னும் இரண்டு புத்திகள் இருக்கின்றன. அதேசமயம், உள்ளது பானை என்பன போன்ற புத்திகள் பொருள் மற்றும் குணம் சார்ந்ததில்லை.மாறாக, பானை, ஆடை, போன்ற புத்திகள் பாலைவனக் கானலில் உள்ள நீரைப் போன்று சத் புத்தியின் மீது ஏற்றப்பட்டவையாகும். இவ்விரண்டு புத்திகளில் பானை பற்றிய புத்தியானது நிலையற்றதாகும். அதனாலேயே அது மேலே விளக்கப்பட்டிருக்கிறது. ஆனால் சத்புத்தியோ நிலையானதாகும். ஆதலினால் பானை போன்ற பொருட்களின் புத்தி அசத்தாகும். ஏனெனில் அது நிலையற்றதாகும். ஆனால் சத்புத்தியின் பொருளோ அப்படிப்பட்டதன்று ஏனெனில் அது நிலையானதாகும்.

மறுப்பு : பானை அழியும்பொழுது பானையின் மீதான புத்தியும் மாறுகிறது அதுபோல் சத்புத்தியும் மாறுகிறதா?

பதில் : இல்லை; சத்புத்தியானது ஆடை போன்ற பிற பொருட்களில் இருக்கின்றதே. சத் புத்தியானது பானை என்னும் உருவத்தோடு தொடர்புடையதன்று மாறாக அதன் பண்போடு அதாவது உள்ளது என்னும் உணர்வோடு தொடர்புடையதாகும்.

மறுப்பு : சத்புத்தியைப் போன்று பானையின் மீதான புத்தி பிற பானைகளின் மீது தொடர்ந்து இருக்கின்றதே?

பதில் : இல்லை. ஏனென்றால் பானையின் மீதான புத்தி, ஆடையின் மீது இருப்பதில்லை.

மறுப்பு: அழிந்து போன பானையினைப் பொறுத்தமட்டில் சத்புத்தி தோன்றுவதில்லை.

பதில் : இல்லை. பொருள் இல்லாத காரணத்தினால் உனது வாதம் வலுவுடையதாகத் தோன்றுகிறது. சத்புத்தி என்பது சத் என்னும் பண்பினோடு அதாவது உள்ளதென்னுழ் உணர்வோடு தொடர்புடையதாகும். அதன் குறியீடு பொருள் பற்றியதன்று. ஆயினும் பொருள் இல்லாத பண்பு என்பது முரணாகும். மேலும் இல்லை என்பதினால் சத்புத்தி இல்லாமற் போவதில்லை.

மறுப்பு : பானை போன்ற பொருட்கள் அங்கே இல்லாததினால் ஒரே பொருளைச் சார்ந்து இரு புத்திகள் இருப்பது முரணன்றோ.

பதில் : இல்லை. கானல்நீரில் (பொருள் மற்றும் பண்பு) என்னும் இரண்டில் ஒன்று பொய்யான போதிலும் இது நீர் என்று (இவை இரண்டும்) ஒரே இடத்தில் இருப்பதைக் காணமுடிகின்றது. ஆகையினால், கடல் போன்ற அசத்தும் சீதம் உஷ்ணம் போன்ற இருமைகளும் அவற்றின் காரணங்களும் இல்லாதவையாகும். அதுபோல் ஆத்மா என்னும் சத் இருப்பதாகும். ஏனென்றால் அது எங்கும் நித்தியமாக இருக்கின்றது. இவ்வாறு சத், அசத் என்னும் ஆத்மா அனாத்மா என்பவற்றில் அசத் என்பது எப்போதும் இல்லாத ஒன்றே என்பதன் அறுதியிட்ட உறுதியினை தத்துவதர்சிகள் (உண்மை அறிந்தோர்) அறிந்திருக்கின்றனர்.

தத் என்பது அனைத்திற்கும் உரிய பெயராகும். (சர்வ நாமம்) எல்லாம் பிரம்மமே அதனால் அதன் பெயர் தத் என்பதாம். அதனது தன்மை தத்துவமாகும். அதாவது பிரம்மத்தின் உண்மைத் தன்மையாகும். அதனைக் காணும் திறனுடையோரே தத்துவதர்சிகள் ஆவர். நீயும் தத்துவதர்சிகளின் கொள்கையினைப் பின்பற்றி சோகத்தையும், மோகத்தையும் கைவிட்டு; சீதம், உஷ்ணம் போன்ற இருமைகள், மாற்றத்திற்காளாகும் அசத்துக்கள், கானல்நீர் போன்ற பொய்மமைத் தோற்றங்கள், என்பதனை உணர்ந்து அவற்றைப் பொறுத்துக் கொள்வாயாக. இதுவே இதன் கருத்தாகும்.

நித்தியமாக இருக்கும் உண்மை 'சத்' என்பது என்ன?

கவனிப்பாயாக,

अविनाशि तु तद्विद्धि येन सर्वमिदं ततम् ।
विनाशमव्ययस्यास्य न कश्चित्कर्तुमर्हति ॥ १७॥

**அவிநாஶி து தத் வித்தியேன ஸர்வம் இதம் ததம் ।**
**விநாஶம் அவ்யயஸ்யாஸ்ய ந கஶ்சித் கர்தும் அர்ஹதி ॥ 17॥**

*அனைத்திலும் வியாபித்திருப்பது அழிவற்றது என்று உணர்வாயாக. மாற்றமில்லாத இதனை அழித்தல் என்பது யார்க்கும் இயலாது.*

இச்சுலோகம் எப்போதும் 'சத்'தாக இருப்பது எது என்று கூறுகிறது. "து" என்னும் சொல் 'அசத்'திலிருந்து 'சத்தை' வேறுபடுத்திக் காட்டுகின்றது. பானை முதலானவை ஆகாயத்தினால் வியாபிக்கப்பட்டுள்ளது போல் ஆகாயம் உள்ளிட்ட இப்பிரபஞ்சம் "சத்" என்னும் பிரம்மத்தினால் வியாபிக்கப் பட்டிருக்கிறது. அது அழிவற்றதாகும். அழிவு என்பது உணர முடியாதது என்பதோடு தோற்றமில்லாததுமாகும். மாற்றமில்லாதது என்றால் அதற்கு வளர்ச்சியோ, தளர்ச்சியோ இல்லை என்பதாம். 'சத்' என்னும் பிரம்மம் மாற்றமில்லாததாகும். அழிவற்றதாகும். உடலைப் போல் அதற்கு அவயவப்பகுப்புக்கள் இல்லை. உடலில் தோன்றும் மாற்றங்கள் அதனிடம் தோன்றுவதில்லை. அதற்கு உரியதென்று அதனிடம் எதுவுமில்லை. அதனால் தேவதத்தன் தனது செல்வத்தை இழந்து வருந்தியது போல் அது வருந்துவதில்லை. ஆகவே மாற்றமில்லா இப்பிரம்மத்திற்கு யாராலும் அழிவு செய்யமுடியாது. ஆத்மாவை அழிப்பது என்பது ஈசுவரனுக்கும் ஆகாது. ஏனெனில் ஆத்மாவே 'பிரம்மம்' மேலும் ஆத்மாவே ஆத்மாவினிடத்தில் செயல்புரிவது கற்பனையிலும் நடவாததாகும்.

தனது நிலையினின்று வழுவும் பொய்ப் பொருள் (அசத்) யாது? கேட்பாயாக.

अन्तवन्त इमे देहा नित्यस्योक्ताः शरीरिणः ।
अनाशिनोऽप्रमेयस्य तस्माद्युध्यस्व भारत ॥ १८॥

**அந்தவந்த இமே தேஹா நித்யஸ்யோக்தா: ஶரீரிண: ।**
**அநாஶினோ (அ)ப்ரமேயஸ்ய தஸ்மாத் யுத்யஸ்வ பாரத ॥ 18॥**

*என்றும் உள்ளதாய், அழிவற்றதாய், அளவிறந்ததாய் உள்ள ஆத்மாவினுடைய இவ்வுடலங்கள் முடிவுடையவை என்று கூறப்பட்டிருக்கிறது. ஆகையினால் பார்த்தா, யுத்தம் செய்வாயாக.*

'இமே' இவை; 'அந்தவந்த' அழிவிற்குரிய, 'தேஹா' உடலங்கள் - அதாவது கானலில் நீர் இருக்கிறது என்னும் கருத்து தொடர்ந்திருந்தாலும் அறிவுக்கண் கொண்டு ஆராயுமிடத்து அப்புத்தியானது முடிவில் நீங்கி

கானலில் நீர் இல்லாமல் போவது போல் இவ்வுடலங்கள் கனவிலும், மாயாஜாலத்திலும் காணப்படும் உடலங்கள் போல் அழிவுடையன என்று 'உக்தா:' ஆய்ந்த அறிஞர்களால் கூறப்படுகின்றது. 'நித்யஸ்ய' நித்தியமானது. 'அநாஸின' அழிவற்றது, 'அப்ரமேயஸ்ய' அளவிறந்தது, 'ஸரீரிண' உடல் பெற்ற ஆத்மா, இதுவே பொருளாகும்.

'நித்தியமானது' 'அழிவற்றது' என்னும் இருசொற்களும் கூறியன கூறல் போன்றதன்று. ஏனென்றால் நித்தியமானது, அழிவற்றது என்பது சாதாரணமாக இரண்டுவிதமான பொருளில் பயன்படுத்தப் படுகின்றது. உதாரணமாகச் சாம்பலாகக் கரைந்து மறைந்துவிடும் உடல் அழிவுடையது என்று கூறப்படுகிறது. மேலும் அவ்வுடல் இருக்கும்பொழுது கூட பிணி, நோய் முதலியவற்றால் பீடிக்கப்பட்டு மாற்றத்திற்குள்ளாவதினால் அழிவுடையது என்றே கூறப்படுகிறது. ஆகையினால் நித்தியமானது, அழிவற்றது என்று கூறுவது இவ்விரண்டு விதமான அழிவுக்கும் ஆட்படாத ஒன்றினையே ஆகும். இல்லையேல் ஆத்மாவின் நித்தியமானது பூமியைப் போன்றதாகும். இதனைத் தவிர்ப்பதற்காகவே இங்கே 'நித்தியமானது' 'அழிவற்றது' என்று கூறப்பட்டிருக்கிறது.

'அப்ரமேயஸ்ய' அதாவது 'அளவிறந்தது' என்பதன் பொருள் நேரடியாகப் பெறும் உணர்வின் மூலமாக அறிவினால் அதனை உணர முடியாது என்பதாகும்.

மறுப்பு : ஏன் சாத்திரங்களினால் ஆத்மா உணரப்படவில்லையா? அதற்கு முன்பு நேரடி உணர்வின் மூலம் அறியப்படவில்லையா?

பதில் : இல்லை. ஆத்மா சுயமாகத் தீர்மானிக்கப் படுவதாகும். அறிபவனான, ஆத்மா நிச்சயக்கப்படும் பொழுது அறியப் புகுபவனால் ஞானத்தின் பாதை தேடப் படுகிறது. உண்மையில் ஒருவன் ஆத்மாவை "நான் இப்படிப் பட்டவன்" என்று முதலில் தீர்மானிக்காது ஞானத்தினையோ அல்லது ஞானத்திற்கானப் பொருளினையோ பெறுவதற்கு அவன் முயற்சிப்பதில்லை. ஆத்மா எனப்படுவது யாரும் அறியாத ஒன்றல்ல. ஆயினும் சாத்திரமே இறுதி அதிகாரமுடையது. ஆத்மாவிற்கு உரியதல்லாத குணங்களை அதன்மீது சுமத்துவதைப் புறக்கணிப்பதின் மூலம் ஆத்மாவினைப் பொருத்த அதிகாரத்தினை அது அடைகிறது. எனினும் அது அறியாத ஒன்றினை அறிந்ததாகக் கூறுவதின் மூலமாக அடைவதில்லை. சுருதி இவ்வாறு அறிவிக்கின்றது: "அனைத்திலும் இருக்கும் ஆத்மாவே கண்ணுக்குப் புலனாகாத பிரம்மமாக இருக்கின்றது." (பி.உ.3.4.1)

இவ்வாறு ஆத்மா நித்தியனாகவும், மாற்றமில்லாதவனாகவும் இருக்கிறான்; "தஸ்மாத்" ஆகையினால்; "யுத்யஸ்ய" யுத்தம் செய்வாயாக. அதாவது யுத்தம் செய்யாது இருத்தல் கூடாது என்பதாம். யுத்தம் செய் என்று கட்டளை இடப்படவில்லை ஏனென்றால் அவன் (அர்ஜுனன்) யுத்த சங்கல்பம் செய்து வந்தவன்தான் ஆயினும் சோக மோகங்களினால் ஆக்கிரமிக்கப்பட்டு அதன் விளைவாக ஒன்றும் செய்யாதிருந்தான். ஆகையினால், பகவான்

செய்வதெல்லாம் அவன் கடமைக்குத் தடையாக நிற்பவற்றை நீக்குவது ஒன்றேயாகும். எனவே 'யுத்தம் செய்வாயாக' என்றது ஓர் அனுமதியே தவிர கட்டளை அல்ல.

பிறப்பு இறப்பு சுழற்சிக்குக் காரணமான சோக, மோகங்களை நீக்குவதே கீதையின் குறிக்கோளாகும். செயலைச் செய் என்று கட்டளையிடுவது அதன் நோக்கமல்ல. இக்கருத்திற்கு ஆதாரமாகப் பகவான் இரண்டு வேத மந்திரங்களை மேற்கோள் காட்டுகிறார். (க.உ.1.2.19-20) 'யுத்தத்தில் பீஷ்மரும், பிறரும் என்னால் கொல்லப்படப் போகின்றனர்; நானே அவர்களைக் கொல்பவன் என்னும் அர்ஜுனனின் எண்ணம் தவறு என்கிறார், - எப்படி?

**य एनं वेत्ति हन्तारं यश्चैनं मन्यते हतम् ।**
**उभौ तौ न विजानीतो नायं हन्ति न हन्यते ॥१९॥**

**ய ஏனம் வேத்தி ஹந்தாரம் யஶ் சைனம் மன்யதே ஹதம் ।**
**உபௌ தௌ ந விஜானீதோ நாயம் ஹந்தி ந-ஹன்யதே ॥ 19॥**

*இவன் கொல்வானென்று நினைப்பவனும், கொல்லப்படுவான் என்று நினைப்பவனும் உண்மை அரியாதார் ஆவர். இவன் கொல்வதுமில்லை. கொல்லப்படுவதுமில்லை.*

ஆனால் பீஷ்மர் போன்றவர்களை நான் இந்த யுத்தத்தில் கொன்றுவிடுவேன். அதனால் நான் கொலை செய்தவனாவேன் என்னும் உனது கருத்து அடிப்படையற்றதாகும். எவ்வாறு? உடல் பெற்ற ஆத்மாவைக் கொல்பவனாக அல்ல கொல்லும் செயலின் கர்த்தாவாகக் கருதுபவனும், கொல்லப்படுதல் அல்லது கொல்லப்படும் பொருள், இவ்வுடல் கொல்லப்படும் பொழுது "நான் கொல்லப்படுகிறேன்" என்று கருதுபவனும் - இவர்கள் இருவரும் ஆராய்ச்சியின்மையின் காரணமாக ஆத்மாவை அறியாதவர்கள் ஆவர். இதன் பொருள் அவர்கள் இருவரும் ஆத்மாவின் உண்மை இயற்கையினை அறியாதவர்களே ஏனென்றால் ஆத்மா கொல்பவனுமல்லன் கொல்லப்படுபவனுமல்லன் இதன் காரணம் ஆத்மா மாற்றமில்லாதான் ஆவான்.

இரண்டாம் மந்திரம் (க.உ) ஆத்மா எவ்வாறு மாற்றமில்லாதான் என்பதை விளக்குகிறது.

**न जायते म्रियते वा कदाचि- न्नायं भूत्वा**
**भविता वा नभूयः ।**
**अजो नित्यः शाश्वतोऽयं पुराणो- न हन्यते हन्यमाने**
**शरीरे ॥२०॥**

**ந ஜாயதே ம்ரியதே வா கதாசின் நாயம் பூத்வா பவிதா**
**வா ந பூய: ।**
**அஜோ நித்ய: ஶாஶ்வதோ (அ)யம் புராணோ ந ஹன்யதே**
**ஹன்யமானே ஶரீரே ॥ 20॥**

***இவன் ஒரு போதும் பிறப்பதுமில்லை; அதுபோல இறப்பதுமில்லை; முன்பு இல்லாதிருந்து மீண்டும் உருவாவதும் இல்லை. இவன் பிறப்பற்றான், நித்தியன், சாசுவதன், பழமையானவன், உடல் கொல்லப்படும்போது, இவன் கொல்லப்படுவதில்லை.***

ஆத்மா பிறப்பற்றான் அதாவது, இவன் உருவானவன் அன்று. இதன் பொருள் பிறப்பு எனப்படும் மாற்றம் ஆத்மாவிற்கு நேர்வதில்லை. அதுபோல் அவன் இறப்பதுமில்லை. 'வா' என்னும் வார்த்தைக்கு 'மேலும்' என்று பொருளாகும். மேலும் அவன் இறப்பதில்லை. இறுதியில் ஏற்படும் அழிவு என்பது ஆத்மாவிற்குப் பொருந்தாது. 'எக்காலமும்' (கதாசித்) என்னும் வார்த்தை எல்லா மாற்றங்களுக்கும் உள்ளாகாதது என்னும் பொருளுடையதாகும். இதன் பொருள் அவன் என்றும் பிறந்ததுமில்லை, என்றும் இறந்ததுமில்லை போன்றதாகும். ஏனென்றால், அவன் ஏற்கெனவே இருப்பவன் அதனால் அவன் இல்லாத நிலையினை எய்துவதில்லை. ஆதலினால் அவன் இறப்பதுமில்லை. இவ்வுலகில் எவன் இல்லாமல் போகிறானோ அவன் இறந்தவனாகிறான். 'இல்லை' என்னும் பொருளில் பயன்படுத்தப்பட்டிருக்கும் 'வா' மற்றும் 'ந' என்னும் வார்த்தைகளிலிருந்து உடலைப் போல் ஆத்மா இல்லாமலிருந்து மீண்டும் உருவாவதில்லை என்று புரிந்து கொள்ளப்படுகிறது. ஆதலினால் அவன் பிறப்பற்றான். எது ஒன்று இல்லாமலிருந்து மீண்டும் தோன்றுகின்றதோ அது பிறப்பதாகக் கூறப்படுகிறது. ஆத்மா அப்படிப்பட்டவன் அல்லன். ஆதலினால் அவன் பிறப்பற்றான். அவன் இறப்பில்லாதான் ஆதலினால் நித்தியன் ஆவான்.

ஆத்மாவைப் பொருத்தமட்டில் எல்லா மாற்றங்களும், முதல் மற்றும் இறுதி மாற்றங்களைப் போல் மறுக்கப்படுவதினால் அதன் இடை நிகழ்வு மாற்றங்களும் குறிப்பாக மறுக்கப்படுகின்றன. ஆதலினால்தான் இளமை போன்ற மாற்றங்கள் குறிப்பாகச் சுட்டப்படவில்லை. மாறாக, 'என்றுமுளன்' என்னும் வார்த்தை பயன்படுத்தப்பட்டிருக்கிறது. தேய்தல் என்னும் மாற்றமானது 'என்றுமுளன்' என்னும் வார்த்தையினால் மறுக்கப்படுகிறது. அவனது இயற்கைத் தன்மை தேய்வற்றதாகும். ஏனெனில் அவனுக்கு அங்கங்கள் கிடையாது. மேலும் அவன் குணாதீதன் ஆதலினால் எவ்விதக் குணத்தின் குறைவினாலும் அவன் சீர் கெடுவதில்லை. தேய்தல் என்பதற்கு எதிரான வளர்ச்சி என்னும் மாற்றம் அவன் புராண: (பழையோன்) என்னும சொல்லால் மறுதலிக்கப்படுகிறது. ஒரு பொருள் சில பாகங்களின் சேர்க்கையினால் வளர்ச்சி பெறுகிறது.

அதனால் அது புதிது என்று கூறப்படுகிறது. அவன் அங்கங்களற்றவன் ஆதலினால் அவன் ஆதியிலிருந்து புத்தம் புதியோன் ஆவான். இவ்வாறு

அவன் புராண: (பழையோன்) அதாவது அவன் வளர்வதில்லை. அதுபோல் அவன் 'ந ஹன்யதே' கொல்லப்படுவதில்லை. உடல் கொல்லப்படும்பொழுது 'ஹன்யமானே' அவன் மாறுவதில்லை.

கொல்லுதல் என்னும் வினைச் சொல் இங்கே நிலைமாறுதல் என்னும் பொருளில் புரிந்து கொள்ளப்பட வேண்டும். அதனால் கூறியன கூறல் என்னும் குற்றம் தவிர்க்கப்படுகிறது. இம்மந்திரத்தில் உலகில் காணப்படும் ஆறுவகை பௌதிக மாற்றங்கள் (பிறத்தல், இருத்தல், வளர்தல், மாறுதல், தேய்தல், அழிதல்) ஆத்மாவிற்கு மறுக்கப்படுகின்றது. இதன் பொருள் ஆத்மா எவ்வித மாற்றங்களுக்கும் உள்ளாகாது என்பதாம். இதன் காரணமாக 'அவ்விருவரும் அறியாதார் ஆவர்' என்று முந்தைய சுலோகத்தில் கூறப்பட்டிருப்பதை இச்சுலோகத்துடன் பொருத்திக் கொள்க.

'இவன் கொல்வானென்றும்' (2.19) என்னும் சுலோகத்தின் மூலம் ஆத்மா கொலைச் செயலுக்குக் கர்த்தாவும் செயப்படுபொருளும் ஆவதில்லை என்று உறுதி செய்து, 'இவன் எப்போதும் பிறப்பதில்லை (2.20) என்று ஆத்மா மாறுதலற்றான் என்பதற்கான காரணத்தைக் கூறி நிறைவுசெய்கிறார்.

**वेदाविनाशिनं नित्यं य एनमजमव्ययम् ।**
**कथं स पुरुषः पार्थ कं घातयति हन्ति कम् ॥२१॥**

**வேதாவிநாஶினம் நித்யம் ய ஏனம் அஜம் அவ்யயம் ।**
**கதம் ஸ புருஷ: பார்த கம் காதயதி ஹந்தி கம் ॥ 21॥**

*பார்த்தா! எவன் இதனை அழிவற்றதாகவும், நித்தியமானதாகவும், பிறப்பற்றதாகவும் மாறுபாடற்றதாகவும் அறிகின்றானோ அவன் யாரையாவது கொல்வதோ அல்லது கொல்லச் செய்வதோ எங்ஙனம் கூடும்?*

ஆத்மா அழிவற்றவன் அதாவது அவனது இறுதி மாற்றத்திலிருந்து விடுதலை பெற்றவன் என்றும், நித்தியன் அதாவது தன் நிலை திரிதலிலிருந்து விடுதலை பெற்றவன் என்றும் அறிந்து கொண்டவன் - இவ்வாறு 'அராஶினம்' நித்யம் என்னும் வார்த்தைகளைப் பொருள் கொள்ள வேண்டும் - பிறப்பற்ற அழிவற்ற ஆத்மாவை அறிந்து கொண்டவன் தனது கடமையின் நிமித்தம் போரிடும் பொழுது எவ்வாறு கொல்வதற்கோ அல்லது கொல்லும்படிச் செய்வதற்கோ காரணமாக முடியும்? எவ்வழியிலும் அவன் கொல்வதுமில்லை, கொல்வதற்குக் காரணமாவதுமில்லை. கொல்லுதல், கொல்வதற்குக் காரணமாதல் என்னும் இரு கருத்துக்களையும் மறுதலித்தலே இதன் முடிவாகும். இது தொடர்பாக இங்கே கேட்கப்படுகின்ற இரண்டு கேள்விகளின் கருத்தானது எதிர்மறைப் பொருளுடையதாகும். காரணம் ஆத்மாவின் மாறுதலின்மை எல்லாச் செயல்களுக்கும் பொருந்துவதாகும். ஆகவே பகவான் இங்கே ஆத்மாவை அறிந்தவனால் எல்லாச் செயல்களும் மறுதலிக்கப்படுகிறது என்னும் கருத்தினை தெரியப்படுத்துகிறார். கொல்லுதலை மறுதலித்தல்

என்பது இங்கே உதாரணமாக எடுத்தாளப்பட்டிருக்கிறது. 'அறிந்த ஒரு மனிதன் எப்படி....?' என்னும் வார்த்தைகளின் மூலம் பகவான் எல்லாச் செயல்களையும் மறுதலித்ததற்குக் குறிப்பிட்டக் காரணம் என்ன? இது ஏற்கெனவே குறிப்பிடப்பட்டிருக்கிறது. அதாவது ஆத்மாவின் மாறுதலற்றத் தன்மையாகும். இக்காரணமே ஆத்மாவை அறிந்தவனுக்கு எல்லாச் செயல்களையும் அசாத்தியமாக்குகிறது. உண்மை. இது குறிப்பிடப்பட்டிருக்கிறது; இது குறிப்பிட்டக் காரணமாக முடியாது. ஏனெனில் மாறுதலற்ற ஆத்மாவிலிருந்து ஆத்மாவை அறிந்தவன் வேறானவன் ஆவான். அசைவற்ற ஒரு தூண் செயலற்றது என்பதனைப் புரிந்து கொண்டவனுக்கு செய்யக்கூடிய செயல் எதுவுமில்லையென்று உண்மையில் கூற முடியாதே என்றால்,இல்லை என்பதே பதிலாகும். ஏனென்றால், அறிபவனும் ஆத்மாவும் ஒன்றேயாவர். அறிபவன் என்னும் நிலை, உண்மையில் உடல் மற்றும் புலன்களைச் சார்ந்ததல்ல. ஆகையினால் அவை அழிந்தபிறகு எது மீதமிருக்கிறதோ - கலப்பற்ற ஆத்மா - அதுவே அறிபவனவாகும். அவன் அனைத்துச் செயல்களிலிருந்தும் விடுதலை பெற்றவனாவான். இவ்வாறு அறிபவனுக்கு செயல்கள் உண்டாவதில்லையாதலின் 'அறிந்த ஒரு மனிதன் எப்படி.....?' என்னும் வார்த்தைகளினால் மறுப்பது பொருத்தமுடையதேயாகும்.

அறியாமையின் காரணமாக மாற்றமில்லாத ஆத்மாவானது புலனுணர்வுப் பொருட்களை அறிபவனாகவும் ஆத்மாவை அறிபவனாகவும் கருதப்படுகிறான். மாற்றமில்லாத ஆத்மாவானது புத்தியினை எட்டும் ஒலி போன்ற உணர்பொருட்களை அறிபவனாகக் கூறப்பட்டிருக்கிறது. ஏனென்றால் ஆத்மாவிற்கும் புத்தியின் மாற்றங்களுக்கும் வேறுபாட்டினை அறியாத அஞ்ஞானமே இதன் காரணமாகும். இவ்வாறு மாற்றமில்லாத ஆத்மாவானது அறிபவனாகக் கூறப்படுகிறது. ஏனென்றால் ஆத்மாவிற்கும், அநாத்மாவிற்கும் இடையிலுள்ள வேறுபாடு பற்றிய புத்திமாற்றமாகிய ஞானத்துடன் தொடர்புடைய அஞ்ஞானத்தாலேயே ஆகும். இந்த ஞானமானது புத்தியின் மாற்றம் மட்டும் அனறு, இயற்கையில் உண்மையற்றதுமாகும். அறிந்தவனுக்கு செயல் உண்டாவதில்லை என்னும் கூற்றிலிருந்து, சாத்திரங்களினால் விதிக்கப்பட்டிருக்கும் செயல்கள், அறியாதவனுக்கு உரியவையாகும். இதுவே பகவானின் முடிவாகப் புரிந்து கொள்ளப்படுகிறது.

மறுப்பு : உண்மையில் ஞானம் கூட, ஞானமற்றவனுக்கே விதிக்கப்பட்டிருக்கிறது. ஏற்கெனவே ஞானம் உடையவனுக்கு ஞானத்தினை விதிப்பது என்பது அரைத்த மாவையே அரைப்பது போன்று அர்த்தமற்றதாகும். ஆகையினால் செயல்கள் ஞானமற்றவனுக்கே அன்றி, ஞானம் உள்ளவனுக்கு அல்ல, என்னும் வேறுபாடு பொருத்தமற்றதாகும்.

பதில் : இல்லை; '(அக்னி ஹோத்திரக் கர்மங்களை அஞ்ஞானி) செய்ய வேண்டும் (ஞானி செய்ய வேண்டியது) இல்லை' என்னும் வேறுபாடு உண்டு. அக்னி ஹோத்திரம் போன்ற விதிகளின் பொருளைப் புரிந்து கொண்டபின் அனேக சாதனங்களைச் சேர்த்துக் கொண்டு கடைபிடிக்க வேண்டியவையான அக்னி ஹோத்திரம் முதலிய கர்மங்கள், 'நானே கர்த்தா, (இது) எனது கடமை'

என்னும் இத்தகைய அறிவுடைய அஞ்ஞானிக்கு எப்படிச் செய்ய வேண்டியதுளதோ, அப்படி 'இது பிறப்பதில்லை' (2-20) என்பது முதல் ஆத்மா இன்னதென்று (உணர்த்துகின்ற) விதிகளின் பொருளைக் கண்டறிந்தபின், (ஞானிக்கு) செய்ய வேண்டியது என்று ஒன்றுமில்லை; ஆனால், நான் கர்த்தா அன்று நான் அனுபவிப்பவன் அன்று என்பது முதலாக ஆத்மா ஏகமெனவும் அகர்த்தா எனவும் ஆகிய இவை போன்ற விஷயங்களின் நிச்சய அறிவைக் காட்டிலும் வேறு (அறிவு) உண்டாவதில்லை என்பதினால் இவ்வேறுபாடு உண்டு என்க.

மேலும் எவன் ஆத்மாவை 'நான் கர்த்தா' என்று அறிகின்றானோ அவனுக்கு 'நான் இதனைச் செய்ய வேண்டும்' என்னும் எண்ணம் கட்டாயம் உண்டாகும். இவ்வறிவுடையவன் செயல்களைச் செய்வதற்குத் தகுதியுடையவனாகிறான். அவனுக்கே செயல்களும் விதிக்கப்படுகின் றனவாம். 'அவ்விருவரும் அறிபவரல்லர்' (2-19) என்னும் திருவாக்கினால் மேற்கூறப்பட்டவன் அஞ்ஞானியே ஆவான். 'அவன் எவ்வாறு கொல்கிறான்?' (2.21) என்று செயல்களை மறுக்கும் திருவாக்கினால் ஞானி சிறப்பிக்கப்படுகிறான். எனவே மாறா இயல்புடையதாக ஆத்மாவைக் காணும் ஞானியும், முக்தி பெற விரும்புவோனும் செயல்களைத் துறக்க வேண்டியவர்களாகின்றனர். ஆதலினால்தான் பகவான் நாராயணன் சாங்கியர்களான ஞானிகளையும், கர்மிகளான அஞ்ஞானிகளையும் வேறுபடுத்தி அவர்களுக்கு முறையே இரு வேறு மார்க்கங்களை உபதேசிக்கிறார் (3.3) இதற்கேற்பவே வியாசரும் தமது மைந்தரிடம் ''இப்போது இரண்டு மார்க்கங்கள் இருக்கின்றன' என்று கூறுகின்றார் (மோட்ச தர்மம், 24-6) இது தொடர்பாக அவர் தமது மைந்தரிடம் மேலும் ''கர்மமார்க்கம் முந்தியது, துறவு நெறி பிந்தியது' எனறும் கூறுகிறார். இவ்வேறுபாட்டினைப் பகவான் 'ஆணவத்தினால் மதிமயங்கி உண்மை உணராதவன் 'நான் கர்த்தா' என்று எண்ணுகிறான். உண்மையுணர்ந்தவனோ நான் ஒன்றும் செய்யவில்லை என்று எண்ணுகிறான்'. என்று அடிக்கடி எடுத்துக் காட்டுவார். (2-27,28) மேலும், 'சகல கர்மங்களையும் மனத்தால் துறந்து இன்புற்றிருக்கிறான்' (5-13) என்றும் எடுத்துக் காட்டுவார்.

மறுப்பு : இது தொடர்பாகத் தங்களை அறிஞர்களாகக் கருதும் சிலர், 'நான் பிறப்பு இறப்பு என்னும் ஆறு விகாரங்களுக்கும் ஆட்படாத மாறுதலற்றதாய், அகர்த்தாவாய், ஏகமாயிருக்கும் ஆத்மா' என்னும் இத்தகைய ஞானம் உண்டானால் சகல கர்மங்களையும் துறத்தல் என்பது விதிக்கப்படுகின்றதோ, அத்தகைய ஞானம் ஒருவனுக்கு உண்டாகாது என்று கூறுகின்றனர்.

பதில் : மேற் கூறிய மறுப்பு சரியன்று; 'இது பிறப்பதில்லை' (2-20) என்பது முதலான சாத்திர உபதேசங்கள் பயனற்றவையாகிவிடும் ஆதலின் சாத்திர வன்மையினால் - தர்மமென்பதும், அதர்மமென்பதும் உண்டு' என்ற ஞானமும், செயலைச் செய்பவனுக்கு அச்செயலின் பயனால் வேறொரு உடல் கிடைக்கக்கூடும் என்பது பற்றிய ஞானமும், எங்ஙனம் உண்டாகின்றனவோ,

அங்ஙனமே சாத்திரத்தால் - 'அந்த ஆத்மாவே மாறுதலற்றதாக அகர்த்தாவாக, ஏகமாக, மற்றும் இவை போன்ற பிறவாக உள்ளது' - என்னும் ஞானமும் ஏன் உண்டாகாது என்று அவர்களையேக் கேட்டல் வேண்டும்.

**எதிர்தரப்பினரின் மறுமொழி :** ஏனெனில் ஆத்மாவானது எந்தவொரு புலனுக்கும் எட்டாததாக விளங்குகின்றது என்றால் -

**பதில் :** அது சரியன்று; சுருதிகள் 'ஆத்மா மனதினால் மட்டுமே காணக்கூடியது' என்கின்றன (பிரு.உப.4-19) சாத்திர உபதேசத்தாலும், ஆச்சாரிய உபதேசத்தாலும், மனம், புலன், போன்றவற்றின் அடக்கத்தினாலும், தெள்ளத் தெளிந்த மனம் ஆத்மாவைக் காண்பதற்குரியக் கருவியாகிறது. இவ்வாறு ஆத்மாவை அறிந்து கொள்வதற்கு யூகமும், சாத்திரமும் இருத்தலால், ஞானம் உண்டாகாது என்றது ஆராய்ச்சியின்மையாலென்க.

ஞானம் உண்டாகுமெனில், அந்த ஞானத்திற்கு எதிரான அஞ்ஞானத்தினை அது நிச்சயம் நீக்கும் என்பதை எவரும் ஒப்புக் கொள்ளவேண்டும். இந்த அஞ்ஞானமானது ஏற்கெனவே 2-19ல் குறிப்பிடப்பட்டிருக்கின்றது. ஆனால் இங்கோ ஆத்மா கொலைத் தொழிலுக்குரிய கர்த்தா என்பதும், கொலையுண்ணப்படுமென்பதும், ஏவுதற்கர்த்தா என்பதும், அஞ்ஞானத்தில் பிறந்தவையென்று அறிவுறுத்தப்படுகின்றது. இவ்வாறு ஆத்மாவைக் கர்த்தா என்பதும், இன்னும் அது இத்தன்மையது என்பதும் அஞ்ஞானத்தில் பிறந்தவை என்பது, ஆத்மா மாறாதது ஆதலினால் எல்லாச் செயல்களுக்கும் உரியதாகும். மாறுதலுக்காளாகும் கர்த்தாவன்றோ, பிறிதொருவனை இதனைச் செய் என்று ஏவுவான் அதனால்தான் பகவான் வாசுதேவன், ஞானிக்கு செயல்களிடத்து அதிகாரமின்மையை அறிவுறுத்தும் பொருட்டு, ஞானிக்கு செய்யக்கூடிய செயல் என்று எதுவுமில்லை என்பதனை எடுத்துக் காட்டும் நோக்கத்தில் ஞானியானவன் எச்செயல்களிடத்தும் ஏவு கர்த்தாவோ, அல்லது இயற்று கர்த்தாவோ இல்லை என்று 2-21ல் சுட்டிக் காட்டுகின்றார்.

**வினா :** அப்படியெனில் அவன் செய்யக்கூடியதுதான் என்ன?

**விடை :** சாங்கியர்களுக்கு ஞானயோகமே சிறந்தது என்னும் பதில் ஏற்கெனவே (3-3) கூறப்பட்டுள்ளது. 'மனதினால் அனைத்துக் கர்மங்களையும் துறந்து செயலைச் செய்யாமலும், செய்விக்காமலும் ஒன்பது வாயில்களைக் கொண்ட நகரத்தில் (உடலில்) இன்புற்றிருக்கிறான்' (5.13) என்று சகல கர்மங்களையும் துறத்தலைக் கூறுவர்.

**மறுப்பு :** அவ்வாறெனில், 'மனத்தினால்' என்று கூறப்பட்டிருப்பதால் வாக்கினாலும், உடலினாலும் செய்யப்படும் தொழில்களைத் துறத்தல் என்பது இல்லையோ?

**பதில் :** அவ்வாறன்று, 'சகலகர்மங்களையும்' என்று சுட்டப்பட்டிருக்கின்றது.

**மறுப்பு :** மனதிற்குரிய சகலகர்மங்களையும் துறத்தல் என்றுதானே குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

பதில் : அவ்வாறன்று; வாக்கின் தொழில்களும், உடலின் தொழில்களும், மனதின் தொழிலை முன்னிட்டு நிகழ்வதினால்,மனதின் தொழில் நிகழாவிடத்து, மற்றவற்றின் தொழில்களும் நிகழாது.

மறுப்பு : சாத்திரத்தில் கூறியுள்ள வாக்கு, உடலுக்குரிய கர்மங்களைத் தவிர மனதினால் செய்யக்கூடிய பிற சகலகர்மங்களையும், துறத்தல் வேண்டும்.

பதில் : அவ்வாறன்று, 'ஒன்றும் செய்யாதவனும், செய்விக்காதவனுமாய்' (5-13) என்றே அறிவுறுத்தப்பட்டிருக்கின்றது.

மறுப்பு : சகல கர்மங்களையும் துறந்திடு என்று பகவான் கூறுவது இறக்கும் நிலையில் இருப்பவனுக்குத்தான் பொருந்தும். உயிரோடிருப்பவனுக்கு அன்று.

பதில் : அவ்வாறன்று; 'ஒன்பது வாயில் நகரத்திலே இன்புற்றி ருக்கிறான்'(5-13) என்பது பொருந்தாதெனில் இறந்தவன் சகல கர்மங்களையும் துறந்து அந்த உடலிலேயே தங்கியிருத்தல் என்பது நடவாதன்றோ.

மறுப்பு : சகல கர்மங்களையும் உடலிலே வைத்து (சம்+ந்யஸ்) ஒன்றும் செய்யாதவனாகவும், செய்விக்காதவனாகவும் சுகமாகத் தங்கியிருக்கிறான் எனப் பொருள் கொள்ளவேண்டுமேயன்றி உடலிலே தங்கியிருக்கிறான் என்று பொருள் கொள்ளக்கூடாது.

பதில் : இல்லை, சுருதி ஸ்மிருதிகளில் எல்லாவிடங்களிலும் ஆத்மா மாறாவியல்புடையது என்றே வலியுறுத்தப்பட்டிருக்கின்றது. தங்கியிருத்தல் என்னும் தொழில் ஒரு இடத்தை சார்ந்திருப்பதாகும், ஆனால் துறத்தல் என்னும் தொழிலோ எதனையும் சார்ந்திருப்பதில்லை ஆதலினால் (சம்+ந்யாஸம்) என்னும் சம்ஸ்கிருத வினைச் சொல்லுக்கு 'துறத்தல்' என்னும் பொருளே பொருந்துமேயன்றி 'வைத்தல்' என்னும் பொருள் பொருந்தாது.

ஆகையினால் கீதா-சாத்திரத்தில் 'ஆத்மஞானம் உடையவனுக்கு துறவிலேதான் அதிகாரம், கர்மத்தில் அன்று' என்று அறிவுறுத்தப்பட்டிருக்கின்றது. இதனைப் பின்னால் ஆத்மஞானம் பற்றி விவரிக்கும் இடங்களில் நாம் எடுத்துக் காட்டுவோம்.

இனி நாம் எடுத்துக் கொண்ட பொருள்பற்றி விளக்குவோம். ஆத்மாவிற்கு அழிவில்லை என்று குறிப்பிடப்பட்டிருக்கின்றது. அது எதுபோல் அழிவற்றது? என்பதற்குப் பதில் பின்வருமாறு:

**वासांसि जीर्णानि यथा विहाय नवानि गृह्णाति**
**नरोऽपराणि ।**
**तथा शरीराणि विहाय जीर्णा- न्यन्यानि संयाति**
**नवानि देही ॥२२॥**

**வாஸாம்ஸி ஜீர்ணானி யதா விஹாய நவானி க்ருஹ்ணாதி**
**நரோ (அ)பராணி ।**
**ததா ஶரீராணி விஹாய ஜீர்ணானி அன்யானி ஸம்யாதி**
**நவானி தேஹீ ॥ 22॥**

*எவ்வாறு ஒரு மனிதன் நைந்த ஆடைகளைக் களைந்து புதிய ஆடைகளை உடுத்துக் கொள்கின்றானோ அதுபோல் ஆத்மாவானது நைந்த உடல்களை விடுத்துப் புதிய உடல்களை எய்துகின்றது.*

இவ்வுலகில் ஒருவன் எவ்வாறு தனது பழைய கிழிந்த ஆடைகளைத் தூக்கி எறிந்து விட்டுப் புதிய ஆடைகளை உடுத்துக் கொள்கின்றானோ, அதுபோல் ஆத்மா, மூப்பு போன்றவற்றினால் நைந்துபோன பழைய உடலைக் கைவிட்டு சிறிதும் மாற்றமின்றி வேறொரு புதிய உடலைப் பெறுகின்றது என்று பொருள்.

ஏன் ஆத்மாவிற்கு மாற்றமில்லை? பகவான் கூறுகிறார்.

नैनं छिन्दन्ति शस्त्राणि नैनं दहति पावकः ।
न चैनं क्लेदयन्त्यापो न शोषयति मारुतः ॥२३॥

**நைனம் சிந்தந்தி ஶஸ்த்ராணி நைனம் தஹதி பாவக: ।**
**ந சைனம் க்லேதயந்தி ஆபோ ந ஶோஷயதி மாருத: ॥ 23॥**

*இதனை ஆயுதங்கள் வெட்டா; நெருப்பு எரிக்காது; நீரும் நனைக்காது; காற்றும் உலர்த்தாது.*

நம்மால் பேசப்படும் இந்த உடல்பெற்ற ஆத்மாவிற்கு அவயவங்கள் இல்லையாதலினால் ஆயுதங்கள் வெட்டா. நெருப்பு எரித்து சாம்பலாக்காது. உடலுறுப்புக்களை நனைக்கும் நீர், உடலுறுப்புக்கள் இல்லாததினால் இதனை நனைக்காது. அதுபோல் ஈரமுள்ளப் பொருள்களை உலரச் செய்யும் காற்றும் இதனை உலர்த்துவதில்லை.

ஆகையினால்,

अच्छेद्योऽयमदाह्योऽयमक्लेद्योऽशोष्य एव च ।
नित्यः सर्वगतः स्थाणुरचलोऽयं सनातनः ॥२४॥

**அச்சேத்யோ (அ)யம் அதாஹ்யோ (அ)யம் அக்லேத்யோ**
**(அ)ஶோஷ்ய ஏவச ।**
**நித்ய: ஸர்வ-கத: ஸ்தாணுர் அசலோ (அ)யம் ஸநாதன: ॥ 24॥**

*இதனை வெட்ட முடியாது; எரிக்கவோ, நனைக்கவோ உலர்த்தவோ முடியாது. இது நித்தியமானது; எங்குமுளது; உறுதியுடையது; அசைவற்றது; என்றுமுளது.*

ஒன்றையொன்று அழிக்கவல்ல வாள் போன்ற ஆயுதங்களினால் இந்த ஆத்மாவை அழிக்க முடியாது. இவ்வாத்மா நித்தியமானது.அவ்வாறு நித்தியமாக இருத்தலின் இது எங்குமுளது. எங்குமுளதால் தூண்போல் உறுதியானது. உறுதியாக இருப்பதினால் அசைவற்றது; அவ்வாறு அசைவற்று இருப்பதினால் என்றுமுளது; பழமையானது; ஒரு காரணத்தினால் உண்டான புதியதன்று.

'இது பிறப்பதில்லை; இறப்பதுமில்லை' (2-20) என்று தொடங்குகின்ற ஒரு சுலோகத்திலேயே ஆத்மா நித்தியமென்றும், மாறுதலற்றது என்றும் கூறப்பட்டிருக்க, இச்சுலோகங்களில் (2-21,22,23,24) ஆத்மாவைப் பற்றி விசேஷமாக எதுவும் கூறப்படவில்லை. எனினும்; சில சொற்களாலும், பொருளினாலும், மீட்டும் உரைக்கப்பட்டிருக்கிறது என்றே பொருள் கொள்ள வேண்டும். ஆகையினால் இச்சுலோகங்கள் கூறியன கூறல் என்னும் குற்றத்தின் கீழ்வருவதில்லை. காரணம் ஆத்மா என்னும் ஒன்றினை அறிதல் மிகவும் அரிது ஆதலினால் ஒரு சிறிதும் தெளிவாகப் புலப்படாத உண்மையானது எப்படியாவது அழிகின்ற உடலைப் பெற்றவர்களின் புத்திக்கு எட்டி, அவர்களின் நிலையற்ற வாழ்க்கையை நீக்க வேண்டும் என்பதற்காகவே பகவான் வாசுதேவன் ஒரே பொருளை வேறு வேறு சொற்களால் மீண்டும் மீண்டும் எடுத்துரைக்கின்றார்.

மேலும்,

**अव्यक्तोऽयमचिन्त्योऽयमविकार्योऽयमुच्यते ।**
**तस्मादेवं विदित्वैनं नानुशोचितुमर्हसि ॥ २५॥**

**அவ்யக்தோ (அ)யம் அசிந்த்யோ (அ)யம் அவிகார்யோ**
**(அ)யம் உச்யதே ।**
**தஸ்மாத் ஏவம் விதித்வைனம் நானுஶோசிதும் அர்ஹஸி ॥ 25॥**

*இது தெளிதற்கரியது; நினைத்தற்கரியது; மாறுதலற்றது என்று கூறப்படுகிறது. ஆதலால் இதனை இவ்வாறு அறிந்து கொண்டு துயர் நீங்குவாயாக.*

இந்த ஆத்மா அனைத்துப் புலன்களுக்கும் எட்டாதது ஆதலினால் இது தெளிவாகப் புலப்படாதது. அதனால் இது நினைத்தற்கரியதாகும்; எது புலன்களுக்கு எட்டுகின்றதோ அதுவன்றோ நினைவிற்கும் எட்டுவதாகும். இந்த ஆத்மாவோ புலன்களுக்கு எட்டாததினால் நினைத்துப் பார்க்க முடியாததாகும். மாறுதலற்றது, எவ்வாறெனில் பாலில், மோர் பிரை குத்தும் பொழுது மாறுதலடைகிறது. அவ்வாறு இவ்வாத்மா மாறுதலடைவதில்லை.

ஆத்மாவிற்கு அவயவங்கள் இல்லாமையினாலும் மாறுதலற்றதாம். ஆகவே இவ்வாறு ஆத்மாவை அறிந்து கொண்டு 'நான் இவர்களைக் கொல்பவன்' இவர்கள் என்னால் கொல்லப்படுகின்றனர்' என்று நீ வருந்த வேண்டாம்.

அர்ஜுனனின் சோகத்தைப் போக்குவதற்காக ஆத்மா அநித்யமென்று ஏற்றுக் கொண்டு பகவான் பின்வருமாறு கூறுகின்றார்:

**अथ चैनं नित्यजातं नित्यं वा मन्यसे मृतम् ।**
**तथापि त्वं महाबाहो नैनं शोचितुमर्हसि ॥२६॥**

**அத சைனம் நித்ய-ஜாதம் நித்யம் வா மன்யஸே ம்ருதம் ।**
**ததாபி த்வம் மஹா-பாஹோ நைனம் ஶோசிதும் அர்ஹஸி ॥ 26॥**

*அன்றியும் நீ இதனை என்றும் பிறப்பதும், என்றும் இறப்பதுமாகக் கருதினாலும் பெருந்தோளா! நீ இவ்வாறு துக்கித்தல் தகாது.*

அன்றியும் என்றது - பிறர் கருத்தினை அங்கீகரித்தற் பொருளாம்; இப்பொழுது பேசப்படும் ஆத்மாவானது பற்பல உடல்கள் உண்டாகுந்தோறும் மீண்டும் மீண்டும் பிறக்கிறது என்றும், அதுபோன்றே பற்பல உடல்கள் அழியுந்தோறும் மீண்டும் மீண்டும் மரிக்கிறது என்றும் பாமர மக்கள் கருதுகின்றபடி நீ கருதினாலும், பெருந்தோளுடையாய்! மேற்கூறியவாறு ஆத்மா இருந்தாலும் நீ துக்கித்தல் தகாது; ஏனெனில் பிறக்கும் ஒன்று இறப்பதும், இறக்கும் ஒன்று பிறப்பதும் தவிர்க்க முடியாதன்றோ.

அவ்வாறே (ஆத்மா அநித்யமாக) இருப்பினும்,

**जातस्य हि ध्रुवो मृत्युर्ध्रुवं जन्म मृतस्य च ।**
**तस्मादपरिहार्येऽर्थे न त्वं शोचितुमर्हसि ॥२७॥**

**ஜாதஸ்ய ஹி த்ருவோ ம்ருத்யுர் த்ருவம் ஜன்ம ம்ருதஸ்ய ச ।**
**தஸ்மாத் அபரிஹார்யே (அ)ர்த்தே ந த்வம் ஶோசிதும் அர்ஹஸி ॥ 27॥**

*பிறந்தது இறப்பது உறுதியெனில் இறந்தது பிறப்பது உறுதியெனில், தவிர்க்க முடியாத - இவ்விஷயத்தில் நீ துயருறுதல் தகாது.*

பிறப்பெடுத்த ஒன்றுக்கு இறப்பு நிச்சயம். இறந்த ஒன்றுக்கோப் பிறப்பு நிச்சயம். பிறப்பு இறப்பு என்னும் இவ்விஷயங்கள் தவிர்த்தற்கரியன. ஆதலினால் தவிர்க்க முடியாத ஒரு விஷயத்திற்கு நீ துயருறுதல் தகாது. பிறப்புடைய ஒன்றுக்கு இறப்பும், இறப்புடைய ஒன்றுக்குப் பிறப்பும் இயற்கையெனில் அது (எவராலும்) விலக்குதற்குவொண்ணாததாகும். இவ்வாறு விலக்குதற்கு அரிய ஒன்றிற்காக நீ துயருறுதல் தகாது.

(பௌதீகக்) காரண காரியங்களின் கலப்பினால் ஆன உயிர்களைப் பற்றியும் நீ துயருறுதல் தகாது; காரணம் -

**अव्यक्तादीनि भूतानि व्यक्तमध्यानि भारत ।**
**अव्यक्तनिधनान्येव तत्र का परिदेवना ॥ २८॥**

**அவ்யக்தாதீனி பூதானி வ்யக்த - மத்யானி பாரத ।**
**அவ்யக்த - நிதனானி ஏவ தத்ர கா பரிதேவனா ॥ 28॥**

*உயிர்களின் ஆதி புலப்படாமலும், இடைநிலை புலப்படுவதாகவும் இறுதி புலப்படாமலும் இருக்கின்றது. பாரத! இதில் புலம்புதல் என்னே?*

அவ்யக்தமெனினும், காணப்படாமையெனினும், புலப்படாமையெனினும் ஒன்றாம். ஆதியானது (உயிர்களின்) உற்பத்திக்கு முன்பு புலப்படாததாம். உற்பத்தியானபின் மரணத்திற்கு முன்பு நடுவில் சிலகாலம் புலப்படுகின்றன. மீண்டும் அவை புலப்படாமையினையே மரணமாகப் பெறுகின்றன. அதாவது மரணத்திற்குப் பின்பு அவை புல்ப்படாத் தன்மையை அடைகின்றன என்று பொருளாகும். அதனால் தான் 'புலப்படாமையினின்று வந்தவன் மீண்டும் புலப்படாமைக்கே சென்றான். அவன் உன்னைச் சேர்ந்தவனல்லன்; நீ அவனைச் சேர்ந்தவன் அல்லன்; வீண் புலப்பம் ஏனோ?' (ம.பா.ஸ்திரீ பர்வம், 2-15) என்று கூறப்படுகிறது. முதலில் காணப்படாமல், இடையில் காணப்பட்டு, இறுதியில் காணப்படாமற் போகும் மாயையான இவற்றைப் பற்றி என்ன புலம்பல் வேண்டியதிருக்கிறது என்பது பொருள்.

இப்போது பேசப்படும் இந்த ஆத்மா, அறிதற்கு அரிய ஒன்றாகும். அப்படி அதனை அறிய முடியாததற்குக் காரணமாயிருக்கும் மயக்கமானது எல்லா மக்களுக்கும் பொதுவாயிருக்க நான் உன் ஒருவனை மட்டும் ஏன் பழித்தல் வேண்டும்? ஆத்மா அறிதற்கரியது எவ்வாறு? - பகவான் விடை பகர்கிறார்.

**आश्चर्यवत्पश्यति कश्चिदेन- माश्चर्यवद्वदति तथैव**
**चान्य: ।**
**आश्चर्यवच्चैनमन्य: श्रृणोति श्रुत्वाप्येनं वेद न**
**चैव कश्चित् ॥ २९॥**

**ஆஶ்சர்யவத் பஶ்யதி கஶ்சித் ஏனம் ஆஶ்சர்யவத்**
**வததிததைவ சான்ய: ।**
**ஆஶ்சர்யவச் சைனம் அன்ய: ஶ்ருணோதி ஶ்ருத்வாப்யேனம்**
**வேத ந சைவ கஶ்சித் ॥ 29॥**

*வியப்பென ஒருவன் பார்க்கிறான்; வியப்பென மற்றொருவன் பேசுகிறான்; வியப்பென வேறொருவன் கேட்கிறான்; இருந்தும் ஒருவனும் இதனை அறிவதில்லை.*

முன்னெப்போதும் கண்டிராத ஓர் அதிசயத்தைத் திடீரெனக் கண்டதுபோல் ஒருவன் ஆத்மாவைக் காண்கிறான். அதுபோன்றே மற்றொருவன் ஓர் அதிசயமாக இதனைப் பேசுகிறான்; வேறொருவன் ஓர் அதிசயமாகவே இதனைக் கேட்கிறான். கண்டும், பேசியும் கேட்டும் கூட ஆத்மாவை உணர்பவன் எவனுமிலன்.

இதற்கு மற்றொரு விளக்கம் என்னவெனில், ஆத்மாவைக் காண்பவனும், சொல்பவனும், கேட்பவனும் உலகில் ஓர் அதிசயம் போலாகின்றார். அப்படிப்பட்டவன் பல்லாயிரத்தில் ஒருவனேயாவான். அதனால் ஆத்மாவை அறிதல் மிகவும் கடினமான ஒன்றாகும் என்பதாம்.

இப்பகுதிக்குரிய செய்தியினைப் பகவான் இப்போது முடிவிற்குக் கொண்டு வருகிறார்:

देही नित्यमवध्योऽयं देहे सर्वस्य भारत ।
तस्मात्सर्वाणि भूतानि न त्वं शोचितुमर्हसि ॥ ३०॥

**தேஹீ நித்யம் அவத்யோ (அ)யம் தேஹே ஸர்வஸ்ய பாரத ।**
**தஸ்மாத் ஸர்வாணி பூதானி ந த்வம் ஶோசிதும் அர்ஹஸி ॥ 30॥**

*எல்லோருடைய உடல்களினுள்ளும் இருக்கும் இந்த ஆத்மாவானது கொல்ல முடியததாகும். ஆதலினால் பாரத! நீ எந்த உயிர்களைப் பற்றியும் வருந்தத் தேவையில்லை.*

எந்தவோர் உயிரின் உடலும் கொல்லப்படினும் அதனுள்ளிருக்கும் ஆத்மாவானது கொல்ல முடியாததாகும். ஆகையால் நீ பீஷ்மர் உள்ளிட்ட எந்தவோர் உயிரைப் பற்றியும் வருந்தத் தேவையில்லை.

உண்மைப் பொருளை உற்று நோக்குமிடத்து சோகமோ, மோகமோ உண்டாகாது என்று இங்கே (2-30) குறிப்பிடப்படுகின்றது. உண்மைப் பொருளை உற்று நோக்குவது மட்டுமின்றி,

स्वधर्ममपि चावेक्ष्य न विकम्पितुमर्हसि ।
धर्म्याद्धि युद्धाच्छ्रेयोऽन्यत्क्षत्रियस्य न विद्यते ॥ ३१॥

**ஸ்வ-தர்மம் அபி சாவேக்ஷ்ய ந விகம்பிதும் அர்ஹஸி ।**
**தர்ம்யாத் தி யுத்தாச் ச்ரேயோ (அ)ன்யத் க்ஷத்ரியஸ்ய ந வித்யதே ॥ 31॥**

*உனது சுதர்மத்தினைக் கருத்திற் கொண்டும் நீ நடுங்கிடத் தேவையில்லை; ஏனெனில் அறப்போரினும் சிறந்ததொன்று க்ஷத்திரியனுக்கு வேறு இல்லை.*

நீ யுத்தம் சத்ரியதர்மம்' என்பதை மனத்திற் கொண்டு, சத்திரியனுக்கு இயல்பான, அதாவது உனக்கு இயற்கையான இந்த தர்மத்தினின்று (யுத்தம் செய்வது) பின்வாங்குதல் தகாது. பூமியை வெல்வது என்பது தர்மத்திற்கும், குடிமக்களைக் காத்தற்கும் பயன்படுவதால், இந்த யுத்தம் நீதிக்குப் புறம்பானதன்று. நீதியோடு இயைந்த யுத்தத்தைக் காட்டிலும் சத்திரியனுக்கு நன்மை பயப்பது வேறொன்றுமில்லை.

ஏன் இந்த யுத்தத்தைச் செய்தல் வேண்டும்? பகவான் கூறுகிறார்.

**यदृच्छया चोपपन्नं स्वर्गद्वारमपावृतम् ।**
**सुखिन: क्षत्रिया: पार्थ लभन्ते युद्धमीदृशम् ॥ ३२॥**

**யத்ருச்சயா சோபபன்னம் ஸ்வர்க-த்வாரம் அபாவ்ருதம் ।**
**ஸுகின: க்ஷத்ரியா: பார்த்த லபந்தே யுத்தம் ஈத்ருஶம் ॥ 32॥**

*தானே வந்தெய்வது, திறந்திருக்கும் சொர்க்க வாயில் போன்றதாகும். இத்தகைய யுத்தம் கிடைக்கப் பெறும் வேந்தர் இன்பமுடையார்.*

தானே போய்த் தேடாததும், திறந்திருக்கும் சொர்க்கவாயில் போன்றதுமான இந்த யுத்தம் சத்திரியர்களுக்கு இன்பமளிப்பதன்றோ?

இவ்வாறு (யுத்தம் உனது) கடமையாயிருந்தும்,

**अथ चेत्तवमिमं धर्म्यं सङ्ग्रामं न करिष्यसि ।**
**तत: स्वधर्मं कीर्तिं च हित्वा पापमवाप्स्यसि ॥ ३३॥**

**அத சேத் த்வம் இமம் தர்ம்யம் ஸங்க்ராமம் ந கரிஷ்யஸி ।**
**தத: ஸ்வ-தர்மம் கீர்த்திம் ச ஹித்வா பாபம் அவாப்ஸ்யஸி ॥ 33॥**

*இனி, இந்தத் தர்மயுத்தத்தை நீ செய்யாவிடில், அதன் காரணமாக சுதர்மத்தையும், புகழையும் இழந்து பாவமெய்துவாய்.*

தர்மத்திற்கு இயைந்ததும், உனக்கு விதிக்கப்பட்டதுமாகிய இந்த யுத்தத்தை நீ செய்யாதொழிந்தால், உனது சுதர்மத்தையும். இழந்து (வேடனாக வந்த) சிவபெருமானை எதிர்த்து எய்தியப் புகழையும் இழந்து, பாவம் ஒன்றினையே எய்துவாய்.

சுதர்மத்தையும், புகழையும் இழத்தல் மட்டுமின்றி மேலும்,

अकीर्तिं चापि भूतानि कथयिष्यन्ति तेऽव्ययाम् ।
सम्भावितस्य चाकीर्ति- र्मरणादतिरिच्यते ॥ ३४॥

**அகீர்த்திம் சாபி பூதானி கதயிஷ்யந்தி தே (அ)வ்யயாம் ।**
**ஸம்பாவிதஸ்ய சாகீர்த்திர் மரணாத் அதிரிச்யதே ॥ 34॥**

*உலகத்தார் என்றும் உன்னை இகழ்ந்துரைப்பர். புகழுடையோன் பின்னரெய்தும் இகழ்ச்சியானது மரணத்தினும் கொடியதன்றோ?*

உலகத்தார் உனக்கெய்திய இகழ்ச்சியை நெடுங்காலம் எடுத்துரைப்பர். தர்மநெறி நிற்பவன், வீரன், என்றெல்லாம் மதிக்கப் பெற்றவனுக்கு எய்தும் அபகீர்த்தி மரணத்தினும் கொடியதாகும்; மரணம் எய்துவது அபகீர்த்தி அடைவதைக் காட்டிலும் சாலச்சிறந்தது என்று பொருளாம்.

மேலும்,

भयाद्रणादुपरतं मंस्यन्ते त्वां महारथाः ।
येषां च त्वं बहुमतो भूत्वा यास्यसि लाघवम् ॥ ३५॥

**பயாத்ராணாத் உபரதம் மம்ஸ்யந்தே த்வாம் மஹா-ரதா: ।**
**யேஷாம் ச த்வம் பஹு-மதோ பூத்வா யாஸ்யஸி லாகவம் ॥ 35॥**

*நீ அச்சத்தின் காரணமாக யுத்தத்தைத் தவிர்ப்பதாக மகாரதர் கருதுவர். நீ எவர்களிடத்துப் பெருமதிப்புப் பெற்றாயோ, அவர்களிடத்து இனி சிறுமையடைவாய்.*

துரியோதனன் போன்ற மகாரதர்கள், நீ இரக்கத்தின் காரணமாக அன்றி கர்ணன் முதலியோரிடத்துக் கொண்ட அச்சத்தின் காரணமாகவே யுத்தத்தைப் புறக்கணிக்கிறாய் என்று கருதுவர். நீ எந்தத் துரியோதனாதியர்களிடத்து, நற்குணங்களுடையவன் என்ற பெருமதிப்புப் பெற்றிருக்கின்றாயோ, அவர்களிடத்து இனி சிறுமையடைவாய்.

अवाच्यवादांश्च बहून्वदिष्यन्ति तवाहिताः ।
निन्दन्तस्तव सामर्थ्यं ततो दुःखतरं नु किम् ॥ ३६॥

**அவாச்ய-வாதாம்ஶ் ச பஹூன் வதிஷ்யந்தி தவாஹிதா: ।**
**நிந்தந்தஸ் தவ ஸாமர்த்யம் ததோ து:கதரம் நு கிம் ॥ 36॥**

*உனது பகைவர்கள் உனது வல்லமையினை இகழ்ந்து கூறத்தகாத வார்த்தைகள் பல கூறுவர். இதனினும் அதிக துன்பம் வேறு உண்டோ?*

உனது வல்லமையினை இகழ்ந்து, உனது பகைவர் பற்பல பழிச்சொற்களைக் கூறுவர். அதனால் எய்தும் துன்பத்தைக் காட்டினும் பெருந்துன்பம் வேறெதுவும் இல்லை என்று பொருளாம்.

இனி நீ கர்ணன் போன்றோரோடு போர் புரிந்து,

**हतो वा प्राप्स्यसि स्वर्गं जित्वा वा भोक्ष्यसे महीम् ।**
**तस्मादुत्तिष्ठ कौन्तेय युद्धाय कृतनिश्चयः ॥ ३७॥**

**ஹதோ வா ப்ராப்ஸ்யஸி ஸ்வர்கம் ஜித்வா வா மோக்ஷ்யஸே மஹீம் ।**
**தஸ்மாத் உத்திஷ்ட கௌந்தேய யுத்தாய க்ருத-நிஶ்சய: ॥ 37॥**

*கொல்லப்படினோ சொர்க்கம் செல்வாய்; வெற்றிபெறினோ பூமியை ஆள்வாய். ஆகையால் குந்தி மைந்த! போர்புரிய உறுதியுடன் எழுந்துநில்.*

கொல்லப்பட்டால் சொர்க்கம் அடைவாய். கர்ணன் போன்ற மாவீரர்களை வெற்றி கொண்டால் பூமியை ஆள்வாய். இருநிலைகளிலும் உனக்கு நன்மையே விளையும் என்பது எனது துணிபு. அதனால் உறுதியுடன், "நான் வெற்றி பெறுவேன் அல்லது வீழ்ந்து மடிவேன்" என்று எழுந்து நில் என்பது பொருளாம்.

இனி யுத்தம் உனது சுதர்மம் என்று எண்ணி நீ போர்புரியும் பொழுது உனக்கு நான் அருளும் இவ்வுபதேசத்தைச் செவிமடுப்பாயாக.

**सुखदुःखे समे कृत्वा लाभालाभौ जयाजयौ ।**
**ततो युद्धाय युज्यस्व नैवं पापमवाप्स्यसि ॥ ३८॥**

**ஸுக-து:கே ஸமே க்ருத்வா லாபாலாபௌ ஜயாஜயௌ ।**
**ததோ யுத்தாய யுஜ்யஸ்வ நைவம் பாபம் அவாப்ஸ்யஸி ॥ 38॥**

*இன்பம் துன்பம், இழப்பு பேறு, வெற்றி தோல்வி, இவற்றை நிகரெனக் கொண்டு போரில் ஈடுபடுக. இவ்வாறு செய்தால் நீ பாவம் எய்தாய்.*

இன்பம் துன்பம் இவற்றை நிகரெனக் கொண்டு-என்றால், ஒன்றை விரும்பி மற்றொன்றை வெறுக்கக் கூடாது என்று பொருளாகும். அதாவது எல்லாவற்றையும் சமமாகக் கருதவேண்டும் என்பதாகும். இவ்வாறு போர் புரிவாயாகில் நீ பாவம் எய்த மாட்டாய். இவ்வுபதேசம் எதேச்சையானதாகும்.

துயர் மற்றும் பற்றினைப் போக்குவதற்கான உலகநீதிகள் 'நீ உன் சுதர்மத்தை' (11.31-38) முதலான சுலோகங்களால் எடுத்துக் கூறப்பட்டன. ஆனால் அவை உபதேசத்தின் மையப் பொருளை உடையவையன்று.

பரம்பொருளை உணர்த்துதலே, இவ்வுபதேசத்தின் மையக் கருத்தாகும். (2-20ல்) கூறப்பட்ட அச்செய்தியும், நூலின் கருத்தினைப் பகுத்துக் காட்டும் பொருட்டு "இந்தப் புத்தி உனக்கு உரைக்கப்பட்டது" (2-39) என்று நிறைவு செய்யப்படுகின்றது. இங்கு நூலின் கருத்தினைப் பகுத்துக் காட்டினால்தான் 'ஞானயோகத்தால் சாங்கியர்களுக்கும், கர்மயோகத்தால் யோகிகளுக்கும் (3-3) என பின்னால் குறிப்பிடப்படும். இருவகைப் பாதைகளுடைய இந்நூலானது தொய்வின்றிச் செல்லும்; கருத்தினைப் பகுத்துரைப்பதால் கேட்பவரும், நூல் பொருளை எளிதில் புரிந்து கொள்வர். ஆதலினால் பகவான் கூறுகிறார் :

**एषा तेऽभिहिता साङ्ख्ये बुद्धिर्योगे त्विमां शृणु ।**
**बुद्ध्या युक्तो यया पार्थ कर्मबन्धं प्रहास्यसि ॥ ३९॥**

**ஏஷா தே(அ)பிஹிதா ஸாங்க்யே புத்திர் யோகே த்வ இமாம் ஶ்ருணு ।**
**புத்த்யா யுக்தோ யயா பார்த்த கர்ம-பந்தம் ப்ரஹாஸ்யஸி ॥ 39॥**

*இவ்வாறு உனக்கு சாங்கிய நெறிப்படிப் புத்தி புகன்றேன். இனி யோக நெறியில் கூறுகின்றேன். இப்புத்தி கொண்டவன் கர்மத் தளைகளை உதறிவிடுவான்.*

துன்பம் மயக்கம் போன்ற நிலையற்ற வாழ்க்கைக்குக் காரணமான அஞ்ஞானம் என்னும் தீமையினை நேரடியாகப் போக்குவதற்கான இந்த ஞானமானது பரம்பொருளை உள்ளவாறு ஆராய்ந்தறிவதற்காக உனக்கு மேலே உரைக்கப்பட்டது. அந்த ஞானத்தைப் பெறுவதற்கு வழியாக, இருமைகளைப் (வெம்மை, குளிர்) புறந்தள்ளிவிட்டு, பற்று நீங்கி, ஈசுவரனைத் தொழுதற் பொருட்டுச் செய்யும் கர்மயோகமும், சமாதியோகமுமாகிய யோகத்தைப் பற்றிப் பின்வரும் இப்புத்தியைக் கேட்பாயாக!

அப்புத்தியின் மீது நாட்டத்தினை உண்டாக்குவதற்காகப் பகவான், அதனைச் சிறப்பித்துக் கூறுகின்றார்: பார்த்த! யோகம் பற்றிய, அந்த ஞானம் நீ எய்தும்பொழுது தர்மம்-அதர்மம் என்னும் கர்மத்தளைகளை நீ நீக்கிக் கொள்வாய். ஈசுவரனின் அருளினால் வரும் ஞானத்தைப் பெறுவதின் மூலமே அத்தளைகளை நீக்கிக் கொள்ளலாம் என்பது பொருள்.

மேலும்,

**नेहाभिक्रमनाशोऽस्ति प्रत्यवायो न विद्यते ।**
**स्वल्पमप्यस्य धर्मस्य त्रायते महतो भयात् ॥ ४०॥**

**நேஹாபிக்ரம - நாஶோ (அ)ஸ்தி ப்ரத்யவாயோ ந வித்யதே ।**
**ஸ்வ-அல்பம் அபி அஸ்ய தர்மஸ்ய த்ராயதே மஹதோ பயாத் ॥ 40 ॥**

*இதில் முயற்சி வீணாகாது; குற்றம் நேராது, இத்தர்மத்தின் சிறிதளவும் கூட ஒருவனைப் பேரச்சத்தினின்று காக்கும்.*

வேளாண்மை போன்றவற்றில் முயற்சி வீணாவதுபோல், இந்த கர்மயோகத்தில் முயற்சி வீணாவதில்லை. அதாவது யோக மார்க்கத்தில் செய்யும் எந்தவொரு முயற்சியும் வீணாகப் போவதில்லை என்பது பொருள். மேலும் மருத்துவம் செய்வதில் சில சமயம் நேரும் கெடுதல்களைப் போன்றவை இதில் நேர்வதில்லை. இந்த யோகத்தைச் சிறிது கைக் கொண்டாலும், அது பிறப்பு இறப்பு முதலியவையுடைய நிலையற்ற வாழ்க்கையின் அச்சத்தினின்று ஒருவனைக் காப்பாற்றுகின்றது.

இதுவரை விளக்கப்பட்ட சாங்கியம் மற்றும் யோகம் தொடர்பானப் புத்தியின் தன்மைப் பின்வருமாறு:

**व्यवसायात्मिका बुद्धिरेकेह कुरुनन्दन ।**
**बहुशाखा ह्यनन्ताश्च बुद्धयोऽव्यवसायिनाम् ॥ ४१॥**

**வ்யவஸாயாத்மிகா புத்திர் ஏகேஹ குரு-நந்தன ।**
**பஹு-ஶாகா ஹி அனந்தாஶ் ச புத்தயோ (அ)வ்யவஸாயினாம் ॥ 41॥**

*குருகுலத்தோன்றலே! உறுதியுடைய புத்தி இவ்வுலகில் ஒன்று தான். உறுதியற்றவர்களின் புத்தியோ பலகிளைப்பட்டது. அளவற்றது.*

ஒ, குருகுலத் தோன்றலே! இந்த நன்மார்க்கத்தில் உறுதியுடையப் புத்தி என்பது ஒன்றே ஒன்றுதான். சரியான பிரமாணத்தினின்று அது உருவானதினால், அப்புத்திக்கு எதிரானப் பல கிளைகளையுடையப் புத்திகளை நிலைகுலையச் செய்கிறது. அப்புத்திக்கு எதிரானப் புத்திகள் பற்பல. பல கிளைகளையுடைய இப்புத்திகளுக்கேற்ப செயல்படுவதினால் நிலையற்ற வாழ்க்கை முடிவில்லாமலும் எங்கும் பரந்தும் இலங்குகின்றது. சரியான பிரமாணத்தினால் உண்டான உறுதியினை எய்தும் பொழுது, முடிவற்றப் பல்கிளையுடையப் புத்திகள் ஒழிவதோடு, நிலையற்ற வாழ்க்கையும் முடிவு பெறுகின்றது. பல கிளைகளையுடைய அந்தப் புத்தியானது பல பிரிவுகளையும் உடையதினால், புத்திகள் அளவிறந்தனவாகும். எவர்களிடத்து இப்புத்தி உள்ளனவென்றால், பிரமாணத்தால் உண்டான பகுத்தறியும் ஞானமில்லாதவர்களிடத்து என்பது பதிலாம்.

உறுதியுடைய புத்தி எவர்களிடத்து இல்லையோ அவர்கள்,

**यामिमां पुष्पितां वाचं प्रवदन्त्यविपश्चितः ।**
**वेदवादरताः पार्थ नान्यदस्तीति वादिनः ॥ ४२॥**

**யாம் இமாம் புஷ்பிதாம் வாசம் ப்ரவதந்தி அவிபஶ்சித: ।**
**வேத-வாத-ரதா: பார்த்த நான்யத் அஸ்தீதி வாதின: ॥ 42॥**

कामात्मान: स्वर्गपरा जन्मकर्मफलप्रदाम् ।
क्रियाविशेषबहुलां भोगैश्वर्यगतिं प्रति ॥ ४३॥

காமாத்மான: ஸ்வர்க-பரா ஜன்ம-கர்ம-பல-ப்ரதாம் ।
க்ரியா-விஶேஷ-பஹுலாம் போகைஶ்வர்ய - கதிம் ப்ரதி ॥ 43॥

भोगैश्वर्यप्रसक्तानां तयापहृतचेतसाम् ।
व्यवसायात्मिका बुद्धि: समाधौ न विधीयते ॥ ४४॥

போகைஶ்வர்ய - ப்ரஸக்தானாம் தயாபஹ்ருத - சேதஸாம் ।
வ்யவஸாயாத்மிகா புத்தி: ஸமாதௌ ந விதீயதே ॥ 44॥

*பார்த்த! மதியிலிகள் சிலர் வேதங்களின் மலர் போன்றச் சொற்களில் மகிழ்ச்சியுறுகின்றனர். இவ்வார்த்தைகள் சொர்க்கம் எய்துதல், நற்பிறவி எடுத்தல், ஆற்றல் பெறுதல் போன்றவற்றிற்கான கர்மங்களைப் பரிந்துரைக்கின்றன. புலனுகர்ச்சி மற்றும் வளமான வாழ்வில் பற்றுடையோராய் அவர்கள் இதைவிடச் சிறந்தது என்று எதுவுமில்லை என்கின்றனர். இவர்கள் வார்த்தைகளில் மதிமயங்கி போகத்திலும், செல்வத்திலும் பற்றுக் கொள்வோரின் மனங்களில் உறுதியானப் புத்தி உண்டாவதில்லை.*

அவர்கள் மதியிலிகள், அவிவேகிகள் அவர்கள் பலன்தரும் செயல்களையும், அவற்றினால் விளையும் பயன்களையும், அவற்றைச் செய்வதற்கானச் சாதனங்களையும் எடுத்துக் கூறும் வேதவார்த்தைகளில் பற்றுடையோர் ஆவர். அவர்கள் பார்ப்பதற்கு நேர்த்தியாகத் தோன்றும் மலர்கள் செறிந்த மரம் போல், கேட்பதற்கு ரம்மியமாகத் தோன்றும் வார்த்தைகளைக் (கர்மகாண்ட வேதம்) கூறுகின்றனர். ஏ, பார்த்த! சொர்க்கம் எய்துதல், பசு முதலிய செல்வங்களைப் பெறுதல், போன்றவற்றிற்குச் சாதனமானக் கர்மங்களைக் காட்டிலும் வேறு சிறந்தது இல்லை என்றும் அவர்கள் கூறுகின்றனர். அவர்கள் புலனுகர்ச்சி ஒன்றினையேப் பிரதானமாகக் கொண்ட காமிகள். அவர்களின் வார்த்தைகள் கர்மத்தின் பலனாகப் பிறப்பினைக் கொடுக்க வல்லன. சொர்க்கத்தையே இலட்சியமாகக் கொண்டன. பசுக்கள், மக்கள், செல்வம் போன்றவற்றைப் பெறுவதற்கானப் பலன்தரும் செயல்களைச் சுட்டுவன. அவர்கள் இன்பமும், செல்வமும் மிகவும் முக்கியமானத் தேவைகள் என்று கருதி, அவற்றின் மீது பற்று வைத்து, அவற்றினிடத்தேத் தம்மை ஒப்படைத்தவர்களாவர். புலனுகர்ச்சிக்கானப் பலன்தரும் செயல்களைச் சுட்டும் வார்த்தைகள் நிறைந்துள்ள அவர்களின் மனதில் (சமாதியில், புத்தியில் அல்லது அந்தகரணத்தில்) சாங்கியத்திலோ, அல்லது யோகத்திலோ உறுதியுடையப் புத்தி ஒரு நாளும் உண்டாகாது.

உறுதியுடையப் புத்தியில்லாத அப்புலனுகர்ச்சியாளர் அடையும் பயன் இதுவென்று கூறுகிறார்.

**त्रैगुण्यविषया वेदा निस्त्रैगुण्यो भवार्जुन ।**
**निर्द्वन्द्वो नित्यसत्त्वस्थो निर्योगक्षेम आत्मवान् ॥ ४५॥**

**த்ரை-குண்ய - விஷயா வேதா நிஸ்த்ரை - குண்யோ பவார்ஜுன ।**
**நிர்த்வந்த்வோ நித்ய - ஸத்த்வ - ஸ்தோ நிர்யோக - க்ஷேம ஆத்மவான் ॥ 45॥**

*வேதங்கள் முக்குணங்களுக்குரியவை பற்றிப் பேசுகின்றன. நீ அம்முக்குணங்களைக் கடந்தவனாகவும், இருமைகளற்றவனாகவும், எப்போதும் நித்திய சத்துவத்தில் நிலை நின்று, பெறுதல், பெற்றதைப் பேணிக்காத்தல் போன்ற கவலைகள் இன்றி ஆத்மாவை வசப்படுத்தி எச்சரிக்கையுடையவனாகுக!*

வேதங்களினால் உணர்த்தப்படும் கருத்து முக்குணங்களினாலான பௌதீக வாழ்க்கையாகும். ஆயினும், அர்ஜுன நீ முக்குணங்களற்றவனாகவும், பற்றற்றவனாகவும் இரு என்பது பொருளாகும். இன்ப துன்பங்களுக்குக் காரணமாகவும், ஒன்றிற்கொன்று நேர் எதிராக விளங்கும் பொருள்களான இருமைகளிலிருந்து விடுதலை பெறுவாயாக. பெற முடியாததைப் பெறுவதற்காகவும் பெற்றதைப் பேணிக் காப்பதற்காகவும் கவலைப்படுபவன், நன்மையடைதல் சாத்தியமன்று. ஆத்மாவை வசப்படுத்தி எச்சரிக்கையுடையவனாக இருத்தல் வேண்டும். சுதர்மத்தைச் செய்யும் பொழுது, நீ பின்பற்ற வேண்டிய உபதேசம் இதுவேயாகும்.

வேதங்களிற் கூறப்பட்டுள்ள அனைத்துக் கர்மங்களின் அளவற்றப் பயன்கள் மீது பற்று வைக்கக் கூடாதெனில் அவை எதற்காக ஈசுவரனுக்கென்று கடைபிடிக்கப்படுகின்றன என்பது கேள்வியானால் அதற்குரிய பதில் பின்வருமாறு:

**यावानर्थ उदपाने सर्वतः सम्प्लुतोदके ।**
**तावान्सर्वेषु वेदेषु ब्राह्मणस्य विजानतः ॥ (४६)॥**

**யாவான் அர்த்த உதபானே ஸர்வத: ஸம்ப்லுதோதகே ।**
**தாவான் ஸர்வேஷு வேதேஷு ப்ராஹ்மணஸ்ய விஜானத: ॥ 46॥**

*எங்கும் நீர் நிரம்பியிருக்கும் இடத்தில் ஒரு சிறு கிணற்றினால் என்ன பயன்; அன்ன பயனே ஞானமுடைய பிராமணனுக்கு வேதங்களின் பயனுமாகும்.*

குடிப்பதற்கும், குளிப்பதற்கும் சிறிதளவே நீருடைய கிணறு, குளம் போன்றவற்றினால் என்ன பயனுண்டோ, அப்பயன்கள் எல்லாம் எங்கும் பிரவகித்து ஓடும் நீர்ப்பெருக்கிலும் இருக்கின்றன. அவ்வாறே வேதங்கள்

கூறும் கர்மங்களில் எவ்வெப் பயன்கள் உளவோ, அப்பயன்கள் அனைத்தும் பரம்பொருளின் உண்மை நிலையினை உணர்ந்த, உலக வாழ்வினைத் துறந்த பிராமணன் எய்தப் பெறுவான். இந்த ஞானமே எங்கும் பிரவகித்து ஓடும் நீர்ப் பெருக்கோடு ஒப்பிடப்பட்டிருக்கின்றது. சுருதிகள் கூறுகின்றன: 'மக்களால் செய்யப்படும் நன்மை எதுவாயினும், அவன் (ரைக்வன்) அறிந்ததை அறிபவன் அடையப் பெறுவான்,' (ச.உ.ப.4.1-4) இதே கருத்து இங்கும் பின்னர் உரைக்கப்படும் (4-33) ஆகையினால் கர்மத்தைச் செய்வதற்குத் தகுதியுடையவன், ஞான மார்க்கத்தில் செல்லும் தகுதியைப் பெறுவதற்கு முன்பு கர்மங்களைச் செய்தல் (கிணறு, குளம் போன்று) அவசியமாகும்.

இனி உனக்கு எதிலே அதிகாரம் என்றால்,

**कर्मण्येवाधिकारस्ते मा फलेषु कदाचन ।**
**मा कर्मफलहेतुर्भूर्मा ते सङ्गोऽस्त्वकर्मणि ॥ ४७॥**

**கர்மணி ஏவாதிகாரஸ்தே மா பலேஷு கதாசன ।**
**மா கர்ம - பல - ஹேதுர் பூர் மா தே ஸங்கோ (அ)ஸ்த்வ அகர்மணி ॥ 47॥**

*கர்மத்திலேதான் உனக்கு அதிகாரம். ஒருக்காலும் அதன் பயன்களிலே உனக்கு அதிகாரமில்லை. கர்மத்தின் பயனைக் கருதாதே; கர்மம் செய்யாமலுமிராதே.*

கர்மத்திலே தான் உனக்கு அதிகாரம். ஞானமார்க்கத்தில் அன்று. கர்மம் செய்கையில், எச்சூழ்நிலையிலும், அதன் பயன் மீதுப் பற்று வைக்காதே. கர்மத்தின் பயனிலே உனக்கு எப்போது பற்று உண்டாகுமோ, அப்போது நீ கர்மத்தின் பயனைப் பெறுவதற்குக் காரணமாவாய். ஆகையினால் உனது நோக்கம் கர்மத்தின் பயன்கள் மீது இல்லாதிருக்கட்டும். கர்மத்தின் பயன் மீது பற்றுடையவனாக ஒருவன் கர்மத்தைச் செய்யும் பொழுது, அக்கர்மத்தின் பயனாக அவன் மீண்டும் பிறப்பெடுக்கிறான். பயன் மீது பற்று வைக்கக் கூடாதெனில் இத்துன்பமிகு கர்மத்தைச் செய்வதால் என்ன பயன் என்று கருதி நீ கர்மம் செய்யாமலும் இராதே.

கர்மத்தின் பயன் மீது பற்றுக் கொண்டு ஒருவன் கர்மம் செய்யக் கூடாதெனில் பிறகு அக்கர்மங்கள் எவ்வாறு செய்யப்படுகின்றன? பதில் பின்வருமாறு:

**योगस्थः कुरु कर्माणि सङ्गं त्यक्त्वा धनञ्जय ।**
**सिद्ध्यसिद्ध्योः समो भूत्वा समत्वं योग उच्यते ॥ ४८॥**

**யோக -ஸ்த: குரு கர்மாணி ஸங்கம் த்யக்த்வா தனஞ்ஜய ।**
**ஸித்தி - அஸித்த்யோ: ஸமோ பூத்வா ஸமத்வம் யோக உச்யதே ॥ 48॥**

*தனஞ்சயா, யோகத்தில் நிலை நின்று, பற்று நீங்கி, பயனடையினும், அடையாவிடினும், நடுநிலையில் நின்று கர்மங்களைச் செய்வாயாக. நடுநிலையில் நிற்றலே யோகம் ஆகும்.*

யோகத்தில் நிலைநின்று 'கடவுள் என் மீதும் பிரீதி அடைவாராக' என்பது போன்ற பற்றினையும் துறந்து வெற்றி தோல்வியை சமமெனக் கருதி கடவுளின் பொருட்டுக் கர்மங்கள் செய்வாயாக. பயனிலேப் பற்றின்றி கர்மத்தைச் செய்யும் பொழுது புத்தித் தூய்மையினால் அவன் ஞானத்தைப் பெறுவது வெற்றியாகும் (ஸித்தி) இதற்கு நேர்மாறாக புத்தியின் தூய்மையின்மையினால் விளைவது தோல்வியாகும் (அஸித்தி)-அந்த வெற்றி தோல்விகளைச் சமமாகக் கருதி நீ கர்மங்களைச் செய்வாயாக.

எதிலே நிலைநின்று கர்மங்களைச் செய் என்று கூறப்பட்டதோ, அந்த யோகம் என்பது என்ன? என்றால், வெற்றி தோல்விகளைச் சமமாகக் கருதுதலே யோகம் ஆகும்.

சமத்துவ புத்தியுடன் இறைவனுக்கானத் தொண்டு இவ்வாறு செய்யப்படுவதை ஒப்பிடும் பொழுது,

**दूरेण ह्यवरं कर्म बुद्धियोगाद्धनञ्जय ।**
**बुद्धौ शरणमन्विच्छ कृपणाः फलहेतवः ॥ ४९॥**

**தூரேண ஹி அவரம் கர்ம புத்தி-யோகாத் தனஞ்ஜய ।**
**புத்தௌ ஶரணம் அன்விச்ச க்ருபணா: பல-ஹேதவ : ॥ 49॥**

*தனஞ்சய புத்தி யோகத்தைக் காட்டிலும் கர்மம் மிகவும் தாழ்ந்ததன்றோ! புத்தியைச் சரணடை, பயனைக் கருதுவோர் கீழ்மக்களாவர்.*

பயனை நாடி ஒருவனால் செய்யப்படும் கர்மமானது பிறப்பு இறப்பு முதலியவற்றிற்குக் காரணமாவதால், மனதில் நடுநிலையுடன் செய்யப்படும் கர்மமான, புத்தியோகத்தைக் காட்டிலும் மிகவும் தாழ்ந்ததாகும். தனஞ்சய, அதனால் யோகத்தைப் பற்றிய புத்தியிலாயினும், அதன் பக்குவத்தால் உண்டாகும் சாங்கிய புத்தியிலாயினும் அச்சமின்மைக்குக் காரணமான அடைக்கலத்தைத் தேடிக் கொள்; பரம்பொருளின் ஞானம் ஒன்றினையே சரண்புகு என்பது இதன் பொருளாகும். ஏனெனில் பயன்களின் மீதுள்ளப் பற்றினால் தூண்டப்பட்டுத் தாழ்ந்த கர்மங்களைச் செய்பவர்கள் கீழ்மக்களாவர். சுருதி கூறுகின்றது:

'ஓ கார்கி, எவன் இந்த அழிவில்லாப் பொருளை அறியாமல் இவ்வுலகை விட்டு நீங்குகின்றானோ அவன் கீழோனாவான்' (பிரு.உப.3-8-13)

சமத்துவ புத்தியோடு சுதர்மத்தைச் செய்பவன் எப்பயன் அடைகிறான் என்பதைக் கேட்பாயாக:

बुद्धियुक्तो जहातीह उभे सुकृतदुष्कृते ।
तस्माद्योगाय युज्यस्व योगः कर्मसु कौशलम् ॥५०॥

**புத்தி-யுக்தோ ஜஹாதீஹ உபே ஸுக்ருத - துஷ்க்ருதே ।**
**தஸ்மாத் யோகாய யுஜ்யஸ்வ யோக: கர்மஸு கௌஶலம் ॥ 50॥**

*சமத்துவ புத்தியைப் பெறுபவன் இங்கு நற்செயல், தீச்செயல் இரண்டையும் துறக்கிறான். ஆதலால் யோகத்தில் பொருந்திவிடு. யோகமானது கர்மங்களில் ஆற்றலுடைத்தாம்.*

புத்தித் தூய்மை மற்றும் ஞானத்தின் மூலம், சமத்துவ புத்தியுடையவன் இவ்வுலகில் நன்மை தீமைகளை (பாவ புண்ணியம்) துறக்கிறான். ஆதலால் சமத்துவ புத்தியுடன் யோகத்தில் பொருந்தி விடு. யோகம் கர்மங்களில் ஆற்றலுடைத்தாம். ஈசுவரனிடத்து மனதினை அர்ப்பணித்து சுதர்மத்தினைச் செய்பவன் வெற்றி தோல்விகளிடத்துச் சமத்துவ புத்தியுடையவனாக இருப்பதினால் - அந்த யோகம் ஆற்றலுடையதாம். உண்மையில் அந்த யோகம், ஆற்றலுடையதுதான் ஏனென்றால், பந்தப்படுத்தும் தன்மையுடைய கர்மங்கள் சமத்துவ புத்தியுடன் செய்யப்படும் பொழுது அப்பந்தப்படுத்தும் தன்மையினை இழந்து விடுகின்றன. அதனால் சமத்துவ புத்தியுடையவனாய் இருப்பாயாக.

कर्मजं बुद्धियुक्ता हि फलं त्यक्त्वा मनीषिणः ।
जन्मबन्धविनिर्मुक्ताः पदं गच्छन्त्यनामयम् ॥५१॥

**கர்ம-ஜம் புத்தி-யுக்தா ஹி பலம் த்யக்த்வா மநீஷிண: ।**
**ஜன்ம-பந்த - விநிர்முக்தா: பதம் கச்சந்தி அநாமயம் ॥ 51॥**

*சமத்துவ புத்தியுடையவர்கள், கர்மத்தினால் உண்டாகும் பயனைத் துறந்து, ஞானிகளாகப் பிறப்பென்னும் பந்தத்தினின்று விடுபட்டு, ஆனந்த பதவி அடைகின்றனர்.*

சமத்துவ புத்தியுடன் யோகத்தில் பொருந்திய மனிதர்கள் தங்கள் கர்மங்களின் பயனைத் துறக்கின்றனர். அதாவது நற்பிறப்பு, தீப்பிறப்பினின்று விடுதலை பெறுகின்றனர். உயிருடன் இருக்கும் பொழுதே அவர்கள் பிறப்பின் பந்தத்தினின்று விடுதலை பெற்று - மோட்சம் அல்லது முக்தி - எனப்படும், துன்பங்களற்றதான விஷ்ணுவின் பரமபதத்தினை அடைகின்றனர்.

அல்லது, கர்ம யோகத்தால் புத்தித் தூய்மையடையும் பொழுது எழுவதும், எங்கும் பிரவகித்து ஓடும் நீர்ப்பெருக்கினை நிகர்த்ததும், பரம்பொருளை உய்த்துணரக் கூடியதான புத்தியே, 'புத்தியோகத்தைக் காட்டிலும்' (2-49) என்பது முதல் இதுவரையில் எடுத்துரைக்கப்பட்டது. அப்புத்தி நன்மைதீமைகளை (பாவ புண்ணியங்களை) நேரே அழிக்கக்கூடியது என்று கூறப்படுகிறது.

கர்மயோகத்தைக் கடைப்பிடிப்பதால் வரும் புத்தித்தூய்மையினால் உண்டாகும் புத்தியை (ஞானத்தை) எப்பொழுது அடைய முடியும்? பதில் பின்வருமாறு:

**यदा ते मोहकलिलं बुद्धिर्व्यतितरिष्यति ।**
**तदा गन्तासि निर्वेदं श्रोतव्यस्य श्रुतस्य च ॥५२॥**

**யதா தே மோஹ - கலிலம் புத்திர் வ்யதி தரிஷ்யதி ।**
**ததா கந்தாஸி நிர்வேதம் ஶ்ரோதவ்யஸ்ய ஶ்ருதஸ்ய ச ॥ 52॥**

***எப்பொழுது உனது மனம் மோகம் என்னும் மயக்கத்தினைக் கடந்திடுமோ, அப்பொழுது கேட்கப்பட்டது, கேட்கப்போவது என்னும் இரண்டிலும் நீ வெறுப்பே கொள்வாய்.***

ஆத்மா, அநாத்மாக்களைப் பகுத்தறியும் அறிவைக் குழப்பி மனதினை விஷயங்களிடத்துச் செலுத்துகின்ற மோகம் என்னும் மயக்கத்தினை எப்பொழுது உனது புத்தி கடந்து செல்லுமோ, அதாவது தூய்மையடையுமோ அப்பொழுது நீ இதுவரைக் கேட்டதிலும், இனி கேட்கப் போவதிலும் பற்று வைக்க மாட்டாய். இதன் பொருள் உனக்கு (ஆத்மாவைப் பற்றிய வேத உபதேசங்களைத் தவிர பிறவற்றை) கேட்டதும், கேட்கப் போவதும் பயனற்றவையாகத் தோன்றும் என்பதாம்.

மோக மயக்கம் நீங்கி, ஆத்ம விவேகப் புத்தியைப் பெற்றவனாய்க் கர்மயோகத்தின் பயனால் விளையும் பரமயோகத்தினை (ஞான யோகத்தை) நீ எப்பொழுது எய்துவாய் என்றால், அதனைக் கேட்பாயாக :

**श्रुतिविप्रतिपन्ना ते यदा स्थास्यति निश्चला ।**
**समाधावचला बुद्धिस्तदा योगमवाप्स्यसि ॥५३॥**

**ஶ்ருதி - விப்ரதிபன்னா தே யதா ஸ்தாஸ்யதி நிஸ்சலா ।**
**ஸமாதாவ் அசலா புத்திஸ் ததா யோகம் அவாப்ஸ்யஸி ॥ 53॥**

***பற்பல கேள்விகளால் கலங்கியுள்ள உன் புத்தியானது எப்பொழுது ஆத்மாவினிடத்து அசைவின்றி நிற்குமோ அப்பொழுது நீ யோகத்தை அடைவாய்.***

பற்பல பயன்களையும், அவற்றைப் பெறுவதற்கானக் கருவிகளையும், அவற்றிற்கிடையேயுள்ளத் (பயன் மற்றும் கருவிகளுக்கிடையேயுள்ள) தொடர்புகளையும் விளக்கி, செயலுடை வாழ்க்கை மற்றும் செயலற்ற வாழ்க்கையினை உணர்த்தும் சாத்திர நூல்களின் கேள்விகளால் மயங்கியுள்ள உன் மனமானது எப்பொழுது ஐயமின்றியும், உறுதியுடனும் ஆத்மாவில் நிலைநிற்குமோ, அப்பொழுது நீ யோகத்தை அதாவது விவேக புத்தியாகிய சமாதி நிலையினை அடைவாய்.

கேள்வி கேட்பதற்குரிய சந்தர்ப்பம் வாய்த்தது கண்டு ஆத்ம ஞானம் எய்தியவனுடையத் தன்மை என்னவென்று அறியும் ஆவலில் அர்ஜுனன் கூறுகின்றான் :

अर्जुन उवाच

**स्थितप्रज्ञस्य का भाषा समाधिस्थस्य केशव ।**
**स्थितधी: किं प्रभाषेत किमासीत व्रजेत किम् ॥५४॥**

*அர்ஜுன உவாச*

**ஸ்தித - ப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதி - ஸ்தஸ்ய கேஸவ**
**ஸ்தித - தீ: கிம் ப்ரபாஷேத கிம் ஆஸீத வ்ரஜேத கிம் ॥ 54॥**

*அர்ஜுனன் கூறினான்:*

*கேசவா, உறுதி கொண்ட அறிவுடன் சமாதியில் நிலை நிற்போனின் தன்மைகளை என்னவென்று கூறுவது? ஸ்திர புத்தியுடையவன் என்ன சொல்வான்? எப்படியிருப்பான்? எவ்வாறு நடந்து கொள்வான்?*

'நான் பரப்பிரம்மமாக இருக்கிறேன்' என்னும், ஞானம் எய்தப் பெற்று சமாதியில் நிலை நிற்போனை எவ்வாறு இனம் காண்பது? பிறரால் இவன் எவ்வாறு பேசப்படுகிறான்? அவன் எப்படி இருப்பான்? எவ்வாறு நடப்பான்? இச்சுலோகத்தின் மூலம் ஞானம் எய்தப் பெற்றவனுடைய தன்மை என்னவென்று கேட்கப்படுகின்றது.

எவன் ஆரம்பித்திலிருந்தே கர்மங்களைத் துறந்து ஞானயோக மார்க்கத்தில் சென்றிருக்கிறானோ, எவன் கர்மங்களைத் துறவாது கர்ம யோக மார்க்கத்தில் சென்றிருக்கின்றானோ அவ்விருவர்க்கும், ஞானம் எய்தப் பெற்றவனுடையத் தன்மையும், அதற்கான சாதனமும் 2.55 லிருந்து அத்தியாயம் முடியும் வரையிலும் உபதேசிக்கப்படுகின்றன. ஏனெனில் முக்தி எய்தப் பெற்றவனுடையத் தன்மைகள் எவையோ, அவையே வேதாந்த நூல்களில் எங்கணும் சாதனங்களாக உபதேசிக்கப்படுகின்றன. இவையாவும் முயற்சியினால் சாதிக்கக் கூடியவையாதலின் முயற்சியினால் சாதிக்கக்கூடிய சாதனங்களும், தன்மைகளும் எவையோ, அவற்றைப் பகவான் கூறுகின்றார்:

श्री भगवानुवाच

**प्रजहाति यदा कामान्सर्वान्पार्थ मनोगतान् ।**
**आत्मन्येवात्मना तुष्ट: स्थितप्रज्ञस्तदोच्यते ॥५५॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் பார்த்த மனோ - கதான் ।**
**ஆத்மனி ஏவாத்மனா துஷ்ட: ஸ்தித - ப்ரஜ்ஞஸ் ததோச்யதே ॥ 55॥**

*ஸ்ரீ பகவான் கூறினார் :*

***பார்த்தா! ஒருவன் தன் மனதிலுள்ள இச்சைகள் அனைத்தையும் துறந்து, தன்னில் தான் மகிழ்ச்சியடைவானாகில், அப்போது அவன் உறுதியான புத்தியுடையவன் எனப்படுகிறான்.***

தனது உள்ளத்தில் குடிபுகுந்துள்ள அனைத்து வகையான இச்சைகளையும் முற்றிலும் துறந்து, புற உடைமைகளை நாடி ஓடாது, பரம் பொருளை உய்த்துணர்தல் என்னும் சாவா மருந்தென்னும் அமிர்தம் கிடைக்கப் பெற்றமையினால் மற்றையப் பொருள்களை மறுதலிக்கும் பொழுது ஒருவன் ஞானி எனப்படுகிறான். அதாவது ஆத்மா அநாத்மாக்களை ஆய்ந்தறியும் ஞானத்தில் உறுதியுடையவனாகிறான். பல்வேறு இச்சைகளும் நீங்கிய பின்னரும், இவ்வுடம்புடன் இருப்பதற்குக் காரணமானக் கர்மம் சிறிதளவு மீந்திருப்பதினால், ஞானத்தில் உறுதியுடையவனது நடத்தை, பித்தன், புத்தி சுவாதீனமில்லாதான் நடத்தை போல் இருக்கும் என்பதினால்தான் 'தானே தன்னில் மகிழ்ந்திருப்பவனாய்' என்று கூறுகின்றார். அதாவது மக்கள், செல்வம், உலகம் என்பவற்றிடம் பற்றினை முற்றும் துறந்தவனாய், ஆத்மாவினிடத்தே மகிழ்ந்து, ஆத்மாவோடு விளையாடுபவன், ஞானத்தில் உறுதியுடையவனாவான் என்று பொருளாகும்.

மேலும்,

**दुःखेष्वनुद्विग्नमनाः सुखेषु विगतस्पृहः ।**
**वीतरागभयक्रोधः स्थितधीर्मुनिरुच्यते ॥ ५६॥**

**து:கேஷ்வ அனுத்விக்ன - மனா: ஸுகேஷு விகத - ஸ்ப்ருஹ: ।**
**வீத - ராக - பய - க்ரோத: ஸ்தித - தீர் முனிர் உச்யதே ॥ 56॥**

***துன்பங்களில் மனம் அழிந்திடாதவனாகவும், இன்பங்களில் ஆசையற்றவனாகவும் பற்றும் பயமும் கோபமும் அற்றவனாய் இருப்பவன் ஞானத்தில் உறுதியுடைய முனிவன் எனப்படுகிறான்.***

ஆத்யாத்மிகம் முதலிய துன்பங்கள் வந்துற்ற பொழுது மனம் அழிந்து போகாமலும், இன்பங்கள் எய்தும் பொழுது அவற்றின் மீதான ஆசைகள், எரிபொருள் இடும்பொழுது நெருப்பு மிக்கு எரிவதுபோல் அதிகரிக்காமலும், அச்சமும் சினமும் தவிர்ந்தவன் எவனோ, அவனே ஸ்திதப் பிரக்ஞன், முனிவன், துறவி எனப்படுகிறான்.

அஃதன்றியும்,

यः सर्वत्रानभिस्नेहस्तत्तत्प्राप्य शुभाशुभम् ।
नाभिनन्दति न द्वेष्टि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥५७॥

ய: ஸர்வத்ரானபிஸ்நேஹஸ் தத் தத் ப்ராப்ய ஶுபாஶுபம்
நாபினந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ 57॥

*எவன் எப்போதும் பற்றற்றவனாய், நல்லதும் தீயதும் வரும்பொழுது மகிழ்ச்சியும் வெறுப்பும் கொள்வதில்லையோ அவனது ஞானம் உறுதியுடையதாகும்.*

உடலை ஓம்புவதில் கூட முனி என்பவன் பற்று வைப்பதில்லை. நன்மையும் தீமையும் எய்துமிடத்து அவன் களித்தாடுவதுமில்லை; துவண்டு வீழ்வதுமில்லை. இவ்வாறு மகிழ்ச்சியும், வெறுப்புமில்லாதவனுக்கு விவேகத்தினின்று பிறந்த ஞானமானது உறுதியுடையதாகிறது.

மேலும்,

यदा संहरते चायं कूर्मोऽङ्गानीव सर्वशः ।
इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥५८॥

யதா ஸம்ஹாரதே சாயம் கூர்மோ (அ)ங்கானீவ ஸர்வஶ: ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ 58॥

*ஆமை தன் அவயங்களை ஒட்டினுள் இழுத்துக் கொள்ளுமாறு போல் எவனொருவன், எப்பொழுது எல்லாவிதமான புலனுகர்ச்சிப் பொருட்களிலிருந்தும் தனது புலன்களை மீட்டுக் கொள்கின்றானோ அப்பொழுது அவனுடைய ஞானம் உறுதியுடையதாகும்.*

அச்சத்தின் காரணமாக ஆமை எவ்வாறு தனது அங்கங்களை நாற்புறத்தினின்றும் தனது ஓட்டுக்குள் ஒடுக்கி மறைத்துக் கொள்கின்றதோ, அவ்வாறு ஞான மார்க்கத்தினை மேற்கொண்டவன். அனைத்து வகையானப் புலனுகர்ச்சிப் பொருட்களினின்றும் தனது புலன்களை மீட்டுக் கொள்கின்றான்.

அப்படியெனில் புலனுகர்ச்சிப் பொருட்களை நுகர இயலாதப் பிணியாளன் ஒருவனும் தனது புலன்களைப் புலனுகர்ச்சிப் பொருட்களினின்று மீட்டுக் கொள்கின்றானோ என்றால், அவற்றின் மீது அவன் கொண்ட சுவை ஒடுங்குவதில்லை என்பது பதிலாகும். அச்சுவை எங்ஙனம் ஒடுங்கும்? - எனில், பதில் கூறுவோம்.

विषया विनिवर्तन्ते निराहारस्य देहिनः ।
रसवर्जं रसोऽप्यस्य परं दृष्ट्वा निवर्तते ॥५९॥

**விஷயா விநிவர்தந்தே நிராஹாரஸ்ய தேஹினா: ।**
**ரஸ - வர்ஜம் ரஸோ (அ)பி அஸ்ய பரம்த்ருஷ்ட்வா நிவர்த்ததே ॥ 59॥**

***நுகர் பொருள் இல்லாத மனிதனிடம் அப்பொருள்கள் இல்லாதிருக்குமே ஒழிய, அவற்றின் மீதான சுவை இருக்கும். அச்சுவையும் பரம்பொருளைக் காண்பானாயின் தீர்ந்துவிடும்.***

'விஷய:' என்னும் சொல் சாதாரணமாகப் புலனுகர்ச்சிப் பொருட்களைக் குறிப்பதாயினும் இங்கு அது புலன்களைக் குறிப்பிடுகின்றது. மதியற்ற ஒருவன் கூட கடும் விரதம் மேற்கொள்கையில் புலனுகர்ச்சிப் பொருட்களிலிருந்து விலகியே இருக்கின்றான், எனினும் அப்பொருட்களின் மீதான சுவை (ரஸம்) அவனிடம் தீர்ந்து போவதில்லை. ரஸம் என்னும் வார்த்தை 'ஸ்வரஸமாகப் புகுந்தவன்' ரஸிகன், ரஸஜ்ஞன் என்று காணப்படுவதிலிருந்து அது சுவை அல்லது நாட்டம் என்னும் பொருளிலேயே பயன்படுத்தப்படுகின்றது. நுண்மையாக ஒட்டியிருக்கும் அச்சுவையுங் கூட பரமமெய்ப் பொருளைக் கண்டு, 'நானே அது' என்று உணரும் பக்தனிடம் இல்லாதொழிகின்றது. அதாவது புலனுகர்ச்சிப் பொருட்களின் மீதான உணர்வு வேரோடும், வேரடி மண்ணோடும் அற்றுப் போகின்றது என்பதாகும். நல்லறிவு இல்லாவிடத்துப் புலனுகர்ச்சிப் பொருட்களின் மீதான சுவை தீர்வதில்லை. ஆகையினால், நல்லறிவு என்னும் ஞானத்தில் உறுதியுடன் நிற்றல் வேண்டும்.

நல்லறிவு என்னும் ஞானத்தில் உறுதியுடன் நிற்கக் கருதுபவன் முதலில் தனது புலன்களை அடக்குதல் வேண்டும். அவை அடக்கப்படவில்லையெனில் ஊறு செய்யும். அதனால் பகவான் கூறுகிறார்:

**यततो ह्यपि कौन्तेय पुरुषस्य विपश्चितः ।**
**इन्द्रियाणि प्रमाथीनि हरन्ति प्रसभं मनः ॥ ६० ॥**

**யததோ ஹி அபி கௌந்தேய புருஷஸ்ய விபஸ்சித: ।**
**இந்த்ரியாணி ப்ரமாதீனி ஹரந்தி ப்ரஸபம் மன: ॥ 60॥**

***குந்தி மைந்த! முயற்சியுடையப் புத்திமானிடத்தில் கூட, புலன்கள் கிளர்ச்சியுறும் பொழுது அவனது மனதையும் வலியக் கவர்ந்து செல்கின்றன.***

புலன்கள் ஆபத்தானவை. புலனுகர்ச்சிப் பொருட்களின் மீது நாட்டங் கொண்ட மனிதனின் மனதினை அவை கொந்தளிக்கச் செய்கின்றன. இவ்வாறு அவனது மனதினைக் கொந்தளிக்கச் செய்த அப்புலன்கள் அவன் கண்முன்னே, தெளிவுடைய அவனது மனதினையும் வலியக் கவர்ந்து செல்கின்றன.

அதனால்,

**तानि सर्वाणि संयम्य युक्त आसीत मत्परः ।**
**वशे हि यस्येन्द्रियाणि तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥ ६१ ॥**

**தானி ஸர்வாணி ஸம்யம்ய யுக்த ஆஸீத மத்-பர: ।**
**வஶே ஹி யஸ்யேந்த்ரியாணி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ 61॥**

*அவை அனைத்தையும் நன்றாக அடக்கி என்னைச் சார்ந்து என்னி டத்தில் நிலைநிற்றல் வேண்டும். புலன்களைத் தன்வயப்படுத்துபவன் எவனோ, அவனது ஞானம் உறுதியுடையதாகும்.*

அப்புலன்கள் அனைத்தையும் தன் வயப்படுத்தி அமைதியுடன் இருந்து அனைத்தினுள்ளும் வீற்றிருக்கும் ஆத்மாவாம் வாசுதேவனாகிய என்னிடத்தில் அவன் நிலைநிற்றல் வேண்டும். அதாவது 'நான் அவரினின்று வேறு அல்லேன்' என்று எண்ணி இருத்தல் வேண்டும். இவ்வாறு அமர்ந்து புலன்களைத் தனது கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்த பக்தனின் ஞானம் உறுதியுடையதாகும்.

இப்போது பகவான், வெற்றி பெறாதவனின் கேடுகள் அனைத்திற்கும் ஊற்றுக்கண் எதுவென்று கூறுகிறார்:

**ध्यायतो विषयान्पुंस: सङ्गस्तेषूपजायते ।**
**सङ्गात्सञ्जायते काम: कामात्क्रोधोऽभिजायते ॥ ६२॥**

**த்யாயதோ விஷயான் பும்ஸ: ஸங்கஸ் தேஷூபஜாயதே ।**
**ஸங்காத் ஸஞ்ஜாயதே காம: காமாத் க்ரோதோ (அ)பிஜாயதே ॥ 62॥**

*புலனுகர்ச்சிப் பொருட்களை நினைக்கும் ஒருவனுக்கு அவற்றின் மேல் பற்று உண்டாகிறது. அப்பற்றினின்று இச்சை பிறக்கின்றது; இச்சையினின்று சினம் உண்டாகின்றது.*

புலனுகர்ச்சிப் பொருட்களின் மீதான கவர்ச்சி, எழில் போன்றவற்றை நினைக்கும் பொழுது ஒருவனுக்கு அப்பொருட்களின் மீது பற்று உண்டாகின்றது. ஏதோவொரு காரணத்தினால் அப்பற்று நிறைவேறாதபோது அதிலிருந்து ஆத்திரம் பிறக்கின்றது.

**क्रोधाद्भवति सम्मोह: सम्मोहात्स्मृतिविभ्रम: ।**
**स्मृतिभ्रंशाद् बुद्धिनाशो बुद्धिनाशात्प्रणश्यति ॥ ६३॥**

**க்ரோதாத் பவதி ஸம்மோஹ: ஸம்மோஹாத் ஸ்ம்ருதி - விப்ரம: ।**
**ஸ்ம்ருதி - ப்ரம்ஶாத் புத்தி - நாஶோ புத்தி - நாஶாத் ப்ரணஶ்யதி॥63॥**

*சினத்தால் மயக்கம்; மயக்கத்தால் நினைவுத் தவறுதல்; நினைவுத் தவறுதலால் புத்தி நாசம்; புத்தி நாசத்தால் அழிகிறான்.*

சினத்தினின்று செய்யத்தக்கது எது, செய்யத்தகாதது எது என்னும் தெளிவின்மையாகிய மயக்கம் பிறக்கின்றது; மதிமயக்கத்திற் காட்பட்டவன்

தனது குருவையும் கூட அவமதித்திருக்கின்றானன்றோ. மயக்கதினின்று நினைவுத் தவறுதல் பிறக்கின்றது. சாத்திரம், ஆச்சார்யன் போன்றோரின் நல்லுபதேசங்களால் அவன் மனம் நிரப்பப்பட்டிருந்த போதிலும், சினத்தினால் உண்டான மயக்கம் மனதின் மீது கவியும்போது அவ்வுபதேசங்கள் அவன் நினைவிற்கு எட்டுவதில்லை. அந்த நினைவுத் தவறுதலினின்று நன்மை தீமைகளைப் பகுத்தறிய முடியாத அறிவுக் கேடு பிறக்கின்றது. அறிவுக் கேட்டினால் அவன் முற்றும் அழிந்து போகின்றான். நன்மை தீமைகளைப் பகுத்தறியும் திறன் இருக்கும் வரையிலேயே ஒருவன் மனிதன் ஆவான். அத்திறன் இழந்தவனாயின் அவன் அழிந்தவனாவான். ஆகையால் அறிவுக் கேட்டினால் ஒருவன் அழிந்துவிடுவதோடு, வாழ்க்கை லட்சியத்தை அடைதற்கும் தகுதியற்றவனாகிறான்.

புலனுகர்ச்சிப் பொருட்களை நினைப்பதே தீமைகட்கெல்லாம் காரணம் என்று கூறப்பட்டது. இப்போது முக்திக்கு (மோட்சத்திற்கு) வழி பின்வருமாறு உரைக்கப்படுகிறது.

**रागद्वेषवियुक्तैस्तु विषयानिन्द्रियैश्चरन् ।**
**आत्मवश्यैर्विधेयात्मा प्रसादमधिगच्छति ॥ ६४॥**

**ராக - த்வேஷ - வியுக்தைஸ்து விஷயான் இந்த்ரியைஸ் சரன் ।**
**ஆத்ம - வஸ்யைர் விதேயாத்மா ப்ரஸாதம் அதிகச்சதி ॥ 64॥**

***புலனடக்கம் உடையவனோ, விருப்பு வெறுப்புகள் இன்றி, தனக்குக் கட்டுப்பட்டப் புலன்களினால், புலனுகர்ச்சிப் பொருட்களை அணுகி அமைதியடைகிறான்.***

புலன்களின் செயல்கள், இயற்கையாக விருப்பு வெறுப்புக்களை அடிப்படையாகக் கொண்டவையாகும். இனி முக்தியடைய விரும்புபவன், மெய் வாய் முதலிய புலன்களினால் தவிர்ப்பதற்கரிய உணவு முதலிய நுகர்ச்சிப் பொருட்களை நாடி தனது விருப்பத்தின்படி செயல்படும் அந்தக் கரணத்தைப் (புத்தியை) பெற்று அமைதி, கலங்காதிருத்தல், நிலைபெற்றத் தன்மை, போன்றவற்றை அடைகிறான். அமைதியுண்டானால் என்ன நேரும் என்பதற்குப் பதில் பின்வருமாறு:

**प्रसादे सर्वदु:खानां हानिरस्योपजायते ।**
**प्रसन्नचेतसो ह्याशु बुद्धि: पर्यवतिष्ठते ॥ ६५॥**

**ப்ரஸாதே ஸர்வ - து:க்கானாம் ஹானிர் அஸ்யோபஜாயதே ।**
**ப்ரஸன்ன - சேதஸோ ஹி ஆஸு புத்தி: பர்யவதிஷ்டதே ॥ 65॥**

***அமைதி நிலையில் மனிதனுக்கு எல்லாத் துன்பங்களும் அழிந்து போகின்றன. மனம் அமைதி பெற்றபின் ஒருவனுடைய புத்தி விரைவாக நிலைப்படுகின்றது.***

அமைதி பெற்றதும், ஒரு பக்தனுக்கு அவனது உடல், மனம், தொடர்புடைய அனைத்துத் துன்பங்களும் அழிந்து போகின்றன. இக்காரணத்தினால் மனத்தூய்மையுடைய மனிதனின் புத்தியானது ஆகாயத்தைப் போல் எங்கும் பரந்து விரிகின்றது. அதாவது அது ஆத்மஸ்வரூபத்தில் நிலைநிற்கின்றது என்று பொருளாகும்.

இவ்வாறு தெளிந்த மனமும், நிலைத்த புத்தியும் உடையவன் தனது குறிக்கோளினை எய்துகிறான். விருப்பு வெறுப்புக்களற்றப் புலன்களால் சாத்திரத்திற்குப் புறம்பாகாத தவிர்க்க முடியாத (உணவு முதலிய) நுகர்ச்சிப் பொருட்களை நாடவேண்டும்.

மனத் தெளிவு இவ்வாறு புகழப்படுகின்றது.

**नास्ति बुद्धिरयुक्तस्य न चायुक्तस्य भावना ।**
**न चाभावयतः शान्तिरशान्तस्य कुतः सुखम् ॥ ६६॥**

**நாஸ்தி புத்திர் அயுக்தஸ்ய ந சாயுக்தஸ்ய பாவனா ।**
**ந சாபாவயத: ஶாந்திர் அஶாந்தஸ்ய குத: ஸுகம் ॥ 66॥**

*உறுதியற்றவனுக்கு புத்தியில்லை. உறுதியற்றவனுக்கு மனோ பாவனையில்லை. மனோபாவனையற்றவனுக்கு அமைதியில்லை. அமைதியற்றவன் எவ்வாறு ஆனந்தம் பெறக்கூடும்?*

மனதில் உறுதியில்லாதவனுக்கு ஆத்ம ஸ்வரூபத்தைப் பற்றிய அறிவு உண்டாகாது. உறுதியில்லாதவனுக்கு ஆத்மாவை அறிவதிலே ஊக்கமும் உண்டாகாது. ஆத்மாவை அறிவதிலே ஊக்கமில்லாதவனுக்கு அமைதி உண்டாவதில்லை. அமைதியில்லாதவனுக்கு ஆனந்தம் ஏது? புலன்கள் தமது புலனின்ப ஆசைகளை விட்டு நீங்குவது ஆனந்தமாகுமேயன்றி புலனுகர்ச்சிப் பொருட்களின் மீதான ஆசையன்று. உண்மையில் அது துன்பமாகும். ஆசையுள்ள விடத்து ஆனந்தமில்லை. ஏன் அதன் அடையாளம் கூட இல்லை.

உறுதியற்றவனுக்கு ஏன் ஞானம் உண்டாவதில்லை? - பதில் பின்வருமாறு:

**इन्द्रियाणां हि चरतां यन्मनोऽनुविधीयते ।**
**तदस्य हरति प्रज्ञां वायुर्नावमिवाम्भसि ॥ ६७॥**

**இந்த்ரியாணாம் ஹி சரதாம் யன் மனோ (அ)நுவிதீயதே ।**
**தத் அஸ்ய ஹரதி ப்ரஜ்ஞாம் வாயுர் நாவம் இவாம்பஸி ॥ 67॥**

***புலன்கள் கிளர்ச்சியுறுகையில் அவற்றைப் பின்பற்றிச் செல்லும் ஒருவனது மனம், கடலில் நாவாயைக் காற்று அடித்துக் கொண்டு போவதுபோல், அவனது அறிவை அடித்துக் கொண்டு போய்விடும்.***

தத்தம் புலனுகர்ச்சிப் பொருட்களில் ஈடுபட்டிருக்கும் புலன்களைப் பின்பற்றிச் செல்லும் மனமானது, புலன்களின் பல்வேறு புலனுகர்ச்சிப் பொருட்களின் மீதான நினைவில் ஆழ்ந்து, ஆத்மா அநாத்மாக்களை ஆய்ந்து ஒரு பக்தன் பெறும் அறிவை, அழிக்கின்றது. எவ்வாறு?

கடலில், மாலுமிகள் கப்பலைச் செலுத்தும் பாதையினின்று விலக்கி, சூறைக்காற்று அக்கப்பலை வேறு திசையில் அடித்துச் செல்வது போன்று மனமானது ஆத்மாவில் நிலைகொண்டப் பக்தனின் அறிவை, புலனுகர்ச்சிப் பொருட்களை நோக்கிச் செலுத்துகின்றது.

'முயற்சியுடையப் புத்திமானிடத்ததில் கூட' (2.60) என்று தொடங்கிக் கூறிய கருத்திற்குப் பல்வேறு சான்றுகளைக் கூறி அதனை நிலைநாட்டுகின்றார்.

**तस्माद्यस्य महाबाहो निगृहीतानि सर्वशः ।**
**इन्द्रियाणीन्द्रियार्थेभ्यस्तस्य प्रज्ञा प्रतिष्ठिता ॥६८॥**

**தஸ்மாத் யஸ்ய மஹா-பாஹோ நிக்ருஹீதானி ஸர்வஶ: ।**
**இந்த்ரியாணிந்த்ரியார்த்தேப்யஸ் தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ॥ 68॥**

***ஆதலால் பெருந்தோள! எவனுடைய புலன்கள் புலனுகர்ச்சிப் பொருட்களினின்று முற்றிலும் அடக்கப்பட்டனவோ, அவனுடைய ஞானம் உறுதியுடையதாகும்.***

புலன்கள் புலனுகர்ச்சிப் பொருட்களைத் துய்ப்பதினால் வரும் தீமைகள் எடுத்துக் காட்டப்பட்டன. அதனால் (ஓசை முதலிய) புலனுகர்ச்சிப் பொருட்களினின்று முற்றிலும் அடக்கப்பட்ட புலன்களுடையப் பக்தனின் ஞானம் உறுதியுடையதாகும்.

பகுத்தறியும் அறிவும்,. ஞானத்தில் உறுதியும் உடையவன அனுபவிக்கும் லௌகீக, வைதீக விஷயங்கள் அவித்யை எனும் அறியாமை நீங்கிய உடனே அவனிடமிருந்து விலகிவிடுகின்றன. காரணம் அவ்விஷயங்கள் அறியாமையின் விளைவு ஆதலினால். மேலும் அறியாமை ஞானத்திற்குப் புறம்பானதினால், ஞானம் எய்தப் பெற்றவுடன், அறியாமை நீங்கிவிடுகின்றது. இதனைத் தெளிவுபடுத்த பகவான் மேலும் கூறுகிறார்:

**या निशा सर्वभूतानां तस्यां जागर्ति संयमी ।**
**यस्यां जाग्रति भूतानि सा निशा पश्यतो मुनेः ॥६९॥**

**யா நிஶா ஸர்வ-பூதானாம் தஸ்யாம் ஜாகர்தி ஸம்யமீ**
**யஸ்யாம் ஜாக்ரதி பூதானி ஸா நிஶா பஶ்யதோ முனே: ॥ 69॥**

*எல்லா உயிர்களுக்கும் இரவாகிய நேரத்தில் மனதினை அடக்கிய முனிவன் விழித்திருக்கிறான். மற்ற உயிர்கள் விழித்திருக்கும் நேரம் எதுவோ, அது உண்மை உணர்ந்த முனிவனுக்கு இரவாகும்.*

அனைத்து உயிர்களுக்கும் பரம மெய்ப் பொருளானது இரவாக இருக்கின்றது. இரவு என்பது தமோ குணமுடையது. ஆதலினால் அது குழப்பத்திற்குக் காரணமாகும். உறுதியுடைய ஞானம் எவனிடம் உள்ளதோ, அவனுக்கே பரமமெய்ப் பொருள் எய்தற்கெளியதாக இருக்கின்றது. பிற உயிர்களுக்குப் பகற்பொழுது என்பது, இரவில் அலைந்து திரியும் உயிர்களுக்கு இரவாக இருப்பதுபோல், அவ்விரவு விலங்குகளை ஒத்த அஞ்ஞானிகளுக்கு பரமமெய்ப்பொருள் என்பது இரவுப் பொழுதாக இருக்கின்றது. அதாவது அதனிடத்துத் தமது மனங்களை வைக்காதவர்களுக்கு அது எய்தப் பெறுவதில்லை. மனம் அடங்கி, புலன்களை வென்று அஞ்ஞான உறக்கம் தெளிந்தவன் அப்பரம மெய்ப் பொருளிடத்து விழித்துக் கொண்டிருக்கிறான். உணரப்படுவதும், உணர்வதுமான பேதமுடைய எந்த அஞ்ஞான இரவிலே உறங்கிக் கொண்டேயிருக்கும் உயிர்கள் விழித்திருக்கின்றனவென்று கூறப்படுகின்றனவோ, எந்த அஞ்ஞான இரவிலே அவை உறங்கினவை போலக் கனவு காண்கின்றனவோ அது அஞ்ஞான வடிவமாதலினால் பரம மெய்ப் பொருளைக் காணும் முனிவனுக்கு இரவு என்பதாம். (முற்றும் துறந்தவனுக்கு இவ்வுலக விஷயங்கள் கனவினை ஒத்தது என்பது கருத்து)

ஆகையால், அஞ்ஞான நிலையில்தான் கர்மங்கள் விதிக்கப்படுகின்றனவே அன்றி ஞானநிலையில் அன்று. செங்கதிர் எழ இரவின் இருள் சென்றொழிவது போல், ஞானம் எழ அஞ்ஞானம் ஒழிகின்றது. ஞான விடியலுக்கு முன்பு அஞ்ஞானம் தன்னை - செயல், வழிவகை, பலன் - என்னும பல்வேறு வடிவங்களில் வெளிப்படுத்தி, அனைத்துச் செயல்களுக்கும் காரணமாகிறது. இச்செயல்கள் அனைத்தும் பிரமாணமன்று என்று தெரியவரும் பொழுது அஞ்ஞானம் தனது செயற்பாட்டினை நிறுத்திக் கொள்கிறது. தான் செய்யும் செயல் வேதங்களினால் தனக்கு விதிக்கப்பட்டது என்னும் எண்ணத்தில்தான் ஒருவன் அச்செயலைச் செய்கின்றானேயன்றி, இதெல்லாம் இரவு போல் அஞ்ஞானம்தான் என்று கருதி அவன் செயலைச் செய்வதில்லை. வேறுபாடுடைய இவ்வுலகத் தோற்றமெல்லாம் இரவு போல் அஞ்ஞானமே என்னும் ஞானம் எவன் எய்தப் பெறுகின்றானோ, அந்த ஆத்மஞானிக்கு அனைத்துச் செயல்களையும் துறத்தலில்தான் அதிகாரம் உண்டேயொழிய செய்வதில் அன்று. இதனைப் பகவான் 'பிரம்மத்திலே புத்தியை நாட்டி அதுவே தாமாய்' (5.17) என்று தொடங்கும் சுலோகத்தில் ஞானவழியில் செல்லவே முனிவனுக்கு அதிகாரம் என்று தெளிவுபடுத்துவார்.

மறுப்பு: ஞானவழியினை மேற்கொள்ளச் செய்யும் விதி, இல்லாதிருந்தால், அதனை ஒருவன் மேற்கொள்வது சாத்தியமாகாதன்றோ....

பதில் : ஆத்மஞானம் என்பது தன்னைப் பற்றிய அறிவு ஆதலின் மேற்படி மறுப்பு செல்லாது. ஒருவன் ஆத்மாவாகவே இருப்பதினால் அவனை ஆத்மாவினிடத்துச் செலுத்துவதற்காக விதி என்று ஒன்று தேவை

யில்லையன்றோ மேலும் பிரமாணங்கள் எல்லாம் பிரமாணங்கள் என்று அழைக்கப்படுவதற்குக் காரணமே அவை, ஆத்ம ஞானத்திற்கு நம்மை இட்டுச் செல்வதினால்தான். ஆத்ம ஞானம் எய்தப்பெற்ற பின்னர் பிரமாணத்திற்கும் (அறிதற்கானக் கருவிக்கும்) பிரமேயத்திற்கும் (அறியப்படும் பொருளுக்கும்) இடையிலுள்ள வேறுபாட்டினைப் பற்றிய விவாதம் நீண்டநாள் நிலைப்பதில்லை. ஏனெனில் இறுதிப் பிரமாணமாக இருக்கின்ற வேதமானது ஒரு பொருளை அறிவதற்குக் கர்த்தாவாக இருக்கின்றது (பிரமாதா) என்பதை ஆத்மாவுக்கு மறுக்கின்றது. அப்படி மறுக்கும் பொழுது கனவில் கண்டது விழிப்பு நிலையில் இல்லாதொழிவது போல வேதமும் பிரமாணம் ஆவதில்லை. ஒரு பொருளை ஒருவன் துல்லியமாக அறிந்த பின்பு அதனை அறியப்புகுமாறு அவனை மீண்டும் புகுத்தும் பிரமாணம் ஒன்றுமில்லை என்பது நடைமுறை அனுபவமாகும். ஆகையால் ஆத்மாவை அறிபவனுக்குக் கர்மத்தில் (செயலைச் செய்வதில்) அதிகாரமில்லை என்பது பெறப்பட்டது.

ஆசை அறுத்து, ஞானத்தில் நிலைநின்ற பக்தனுக்குத் தான், முக்தி கைகூடுமேயன்றி, புலனுகர்ச்சிப் பொருட்களின் மீதான ஆசையினைத் துறக்காதவனுக்கு அன்று. இதனைப் பகவான் உறுதி செய்கிறார் :

**आपूर्यमाणमचलप्रतिष्ठं- समुद्रमापः प्रविशन्ति यद्वत् ।**
**तद्वत्कामा यं प्रविशन्ति सर्वे स शान्तिमाप्नोति न**
**कामकामी ॥ ७०॥**

**அபூர்யமாணம் அசல - ப்ரதிஷ்டம் ஸமுத்ரம் ஆப: ப்ரவிஶந்தி**
**யத்வத் ।**
**தத்வத் காமா யம் ப்ரவிஶந்திஸர்வே ஸ ஶாந்திம் ஆப்னோதி**
**ந காம காமீ ॥ 70॥**

***எங்கும் நிரம்பி, நிலைகுலையாதிருக்கும் சமுத்திரத்தை நீர்த் தொகுதிகள் எவ்வாறு அடைகின்றனவோ, அதுபோல் ஆசைகள் எல்லாம் எவனை அடைகின்றனவோ, அவன் அமைதி அடைகின்றான், ஆசைகளைப் பின்பற்றுபவன் அடைவதில்லை.***

எப்புறமும் நீர் நிரம்பியதாய், மாறா நிலையுடையதாய், வேறு பாடற்றதாய், தன் நிலையில் நிற்கும் சமுத்திரத்தை பல்வேறு நதிகள் வந்து புகுந்தபோதிலும் அது எந்தவித மாற்றமுமின்றி அமைதியாக இருக்கின்றது. அதுபோல் பல்வகைப்பட்ட ஆசைகளும் புலனுகர்ச்சிப் பொருட்களின் முன்பாக ஒரு முனிவனை எந்தவிதமான மாற்றத்திற்கும் ஆளாக்காது புகுகின்றனவோ, அதாவது எந்த முனிவனைத் தம்வசப்படுத்த முடியாது ஆத்மாவினிடத்திலேயே ஒடுங்குகின்றனவோ, அந்த முனிவன், அமைதியை அதாவது முக்தியைப் பெறுகின்றான். புலனுகர்ச்சிப் பொருட்களை விரும்புபவன் முக்தியடைவதில்லை என்று பொருள். இவ்வாறு இருப்பதினால்,

विहाय कामान्यः सर्वान्पुमांश्चरति निःस्पृहः ।
निर्ममो निरहङ्कारः स शान्तिमधिगच्छति ॥७१॥

**விஹாய காமான் ய: ஸர்வான் புமாம்ஶ் சரதி நி:ஸ்ப்ருஹ: ।**
**நிர்மமோ நிரஹங்கார: ஸஶாந்திம் அதிகச் சதி ॥ 71॥**

*எவனொருவன் எல்லா ஆசைகளையும் துறந்து பற்றற்றவனாய் 'நான்' 'எனது' என்பதற்றவனாய் திரிகின்றானோ அவன் அமைதி யடைகிறான்.*

உயிர் வாழ்வதற்குத் தேவையான செய்கைகளைத் தவிரப் பிற செய்கைகளைத் தவிர்த்தும், உடலைப் பேணுவதில் கூடப் பற்றின்றி அனைத்துப் பற்றுக்களையும் துறந்தும், யான், எனது என்பதற்றும், கல்வி கேள்விகளால் தன்னையே வியக்காத ஆணவமற்றும் இருக்கும் முனிவன் எவனோ அவன் ஞானத்தில் உறுதிகொண்டு பிரம்மத்தை உணர்ந்தவனாய் பௌதீக வாழ்க்கைத் துன்பங்களெல்லாம் நீங்குதலாகிய நிர்வாணம் என்னும் சாந்தியை, (அமைதியை) முக்தியை அடைகின்றான். அதாவது பிரம்மமாகவே ஆகின்றான் என்பது பொருள்.

இந்த ஞானவழியானது பின்வருமாறு போற்றப்படுகின்றது :

एषा ब्राह्मी स्थितिः पार्थ नैनां प्राप्य विमुह्यति ।
स्थित्वास्यामन्तकालेऽपि ब्रह्मनिर्वाणमृच्छति ॥७२॥

**ஏஷா ப்ராஹ்மீ ஸ்திதி: பார்த்த நைனாம் ப்ராப்ய விமுஹ்யதி ।**
**ஸ்தித்வாஸ்யாம் அந்த - காலே (அ)பி ப்ரஹ்ம - நிர்வாணம் ருச்சதி ॥ 72॥**

*பார்த்தா, இது பிரம்ம நிலையாகும். இதனை அடையப் பெற்று ஒருவன் மயக்கம் எய்துவதில்லை. இறுதிக் காலத்திலும் கூட இதிலே நிலைநின்று அவன் பிரம்மானந்தத்தினை எய்துகிறான்.*

மேற்கூறியது பிரம்மத்தைப் பற்றிய நிலை, அதாவது அனைத்தையும் துறந்து பிரம்ம வடிவமாகவே நிற்றலென்பது. ஓ! பார்த்தா, இந்த நிலையைப் பெற்று எவனும் மயக்கம் எய்துவதில்லை. பிரம்மத்தைப் பற்றிய இந்த நிலையில் ஒருவன் இறுதி வரையில் இருந்தானென்றால் அவன் பிரம்மானந்தமாகிய முக்தியை அடைகிறான். அதனால் எவன் பிரம்மச்சரியத்திலிருந்தே அனைத்தையும் துறந்து பிரம்மத்திலேயே நிலைநிற்கின்றானோ அவன் பிரம்மானந்தத்தைப் பெறுவது பற்றி எடுத்துரைக்கவும் வேண்டுமோ?

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில், உபநிஷத்தும், பிரம்மவித்தையும் யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் 'சாங்கிய யோகம்' என்னும் இரண்டாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

## அத்யாயம் - மூன்று

## கர்மயோகம்

பிரவிருத்தி, நிவிருத்தி என்பதான செயலைச் செய்தல், செயலைத்துறத்தல் என்னும் இரண்டு மார்க்கங்கள், கீதா சாத்திரத்தின் இரண்டாம் அத்தியாயத்தில் யோகபுத்தி மற்றும் சாங்கிய புத்தி என்று பகவனாவால் உபதேசிக்கப்பட்டன. அவற்றுள் 2.55 முதல் அததியாயத்தின் இறுதிவரையில், சாங்கிய புத்தியுடையவர்க்கு துறவு அவசியமென்றும், அம்மார்க்கத்தினைப் பின்பற்றுவதால், அதனைப் பின்பற்றுவோரின் குறிக்கோள் எய்தப்படும் என்றும் பகவானால் பரிந்துரைக்கப்பட்டது (2.72). அர்ஜுனனுக்கும் அவர், யோகபுத்தியின் அடிப்படையில் "கர்மத்திலேதான் உனக்கு அதிகாரம், ............. கர்மத்துறவில் நீ பற்றுவைக்கக் கூடாது" (2.47) என்று கர்மத்தைச் செய்ய வேண்டுமென உபதேசித்தார். ஆனால் அதனால் மட்டுமே உயர்ந்த நன்மையினைப் (முக்தியை) பெறமுடியும் என்று அவர் கூறவில்லை. இதனைக் கண்டு திகைத்த அர்ஜுனன் பகவானிடம் (3.1,2) ஒரு சில வினாக்களை எழுப்புகிறான்.

"எது நன்மை (முக்தி) பயப்பதற்குரிய சரியான மார்க்கமோ அந்த சாங்கிய புத்தியை கற்றவர்க்கு உபதேசித்து, பல தீமைகள் உடையதென்று நன்கு தெரிந்ததும், வழிவழியாகவேனும் நன்மை கைகூடும் என்னும் பலன் உறுதியில்லாததுமான கர்மபுத்தியில் பகவான் என்னை ஏன் புகுத்தல் வேண்டும்?" என்று அர்ஜுனன் திகைத்ததுப் பொருத்தமுடைத்தே. அதனால்தான் "கர்மயோகமானது" (3.1) என்று தொடங்கி அர்ஜுனன் கேட்கும் கேள்வி அதற்கேற்ப உள்ளது. ஞானம், கர்மம் இவற்றின் வேறுபாடு பற்றி எடுத்துரைக்கும் இவ்வத்தியாயத்தில் அர்ஜுனனின் கேள்விக்கு பகவான் விளக்கமளித்திருக்கிறார்.

ஆனால், சிலர் அர்ஜுனனின் கேள்விக்கு வேறொரு பொருள் கற்பித்து, அக்கேள்விக்கு பகவான் அளித்த பதில் நேர்மாறானது என்று விளக்கம் அளிக்கின்றனர். மேலும் அவர்கள் தமது முன்னுரையில், கீதையின் பொருளை எவ்வாறு ஆய்ந்தனரோ அதற்கு நேர்மாறாக இந்த மூன்றாம் அத்தியாயத்தின் தொடக்கத்தில் உள்ள கேள்விபதிலை ஆய்வு செய்கின்றனர். எங்ஙனம்? — அவர்தம் முன்னுரையில் அனைத்துப் பிரிவினர்க்கும் ஞானம், கர்மம் என்னும் இவ்விரண்டின் இணைப்பும் உரியது என்று முதலில் கூறப்பட்டது. பின்னர், வேதங்களினால், உயிர்வாழ்க்கை முழுவதற்குமாக விதிக்கப்பட்டக் கர்மங்களைத் துறந்து, ஞானம் ஒன்றினால் மட்டுமே முக்தி கிடைக்கும் என்பது முற்றிலும் மறுக்கப்பட்டதென்று சிறப்பித்துக் கூறப்பட்டது. ஆனால்

இம்மூன்றாம் அத்தியாயத்திலோ பகவான் ஞானம், கர்மம் என்றும் இரண்டினுள் ஏதாவது ஒன்றினையே மேற்கொள்ள வேண்டுமென்று கூறுகின்றார். அத்துடன், வேதங்களினால் உயிர்வாழ்க்கை முழுவதற்குமாகக் கூறப்பட்டக் கர்மங்களைத் துறப்பதும் கூறப்படுகின்றது. இத்தகைய முரண்பட்டக் கருத்துக்களை பகவான் கூறுவதோ அல்லது பக்தன் ஏற்றுக்கொள்வதோ எங்ஙனம் சாத்தியமாகும்?

அவ்விளக்க நூல்வல்லார் அம்முரண்பாட்டிற்கு இவ்வாறு விளக்கமளிக்கலாம் — "சுருதிஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டக் கர்மங்களைத் துறந்து ஞானமொன்றினாலேயே முக்தி கிடைக்காதென்று மறுக்கப்படுவது கிரஹஸ்தாச்ரமத்தை (இல்லறத்தை) சேர்ந்தவர்களுக்கேயன்றி பிற ஆஸ்ரமத்தார்க்கு அன்று." மேற்கூறிய விளக்கமும் முரணுடைத்ததே. எவ்வாறு? சமுதாயத்தின் எல்லா பிரிவினர்க்கும் ஞானம், கர்மம் என்னும் இரண்டின் இணைப்பும் கீதையில் உறுதி செய்யப்பட்டிருக்கிறது என்று முன்னுரையில் கூறிவிட்டுப் பின்னர் அதற்கு மாறாக இம்மூன்றாம் அத்தியாயத்தில் பிற பிரிவினர்க்கு (ஆஸ்ரமம்) ஞானம் ஒன்றினால் மட்டுமே முக்தி கிடைக்கும் என்று எவ்வாறு கூறலாம்?

இம்முரண்பாட்டிற்கும் அவ்விளக்க நூல் வல்லார் பின்வரும் அமைதி கூறலாம் — "ச்ரௌதகர்மம் (சுருதிகளில் விதிக்கப்பட்டது) இல்லாத ஞானம் ஒன்றினால் மட்டுமே இல்லறத்தார்க்கு முக்தி மறுக்கப்படுகிறதென்றும், ஸ்மார்த்த கர்மம் (ஸமிருதிகளில் விதிக்கப்பட்டது) இல்லறத்தார்க்கு உரியதாக இருந்தும் (காரணம் அது ச்ரௌத கர்மம் போல் அத்துணை முக்கியமானதன்று) அவற்றை இல்லாததாக எடுத்துக்கொண்டும் புறக்கணித்துவிடலாம்" என்று. இதுவும் முரணுடைத்தே. எவ்வாறு? — ஸ்மார்த்த கர்மத்தோடு இணைக்கப்பட்ட ஞானத்தாலே முக்தியானது இல்லறத்தார்க்கு மட்டும் மறுக்கப்படுகிறதேயன்றி பிற பிரிவனர்க்கு அல்ல" என்பதை புத்திமான்கள் எவ்வாறு ஏற்றுக்கொள்வர். மேலும் துறவிகளுக்கு ஸ்மார்த்கர்மங்கள் முக்திக்குரிய சாதனமாக ஞானத்தோடு இணைக்கப்படுமாயின், அவ்வாறே இல்லறத்தார்க்கும் ஸ்மார்த்த கர்மங்களை ஞானத்தோடு இணைக்கலாம். ச்ரௌத கர்மங்களோடு ஞானத்தை இணைக்க வேண்டாம்.

மேலும் முக்தியின் பொருட்டு ஞானத்தை ச்ரௌத மற்றும் ஸ்மார்த்த கர்மங்கேளாடு இணைப்பது இல்லறத்தார்க்குரியதென்றும், துறவிகளுக்கோ ஸ்மார்த்த கர்மத்தோடு இணைக்கப்பட்ட ஞானத்தால் முக்தி எனின் —

துன்பங்கள் நிறைந்த ச்ரௌத மற்றும் ஸ்மார்த்த கர்மங்கள் இல்லறத்தான் தலைமீது ஏற்றப்பட்டப் பெரும் சுமையாகிவிடும்.

இனி, கடின உழைப்பினால் இல்லறத்தானுக்கே முக்தி, சுருதியில் விதிக்கப்பட்ட நித்தியக் கர்மங்கள் இல்லாததினால் பிறபிரிவினர்க்கு முக்தி இல்லையாம்" எனின் —

இக்கருத்தும் பிழையானதே, காரணம், முக்தியடைய விரும்புவோனுக்கு, அனைத்துக் கர்மங்களையும் துறத்தல் என்பது ஞானத்திற்குத் துணையானதே என்று அனைத்து உபநிஷத்துக்களிலும், புராணங்களிலும், யோக சாத்திரங்களிலும் விதிக்கப்பட்டிருக்கின்றது. சுருதிஸ்மிருதி இரண்டிலும், மூன்று பிரிவுகளின் மூலமாக நான்காவது பிரிவினை படிப்படியாக அடையக்கூடிய மார்க்கமானது விதிக்கப்பட்டிருப்பதுபோல், முதல் பிரிவிலிருந்து நேரடியாக நான்காம் பிரிவிற்குத் தாவிச் செல்வதும் விதிக்கப்பட்டிருக்கின்றது.

அப்படியானால் எல்லா பிரிவினர்க்கும், ஞானமும் கர்மமும் இணைசேர்த்து அமைக்கப்பட்டிருந்தது எனில் —

அவ்வாறன்று; முக்தியடைய விரும்புவோனுக்கு சகல கர்மங்களையும் துறத்தலே விதிக்கப்ட்டிருக்கின்றது என்பதை சுருதிகளின் பின்வரும் பகுதிகள் எடுத்துக்காட்டுகின்றன : "மக்களைப் பெறுவதின் மீதான ஆசை, பொருளாசை, உலக ஆசை அனைத்தையும் துறந்து இரந்து உயிர் வாழ்கின்றனர்" (பி.உ. 3-5-1). ஆகையால் தவங்கள் அனைத்தினும், "துறவே சிறப்புடையது"(தைத் -4-78-79) என்றும், "சிலர் கர்மம், மக்கள் மற்றும் பொருளினால் அல்லாமல் துறவினால் இறவா நிலை எய்தி இருக்கின்றனர்" (தைத் - 4-12) என்றும், "பிரம்மச்சரியத்தினின்றே துறவு நெறி மேற்கொள்ளலாம்" (ஜபல -4) என்றும் கூறப்பட்டிருப்பவை அனைத்தும், துறவு நெறியினை விதிக்கும் சுருதிகளாகும். "தர்மம் அதர்மம் என்னும் இரண்டையும் துறந்திடு, மெய்பொய் என்னும் இரண்டையும் துறந்திடு, பின்னர் எதனால் அவற்றைத் துறந்திட்டாயோ, அதனையும் (நான் இவற்றைத் துறக்கின்றேன் என்று நினைக்கும் பற்றினையும்) துறந்திடு". "பௌதீக வாழ்க்கைப் பயனற்றது என்று கண்டு, சாரமுள்ளதைக் காணவேண்டும் என்னும் கருத்தில் மிக்க உறுதியோடு திருமணம் செய்யாது துறக்கின்றனர்" (பிருஹஸ்பதி). "உயிர்கள் கர்மத்தால் பந்தப்படுகின்றன; ஞானத்தால் விடுதலை பெறுகின்றன; ஆகையால் இறுதிநிலையினைக் கண்டறிந்த முனிவர்கள் கர்மத்தைச் செய்வதில்லை" (சாந்திபர்வம், மோட்ச தர்மம், 241-7) என்று சுகர் கூறுகின்றார். இங்கும் கூட (கீதையிலும்) "சகல கர்மங்களையும் மனத்தால் துறந்து" (5-13) என்பது முதலாகக் கூறப்பட்டவை எல்லாம் துறவினை விதிக்கும் ஸ்மிருதிகளாகும்.

மேலும், முக்தி என்பது கர்மத்தினால் விளையக்கூடியதன்று, ஆகையால் பௌதீக வாழ்க்கையினின்று விடுபட விரும்புவோனுக்குக் கர்மம் பயன்படாது.

**மறுப்பு :** நித்தியக்கர்மங்கள், அவற்றைச் செய்யாததினால் வரும் குற்றத்தைத் தவிர்ப்பதற்காகச் செய்யப்படுகின்றன.

**பதில் :** இல்லை. கர்மங்களைச் செய்யாததினால் குற்றம் நேரிடும் என்பது துறவிகளல்லாத பிறர்க்குத்தான். மேலும் அக்னிகார்யம் - புனிதத்தீயை வழிபடுதல் - முதலியவற்றைச் செய்யாமையினால் துறவிக்குக் குற்றம் நேரும் என்றும் கூறமுடியாதன்றோ (சமித்துக்களால் ஹோமம் செய்தல், வேதம் ஓதுதல் போன்றவை பிரம்மச்சாரிக்கு விதிக்கப்பட்டவையாகும். அவற்றை ஒரு துறவிசெய்யாவிடில் அத்துறவிக்கு அது குற்றமன்று. எவ்வாறெனில், அந்தந்த பிரிவினர்க்கு விதிக்கப்பட்டதை ஒரு குறிப்பிட்டப்பிரிவினர் செய்யாவிடில்

அக்குறிப்பிட்ட பிரிவினர்க்கு குற்றமாகுமேயன்றி ஒரு பிரிவினர்க்கு விதிக்கப்பட்டதை மற்றொரு பிரிவினர் செய்யாவிடில் அது அவர்க்குக் குற்றமாகாது. ஒருவன் பிரம்மச்சாரியாக இருக்கும்போது அக்னிகார்யம் போன்றவற்றைச் செய்தல் வேண்டும், அவனே துறவியாகி விட்டானென்றால் அவற்றைச் செய்யவேண்டியதில்லை. காரணம் அவை பிரம்மச்சாரிக்கு விதிக்கப்பட்டனவேயன்றி, துறவிக்க விதிக்கப்பட்டவையன்று. பிரம்மச்சாரி யாக இருந்து, துறவியான பின் அவற்றைச் செய்யாவிட்டால் அதனால் குற்றம் நேராது என்க - ஆ.)

மேலும், நித்தியக்கர்மங்களைச் செய்யாமையாகிய இன்மையினின்று உண்மையாகியக் குற்றம் உண்டாகுமென்றும் கூற முடியாது; "இன்மையினின்று உண்மை எவ்வாறு உண்டாகும்?" (சாண் 6:2) என்று சுருதி கூறுகின்றது. வேதமானது விதித்ததைச் செய்யாமையினால் உண்டாகாதக் குற்றத்தைக் கூடக் கூறுமாயின், அப்போது தீமை செய்கின்ற வேதம் பிரமாணமாகாதென்று கூறப்படும். ஏனெனில் விதித்ததைச் செய்தல் மற்றும் செய்யாமை என்னும் இரண்டும் துன்பத்தை மட்டுமே தரும் ஆதலினால். மேலும் பிரமாணமாக விளங்கும் சுருதி, இல்லாத ஒன்றை உருவாக்குகிறதென்றும், உண்மையைத் தெரிவிப்பதில்லையென்னும் ஒரு தவறான கொள்கை பிறக்க வழியேற்பட்டுவிடும். இது ஏற்றுக் கொள்ளத்தக்கதல்ல. ஆகையினால் துறவிக்குக் கர்மங்கள் என்று எதுவுமில்லை. அதனால் ஞானகர்மங்கள் என்னும் இரண்டும் ஒருங்கிணைதல் என்பது பொருந்தாது.

மேலும், "ஞானமானது கர்மத்தைவிடச் சிறந்ததென்பது உமது கொள்கையானால்" (3-1) என்னும் அர்ஜுனனின் கேள்வி பொருந்தாது. இரண்டாம் அத்தியாயத்தில் "நீ ஒருவனே ஞானத்தையும் கர்மத்தையும் ஒருசேரக் கடைபிடிக்க வேண்டும்" என்று பகவான் கூறியிருந்தால் அப்போது, "ஞானமானது கர்மத்தை விடச் சிறந்ததென்பது உமது கொள்கையானால்" (3-1) என்னும் அர்ஜுனனின் கேள்வி இசைவு பெறாது. அர்ஜுனன் ஞானம் மற்றும் கர்மத்தினை ஒருசேரக் கடைபிடிக்க வேண்டுமென்று வற்புறுத்தப்பட்டிருந்தானென்றால், அப்போது கர்மத்தினும் சிறந்த ஞானமும்கூட, உண்மையில் கடைபிடிக்க வேண்டியதாகும். அப்போது, "கேசவ, என்னை ஏன் இக்கொடிய கர்மத்தில் புகுத்துகின்றீர்?" என்னும் பழிச் சொல்லுக்கு இடமிராது. ஆகையினால் இக்கேள்வி பொருந்தாது. கர்மத்தினும் மேலான ஞானமானது அர்ஜுனன் ஒருவனுக்கு மட்டுமே பகவானால் மறுதலிக்கப்படுகின்றது என்று பொருள் கொள்வது தவறாகும். அப்படி பகவான் முன்னர் கூறியிருந்தால் அர்ஜுனனின் கேள்வி சரியானதாகும். ஒன்றிற்கொன்று விரோதமான கர்மம் மற்றும் ஞானம் எனும் இரண்டும் வெவ்வேறு மனிதர்களால் கடைப்பிடிக்கத்தக்கது என்று பகவான் முன்பு கூறியிருந்தால், அப்போது, மேலே கேட்டக் கேள்வி பொருந்தும். மேலும் பகவான் கூறியதைச் சரியாகப் புரிந்து கொள்ளாமல் மேற்படிக் கேள்வி கேட்கப்பட்டிருக்க வேண்டும் என்று எடுத்துக் கொண்டால், "ஞானமும், கர்மமும், வெவ்வேறு மனிதர்களால்

கடைப்பிடிக்கத்தக்கவை'' என்னும் பகவானின் மறுமொழி பொருந்தாது. அதனால் பகவானின் மறுமொழி அறியாமையின் விளைவு என்று உளம் கொள்ளக்கூடாது. ''ஞான, கர்ம மார்க்கங்கள் வெவ்வேறு மனிதர்களால் கடைப்பிடிக்கத்தக்கவை'' என்னும் பகவானின் மறுமொழியிலிருந்து ஞானகர்மங்கள் ஒருங்கிணைதல் என்பது இல்லை என்க.

எனவே, ''ஞானம் ஒன்றினாலேயே முக்தி'' என்பது கீதையில் மட்டுமல்லாது பிற உப்நிஷத்துக்களிலும் உறதிசெய்யப்பட்ட ஒன்றாகும்.

இரண்டும் ஒருங்கிணையக் கூடுமென்றால், 'ஞானகர்மங்களுள் ஏதேனும் ஒன்றினை உறுதிபடக் கூறுக' (3-2) என்று அர்ஜுனன் பகவானைப் பிரார்த்திப்பது அர்த்தமற்றதாகிவிடும். ''ஆகையினால் நீ கர்மத்தையேச் செய்க'' என்று கூறியதின் மூலம் பகவான் அர்ஜுனனுக்கு மறுதலிக்கின்றார் (4-15).

अर्जुन उवाच

**ज्यायसी चेत्कर्मणस्ते मता बुद्धिर्जनार्दन। ।**
**तत्किं कर्मणि घोरे मां नियोजयसि केशव ॥ १॥**

*அர்ஜுன உவாச*

**ஜ்யாயஸீ சேத் கர்மணஸ் தே மதா புத்திர் ஜனார்தன ।**
**தத்கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேஶவ ॥ 1॥**

*அர்ஜுனன் கூறினான் :*

*ஜனார்த்தனா! ஞானமே கர்மத்தைவிடச் சிறந்ததென்பது உமது கொள்கையாயின் அப்போது என்னை ஏன் இக்கொடிய கர்மத்தில் புகுத்துகின்றீர்? கேசவா!*

ஞானகர்மங்கள் என்னும் இரண்டும் ஒருங்கிணைதல் முக்திக்கு சாதனம் என்பது பகவான் கொள்கையானால் அப்போது ஒருங்கிணைக்கப்பட்ட முக்தி சாதனம் ஒன்றுதான், அதனால் 'கர்மத்தைக் காட்டினும் ஞானம் மேலானது' என்று அர்ஜுனன் கர்மத்தினின்று ஞானத்தைப் பிரிப்பது தவறான செய்கையாகும். கர்மம் ஞானத்தினின்று பயனால் வேறுபட்டதாகாதன்றோ? (ஒரே பயனை அடைவதற்கு இரண்டு ஒருங்கிணைந்து சாதனமாக இருந்ததென்றால் அவற்றுள் ஒன்று மேலானதென்றும், மற்றொன்று கீழானதென்றும் எங்ஙனம் பிரித்தல் கூடும்? எடுத்துக்காட்டாகப் பித்தம் தணிவதற்கு குளிர்ச்சியும், இனிமையும் உடைய இரண்டு பொருட்களை ஒருங்கிணைத்து உண்ணவேண்டும் என்பது சாதனமாயின், அவ்விரண்டில், குளிர்ச்சியான பொருளைக்காட்டினும், இனிமையான பொருள் மேலானது என்னும் வேறுபாடு பொருந்தாதன்றோ.) ''பகவான் கர்மத்தைக் காட்டிலும் ஞானம் நன்மை பயக்கவல்லது என்று கூறினார். பிறகு நன்மை பயக்காத கர்மத்தை நீ செய்யக் கடவாய் என்று எனக்குக் கட்டளையிடுகிறார்? அதன்

காரணம் என்ன? என்று பகவானைப் பழிப்பவன் போல் அர்ஜுனன், "கேசவ! அப்பொழுது இக்கொடிய கர்மத்தில் என்னை ஏன் புகுத்துகின்றீர்?" என்று கேட்பதும் பொருந்தாது.

இனி, ஸ்மார்த்த கர்மத்தோடு மட்டும் ஞானம் ஒருங்கிணைவது பகவானால் அனைவர்க்கும் உபதேசிக்கப்பட்டு அர்ஜுனனாலும் அவ்வாறே புரிந்து கொள்ளப்பட்டதென்றால் "அப்பொழுது இக்கொடிய கர்மத்தில் என்னை ஏன் புகுத்துகின்றீர்?" என்னும் அர்ஜுனனின் கேள்வி எவ்வாறு ஏற்புடைத்தாகும்? அஃதன்றியும்,

**व्यामिश्रेणेव वाक्येन बुद्धिं मोहयसीव मे ।**
**तदेकं वद निश्चित्य येन श्रेयोऽहमाप्नुयाम् ॥२॥**

**வ்யாமிஶ்ரேணேவ வாக்யேன புத்திம் மோஹயஸீவ மே**
**தத் ஏகம் வத நிஶ்சித்ய யேன ஶ்ரேயோ (அ)ஹம் ஆப்னுயாம் ॥ 2॥**

*குழப்பமானப் பேச்சினால் எனது புத்தியை மயங்கச் செய்கின்றீர் போலும். ஆதலால் எது எனக்கு நன்மைதரும் என்பதை உறுதிப்படுத்தி ஒரே சொல்லில் உரைப்பீராக.*

பகவான் ஐயத்திற்கிடமின்றி தெளிவுபடக் கூறுபவராயினும், மந்த புத்தி உடைமையினால் பகவானின் வார்த்தை எனக்குக் குழப்பமாகத் தோன்றுகின்றது. எனது மயக்கத்தைப் போக்குதற்குரிய நீர் எவ்வாறு என்னை மதிமயங்கச் செய்வீர்? அவ்வாறு செய்யமாட்டீர். ஆதலால் கேட்கிறேன், "எனது மதியை மயங்கச் செய்கின்றீர் போலும்" என்று. "ஞானத்தைக் கடைப்பிடிப்பவன் வேறு, கர்மத்தைக் கடைப்பிடிப்பவன் வேறு, இரண்டையும் ஒருங்கிணைத்துக் கடைப்பித்தல் இயலாது என்று நீர் கருதினால் அப்பொழுது அவற்றுள் ஏதேனும் ஒன்றினை, இதுவே அர்ஜுனனின் புத்தி வன்மைக்கும், இயல்புக்கும் ஏற்றதென்று எனக்கு உறுதிபட உரைக்கவும். அதாவது ஞானம் அல்லது கர்மம் என்னும் இவை இரண்டில் எனக்கு நன்மையளிக்கக் கூடிய ஏதேனும் ஒன்றினை எனக்கு உரைத்தருளுக. அர்ஜுனனின் இக்கோரிக்கையும் கூடப் பொருத்தமுடைத்தன்றாம்.

பகவான் ஞானத்தைக் கர்மமார்க்கத்திற்குத் துணையானதென்று கூறியிருந்தால், அர்ஜுனன், அவ்விரண்டில் ஏதேனும் ஒன்றைப்பற்றி எனக்கு உரைக்க வேண்டும் என்று எவ்வாறு கேட்க முடியும்? ஞானம் கர்மம் என்னும் இரண்டில் ஒன்றைப் பற்றி மட்டுமே பகவான் உபதேசிக்கப் போவதாகக் கூறியிருந்தாரென்றால், அப்போது தான் இரண்டையும் எய்த முடியாது, எனவே, ஒன்றைப் பற்றிமட்டும் உரைத்தருள்க என்று அர்ஜுனன் கேட்டிருக்கலாம். ஆனால், பகவான் அவ்வாறு கூறவில்லையன்றோ.

பகவான் அர்ஜுனனின் கேள்விக்குப் பொருத்தமானப் பதிலைப் பின்வறுமாறு கூறினார் :

श्री भगवानुवाच

**लोकेऽस्मिन्द्विविधा निष्ठा पुरा प्रोक्ता मयानघ ।**
**ज्ञानयोगेन साङ्ख्यानां कर्मयोगेन योगिनाम् ॥ ३॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**லோகே (அ)ஸ்மின் த்வி-விதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயானக ।**
**ஜ்ஞான-யோகேன ஸாங்க்யானாம் கர்ம-யோகேன யோகினாம் ॥ 3॥**

*ஸ்ரீ பகவான் கூறினார் :*

***குற்றமற்றவனே, சாங்கியர்களுக்கு ஞானயோகத்தாலும், யோகிகளுக்கு கர்மயோகத்தாலும் இருவகையான வழிமுறைகள் முன்னர் என்னால் கூறப்பட்டது.***

எல்லாம் அறியவல்ல ஈசுவரனாகிய நான் ஆதியில் மக்களைப் படைத்து, அவர்க்கு செல்வமும், முக்தியும் கிடைப்பதற்குச் சாதனமான வேதங்களை வெளிப்படுத்தியபொழுது சாத்திரங்களைக் கடைபிடிக்கும் உரிமையுள்ள மூன்று பிரிவினர்க்கும் இருவகையான நிஷ்டைகளை - வழிமுறைகளை கடைபிடித்தற்குரியனவென்று கூறினேன். அவ்விருவகை வழிமுறைகள் யாவை? கேட்பாயாக. ஒன்று, ஞானமாகிய யோகம். இந்த ஞானயோகம், ஆத்மா அநாத்மாக்களைப் பகுத்தறியும் ஞானமுடையவராய், பிரம்மச்சரிய நிலையினின்றே நேரடியாகத் துறவு மேற்கொண்டவராய், வேதாந்த ஞானத்தால் வேதங்களின் பொருள்களை நிச்சயித்தவராய், பரமஹம்சர் என்னும் துறவிகளாய், பிரம்மத்தில் நிலை நிற்கின்ற சாங்கியர்களுக்கு உரைக்கப்பட்டது. இரண்டு, கர்மமாகிய யோகம். கர்மத்தினாலான இந்த யோகம் யோகிகளுக்கு அல்லது கர்மத்தைச் செய்வோர்க்குக் கூறப்பட்டது.

ஒருவரால், ஒரே நோக்கத்தின் பொருட்டு, ஞானமும், கர்மமும் ஒருங்கிணைத்து கடைபிடிக்க வேண்டுமென்பது முன்பு பகவானால் கூறப்பட்டும், பின்பு வேதங்களில் ஓதப்பட்டதுமாக இருந்தால், பகவான் தனது அன்பிற்கும், நம்பிக்கைக்குரிய பக்தனான அர்ஜுனனிடம், ஞான வழியை மேற்கொள்பவன் வேறு, கர்ம வழியை மேற்கொள்பவன் வேறு என்று இங்கே எவ்வாறு பிரித்துக் கூறலாம்? மேலும், "அர்ஜுனன், ஞானம், கர்மம் என்னும் இரண்டையும் கேட்டு, அவற்றை ஒருங்கிணைத்துக் கடைபிடிப்பான், பிறர்க்கோ, அவையிரண்டும் வெவ்வேறு மனிதர்களால் கடைப்பிடிக்கத்தக்கவை" என்பது பகவானது கருத்தாக இருந்தால் அப்போது பகவான் விருப்பு வெறுப்பு உடையவராக, ஆச்சாரியருக்குரிய தகுதியற்றவராகக் கருதப்படுவார். ஆகையினால் எக்காரணத்தினாலும் ஞான கர்மங்கள் ஒருங்கிணைய முடியாதவையாம்.

பகவான் மறுக்காமையினால், ஞானம், கர்மத்தை விட மேலானதென்று அர்ஜுனன் கூறியது உறுதிபெறுகிறது. அந்த ஞானமார்க்கம், துறவிகளுக்குரியது. ஆதலினால், "ஞான கர்மங்கள் வெவ்வேறு மனிதர்களால்

கடைப்பிடித்தற்குரியன என்னும் பகவான் திருவாக்கினால் உறுதிபெறுகிறது. இதுவே பகவான் கருத்தென்று தெரியவருகிறது. மேலும் "பௌதீக வாழ்க்கையில் பந்தப்படுவதற்குக் காரணமான கர்மத்தில் என்னை ஏன் புகுத்துகின்றீர்? என்னும் கேள்வியின் மூலம் அர்ஜுனன் கர்மத்தைத் தவிர்க்கிறான் என்பதைப் புரிந்து கொண்ட பகவான், "ஒருவன் கர்மங்களை" (3-4) என்று தொடங்கும் சுலோகத்தினை அருளிச் செய்கின்றார்.

மாறாக இவ்வாறும் பொருள் கொள்ளலாம் : ஞான கர்ம மார்க்கங்கள் வேறுபாடுடையன ஆதலினால், ஒருவன் ஒரே சமயத்தில் கடைபிடிக்கக் கூடாதவை என்பதோடு அவை ஒன்றையொன்று சார்ந்து நிற்காது, தனித்தனியாகவே குறிக்கோளிற்கு இட்டுச் செல்பவையுமாகும். ஆனால், இதில் உண்மை என்னவென்றால், கர்மமார்க்கம் தானாகவே நேரடியாகக் குறிக்கோளிற்கு இட்டுச் செல்லாது. மாறாக ஞான மார்க்கத்திற்கு இட்டுச் செல்லும். கர்ம மார்க்கத்தால் பெறப்படும் ஞானமார்க்கமோ, தானாகவே பிற உதவியின்றி நேரடியாகக் குறிக்கோளினை அடையச் செய்யும். இதனைத் தெளிவுறுத்தப் பகவான் கூறுகின்றார் :

न कर्मणामनारम्भान्नैष्कर्म्यं पुरुषोऽश्नुते ।
न च सन्यसनादेव सिद्धिं समधिगच्छति ॥ ४॥

**ந கர்மணாம் அநாரம்பான் நைஷ்கர்ம்யம் புருஷோ (அ)ஶ்னுதே ।**
**ந ச ஸந்ந்யஸனாத் ஏவ ஸித்திம் ஸமதிகச்சதி ॥ 4॥**

*ஒருவன் கர்மங்களைச் செய்யாமையினால் கர்மமற்ற நிலை எய்தப் பெறுவதுமில்லை, கர்மத்தைத் துறத்தலினால் நிறைவு நிலை எய்தப் பெறுவதுமில்லை.*

இப்பிறப்பிலோ அல்லது முற்பிறப்பிலோ மேற்கொள்ளப்பட்ட வேள்வி முதலிய கர்மங்கள், பாவத்தைக் குறைப்பதினால் மனத்தூய்மையினை உண்டாக்குகின்றன. மனத்தூய்மையினால் ஞானமுண்டாகி, ஞானமார்க்கத்திற்குக் காரணமாகின்றன. "பாவங்கள் நீங்குவதால் மனிதர்க்கு ஞானம் பிறக்கின்றது. அப்போது ஒருவன் தூய்மையானக் கண்ணாடியில் தன் உருவத்தைக் காண்பது போல், தன்னில் தன்னைக் காண்கிறான்." (சாந்திபர்வம் 204-8) கர்மங்களைச் செய்யாமையினால் கர்மமற்றத் தன்மையை ஞானமார்க்கத்தை, அதாவது கர்மமற்று ஆத்மஸ்வரூபமாகவே நிற்றல் என்பதை ஒருவன் எய்த மாட்டான். "ஒருவன் கர்மங்களைச் செய்யாமையினால் கர்மமற்ற நிலை எய்தப் பெறுவதில்லை" என்னும் திருவாக்கினால், அதற்கு நேர்மாறாகக் கர்மம் செய்வதினால் கர்மமற்ற நிலை எய்தப் பெறுவான் என்று தோன்றுகிறது. கர்மங்களைச் செய்யாமையினால் ஏன் ஒருவன் கர்மமற்ற தன்மை எய்தப் பெறுவதில்லை? என்றால், கர்மத்தைச் செய்தலேக் கர்மமற்றத் தன்மைக்கு வழியாகும் என்றறிக. வழியின்றி ஒரு பயனைப் பெற முடியாதன்றோ? கர்மமற்றத் தன்மையான ஞானயோகத்திற்குக் கர்மயோகமே வழிமுறையாம். இதுவே சுருதி மற்றும் கீதையில்

உபதேசிக்கப்படுகின்றது. சுருதிகளிலோ, இங்கு பேசப்படுவதும் அறிய வேண்டுவதுமான ஆத்மாவை அறிதற்கு "பிராமணர்கள் வேதம் ஓதுதல், வேள்வி செய்தல் போன்றவற்றினை நாடுகின்றனர்". (பி.உ.4.4.22) என்று கூறப்பட்டிருப்பதிலிருந்து கர்மயோகம் ஞான யோகத்திற்கு வழி என்பது உணர்த்தப்படுகின்றது: கீதையிலும் "பெருந்தோள! துறவறம், கர்மயோகமின்றி எய்தப் பெறுவது கடினமே" (5.6) என்றும் "யோகிகள் பற்றினைத் துறந்து மனத்தூய்மைக்ககாக் கர்மம் செய்கின்றனர்" (5-11) என்றும், "வேள்வியும் தானமும், தவமும் பயன் கருதார்க்குத் தூய்மை செய்வனவாம்" (18.5) என்றும் பகவானால் உணர்த்தப்படுகின்றது.

ஆனால் அனைத்து உயிர்க்கும் அபயமளித்த பின்பு ஒருவன் கர்மமற்றத் தன்மையினை மேற்கொள்ள வேண்டும் என்று கூறப்பட்டிருப்பதானது (அஸ்வமேத பர்வம் - 46-18) கர்மங்களைத் துறத்தலாலும் கர்மமற்றத் தன்மை எய்தப்படுகின்றது என்று காட்டுகின்றது. உலக நடைமுறையும் கூடக் கர்மத்தைச் செய்யாமையினால் கர்மமற்றத் தன்மை எய்தப்படுகின்றது என்பதேயாகும். ஆகையால் கர்மமற்றத் தன்மை வேண்டுபவனுக்குக் கர்மத்தைச் செய்வதினால் பயன் என்ன? பகவான் கூறுகிறார்: 'துறவினால் மட்டும் ஒருவன் நிறைவு பெற முடியாது' என்று. அதாவது கர்மத்தைத் துறந்திடுவதாகிய ஞானமற்ற வெறுந்துறவினால் கர்மமற்றத் தன்மையாகிய நிறைவினை ஒருவன் எய்தமாட்டான்.

மேலும், 'எக்காரணத்தினால் ஒருவன், ஞானமற்றக் கர்மத்துறவினால் மட்டும் கர்மமற்றத் தன்மையாகிய நிறைவினை எய்தப் பெறுவதில்லை' என்றால், அதற்குப் பகவான் பதிலிறுக்கின்றார்.

**न हि कश्चित्क्षणमपि जातु तिष्ठत्यकर्मकृत् ।**
**कार्यते ह्यवशः कर्म सर्वः प्रकृतिजैर्गुणैः ॥५॥**

**ந ஹி கச்சித் க்ஷணம்அபி ஜாது திஷ்டதி அகர்ம - க்ருத் ।**
**கார்யதே ஹி அவஶ: கர்ம ஸர்வ: ப்ரக்ருதி - ஜைர்குணை: ॥ 5॥**

***எவனும் ஒரு கணப்பொழுதேனும் செய்கையின்றியிருப்பதில்லை. இயற்கையில் பிறந்த குணங்கள் அனைவரையும் தம்மையறியாமல் தொழிலில் புகுத்துகின்றன.***

ஒருக் கணமேனும் ஒருவனால் தொழில் செய்யாதிருக்க முடியாது. ஏன்? சுதந்திரமற்றவையாதலினால், அனைத்து உயிர்களும் இயற்கையில் பிறந்த சத்துவம், இரஜோ, தமோ குணங்களினால் தொழிலில் புகுத்தப்படுகின்றன. மேலும், இவை அஞ்ஞானிகளுக்கேப் பொருந்தும். காரணம் 14:23ல் "எவன் குணங்களால் புகுத்தப்படுவதில்லையோ"என்று ஞானிகளைப் பற்றிப் பின்னர் கூறுவார். சுலோகம் 3:3, ஞானவழியை மேற்கொள்ளும் சாங்கியர்களை தனிப் பிரிவாகக் கூறுவதால், கர்மயோகம் அஞ்ஞானிகளுக்கு உரியதாகுமேயன்றி, ஞானிகளுக்கன்று. இயற்கையின் குணங்களுக்கு ஆட்படாதவர்கள் ஞானிகள்

ஆதலினால் கர்மயோகம் அவர்களுக்குப் பொருந்தாது. இவ்வுண்மை சுலோகம் 2:21ல் விளக்கப்பட்டிருக்கிறது.

ஆனால், ஆத்மாவை அறியாதவன் தனக்கு விதிக்கப்பட்டக் கர்மத்தைச் செய்யாதிருத்தல் நன்றன்று என்று கூறுகிறார்.

**कर्मेन्द्रियाणि संयम्य य आस्ते मनसा स्मरन् ।**
**इन्द्रियार्थान्विमूढात्मा मिथ्याचारः स उच्यते ॥ ६ ॥**

**கர்மேந்த்ரியாணி ஸம்யம்ய ய ஆஸ்தே மனஸா ஸ்மரன் ।**
**இந்த்ரியார்த்தான் விமூடாத்மா மித்யாசார: ஸ உச்யதே ॥ 6॥**

*செயற்புலன்களை அடக்கிக் கொண்டு, புலனின்பங்களை மனதால் நினைத்துக் கொண்டிருக்கும் மூடாத்மா பொய்யொழுக்கமுடையவன் என்று கூறப்படுகின்றான்.*

கை, கால் முதலிய செயற்புலன்களை அடக்கிக் கொண்டு அதே சமயம் புலன் இன்பங்களை நினைத்து மனதில் மயங்கிக் கொண்டிருப்பவன் பொய்யொழுக்கமுடையவன், கெட்ட நடத்தையுடையவன் எனப்படுகிறான்.

**यस्त्विन्द्रियाणि मनसा नियम्यारभतेऽर्जुन ।**
**कर्मेन्द्रियैः कर्मयोगमसक्तः स विशिष्यते ॥ ७॥**

**யஸ் த்வ இந்த்ரியாணி மனஸா நியம்யாரபதே (அ)ர்ஜுன ।**
**கர்மேந்த்ரியை : கர்மயோகம் அஸக்த: ஸ விஶிஷ்யதே: ॥ 7॥**

*அர்ஜுனா எவன் ஐம்புலன்களையும் மனதால் அடக்கிக் கொண்டு செயற்புலன்களால் பற்றின்றிக் கர்மயோகம் புரிகின்றானோ அவன் சிறந்தவனாவான்.*

ஆனால் கர்மத்திற்குரிய அஞ்ஞானி மனதால் அறிபுலன்களை அடக்கிக் கொண்டு, பயனில் பற்றின்றி, வாய், கை முதலிய செயற்புலன்களால் கர்மயோகத்தை மேற்கொள்கின்றானோ, அவன் பிற பொய்யொழுக்கமுடையவனிலும் சிறந்தவனாவான்.

இவ்வாறிருப்பதினால்,

**नियतं कुरु कर्म त्वं कर्म ज्यायो ह्यकर्मणः ।**
**शरीरयात्रापि च ते न प्रसिद्ध्येदकर्मणः ॥ ८॥**

**நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹி அகர்மண ।**
**ஶரீரோ - யாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யேத் அகர்மண: ॥ 8॥**

*உனக்கு விதிக்கப்பட்டக் கர்மத்தைச் செய். கர்மத்தைச் செய்வது, செய்யாதிருப்பதைக் காட்டினும் சிறந்ததன்றோ? கர்மம் செய்யாதிருப்பதால், உடலைக் கொண்டு செலுத்துதல் கூட உனக்கு இயலாமற் போய்விடும்.*

எவன் எந்தக் கர்மத்திற்கு உரியவனோ, ஒரு பயனைப் பெரும் பொருட்டு, எக்கர்மம் எவனுக்கு வேதத்தில் கூறப்படவில்லையோ, அக்கர்மமானது அவனுக்கு செய்தற்குரியதாகும். ஏ, அர்ஜுன நீ அதனைச் செய்தல் வேண்டும். பயனைப் பொருத்த மட்டில் செய்தல், செய்யாமையைக் காட்டினும் மேலானதன்றோ. இது எவ்வாறெனில் செயலின்மையால் உனது வாழ்க்கைப் பயணத்தில் நீ வெற்றி பெற முடியாது. இவ்வாறு உலகில் செயலுக்கும் செயலின்மைக்கும் வேறுபாடு காணப்பட்டுள்ளது.

மேலும் கர்மமானது பந்தத்திற்குக் காரணமாகின்றது என்னும் உனது கருத்தும் தவறாகும். எவ்வாறு?

**यज्ञार्थात्कर्मणोऽन्यत्र लोकोऽयं कर्मबन्धनः ।**
**तदर्थं कर्म कौन्तेय मुक्तसङ्गः समाचर ॥९॥**

**யஜ்ஞார்த்தாத் கர்மணோ (அ)ன்யத்ர லோகோ (அ)யம் கர்ம - பந்தன: ।**
**தத்-அர்த்தம் கர்ம கௌந்தேய முக்த - ஸங்க: ஸமாச்சர ॥ 9॥**

*வேள்வியின் பொருட்டாகச் செய்யப்படுவது தவிர, பிறகர்மம் மனிதர்க்குப் பந்தமாகிறது. ஆதலால் குந்தி மைந்த, பற்றற்றவனாய்க் கர்மத்தைச் செய்க.*

யக்ஞம் என்னும் வேள்விக்கு இங்கு பரமபுருஷ பகவானான ஈசுவரன் என்று பொருளாகும். அதனால்தான் சுருதி "வேள்வியே விஷ்ணு" (தை.சம் - 1.7.4) என்று கூறுகின்றது. அவருக்ககாகச் செய்யப்படும் கர்மம் வேள்வியாகும். வேள்வியைத் தவிர மக்கள் செய்யும் பிற கர்மம் அவர்களுக்குத் தளையாகும். ஆனால் ஈசுவரனுக்கானக் கர்மமோ தளையாவதில்லை. ஆகையால் குந்தி மைந்த! கர்மத்தின் பயனில் பற்றில்லாதவனாய் ஈசுவரனுக்காகக் கர்மத்தைச் செய்தல் வேண்டும்.

பின்வரும் காரணத்தினாலும் கர்மத்திற்குரியவன் கர்மத்தைச் செய்தல் வேண்டும்.

**सहयज्ञाः प्रजाः सृष्ट्वा पुरोवाच प्रजापतिः ।**
**अनेन प्रसविष्यध्वमेष वोऽस्त्विष्ट कामधुक् ॥१०॥**

**ஸஹ-யஜ்ஞா: ப்ரஜா: ஸ்ருஷ்ட்வா புரோவாச ப்ரஜாபதி: ।**
**அனேன ப்ரஸவிஷ்யத்வம் ஏஷ வோ(அ)ஸ்த்வ் இஷ்ட-காம-துக் ॥ 10॥**

*பிரம்ம தேவன் ஆதியில் வேள்வியுடனே உயிர்க்குலத்தைப் படைத்து 'இதனால் பல்கிப் பெருகுவீர்கள், நீங்கள் விரும்பும் விருப்பங்களையெல்லாம் உங்களுக்கு இது கறந்து தரும்' என்று கூறினான்.*

ப்ரஜைகளை - சமுதாயத்தின் மூன்று பிரிவினரை; ஆதியில் - படைப்பின் ஆரம்பத்தில். ப்ரஜாபதி - உயிர்க்குலங்களைப் படைப்பவர். விரும்பிய விருப்பங்கள் - பெறக் கருதும் பல பயன்கள்.

வேள்வியால் இது எவ்வாறு பெறக்கூடும்?

**देवान्भावयतानेन ते देवा भावयन्तु वः ।**
**परस्परं भावयन्तः श्रेयः परमवाप्स्यथ ॥११॥**

**தேவான் பாவயதானேன தே தேவா பாவயந்து வ: ।**
**பரஸ்பரம் பாவயந்த: ஶ்ரேய: பரம் அவாப்ஸ்யத ॥ 11॥**

*இதனால் தேவர்களை விருத்தியடையச் செய்வீர். அத்தேவர்கள் உங்களை விருத்தியடையச் செய்வாராக. (இவ்வாறு) ஒருவரை யொருவர் விருத்தியடையச் செய்வதினால் உயர்ந்த நன்மை எய்துவீர்கள்.*

வேள்வியினால் இந்திரன் முதலியத் தேவர்களைப் பாவனை செய்யுங்கள். அத்தேவர்களோ மழை போன்றவற்றால் உங்களை விருத்தி செய்யட்டும். இவ்வாறு ஒருவரை யொருவர் விருத்தி செய்வதால் படிப்படியாகப் பிரம்ம ஞானம் பெறுதல் அல்லது சொர்க்கம் அடைதல் என்னும் உயர் நன்மை எய்தப் பெறுவீர்.

அன்றியும்,

**इष्टान्भोगान्हि वो देवा दास्यन्ते यज्ञभाविताः ।**
**तैर्दत्तानप्रदायैभ्यो यो भुङ्क्ते स्तेन एव सः ॥१२॥**

**இஷ்டான் போகான் ஹி வோ தேவா தாஸ்யந்தே யஜ்ஞ பாவிதா:।**
**தைர் தத்தான் அப்ரதாயைப்யோ யோ புங்க்தே ஸ்தேன ஏவ ஸ: ॥ 12॥**

*வேள்வியில் விருத்தி செய்ப்பட்டத் தேவர்கள் உங்களுக்கு விரும்பிய போகங்களை எல்லாந் தருவர். அவர்களுக்குக் கைம்மாறு செய்யாது அவர்கள் தருவதை உண்போன் கள்வனேயாவான்.*

வேள்விகளால் தேவர்களை விருத்தி செய்து அவர்களைத் திருப்தியடையச் செய்தால், அவர்கள் மனைவி, மக்கள், கால்நடை போன்ற செல்வங்களை உங்களுக்கு அருள்வர். அவற்றினால் பெற்ற இன்பங்களை

அத்தேவர்களுக்குத் திருப்பித் தராமல் எவன் தனது உடலையும், புலன்களையும் திருப்தி செய்கின்றானோ அவன் தேவர்களின் செல்வத்தைத் துஷ்பிரயோகம் செய்த திருடனேயாவான்.

இதற்கு மாறாக மற்றவர்கள்,

यज्ञशिष्टाशिनः सन्तो मुच्यन्ते सर्वकिल्बिषैः ।
भुञ्जते ते त्वघं पापा ये पचन्त्यात्मकारणात् ॥१३॥

**யஜ்ஞ - ஶிஷ்டாஶின: ஸந்தோ முச்யந்தே ஸர்வ - கில்பிஷை: ।**
**புஞ்ஜதே தே த்வ அகம் பாபா யே பசந்தி ஆத்ம - காரணாத் ॥ 13॥**

***வேள்வியின் மிச்சத்தை உண்ணும் நல்லோர் அனைத்துப் பாபங்களினின்றும் விடுபடுகிறார்கள். தம்பொருட்டென்று உணவு சமைக்கும் பாவிகள் பாவத்தை உண்ணுகிறார்கள்.***

தேவர்க்குரிய வேள்வியினைச் செய்து முடித்து அதில் மீந்திருக்கும் அமிர்தம் எனப்படும் அன்னத்தை உண்ணும் நல்லோர், விலங்குகளைப் பலியிடும் அடுப்பு முதலிய ஐந்து இடங்களில் உண்டாகும் பாவங்களிலிருந்தும், பிற உயிர்களுக்கு அறியாது செய்யும் பாவங்களிலிருந்தும் விடுபடுகின்றனர். தமது நன்மைக்காக உணவு சமைப்போர், அவர்கள் பாவிகளானதினால் பாவத்தையே உண்கின்றனர். (பாவம் உண்டாகும் ஐந்து இடங்கள்: அடுப்பு, அரிவாள்மனை, அரைக்கும் எந்திரம், தண்ணீர்க்குடம், துடைப்பம் ஆகும். இவற்றில் உண்டாகும் பாவங்கள் பிரம்ம யக்ஞம் முதலிய பஞ்ச மகா யக்ஞங்களால் நீங்கிவிடும். மனு.3-67,73)

பின்வரும் காரணத்தாலும் கர்மத்திற்குரியவன் கர்மம் செய்தல் வேண்டும். ஏனென்றால் கர்மமானது உலகின் சக்கரத்தைச் சுழலும்படிச் செய்கிறது. எங்ஙனம்? கூறுவோம் -

अन्नाद्भवन्ति भूतानि पर्जन्यादन्नसम्भवः ।
यज्ञाद्भवति पर्जन्यो यज्ञः कर्मसमुद्भवः ॥१४॥

**அன்னாத் பவந்தி பூதானி பர்ஜன்யாத் அன்ன ஸம்பவ: ।**
**யஜ்ஞாத் பவதி பர்ஜன்யோ யஜ்ஞ: கர்ம ஸமுத்பவ: ॥ 14॥**

कर्म ब्रह्मोद्भवं विद्धि ब्रह्माक्षरसमुद्भवम् ।
तस्मात्सर्वगतं ब्रह्म नित्यं यज्ञे प्रतिष्ठितम् ॥१५॥

**கர்ம ப்ரஹ்மோத்பவம் வித்தி ப்ரஹ்மாக்ஷர - ஸமுத்பவம் ।**
**தஸ்மாத் ஸர்வ-கதம் ப்ரஹ்ம நித்யம் யஜ்ஞே ப்ரதிஷ்டிதம் ॥ 15॥**

*உயிர்கள் உணவினின்று உண்டாகின்றன; உணவு மழையினின்று உண்டாகின்றது; மழை வேள்வியினின்று உண்டாகின்றது; வேள்வி கர்மத்தினின்று உண்டாகின்றது; கர்மம் வேதத்தின்று பிறக்கின்றது என்று உணர். வேதமோ பரம்பொருளினின்று தோன்றியது. ஆகையால் எங்கும் பரவிய வேதம் வேள்வியில் நிலைபெற்றது.*

உண்டபின்பு இரத்தமாகவும், சுக்கிலமாகவும் மாறுகின்ற உணவிலிருந்து அனைத்து உயிர்களும் பிறக்கின்றன. உணவோ மழையினின்று விளைகின்றது. மழையோ வேள்வியினின்று பிறக்கின்றது. இதனையே சுருதி 'வேள்வித் தீயில் போடப்படும் ஆகுதியானது சூரியனை அடைகின்றது. சூரியனின்று மழையும், மழையினின்று உணவும், உணவினின்று உயிர்களும் உண்டாகின்றன,'' (மனு 3-76) என்று கூறுகின்றது. வேள்வி என்பது 'அபூர்வம்' எனப்படுகின்றது. (அபூர்வம் என்பது ஒரு செயலைத் தொடங்குகின்ற காலத்திற்கும், அச்செயல் பயன் கொடுக்கின்ற காலத்திற்கும் இடைப்பட்ட காலத்தில் பிறர் கண்களுக்குப் புலப்படாதிருக்கும் நிலையாகும். அதாவது காரணம், விளைவு என்னும் இரண்டையும் இணைக்கும் இடையிலுள்ள இணைப்பாகும்.) இந்த அபூர்வம், வேள்வியைச் செய்பவன், மற்றும் அதைச் செய்யும் அவனது புரோகிதர்களின் (ரித்விக்குகள்) செயலின் விளைவாக விளங்குகின்றது. இச்செயல்கள் வேதங்களால் (பிரம்மம்) விதிக்கப்படுகின்றன. வேதங்களோ அழிவற்ற உயர்ந்த ஆத்மாவாகிய பரமாத்மாவிடமிருந்து வருகின்றன. பிரமம் என்பதற்கு வேதம் என்று பொருளாகும். மனிதனிடமிருந்து மூச்சுக் காற்று வெளிப்படுவது போல், பரமாத்மா என்னும் அழிவற்றப் பொருளிடமிருந்து வேதம் வெளிப்படுகின்றது. அதனால், வேதத்தில் எல்லாம் நிலைபெற்றிருக்கின்றன என்ற போதிலும், வேதம் வேள்விகளையும் அதன் செயல் முறைகளையுமே முக்கியமாகக் கொண்டிருக்கின்றது.

**एवं प्रवर्तितं चक्रं नानुवर्तयतीह यः ।**
**अघायुरिन्द्रियारामो मोघं पार्थ स जीवति ॥१६॥**

**ஏவம் ப்ரவர்த்திதம் சக்ரம் நானுவர்த்தயதீஹ ய: ।**
**அகாயுர் இந்த்ரியாராமோ மோகம் பார்த்த ஸ ஜீவதி ॥ 16॥**

*இங்ஙனம் சுழலும் சக்கரத்தினை இவ்வுலகில் பின்பற்றி ஒழுகாதோன் பாப வாழ்க்கை வாழ்கின்றான். புலன்களிலே களிக்கின்றான். பார்த்தா! அவனது வாழ்க்கை விழலேயாம்.*

அவனோ கர்மம் செய்வதற்குரியவன், ஆனால் அவன் வேதம் மற்றும் வேள்விகளின் அடிப்படையில் ஈசுவரனால் சுழலவிடப்பட்டிருக்கும் உலகச் சக்கரத்தைப் பின்பற்றாது புலனின்பத்தில் களிக்கின்றான் என்றால் அவன் வாழ்க்கை விழலாம். அதாவது வீணாக வாழ்கின்றான் என்று பொருளாம்.

(உலகச் சக்கரம் என்பது உலகினைச் செலுத்தும் சக்கரமாகும். கர்மத்தால் வேள்வியும், வேள்வியால் மழையும், மழையினால் உணவும், உணவினால் உயிர்களும் உண்டாகி பின்னர் மீண்டும் உயிர்களால் கர்மமும், கர்மத்தால் வேள்வியும் உண்டாவது சக்கரம் சுழல்வது போன்றதாகும்.)

எனவே, கர்மத்திற்குரிய அஞ்ஞானி, கர்மத்தைச் செய்ய வேண்டுமென்பது இச்சுலோகத்தின் பொருளாகும். ஆத்மாவை அறியாது ஆத்ம ஞான வழிமுறைக்கு உரிய தகுதி பெறும்வரையில் அவன் கர்ம யோகத்தைப் பின்பற்ற வேண்டுமென்பது 3.4 லிருந்து 3.8 வரையிலான சுலோகங்களில் அறிவுறுத்தப்பட்டது. பின்னர் 3.9லிருந்து 3.16 வரை உள்ள சுலோகங்களிலும் கூட, கர்மத்திற்குரியவன் ஆனால் ஆத்மாவை அறியாதிருப்பவன் கர்மத்தைச் செய்ய வேண்டும் என்பதற்கானக் காரணங்களும், அதைச் செய்யாதிருந்தால் நேரும் குற்றங்களும் கூறப்படுகின்றது.

பகவான் இப்போது அர்ஜுனன் கேட்பதாகப் பாவித்துக் கொண்டு பின்வரும் கேள்வியைத் தாமே கேட்கின்றார்: இவ்வாறு சுழலும் சக்கரத்தை அனைவரும் பின்பற்ற வேண்டுமா? அல்லது ஆத்மாவை அறியாதவன், கர்மயோகத்தை மேற்கொள்வதால் அடையக்கூடியதும், ஆத்மாவை அறியும் சாங்கியர்களால் கடைப்பிடித்தற்குரியதுமான ஞானயோக வழிமுறையை எய்தாதவன் மட்டுமே பின்பற்ற வேண்டுமா? இக்கேள்விக்குரிய பதிலாக அல்லது தாம் எடுத்துக் கொண்டப் பொருளைத் தெளிவாக விளக்கும் பொருட்டு, பின்வரும் சுருதியில் அறிவுறுத்தப்பட்ட அதே உண்மையே கீதாசாத்திரத்திலும், உணர்த்தப்பட்டிருக்கிறது என்று எடுத்துக் காட்டுகிறார். பிராமணர்கள் இந்த ஆத்மாவை அறிந்து, பொய்யறிவு நீங்கப் பெற்று பொய்யறிவுடையோரால் பெரிதும் போற்றப்படும் மக்களாசை போன்ற ஆசைகளைத் துறந்து, உடல் ஜீவித்திருப்பதற்குத் தேவையானதை மட்டுமே இரந்துண்டு வாழ்கின்றனர். இவர்கட்கு ஆத்ம ஞான வழிமுறையை மேற்கொள்வதைத் தவிர வேறு செயல் இல்லை (பி.உ. 3-5-1)

**यस्त्वात्मरतिरेव स्यादात्मतृप्तश्च मानवः ।**
**आत्मन्येव च सन्तुष्टस्तस्य कार्यं न विद्यते ॥१७॥**

**யஸ் த்வ் ஆத்ம-ரதிர் ஏவ ஸ்யாத் ஆத்ம - த்ருப்தஸ் ச மானவ: ।**
**ஆத்மனி ஏவ ச ஸந்துஷ்டஸ் தஸ்ய கார்யம் ந வித்யதே ॥ 17॥**

***ஆனால் எவனொருவன் ஆத்மாவில் இன்புற்று, ஆத்மாவில் திருப்தியடைந்து, ஆத்மாவில் மகிழ்கின்றானோ அவனுக்கு செய்யக் கூடிய கர்மம், ஒன்றுமில்லை.***

ஆனால் ஆத்மாவை அறிவதிலே உறுதியுடன் நின்று, ஆத்மாவிடம் அன்றி பிற புலனுகர்ச்சிப் பொருட்களிலே இன்புறாதவனாய், ஆத்மாவிடம் அன்றி உணவுருசி முதலியவற்றிலே திருப்தியற்றவனாய் இருக்கின்றானோ அம்மனிதன் அச்சாங்கியன், அத்துறவி ஆத்மாவிடம் மட்டுமே

மகிழ்ந்திருக்கின்றான். அனைவரும் பொருள், செல்வம் முதலியப் புறவிஷயங்களில் மகிழ்ச்சியடைய, இவனோ அவற்றின் மீதான ஆசையினைத் துறந்து ஆத்மாவிடம் மட்டுமே மகிழ்ச்சியடைகின்றான். அப்படிப்பட்ட ஆத்ம ஞானிக்கு செய்யக் கூடியக் கர்மம் என்று எதுவுமில.

மேலும்,

**नैव तस्य कृतेनार्थो नाकृतेनेह कश्चन ।**
**न चास्य सर्वभूतेषु कश्चिदर्थव्यपाश्रयः ॥१८॥**

**நைவ தஸ்ய க்ருதேனார்த்தோ நாக்ருதேனேஹ க்ஶ்சன ।**
**ந சாஸ்ய ஸர்வ-பூதேஷு கஶ்சித் அர்த்த - வ்யபாஶ்ரய: ॥ 18॥**

*அவனுக்குச் செய்கையில் யாதொரு பயனுமில்லை, செயலின்றி இருப்பதிலும், அவனுக்குப் பயனில்லை. எவ்விதப் பயனையுங்கருதி அவன் எந்த உயிரையும் சார்ந்து நிற்பதில்லை.*

இவ்வாறு ஆத்மாவிடம் மகிழ்ந்திருப்பவனுக்குக் கர்மத்தைச் செய்வதால் எந்தவொரு பயனுமில்லை. அப்படியானால் அவன் கர்மத்தைச் செய்யாததினால் தீமை என்னும் குற்றம் நேருமோ? என்றால், இவ்வுலகில் குற்றம் நேர்வதினாலும், ஆத்மாவை இழப்பதினாலும் உண்டாகும் எத்தீமையும் கர்மத்தைச் செய்யாமையினால் அவனுக்கு உண்டாவதேயில்லை. அவனுக்கு இவ்வுலகில் பிரம்ம தேவன் முதல் சிறுபுல் வரையில், எப்பொருளையும் ஒரு பயனுக்கானக் கர்மத்தைச் செய்யச் சார்ந்து நிற்க வேண்டிய தேவை இல்லை. அவன் பயனைப் பெறுவதற்காக ஒரு குறிப்பிட்டப் பொருளைச் சார்ந்து ஒரு கர்மத்தைச் செய்து, எய்தக் கூடியப் பயன் என்று எதுவுமில்லை.

நீ எங்கும் பிரவகித்து ஓடும் நீர்ப் பெருக்கினை ஒத்த இந்த சரியான ஞானத்தில் நிலைநிற்கின்றாய் இல்லை (2-40) ஆகையினால்,

**तस्मादसक्तः सततं कार्यं कर्म समाचर ।**
**असक्तो ह्याचरन्कर्म परमाप्नोति पूरुषः ॥१९॥**

**தஸ்மாத் அஸக்த: ஸததம் கார்யம் கர்ம ஸமாச்சர ।**
**அஸக்தோ ஹி ஆசரன் கர்ம பரம் ஆப்னோதி பூருஷ: ॥ 19॥**

*ஆதலால் பற்றற்றவனாக எப்போதும் செய்ய வேண்டியக் கர்மத்தைச் செய்வாயாக. ஏனெனில் பற்றில்லாதவனாகக் கர்மத்தைச் செய்பவன் உயர் நன்மை எய்துகிறான்.*

ஈசுவரன் பொருட்டுப் பற்றின்றி கர்மத்தைச் செய்யும் மனிதன் மனத்தூய்மை பெறுவதினால் முக்தியடைகிறான்.

பின்வரும் காரணத்தினாலும் கூட (கர்மத்தைச் செய்தல் வேண்டும்)

कर्मणैव हि संसिद्धिमास्थिता जनकादयः ।
लोकसङ्ग्रहमेवापि सम्पश्यन्कर्तुमर्हसि ॥२०॥

**கர்மணைவ ஹி ஸம்ஸித்திம் ஆஸ்திதா ஜனகாதய: ।**
**லோக-ஸங்க்ரஹம் ஏவாபி ஸம்பஶ்யன் கர்த்தும் அர்ஹஸி ॥ 20॥**

*ஜனகர் முதலானோர் கர்மத்தினாலேயே சித்தி பெற்றனர். உலக நன்மையைக் கருதியும் நீ தொழில் செய்தலே தகும்.*

முன்னாளில் அறிவிலே தெளிவு பெற்றச் சத்திரியர்களாகிய ஜனகர், அஸ்வபதி (அஸ்வபதியைப் பற்றி சா.உ. 2.4ல் காண்க) போன்றோர் கர்மத்தினால் மட்டுமே முக்தி பெற முயன்றார்கள். அவர்கள் நல்லறிவு உடையவர்கள் என்று நாம் கருதினோமென்றால், இவ்வுலகில் ஓர் எடுத்துக் காட்டாகத் திகழவேண்டுமென்பதற்காக அவர்கள், கர்மத்தைத் துறக்காது, கர்மத்தில் ஈடுபட்டு முக்தியடைய முயன்றனர் என்று நாம் புரிந்து கொள்ள வேண்டும். இதற்கு மாறாக அவர்கள் நல்லறிவு பெறாத மனிதர்கள் என்று நாம் கருதினால், மன்த்தூய்மை (ஸத்வ-ஶுத்தி) எய்துவதற்கு வழியானக் கர்மத்தின் மூலம் அவர்கள் முக்தியடைய முயன்றனர் என்று நாம் புரிந்து கொள்ள வேண்டும்.

மேலும், ஜனகர் உள்ளிட்ட முன்னோர்கள் அஞ்ஞானிகளாக இருந்ததினால் கர்மத்தைச் செய்தனர். நல்லறிவு உடையவனாய் குறிக்கோள் எய்தப் பெற்றவனுக்குக் கர்மத்தைச் செய்ய வேண்டிய தேவையில்லை என்று நீ கருதினாலும், உனது முன்வினைப் பயனால் நீ இப்போது சத்திரியனாகப் பிறந்துள்ளாய், அதனால் உலக மக்கள் தவறான பாதையில் செல்வதைத் தடுத்தற்காகவேணும் நீ உனது கர்மத்தைச் செய்தே தீரவேண்டும்.

உலக நன்மையினை யார் செய்ய வேண்டும்? எவ்வாறு செய்ய வேண்டும்? பதில் பின்வருமாறு:

यद्यदाचरति श्रेष्ठस्तत्तदेवेतरो जनः ।
स यत्प्रमाणं कुरुते लोकस्तदनुवर्तते ॥२१॥

**யத் யத் ஆசரதி ஶ்ரேஷ்டஸ் தத் ததேவேதரோ ஜன:**
**ஸ யத் ப்ரமாணம் குருதே லோகஸ் தத் அனுவர்த்ததே ॥ 21॥**

***எதனையெதனை மேலோன் செய்கின்றானோ அதனையே மற்ற மனிதர் பின்பற்றுகின்றனர். அவன் எதை உண்மை நிலையாகக் கொள்கின்றானோ, அதை உலகம் கடைபிடிக்கின்றது.***

மனிதர்களில் உயர்ந்த மேலோன் ஆன்மீக, லௌகீக விஷயங்களில் எதனை உண்மை நிலையாகக் கொண்டு பின்பற்றுகின்றானோ அதனையே இவ்வுலக மக்கள் பின்பற்றுகின்றனர்.

உலக மக்களின் பாதுகாப்பிற்குத் தேவையானதைப் பற்றி, உனக்கு ஏதேனும் ஐயம் இருந்தால், நீ ஏன் என்னை மனம் கொள்ளவில்லை?

न मे पार्थास्ति कर्तव्यं त्रिषु लोकेषु किञ्चन ।
नानवाप्तमवाप्तव्यं वर्त एव च कर्मणि ॥२२॥

ந மே பார்த்தஸ்தி கர்த்தவ்யம் த்ரிஷு லோகேஷு கிஞ்சன ।
நானவாப்தம் அவாப்தவ்யம் வர்த்த ஏவ ச கர்மணி ॥ 22॥

*பார்த்தா! மூன்றுலகத்திலும் எனக்குச் செய்ய வேண்டியக் கர்மம் என்று எதுவுமில்லை. நான் அடையாததாக இனி அடையக் கூடியதும் எதுவுமில்லை. எனினும் கர்மத்திலேதான் இயங்கிக் கொண்டிருக் கின்றேன்.*

பார்த்தா! மூவுலகங்களிலும், எனக்குச் செய்யவேண்டியக் கர்மம் என்று எதுவுமில்லை, ஏன்? நான் இதுவரை அடையாததோ, இனி அடையக் கூடியதோ எதுவுமில்லை. இருந்தும் நான் கர்மத்தைச் செய்து கொண்டுதானிருக்கின்றேன்.

यदि ह्यहं न वर्तेयं जातु कर्मण्यतन्द्रितः ।
मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥२३॥

யதி ஹி அஹம் ந வர்த்தேயம் ஜாது கர்மணி அதந்த்ரித: ।
மம வர்த்தமானுவர்த்தந்தே மஷனுயா: பார்த்த ஸர்வஶ: ॥ 23॥

*நான் சோம்பலில்லாமல் எப்போதும் கர்மத்தைச் செய்து கொண்டிராவிடில், பார்த்தா! எல்லாப் பக்கங்களிலும் மனிதர் என் வழியையே பின்பற்றுவார்கள்.*

மனிதர்க்கெல்லாம் மேலாக இருக்கின்ற நான் அவ்வாறு இருந்தால் வரும் கேடு என்ன? - பகவான் கூறுகிறார்:

उत्सीदेयुरिमे लोका न कुर्यां कर्म चेदहम् ।
सङ्करस्य च कर्ता स्यामुपहन्यामिमाः प्रजाः ॥२४॥

உத்ஸீதேயுர் இமே லோகா ந குர்யாம் கர்ம சேத் அஹம்
ஸங்கரஸ்ய ச கர்த்தா ஸ்யாம் உபஹன்யாம் இமா: ப்ரஜா: ॥ 24॥

*நான் கர்மத்தைச் செய்யாவிடில் இவ்வுலக மக்கள் அழிந்து போவர். குழப்பத்திற்கு நான் காரணமாவேன். இந்த மக்களையெல்லாம் கொல்வோனாவேன்.*

நான் கர்மத்தைச் செய்யாவிடில் உலகம் நிலைபெறுவதற்குக் காரணமானக் கர்மம் இல்லாமையினால் இவ்வுலகங்கள் அனைத்தும் அழிந்துபடும். அன்றியும் சமுதாயப் பிரிவுகள் கலந்து போவதற்கும் காரணமாவேன். அதன் மூலம் இவ்வுயிர்களை அழித்தவனாவேன். உயிர்களைக் காத்தற்குரிய யான் அவற்றுக்கு ஊறு செய்வது பகவானாகிய எனக்குப் பொருந்தாது.

மாறாக, நீயோ அல்லது பிறிதொரு மனிதனோ, என்னைப் போல் ஆத்மாவை அறிந்தவனாகவும், குறிக்கோளை எய்திவிட்டவனாகவும் தன்னைக் கருதி தான் செய்ய வேண்டியக் கர்மம் எதுவும் இல்லாதவனாக இருந்த போதிலும் பிறர் நன்மைக்ககாவேனும் அவன் கர்மம் செய்தே ஆகவேண்டும்.

**सक्ताः कर्मण्यविद्वांसो यथा कुर्वन्ति भारत ।**
**कुर्याद्विद्वांस्तथासक्तश्चिकीर्षुर्लोकसङ्ग्रहम् ॥ २५॥**

**ஸக்தா: கர்மணி அவித்வாம்ஸோ யதா குர்வந்தி பாரத ।**
**குர்யாத் வித்வாம்ஸ் ததா(அ)ஸக்தஶ் சிகீர்ஷுர் லோக-ஸங்க்ரஹம் ॥ 25॥**

*பாரதா அறிவில்லாதார் செய்கையில் பற்றுடையோராய் எப்படிக் கர்மம் செய்கிறார்களோ, அப்படியே அறிவுடையோன் பற்றை நீக்கி உலக நன்மையை நாடிக் கர்மம் செய்ய வேண்டும்.*

'நான் செய்யும் இக்கர்மத்தின் பயன் எனக்குக் கிடைக்கப் பெறும்' என்று கர்மங்களின் பயனில் பற்றுடைய அஞ்ஞானி கருதுகிறான். அதுபோன்றே ஆத்மாவை அறிந்தவன் பயனில் பற்றின்றி அக்கர்மங்களைச் செய்தல் வேண்டும். அவன் அஞ்ஞானியைப் போல் ஏன் செய்ய வேண்டும்? என்றால் உலக நன்மைக்காக அதனைக் கூறுகிறேன்.

உலகிற்கு நன்மை செய்யக் கருதுபவனும், ஆத்மாவை அறிந்திருப்பவனுமாகிய எனக்கோ அல்லது வேறொருவனுக்கோ உலக நன்மையைத் தவிர்த்து செய்ய வேண்டியக் கர்மம் என்று எதுவுமில்லை. அதனால் ஆத்மாவை அறிந்தவனுக்கு இது உபதேசிக்கப்படுகின்றது.

**न बुद्धिभेदं जनयेदज्ञानां कर्मसङ्गिनाम् ।**
**जोषयेत्सर्वकर्माणि विद्वान्युक्तः समाचरन् ॥ २६॥**

**ந புத்தி-பேதம் ஜனயேத் அஜ்ஞானம் கர்ம-ஸங்கினாம் ।**
**ஜோஷயேத் ஸர்வ-கர்மாணி வித்வான் யுக்த: ஸமாசரன் ॥ 26॥**

*அறிவுடையோன் கர்மத்தில் பற்றுள்ள அஞ்ஞானியிடம் புத்தி கலக்கத்தை உண்டாக்கக்கூடாது. அவன் சமபுத்தி உடையவனாய் எல்லாக் கர்மங்களையும் தான் செய்து பிறரையும் அக்கர்மங்களில் ஈடுபடச் செய்தல் வேண்டும்.*

அறிவுடையவன் 'நான் இக்கர்மத்தைச் செய்து அதன் பயனை அனுபவிக்க வேண்டும்' என்று என்னும் அஞ்ஞானியின் திடபுத்தியில் குழப்பத்தை உண்டு பண்ணக்கூடாது. பிறகு அவன் என்ன செய்ய வேண்டும்? அஞ்ஞானிகளின் அதே கர்மத்தைத் தான் ஊக்கமுடன் செய்து அவர்களையும் அக்கர்மத்தைச் செய்யும்படித் தூண்ட வேண்டும்.

அஞ்ஞானி கர்மத்தில் எங்ஙனம் பற்று வைக்கிறான்?

**प्रकृतेः क्रियमाणानि गुणैः कर्माणि सर्वशः ।**
**अहङ्कारविमूढात्मा कर्ताहमिति मन्यते ॥ २७॥**

**ப்ரக்ருதே: க்ரியமாணானி குணை: கர்மாணி ஸர்வஶ: ।**
**அஹங்கார - விமூடாத்மா கர்த்தாஹம் இதி மன்யதே ॥ 27॥**

***எங்கும் கர்மங்கள் பிரகிருதியின் குணங்களால் செய்யப்படுகின்றன. ஆணவத்தால் மயங்கியவன் 'நான் செய்கிறேன்' என்று நினைக்கிறான்.***

பிரக்ருதி என்னும் இயற்கை, சத்துவம், இரஜோ, தமோ என்னும் குணங்களின் சமநிலையுடையதாக இருக்கின்றது. அந்த இயற்கையின் குணங்களினால் ஆன உடல் மற்றும் புலன்களால் ஆன்மிக, லௌகீகக் கர்மங்கள் அனைத்தும் செய்யப்படுகின்றன. உடல் மற்றும் புலன்களின் கூட்டே ஆத்மா என்னும் எண்ணமாகிய ஆணவத்தினால் மயங்கிய மனதினை உடையவன் அதாவது உடல் மற்றும் புலன்களே தான் என்று எண்ணுகின்ற இம்மனிதன் அறியாமையினால், தன்னிடத்துக் கர்மங்களைக் காண்பதோடு செய்யும் கர்மம் ஒவ்வொன்றுக்கும் 'கர்த்தா நான்' என்று கருதுகிறான்.

ஆனால் ஞானியோ,

**तत्त्ववित्तु महाबाहो गुणकर्मविभागयोः ।**
**गुणा गुणेषु वर्तन्त इति मत्वा न सज्जते ॥ २८॥**

**தத்த்வ - வித் து மஹா - பாஹோ குண - கர்ம - விபாகயோ: ।**
**குண குணேஷு வர்த்தந்த இதி மத்வா ந ஸஜ்ஜதே ॥ 28॥**

***பெருந்தோளா! குணங்கள் மற்றும் அவற்றின் செயல்கள் எனுமிவற்றின் உண்மை உணர்ந்தவன் 'புலன்கள் புலனுகர்ச்சிப் பொருட்களின் வழியே செல்லுகின்றன' என்று அறிந்து பற்று வைப்பதில்லை.***

பெருந்தோளா! உண்மையை உணர்ந்தவன் - குணங்கள் மற்றும் அவற்றின் செயல்கள் எனுமிவற்றின் பிரிவுகளின் உண்மையை உணர்ந்தவன். 'புலன்களாகிய குணங்கள் புலனுகர்ச்சிப் பொருட்களாகிய குணங்களில்

செல்கின்றன. ஆத்மா அங்ஙனம் செல்வதில்லை" என உணர்ந்து கர்மங்களில் பற்று வைப்பதில்லை.

மேலும்,

**प्रकृतेर्गुणसम्मूढाः सज्जन्ते गुणकर्मसु ।**
**तानकृत्स्नविदो मन्दान्कृत्स्नविन्न विचालयेत् ॥२९॥**

**ப்ரக்ருதேர் குண - ஸம்மூடா: ஸஜ்ஜந்தே குண - கர்மஸு ।**
**தான் அக்ருத்ஸ்ன - விதோ மந்தான் க்ருத்ஸ்ன -**
**வின் ந விசாலயேத் ॥ 29॥**

***இயற்கையின் குணங்களால் முற்றும் மயங்கியவராய், குணங்களுடையக் கர்மங்களில் பற்று வைக்கும் அந்த முற்றும் உணராத மூடர்களை முற்றும் அறிந்த ஞானி கலங்கச் செய்தல் கூடாது.***

குணங்களுடைய கர்மத்தின் மீது பற்றுடைய அஞ்ஞானி 'இப்பயனைப் பெறுவதற்காக இக்கர்மத்தை நான் செய்ய வேண்டும்' என்று கருதுகிறான். முற்றுமுணர்ந்த ஞானியோ அந்த மந்த புத்தி உடையவனை கலங்கும்படிச் செய்தல் கூடாது. அதாவது அவனது புத்தியை பேதலிக்கச் செய்தல் கூடாது என்றறிக.

கர்மத்திற்குரியவனும், அஞ்ஞானியுமான ஒருவன் முக்தி பெற விரும்பினால் அவன் எவ்வாறு கர்மம் செய்ய வேண்டும்? பதில் பின் வருமாறு:

**मयि सर्वाणि कर्माणि संन्यस्याध्यात्मचेतसा ।**
**निराशीर्निर्ममो भूत्वा युध्यस्व विगतज्वरः ॥३०॥**

**மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்யாத்யாத்ம - சேதஸா ।**
**நிராஸீர் நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகத - ஜ்வர: ॥ 30॥**

***எல்லாக் கர்மங்களையும் எனக்கு அர்ப்பணித்து, தான் ஆத்மா என்னும் அறிவுடன் ஆசையற்றவனாய், எனது என்னும் எண்ணம் இல்லாதவனாய் மனத்துயரம் முற்றும் நீங்கிப் போர் புரிவாயாக.***

அனைத்துயிர்களின் ஆத்மாவாகவும், முற்றும் உணர்ந்தவனாகவும், பரமேசுவரனாகவும், கடவுளுமாகிய வாசுதேவனாகிய என்னிடம் 'செய்பவனாகிய நான், ஈசுவரனுக்காக ஒரு தொண்டனாய்க் கர்மங்களைச் செய்கிறேன்' என்னும் தெளிந்த அறிவோடு, கர்மங்கள் அனைத்தையும் எனக்கு அர்ப்பணம் செய்து, ஆசையும் எனது என்னும் எண்ணமும் அற்றவனாக மனங்கலங்கி துயருறாது போர் செய்ய வேண்டும் என்று பொருளாகும்.

ये मे मतमिदं नित्यमनुतिष्ठन्ति मानवा: ।
श्रद्धावन्तोऽनसूयन्तो मुच्यन्ते तेऽपि कर्मभि: ॥ ३१॥

**யே மே மதம் இதம் நித்யம் அனுதிஷ்டந்தி மானவா: ।**
**ஶ்ரத்தாவந்தோ (அ)நஸூயந்தோ முச்யந்தே தே (அ)பி கா்மபி: ॥ 31॥**

*எந்த மனிதர்கள் என்னுடைய இந்த நித்தியமானக் கொள்கையை சிரத்தையுடனும் பொறாமையின்றியும் பின்பற்றுகின்றனரோ அவர்கள் கர்மங்களினின்று விடுபடுகின்றனர்.*

பரமகுருவும், வாசுதேவனுமாகிய என்னை (அறியாமையினால் பகவான், தன்னையே தஞ்சமாகக் கொள் என்று தற்புகழ்ச்சி பேசுகின்றார் என்று) குறை கூறாது எனது கொள்கையை நம்பிக்கையுடன் பின்பற்றுவோர் தர்மம் அதர்மம் என்னும் கர்மங்களினின்று அதாவது நற்செய்கை தீச் செய்கையினின்று விடுபடுகின்றனர்.

ये त्वेतदभ्यसूयन्तो नानुतिष्ठन्ति मे मतम् ।
सर्वज्ञानविमूढांस्तान्विद्धि नष्टानचेतस: ॥ ३२॥

**யே த்வ ஏதத் அப்யஸூயந்தோ நானுதிஷ்டந்தி மே மதம் ।**
**ஸர்வ - ஜ்ஞான - விமூடாம்ஸ் தான் வித்தி நஷ்டான் அசேதஸ: ॥32॥**

***ஆனால் எவர்கள் என்னுடைய இக்கொள்கையை குறைகூறி நிந்திப்பவர்களாய்ப் பின்பற்றுவதில்லையோ, எவ்வித ஞானமுமில்லாத அம்மூடர்களை அழிந்து போனவர்களாகவே அறிந்து கொள்.***

பிறகு ஏன் அவர்கள் உமது கொள்கையைப் பின்பற்றாது தமது சுதர்மத்தைப் புறக்கணித்து பிறர் தர்மங்களைப் பின்பற்றுகின்றனர்? உமக்கு எதிராக நடப்பவர்கள், உமது கட்டளைகளை மீறுகின்ற குற்றத்திற்கு ஏன் அஞ்சுவதில்லை?

सदृशं चेष्टते स्वस्या: प्रकृतेर्ज्ञानवानपि ।
प्रकृतिं यान्ति भूतानि निग्रह: किं करिष्यति ॥ ३३॥

**ஸத்ருஶம் சேஷ்டதே ஸ்வஸ்யா: ப்ரக்ருதேர் ஜ்ஞானவான் அபி ।**
**ப்ரக்ருதிம் யாந்தி பூதானி நிக்ரஹ: கிம் கரிஷ்யதி ॥ 33॥**

***ஞானமுள்ளவன் கூடத் தனது இயற்கைக்கு ஏற்பவே நடக்கிறான். உயிர்கள் அதனதன் இயற்கைப்படி நடக்கின்றன. அடக்குதல் பயன்படாது.***

ஞானவானுந் தனது இயற்கைக்கேற்பவே செயலைச் செய்கிறான். இயற்கை என்பது முற்பிறப்பில் செய்த தர்ம அதர்மங்களின் மணம் இப்பிறப்பிலும் தொடர்ந்து வருவதாகும். அது பிரக்ருதி என்றும் அழைக்கப்படும். அதற்கு ஏற்பவே ஞானவான் உள்ளிட்ட ஒவ்வொருவரும் நடக்கின்றனர். அவ்வாறிருக்க மூடனைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? ஆகையால் உயிர்கள் தத்தம் இயற்கையைப் பின்பற்றுகின்றன. நானோ வேறொருவனோ அதனைத் தடுத்து நிறுத்துவதால் என்ன பயன்? அதாவது இயற்கை என்பது எனக்கோ, வேறொருவனுக்கோ அடக்குதற்கரியதாகும்.

எல்லா உயிர்களும் அவற்றின் பிரகிருதிக்கேற்பவே நடப்பனவாகவும் - பிரகிருதியற்றதாக எதுவும் இல்லை என்றாலும் - அப்போது மனிதனின் தனிப்பட்ட முயற்சிக்கு இடமின்றிப் போவதால், சாத்திரம் பயனற்றதே என்னுமிடத்துப் பகவான் கூறுகிறார்:

**इन्द्रियस्येन्द्रियस्यार्थे रागद्वेषौ व्यवस्थितौ ।**
**तयोर्न वशमागच्छेत्तौ ह्यस्य परिपन्थिनौ ॥ ३४॥**

**இந்த்ரியஸ்யேந்த்ரியஸ்யார்த்தே ராக - த்வேஷௌ**
**வ்யவஸ்திதௌ ।**
**தயோர் ந வஶம் ஆகச்சேத் தௌ ஹி அஸ்ய பரிபந்தினௌ ॥ 34॥**

*விருப்பு வெறுப்புக்கள் ஒவ்வொரு புலனுடைய நுகர்ச்சிப் பொருளிலும் அமைந்துள்ளன. அவற்றிற்கு எவனும் ஆளாகக் கூடாது. ஏனெனில் அவை இவனுக்கு விரோதிகளாம்.*

ஓசை முதலியப் புலனுகர்ச்சிப் பொருட்களைப் பொருத்த மட்டில் வேண்டிய பொருளின் மீது விருப்பும், வேண்டாதப் பொருளின் மீது வெறுப்பும் ஒருவனுக்கு உண்டாகின்றன. இவ்வாறு புலனுகர்ச்சிப் பொருட்களில் விருப்பு வெறுப்புக்கள் மலிந்து கிடக்கின்றன. இனி, தனிமனித முயற்சிக்கும், சாத்திர உபதேசத்திற்கும் இதில் எங்கு இடம் இருக்கிறது என்று கூறுகிறேன். சாத்திர உபதேசங்களைப் பின்பற்றுபவன் ஆரம்பத்திலிருந்தே விருப்பு வெறுப்புகளுக்கு ஆட்படக்கூடாது. காரணம் எது ஒரு மனிதனின் பிரகிருதியோ அது விருப்பு வெறுப்புக்களை முன்னிட்டே அம்மனிதனைக் கொண்டு செலுத்துகின்றது. அப்போது அவனுக்குத் தனது கர்மத்தைக் கைவிடுதலும் பிறர் தர்மத்தை மேற்கொள்ளலும் உண்டாகின்றன. ஆனால் எப்பொழுது (ஒருவன்) விருப்பு வெறுப்புக்களை அவற்றின் விரோதியான விவேக புத்தியால் மறுதலிக்கின்றானோ அப்போது அவன் சாத்திர உபதேசத்தில் கருத்து உடையவனாக ஆகின்றானேயொழிய பிரகிருதி வசமாவதில்லை. திருடர்களைப் போல் அவன் செல்லும் வழியில் அவனுக்குத் தீமை செய்வன இந்த விருப்பும் வெறுப்பும் ஆதலினால் சாஸ்திரத் தொடர்புடைய விவேக புத்தியால் நல்லனவற்றைச் செய்தலும், தீயனவற்றைத் தவிர்த்தலும் வேண்டும் என்பது பொருள்.

அடுத்து, விருப்பு வெறுப்புக்களால் செலுத்தப்படுபவன் 'பிறருடைய தர்மமும், தர்மமேயாதலினால் செய்யத் தக்கதுதான்' என்று சாத்திர உபதேசத்தை வேறுவிதமாகப் புரிந்து கொள்கிறான். இது சரியன்று:

**श्रेयान्स्वधर्मो विगुणः परधर्मात्स्वनुष्ठितात् ।**
**स्वधर्मे निधनं श्रेयः परधर्मो भयावहः ॥ ३५॥**

**ஸ்ரேயான் ஸ்வ-தர்மோ விகுண: பர-தர்மாத் ஸ்வ-அனுஷ்டிதாத் ।**
**ஸ்வ-தர்மே நிதனம் ஶ்ரேய: பர-தர்மோ பயாவஹ: ॥ 35॥**

*நன்றாகச் செய்யப்படும் பிறர் தர்மத்தைக் காட்டிலும், குணமற்றதாயினும் சுதர்மமே சிறந்ததாம். சுதர்மத்தில் சாதலும் நன்றாம். பிறர் தர்மம் அச்சத்திற்கிடந்தரும்.*

செவ்வனே செய்யப்படும் பிறர் தர்மத்தைக் காட்டிலும், குறைவுடையதாயினும் சுதர்மமே சிறந்ததாகும். பிறர் தர்மத்தில் உயிர் பிழைப்பதைக் காட்டிலும், அதர்மத்தில் சாதலும் நன்றாம். ஏனெனில் பிறர் தர்மம் நரகத்திற் செலுத்துதல் போன்ற அச்சத்திற்கு இடந்தருவன ஆதலின்.

தீமையின் ஊற்றுக்கண் எதுவென்று 2.62 மற்றும் 3.34 சுலோகங்களில் எடுத்துக் காட்டப்பட்டது. ஆயினும் பல்வேறு இடங்களில் சிதறிக் கிடப்பதும், நன்றாகப் புலப்படாமலும் இருக்கின்ற மேற்கூறிய கருத்தினை சுருக்கமாகவும், தெளிவாகவும் அறியக் கருதிய அர்ஜுனன் 'அதன் காரணம் யாதென உறுதியாகத் தெரிந்தாலன்றோ நான் அதனை நீக்க முயற்சிப்பேன்' என்று கூறுகிறான்.

अर्जुन उवाच

**अथ केन प्रयुक्तोऽयं पापं चरति पूरुषः ।**
**अनिच्छन्नपि वार्ष्णेय बलादिव नियोजितः ॥३६॥**

*அர்ஜுன உவாச*

**அதகேன ப்ரயுக்தோ (அ)யம் பாபம் சரதி பூருஷ: ।**
**அனிச்சன் அபி வார்ஷ்ணேய பலாத் இவ நியோஜித ॥ 36॥**

*அர்ஜுனன் கூறினான்:*

*விருஷ்ணி குலத் தோன்றலே, மனிதனுக்கு இச்சை இல்லாதபோதும் அவனை வலியக் கொண்டு புகுத்துவதுபோல், எதனால் தூண்டப்பட்டுப் பாவம் செய்கிறான்?*

தூண்டப்பட்டு - அரசனால் ஏவப்பட்ட வேலைக்காரன் போல். வார்ஷ்ணேய - விருஷ்ணி குலத்தில் பிறந்தவர். அரசனால் தூண்டப்பட்டவன்

போல் என்னும் உதாரணம் விருப்பமில்லாமல் தொழிலைச் செய்வதற்குக் கூறப்பட்டது.

பகவான் கூறுகிறார் : "நீ எதைப் பற்றி என்னிடம் வினவுகின்றாயோ, அதை, சகல நாசங்களையும் செய்கின்ற அச்சத்துருவைப் பற்றிக் கூறுகிறேன் கேள்."

செல்வம் முதலிய ஆறுவகையான வளங்கள் எந்த வாசுதேவரிடத்து எப்பொழுதும் தடையின்றி முழுமையாக நிறைந்திருக்கின்றனவோ, எவருக்கு இப்பிரபஞ்சத்தின் படைப்பு முதலானவற்றைப் பற்றிய முழு அறிவு உள்ளதோ அந்த வாசுதேவருக்குப் பகவான் என்று பெயர். இதனை விஷ்ணு புராணம்:

"ஞானம், பலம், ஐஶ்வர்யம், வீர்யம், சக்தி, தேஜஸ் என்னும் ஆறு இயற்பண்புகளுக்குப் 'பகம்' என்று பெயர்" (வி.பு. 6.5.74) என்றும்,

"உயிர்களின் படைப்பையும், அழிவையும், வருகையும், செய்கையும், ஞானத்தையும், அஞ்ஞானத்தையும் அறிபவர் 'பகவான்' எனப்படுகிறார்" (வி.பு. 6.5.78) என்றும் கூறுகிறது.

**श्रीभगवानुवाच**

**काम एष क्रोध एष रजोगुणसमुद्भवः ।**
**महाशनो महापाप्मा विद्ध्येनमिह वैरिणम् ॥ ३७॥**

*ஸ்ரீபகவான் உவாச*

**காம ஏஷ க்ரோத ஏஷ ரஜோ-ஸமுத்பவ:**
**மஹாஶனோ மஹா-பாப்மா வித்தி ஏனம் இஹ வைரிணம் ॥ 37॥**

*ஸ்ரீபகவான் கூறினார்*

***இது காமம், இது கோபம், இவை இரஜோ குணத்தில் பிறந்தவை. பெருந்தீனி வேண்டுபவை. கொடிய பாவத்தை விளைவிப்பவை. இவற்றை இவ்வுலகில் சத்துருவாக அறிவாய்.***

உலகின் எதிரியாக இருப்பது காமமே. அதிலிருந்தே உயிர்களுக்கு அனைத்துத் தீமைகளும் உண்டாகின்றன. காமம் ஏதோ ஒரு காரணத்தால் தடை செய்யப்படும்பொழுது அது கோபமாக மாறுகின்றது. ஆதலால் கோபமும் அதுவேயாகும். இரஜோ குணத்தினின்று காமம் பிறக்கிறது. அல்லது இரஜோ குணம் பிறப்பதற்குக் காமம் காரணமாகிறது. ஏனெனில் காமம் பிறந்தவுடன் இரஜோ குணத்தைத் தலையெடுக்கச் செய்து ஒருவனைச் செயல் புரியுமாறுத் தூண்டுகிறது. இரஜோ குணத்தினால் அடிமைத் தளை பூண்டவர்கள் "ஆசையாலன்றோ நான் அடிமைத் தொழில் செய்விக்கப்படுகிறேன்' என்று புலம்புவதை நாம் அடிக்கடிக் கேட்கிறோம். காமம் பெருந்தீனி வேண்டுவது.

அதனால் கொடியது. உயிர், காமத்தினால் தூண்டப்பட்டன்றோ பாவத்தைச் செய்கிறது. ஆகையால் இல்வாழ்க்கையில் காமத்தைச் சத்துருவாக அறிவாயாக.

ஆசை எவ்வாறு சத்துருவாக இருக்கிறது என்பதை உதாரணங்களால் தெளிவுபடுத்துகிறார் :

**धूमेनाव्रियते वह्निर्यथादर्शो मलेन च ।**
**यथोल्बेनावृतो गर्भस्तथा तेनेदमावृतम् ॥ ३८॥**

**தூமேனாவ்ரியதே வஹ்நிர் யதாதர்ஸோ மலேன ச ।**
**யதோல்பேனாவ்ருதோ கர்பஸ் ததா தேனேதம் ஆவ்ருதம் ॥ 38॥**

*புகையினால் தீ சூழப்பட்டிருப்பது போன்றும், கண்ணாடி அழுக்கால் மாசுபடுவது போன்றும், கர்ப்பத்தைக் கருப்பை சூழ்ந்திருப்பது போன்றும் காமமாகிய அதனால் இது சூழப்பட்டிருக்கின்றது.*

'இது' என்று சொல்லப்படுவதும், காமத்தினால் சூழப்பட்டிருப்பதும் எது? பதில் பின்வருமாறு :

**आवृतं ज्ञानमेतेन ज्ञानिनो नित्यवैरिणा ।**
**कामरूपेण कौन्तेय दुष्पूरेणानलेन च ॥ ३९॥**

**ஆவ்ருத்தம் ஜ்ஞானம் ஏதேன ஜ்ஞானினோ நித்ய-வைரிணா ।**
**காம-ரூபேண கௌந்தேய துஷ்பூரேணானலேன ச ॥ 39॥**

*குந்தி மைந்த! காமம் என்னும் இந்நிரப்பொணாத்தீ ஞானிக்கு நித்தியப் பகையாம். இது ஞானத்தைச் சூழ்ந்திருக்கின்றது.*

ஞானி தீமையை அனுபவிப்பதற்கு முன்பே தான் ஆசையினால் தீய வழிக்குத் தூண்டப்படுகின்றோம் என்பதை அறிகிறான். இதன் காரணமாக எப்போதும் அவன் வேதனைப்படுகிறான். ஆகையால் காமம் எப்போதும் சத்துரு என்பதை ஞானியே அன்றி மூடன் அறிவதில்லை. புலனுகர்ச்சிப் பொருட்களை நாடும் பொழுது அவன் (மூடன்) காமத்தைத் தோழனாகக் காண்கிறான். ஆனால் துன்பம் வந்துற்ற பொழுது, ஆசையே தனது துன்பத்திற்குக் காரணம் என்பதை பின்னரேயன்றி அவன் முன்னர் அறிவதில்லை. ஆகையால் இது ஞானிக்கு எப்போதும் சத்துரு என்றறிக. அது நிரப்ப முடியாததும், போதுமென்னும் திருப்தியில்லாததுமாகும். அதன் நுகர்ச்சியின் ஆற்றலுக்கு ஓர் எல்லையே இல்லை.

மேலும், ஞானத்தை மறைப்பதின் மூலம் அனைவர்க்கும் சத்துருவாக விளங்கும் காமத்தின் இருப்பிடம் எது? பகவான் கூறுகிறார் : "சத்துருவின் இருப்பிடத்தை அறிந்து கொண்டால், சத்துருவை எளிதாகக் கொல்ல முடியும்"

इन्द्रियाणि मनो बुद्धिरस्याधिष्ठानमुच्यते ।
एतैर्विमोहयत्येष ज्ञानमावृत्य देहिनम् ॥ ४० ॥

**இந்த்ரியாணி மனோ புத்திர் அஸ்யாதிஷ்டானம் உச்யதே ।**
**ஏதைர் விமோஹயதி ஏஷ ஜ்ஞானம் ஆவ்ருத்ய ॥ 40 ॥**

***புலன்களும், மனமும், புத்தியும், இதன் இருப்பிடம் என்பர். இது இவற்றின் வழியாக ஞானத்தைச் சூழ்ந்து மனிதனை மயக்குகின்றது.***

இதனுடைய - காமத்தினுடைய. இவற்றின் வழியாக - புலன்கள் முதலான இருப்பிடத்தின் வழியாக. இது - காமம்.

எதனால் இப்படி (காமம் இருக்கின்றதோ) -

तस्मात्त्वमिन्द्रियाण्यादौ नियम्य भरतर्षभ ।
पाप्मानं प्रजहि ह्येनं ज्ञानविज्ञाननाशनम् ॥ ४१ ॥

**தஸ்மாத் த்வம் இந்த்ரியாணி ஆதௌ நியம்ய பரதர்ஷப**
**பாப்மானம் ப்ரஜஹி ஹி ஏனம் ஜ்ஞான-விஜ்ஞான-நாஸனம் ॥ 41 ॥**

***ஆதலால் பரதகுலத்திற் சிறந்தோனே! நீ முதலில் புலன்களை கட்டுப்படுத்திக் கொண்டு சாத்திர அறிவையும், அனுபவ அறிவையும் அழிக்கின்ற இதனைக் கொன்று விடு.***

நீ (ஆசைகளைக் கட்டுப்படுத்துவதற்கு) முன்பே புலன்களை கட்டுப்படுத்திக் கொண்டு தீயதான செய்கையுடையதாய், சாத்திர அறிவையும், அனுபவ அறிவையும் அழிப்பதான இக்காமத்தைத் தூரத்தள்ளிவிடு.

ஞானம் : சாத்திரத்தினின்றும், குருவிடமிருந்தும் ஆத்மா முதலான வற்றை அறிதல். விஞ்ஞானம் : அவ்வாறு அறிந்தவற்றைத் தானே தனிப்பட அனுபவித்தல். நன்மை தருவதான அந்த ஞான விஞ்ஞானங்கட்கு ஊறு செய்கின்ற காமத்தை உன்னிடமிருந்து உதறித் தள்ளிவிடு என்று பொருளாகும்.

"முதலில் புலன்களை அடக்கிக் கொண்டு காமமாகிய சத்துருவைக் கொல்" என்று கூறப்பட்டது. அவ்வாறெனில் எங்கே நின்று கொண்டு யாரைச் சார்ந்து காமத்தைக் கொல்வது? என்றால் பதில் பின் வருமாறு :

इन्द्रियाणि पराण्याहुरिन्द्रियेभ्यः परं मनः ।
मनसस्तु परा बुद्धिर्यो बुद्धेः परतस्तु सः ॥ ४२ ॥

**இந்த்ரியாணி பராணி ஆஹுர் இந்த்ரியேப்ய: பரம் மன: ।**
**மனஸஸ் து பரா புத்திர் யோ புத்தே: பரதஸ் து ஸ: ॥ 42 ॥**

*புலன்களை உயர்வுடையனவென்பர். அவற்றிலும் மேலானது மனம். மனதினைக் காட்டிலும் புத்தி மேலானது. புத்திக்கும் மேலானது அது (ஆத்மா).*

செவி முதலிய புலன்கள் ஐந்து. வெளிப்படையாகவும், வரையறைக்குட்பட்டதாகவும், ஸ்தூலமாகவும் உள்ள உடலுடன் ஒப்பிடும்போது, சூக்குமமாகவும், உள்ளே இருப்பனவாகவும், பரந்தும் செயல்படுகின்ற புலன்கள் மேலானவை என்று ஞானிகள் கூறுகின்றனர். அவ்வாறே எண்ணங்கள் மற்றும் ஆசைகளினாலான மனம் அப்புலன்களை விட மேலாம். தீர்மானிக்கும் தன்மையுடைய புத்தியோ மனதினை விட மேலானது. அதுபோல் புத்தி உள்ளிட்ட அனைத்திற்கும் அப்பால் எது உள்ளதோ, காமமானது புலன்கள் முதலியவற்றை இருப்பிடமாகக் கொண்டு எந்த ஒருவனை அவனது ஞானத்தை மறைத்து மயக்குகின்றது என்று கூறப்பட்டதோ, அது புத்தியைவிட மேலானதாம். அதுவே புத்தியைப் பார்க்கும் பரமாத்மாவாகும்.

**एव बुद्धेः पर बुद्ध्वा सस्तभ्यात्मानमात्मना ।**
**जहि शत्रुं महाबाहो कामरूपं दुरासदम् ॥४३॥**

**ஏவம் புத்தே: பரம் புத்த்வா ஸம்ஸ்தப்யாத்மானம் ஆத்மனா ।**
**ஶத்ரும் மஹா-பாஹோ காம-ரூபம் துராஸதம் ॥ 43॥**

*பெருந்தோளா! இவ்வாறு புத்திக்கும் மேலானதை அறிந்து மனதினை மனதினால் அடக்கி, வெல்லுதற்கரிதான காமமாகிய எதிரியைக் கொல்வாயாக.*

புத்திக்கு மேலான ஆத்மாவை இவ்வாறு அறிந்து கொண்டு, மனதினை, உன் மனதினாலேயே அலைபாய விடாது நன்கு நிலைபெறச் செய்து - அதாவது சுத்தமானத் தெளிந்த மனதினால் சஞ்சலங்களை நீக்கி - காமமாகிய இவ்விரோதியைக் கொல்வாயாக. அறிதற்கு அரிய பல தன்மைகள் உடைமையால் வெல்லுதற்கரியது காமம்.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "கர்மயோகம்" என்னும் மூன்றாம் அத்தியாயம் நிறைவுபெறுகிறது.



## அத்தியாயம் நான்கு

# ஞான யோகம்

கர்மயோகத்தைக் கருவியாகக் கொண்டு துறவறத்தோடு கூடி நிற்பதுமாகிய எந்த யோகம் முதல் இரண்டு அத்தியாயங்களில் கூறப்பட்டதோ, செய்கையினால் உணரப்படும் கர்மயோகமும், செய்கையின்றி இருப்பதினால் உணரப்படும் ஞானயோகமுமாகிய வேதப் பொருள் எதனில் நிறைவு பெற்றிருக்கின்றதோ, அந்த யோகமே கீதை முழுவதும் பகவான் உபதேசிக்கக் கருதியதாகும். அதனால் வேதத்திற் கூறப்பட்டப் பொருளை அந்த ஞானயோகத்திற் நிறைவு பெற்றதாகக் கொண்டு ஸ்ரீ பகவான் அதன் வரலாற்றை எடுத்துரைத்து அதனைச் சிறப்பிக்கின்றார்.

**श्रीभगवानुवाच**

**इमं विवस्वते योगं प्रोक्तवानहमव्ययम् ।**
**विवस्वान्मनवे प्राह मनुरिक्ष्वाकवेऽब्रवीत् ॥ १॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவான் அஹம் அவ்யயம்**
**விவஸ்வான் மனவே ப்ராஹ மனுர் இக்ஷ்வாகவே (அ)ப்ரவீத் ॥ 1॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***இந்த அழிவற்ற யோகத்தை நான் முன்னர் விவஸ்வானுக்குக் கூறினேன். விவஸ்வான் மனுவுக்குக் கூறினான். மனு இக்ஷ்வாகு மன்னனுக்குக் கூறினான்.***

உலகைக் காக்கும் சத்திரியர்கள் ஆற்றல் பெரும்பொருட்டு இந்த யோகத்தினை நான் படைப்பின் ஆரம்பத்தில் சூரியனுக்கு எடுத்துரைத்தேன். அந்த யோகத்தினால் வலிமை பெற்றவரன்றோ பிராமணர்களைக் காக்க வல்லவராகின்றார். பிராமணரும், சத்திரியரும் பாதுகாக்கப்படுவரேல், உலகமே பாதுகாக்கப்படும். அழிவிலாப் பயனுடையதாதலின் இந்த யோகம் அழிவற்றதாகும். உள்ளதை உள்ளபடி உணர்தலிலே ஊன்றி நிற்பதாகிய இந்த யோகத்தினுடைய முக்தி என்னும் பயனானது ஒரு பொழுதும் அழிவுறுவதில்லையன்றோ, அந்த விவஸ்வான் (சூரியன்) இந்த யோகத்தை மனுவிற்கு எடுத்துரைத்தான். மனு தனது மைந்தனும், சூரிய குலத்து முதல் மன்னனுமாகிய இக்ஷ்வாகு என்னும் அரசனுக்கு எடுத்துரைத்தான்.

एवं परम्पराप्राप्तमिमं राजर्षयो विदुः ।
स कालेनेह महता योगो नष्टः परन्तप ॥२॥

**ஏவம் பரம்பரா - ப்ராப்தம் இமம் ராஜர்ஷயோ விது: ।**
**ஸ காலேனேஹ மஹதா யோகோ நஷ்ட: பரந்தப ॥ 2॥**

*இவ்வாறு வழிவழியாக வந்த இதனை ராஜ ரிஷிகள் அறிந்திருந்தனர். பரந்தபா, அந்த யோகம் வெகுநாளாகிப் போனதினால் இவ்வுலகில் மறைந்து போயிற்று.*

இவ்வாறு சத்திரியர்களிடையே வழிவழியாக வழங்கி வந்த இந்த யோகத்தினை ராஜரிஷிகள் அறிந்திருந்தனர். (ஜனகர், புரூரவசு போன்றோர் ராஜரிஷிகளாவர்.) வெகு காலம் ஆகிவிட்டபடியால் அந்த யோகம் இடையிலே தொடர்பறுந்து போயிற்று பரந்தப. பரர் என்றால் பகைவர் என்று பொருள். அவர்களைத் தன் பராக்கிரமம் என்னும் ஒளிக் கதிர்களால் சுடுபவன் பரந்தபன் ஆவான். அதாவது பகைவர்களைச் சுடுவோன் ஆவான்.

புலனடக்கமில்லாத மெலிந்தவர்களின் கரங்களில் இந்த யோகமானது வீழ்ந்துபட்டது கண்டும், மக்கள் தங்கள் வாழ்வின் குறிக்கோளாகிய முக்தி பெற இயலாதவர்களாக இருப்பது கண்டும்,

स एवायं मया तेऽद्य योगः प्रोक्तः पुरातनः ।
भक्तोऽसि मे सखा चेति रहस्यं ह्येतदुत्तमम् ॥३॥

**ஸ ஏவாயம் மயா தே(அ)த்ய யோக: ப்ரோக்த: புராதன: ।**
**பக்தோ (அ)ஸி மே ஸகா சேதி ரஹஸ்யம் ஹி ஏதத் உத்தமம் ॥ 3॥**

*இந்தப் பழமையான யோகமே, நீ எனது பக்தனாகவும், நண்பனாகவும் விளங்குகின்றாய் என்பதினால் இன்று உனக்கு என்னால் கூறப்பட்டது. இது உயர்ந்த ரகசியமாகும்.*

இந்த ஞானம், இந்த யோகம், உயர்ந்த ரகசியமுமாகும்.

பகவான் கூறியது ஒன்றிற்கொன்று முரணானது என்னும் எண்ணம் ஒருவருக்கும் உண்டாகக்கூடாது என்னும் கருத்திலும், அப்படி ஓர் எண்ணம் உண்டாகுமென்றால் அதனை நீக்க வேண்டும் என்னும் கருத்திலும், பகவானை மறுத்துப் பேசுபவன் போல் அர்ஜுனன் கூறினான்.

अर्जुन उवाच

अपरं भवतो जन्म परं जन्म विवस्वतः ।
कथमेतद्विजानीयां त्वमादौ प्रोक्तवानिति ॥४॥

*அர்ஜுன உவாச*

**அபரம் பவதோ ஜன்ம பரம் ஜன்ம விவஸ்வத: ।**
**கதம் ஏதத் விஜானீயாம் த்வம் ஆதௌ ப்ரோக்தவான் இதி ॥ 4॥**

*அர்ஜுனன் கூறினான்:*

***உமது பிறப்பு பிந்தியது; விவஸ்வானுடைய பிறப்பு முந்தியது. இதனை நீர் ஆதியில் கூறினீரென்று எங்ஙனம் நான் அறிவேன்?***

உமது பிறப்பு வசுதேவருடைய வீட்டில் பின்னர் நிகழ்ந்தது. சூரியனுடைய பிறப்போ ஆதியில் படைப்பின் ஆரம்பத்தில் உண்டானதாகும். அதனால் இந்த யோகத்தை ஆதியில் அருளிச் செய்தவரான நீரே இப்பொழுது இன்று எனக்கும் அருளிச் செய்கின்றீரென இதனை முரண்பாடு எதுவுமின்றி நான் புரிந்து கொள்வது எங்ஙனம்?

'வாசுதேவர் ஈசுவரன் அல்லர். முற்றும் உணர்ந்தோருமல்லர்' என்று மூடர்களுக்கு எழும் ஐயத்தினை நீக்கும் பொருட்டும், அர்ஜுனனின் கேள்வியும் அவ்வாறே இருந்ததினாலும் ஸ்ரீ பகவான் கூறினார்.

**श्रीभगवानुवाच**

**बहूनि मे व्यतीतानि जन्मानि तव चार्जुन ।**
**तान्यहं वेद सर्वाणि न त्वं वेत्थ परन्तप ॥५॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**பஹூனி மே வ்யதீதானி ஜன்மானி தவ சார்ஜுன ।**
**தானி அஹம் வேத ஸர்வாணி ந த்வம் வேத்த பரந்தப ॥ 5॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***அர்ஜுனா, எனக்கும் உனக்கும் பல பிறவிகள் கழிந்திருக்கின்றன. நான் அவற்றை அறிவேன், நீ அறிவதில்லை பரந்தபா.***

முன்னையத் தர்ம அதர்மச் செயல்களால் உனது ஞானப் பார்வை மறைக்கப்பட்டிருப்பதினால் நீ அப்பிறப்புகளைப் பற்றி அறிவதில்லை. இதற்கு மாறாக நான் இயல்பாகவே நித்தியனாய், சுத்தனாய், முக்தனாய், எல்லையற்றவனாக இருப்பதால் எனது ஞானப் பார்வையானது மறைக்கப்படவில்லை. அதாவது நான் அப்பிறப்புக்களை நன்கறிவேன் என்பதாம்.

அவ்வாறு நித்தியராய், ஈசுவரராய் இருக்கின்ற உமக்குத் தர்ம அதர்மங்கள் இல்லாதிருந்தும் பிறப்பு எங்ஙனம் சம்பவிக்கின்றது? எனில் கேட்பாயாக.

**अजोऽपि सन्नव्ययात्मा भूतानामीश्वरोऽपि सन् ।**
**प्रकृतिं स्वामधिष्ठाय सम्भवाम्यात्ममायया ॥ ६॥**

**அஜோ(அ)பி ஸன்னவ்யயாத்மா பூதானாம் ஈஶ்வரோ (அ)பிஸன் ।**
**ப்ரக்ருதிம் ஸ்வாம் அதிஷ்டாய ஸம்பவாமி ஆத்ம-மாயயா ॥ 6॥**

***பிறப்பற்றவனாயினும், அழிவற்றவனாயினும், உயிர்கட்கெல்லாம் ஈசனே ஆயினும் நான் எனது இயற்கையில் நிலை நின்று ஆத்ம மாயையால் பிறப்பெய்துகிறேன்.***

பிறப்பற்றவனாயினும் இயற்கையினால் எனது ஞானசக்தி அழிவற்றதாயினும், பிரம்மா முதல் சிறுபுல் வரையில் அனைத்து உயிர்களுக்கும் ஈசனேயானினும்; இந்த உலகமெல்லாம் எதற்கு ஆட்பட்டு எதனால் மயக்கப்பட்டு, வாசு தேவரைத் தனது ஆத்மாவாக அறிய முடியவில்லையோ, அந்தப் பிரக்ருதியை, அதாவது விஷ்ணுவிற்குரியதும், முக்குணங்களினால் ஆனதுமான எனது மாயையின் மூலம் நான் உடம்பொடு நிற்பவன் போல் பிறப்பெடுத்தவன் போல் தோன்றுகின்றேன். ஆனால் உண்மையில் நான் பிறப்பு எடுப்பதில்லை.

பிறகு அவர் எதற்காக எப்பொழுது பிறப்பெடுக்கின்றார்? எனில் பதில் பின்வருமாறு:

**यदा यदा हि धर्मस्य ग्लानिर्भवति भारत ।**
**अभ्युत्थानमधर्मस्य तदात्मानं सृजाम्यहम् ॥ ७ ॥**

**யதா யதா ஹி தர்மஸ்ய க்லானிர் பவதி பாரத ।**
**அப்யுத்தானம் அதர்மஸ்ய ததாத்மானம் ஸ்ருஜாமி அஹம் ॥ 7॥**

***பாரதா எவ்வெப்போது தர்மத்திற்குக் குறைவும் அதர்மத்திற்கு ஏற்றமும் உண்டாகின்றதோ அப்போதெல்லாம் நான் என்னைப் பிறப்பித்துக் கொள்கிறேன்.***

வர்ணம் மற்றும் ஆஸ்திரமத்தினாலானதும் உயிர்களின் செல்வத்திற்கும், உயர் நன்மைக்கும் (முக்தி) கருவியாக விளங்குகின்ற தர்மத்திற்குக் குறைவும், அதர்மத்திற்கு ஏற்றமும் வரும்போதெல்லாம் நான் என்னை மாயையினால் பிறப்பித்துக் கொள்கின்றேன்.

இது எந்நோக்கத்திற்காக?

**परित्राणाय साधूनां विनाशाय च दुष्कृताम् ।**
**धर्मसंस्थापनार्थाय सम्भवामि युगे युगे ॥ ८॥**

**பரித்ராணாய ஸாதூனாம் விநாஶாய ச துஷ்க்ருதாம்**
**தர்ம - ஸம்ஸ்தாபனார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ॥ 8॥**

*நல்லோரைக் காக்கவும் தீயன செய்வோரை அழிக்கவும் தர்மத்தை நிலை நிறுத்தவும் நான் யுகந்தோறும் அவதரிக்கின்றேன்.*

நல்லோர் : நல்வழி நிற்போர் தீயன செய்வோர : புனெறி நின்று பொல்லாங்கு செய்வோர். அந்த,

जन्म कर्म च मे दिव्यमेवं यो वेत्ति तत्त्वतः
त्यक्त्वा देहं पुनर्जन्म नैति मामेति सोऽर्जुन ॥ ९॥

**ஜன்ம கர்ம ச மே திவ்யம் ஏவம் யோ வேத்தி தத்த்வத: ।**
**த்யக்த்வா தேஹம் புனர் ஜன்ம நைதி மாம் ஏதி ஸோ (அ)ர்ஜுன ॥ 9॥**

*எனது தெய்விகத் தன்மையுடைய அவதாரத்தையும் செய்கையையும் எவன் இவ்வாறு உண்மையாக அறிகின்றானோ அவன் தனது உடலைத் துறந்த பின்னர் மறுபிறப்பு எய்துவதில்லை. அர்ஜுனா! அவன் என்னை எய்துகிறான்.*

மானுடர் உடல் போல் பிரகிருதியினால் உண்டாகாது, ஈசுரவனுக்கென்று தெய்வீகமாக அமையப் பெற்ற எனது அவதாரம் மாயையினால் உண்டானதென்றும் நல்லோரைப் பாதுகாத்தல் எனது செய்கையென்றும் முற்கூறியவாறு உள்ளது உள்ளபடி எவன் அறிகின்றானோ, அவன் இந்த உடலை விட்டுப் பிரிந்தவுடன் மறுபிறப்பு எய்த மாட்டான். அர்ஜுனா! அவன் என்னை வந்தெய்துகிறான்.

முக்திக்குரிய இவ்வழி இக்காலத்தில் தோன்றியதல்ல, பிறகு எப்போது தோன்றியதெனில், அது ஆதியில் தோன்றியதாம்.

वीतरागभयक्रोधा मन्मया मामुपाश्रिताः ।
बहवो ज्ञानतपसा पूता मद्भावमागताः ॥ १०॥

**வீத-ராக-பய-க்ரோதா மன்-மயா மாம் உபாஶ்ரிதா:**
**பஹவோ ஜ்ஞான - தபஸா பூதா மத்-பாவம் ஆகதா: ॥ 10॥**

*விருப்பம், அச்சம், சினந் தவிர்த்தோரோய் என் மயமாய், என்னைச் சரண்புகுந்து ஞானத் தவத்தினால் தூய்மை பெற்று என்னியல்பு எய்தினோர் பலர்.*

என் மயமானவர்கள் - பிரம்மத்தை அறிந்தவர்கள்; தமது ஆத்மாவிற்கும், ஈசுவரனுக்கும் பேதமில்லை என்று அறிபவர்கள். பரமேசுவரரான என்னைச்

சரண்புகுந்தவர்கள் - ஞானம் ஒன்றிலேயே உறுதியாக நிற்பவர்கள் என்று பொருள். தபஸ் - தவங்கள் எல்லாவற்றிலும் சிறந்த ஈசுவரனைப் பற்றி அறிவதான ஞானம் என்னும் தவத்தினால் உயர் தூய்மை நிலைபெற்று முக்தியடைந்தனர்.

அவ்வாறாயின் உம்மிடத்தும் விருப்பு வெறுப்பு இருக்கின்றனவா? நீங்கள் முக்தி நிலையினை ஒரு சிலருக்கு மட்டுமேயன்றி அனைவருக்கும் அருள்வதில்லையே ஏன்? எனில் பதில் பின்வருமாறு:

**ये यथा मां प्रपद्यन्ते तांस्तथैव भजाम्यहम् ।**
**मम वर्त्मानुवर्तन्ते मनुष्याः पार्थ सर्वशः ॥११॥**

**யே யதா மாம் ப்ரத்யந்தே தாம்ஸ் ததைவ பஜாமி அஹம் ।**
**மம வர்த்மானுவர்த்தந்தே மனுஷ்யா: பார்த்த ஸர்வஶ: ॥ 11॥**

***எவர்கள் என்னை எவ்வாறு நாடுகின்றனரோ, நான் அவர்களை அவ்வாறே அனுக்ரஹிக்கின்றேன். பார்த்தா! மனிதர் எவ்வாறேனும் என் வழியையேப் பின்பற்றுகின்றனர்.***

எவ்வாறு எப்பயனை வேண்டி யாவர் என்னை நாடுகின்றனரோ, அவ்வாறு அப்பயனை அளிப்பதன் மூலம் நான் அவர்களை அனுக்ரஹிக்கின்றேன். மேலும் அவர்கள் முக்தியில் நாட்டமில்லாதவர்கள் ஆவர். ஏனெனில் ஒரே சமயத்தில் ஒருவன் உலக இன்பங்களிலும், முக்தியிலும் நாட்டம் வைத்தல் இயலாது. ஆகையால் பயனை வேண்டுவோர்க்கு அப்பயனை அளிப்பதன் மூலம் நான் அவர்களை அனுக்ரஹிக்கின்றேன். ஆயினும் யாவர் சாத்திரத்தில் கூறியுள்ளபடி நடந்து, இம்மை மறுமைப் பயனை வேண்டாதவர்களாக இருக்கின்றனரோ, அவர்களுக்கு நான் ஞானத்தினை அருள்கின்றேன். ஞானிகளுக்கும், துறவிகளுக்கும் முக்தியை அளிக்கின்றேன். அவ்வாறே துன்பத்தினின்று விடுபட விரும்புவோர்க்கு துன்பத்தினை நீக்கி அருள்புரிகின்றேன். இவ்வாறு யாவர் என்னை எங்ஙனம் நாடுகின்றனரோ நான் அவர்களுக்கு அங்ஙனமே அருள் புரிகின்றேன். மேலும் விருப்பு, வெறுப்பு, மயக்கம் போன்றவற்றால் ஒருவரையும் நான் அனுக்ரஹிப்பதில்லை. எங்கும் நிறைந்திருக்கும் ஈசுவரனாகிய எனது பாதையை மனிதர்கள் எவ்வாறேனும் பின்பற்றுகின்றனர். இங்கு மனிதர்கள் என்பது அசுரர், மனிதர், விலங்குகள் உள்ளிட்டவற்றில் எப்பயனுக்காக, எக்கர்மத்திற்குரியவராகி, அக்கர்மத்தில் ஈடுபடுவோரைக் குறிப்பிடுகின்றது.

எப்பயனையும் தரவல்ல ஈசுவரனாகிய உமக்கு ஆசை முதலிய குற்றங்கள் இல்லாததினால், உயிர்களை மீட்பதில் நீர் அனைவரிடமும் சமமான பார்வையுடையவராக இருக்கின்றீர். இருந்தும் அனைவரும் எல்லாம் வாசுதேவனே என்னும் எண்ணத்தில், நிலையற்ற இந்த வாழ்க்கையினின்று விடுபட்டு உம்மை ஏன் அடைவதில்லை? என்றால், பதில் பின்வருமாறு:

काङ्क्षन्त: कर्मणां सिद्धिं यजन्त इह देवता:
क्षिप्रं हि मानुषे लोके सिद्धिर्भवति कर्मजा ॥१२॥

**காங்க்ஷந்த: கர்மணாம் ஸித்திம் யஜந்த இஹ தேவதா:**
**க்ஷிப்ரம் ஹி மானுஷே லோகே ஸித்திர் பவதி கர்ம-ஜா ॥ 12॥**

*கர்மங்களின் பயன்களை நாடுகின்றோர் இவ்வுலகில் தேவதைகளை வழிபடுகின்றனர். ஏனெனில் மனித உலகில் கர்மத்தின் பயன் கைகூடுதல் விரைவில் உண்டாகின்றது.*

இவ்வுலகில் தாம் செய்யும் கர்மங்களின் பயன் கைகூட வேண்டுமென்று விரும்புவோர் இந்திரன், அக்னி போன்ற தேவர்களை வழிபடுகின்றனர். சுருதியும் 'எவனொருவன் நான் வேறு அவன் வேறு (அத்தேவன்) என்று எண்ணி பிற தேவர்களை வழிபடுகின்றானோ அவன் ஆடுமாடு போன்ற விலங்குகள் மனிதர்களுக்கு எப்படியோ, அப்படி அத்தேவர்களுக்கு ஆவான்' (பிரு.உ.1.4-10) என்று கூறுகின்றது. பயனை விரும்பி வேறு தேவர்களை வழிபடுவோர் தமது *வர்ணத்திற்கும், ஆஸ்ரமத்திற்கும் விதிக்கப்பட்டக் கர்மத்தைச் செய்து, அதன் பயனை விரைவில் எய்துகின்றனர். சாத்திர விதிகள் இவ்வுலகிலுள்ள மனிதர்களுக்குரியவையாகும். 'மனித உலகில் விரைவாக' என்னும் சொற்றொடரால் பகவான் பிற உலகங்களிலும் கூடக் கர்மத்தின் பயன் கைகூடுதலை எடுத்துக் காட்டுகின்றார். இதில் என்ன வேறுபாடு எனில் மனித உலகில் கர்மத்தின் விதிகள் வர்ணம், ஆஸ்ரமம், போன்றவற்றை அடிப்படையாகக் கொண்டிருக்கின்றன.

மனித உலகில் மட்டுமே வர்ணம், ஆஸ்ரமம் போன்றவற்றிற் கேற்பக் கர்மத்தில் விதிகள் அமைக்கப்பட்டிருக்கின்றன. பிற உலகங்களில் அவ்வாறு இல்லை என்பது ஏன்? அல்லது வர்ணம், ஆஸ்ரமம் போன்றவற்றிற்கேற்ப பிரிக்கப்பட்ட மனிதர்கள் எவ்வாறேனும் உமது வழியையேப் பின்பற்றுகின்றனர் என்று மேலே கூறப்பட்டிருக்கிறது. அவர்கள் உமது வழியை அன்றி பிறர் வழியை ஏன் பின்பற்றுவதில்லை? என்றால் - பதில் பின்வருமாறு:

चातुर्वर्ण्यं मया सृष्टं गुणकर्मविभागश: ।
तस्य कर्तारमपि मां विद्ध्यकर्तारमव्ययम् ॥१३ ॥

**சாதுர் - வர்ண்யம் மயா ஸ்ருஷ்டம் குண - கர்ம - விபாகஶ:**
**தஸ்ய கர்த்தாரம் அபிமாம் வித்தி அகர்த்தாரம் அவ்யயம் ॥ 13॥**

*என்னால், குணத்திற்கும், செய்கைக்கும் ஏற்ப நான்கு வர்ணங்கள் உருவாக்கப்பட்டன. அவற்றின் கர்த்தாவாக நான் இருப்பினும் என்னை மாறுபாடற்றவனாக அகர்த்தாவாக அறிவாயாக.*

குணங்களுக்கும், செயல்களுக்கும் ஏற்ப, ஈசுவரனான என்னால் நான்கு குலங்கள் அமைக்கப்பட்டன. குணங்கள் என்பன சத்துவம், இரஜஸ், தமோ ஆகும். சத்துவ குணமுடைய பிராமணனுக்கு சாந்தம், அடக்கம், தவம் போன்றவை உரிய கர்மங்களாகும். (18.42) இரஜோ குணத்தை முதன்மையாக உடையவனும்,சத்துவ குணத்தைத் துணையாகப் பெற்றிருப்பவனுமான சத்திரியனுக்கு ஆண்மை, வீரம் போன்றவை உரிய கர்மங்களாகும். (18.43) இரஜோ குணத்தை முதுன்மையாகவும் தமோ குணத்தைத் துணையாகவும் பெற்றுள்ள வைசியனுக்கு வேளாண்மை போன்ற தொழில்கள் உரிய கர்மங்களாகும் (18.44). தமோ குணத்தை முதன்மையாகவும், இரஜோ குணத்தைத் துணையாகவும் பெற்றுள்ள சூத்திரனுக்குத் தொண்டு செய்தலே உரிய கர்மமாகும். இவ்வாறு இனங்களுக்கும், செயல்களுக்குமேற்ப நான்கு குலங்கள் அமைக்கப்பட்டன. இதுபோன்ற நான்கு குல அமைப்பு முறை பிற உலகங்களில் இல்லை. அதனால் தான் 'மனித உலகில்' (4.12) என்று குறிப்பாகச் சுட்டப்பட்டது.

மறுப்பு : ஆ! அவ்வாறாயின் நான்கு குலங்களையும் படைத்தல் என்னும் கர்மத்திற்கு நீர் கர்த்தாவாதலால் அதன் பயன் உம்மை வந்து எய்தும். ஆகையால் இவ்வுலக வாழ்வினின்று விடுபடவோ, ஈசுவரனாகவோ ஆக மாட்டீர்?

பதில் : மாயையின் நோக்கில் நான் அச்சயெலுக்குக் கர்த்தாவாக இருந்த போதிலும் உண்மையில் நான் அகர்த்தாவாதலால் நான் இவ்வுலக வாழ்க்கைக்கு உட்படாதவன் ஆவேன்.

மேலும் நீ என்னை எத்தொழிலுக்குக் கர்த்தாவாகக் கருதுகின்றாயோ, உண்மையில் அத்தொழிலைப் பொருத்த மட்டில் நான் அகர்த்தா ஆவேன். காரணம்,

**न मां कर्माणि लिम्पन्ति न मे कर्मफले स्पृहा ।**
**इति मां योऽभिजानाति कर्मभिर्न स बध्यते ॥ १४॥**

**ந மாம் கர்மாணி லிம்பந்தி ந மே கர்ம-பலே ஸ்ப்ருஹா ।**
**இதி மாம் யோ (அ)பிஜாநாதி கர்மபிர் ந ஸ பத்யதே ॥ 14॥**

***கர்மங்கள் என்னைப் பற்றுவதில்லை. கர்ம பலனில் எனக்கு விருப்பமில்லை என என்னை எவன் அறிகின்றானோ அவன் கர்மங்களால் கட்டப்படுவதில்லை.***

அஹங்காரம் என்னும் ஆணவமற்றவனாக நான் இருப்பதால் அக்கர்மங்கள் எனக்கு உடல் முதலியவற்றை உருவாக்கி என்னைப் பற்றுவதில்லை. மேலும் அக்கர்மங்களின் பயன்களில் எனக்கு விருப்பமுமில்லை. ஆனால் உலக வாழ்வில் பற்றுக் கொண்டு இக்கர்மங்களுக்கு 'நான் கர்த்தா' என்னும் எண்ணமும், அக்கர்மங்களின் மீது பற்றும் உள்ளதோ அவர்களைக் கர்மங்கள் பற்றுகின்றன என்பது பொருந்தும்.

இதற்கு மாறாக அவை எனக்கு இல்லாமையினால் கர்மங்கள் என்னைப் பற்றுவதில்லை. எவனொருவன் 'நான் கர்த்தா அன்று, கர்மத்தின் பயனில் எனக்குப் பற்றுமன்று' என்று அறிகின்றானோ அவன் கர்மங்களால் கட்டப்படுவதில்லை. அதாவது அவனுக்கு உடல் முதலானவற்றை உண்டாக்கும் கர்மங்கள் இல்லை என்று பொருள்.

'நான் கர்த்தா இல்லை. கர்மத்தின் பயனில் எனக்குப் பற்றுமில்லை' என,

एवं ज्ञात्वा कृतं कर्म पूर्वैरपि मुमुक्षुभिः ।
कुरु कर्मैव तस्मात्त्वं पूर्वैः पूर्वतरं कृतम् ॥१५॥

**ஏவம் ஜ்ஞாத்வா க்ருதம் கர்ம பூர்வைர் அபி முமுக்ஷுபி: ।**
**குரு கர்மைவ தஸ்மாத் த்வம் பூர்வை: பூர்வதரம் க்ருதம் ॥ 15॥**

***இவ்வாறு அறிந்து முக்தியடைய விரும்பிய முன்னோர்களாலும் கர்மம் செய்யப்பட்டது. ஆகையால் நீ முன்னோர்களால் முன்னர் செய்யப்பட்டக் கர்மத்தைச் செய்வாயாக.***

இவ்வுலக வாழ்விலிருந்து விடுபட விரும்பிய முன்னோர்களாலும் பின்பற்றப்பட்டமையினால் நீ கர்மத்தைச் செய்வாயாக. அதை விடுத்து அமைதியாக இருத்தலோ, கர்மத்தைத் துறத்தலோ உனக்குத் தகாது. நீ அஞ்ஞானி என்றால் அப்போது புத்தித்தூய்மை பெறும் பொருட்டுக் கர்மத்தைச் செய். நீ ஞானி என்றால் உலகினைக் காப்பதற்காகக் கர்மத்தைச் செய். இது இன்றைக்குப் பின்பற்றப்படுவதன்று, ஜனகாதி முனிவர்களால் தொன்று தொட்டேப் பின்பற்றப்படுவதாகும்.

இம்மனித உலகில் கர்மத்தைச் செய்ய வேண்டுமென்று நீங்கள் கூறினால் நான் அதனை மறுக்காது செய்வேன். அதைவிடுத்து முன்னோர்களால் தொன்று தொட்டே செய்யப்படுகிறது என்று குறிப்பாகச் சுட்டுவதேன்? என்று நீ கேட்டால், கர்மம் என்னவென்று அறிந்து கொள்வது மிகவும் கடினமாகும். ஏன்?

किं कर्म किमकर्मेति कवयोऽप्यत्र मोहिताः ।
तत्ते कर्म प्रवक्ष्यामि यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥१६॥

**கிம் கர்ம கிம் அகர்மேதி கவயோ (அ)பி அத்ர மோஹிதா: ।**
**தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யஜ் ஜ்ஞாத்வா மோக்ஷயஸே (அ)ஶுபாத்॥16॥**

***எது கர்மம் எது அகர்மம் என்னும் விஷயத்தில் சிறந்த அறிஞர்களும் மயங்குகின்றனர். எதனை அறிவதால் நீ தீமையினின்று விடுபடுவாயோ அந்தக் கர்மத்தையும், அகர்மத்தையும் நான் உனக்கு எடுத்துரைக்கிறேன்.***

இவ்விஷயத்தில் அறிஞர்களும் மயக்கமடைகின்றனர். அதனால் நான் உனக்கு எது கர்மம், எது அகர்மம் என்று விளக்கிக் கூறுவேன். இவற்றை நீ அறிந்து கொள்வதினால் இவ்வுலக வாழ்க்கை என்னும் துன்பத்தினின்று விடுதலை பெறுவாய்

உடலினால் செய்யப்படும அனைத்துச் செயல்களும் கர்மம், உடல் அசைவற்று ஓய்ந்திருத்தல் அகர்மம் என்று நீ ஒரு போதும் கருதக்கூடாது. பிறகு அவற்றை எவ்வாறு அறிந்து கொள்வது? என்றால் பதில் பின்வருமாறு:

**कर्मणो ह्यपि बोद्धव्यं बोद्धव्यं च विकर्मण: ।**
**अकर्मणश्च बोद्धव्यं गहना कर्मणो गति: ॥१७॥**

**கர்மணோ ஹி அபி போத்தவ்யம் போத்தவ்யம் ச விகர்மண: ।**
**அகர்மணஸ் ச போத்தவ்யம் கஹனா கர்மணோ கதி: ॥ 17॥**

***விதிக்கப்பட்டக் கர்மத்தைப் பற்றியும் அறிதல் வேண்டும்; விலக்கப்பட்டக் கர்மத்தைப் பற்றியும் அறிதல் வேண்டும்; கர்மமின்மை பற்றியும் அறிதல் வேண்டும். கர்மத்தின் போக்கு உணர்தற்கு எளிதன்று.***

சாத்திரத்தில் விதிக்கப்பட்டக் கர்மத்தைப் பற்றியும் விலக்கப்பட்ட கர்மத்தைப் பற்றியும் செயலற்றிருக்கும் அகர்மத்தைப் பற்றியும் நாம் அதிகம் அறிந்து கொள்ள வேண்டியுள்ளது. உண்மையில் கர்மம், அகர்மம், விகர்மம் போன்வற்றின் உண்மை நிலை அறிதற்கரிதாகும்.

பின்னர், நீங்கள் உபதேசிப்பதாக உறுதியளித்ததும், மிகவும் அதிகமான அளவில் அறிந்து கொள்ள வேண்டியதுமானக் கர்மம் மற்றும் அகர்மத்தின் உண்மை நிலை என்ன? என்றால் பதில் பின்வருமாறு:

**कर्मण्यकर्म य: पश्येदकर्मणि च कर्म य: ।**
**स बुद्धिमान्मनुष्येषु स युक्त: कृत्स्नकर्मकृत् ॥१८॥**

**கர்மணி அகர்ம ய: பஶ்யேத் அகர்மணி ச கர்ம ய: ।**
**ஸ புத்திமான் மனுஸ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ன - கர்ம - க்ருத் ॥ 18॥**

***கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் எவன் காண்கிறானோ அவன் புத்திமான்; அவன் யோகி; அவன் கர்மங்கள் அனைத்தையும் செய்தவன் ஆவான்.***

பொதுவாகச் செய்யப்படும் செயலுக்கு 'கர்மம்' என்று பொருள். செயலற்றிருப்பதும் (நிவ்ருத்தி) செயல்புரிவதும் (பிரவ்ருத்தி) ஒரு கர்த்தாவைச் சார்ந்தது ஆதலினால் கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் காணக்கூடும். உண்மையில் செயல் மற்றும் செய்பவன் என்பன போன்ற நமது அனுபவங்கள் எல்லாம் நாம், மெய்ப்பொருளை எய்தாது,

அறியாமை நிலையில் இருக்கும் போதே சாத்தியமாகின்றன. எவன் கர்மத்தில் கர்மமின்மையையும், கர்மமின்மையில் கர்மத்தையும் காண்கின்றானோ அவன் மனிதர்களுள் அறிஞன், யோகி, அனைத்துக் கர்மங்களையும் செய்தவன் என்று கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்பவன் போற்றப்படுகிறான்.

மறுப்பு : 'கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காணக்கூடியவன்' என்று என்ன இது முரண்பாடு? இது போன்ற முரண்பாட்டினால் கர்மத்தை அறிய முடியாது.

பதில் : இந்த மறுப்பு சரியன்று. இவ்வுலகில் அறியாமை மிக்க ஒருவனுக்கு உண்மையில் அகர்மமாயிருப்பது கர்மமாகவும், உண்மையில் கர்மமாயிருப்பது அகர்மமாகவும் தோன்றுகின்றது. அவற்றின் உண்மை நிலை என்னவென்று உணர்த்தும் பொருட்டு பகவான், "எவன் கர்மத்தில் அகர்மத்தை காணக் கூடியவனோ" என்று கூறுகிறார். ஆகையால் முரண்பாடில்லை. அறிவுடைமை போன்றவை பிற ஞானங்களினால் அல்லாமல் ஆத்ம ஞானத்தினால் மட்டுமே அமையும் என்பதினாலும், "கர்ம அகர்மங்களைப் பற்றி அறிதல் வேண்டும்" (4.17) என்று கூறியதன் மூலமும் பகவான் உள்ளதை உள்ளபடி உணருமாறு அருளிச் செய்கிறார். மேலும் தீமையினின்று விடுபடுதலும் மயக்க உணர்வினால் ஆகாது; ஏனெனில், "எதனை அறிவதால் நீ தீமையினின்று விடுபடுவாயோ" (4.16) என்றும் கூறப்பட்டிருக்கிறது. இவ்வாறு உயிர்களெல்லாம் கர்ம அகர்மங்களைப் பற்றித் தவறாகப் புரிந்து கொண்டிருப்பதினால் அத்தவறான எண்ணத்தினை நீக்க வேண்டும் என்பதற்காகப் பகவான், "கர்மத்தில் அகர்மத்தை எவன் காணக்கூடியவனோ" என்பது முதலானவற்றை உபதேசிக்கிறார். மேலும் இலந்தைப் பழங்கள் ஒரு பாத்திரத்தில் இடம் பெற்றிருப்பதுபோல் அகர்மம் கர்மத்தில் இடம் பெற்றிருப்பதாகவோ அல்லது இடமாகக் கொண்டிருக்கிறது என்றோ கூறமுடியாது. ஏனெனில் அகர்மம் என்பது கர்மமில்லை ஆதலின். அதனால் கர்ம அகர்மங்கள் இரண்டும் சாதாரண மக்களால் கானலில் நீர்போன்றும், சிப்பியில் வெள்ளி போன்றும் தவறாகப் புரிந்து கொள்ளப்படுகின்றன.

மறுப்பு : அவ்வாறெனில், கர்மம் எப்போதும் அனைவருக்கும் கர்மம்தான், பிறிதொன்றாகத் தோன்றுவதில்லையோ?

பதில் : இல்லை. கப்பல் கடலில் பயணிக்கையில், அதிலிருக்கும் பயணிக்குக் கரையில் அசைவற்று நிற்கும் மரங்கள் எதிர்த்திசையில் ஓடுவதுபோல் தோன்றுகின்றது. வெகுதூரத்தில் சென்று கொண்டிருப்பவை நமது கண்களுக்கு அசைவற்றதாகத் தோன்றுகின்றன. அதுபோல் இங்கும் ஆத்மாவினிடத்து அகர்மத்திலே கர்மமும், கர்மத்திலே அகர்மமும் தோன்றுவது தவறானது. ஆதலினால் அதனை நீக்கும் பொருட்டு பகவான், "எவன் கர்மத்தில் அகர்மத்தைக் காணக் கூடியவனோ" என்று கூறுகிறார்.

இதுபோன்ற மறுப்பிற்குப் பதில் அடிக்கடிக் கூறப்பட்டிருந்த போதிலும், தவறான கருத்தினால் மீண்டும் மீண்டும் மயக்கத்திற்கு ஆளாகும் மனிதர்கள்,

பலமுறை உபதேசிக்கப்பட்ட உண்மையை மறந்து, .பொய்மைக் கூற்றின் அடிப்படையில் அடிக்கடி மறுப்பு தெரிவிக்கின்றனர். ஆதலினால் மெய்ப் பொருளை அறிவது எத்தனைக் கடினமானது என்பது கண்டு பகவான் மீண்டும் மீண்டும் அம்மறுப்புக்களுக்குப் பதில் கூறுகின்றார்.

ஆத்மாவிடம் கர்மமில்லை என்னும் உண்மை, மிகத்தெளிவாக சுருதி, ஸ்மிருதி மற்றும் யுக்தியினாலும் உபதேசிக்கப்பட்டிருக்கின்றது. அவ்வுண்மை இங்கும் 2.20-25ல் உபதேசிக்கப்படுகிறது. இனி பின்னாலும் உபதேசிக்கப் படும். எனினும், ஆத்மாவின் 'உண்மை நிலைக்கு முரணுடையதாக இருப் பினும், கர்மமற்றதாகிய ஆத்மாவிடம் கர்மத்தைத் தொடர்பு படுத்தும் தவறானப் பழக்கம் மனதில் ஆழமாக வேரூன்றியுள்ளது. அதனால்தான், ''அறிஞர்கள் கூட எது கர்மம்? எது அகர்மம்? என்பதில் மயங்குகின்றனர்'' (4-16) என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. கர்மம் பௌதீக உடலைச் சார்ந்ததாகும். ஆனால், கர்மம் ஆத்மாவைச் சார்ந்தது என்று மனிதன் தவறாகக் கருதுவதோடு, ''நானே கர்த்தா, எனதே கர்மம், கர்மத்தின் பயன் என்னால் துய்க்கப்படுகிறது'' என்று கற்பனை செய்கிறான். அதுபோல் உடல் மற்றும் புலன்களைச் சார்ந்த செயலற் றிருத்தல், ஓய்ந்திருத்தல் என்பதையும், அதில் உண்டாகும் சுகத்தையும் ஆத்மா வின் மீது ஏற்றி, ''நான் அமைதி பெறுவேன், ஆகையால் நான் கவலையோ, செயலோ இன்றி மகிழ்ச்சியடைவேன், நான் இப்போது ஒன்றும் செய்வ தில்லை, நான் அமைதியுடனும், மகிழ்ச்சியுடனும் இருக்கின்றேன்'' என்று மனி தன் கற்பனை செய்கிறான். இப்பொய்மைக் கருத்தை நீக்குவதற்காகவே பக வான், ''எவன் கர்மத்தில் அகர்மத்தைக் காணக் கூடியவனோ'' என்று கூறுகிறார்.

மேலும், உடல் மற்றும் புலன்களைச் சார்ந்த கர்மம் மட்டுமே இங்கு கர்மமாக இருக்க, அகர்மம் செயலற்ற ஆத்மாவிடம் தவறாக அனைவராலும் ஏற்றப்பட்டிருக்கின்றது. ஏனெனில், புத்திமானும் கூட, ''இச்செயலை நான் செய்கிறேன்'' என்றே கருதுகிறான். அதனால் இச்சுலோகத்தின் பொருள் என்னவெனில், கர்மத்திலே அகர்மத்தைக் காண்பவன், அதாவது, ஆத்மாவைச் சார்ந்திருப்பதாக அனைவராலும் கருதப்படும் கர்மம் உண்மையில் ஆத்மாவைச் சார்ந்ததல்ல என்னும் உண்மையான ஞானம் கைவரப் பெற்றவன், கப்பலில் பயணம் செய்பவன், கரையில் நிற்கும் மரங்கள் எதிர்த்திசையில் செல்பவன போல கண்டாலும் அவை உண்மையில் அசைவற்றிருக்கின்றனவென்று அறிபவன் போல் கர்மத்தில் கர்மமின்மையைக் காண்கிறான். உடல், மனம், புலன்கள் முதலியவை செயலின்றி இருக்கும் ஓய்வாகிய அகர்மமானது, ''நான் அமைதியாக எதுவும் செய்யாது, சுகமாக இருக்கின்றேன்'' என்னும் ஆணவமாகிய கர்மத்திற்குக் காரணமாவதால், ஆத்மாவிடம் பொய்மையாக ஏற்றப்பட்ட அகர்மத்திலும் எவன் கர்மத்தைக் காண்கின்றானோ, அதாவது கர்ம அகர்மங்களின் வேறுபாட்டினை எவன் இங்ஙனம் பகுத்தறிகின்றானோ அவன் மனிதரில் புத்திமான், யோகி, அனைத்துக் கர்மங்களையும் செய்தவன் ஆவான். அவன் தீமையினின்று விடுபட்டுச் செய்யக் கூடிய சரியான கர்மத்தைச் (முக்தியடைதலை) செய்திருக்கிறான் என்பது பொருளாகும்.

சில விளக்க நூல் வல்லுநரால் இச்சுலோகம் வேறு விதமாக விளக்கப்பட்டிருக்கிறது. எப்படி? ஈசுவரனுக்கென்று செய்யப்படும் நித்தியக்

கர்மங்களுக்குப் பயன்இன்மையினால் அவை மரியாதையின் பொருட்டு அகர்மங்கள் எனப்படுகின்றன. மேலும் அகர்மங்களைப் புறக்கணித்தால் தீமையுண்டாகும் ஆதலினால், அவை கர்மங்கள் என்றும் கூறப்படுகின்றன. பசு என்பது பால் என்னும் பயனைத் தரவில்லையென்றால், அது பசுவாக இருந்தபோதிலும் பசு என்று அழைக்கப்படமாட்டாது. அவ்வாறு நித்தியக் கர்மத்தில் பயனில்லாமையினால் அகர்மத்தைக் காண்பதுபோல், அந்த அகர்மமானது, நரகம் போன்ற தீய பயனைத்தரும் என்று கருதி அதனைச் செய்யாமையாகிய அகர்மத்திலும், கர்மத்தை எவன் காண்கின்றானோ அவன் புத்திமான் ஆவான்.

இவ்விளக்கம் சரியன்று. இது போன்ற ஞானம் ஒருவனைத் தீமையினின்று விடுவிக்காது. பகவான் 'அதனை அறிவதன் மூலம் நீ தீமையினின்று விடுபடுவாய்' (4-16) என்று கூறியதற்கு மாறானதாகும். நித்தியக் கர்மங்களைச் செய்வதால் தீமையினின்று விடுபடலாம் என்பதை நாம் வாதத்திற்காக ஒத்துக் கொண்டாலும், அவற்றிற்குரியப் பயனில்லை என்னும் ஞானத்தினால் அத்தீமை நீங்குகின்றது என்பது பொருந்தாது. மேலும் சுருதிகளில் எவ்விடத்தும், நித்திய கர்மங்களுக்குப் பயனில்லை என்னும் அறிவினாலோ, அல்லது நித்திய கர்மங்களுக்குப் பயனுண்டு என்னும் அறிவினாலோ தீமையினின்று விடுபடலாம் என்று குறிப்பிடப்படவில்லை. பகவானாலும் கூட அவ்வாறு இங்கு குறிப்பிடப்படவில்லை. அகர்மத்தில் கர்மத்தைக் காண்பதற்கே இவ்வாறு பதில் கூறப்பட்டது. அகர்மத்தில் கர்மத்தைக் காண்பது அவசியம் என்று இங்கே விதிக்கப்படவில்லை. (அகர்மத்தைக் கர்மமாகக் காணவேண்டுமென்று இச்சுலோகத்தில் விதிக்கப்படவில்லை) மாறாக நித்திய கர்மத்தைச் செய்ய வேண்டுமென்று வலியுறுத்தப்பட் டிருக்கிறது. மேலும் நித்திய கர்மத்தைச் செய்யாமையினால் தீமை வரும் என்னும் அறிவினால் எப்பயனும் விளையாது. நமது நினைவை ஒரு பொருளின் மீது வைப்பது போல், நித்திய கர்மத்தை அகர்மமென்று அறியும் பொய்யறிவினால் ஒரு மனிதன் தீமையினின்று விடுதலை பெற முடியாது. அவன் அறிஞன் என்றோ, ஞானம் கைவரப் பெற்றவன் என்றோ, அனைத்துச் செயல்களையும் செய்தவன் என்றோ கூறப்படமாட்டான். இது போன்ற அறிவு புகழ்ச்சிக்குரியதன்று. பொய்யறிவு என்பதே தீமைதான், ஒரு தீமை எவ்வாறு நம்மை மற்றொரு தீமையிலிருந்து விடுவிக்கும்? இருள், இருளை நீக்காதன்றோ?

மறுப்பு : கர்மத்தை அகர்மமாகவும், அகர்மத்தைக் கர்மமாகவும் காணும் அறிவு பொய்யன்று. மாறாக அது, பயன் விளையும் பயன் விளையாது என்னும் உண்மையை அடிப்படையாகக் கொண்ட ஓர் உருவகக் கருத்தாகும். (உதாரணமாக ஒருவனை 'மான்' என்று கூறினால், அச்சொல் தனக்குரிய பொருளான மான் என்னும் விலங்கை உணர்த்தாது, மானஸ்தன் என்பதை உணர்த்துவது போல).

பதில் : அவ்வாறன்று. கர்ம அகர்மங்களைப் பற்றியக் கற்பனையான அறிவினாலும் பயனுண்டு என்று எங்கும் குறிப்பிடப்படவில்லை. மேலும்

கூறிய பொருளைக் கொள்ளாது, கூறாத ஒன்றைக் கற்பித்துக் கொள்வதால் நோக்கம் நிறைவேறாது. நித்திய கர்மங்களுக்குப் பயனில்லை ஆனால் அவற்றைச் செய்யாமையினால் தீமை விளையும் என்று நேரடியாகக் கூறியிருக் கலாமே. அவ்வாறு கூறாது 'எவன் கர்மத்தில் அகர்மத்தைக் காணக்கூடிய வனோ' என்று ஏன் மயங்கக் கூறவேண்டும்? 'பகவான் தமது கூற்றின் மூலம் பிறரை மயங்க வைக்க விரும்புகிறார்' என்று கூறும் விளக்கமானது ஒரு கற்பனையாகும். மேலும் நித்திய கர்மங்களைப் பற்றி மயங்க வைக்கும் மொழியினால் கூறத் தேவையில்லை. அதுபோல் ஒரு முறைக்குப் பல முறை மீண்டும், மீண்டும் கூறுவதால் அதனை எளிதில் அறிவதும் சாத்தியமா வதில்லை. ஏனென்றால் 'கர்மத்திலேதான் உனக்கு அதிகாரம்' (2.47) என்று மிகத் தெளிவாகக் கூறப்பட்ட விஷயத்தை மீண்டும், மீண்டும் கூற வேண்டிய தில்லை. உயர்ந்ததாகவும், பயனுடையதாகவும் இருக்கும் ஒன்றைப் பற்றி மட்டுமே நாம் அறிந்து கொள்ள வேண்டுமேயன்றி பயனற்ற ஒன்றினை அன்று. பொய்யறிவு எய்துவதற்குரியதல்ல,அதுபோல் பொய்ம்மையான அதற்குரிய பொருளும் அறிவதற்குரியதல்ல. நித்திய கர்மங்களைச் செய்யாமையினால் தீமை உண்டாகாது. இல்லாத ஒன்றிலிருந்து உள்ளதொன்று உருவாகாது அதனால்தான் "பொய்ம்மைக்கு உண்மை இல்லை" (2-16) என்றும் 'இன்மையினின்று உண்மை எவ்வாறு உண்டாகும்?" (சா.உ..6-2.2) என்றும் கூறப்பட்டிருக்கின்றது. இன்மையினின்று உண்மை உண்டாகும் என்போர் 'இன்மையே உண்மையாகும். உண்மை இன்மையாகும்' என்கின்றனர். இது முரணுடையது. ஆதலினால் சரியன்று. பயனற்ற ஒரு செயலை சாத்திரம் விதிப்பதில்லை. ஏனெனில் அச் செயல் செய்யப்படுவதினால் துன்பமே நேரும். துன்பம் நாடிப் பெறக் கூடியதல்ல. அடுத்து, அச்செயலைச் செய்யாததினால் நரகில் வீழ்வோம் என்பதை ஏற்றுக் கொண்டால், செய்தாலும் தீமை, செய்யாவிட்டாலும் தீமை என்னும் சாத்திரம் பயனற்றதாகும். 'நித்திய கர்மத்திற்குப் பயனில்லை' என்று முதலில் கூறிவிட்டுப் பிறகு 'அது முக்திக்குப் பயன்படுவது' என்று கூறுவோன் தனக்குள் முரண்படுகிறான்.

ஆகையால், 'கர்மத்தில் அகர்மத்தை' என்பதற்கு நாம் அப்படியே பொருள் கொள்ள வேண்டும். அதற்கேற்பவே நாம் விளக்கமளிக்கின்றோம்.

கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் காண்பதனைப் பகவான் பின்வருமாறு சிறப்பித்துக் கூறுகின்றார்:

**यस्य सर्वे समारम्भा: कामसङ्कल्पवर्जिता: ।**
**ज्ञानाग्निदग्धकर्माणं तमाहु: पण्डितं बुधा: ॥ १९॥**

**யஸ்ய ஸர்வே ஸமாரம்பா: காம-ஸங்கல்ப வர்ஜிதா: ।**
**ஜ்ஞானாக்னி - தக்த - கர்மாணம் தம் ஆஹு: பண்டிதம் புதா: ॥ 19॥**

***எவனுடைய செய்கைகளெல்லாம் விருப்பமும், நோக்கமும் அற்றனவோ, அவனுடைய செயல்கள் ஞானத்தீயினால் எரிக்கப்பட்டனவாம். அவனை ஞானிகள் அறிஞன் என்கின்றனர்.***

மேலே கூறப்பட்ட உண்மையை உணர்ந்தவனின் அனைத்துச் செயல்களும் விருப்பமும், அவ்விருப்பதற்திற்குக் காரணமான நோக்கமும் இன்றி செய்யப்படுகின்றன. அவன் உலக வாழ்க்கையை மேற்கொண்டவன் என்றால் உலகினை நல்வழிப்படுத்துவதற்காக அவன் அக்கர்மங்களைச் செய்கிறான். உலக வாழ்க்கை நீங்கினவனாயின் உடலினை ஓம்புவதற்காகவே அவன் அக்கர்மங்களைச் செய்கிறான். எவனது நற்செயல் மற்றும் தீச்செயல் கர்மத்தில் அகர்மத்தையும் அகர்மத்தில் கர்மத்தையும் காண்கின்ற ஞானத் தீயினால் எரிக்கப் பட்டுள்ளனவோ அவனை பிரம்மத்தை உணர்ந்த ஞானிகள் உண்மையான அறிஞன் என்கின்றனர்.

கர்மத்தில் அகர்மத்தையும், அகர்மத்தில் கர்மத்தையும் (அதாவது கர்ம அகர்மத்தின் உண்மை நிலை உணர்ந்தவன்) காணக் கூடியவன் அத்தகுதியினாலேயே கர்மத்திலிருந்து விடுபடுகிறான். அவன் இவ்வுலகைத் துறந்தும் கர்மத்தில் ஈடுபடாமலும் இருக்கிறான். அதாவது உண்மையினை உணர்வதற்கு முன்பு அவன் கர்மத்தில் ஈடுபட்ட போதிலும் இப்பொழுது அவன் தனது உடலினை ஓம்புவதற்குத் தேவையான கர்மத்தில் மட்டுமே ஈடுபடுகிறான் என்பதாம். இதற்கு மாறாக கர்மத்தைச் செய்யத் தொடங்கிய ஒருவன் ஆத்மாவைப் பற்றிய உண்மை ஞானம் எய்தப் பெற்றவுடன் கர்மத்தினால் இனி பயனில்லை என்று கர்மத்தையும், அதற்குரிய கருவிகள் அனைத்தையும் ஒட்டு மொத்தமாகத் துறந்து விடுகிறான். ஆனால் அவன் ஏதோ சில காரணங்களுக்காகக் கர்மத்தைத் துறக்க முடியாமல் போகும் பொழுது உலகிற்கு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக விளங்கும பொருட்டு, கர்மத்தின் மீதும் அதன் பயன் மீதும் பற்றின்றி இருக்கிறான். ஆகையினால் அவன் கர்மத்தைச் செய்யினும் அதில் சுயநல நோக்கு இல்லாமையினால் அவன் உண்மையில் எதையும் செய்வதில்லை. அதாவது அவனது கர்மம் அகர்மத்திற்கு இணையானது ஆகும். காரணம் அவனது கர்மங்கள் எல்லாம் ஞானத்தீயினால் எரிக்கப்பட்டுவிட்டனவன்றோ. இதனை அறிவுறுத்த பகவான் கூறுகிறார்.

**त्यक्त्वा कर्मफलासङ्गं नित्यतृप्तो निराश्रयः ।**
**कर्मण्यभिप्रवृत्तोऽपि नैव किञ्चित्करोति सः ॥ २० ॥**

**த்யக்த்வா கர்ம-பலாஸங்கம் நித்ய-த்ருப்தோ நிராஶ்ரய: ।**
**கர்மணி அபிப்ரவ்ருத்தோ (அ)பி நைவ கிஞ்சித் கரோதி ஸ: ॥ 20 ॥**

***கர்மத்தின் பயனில் பற்றின்றி எப்போதும் திருப்தியுடையவனாய் எதனிலும் சார்பற்று நிற்பவன், கர்மத்தைச் செய்யினும் அவன் செய்யாதவனே ஆவான்.***

மேலே கூறப்பட்ட ஞானத்தினால் கர்மங்களில் கருத்தினையும் பயனில் பற்றையும் துறந்தவன் எப்போதும் திருப்தியுடையவனாக இருக்கிறான். அதாவது புலனின்பங்களில் விருப்பமற்றவனாக இருக்கிறான். அவன் எல்லாவிதமானச் சார்புகளினின்றும் விடுதலை பெறுகிறான். சார்பு என்பது புற

வழிகளைக் குறிப்பிடுகிறது. அவற்றைச் சார்ந்தே குறிக்கோள் எய்தப்படுகின்றது. இம்மை மறுமை பயன்களுக்காக அவ்வழிகளைச் சாராதவன் என்று பொருளாகும். இவ்வாறிருக்கும் ஞானி கர்மத்தையும் அதற்கானக் கருவிகளையும் துறக்கின்றான். அவ்வாறு துறக்க முடியாது போகும் பொழுது உலகினை நல்வழிப்படுத்த வேண்டும் என்பதற்காகவும், நல்லோர் பழிச் சொல்லை தவிர்க்க வேண்டும் என்பதற்காகவும் அவன் முன்பு போல் கர்மத்தைச் செய்து கொண்டிருந்தாலும், கர்மமில்லா ஆத்மாவுடன் தன்னை அடையாளம் கண்டிருப்பதால் அவன் உண்மையில் எதையும் செய்வதில்லை.

மேலே கூறப்பட்டவனுக்கு மாறாக, எவன் ஒருவன் தான் கர்மத்தினைச் செய்யத் தொடங்குவதற்கு முன்பே எல்லாவற்றினுள்ளும் இருக்கும் கர்மமில்லா பிரம்மத்தினிடம் தனது அடையாளத்தினைக் கண்டவன் இம்மை மறுமைகளில் வேண்டப்படும் பொருள்களின் மீது பற்றின்றி, கர்மத்தையும் அதற்குரிய கருவிகளையும் துறந்து, உடம்பினை ஓம்புவதற்கானச் செயல்களை மட்டும் செய்து, ஞானத்தில் நிலைநின்று, விடுதலை பெறுகிறான். இதனை அறிவுறுத்த பகவான் கூறுகிறார்.

**निराशीर्यतचित्तात्मा त्यक्तसर्वपरिग्रहः ।**
**शारीरं केवलं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥२१॥**

**நிராஶீர் யத - சித்தாத்மா த்யக்த - ஸர்வ - பரிக்ரஹ: ।**
**ஶாரீரம் கேவலம் கர்ம குர்வன் நாப்னோதி கில்பிஷம் ॥ 21॥**

***ஆசையற்றவனாய், உள்ளத்தையும் உடலையும் அடக்கி உடைமைகள் அனைத்தையும் உதறித் தள்ளி, உடலைப் பேணுவதற்குத் தேவையான கர்மத்தை மட்டும் செய்து கொண்டிருப்போன் பாவத்தையடைய மாட்டான்.***

எவனிடமிருந்து பாவங்கள் அனைத்தும் நீங்கப் பெற்றனவோ, எவனாலே மனமும், உடலும் அடக்கப்பட்டிருக்கின்றனவோ (இங்கே ஆத்மா என்பது புறத்தே காணும், உள்ளம் மற்றும் உடலின் சேர்க்கையாகும்.) எவனாலே தனது செல்வம், வீடு முதலிய உடைமைகள் புறக்கணிக்கப்பட்டனவோ, அவனால் தனது உடல் நிலைத்திருப்பதற்குத் தேவையான செயல்கள் மட்டுமே செய்யப்படுகின்றன. அச்செயல்கள் கூட அவனால் பற்றின்றி செய்யப்படுவதால், தீமைகளை விளைவிக்கக் கூடிய அச்செயல்களிலிருந்து அவனுக்குப் பாவம் உண்டாவதில்லை. முக்தியடைய விரும்புவோனுக்குத் தர்மம் கூடப் பாவம்தான். ஏனெனில் அது பந்தத்திற்குக் காரணமாக இருக்கின்றது. அவன் தர்மம் அதர்மம் என்னும் இரண்டிலிருந்தும் விடுதலை பெறுகிறான். அதாவது அவன் பிறப்பு இறப்பு உடைய லௌகீக வாழ்க்கையிலிருந்து விடுதலை பெறுகிறான் என்று பொருள்.

இப்போது 'உடலினால் செய்யக்கூடிய' (சாரீர கர்மம்) என்னும் சொற்றொடர்க்குப் பொருள் என்ன? அது உடலால் செய்யக்கூடிய கர்மமா? அல்லது உடல் நிலைத்திருப்பதற்காகச் செய்யக்கூடிய கர்மமா?

இதிலிருந்து எழும் மற்றொரு வினா வருமாறு: உடலினால் செய்யப்படும் கர்மம் சாரீர கர்மம் என்றால் அதனால் விளையும் குற்றமென்ன? அல்லது உடல் நிலைத்திருப்பதற்கு மட்டுமே செய்யக்கூடியக் கர்மம் சாரீர கர்மம் என்றால் அதனால் விளையும் பயன் என்ன?

பதில் கூறுவோம்:

**முதல் வகை:** உடலினால் செய்யக் கூடியக் கர்மம் சாரீர கர்மம் என்றால் இம்மை மறுமைகளில் பயனை விளைவிப்பதும், சாத்திரத்தால் விலக்கப்பட்டதுமானக் கர்மத்தைச் செய்பவன் பாவத்தை அடையமாட்டான் என்று கூறுவோருக்கு சாத்திரத்தோடு மாறுபடக் கூறுதல் என்னும் குற்றம் உண்டாகும். அடுத்து, இம்மை மறுமைகளிலே பயனை விளைவிப்பதும், சாத்திரத்தில் விதிக்கப்பட்டதுமானக் கர்மத்தைச் செய்கிறவன் பாவத்தை அடையமாட்டான் என்று கூறுவோர்க்கு, வராத ஒன்றினை விலக்குதல் என்னும் குற்றம் உண்டாகும். மேலும் 'சாரீர கர்மத்தைச் செய்பவன்' என்றும், 'மட்டும்' என்றும் சொற்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதிலிருந்து விதிவிலக்குகளை உடையதும், தர்மம் அதர்மம் என்னும் சொற்களால் வழங்கப்படுவதும், வாக்கு மற்றும் மனதினால் செய்யக்கூடிய செயல்களைச் செய்பவனுக்குப் பாவம் உண்டாகிறது எனலாம். மேலும் விதிக்கப்பட்டக் கர்மத்தை வாக்கு மற்றும் மனதினால் செய்வது பாவத்தை உண்டாக்கும் எனறு கூறுவது சாத்திர விரோதமாகும். அடுத்து விலக்கப்பட்டக் கர்மத்தை வாக்கு மற்றும் மனதினால் செய்தால் பாவம் உண்டாகும் என்று கூறுவது, அறிந்த ஒன்றினை வீணே மீண்டும் கூறுவதாகும்.

**இரண்டாம் வகை:** இதற்கு மாறாக, உடல் நிலைத்திருப்பதற்குத் தேவையான கர்மத்தை மட்டும் செய்வது. சாரீர கர்மம் என்றால், இம்மை மறுமைகளில் பயனை விளைவிப்பதும் விதிவிலக்குகளால் அறியப்படுவதும் வாக்கு மற்றும் மனதினால் செய்யத்தக்கதுமானக் கர்மங்களைச் செய்யாமல், உடலின் அத்தியாவசியத் தேவைக்கான கர்மத்தை மட்டும் 'நான் செய்கிறேன்' என்னும் எண்ணமின்றி உலகம் காணச் செய்பவன் பாவத்தை அடையமாட்டான் என்று பொருளாகும். அதாவது இது போன்ற மனிதன் தவறு செய்வான் என்று கனவிலும் கருத முடியாது. ஆதலினால் அவன் பிறப்பு இறப்பு என்னும் பாவத்தை அடையமாட்டான். ஞானமென்னுந் தீயினால் அவனது அனைத்துக் கர்மங்களும் சுட்டுப் பொசுக்கப்படுவதால் அவன் உலகவாழ்க்கையினின்று எவ்விதத் தடையுமின்றி விடுதலை பெறுகிறான். இவ்வாறு ஏற்கெனவே விளக்கப்பட்டிருக்கும் (4-18) நல்லறிவின் பயனே இங்கு மீண்டும் கூறப்படுகிறது. "உடலினால் மட்டுமே செய்யக் கூடிய" என்னும் சொற்றொடருக்கு இங்ஙனம் பொருள் கொண்டால் குற்றம் உண்டாகாது.

உடைமைகள் அனைத்தையும் துறந்த ஒரு துறவிக்கு உடல் நிலைத்திருப்பதற்குத் தேவையான உணவு மற்றும் பிற பொருட்கள் இல்லாமையினால், இரந்து உயிர்வாழ வேண்டும் என்று கூறப்படுகிறது. அவ்வாறு இரந்து பெறும் உணவும் கூட தானே முயன்று பெற்றதாகவும், முன்னரே ஏற்பாடு செய்து வைக்கப்பட்டதாகவும் இருத்தல் கூடாது என்று பகவான் குறிப்பிடுகிறார். இதனாலேயே,

"இரந்து பெறாததாகவும், முன்னரே ஏற்பாடு செய்யப்படாததாகவும் அவனது முயற்சியின்றி அவனுக்குக் கிடைத்ததாக இருத்தல் வேண்டும்" (போதாயன தர்ம சூத்திரம் 2:8-12).

**यदृच्छालाभसन्तुष्टो द्वन्द्वातीतो विमत्सरः ।**
**समः सिद्धावसिद्धौ च कृत्वापि न निबध्यते ॥२२॥**

**யத்ருச்சா-லாப-ஸந்துஷ்டோ த்வந்த்வாதீதோ விமத்ஸர: ।**
**ஸம: ஸித்தாவஸித்தௌ ச க்ருத்வா(அ)பி ந நிபத்யதே ॥ 22॥**

*தானாகக் கிடைத்ததைக் கொண்டு திருப்தியுற்று, இருமைகளைக் கடந்து, பொறாமையின்றி, வெற்றியிலும், தோல்வியிலும் சமமாக இருப்பவன், தான் செய்யும் கர்மத்தினால் கட்டப்படுவதில்லை.*

தானாகக் கிடைப்பது என்பது, பிறரிடம் இரந்தோ, வேண்டியோ பெறாதது ஆகும். அதன்மூலம் திருப்தியடைபவன், குளிர், வெப்பம் போன்ற இருமைகளின் பாதிப்பினால் வருந்துவதில்லை, அவனிடம் துவேஷமோ, பொறாமையோ இருப்பதில்லை; தனது முயற்சியின்றி தானாக எதுவும் கிடைத்தாலும், கிடைக்காவிட்டாலும் அவன் அமைதியுடனிருப்பான். இவ்வாறான யோகி தனது உடலுக்குத் தேவையான உணவு போன்ற பொருட்கள் கிடைப்பினும், கிடைக்காவிடினும், மகிழ்ச்சியோ, துக்கமோ அடைவதில்லை. அவன் கர்மத்தில் அகர்மத்தைக் காண்கிறான். அவன் ஆத்மாவை உள்ளபடி உணர்தலில் நிலைநிற்கிறான். உள்ளமும் உடலும் ஈடுபடும், இரத்தல் போன்ற கர்மத்தைச் செய்யும் பொழுதும் கூட அவன், "நான் செய்கிறேன்" என்று கருதாமல் "புலன்கள் புலனுகர்ச்சிப் பொருட்களின் வழியே செல்கின்றன" என்று கருதுகிறான். ஆத்மா கர்த்தாவன்று என்று உணர்வதினால் அவன் இரத்தல் போன்ற கர்மத்தையும் செய்வதில்லை. ஆனால், சாமான்ய மனிதர்கள், அவன் செய்யும் அத்தியாவசியச் செயல்களைக் கண்டு அவன் கர்த்தாவாகச் சுட்டப்படுகிறான். இதன் காரணமாகவே ஒரு ஞானி இரத்தல் போன்ற கர்மங்களுக்குக் கர்த்தாவாகிறான். எனினும் சாத்திரம் போன்ற பிரம்மாணங்களினால் அவன் பெற்ற அனுபவத்தின் மூலம் அவன் அகர்த்தாவே என்றறிக. இவ்வாறு உடலின் அத்தியாவசியத் தேவைக்காக இரத்தல் போன்ற கர்மங்களை அவன் செய்தபோதிலும், அவற்றைச் செய்வதினால் அவன் கர்த்தாவாகப் பாமர மக்களால் சுட்டப்பட்டப் போதிலும்,

அவன் அக்கர்மங்களால் கட்டப்படுவதில்லை. கட்டுக்கு ஆதாரமாக விளங்கும் கர்மமும், அதன் காரணமும் ஞானம் என்னும் தீயினால் எரிக்கப்பட்டிருக்கின்றன. ஆதலின், இது ஏற்கெனவே கூறப்பட்ட ஒன்று, மீண்டும எடுத்துரைக்கப்படுகிறது. (4.19-21)

கர்மத்தைச் செய்யும் ஒருவன், 'தான் கர்மமில்லாப் பிரம்மம்' என்பதை எப்பொழுது உணர்கின்றானோ அப்பொழுது அவன் தனக்கு கர்மம் என்பதும், கர்த்தா என்பதும், பயன் என்பதும் இல்லை என்றுஅறிகிறான். அவன் கர்மத் துறவிற்குத் தகுதியுடையவனாக இருப்பினும், ஏதோ ஒரு காரணத்தால் அதனை மேற்கொள்ள முடியாது போகும்பொழுது அவன் முன்புபோல் தொடர்ந்து தனது கர்மத்தைச் செய்கிறான். இவ்வாறு அறியப்படுபவன் 'உண்மையில் கர்மம் எதுவும் செய்வதில்லை' (4.20) பகவான் கூறுகிறார் :

**गतसङ्गस्य मुक्तस्य ज्ञानावस्थितचेतसः ।**
**यज्ञायाचरतः कर्म समग्रं प्रविलीयते ॥२३॥**

**கத-ஸங்கஸ்ய முக்தஸ்ய ஜ்ஞானாவஸ்தித - சேதஸ:**
**யஜ்ஞாயாசரத: கர்ம ஸமக்ரம் ப்ரவிலீயதே ॥ 23॥**

*பற்றற்றவனாய், விடுதலை பெற்றவனாய், ஞானத்தில் நிலைபெற்ற மனத்தினனாய், வேள்வியின் பொருட்டுச் செய்பவனின் கர்மங்களெல்லாம் கரைந்து போகின்றன.*

எல்லாவற்றிற்கும் மீதானப் பற்று அகன்றவன், கட்டப்படுவதற்குக் காரணமான தர்ம அதர்மக் கட்டினின்று விடுதலை பெற்று, மனமோ ஞானத்தில் நிலைபெற்று, வேள்வியின் பொருட்டுச் செய்யப்படும் அவனது கர்மம், அதன் பயனுடன் சேர்ந்து கரைந்து போகின்றது. அதாவது கர்மமும் அதன் பயனும் இல்லாதொழிகின்றன என்று பொருள்.

மேலும் எக்காரணத்தினால் அவன் செய்யும் கர்மம் தனக்குரியப் பயனைக் கொடுக்காது இல்லாதொழிகின்றது? எனில், கூறுவோம்.

**ब्रह्मार्पणं ब्रह्म हविर्ब्रह्माग्नौ ब्रह्मणा हुतम् ।**
**ब्रह्मैव तेन गन्तव्यं ब्रह्मकर्मसमाधिना ॥२४॥**

**ப்ரஹ்மார்ப்பணம் ப்ரஹ்ம ஹவிர் ப்ரஹ் ஹுதம் ।**
**ப்ரஹ்மைவ தேன கந்தவ்யம் ப்ரஹ்ம-கர்ம-ஸமாதினா ॥ 24॥**

*அர்ப்பணம் பிரம்மம், அர்ப்பிக்கப்படுவதும் பிரம்மம், அக்னியாகிய பிரம்மத்தில் பிரம்மத்தாலேயே ஹோமம் செய்யப்படுகிறது. கர்மமாகிய பிரம்மத்தில் சமாதி எய்தும் அவனால் அடையப்படுவதும் பிரம்மமே.*

பிரம்மத்தை உணர்ந்தவன் எக்கருவியினால் அக்னியில் பொருள் இடப்படுகின்றதோ, அக்கருவியைப் பிரம்மமாகவேக் காண்கிறான். அப்பிரம்மத்தை அவன் சிப்பியிலே வெள்ளி இல்லை என்று காண்பது போல, ஆத்மா இன்றி அது இல்லை என்று காண்கிறான். பொருள்களை அக்னியில் அர்ப்பணிக்கும் கருவியும் பிரம்மமே எனப்படுகின்றது. உதாரணமாக வெள்ளியாகத் தோன்றுவது உண்மையில் சிப்பியேயாகும். அவ்வாறே மக்கள் எதனை அர்ப்பணிக்கும் கருவியாகக் காண்கின்றனரோ, அது பிரம்மத்தை உணர்ந்தவனுக்கு, பிரம்மத்தைத் தவிர வேறொன்றுமில்லை. அதுபோல் அவர்கள் எதனை அர்ப்பணிக்கப்படும் பொருளாக காண்கின்றனரோ, அதுவும் அவனுக்குப் பிரம்மம்தான். மேலும் பிரம்மத்தாலேயே அர்ப்பணம் செய்யப்படுகின்றது. அதாவது வேள்வியைச் செய்பவனும், பிரம்மமேயாவான். அர்ப்பணிக்கும் செயலும் பிரம்மமே, அதன் பயனும் பிரம்மமே. எப்போதும் பிரமமத்தையேக் காண்பவன் அடைவதும் கூட இறுதியில் பிரம்மமேயாகும்.

இவ்வாறு, உலகினை நல்வழிப்படுத்த விரும்புபவன், செய்யும் கர்மம், அவனது பிரம்ம உணர்வினால் அழிக்கப்படுவதால் அது உண்மையில் அகர்மமே. அதனால் அனைத்துக் கர்மங்களையும் ஒருவன் துறந்த போதிலும், கர்மங்களைத் துறந்த அவனது மெய்யறிவைச் சிறப்பிக்கும் பொருட்டு ஞானத்தில் வேள்வியை ஏற்றிக் கூறியது மிக்கப் பொருத்தமானதேயாகும். உண்மையான வேள்வியில் அர்ப்பணிக்கப்படுவதை அர்ப்பணம் செய்யும் கருவி முதலியன எவையோ அவை பரம்பொருளைக் காண்பவனுக்குத் தனது ஆத்மாவானப் பிரம்மத்தைத் தவிர வேறில்லை. இல்லையெனில் எல்லாம் பிரம்மமாயிருக்க பொருளை வேள்வியில் அர்ப்பணிக்கும் கருவி போன்றவற்றை மட்டும் பிரம்மமென்று சிறப்புறுத்துதல் பயனிலதாகும். அதனால் 'இவையனைத்தும் பிரம்மமே' என்றறிபவனுக்குக் கர்மம் இல்லை. மேலும் காரகத்தைப் பற்றிய எண்ணம் இல்லாததினாலும் அவனுக்குக் கர்மமில்லை. (காரகம் என்பதற்குத் துணையாக, தொடர்புடையதாக, உதவியாக இருப்பது என்று பொருளாகும். உதாரணமாக வேள்வி செய்வோன், இந்திரனுக்கு வேள்விப் பொருட்களை அர்ப்பணம் செய்யும்பொழுது, அர்ப்பணித்தல் என்னும் தொழிலுக்கு, வேள்வி செய்வோன் காரகம் ஆவான். அதுபோல் இந்திரன் இங்கு கொள்பவன் என்னும் காரகம் ஆவான்.) ஆயினும் வேள்வி என்னும் கர்மம், காரக புத்தியின்றி சாத்தியமாகாது. அக்னி ஹோத்ரம் போன்ற அனைத்து வேள்விச் சடங்குகளும் (சுருதிகளில் உரைக்கப்பட்ட) எந்தக் கடவுளுக்கு வேள்விப் பொருட்கள் அர்ப்பணிக்கப்பட வேண்டும் என்னும் காரகமும், மற்றும் இது போன்ற காரகத்தைப் பற்றிய எண்ணமும், நான் செய்கின்றேன் என்னும் எண்ணமும் பயன் எதிர்பார்த்தல் என்னும் நோக்கமும் உடையனவாகக் காணப்படுகின்றனவேயன்றி, செயல், காரகம், பயன் என்பவையின்றி எந்த வேள்வியும் எங்கும் காணப்படவில்லை. ஆனால் இந்த ஞானவேள்வியிலோ அர்ப்பணம் செய்யும் கருவி முதலானக் காகரகங்களும், செயல் என்பதும், பயன் என்பதும் பிரம்ம புத்தியினால் தவிர்க்கப்படுகின்றன. ஆகையால் இது அகர்மமாகும். இது 4.18-20; 3-28; 5-8 போன்ற சுலோகங்களில் விளக்கப்பெற்றுள்ளது. இவ்வுபதேசத்தின் மூலம் பகவான், செயல், பயன், காரகம் என்பதான இருமை எண்ணத்தினை

இங்குமங்கும் நீக்குவதற்கு முயல்கின்றார். சுயநல நோக்குடன் செய்யப்படும் காம்ய அக்னி ஹோத்ரம் என்னும் வேள்வியும் பயன் கருதாது செய்யப்படும் பொழுது அது காம்ய அக்னி ஹோத்ரம் ஆவதில்லை. இவ்வாறு இக்கர்மத்தை நான் செய்ய வேண்டும், இப்பயனை நான் பெற வேண்டும் என்னும் எண்ணத்துடனோ அல்லது எண்ணமின்றியோ, பிறவழியிலோ செய்யப்படும் கர்மங்கள் தத்தமக்குரியப் பயனை விளைவிக்கின்றன என்பது நாம் அறிந்ததே. அதற்கேற்பவே இங்கும் அர்ப்பணிக்கும் கருவி முதலானக் காரகமும், செயலும், பயனும் உடைய இருமை புத்தி இல்லாத ஞானியின் செயல், வெளியே செய்யப்படும் கர்மமாகத் தோன்றினாலும் அது அகர்மமேயாகும். அதனால் தான் 'அனைத்துக் கர்மங்களும் கரைந்து போகின்றன' (4-23) என்று கூறப்பட்டிருக்கிறது.

இதனை வேறு சிலர் இவ்வாறு விளக்குவர் : நாம் எதனைப் பிரம்மம் என்கின்றோமோ அது செயலுக்குரிய கருவி போன்றதாம். உண்மையில் பிரம்மமே தன்னை கருவி முதுலிய ஐந்து காரக வடிவங்களாக வெளிப்படுத்தி அக்கர்மத்தைச் செய்கின்றது; (ஐந்து காரகங்கள் - செய்பவன், செயப்படுபொருள், கருவி, கொள்பவன், இடம், என்பனவாம்) என்கின்றனர். மேற்கூறப்பீட்டதில் செயலுக்கானக் கருவி, காரகம் போன்றவை நீக்கப்படவில்லை. மாறாக விஷ்ணு என்னும் எண்ணத்தை விக்கிரகத்தின் மீது வைப்பது போன்றும், திருநாமத்தின் மீது பிரம்மம் என்னும் எண்ணத்தை வைப்பது போன்றும், கருவி முதலிய காரகங்களின் மீது பிரம்மம் என்னும் எண்ணத்தை வைக்க வேண்டும் என்று அறிவுறுத்தப்படுகிறது.

உண்மை, இக்குறிப்பிட்டப் பகுதியானது ஞான வேள்வியைப் போற்றுவதாக இல்லாதிருந்தால், அவர்களின் பார்வையும் கூடச் சரியானதுவே. ஆனால் பகவான் இங்கு வேள்வி என்னும் சொல்லுக்குப் பல செயல்களை எடுத்துக் கூறிப் பின்னர், நல்லறிவு என்னும் ஞானத்தைப் பின்வருமாறு போற்றுகின்றார்: "பொருட்களினால் செய்யப்படும் வேள்வியைக் காட்டிலும் ஞான வேள்வியே சிறந்ததாகும்" (4-33). மேலும் இச்சுலோகத்தில் அர்ப்பணிக்கப்படுவது பிரம்மம் என்பது போன்றவை ஞானத்தின் மீது வேள்வியை ஏற்றிக் கூறியவையாகும். இல்லையேல் அனைத்தும் பிரம்மமாயிருக்க அர்ப்பணிக்கப்படுவது போன்றவை மட்டுமே பிரம்மம் என்று குறிப்பாகச் சுட்டுவது பயனற்றதாகும். மேலும் விக்கிரகத்தின் மீது விஷ்ணுவின் எண்ணத்தையும், திருநாமத்தின் மீது பிரம்மத்தின் எண்ணத்தையும் வைப்பது போல் கருவி முதலிய காரகங்களில் பிரம்மத்தின் எண்ணத்தை வைக்க வேண்டும் என்று கூறுபவர்களின் கருத்தின்படி பகவான் இங்கு உணர்த்த விரும்பியது இதுவரை கூறப்பட்டப் பிரம்ம வித்தையன்று. காரணம் இச்சுலோகத்தில் அறிவுறுத்த விரும்பியது வேள்விக்குத் தொடர்புடையக் கருவி முதலிய காரகங்களைப் பற்றியதாகும். மேலும் பிரம்மம் என்னும் எண்ணத்தை ஒரு பொருளின் மீது வைப்பது என்னும் அறிவினால் முக்தியடைய முடியாது. இங்கு பிரம்மமே அடைய வேண்டிய இலட்சியம் என்று கூறப்பட்டிருக்கிறது. ஞானம் என்னும், மெய்யறிவு இன்றி முக்தியடையலாம் என்பது உண்மைக்குப் புறம்பானதாகும்.

இதுபோன்ற விளக்கம் இவ்வத்தியாயத்தின் மையக் கருத்திற்கும் கூட எதிரானதாகும். இவ்வத்தியாயம் விளக்கும் பொருள் மெய்யறிவு பற்றியதாகும் (4-18). அதனையே இவ்வத்தியாயத்தின் இறுதிச் சுலோகங்களும் விளக்குகின்றன. இவ்வத்தியாயத்தின் இறுதியில் 'பொருட்களினாலான வேள்வியைக் காட்டிலும் ஞானமென்னும் வேள்வியே சிறந்தது (4-33) என்றும், 'ஞானத்தை எய்தி' (4-39) என்னும் சுலோகங்களினால் மெய்யறிவே போற்றப்பட்டு நிறைவு பெறுகின்றது. கூறப்பட்டிருக்கும் மையக் கருத்திற்கு மாறாக திடீரென்று விக்கிரகத்தின் மீது பிரம்மத்தைப் பற்றிய எண்ணத்தை வைத்தல் போன்று, வேள்விக்குரிய கருவி காரகங்களின் மீது பிரம்மத்தைப் பற்றிய எண்ணத்தை வைத்தல் வேண்டும் என்னும் அவர்களின் கருத்தானது ஏற்புடையதன்று. அதனால் இச் சுலோகத்திற்கு எமது விளக்கமே பொருந்தும்.

ஞானமென்னும் மெய்யறிவே வேள்வி என்று எடுத்துரைத்தப் பகவான் அதனைச் சிறப்பிக்கும் பொருட்டுப் பிற வேள்விகளைப் பற்றி விளக்குகின்றார்.

**दैवमेवापरे यज्ञं योगिनः पर्युपासते ।**
**ब्रह्माग्नावपरे यज्ञं यज्ञेनैवोपजुह्वति ॥ २५॥**

**தைவம் ஏவாபரே யஜ்ஞம் யோகின: பர்யுபாஸதே ।**
**ப்ரஹ்மாக்னாவ் அபரே யஜ்ஞம் யஜ்ஞேனைவோபஜுஹ்வதி ॥ 25॥**

***பிற யோகிகள் தேவர்களுக்குரிய வேள்வியைச் செய்கின்றனர். வேறு சிலர் பிரம்மாகிய அக்னியில் ஆத்மாவை ஆத்மாவினாலேயே அர்ப்பணிக்கின்றனர்.***

சில கர்ம யோகிகள் இந்திரன் முதலிய தேவர்களை வழிபடுவதற்காக வேள்விகள் செய்கின்றனர். முழு மெய்ப்பொருளான பிரம்மத்தை உணர்ந்த வேறு சிலரோ பிரம்ம அக்னியில் ஆத்மாவை ஆத்மாவினால் நிவேதித்து வேள்வி செய்கின்றனர். 'பிரம்மாக்னியில்' என்று கூறப்பட்டிருப்பதால், பிரம்மம் என்றால் என்னவென்பதைப் பின்வரும் சுருதிகளில் காண்க: 'மெய்ப்பொருளாகவும், அறிவாகவும், முடிவற்றதுமாக இருப்பது' (தை.உ.2.1) 'அனுபவ அறிவும், ஆனந்தமுமே பிரம்மம்' (பி.உ.3-9-28) 'எது அருகிலும், எல்லாவற்றிற்கும் உள்ளே வீற்றிருக்கும் ஆத்மாவாக விளங்குகின்றதோ அதுவே பிரம்மம்' (பி.உ.3-2-1) பசி, தாகம், போன்ற லௌகீகத் தன்மைகள் இன்றி, 'இது அன்று, இது அன்று' (பி.உ.4-4-22) என்று பிரம்மத்தைப் பற்றி சுருதிகளில் கூறப்பட்டிருக்கிறது. அர்ப்பணிக்கப்படுவதற்கு இடமுடையது ஆகையால் பிரம்மம் அக்னியாகும். அப்பிரம்மாக்னியில் பிரம்மத்தை அறிந்தவர்கள் 'வேள்வியை' அர்ப்பணிக்கின்றனர். 'வேள்வி' என்பதற்கு இங்கு ஆத்மாவென்று பொருளாகும், உண்மையில் இந்த ஆத்மா பிரம்மமேயாகும். ஆனால் அது புத்தி முதலிய உபாதிகளால் கட்டப்பட்டு, அவற்றின் தன்மைகள் அனைத்தும் அதன் மீது ஏற்றப்பட்டிருக்கிறது. இந்த ஆத்மாவையே

ஆத்மாவினால் அர்ப்பணம் செய்கின்றனர். அதாவது உபாதியுடையஆத்மாவை உபாதியில்லாத பரப்பிரம்மமாகக் கண்டு தெளிவது எதுவோ, அது அதில் (பிரம்மத்தில்) அர்ப்பணிக்கப்படுகின்றது என்பதாகும். பிரம்மமும் தானும் ஒன்றே என்பதில் உறுதியுடன் நிற்கும் துறவிகள் அதனைச் செய்கின்றனர் என்பது பொருளாகும். (எது, தனது தன்மையை பிறிதொரு பொருளினிடத்துத் தோற்றுவிக்கின்றதோ, அது உபாதி எனப்படும். உதாரணமாக ஒரு ஸ்படிகக் கல்லின் அருகிலுள்ள செம்பருத்தி பூ, தனது தன்மையாகிய சிவப்பு நிறத்தை அந்த ஸ்படிகக் கல்லில் இருப்பதாகத் தோற்றுவிக்கின்றது. அதாவது அது ஸ்படிகமாகத் தோன்றாது சிவப்புக் கல்லாகவே தோன்றுகிறது. ஆகையால் ஸ்படிகத்திற்கு செம்பருத்திப் பூ உபாதியாகும்.)

இந்த மெய்யறிவு என்னும் ஞான வேள்வி (4.24ல் விளக்கப்படுவது) சிறப்பிக்கப்பட வேண்டும் என்னும் நோக்கத்தில் தேவ வேள்வியுடனும் (தைவ யக்ஞம்) பிற வேள்விகளுடனும் சேர்த்துக் குறிப்பிடப்படுகிறது.

**श्रोत्रादीनीन्द्रियाण्यन्ये संयमाग्निषु जुह्वति ।**
**शब्दादीन्विषयानन्य इन्द्रियाग्निषु जुह्वति ॥ २६॥**

**ஶ்ரோத்ராதீனீந்த்ரியாணி அன்யே ஸம்யமாக்னிஷு ஜுஹ்வதி ।**
**ஶப்தாதீன் விஷயான் அன்ய இந்த்ரியாக்னிஷு ஜுஹ்வதி ॥ 26॥**

***வேறுசிலர் செவி முதலியப் புலன்களை அடக்கமென்னும் அக்னிகளில் ஆகுதி செய்கிறார்கள். இன்னும் சிலர் ஓசை முதலிய புலனுகர்ச்சிப் பொருட்களை புலன்கள் என்னும் அக்னிகளில் அர்ப்பணம் செய்கிறார்கள்.***

அடக்குதல் என்பது ஒவ்வொரு புலனுக்கும் வேறு வேறாக இருப்பதினால், அக்னிகளில் என்று பன்மையில் குறிப்பிடப்படுகிறது. சில யோகிகள் செவி முதலிய புலன்களை அவற்றை அடக்குதல் என்னும் அக்னிகளில் ஆகுதி செய்கின்றனர். அதாவது புலன்களை அடக்குகின்றனர் என்று பொருளாம். சிலர் ஓசை முதலிய புலனுகர்ச்சிப் பொருட்களை புலன்கள் என்னும் அக்னிகளில் அர்ப்பணம் செய்கின்றனர். சாத்திரத்திற்கு புறம்பாக இல்லாத ஓசை முதலியப் பொருட்களை, செவிபோன்ற புலன்களால் அனுபவிப்பதையே அர்ப்பணம் என்கின்றனர்.

மேலும்,

**सर्वाणीन्द्रियकर्माणि प्राणकर्माणि चापरे ।**
**आत्मसंयमयोगाग्नौ जुह्वति ज्ञानदीपिते ॥ २७॥**

**ஸர்வாணீந்த்ரிய - கர்மாணி ப்ராண - கர்மாணி சாபரே ।**
**ஆத்ம - ஸம்யம - யோகாக்னௌ ஜுஹ்வதி ஜ்ஞான தீபிதே ॥ 27॥**

*மற்றவர்கள் புலன்கள் மற்றும் பிராணனின் செயல்களை ஞானத்தினால் மூண்டெழச் செய்யப்பட்ட ஆத்ம அடக்கம் என்னும் யோகாக்னியில் ஆகுதி செய்கின்றனர்.*

பிராணன் - ஒவ்வோர் உடலினுள்ளும் இருக்கும் உயிர் மூச்சாகும். வளைதல், நிமிர்தல் அதன் செயலாகும். ஆத்ம அடக்கம் - ஆத்மாவினிடத்து மனதினை நிலைநிறுத்துதல் அதுவே யோகமென்னும் அக்னியாகும். எண்ணையினால் விளக்கு சுடர் விட்டெரிவது போல், விவேக அறிவினால் சுடர் விட்டெரியும் அந்த அக்னியில் சிலர் புலன்கள் மற்றும் பிராணனின் செயல்களை அர்ப்பணம் செய்கின்றனர். அதாவது கரையச் செய்கின்றனர்; ஒடுங்கச் செய்கின்றனர் என்று பொருளாகும். (அனைத்துத் தொழில்களையும் ஒழித்து ஆத்மாவிடம் மனதினை நிலைநிறுத்துகின்றனர்)

**द्रव्ययज्ञास्तपोयज्ञा योगयज्ञास्तथापरे ।**
**स्वाध्यायज्ञानयज्ञाश्च यतयः संशितव्रताः ॥२८॥**

**த்ரவ்ய - யஜ்ஞாஸ் தபோ - யஜ்ஞா யோக - யஜ்ஞாஸ் ததாபரே ।**
**ஸ்வாத்யாய - ஜ்ஞான - யஜ்ஞாஸ் ச யதய: ஸம்ஸிதாவ்ரதா : ॥ 28॥**

*அவ்வாறே சிலர் பொருளினால் வேள்வி செய்கின்றனர்;சிலர் தவத்தினால் வேள்வி செய்கின்றனர்; சிலர் யோகத்தினால் வேள்வி செய்கின்றனர்; சிலர் கல்வியால் வேள்வி செய்கின்றனர்; சிலர் ஞானத்தினால் வேள்வி செய்கின்றனர்; மற்றுஞ் சிலர் கடுமையான விரதங்களை மேற்கொள்கின்றனர்.*

தகுதியுடையவர்க்குப் பொருள்களைத் தானமாகக் கொடுப்பதன் மூலம் சிலர் வேள்வி செய்கின்றனர். தவம் செய்வோர், அத்தவத்தினால் வேள்வி செய்கின்றனர். சிலர் பிராணனை அடக்குதல் மற்றும் மனிதனைப் புறவிஷயங்களில் செல்லவிடாது அடக்குதல் என்பவையான யோகத்தினால் வேள்வி செய்கின்றனர். சிலர் ரிக்வேதம் போன்றவற்றைக் கற்பதினால் வேள்வி செய்கின்றனர். சிலர் சாத்திரத்தின் பொருளை நன்குணர்வதினால் வேள்வி செய்கின்றனர். சிலர் ஊக்கமுடையோராய் கடுமையான விரதங்களை மேற்கொள்கின்றனர்.

**अपाने जुह्वति प्राणं प्राणेऽपानं तथापरे ।**
**प्राणापानगती रुद्ध्वा प्राणायामपरायणाः ॥ २९॥**

**அபானே ஜுஹ்வதி ப்ராணம் ப்ராணே (அ)பானம் ததா(அ)பரே ।**
**ப்ராணாபன - கதீ ருத்த்வா ப்ராணாயாம - பராயணா: ॥ 29॥**

*சிலர் உள்மூச்சுக் காற்றில் வெளி மூச்சுக் காற்றினையும் வெளி மூச்சுக் காற்றில் உள் மூச்சுக் காற்றினையும் ஆகுதி செய்கின்றனர். சிலர் மூச்சுக் காற்றின் உட்போக்கையும், வெளிப் போக்கையும் தடுத்து பிராணாயாமத்தில் கருத்துடையவர்களாக இருக்கின்றனர்.*

சிலர் மூச்சுக் காற்றினை உள்ளிழுக்கும் 'பூரகம்' என்னும் பிராணாயாமத்தைச் செய்கின்றனர். சிலர் மூச்சுக் காற்றினை வெளியே விடும் 'ரேசகம்' என்னும் பிராணாயாமத்தைச் செய்கின்றனர். சிலர் வாய் மற்றும் மூக்கின் வழியே உள்ளும் வெளியும் செல்லும் மூச்சுக் காற்றினைத் தடுத்து நிறுத்துவதான 'கும்பகம்' என்னும் பிராணாயாமத்தைச் செய்கின்றனர்.

**अपरे नियताहारा: प्राणान्प्राणेषु जुह्वति ।**
**सर्वेऽप्येते यज्ञविदो यज्ञक्षपितकल्मषा: ॥ ३०॥**

**அபரே நியதாஹாரா: ப்ராணான் ப்ராணேஷு ஜுஹ்வதி ।**
**ஸர்வே (அ)பி ஏதே யஜ்ஞ - விதோ யஜ்ஞ - க்ஷபித - கல்மஷா :॥ 30॥**

*சிலர் ஒழுங்குமுறைப்படுத்தப்பட்ட உணவினை உடையவர்களாய் உயிர் மூச்சுக் காற்றினை உயிர் மூச்சுக் காற்றில் அர்ப்பணிக்கின்றனர். இவர்கள் அனைவரும் வேள்வியை உணர்ந்தவர்கள். வேள்விகளால் பாவம் தேயப்பெற்றவர்கள்.*

சிலர் தம் உணவினை ஒழுங்குமுறைப்படுத்தி அதாவது அளவாக அமைத்துக் கொண்டு பல்வேறு உயிர் மூச்சுக் காற்றுக்களை உயிர் மூச்சுக் காற்றுக்களிலேயே ஆகுதி செய்கின்றனர். எந்தெந்த உயிர் மூச்சுக் காற்று கட்டுப்படுத்தப்படுகின்றதோ, அதில் பிற அனைத்து உயிர் மூச்சுக் காற்றுக்களையும் அர்ப்பணம் செய்கின்றனர். அவை அவற்றுள் ஒடுங்கி விட்டன போலாகின்றன.

**यज्ञशिष्टामृतभुजो यान्ति ब्रह्म सनातनम् ।**
**नायं लोकोऽस्त्ययज्ञस्य कुतोऽन्य: कुरुसत्तम ॥ ३१॥**

**யஜ்ஞ - ஶிஷ்டாம்ருத - புஜோ யாந்தி ப்ரஹ்ம ஸநாதனம் ।**
**நாயம் லோகோ (அ)ஸ்தி அயஜ்ஞஸ்ய குதோ (அ)ன்ய: குரு - ஸத்தம ॥ 31 ॥**

*வேள்வியில் மீந்த இன்னமுதை உண்போர் என்றுமுளதாகிய பிரம்மத்தை எய்துகின்றனர். வேள்வி செய்யாதோருக்கு இவ்வுலகமில்லை, மற்றையது எங்ஙனம்? குருகுலத்தில் சிறந்தோய் !*

மேலே குறிப்பிடப்பட்ட வேள்விகளைச் செய்து அவர்கள் இடைப்பட்டக் காலத்தில் தமக்கென விதிக்கப்பட்ட அமுதம் என்னும்

அன்னத்தை அவர்கள் முறைப்படி உண்கின்றனர். அவர்கள் முக்தியடைய விரும்பினால் நித்திய பிரம்மத்தை உரிய காலத்தில் எய்துகின்றனர். உடனே அன்று 'உரிய காலத்தில்' என்பது யுக்தியினால் அறியப்படுகின்றது. மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் வேள்விகளுள் ஒன்றினையும் செய்யாதவனுக்கு இவ்வுலகமே இல்லையெனில் உயர்வான வழிமுறைகளால் அடையத்தக்க வேறோர் உலகம் ஏது?

**एवं बहुविधा यज्ञा वितता ब्रह्मणो मुखे ।**
**कर्मजान्विद्धि तान्सर्वानेवं ज्ञात्वा विमोक्ष्यसे ॥३२॥**

**ஏவம் பஹு-விதா யஜ்ஞா விததா ப்ரஹ்மணோ முகே ।**
**கர்ம-ஜான் வித்தி தான்ஸர்வான் ஏவம் ஜ்ஞாத்வா விமோக்ஷ்யஸே ॥32॥**

***இவ்வாறு பல்வேறு வேள்விகள் வேதத்தின் முகத்தில் விரிந்துள்ளன. அவையெல்லாம் கர்மத்தினாலானவை என்று உணர்வாயாக. இவ்வாறு உணர்ந்து விடுபடுவாயாக.***

மேலே குறிப்பிடப்பட்ட பல்வேறு வேள்விகள் வேதத்தின் முகத்தில் பரந்து கிடக்கின்றன. வேதத்தின் மூலம் அறியப்படுபவை 'வேதத்தின் முகத்தில் பரந்திருக்கின்றன' என்று குறிப்பிடப்படுகின்றன. இதற்கு உதாரணம் 'நாம் மூச்சுக் காற்றினை வாக்கினில் ஆகுதி செய்கின்றோம்' என்பதைக் காண்க. அவையனைத்தும் ஆத்மா அல்லாத உடல், வாக்கு, மனம் முதலியவற்றின் முயற்சியால் உருவானவை என்று அறிந்து கொள். காரணம், ஆத்மா தொழில் அற்றதாகும். இவ்வாறு அறிந்து கொண்டு நீ தீமையினின்று விடுபடுவாயாக. 'இவை எனது செயல்கள் அல்ல; நான் முயற்சிப்பதில்லை; நான் வேறுபாடற்றவன்' என்று நீ அறிந்து கொண்டால், நீ தீமையினின்று அல்லது லோகாயத வாழ்வினின்று விடுபடுவாய். இதுவே பொருளாகும்.

4.24ல் உண்மையான மெய்யறிவே வேள்வி என்று வலியுறுத்தப்பட்டது. பிறகு பல்வேறு வேள்விகளைப் பற்றிக் கூறப்பட்டது. இப்போது மனிதர்களின் பல்வேறு விருப்பங்களை நிறைவேற்றி வைக்கும் பிற வேள்விகளோடு ஒப்பிட்டு ஞானமானது சிறப்பிக்கப்படுகிறது.

**श्रेयान्द्रव्यमयाद्यज्ञाज्ज्ञानयज्ञः परन्तप ।**
**सर्वं कर्माखिलं पार्थ ज्ञाने परिसमाप्यते ॥३३॥**

**ஶ்ரேயான் த்ரவ்ய - மயாத் யஜ்ஞாஜ் ஜ்ஞான-யஜ்ஞ: பரந்தப ।**
**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞானே பரிஸமாப்யதே ॥ 33॥**

***பரந்தபா! பொருள்களினாலான வேள்வியை விட ஞானவேள்வி சிறந்தது. பார்த்தா! கர்மமனைத்தும் ஞானத்தில் மீதமின்றி முடியப் பெறுகின்றன.***

பௌதீகப் பொருட்களைக் கொண்டு செய்யப்படும் வேள்வி பௌதீகப் பயன்களை அளிக்கின்றன. ஞானவேள்வியோ அங்ஙனமன்று. அதனால் ஞானவேள்வி பௌதீகப் பொருட்களிலான வேள்வியை விட மேலானதாகும். முக்திக்கு வழியான ஞானத்தில் அனைத்துக் கர்மங்களும் முடியப் பெறுகின்றன. அதாவது அடங்கியுள்ளன. 'சூதாட்டத்தில் நான்கு என்னும் விருத்தத்தினுள், ஒன்று, இரண்டு, மூன்று என்னும் எண்ணங்கள் அடங்கிவிடுவதுபோல், மக்கள் செய்யும் நன்மைகளெல்லாம் அவனை அடைகின்றன. அவன் அறிந்ததை அறியும் மற்றொருவனும் கூட அதே பயனை அடைகிறான்' (சா.உ.4.14).

இம்மேலான ஞானம் எவ்வழியில் அடையப் பெறுகின்றது?

**तद्विद्धि प्रणिपातेन परिप्रश्नेन सेवया ।**
**उपदेक्ष्यन्ति ते ज्ञानं ज्ञानिनस्तत्त्वदर्शिनः ॥ ३४॥**

**தத் வித்தி ப்ரணிபாதேன பரிப்ரஸ்னேன ஸேவயா ।**
**உபதேக்ஷ்யந்தி தே ஜ்ஞானம் ஜ்ஞானினஸ் தத்த்வ - தர்ஸின: ॥ 34॥**

*பணிவு மிக்க வணக்கத்தாலும், வேள்வியினாலும், தொண்டு புரிவதினாலும் அதனை அறிந்து கொள். உண்மையைக் காணும் ஞானிகள் உனக்கு ஞானத்தினை உபதேசிப்பார்கள்.*

அது எவ்விதத்தால் அடையப் பெறுகிறது என்பதை அறிந்து கொள். ஆச்சார்யர்களை அணுகி அவரது திருவடிகளில் பணிவுடன் வீழ்ந்து வணங்குவதினாலும், "பந்தம் என்பது என்ன? அதனின்று மீள்வது எவ்வாறு? அறிவு என்பது என்ன? அறியாமை என்பது என்ன? என்பன போன்ற கேள்விகளினாலும் அவருக்குத் தொண்டு செய்வதாலும், உண்மையினைக் கண்டுணர்ந்த ஆச்சாரியர்கள் அந்த ஞானத்தினை உனக்கு அருள்வார்கள். உண்மையினைக் கண்டுணர்வோர் சிலரே அன்றி பலரல்லர். இதன் மூலம் பகவான், உண்மை கண்டுணர்ந்த ஞானிகள் அருளும் ஞானமே வலிமையுடைத்தென்றும், பிற ஞானங்கள் அவ்வாறில்லை என்றும் கூறுகிறார்.

அப்படிப் பொருள் கொண்டால் மட்டுமே பின்வரும் கூற்று பொருத்தமுடையதாகும்.

**यज्ज्ञात्वा न पुनर्मोहमेवं यास्यसि पाण्डव ।**
**येन भूतान्यशेषेण द्रक्ष्यस्यात्मन्यथो मयि ॥ ३५॥**

**யஜ்ஜ்ஞாத்வா ந புனர் மோஹம் ஏவம் யாஸ்யஸி பாண்டவ ।**
**யேன பூதானி அஸேஷேண த்ரக்ஷ்யஸி ஆத்மனி அதோ மயி ॥ 35॥**

*பாண்டவா ! எந்த ஞானத்தினை அறிந்து நீ மீண்டும் இவ்வாறு மயக்கமெய்த மாட்டாயோ, எதனால் நீ அனைத்து உயிர்களையும்*

*உன்னிடத்திலும் பின்னர் என்னிடத்திலும் காண்பாயோ (அந்த ஞானத்தினை முயன்று பெறுவாயாக).*

பாண்டவா! அவர்களால் அருளப்பட்ட ஞானத்தினை நீ எய்தப் பெற்றால் இப்போது குழப்பமுறுவதுபோல் எதிர்காலத்தில் குழப்பமுறமாட்டாய். இந்த ஞானத்தினால் பிரம்மதேவன் முதல் சிறு புல் ஈறாக உள்ள அனைத்து உயிர்களும் உன்னிடத்தில் இருப்பதைக் காண்பாய். அடுத்து அந்த உயிர்களெல்லாம் 'என்னிடத்தில் இருக்கின்றன' என்று உன்னிடத்தில் இருப்பதை உணர்வாய். மேலும் 'அந்த உயிர்களெல்லாம் பரமபுருஷ பகவானிடத்திலும் இருக்கின்றன' என்று உணர்ந்து அவையெல்லாம் வாசுதேவனாகிய என்னிடத்திலும் இருக்கக் காண்பாய். அதாவது உபநிஷத்துக்களில் மிகத் தெளிவாக விளக்கப்பட்டிருக்கும் ஈசுவரனுடனானத் தனிப்பட்ட ஆத்மாவின் இணைப்பினை நீ உணர்வாய் என்று பொருளாகும்.

மேலும் அதன் சிறப்பு எத்தகையது என்று காண்பாயாக.

**अपि चेदसि पापेभ्यः सर्वेभ्यः पापकृत्तमः ।**
**सर्वं ज्ञानप्लवेनैव वृजिनं सन्तरिष्यसि ॥ ३६॥**

**அபி சேத் அஸி பாபேப்ய: ஸர்வேப்ய: பாப-க்ருத்-தம: ।**
**ஸர்வம் ஜ்ஞான - ப்லவேனைவ வ்ருஜினம் ஸந்தரிஷ்யஸி ॥ 36॥**

*பாவிகள் அனைவரிலும் நீ பெரும்பாவியாக இருந்தாலும், ஞானமென்னும் படகினால் அனைத்துப் பாவங்களையும் கடந்திடுவாய்.*

இந்த ஞானமாகியப் படகின் உதவியால் நீ பாவக் கடலைக் கடந்திடுவாய். முக்தியடைய, விரும்புவோனுக்குப் புண்ணியம் கூடப் பாவம் ஆகும்.

ஞானம், பாவத்தினை எவ்வாறு அழிக்கிறது? ஓர் எடுத்துக் காட்டு:

**यथैधांसि समिद्धोऽग्निर्भस्मसात्कुरुतेऽर्जुन ।**
**ज्ञानाग्निः सर्वकर्माणि भस्मसात्कुरुते तथा ॥ ३७॥**

**யதைதாம்ஸி ஸமித்தோ (அ)க்னிர் பஸ்ம - ஸாத் குருத்தே (அ)ர்ஜுன ।**
**ஜ்ஞானாக்னி: ஸர்வ - கர்மாணி பஸ்ம - ஸாத் குருதே ததா ॥ 37॥**

*நன்கு பற்றி எரியும் தீ விறகுகளை எவ்வாறு சாம்பலாக்கி விடுகின்றதோ, அர்ஜுனா! அவ்வாறே ஞானம் என்னும் தீ அனைத்துக் கர்மங்களையும் எரித்துச் சாம்பலாக்கி விடுகின்றது.*

அர்ஜுனா! நன்கு பற்றி எரியும் தீ விறகுகளைச் சாம்பலாக்குவது போல் ஞானமென்னும் தீ அனைத்துப் பாவங்களையும் சாம்பலாக்குகின்றது. தீ

விறகினை நேரடியாக எரித்துச் சாம்பலாக்குவது போல் ஞானம் கர்மங்களை நேரடியாகச் சுட்டெரிப்பதில்லை. அதனால் உண்மையான ஞானம் அனைத்துக் கர்மங்களையும் இல்லாததாக்குகின்றது என்று பொருள் கொள்ள வேண்டும். ஆயினும் எந்தக் கர்மங்களால் இந்த உடல் இவ்வுலகில் எய்தப் பெற்றதோ அந்தக் கர்மங்கள் அவற்றின் பயன்களை முற்றிலும் கொடுத்தப் பின்னரே தீரும். ஆகையால் பயன்களை இன்னும் கொடுக்காதிருக்கும் கர்மங்கள் எவையோ, அவற்றையே ஞானமென்னும் தீ சுட்டுச் சாம்பலாக்குகின்றது. அக்கர்மங்கள் எவையெனின், ஞானம் எய்தப் பெறுவதற்கு முன்பும், ஞானத்துடன் சேர்த்தும், பல்வேறு முற்பிறவிகளிலும் செய்யப்பட்டவையாகும்.

அதனால்,

न हि ज्ञानेन सदृशं पवित्रमिह विद्यते ।
तत्स्वयं योगसंसिद्धः कालेनात्मनि विन्दति ॥ ३८॥

**ந ஹி ஜ்ஞானேன ஸத்ருஶம் பவித்ரம் இஹ வித்யதே ।**
**தத் ஸ்வயம் யோக-ஸம்ஸித்த: காலேனாத்மனி விந்ததி ॥ 38॥**

***ஞானத்தைப் போல் தூய்மை செய்வது இங்கு வேறொன்றுமில்லை. யோகத்தில் சித்தி எய்தப் பெற்றவன் தானாகவே உரிய காலத்தில் அதைத் தனக்குள் எய்தப் பெறுகிறான்.***

கர்மயோகம் மற்றும் சமாதி யோகம் போன்றவற்றினால் தன்னைத் தூய்மை செய்து முக்தியடைய விரும்புவோன் நீண்ட காலத்திற்குப் பின்னர் தனக்குள் ஆன்மீக ஞானம் எய்தப் பெறுகிறான்.

ஞானம் எய்துவதற்கு நிச்சயமான வழி பின்வருமாறு உபதேசிக்கப்படுகிறது.

श्रद्धावाँल्लभते ज्ञानं तत्परः संयतेन्द्रियः ।
ज्ञानं लब्ध्वा परां शान्तिमचिरेणाधिगच्छति ॥ ३९॥

**ஶ்ரத்தாவாங்ல்லபதே ஜ்ஞானம் தத்-பர: ஸம்யதேந்த்ரிய: ।**
**ஜ்ஞானம் லப்த்வா பராம் ஶாந்திம் அசிரேணாதிகச்சதி ॥ 39॥**

***அதையே மேலாகக் கருத்திற் கொண்டு புலன்களை நன்கடக்கி நம்பிக்கையுமுடையவனாக இருப்போன் ஞானத்தை அடைகிறான். ஞானம் அடைந்தபின் விரைவில் பரசாந்தி பெறுகிறான்.***

முழு நம்பிக்கையுடையவன் ஞானம் எய்துகிறான். ஆயினும் அவன் மந்த கதியுடையவனாக இருந்தான் எனில், குருவிற்குத் தொண்டு புரிவதிலும், அவரது மொழிகளைக் கருத்தூன்றிக் கேட்பதிலும் உறுதியுடையவனாக

இருத்தல் வேண்டும். நம்பிக்கையுடைய ஒருவன் புலனடக்கம் இல்லாதவனாக இருந்தால் அவன் புலனுகர்ச்சிப் பொருட்களினின்று தனது புலன்களை விலக்கிக் கொள்ள வேண்டும். நம்பிக்கையும், குருவினிடத்தில் பக்தியும் புலன்களை அடக்கியும் இருப்பவன் எவனோ அவன் நிச்சயம் ஞானம் எய்தப் பெறுகிறான். குருவின் திருவடிகளில் வீழ்ந்து வணங்குதலில் போலி நடிப்பும் இருக்கக்கூடும். ஆதலினால், அவை போன்ற புறச் செயல்களினால் உரிய பயன் விளையாது. ஆயினும் இதுபோன்ற போலி நடிப்பு முழு நம்பிக்கை இருந்தால் சாத்தியமாகாது. இதுவே ஞானம் எய்துவதற்குரிய நிச்சயமான வழியாகும். மேலும் அந்த ஞானத்தினைப் பெறுவதின் பயன் என்ன? என்றால் அந்த ஞானம் எய்தப் பெற்றவன் விரைந்து முக்தி என்னும் பரசாந்தியடைகிறான். உரிய ஞானத்தினால் விரைந்து முக்தி எய்தலாம் என்பது அசைக்க வொண்ணா தத்துவமாக எல்லாச் சாத்திரங்களிலும் நிறுவப்பட்டுள்ளது.

இதில் உனக்கு ஐயம் எழக்கூடாது. ஏனெனில் ஐயம் என்பது - பெரும்பாவமாகும். எவ்வாறு? - பதில் பின்வருமாறு:

**अज्ञश्चाश्रद्दधानश्च संशयात्मा विनश्यति ।**
**नायं लोकोऽस्ति न परो न सुखं संशयात्मनः ॥४०॥**

**அஜ்ஞஶ் சாஶ்ரத்ததானஶ் ச ஸம்ஶயாத்மா விநஶ்யதி ।**
**நாயம் லோகோ (அ)ஸ்தி ந பரோ ந ஸுகம் ஸம்ஶயாத்மன: ॥ 40॥**

***ஞானமும், நம்பிக்கையுமின்றி ஐயமுடையவனாக இருப்பவன் அழிந்து போகிறான். ஐயமுடையோனுக்கு இவ்வுலகுமில்லை; மேலுலகும் இல்லை; சுகமும் இல்லை.***

ஆத்மாவை அறியாதவனும், குருவினுடைய உபதேசத்திலும் அவருடைய மொழியிலும் நம்பிக்கை இல்லாதவனும், மனம் முழுக்க ஐயமுடையவனும் அழிந்து போகின்றனர். அறியாதவனும், நம்பிக்கை யற்றவ[illegible]ம் அழிந்து போகின்றனர் என்பதில் ஐயமில்லை. ஆயினும் அவர்கள் ஐய[illegible]வன் அளவிற்கு அழிந்து போவதில்லை. அவன் பாவிகள் [illegible]றும் கொடிய பாவியாவான். எவ்வாறு?

அவனுக்கு, அனைவருக்கும் பொதுவான இவ்வுலகம் இல்லை. அதுபோல், மேல் உலகமும் இல்லை. ஐயமுடையவனாதலால் அவனுக்கு சுகமும் இல்லை. அதனால் ஐயம் கொள்ளக்கூடாது.

ஏனெனில்,

**योगसंन्यस्तकर्माणं ज्ञानसंञ्छिन्नसंशयम् ।**
**आत्मवन्तं न कर्माणि निबध्नन्ति धनञ्जय ॥४१॥**

**யோக-ஸன்ன்யஸ்த - கர்மாணம் ஜ்ஞான - ஸஞ்சின்ன - ஸம்ஸயம் ।**
**ஆத்மவந்தம் ந கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய ॥ 41॥**

*தனஞ்சயா! யோகத்தால் கர்மத்தைத் துறந்து, ஞானத்தால் ஐயத்தை அறுத்துத் தன்னில் நிலை பெற்றவனை கர்மங்கள் கட்டுப்படுத்தமாட்டா.*

பரம் பொருள் பற்றிய யோகம் மற்றும் ஞானத்தினால் தர்மம் அதர்மம் என்னும் அனைத்துக் கர்மங்களையும் துறப்பவன் பரம்பொருளைக் காண்கிறான். ஈசுவரனிடத்துத் தன்னை ஐக்கியப்படுத்தும் ஞானத்தினால் அவனது ஐயம் நீங்கப் பெறும்பொழுது அவன் இந்நிலை எய்தப் பெறுகிறான். தனஞ்சயா! எவன் இவ்வாறு யோகத்தால் கர்மங்களைத் துறந்தவனோ, அந்த ஞானியை முக்குணங்களின் செய்கைகளாகக் காணப்படும் கர்மங்கள் கட்டுப்படுத்துவதில்லை; அவற்றினால் நன்மை, தீமை முதலிய பயன்களும் விளைவதில்லை.

கர்ம யோகத்தைக் கடைபிடிப்பதினால் குற்றம் நீங்கி, ஞானமுண்டாக அந்த ஞானத்தினால் ஐயம் நீங்கப் பெற்றவனைக் கர்மங்கள் கட்டுப்படுத்துவதில்லை. அதாவது அவனது கர்மங்கள் அனைத்தும் ஞானம் என்னும் தீயினால் எரிந்து போயிற்றாம். மேலும் ஞானகர்மயோகங்களை கடைப் பிடிப்பதில், ஐயமுடையவன் அழிந்து போகிறான்.

**तस्मादज्ञानसम्भूतं हृत्स्थं ज्ञानासिनात्मनः ।**
**छित्त्वैनं संशयं योगमातिष्ठोत्तिष्ठ भारत ॥४२॥**

**தஸ்மாத் அஜ்ஞான - ஸம்பூதம் ஹ்ருத் - ஸ்தம் ஜ்ஞானாஸினாத்மன: ।**
**சித்த்வைனம் ஸம்ஸயம் யோகம் ஆத்திஷ்டோத்திஷ்ட பாரத ॥ 42॥**

*ஆகையால் அஞ்ஞானத்தால் தோன்றி, நெஞ்சில் நிலை கொண்டிருக்கும் ஆத்மாவைப் பற்றிய இந்த ஐயத்தினை ஞானமென்னும் வாளினால் அறுத்து யோகத்தில் நிலைபெறு. பாரத, எழுந்து நில்.*

ஐயம் கொடிய பாவமாகும். அது அறியாமையில் பிறந்து புத்தியில் நிலை பெற்றிருக்கிறது. ஆத்மாவைப் பற்றிய மெய்யறிவு என்னும் ஞான வாளினால் அதனை அறுத்தெறிக. அதாவது துன்பம் மயக்கம் போன்ற அனைத்துத் தீமைகளையும் அழிக்கவல்லது மெய்யறிவாகும். மெய்யறிவு பெறுவதற்குச் சிறந்த கருவியானக் கர்மயோகத்தில் உன்னை ஈடுபடுத்தி அழிவிற்குக் காரணமான ஐயத்தினை இவ்வாறு அறுத்தெறிவாயாக. எழுக! போர் புரிக! ஓ, பரத குலத் தோன்றலே.

(ஐயமானது ஆத்மாவைப் பற்றியதாதலின் 'தன்னுடைய' என்று பொருள் கொள்ள வேண்டும். ஒருவனுடைய ஐயத்தை வேறொருவன் நீக்க

முடியாதன்றோ. அதனால் தன்னுடைய ஐயம் என்று சிறப்பாகக் குறிப்பிட வேண்டும். மேலும் ஐயம் என்பது ஆத்மாவைப் பற்றியதாயினும் அது தன்னுடையதாகவே ஆகின்றது (தான் - ஆத்மா). ஒருவன் சிப்பியைக் கண்டு வெள்ளி என்று ஐயம் கொண்டால் அந்த ஐயம் அவனிடம் சிப்பியைப் பற்றியதாக இருக்கின்றது. ஆனால் இங்கோ அவ்வாறின்றி ஐயம் தன்னைப் பற்றியதாக இருக்கின்றது. இதனை வேறுபடுத்திக் காணவே 'தன்னுடைய' என்று பொருள் கொள்ள வேண்டுமென்று கூறப்படுகிறது. - ஆ)

இவ்வாறு மகாபாரதத்தில் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும் பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் 'ஞானயோகம்' என்னும் நான்காம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



# அத்தியாயம் ஐந்து

# சந்யாஸ யோகம்

அத்தியாயம் 4ல் - 18, 19, 21, 22, 24, 32, 33, 37 மற்றும் 41 ஆம் சுலோகங்களில் பகவான் கர்மத்துறவினைப் பற்றி விளக்கியிருக்கிறார். 42வது சுலோகத்தில் அர்ஜுனனிடம், கர்மத்தில் ஈடுபடு என்று கூறியுள்ளார். கர்மத்தைச் செய்தல், கர்மத்தைத் துறத்தல் என்னும் இரண்டும், நிற்றல், நடத்தல் என்பதுபோல் நேர் எதிரானவையாகும். அதனால் அவை இரண்டையும் ஒருவனால் ஒருங்கே கடைபிடிக்க முடியாது. மேலும் அவை இரண்டையும் வேறு வேறு காலங்களில் கடைப்பிடிக்கலாம் என்று விதி யும் இல்லை. அதனால் கர்மத்தைச் செய்தல், கர்மத்தைத் துறத்தல் என்னும் இ வ இரண்டில் எது சிறந்தது என்பதைத் தெரிந்து கொள்ள அர்ஜுனன் பகவானை 'கிருஷ்ண!' (5-1) என்று தொடங்கிக் கேட்கலானான்.

மறுப்பு : அவ்வாறெனில் மேலே குறிப்பிடப்பட்டிருக் உபதேசங்களில் பகவான் ஆத்மாவை அறிபவனுக்கு ஞான யோகத்தினை உபதேசிக்கும் பொருட்டு கர்மத்துறவினை விதித்தாரேயன்றி ஆத்மாவை அறியாதவனுக்கு அல்ல. கர்மச் யதல், கர்மத் துறவு என்னும் இவை இரண்டும் வெவ்வேறு மனிதர் க்குரியன ஆதலினால் இவற்றுள் எது சிறந்தது என்னும் அர்ஜுனனி கள்வி பொருந்தாது.

பதில் : ஆட் உனது கருத்தின்படி அர்ஜுனனின் கேள்வி பொருத்தமற்றதுதான். ல் அர்ஜுனனின் நோக்கில் அவனது கேள்வி பொருத்தமுடையதே ன்று நாம் கூறுகிறோம் - எவ்வாறு? மேலே குறிப்பிடப்பட்டுள்ள உபதேசங்கள் கர்மத்துறவினைப் பகவான் ஒரு முக்கியக் கடமையாக உபதேசிக்கி றார் என்பதை உறுதிப்படுத்துகின்றன. ஆயினும் ஆத்மாவை அறியாதவனும் கூட கர்மத்துறவிற்கு உரியவனே ஆவான். ஆத்மாவை அறிந்தவன் மட்டுமே கர்மத் துறவிற்கு உரியவன் என்பது கருத்தன்று.

கர்மத்தைச் செய்தல், கர்மத்துறவு என்னும் இவை இரண்டும் ஆத்மாவை அறியாதவனும் மேற்கொள்ளக் கூடியவையே என்று அர்ஜுனன் கருதினான். அதனால் ஒன்றிற்கொன்று வேறுபாடுடைய இரண்டனுள் எது சிறந்தது என்று அறிந்து கொள்வதற்காக அர்ஜுனன் கேட்ட வினா சாலப் பொருத்தமுடையதேயாகும்.

அர்ஜுனனின் கேள்விக்கு பகவான் அளித்த மறுமொழியை ஆராயினும், கேட்டவனின் கருத்து இதுதான் என்று தெரியவரும் - எவ்வாறு? பதில்

பின்வருமாறு: ''துறவு, கர்மயோகம் இவையிரண்டும் உயர்நலத்தைத் தருவன. இவற்றுள் கர்மத் துறவைக் காட்டிலும் கர்ம யோகம் சிறந்தது'' (5-2) என்பது பகவானின் மறுமொழியாகும். அதனால் ஆத்மாவை அறிபவனுக்கு துறவும், கர்மயோகமும் உயர் நன்மையளிக்கக் கூடியவையே எனினும், அவற்றுள் கர்மத் துறவைக் காட்டிலும் கர்ம யோகம் மேம்பட்டது என்று கூறப்படுகின்றதா? அல்லது ஆத்மாவை அறியாதவனுக்கு துறவும் கர்மயோகமும் உயர் நன்மை அளிக்கக்கூடியவையே எனினும் அவற்றுள் கர்மத்துறவைக் காட்டிலும் கர்மயோகம் மேம்பட்டது என்று கூறப்படுகின்றதா? என்பதை நாம் இப்போது உறுதி செய்தல் வேண்டும்.

அடுத்து மற்றொரு கேள்வி : ஆத்மாவை அறிபவன் மேற்கொள்ளும் கர்மத்துறவு மற்றும் கர்மயோகம் என்னும் இரண்டும் உயர் நன்மையளிப்பவையே ஆயினும் இவற்றுள் கர்ம யோகம் சிறந்தது என்றால் அதனால் உண்டாகும் குற்றம் என்ன? அல்லது ஆத்மாவை அறியாதவன் மேற்கொள்ளும் கர்மத்துறவு மற்றும் கர்மயோகம் என்னும் இரண்டும் உயர் நன்மையளிப்பவையே ஆயினும் இவற்றுள் கர்மயோகம் சிறந்தது என்றால் அதனால் உண்டாகும் பயன் என்ன? என்றால் பதில் பின்வருமாறு:

ஆத்மாவை அறிபவனுக்குத் துறவும், கர்மயோகமும் ஒரு சேரச் சாத்தியப்படாது ஆதலினால் அவை உயர் நன்மையளிப்பவை என்பதும், அவனது கர்மத்துறவினை விடக் கர்மயோகம் மேலானது என்பதும் பொருத்தமற்றதாகும். இதற்கு மாறாக ஆத்மாவை அறியாதவனுக்கு கர்மத்துறவும், கர்ம யோகமும் ஒரு சேரச் சாத்தியப்படும் என்பதினால் அவை இரண்டும் உயர் நன்மையளிப்பவை என்பதும் கர்மத் துறவை விடக் கர்ம யோகம் சிறந்தது என்பதும் பொருத்தமுடையதாகும்.

மறுப்பு: ஆத்மாவை அறிந்தவனுக்கு கர்மத்துறவு, கர்மயோகம் என்னும் இரண்டுமே சாத்தியமற்றதா? அல்லது ஏதாவதொன்று சாத்தியமற்றதா? அப்படி ஏதாவதொன்று சாத்தியமற்றதென்றால் அது கர்மத் துறவா? அல்லது கர்மயோகமா? அவ்வாறு சாத்தியமில்லாமைக்குக் காரணம் என்ன?

பதில் : ஆத்மாவை அறிந்தவனுக்கு அவனிடமுள்ள அறியாமை நீங்கி விடுவதால், அறியாமையினை அடிப்படையாகக் கொண்டக் கர்மயோகம் அவனுக்கு சாத்தியமற்றதாம். ஆத்மா அழிவற்றதென்றும், பிறப்பு, இறப்பு போன்வற்றிற்கு ஆளாவதில்லையென்றும் அது செயலற்றதென்றும் எவன் அறிகின்றானோ, மெய்யறிவினால் அறியாமை நீங்கப் பெற்ற அந்த ஆத்ம ஞானிக்கு, கர்மம் எதுவுமின்றி ஆத்ம வடிவமாக நிற்பதாகிய கர்மத்துறவு கூறப்பட்டது. மேலும், அறியாமைக்கும் மெய்யறிவுக்கும் இடையிலுள்ள முரண்பாடு மற்றும் அவற்றின் பயன்களின் காரணமாகவும், கர்மத்துறவிற்கு எதிரானதும், அறியாமையினை அடிப்படையாகக் கொண்டதும், தொழிலைச் செய்யும் கர்த்தாவிற்கு முக்கியத்துவம் தருவதும், ஆத்மாவின் மீது ஏற்றப்பட்டதுமாகியக் கர்மயோகம் ஞானிக்கு இல்லை என்று கீதா சாத்திரத்தில், ஆத்மாவைப் பற்றிக் கூறுமிடங்களில் குறிப்பிடப்படுகின்றது. ஆகையால் அறியாமை நீங்கி ஆத்மாவை அறிந்தவனுக்கு அறியாமையை

அடிப்படையாகக் கொண்ட கர்மயோகம் சாத்தியமற்றது என்பது ஏற்புடையதாகும்.

மறுப்பு: ஆத்மாவின் உண்மை நிலையினை உறுதி செய்யும் வேறு எந்த இடங்களில் ஆத்மாவை அறிந்தவனுக்கு கர்மமில்லை என்பது நிறுவப்பட்டிருக்கின்றது?

பதில்: 'அது அழிவற்றது' (2-17) 'எவன் இதனை' (2-19) 'அழிவற்றதாக' (2-21) என்று குறிப்பிடப்படும் சுலோகங்களில் கூறப்படுகின்றது.

மறுப்பு: அவ்வாறெனில், ஆத்மாவின் உண்மைநிலையினை உறுதி செய்யும் இடங்களில் கர்மயோகமும் கூடத் தான் வலியுறுத்தப்படுகின்றது எடுத்துக் காட்டு: 'பாரத, ஆதலினால் போர் புரிவாயாக' (2-18) 'அதர்மத்தைக் கருதியும்' (2-31) 'உனக்குக் கர்மத்தில் மட்டுமே அதிகாரம்' (2-47). ஆகையால் ஆத்மாவை அறிந்தவனுக்குக் கர்மயோகம் சாத்தியமற்றது என்பது எவ்வாறு பொருந்தும்?

பதில்: காரணம், மெய்யறிவுக்கும், அறியாமை என்னும பொய்யறிவுக்கும், அதன் பயன்களுக்கும் இடையிலுள்ள முரண்பாடேயாகும்.

''சாங்கியர்களுக்கு ஞான யோகத்தாலும்'' (3-3) என்று கூறியதனால், கர்மமற்ற ஆத்மவடிவமாகவே நிற்பதாகிய ஞானயோகமானது, ஆத்மாவை அறிந்த சாங்கியர்களுக்கு, ஆத்மாவை அறியாதவன் செய்யும் கர்மயோகத்தினின்று வேறுபடுத்தப்படுகின்றது. ஆத்மாவை அறிந்தவன் முக்தி எய்துவதினால் அதனை விட அவன் எய்த வேண்டிய பயன் வேறொன்றுமில்லை'' (3-17) 'ஒருவன் கர்மங்களைச் செய்யாமையினால்' (3-4) 'பெருந்தோள! துறவென்று' (5-6) என்னும் சுலோகங்களில் கர்மயோகம் ஆத்ம அறிவுக்கு வழியாகக் கூறப்படுகின்றது. ''யோகத்தை எய்தியவனுக்கு'' (6-3) என்னும் சுலோகத்தில் மெய்யறிவு எய்தப் பெற்றவனுக்குக் கர்மயோகம் இன்மை கூறப்படுகின்றது. ''உடலுக்குத் தேவையானக் கர்மத்தை மட்டும் செய்வோன் பாவத்தை அடையமாட்டான்'' (4-21) என்று கூறியதின் மூலம், உடல் நிலைபெறுதற்குரிய கர்மத்தைத் தவிர பிற கர்மங்கள் ஞானிக்கு இல்லை என மறுத்தலாலும் ஆத்மாவை அறிந்த ஞானிக்குக் கர்மயோகம் பொருந்துவதில்லை. மேலும், ''உண்மை அறிந்தவன், நான் எதுவும் செய்வதில்லை'' (5-8) என்னும் சுலோகத்தின் மூலம், தனது மனநிலை எப்போதும் ஆத்மாவில் நிலைபெறச் செய்து, ஆத்மாவை அறிந்தவன், உடலினை ஓம்புதற்குத் தேவையான அத்தியாவசியமானக் கர்மங்களான ''பார்த்தல், கேட்டல்'' போன்றவற்றைக் கூட ''நான் செய்கிறேன்'' என்று கருதக் கூடாது என்று அறிவுறுத்தப்படுகின்றது. அடுத்து மெய்யறிவுக்கு எதிரானப் பொய்யறிவினை அடிப்படையாகக் கொண்ட கர்மயோகம், ஆத்மாவை அறிந்தவனுக்குக் கனவிலும் கருத முடியாததாகும். மேற்கூறிய காரணங்களினால் ஆத்மாவை அறியாதவன் செய்யும் கர்மத்துறவும், கர்மயோகமும் உயர் நன்மையளிப்பவை என்பது ஏற்புடையதாகும். மேலும் ஆத்மாவை அறிந்தவன் செய்யும் அனைத்துக் கர்மத்துறவுடன் ஒப்பிடும்

பொழுது, தான் கர்த்தா என்னும் எண்ணத்தில், செய்யப்படுவதும் (அதாவது துறவு நிலைக்கு விதிக்கப்பட்டக் கேட்டல், ஓதுதல் போன்றக் கர்மங்களைத் தான் செய்பவன் என்னும் எண்ணம் அப்படியே இருக்க அதற்கு முந்தைய ஆஸ்ரமத்திற்குரிய கர்மங்களை மட்டும் துறப்பது) யமம், நியமம் என்பவற்றோடு அமைந்துள்ளதால் செய்வதற்கு அரியதுமான, ஆத்மாவை அறியாதவனுடையக் கர்மத்துறவினைக் காட்டிலும், எளிதிற் செய்யக்கூடியக் கர்மயோகம் சிறந்ததாகும் என்று கூறுவது ஏற்புடைத்ததே. இவ்வாறு மறுமொழியின் வார்த்தைகளை ஆராயினும் கூட, அர்ஜுனனின் கேள்விக்குப் பொருளாக இதற்கு முன்னர் அளித்த அதே முடிவிற்கே, அது இட்டுச் செல்கிறது.

மூன்றாம் அத்தியாத்தின் தொடக்கத்தில் அர்ஜுனன் ஞானம் மற்றும் கர்மம் என்னும் இரண்டும் ஒரே சமயத்தில் ஒருவனுக்கு சாத்தியமாகாது என்று கண்டு பகவானிடம் 'இவ்விரண்டில் எது மேலானது என்று எனக்கு உரைத்தருள வேண்டும்' என வேண்ட, அதற்கு பகவான் 'துறவிகளான சாங்கியர்களுக்கு ஞான மார்க்கமும், கர்மம் செய்யும் யோகியர்க்குக் கர்ம மார்க்கமும் உரியது என்று உறுதிபடப் பதில் கூறினார். மேலும் 'துறவினால் மட்டுமே ஒருவன் முக்தியடைவதில்லை' (3-4) என்னும் கூற்றினால் முக்தியடைதற்கு ஞானத்தோடு கூடியத் துறவு வழிமுறையாக அறிவுறுத்தப்பட்டது. அடுத்து கர்மயோகமும் கூட முக்தியடைதற்கு சிறந்த வழி முறையே என்றும் விதிக்கப்பட்டிருக்கிறது. (4-42) அதனால் அர்ஜுனன் ஞானமற்றவனுக்கு துறவு மேலானதா? அல்லது கர்மயோகம் மேலானதா? என்று பகவானைக் கேட்கிறான். அதாவது இவையிரண்டில் எது மேலானது என்று அர்ஜுனன் அறிய விரும்புகிறான்.

अर्जुन उवाच

**संन्यासं कर्मणां कृष्ण पुनर्योगं च शंससि ।**
**यच्छ्रेय एतयोरेकं तन्मे ब्रूहि सुनिश्चितम् ॥१॥**

*அர்ஜுன உவாச*

**ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புனர் யோகம் ச ஶம்ஸஸி ।**
**யச் ச்ரேய ஏதயோர் ஏகம் தன்மே ப்ரூஹி ஸு - நிஶ்சிதம் ॥ 1॥**

*அர்ஜுனன் கூறினான்*

***கிருஷ்ணா! கர்மத் துறவினையும், அத்தோடு கர்மயோகத்தையும் புகழ்ந்து பேசுகின்றீர். இவ்விரண்டில் எது சிறந்ததோ அதனை எனக்கு முடிவாக உரைத்தருள வேண்டும்.***

சாத்திரங்களில் கூறப்பட்டிருக்கும் பல்வேறு கர்மங்களைத் துறந்திருத்தலையும் கூறி பின்னர் அக்கர்மங்களைச் செய்ய வேண்டியதன் அவசியத்தையும் கூறுகின்றீர். அதனால் கர்மத் துறவு சிறந்ததா, அல்லது கர்மயோகம் சிறந்ததா? என்னும் ஐயம் எனக்குள் எழுகின்றது. எது சிறந்ததோ

அதனைச் செய்ய வேண்டும். ஆகையால் கர்மத்துறவு கர்மயோகம் என்னும் இவை இரண்டில் எது சிறந்ததோ, எதனை நான் செய்வதால் எனக்கு நன்மை உண்டாகுமென்று நீர் நினைக்கின்றீரோ, அதனை - ஒரே சமயத்தில் ஒருவனால் இவையிரண்டையும் செய்ய முடியாது ஆதலினால் - கர்மத்துறவு, கர்மயோகம் என்னும் இவற்றுள் எது சிறந்ததென்று எனக்கு உறுதிபட உரைத்தருள வேண்டும்.

அர்ஜுனனின் ஐயத்தினை நீக்கும் பொருட்டுப் பகவான் தமது கருத்தினைக் கூறலானார்.

श्रीभगवानुवाच

संन्यासः कर्मयोगश्च निःश्रेयसकरावुभौ ।
तयोस्तु कर्मसंन्यासात्कर्मयोगो विशिष्यते ॥ २॥

*ஸ்ரீ பகவான் உவாச*

**ஸந்ந்யாஸ: கர்ம-யோகஶ் ச நி:ஶ்ரேயஸ - கராவ் உபௌ ।**
**தயோஸ் து கர்ம - ஸந்ந்யாஸாத் கர்ம-யோகோ விஶிஷ்யதே ॥ 2॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்:*

***துறவு, கர்மயோகம், இவையிரண்டும் உயர் நன்மையளிப்பனவே, ஆயினும் கர்மத்துறவை விடக் கர்மயோகம் சிறந்ததாகும்.***

கர்மத்துறவு, கர்மயோகம் எனும் இவையிரண்டும் ஆன்மீக ஞானத்திற்குக் காரணமாதலினால், முக்தியை அளிக்கின்றன. இவையிரண்டுமே முக்தியளிப்பவைதான் என்ற போதிலும், ஞானமில்லாதக் கர்மத் துறவைக் காட்டிலும், கர்மயோகம் சிறந்ததென்று போற்றுகின்றார்.

எதனால்? என்றால் பதில் பின்வருமாறு:

ज्ञेयः स नित्यसंन्यासी यो न द्वेष्टि न काङ्क्षति ।
निर्द्वन्द्वो हि महाबाहो सुखं बन्धात्प्रमुच्यते ॥ ३॥

**ஜ்ஞேய: ஸ நித்ய - ஸந்ந்யாஸீ யோ ந த்வேஷ்டி ந காங்க்ஷதி ।**
**நிர்த்வந்த்வோ ஹி மஹா-பாஹோ ஸுகம் பந்தாத் ப்ரமுச்யதே ॥ 3॥**

***விருப்பும், வெறுப்புமற்றவனை நித்தியத் துறவி என்று அறிதல் வேண்டும். உயர்தோளா! அவன் இருமை நீங்கி விரைவில் (கர்ம) பந்தத்தினின்று விடுபடுகிறான்.***

எவன் துன்பத்தையும், அத்துன்பத்திற்குக் காரணமானப் பொருட்களையும் வெறுப்பதில்லையோ, அதுபோல் எவன் இன்பத்தையும்,

அவ்வின்பத்திற்குக் காரணமானப் பொருட்களையும் விரும்புவதில்லையோ, அக்கர்மயோகியே கர்மங்களில் ஈடுபடுபவனாயினும் நித்தியத் துறவி என்றறியப்படுகிறான்.

கர்மத்துறவும், கர்மயோகமும் ஒன்றிற்கொன்று எதிரானவை மட்டுமல்ல, வெவ்வேறு மனிதர்க்கும் உரியவையாகும். அதனால் அவற்றின் பயன்களும் நிச்சயமாக வெவ்வேறாகத்தான் இருத்தல் வேண்டும். இரண்டும் ஒரே தன்மையதான முக்தியளிக்கும் நன்மையைச் செய்பவை என்பது ஏற்புடைத்தன்று.

இதற்குப் பதில் பகவான் கூறுகிறார்:

**साङ्ख्ययोगौ पृथग्बाला: प्रवदन्ति न पण्डिता: ।**
**एकमप्यास्थित:सम्यगुभयोर्विन्दते फलम् ॥ ४॥**

**ஸாங்க்ய - யோகௌ ப்ருதக் பாலா: ப்ரவதந்தி ந பண்டிதா: ।**
**ஏகம் அபி ஆஸ்தித: ஸம்யக் உபயோர் விந்ததே பலம் ॥ 4॥**

*சிறுவர்களேயன்றி அறிஞர்கள் துறவும், யோகமும் வெவ்வேறானவை என்று கூறுவதில்லை. இவற்றுள் ஏதேனும் ஒன்றில் நிலைபெற்றோன் இரண்டின் பயனையும் பெறுகிறான்.*

சிறுவர்களே இங்கு துறவும் யோகமும் வெவ்வாறானவை என்றும் எதிரெதிர் பயன்களைத் தருபவை என்றும் கூறுகின்றனர். ஆனால் அறிஞர்கள் அவ்வாறு வேறுபாடு காண்பதில்லை என்பதோடு, இரண்டும் ஒரே பயனைத் தரவல்லவை என்று நம்புகின்றனர். துறவு மற்றும் யோகத்தில் ஏதேனும் ஒன்றினை மேற்கொண்டவன் அதனை உளப்பூர்வமாகக் கடைபிடித்தால் அவன் இரண்டின் பயனையும் ஒருசேர எய்துகிறான். இரண்டும் முக்தி என்னும் ஒரே பயனைத்தான் அளிக்கின்றன. ஆகையால் அவற்றின் பயனில் வேறுபாடில்லை.

மறுப்பு : துறவு, கர்மயோகம் என்னும் சொற்களில் தொடங்கிய பகவான், பின்னர் ஏன், துறவு கர்மயோகம் இவையிரண்டின் பயனும் ஒன்றெனக் கூறுகிறார்? இது பொருந்தாதன்றோ?

பதில் : அதனால் குற்றமில்லை. அர்ஜுனனின் கேள்வி, கர்மத்துறவு, கர்மயோகம் பற்றியதாக இருந்தபோதிலும், பகவான் அதனைப் புறக்கணிக்காது தனது கருத்தினையும் சேர்த்து சாங்கியம் மற்றும் கர்மயோகம் என்னும் சொற்களைப் பயன்படுத்தி பதில் கூறினார். பகவானின் கருத்து என்னவென்றால், துறவு மற்றும் கர்மயோகத்துடன் ஆத்மஞானமும், சமத்துவப் புத்தியும் இணையும் பொழுது அவை சாங்கியம் என்றும் யோகம் என்றும் அழைக்கப்படுகின்றன என்பதாகும். அதனால் இது பொருந்தாததன்று.

ஒருவன் ஒன்றினை மட்டும் உளப்பூர்வமாகக் கடைப்பிடித்தால் இரண்டின் பயனையும் அடையலாம் என்பது எவ்வாறு? எனில் பதில் பின்வருமாறு:

यत्साङ्ख्यैः प्राप्यते स्थानं तद्योगैरपि गम्यते ।
एकं साङ्ख्यं च योगं च यः पश्यति स पश्यति ॥५॥

**யத் ஸாங்க்யை: ப்ராப்யதே ஸ்தானம் தத்யோகைர் அபி கம்யதே ।**
**ஏகம் ஸாங்க்யம் ச யோகம் ச ய: பஸ்யதி ஸ பஶ்யதி ॥ 5॥**

*சாங்கியர்களால் எந்நிலை எய்தப் பெறுகின்றதோ அதனையே யோகிகளும் எய்துகின்றனர். எவன் சாங்கியத்தையும், யோகத்தையும் ஒன்றாகக் காண்கின்றானோ அவனே காட்சியுடையவனாவான்.*

ஞானத்தில் நிலைபெற்றத் துறவிகளால் எந்நிலை எய்தப்படுகின்றதோ, அந்நிலையை யோகிகளும் அடைகின்றனர். ஞானத்திற்கு வழியானக் கர்மங்களை ஈசுவரனுக்கு அர்ப்பணித்து பயனை எதிர்பாராது செய்பவர்கள் யோகிகள் ஆவர். உண்மை ஞானம், உண்மைத் துறவின் மூலம் அவர்களும் அந்நிலை அடையப் பெறுகின்றனர் என்பது பொருளாகும். அதனால் ஒரே பயனைத் தரவல்ல சாங்கியத்தையும், யோகத்தையும் ஒன்றாகக் காண்பவன் காட்சியுடைவனாவான். அதாவது அவ்விரண்டையும் சரியாகக் காண்கின்றான் என்று பொருளாகும்.

**கேள்வி** : அவ்வாறு துறவு, யோகத்தைவிடச் சிறந்ததாயின், பிறகு கர்மயோகம், கர்மத்துறவை விடச் சிறந்ததென்பது பொருந்தாதன்றோ?

**பதில்** : அதன் காரணத்தைக் கேட்பாயாக. நீ சாதாரணக் கர்மத் துறவினையும், சாதாரணக் கர்ம யோகத்தையும் மனதிற் கொண்டு அவற்றுள் எது சிறந்ததென்று கேட்டாய். அதற்கு நான் ஞானத்தினைக் குறிப்பிடாது, கர்மயோகம், கர்மத் துறவினை விடச் சிறந்ததென்று பதிலிறுத்தேன். ஆயினும் ஞானத்தினை அடிப்படையாகக் கொண்டத் துறவு சாங்கியம் என்பது எனது துணிபு. அச்சாங்கியமே உண்மையான யோகமும் ஆகும். எனினும் வேதத்திற் குறிப்பிடப்படும் கர்மயோகம் எதுவோ அது உண்மையானத் துறவிற்குப் பயன்படுவதால் அது யோகமென்றும், துறவு என்றும் மரியாதை வழக்கினால் கூறப்படுகின்றது.

கர்மயோகத்தின் நோக்கம் உண்மை யோகம் அல்லது கர்மத் துறவு எவ்வாறு? கேட்பாயாக.

संन्यासस्तु महाबाहो दुःखमाप्तुमयोगतः ।
योगयुक्तो मुनिर्ब्रह्म नचिरेणाधिगच्छति ॥६॥

**ஸந்ந்யாஸஸ் து மஹா-பாஹோ து:கம் ஆப்தும் அயோகத:**
**யோக-யுக்தோ முனிர் ப்ரஹ்ம ந சிரேணாதி கச்சதி ॥ 6॥**

*பெருந்தோளா! யோகத்தாலன்றி துறவு அடைவதற்கு அரியதாகும். ஆனால் யோகத்தில் பொருந்திய முனிவன் விரைவில் பிரம்மத்தை அடைகிறான்.*

உயர்தோள! உண்மைத் துறவினைக் கர்மயோகத்தினாலன்றி பிறிதொன்றினால் அடைய முடியாது. ஈசுவரனிடம் அர்ப்பணிக்கப்படுவதும், பயனை எதிர்பாராது செய்யப்படுவதும் வேதத்திற் குறிப்பிடப்பட்டிருப் பதுமானக் கர்மயோகத்தைச் சார்ந்து ஈசுவரனின் வடிவத்தை இடைவிடாது தியானித்துக் கொண்டிருப்பவன் பரமார்த்த ஞானம் என்னும் உண்மைத் துறவினை விரைவில் எய்துகிறான். ஆதலினால்தான் கர்ம யோகம் சிறந்ததென்று நான் கூறினேன். இங்கு குறிப்பிடப்படும் ஞானம் பரம்பொருளின் ஞானம் ஆதலினால்தான் சுருதி 'ந்யாஸம் என்பது பிரம்மம் ஆகும். பிரம்மமே உண்மையில் உயர்ந்ததாகும்' என்று கூறுகின்றது. (தை.உ.4-78)

உண்மை ஞானத்தினை எய்துவதற்காக ஒருவன் யோகத்தினைக் கூடும்பொழுது:

**योगयुक्तो विशुद्धात्मा विजितात्मा जितेन्द्रियः ।**
**सर्वभूतात्मभूतात्मा कुर्वन्नपि न लिप्यते ॥ ७॥**

**யோக-யுக்தோ விஶுத்தாத்மா விஜிதாத்மா ஜிதேந்த்ரிய: ।**
**ஸர்வ-பூதாத்ம - பூதாத்மா குர்வன்னபி ந லிப்யதே ॥ 7॥**

***யோகத்தைக் கூடி, உள்ளத் தூய்மை பெற்று உடலையும், புலன்களையும் வென்று, அனைத்து உயிர்களிடத்தும் இருக்கும் ஆத்மாவைத் தனது ஆத்மாவாகக் காண்பவன் கர்மத்தைச் செய்த போதிலும் அதனால் அவன் பற்றப்படுவதில்லை.***

பிரம்ம தேவனிலிருந்து சிறு புல் வரையில் உள்ள அனைத்து உயிர்களிடத்தும் இருக்கும் ஆத்மாவும் தன்னுடைய ஆத்மாவும் ஒன்றெனக் காண்பவன் உள்ளதை உள்ளபடிக் காண்பவனாவான். அவன் உலகின் நன்மைக்காகக் கர்மங்கள் செய்த போதிலும், அக்கர்மங்களால் அவன் பற்றப்படுவதில்லை, அதாவது கட்டப்படுவதில்லை என்பது பொருளாகும்.

இவன் உண்மையில் எக்கர்மமும் செய்வதில்லை. ஆகையால்,

**नैव किञ्चित्करोमीति युक्तो मन्येत तत्त्ववित् ।**
**पश्यञ्शृण्वन्स्पृशञ्जिघ्रन्नश्नन्गच्छन्स्वपञ्श्वसन् ॥ ८॥**

**நைவ கிஞ்சித் கரோமீதி யுக்தோ மன்யேத தத்த்வ-வித் ।**
**பஶ்யன் ஶ்ருண்வன் ஸ்ப்ருஶஞ் ஜிக்ரன்னஶ்னன் கச்சன்**
**ஸ்வபன் ஶ்வஸன் ॥ 8॥**

**प्रलपन्विसृजन्गृह्णन्नुन्मिषन्निमिषन्नपि ।**
**इन्द्रियाणीन्द्रियार्थेषु वर्तन्त इति धारयन् ॥ ९॥**

ப்ரலபன் விஸ்ருஜன் க்ருஹ்ணன்னுன்மிஷன் நிமிஷன்ன் அபி ।
இந்த்ரியாணீந்த்ரியார்த்தேஷு வர்த்தந்த இதி தாரயன் ॥ 9॥

*காண்கினும், கேட்கினும், தீண்டினும், மோப்பினும், உண்பினும், நடப்பினும், உறங்கினும், உயிர்ப்பினும், பேசினும், விடினும், பெறினும், கண்விழிப்பினும், மூடினும் உண்மை அறிந்த யோகி புலன்கள், புலனுகர்ச்சிப் பொருட்களின் வழியே செல்கின்றனவேயன்றி தான் ஒன்றும் செய்வதில்லை என்று கருதவேண்டும்.*

ஆத்மாவின் உண்மைத் தன்மையை அறிந்தவனாகி பரம்பொருளைக் காணும் உண்மை உணர்ந்தவன் 'நான் ஒன்றும் செய்வதில்லை' என்று நினைக்கிறான். எப்பொழுது எவ்வாறு இந்த உண்மையை உணர்ந்து இவ்வாறு நினைக்கிறான்? 'காண்கினும்' முதலியவற்றால் பதில் அளிக்கப்படுகிறது.

இவ்வாறு உண்மை உணர்ந்து, உடல் மற்றும் புலன்களின் அனைத்துக் கர்மங்களிலும், கர்மமின்மை என்னும் அகர்மத்தினைக் காண்பதினால், உள்ளதை உள்ளபடிக் காண்பவனுக்கு அனைத்துக் கர்மங்களையும் துறப்பதில்தான் அதிகாரம் உண்டு. ஏனென்றால் அவன் கர்மமில்லாமை யினைக் காண்கின்றான் ஆதலினால். கானலில் நீர் இருக்கிறது என்று அதனைப் பருகச் சென்றவன், அங்கு நீரில்லை என்று அறிந்த பின்பு மீண்டும் அங்கே செல்வதில்லையன்றோ?

ஆனால் உண்மை அறியாத ஒருவன் செயலில் ஈடுபடுகின்றான் எனில்:

ब्रह्मण्याधाय कर्माणि सङ्गं त्यक्त्वा करोति यः ।
लिप्यते न स पापेन पद्मपत्रमिवाम्भसा ॥ १० ॥

ப்ரஹ்மணி ஆதாய கர்மாணி ஸங்கம் த்யக்த்வா கரோதி ய: ।
லிப்யதே ந ஸ பாபேன பத்ம - பத்ரம் இவாம்பஸா ॥ 10॥

*எவன் பிரம்மத்திடம் கர்மங்களை வைத்துப் பற்றின்றி செய்கின்றானோ அவன் நீரினால் தாமரை இலைபோல் பாவத்தினால் தீண்டப்படுவதில்லை.*

ஒரு வேலைக்காரன் தனது எஜமானனுக்காகப் பணி செய்வது போல், 'நான் ஈசுவரனுக்காகக் கர்மங்களைச் செய்கிறேன்' என்று அனைத்துக் கர்மங்களையும் ஈசுவரனுக்கு அர்ப்பணித்து முக்தி என்னும் பயனிலும் பற்றின்றி அவற்றைச் செய்பவனைத் தாமரை இலை தண்ணீர் போல் பாவம் தீண்டுவதில்லை. அவன் செய்த கர்மத்தின் பயனாக எய்தப் பெறுவது சித்த சுத்தி என்னும் ஒன்றினைத் தவிர வேறில்லை.

ஏனென்றால்,

**कायेन मनसा बुद्ध्या केवलैरिन्द्रियैरपि ।**
**योगिनः कर्म कुर्वन्ति सङ्गं त्यक्त्वात्मशुद्धये ॥११॥**

**காயேன மனஸா புத்யா கேவலைர் இந்த்ரியைர் அபி ।**
**யோகின: கர்ம குர்வந்தி ஸங்கம் த்யக்த்வாத்ம - ஶுத்தயே ॥ 11॥**

*யோகிகள் பற்று நீங்கி சித்த சுத்திக்காக உடலாலும், மனத்தாலும், புத்தியாலும், வெறும் புலன்களாலும் கர்மத்தைச் செய்கின்றனர்.*

'வெறும்' - 'எனது' என்னும் எண்ணமின்றி 'நான் ஈசுவரனுக்காகச் செயல்படுகிறேன். எனது நன்மைக்காக அன்று' என்னும் நம்பிக்கையில் உறுதியுடையவனாக இருத்தல். ஒவ்வொரு செயலிலும் 'எனது' என்னும் எண்ணம் இல்லாதிருக்க வேண்டும் என்பதற்காக 'வெறும்' என்னும் சொல்லை உடல் முதலியவற்றோடு தனித்தனியே கூட்டிக் கொள்க. கர்ம யோகிகள் பயனில் பற்றின்றி சித்த சுத்தி பெறுவதற்காக (வெறும்) உடலாலும், (வெறும்) மனத்தாலும், (வெறும்) புத்தியினாலும், வெறும் புலன்களினாலும் கர்மத்தை செய்கின்றனர். அதனால் அதில்தான் உனக்கு அதிகாரம் உண்டு. எனவே கர்மத்தைச் செய்வாயாக.

மற்றும், ஏனெனில்,

**युक्तः कर्मफलं त्यक्त्वा शान्तिमाप्नोति नैष्ठिकीम् ।**
**अयुक्तः कामकारेण फले सक्तो निबध्यते ॥१२॥**

**யுக்த: கர்ம-பலம் த்யக்த்வா ஶாந்திம் ஆப்னோதி நைஷ்டிகீம் ।**
**அயுக்த: காம-காரேண பலே ஸக்தோ நிபத்யதே ॥ 12॥**

*யோகத்தைக் கூடியவன் கர்மத்தின் பயனைவிட்டு நிஷ்டையினால் (உறுதியினால்) உண்டாகும் மன அமைதியைப் பெறுகிறான். ஆசையின் தூண்டுதலால் பயனில் பற்று வைத்தவன் கட்டப்படுகிறான்.*

உறுதியுடைய மனத்தினன் 'எனது நன்மைக்காக அன்று, ஈசுவரனுக்காக நான் கர்மங்களைச் செய்கிறேன்' என்று எண்ணுகிறான். அவன் பயன்களைத் துறப்பதினால் முக்தி என்னும் அமைதி எய்தப் பெறுகிறான். மனம் தூய்மை பெறுதல், ஞானமெய்துதல், அனைத்துக் கர்மங்களையும் துறந்திடுதல், ஞானத்தில் நிலை நிற்றல் என்னும் படிப்படியான நிலைகளினால் அவன் அமைதியடைகிறான். ஆனால் ஆசையினால் தூண்டப்பட்டு பயனில் பற்று வைக்கும் உறுதியற்ற மனத்தினன் 'எனது நன்மைக்காக நான் இதனைச் செய்கிறேன்' என்று கருதுகிறான். அதனால் அவன் கர்மங்களால் கட்டப்படுகிறான். ஆகையால் நீ உறுதியுடைய மனத்தினனான யோகி ஆகுக.

ஆனால் பரம்பொருளைக் காண்பவன்,

सर्वकर्माणि मनसा संन्यस्यास्ते सुखं वशी ।
नवद्वारे पुरे देही नैव कुर्वन्न कारयन् ॥१३॥

**ஸர்வ- கர்மாணி மனஸா ஸந்ந்யஸ்யாஸ்தே ஸுகம் வஶீ ।**
**நவ-த்வாரே புரே தேஹீ நைவ குர்வன் ந காரயன் ॥ 13॥**

***தன்னை வென்று, எல்லாக் கர்மங்களையும் மனத்தால் துறந்த, உடல் பெற்ற ஒருவன் எதனையும் செய்வதுமின்றி செய்விப்பதுமின்றி ஒன்பது வாயில் கொண்ட ஊரில் இன்புற்றிருக்கிறான்.***

பரம்பொருளைக் கண்டவன் நித்யம், நைமித்திகம், காம்யம், பிரதிசித்தம் என்னும் அனைத்துக் கர்மங்களையும், விவேக புத்தியால் துறந்து, அதாவது கர்மம் முதலானவற்றில் அகர்மத்தைக் கண்டு இன்புற்றிருக்கிறான். (நித்ய-கர்மாணி-அன்றாடக் கடமைகள், நைமித்திக - கர்மாணி - குறிப்பிட்ட நிகழ்வுகளின் போது செய்வது, காம்ய கர்மாணி - தான் வேண்டுவதை அடைவதற்காகச் செய்வது, பிரதிசித்த - கர்மாணி - விலக்கப்பட்டவை). அவன் மனம், மொழி, மெய்களின் கர்மங்களைத் துறந்தவன், கவலையில்லாதவன், மன அமைதியுடையவன், ஆத்மாவைத் தவிர, அதற்குப் புறம்பான விஷயங்கள் இல்லாதவன் ஆதலினால் அவன் இன்புற்றிருக்கிறான் என்று கூறப்படுகின்றது. தன்னைவென்று என்பதற்குப் புலன்களை வென்று என்று பொருளாகும். அவன் எங்கே எவ்வாறு தங்கியிருக்கிறான் ? என்றால் ஒன்பது வாயில்களை உடைய ஊரில் தங்கியிருக்கிறான். ஓசை போன்றவற்றை உணரும் கண், செவி, வாய், நாசித் துவாரங்கள் என்பவை ஏழு வாயில்களாகும். மலஜலம் கழிப்பதற்குரிய வாயில்கள் இரண்டு, ஆக மொத்தம் ஒன்பது வாயில்களையுடைய உடலே அந்த ஊராகும். அந்த ஊருக்கு ஆத்மாவே அரசனாவான், தங்கள் அரசனின் நலனுக்காக உழைக்கும் புலன்கள், புத்தி, மனம், புலனுகர்ச்சிப் போன்றவை குடிமக்கள் ஆகும். அந்த ஒன்பது வாயில்களையுடைய ஊரில் உடல் பெற்ற ஆத்மா, எல்லாக் கர்மங்களையும் துறந்து தங்கியிருக்கிறான்.

மறுப்பு : அவன் உடலில் தங்கியிருக்கிறான் என்பதினால் என்ன பயன்? முற்றுந் துறந்தவனோ அல்லது துறக்காதவனோ, எல்லோரும் அவரவர் உடலில்தான் தங்கியிருக்கின்றனர். அதனால் அவன் உடலில் தங்கியிருக்கிறான் என்று சிறப்பித்துக் கூறுவதில் பயனொன்றுமில்லை.

பதில் : தன்னைத் தனது உடல் மற்றும் புலன்களோடு அடையாளம் காண்பவன் ''நான் வீட்டில், தரையில் அல்லது நாற்காலி போன்ற இருக்கைகளில் தங்கியிருக்கிறேன்'' என்று கருதுகிறான். உடலினையே ஆத்மாவாகக் காண்பவன் தான் வீட்டில் தங்கியிருப்பதாக நினைக்கின்றானேயன்றி, உடலில் தங்கியிருப்பதாக நினைப்பதில்லை. ஆனால் உடல் முதலியவற்றின் சேர்க்கைக்கு வேறாக ஆத்மாவைக் காண்பவன் தான் தேகத்தில் தங்கியிருக்கின்றேன் என்று எண்ணுவது சாத்தியமாகும். மேலும் ஆத்மாவின் மீது அறியாமையினால் ஏற்றப்பட்டிருக்கும் மனம், மொழி,

மெய்களினாலானக் கர்மங்களை ஞானத்தினால், விவேக அறிவினால் மனத்தினால் அவன் துறந்திட வேண்டும். இவ்வாறு ஆத்மா உடலினின்று வேறானது என்னும் விவேக அறிவு பெற்றவன், அனைத்துக் கர்மங்களையும் துறந்தவனாயினும், வீட்டில் இருப்பது போல் அவன் ஒன்பது வாயில் கொண்ட ஊராகிய உடலில் தங்கியிருக்கிறான் என்பது ஏற்புடைத்ததே. முன் வினைப் பயனாக (பிராரப்த கர்மம்) இந்த உடலானது தொடர்ந்து வருதலால், உடலில் தங்கியிருத்தல் என்று சிறப்பாகச் சுட்டப்படுகிறது. மேலும் உடலில் தங்கியிருத்தல் என்று சிறப்பாகச் சுட்டுவதற்குப் பயன் என்னவென்றால், ஞானி மற்றும் அஞ்ஞானியின் கருத்து மாறுபாட்டினை அது குறித்துக் காட்டுகின்றது.

மறுப்பு: அறியாமையினால் ஆத்மாவின் மீது ஏற்றப்பட்ட உடல், புலன்களுக்குரியக் கர்மங்களை அவன் துறந்துவிடுகிறான் என்பது உண்மையே. ஆயினும் துறவு நெறியினை மேற் கொண்டவனுக்கு செய்பவன் என்னும் தன்மையும், செய்விப்பவன் என்னும் தன்மையும் ஆத்மாவோடு ஒன்றியிருக்கின்றதே? (வெண்மை நிறமானது தன்மையினால் பாலொடு ஒன்றியிருத்தல் போன்று).

பதில் : பகவான் கூறுகிறார்: "அவன் தானும் செய்வதில்லை, உடல் மற்றும் புலன்களை செய்விக்கச் செய்வதுமில்லை."

மறுப்பு : நடப்பவன், நின்றுவிட்டால் நடத்தல் என்னும் கர்மம் அச்சமயம் இல்லாதொழிகின்றது. அதுபோல் ஆத்மாவோடு ஒன்றியிருக்கும் செய்பவன், செய்விப்பவன் என்னும் இரண்டு தன்மைகளும் துறவினால் நின்றுவிடுவதில்லையா? அல்லது ஆத்மாவில் அவ்விரண்டு தன்மைகளும் உண்மையில் ஒன்றியிருப்பதில்லையா?

பதில் : செய்வதும், செய்விப்பதும் உண்மையில் ஆத்மாவோடு ஒன்றியிருப்பதில்லை. "ஆத்மா மாற்றமில்லாதது" (2-25) என்றும், "உடலில் இருந்த போதிலும் அது ஒன்றும் செய்வதில்லை வேறு எதனாலும் பற்றப்படுவதுமில்லை" (13-31) எனறும் பகவான் கூறுகிறார். சுருதிகள் "அது நினைப்பது போன்றும், அசைவது போன்றும் உள்ளது" (பி.உ.4-3-7) என்று ஆத்மாவைப் பற்றிக் கூறுகின்றன.

மேலும்,

न कर्तृत्वं न कर्माणि लोकस्य सृजति प्रभुः ।
न कर्मफलसंयोगं स्वभावस्तु प्रवर्तते ॥१४॥

**ந கர்த்ருத்வம் ந கர்மாணி லோகஸ்ய ஸ்ருஜதி ப்ரபு: ।**
**ந கர்ம - பல - ஸம்யோகம் ஸ்வபாவஸ் து ப்ரவர்த்ததே ॥ 14॥**

***இறைவன் கர்த்தாவாயிருத்தலை உலகத்தார்க்கு உண்டாக்க வில்லை. கர்மங்களையும் உண்டாக்கவில்லை; கர்மத்தின் பயன்***

*கூடுதலையும் உண்டாக்கவில்லை; எனினும் இயற்கை இயங்கும்படிச் செய்கிறது.*

கர்த்தாவாதலை ஆத்மா உண்டாக்குவதில்லை. அதாவது "நீ இதனைச் செய்" என்று ஆத்மா ஒருவனைத் தூண்டுவதில்லை. மேலும் ஆத்மா ஒருவனது விருப்பத்திற்குரிய வண்டிகள், குடங்கள், மாளிகைகள் போன்றவற்றையும் உண்டாக்குவதில்லை. அதுபோல் ஆத்மா, வண்டி முதலியவற்றைச் செய்தவன், தனது கர்மத்தின் பயனோடு கூடுதலையும் உண்டாக்குவதில்லை.

கேள்வி : உடலினுள் இருக்கும் ஆத்மா, செய்வதுமில்லை, செய்விப்பதுமில்லையென்றால், செய்வதும், செய்விப்பதும் எது?

பதில் : கேட்பாயாக. அதுவே இயற்கை, சுபாவம், பிரக்ருதி மற்றும் மாயை எனப்படுகின்றது. "குணமயமான எனது தேவமாயை கடத்தற்கரியது" (7-14)

உண்மையில்,

**नादत्ते कस्यचित्पापं न चैव सुकृतं विभुः ।**
**अज्ञानेनावृतं ज्ञानं तेन मुह्यन्ति जन्तवः ॥ १५॥**

**நாதத்தே கஸ்யசித் பாபம் ந சைவஸுக்ருதம் விபு: ।**
**அஜ்ஞானேனாவ்ருத்தம் ஜ்ஞானம் தேன முஹ்யந்தி ஜந்தவ: ॥ 15॥**

*இறைவன் எவருடைய தீவினையையும் ஏற்றுக் கொள்வதில்லை; அதுபோல் நல்வினையையும் ஏற்றுக் கொள்வதில்லை. அஞ்ஞானத்தினால் ஞானம் மூடப்பட்டுள்ளது. அதனால் உயிர்கள் மயங்குகின்றன.*

ஒருவன் பக்தனே ஆயினும் அவனது தீவினையையும் பகவான் ஏற்றுக் கொள்வதில்லை. அவனது நல்வினையையும் பகவான் ஏற்றுக் கொள்வதில்லை.

மறுப்பு : இது உண்மை என்றால், தெய்வ வழிபாடு, வேள்வி, தானம் போன்ற நல்வினைகளைச் செய்வதின் நோக்கமென்ன?

பதில் : பகவான் கூறுகிறார்: மெய்ஞ்ஞானம் அஞ்ஞானத்தினால் மூடப்பட்டிருக்கின்றது; அதனால் இவ்வுலக வாழ்வில் சிக்குண்டிருக்கும் உயிர்கள் அறியாமையினால் "நான் செய்கிறேன், செய்விக்கிறேன், அனுபவிக்கிறேன், அனுபவிக்கும்படிச் செய்கிறேன்" என்று எண்ணி மயங்குகின்றன.

**ज्ञानेन तु तदज्ञानं येषां नाशितमात्मनः ।**
**तेषामादित्यवज्ज्ञानं प्रकाशयति तत्परम् ॥ १६॥**

**ஜ்ஞானேன து தத் அஜ்ஞானம் யேஷாம் நாஶிதம் ஆத்மன: ।**
**தேஷாம் ஆதித்ய - வஜ் ஜ்ஞானம் ப்ரகாஶயதி தத் பரம் ॥ 16॥**

***ஆனால் எவர்களுடைய அந்த அஞ்ஞானமானது ஆத்ம ஞானத்தால் அழிவுற்றதோ, அவர்களுக்கு ஞானம், சூரியனைப் போல், அப்பரம்பொருளை விளங்கச் செய்கின்றது.***

எந்த அஞ்ஞானத்தினால் மூடப்பட்டு உயிர்கள் மயக்குகின்றனவோ, அந்த அஞ்ஞானம் எவ்வுயிர்களுக்கு ஆத்மாவைப் பற்றிய விவேக அறிவினால் அழியப் பெற்றுள்ளதோ, அந்த உயிர்களுக்கு சூரியன் உலகிலுள்ள அனைத்துப் பொருட்களையும் விளக்கமுறச் செய்வது போல் ஞானமானது அறிய வேண்டிய அப்பரம உண்மையான பரம்பொருளை விளங்கும்படிச் செய்கின்றது.

ஞானத்தால் ஒளி செய்யப்பட்டப் பரம்பொருளாகியப் பரம உண்மை.

**तद्बुद्धयस्तदात्मानस्तन्निष्ठास्तत्परायणाः ।**
**गच्छन्त्यपुनरावृत्तिं ज्ञाननिर्धूतकल्मषाः ॥ १७॥**

**தத்-புத்தயஸ் தத்-ஆத்மானஸ் தன் - நிஷ்டாஸ் தத் - பராயணா: ।**
**கச்சந்தி அபுனர் - ஆவ்ருத்திம் ஜ்ஞான - நிர்தூத - கல்மஷா: ॥ 17॥**

***அதிலே புத்தியுடையவராய், அதையே ஆத்மாவாக உடையவராய், அதில் நிலைபெற்றவராய், அதையே சிறந்த அடைக்கலமாகப் பெற்றவராய், ஞானத்தினால் பாவம் அழியப் பெற்றவர்கள் மீண்டும் திரும்பி வராத நிலையினை எய்துகின்றனர்.***

பிரம்மத்தில் புத்தியுடையவராய், அப்பரப்பிரம்மத்தையேத் தமது ஆத்மாவாகக் கொண்டவராய், அனைத்துக் கர்மங்களையும் துறந்து அப்பிரமத்தில் நிலை பெற்று, அதனையே உயர்ந்த அடைக்கலமாக எய்தப் பெற்றவர்கள் ஆத்மா ஒன்றிடத்திலேயே மகிழ்ந்திருக்கின்றனர் என்று பொருளாகும். இத்தகைய மனிதர்களின் தீவினைகளும், இவ்வுலக வாழ்க்கைக்கானப் பிற காரணங்களும் மேலே கூறப்பட்டிருக்கும் ஞானத்தால் அழிக்கப்படும் பொழுது அவர்கள் இவ்வுலக வாழ்க்கை நீங்கப் பெற்று, மீண்டும் உடல் பெறும் வாழ்க்கைக்குத் திரும்புவதில்லை.

ஆத்மாவைப் பற்றிய அறியாமையானது ஞானத்தினால் அழிக்கப்பட்டுள்ள நிலையில், அந்த ஞானிகள் எவ்வாறு உண்மையினைக் காண்கின்றனர்? கேட்பாயாக,

**विद्याविनयसम्पन्ने ब्राह्मणे गवि हस्तिनि ।**
**शुनि चैव श्वपाके च पण्डिताः समदर्शिनः ॥ १८॥**

**வித்யா விநயஸம்பன்னே ப்ராஹ்மணே கவி ஹஸ்தினி ।**
**ஶுனி சைவ ஶ்வபாகே ச பண்டிதா: ஸம தர்ஶின: ॥ 18॥**

*கல்வியும் ஒழுக்கமும் உடைய பிராமணனிடத்தும், பசுவினிடத்தும், யானையினிடத்தும், நாயினிடத்தும், நாயைத் தின்னும் புலையினிடத்தும் ஆத்ம ஞானிகள் ஒன்றையேக் காண்கின்றனர்.*

கல்வியும், பணிவும் ஒரு சேரப் பெற்றுக் கற்றறிந்தடங்கிய பிராமணனிடத்தும், அதாவது ஆன்மீக வாழ்வும், சத்துவ குணமும் உடையப் பிராமணனிடத்தும், ஆன்மீக வாழ்க்கையற்ற ரஜோ குணமுடைய பசுவினிடத்தும், தமோ குணமுடைய யானையினிடத்தும் ஞானிகள் ஒன்றினையேக் காண்கின்றனர். அந்த ஒன்று மாற்றமின்றியும், சத்துவம் போன்றக் குணங்களின் தொடர்பின்றியும், அம்முக்குணங்களின் விளைவுகளின் தொடர்பின்றியும் இருக்கிறது. அதனையே ஞானிகள் எல்லோரிடத்தும் காண்கின்றனர். அதனால் அவர்கள் சமப்பார்வையுடையோர் ஆவர்.

மறுப்பு : அவ்வாறெனில் அவர்கள் (அந்த ஞானிகள்) பாவிகளாவர். அவர்கள் உணவினைப் பிறர் உண்ணக் கூடாது.

"சமமானவனுக்கு சமமில்லாமலும், சமமில்லாதவனுக்கு சமமாகவும் மரியாதை செய்பவனின் உணவினைப் புசிக்கக்கூடாது" (கௌ. 17-20) என்பது நீதி போதனையாகும்.

பதில் : அவர்கள் பாவிகள் அல்லர். எவ்வாறு?

**इहैव तैर्जितः सर्गो येषां साम्ये स्थितं मनः ।**
**निर्दोषं हि समं ब्रह्म तस्माद्ब्रह्मणि ते स्थिताः ॥ १९॥**

**இஹைவ தைர் ஜித: ஸர்கோ யேஷாம் ஸாம்யே ஸ்திதம் மன: ।**
**நிர்தோஷம் ஹி ஸமம் ப்ரஹ்ம தஸ்மாத் ப்ரஹ்மணி தே ஸ்திதா: ॥ 19॥**

*எவர்களுடைய மனம் சமநிலையில் நிலைபெற்றதோ, அவர்களால் பிறப்பு இங்கேயே வெல்லப்பட்டது. பிரம்மம் குற்றமற்றது, சமநிலையுற்றது அதனால் அவர்கள் பிரம்மத்தில் நிலைநிற்பவர்களாவர்.*

எவர்களுடைய மனம் எல்லா உயிர்களிடத்தும், பிரம்மத்தின் சமநிலையில் அலையாது நிலைபெற்றதோ, அந்த சமப் பார்வையுடைய ஞானிகள், இப்பூமியில் வாழும் பொழுதே பிறப்பினைக் கட்டுப்படுத்துகின்றனர். அறியாமையின் காரணமாக மூடர்கள், நாயைத் தின்னும் புலையர் போன்றோரிடத்தும் இருக்கும் பிரம்மம், அவர்களின் அசுத்தச் செயல்களால் அசுத்தமடைகிறது என்று கருதப்படினும், அது அவ்வாறு

அசுத்தமடைவதில்லை, ஆகையால் அது குற்றமற்றதாகும். அறிவுக்குக் குணமில்லையாதலினால் அது தனது குணவேற்றுமையினால் வேறுவேறாக இல்லை. பகவானும் கூட "ஆசை முதலியன உடலின் குணங்கள்" (13-6) என்றும் "ஆதியின்மையால், குணமின்மையால்" (13-31) என்றும் ஆத்மாவைப் பற்றிக் கூறுகின்றார். மேலும், வைசேஷிகர் கூறுகின்ற அந்திய விசேஷம் என்னும் "இறுதி வேறுபாடுகள்" - ஒரு நித்தியப் பொருளை மற்றொரு நித்தியப் பொருளிலிருந்து வேறுபடுத்துவது உதாரணமாக நீரின் பரமாணுக்களை நெருப்பின் பரமாணுக்களிலிருந்து வேறுபடுத்துதல் அந்திய விசேஷமாகும் - ஆத்மாவிற்கு இல்லை. அதாவது ஆத்மாவை வேறுவேறாக பிரிக்கும் இறுதி வேறுபாடுகள் இல்லை. காரணம் ஒவ்வோர் உடலிலும் அவ்வாறு அவை இருப்பதற்கு எவ்விதமான முகாந்திரமும் இல்லை. ஆகையால் பிரம்மம் சமமாகவும், ஒன்றாகவும் இருக்கின்றது. இதன் காரணமாக (ஞானிகள்) பிரம்மத்தில் மட்டுமே நிலைபெற்றனர். உடல் முதலியவற்றின் சேர்க்கையே ஆத்மா என்னும் கருத்தும், நான் என்னும் எண்ணமும் அவர்களிடம் இல்லாமையால் உடலின் சிறு கறையும் அவர்கள் மீது படிவதில்லை. மேலும் "சமமானவனுக்கு" என்னும் (கௌ-17-20) சூத்திரம் உடல் முதலியவற்றின் சேர்க்கையே ஆத்மா என்னும் கருத்தும், நான் என்னும் எண்ணமும் உடையவர்களுக்கு உரியதாகும். ஏனெனில் அது மரியாதையினைப் பெறுகின்றவர்களின் தன்மையைச் சுட்டுகின்றது. மரியாதை மற்றும் வெகுமதியளிப்பதற்கு ஒருவன், பிரம்மத்தை அறிந்தவனா, ஆறு சாத்திரங்களை அறிந்தவனா, அல்லது நான்கு வேதங்களை அறிந்தவனா என்பன போன்ற சிறப்புக் குணங்கள் பார்க்கப்படுகின்றன. ஆனால் பிரம்மம் இதுபோன்ற குணங்களுக்கும் குற்றங்களுக்கும் அப்பாற்பட்டதாக இருக்கின்றது. அதனால் 'அவர்கள் பிரம்மத்தில் நிலை பெற்றவர்கள்' என்னும் கூற்று ஏற்புடைத்ததே. மேலும் 'சமமானவனுக்கு' என்னும் சூத்திரம் (கௌ.17-20) கர்மத்தைப் பற்றியதாகும். ஆனால் இங்கு கூறப்படுவதோ (5-13லிருந்து அத்தியாயத்தின் இறுதி வரையில்) அனைத்துக் கர்மங்களையும் துறப்பதைப் பற்றியதாகும்.

ஆத்மாவானப் பிரம்மம் குற்றமற்றதாகவும், சமமாகவும் இருக்கின்ற காரணத்தினால்,

**न प्रहृष्येत्प्रियं प्राप्य नोद्विजेत्प्राप्य चाप्रियम् ।**
**स्थिरबुद्धिरसम्मूढो ब्रह्मविद् ब्रह्मणि स्थितः ॥२०॥**

**ந ப்ரஹ்ருஷ்யேத் ப்ரியம் ப்ராப்ய நோத்விஜேத் ப்ராப்ய சாப்ரியம் ।**
**ஸ்திர-புத்திர் அஸம் மூடோ ப்ரஹ்ம - வித் ப்ரஹ்மணி ஸ்தித: ॥ 20॥**

***உறுதியான புத்தியுடையவனாய், மயங்காதவனாய் பிரம்மத்தை அறிந்தவனாய், பிரம்மத்தில் நிலைபெற்றவன் விரும்பியதை அடையும்போது மகிழ்ச்சியடையான், விருப்பமற்றதை எய்தும் போது துயர்ப்படான்.***

உடலை ஆத்மாவாக அறிபவர்களுக்கு, விரும்பிய பொருட்களும், விரும்பாத பொருட்களும் மகிழ்ச்சியும், துயரமும் தருகின்றன. ஆனால் தூய ஆத்மாவை அறிபவர்களுக்கு அவை அவ்வாறு தருவதில்லை. ஏனெனில், அவர்களைப் பொருத்தமட்டில் விரும்பிய பொருட்களென்றும் விரும்பாத பொருட்களென்றும் ஒன்றுமில்லை. மேலும் எல்லா உயிர்களிடத்தும் ஆத்மா ஒன்றாக சமமாக குற்றமற்றதாக இருக்கின்றது என்னும் ஐயமற்ற உறுதியான புத்தி எவனுக்கு இருக்கின்றதோ அவன் மயக்கமற்றவன், பிரம்மத்தை அறிந்தவன், பிரம்மத்தில் நிலைபெற்றவன், கர்மத்தைச் செய்யாதவன், அனைத்துக் கர்மங்களையும் முற்றுந் துறந்தவன் என்று பொருளாகும்.

மேலும் பிரம்மத்தில் நிலைபெற்றவன்,

**बाह्यस्पर्शेष्वसक्तात्मा विन्दत्यात्मनि यत्सुखम् ।**
**स ब्रह्मयोगयुक्तात्मा सुखमक्षयमश्नुते ॥२१॥**

**பாஹ்ய - ஸ்பர்ஶேஷ்வ அஸக்தாத்மா விந்ததி ஆத்மனி யத் ஸுகம்।**
**ஸ ப்ரஹ்ம - யோக - யுக்தாத்மா ஸுகம் அக்ஷயம் அஶ்நுதே ॥ 21॥**

*அவன் புறப்பொருள்களின் மீது பற்றில்லாத மனத்தினனாய் ஆத்மாவினிடத்து எவ்வின்பம் உண்டோ அதனை அடைகிறான். அவன் பிரம்மத்தில் நிலைநிற்பதாகிய மனத்தினனாய்க் குறைவற்ற இன்பத்தினைத் துய்க்கின்றான்.*

அவன் புலன்களால் அனுபவிக்கப்படும் ஓசை முதலிய புலனுகர்ச்சிப் பொருட்களானப் புறப் பொருட்களின் மீது பற்றின்றி ஆத்மாவிடம் எவ்வின்பம் உள்ளதோ, அதனைப் பெறுகிறான் என்பது பொருளாகும். அவன் பிரம்மத்தில், நிலைநிற்கும் மனமுடையவனாக முடிவில்லா இன்பத்தைத் துய்க்கின்றான். ஆகையால் ஆத்மாவிடமுள்ள அழிவில்லா இன்பத்தை நாடுபவன் கணப்பொழுது இன்பம் நல்கும் புறப் பொருட்களினின்று தனது புலன்களை விலக்க வேண்டும்.

பின்வரும் காரணத்தினாலும் அவன் தனது புலன்களைப் புறப் பொருட்களினின்று விலக்குதல் வேண்டும்.

**ये हि संस्पर्शजा भोगा दुःखयोनय एव ते ।**
**आद्यन्तवन्तः कौन्तेय न तेषु रमते बुधः ॥२२॥**

**யே ஹி ஸம்ஸ்பர்ஶ - ஜா போகா து:க்க - யோனய ஏவதே**
**ஆதி - அந்தவந்த: கௌந்தேய ந தேஷு ரமதே புத: ॥ 22॥**

*குந்தியின் மைந்தனே! எந்த இன்பங்கள் புறப்பொருட்களின் தொடர்பினால் உண்டானவையோ அவை துன்பத்துக்குக்*

*காரணங்களாகும். தொடக்கமும் முடிவும் உடையவையாகும். ஞானி அவற்றில் மகிழ்வதில்லை.*

அறியாமையினால் விளைந்த இன்பங்கள் ஆதலினால், புலன்கள், புலனுகர்ச்சிப் பொருட்களின் தொடர்பினால் பெறும் இன்பம், துன்பத்திற்குக் காரணமாகும். ஆத்யாத்மிகம் என்னும் உடலில் தோன்றும் துன்பங்கள் எல்லாம் இந்த இன்பங்களினால் விளைந்தவையாகவேக் காணப்படுகின்றன. அவற்றால் துன்பம் இம்மையில் மட்டுமல்ல, மறுமையிலும் வருகின்றது. இவ்வுலக வாழ்க்கையில் ஒரு துளி இன்பமும் இல்லை என்பதை அறிந்து ஒருவன் புலனுகர்ச்சிப் பொருட்கள் என்னும் கானல் நீரினின்றுப் புலன்களை விலக்க வேண்டும். அந்த இன்பங்கள் துன்பத்திற்கு மட்டும் காரணமல்ல, மாறாகத் தொடக்கமும் முடிவும் உடையனவாம். புலனுகர்ச்சிப் பொருட்களுடன் புலன்கள் கொள்ளும் தொடர்பு இன்பத்தின் தொடக்கமாகும். புலனுகர்ச்சிப் பொருட்களினின்று புலன்கள் பிரிவது இன்பத்தின் முடிவாகும். முதலுக்கும் முடிவுக்கும் இடையில் கணப்பொழுது மட்டுமே இருக்கும் இன்பம் நிலையற்றதாகும். விவேக புத்தியுடன் பரம்பொருளின் உண்மை உணர்ந்தவன் இது போன்ற இன்பத்தில் மகிழ்வதில்லை. ஆடுமாடுகளைப் போன்ற மதியிலிகள் அன்றோ, புலனுகர்ச்சிப் பொருட்களில் இன்பம் காண்கின்றனர்.

அடுத்து, இக்குற்றம் (காமமும் கோபமும்) நல்வழிக்கு எதிரி. மிகவும் பொல்லாதது, எல்லாத் தீமைகளையும் தருவது, ஒழித்தற்கரியது, ஆதலினால் அதனை ஒழிப்பதில் கடுமையான முயற்சிகளை மேற்கொள்ள வேண்டுமென்று பகவான் கூறுகிறார்.

**शक्नोतीहैव यः सोढुं प्राक्शरीरविमोक्षणात् ।**
**कामक्रोधोद्भवं वेगं स युक्तः स सुखी नरः ॥२३॥**

**ஶக்னோதீஹைவ ய: ஸோடும் ப்ராக் ஶரீர - விமோக்ஷணாத் ।**
**காம-க்ரோதோத்பவம் வேகம் ஸ யுக்த: ஸ ஸுகீ நர: ॥ 23॥**

*உடல் நீங்குவதற்கு முன்பு இங்கேயே எவன் விருப்பம் மற்றும் சினத்தினால் எழும் வேகத்தைப் பொறுக்க வல்லானோ அவன் யோகி, அவன் இன்பமுடையோன்.*

இங்கேயே - உயிருடன் இருக்கும் பொழுதே. உடல் நீங்குவதற்கு முன்பு - மரணபரியந்தம். இவ்வாறு மரணத்தை எல்லையாகக் குறிப்பிட்டுப் பகவான் "உயிர் வாழ்பவனுக்கு விருப்பம் மற்றும் சினத்தினால் எழும் வேகத்தைத் தவிர்க்க முடியாது. ஏனெனில் அதற்கு ஏராளமானக் காரணங்கள் இருக்கின்றன. அதனால் மரணமடையும்வரை ஒருவன் விருப்பத்தையும், சினத்தையும் நம்பக் கூடாது என்று அறிவுறுத்துகிறார். விருப்பமானது (காமம்) புலன்களின் இச்சைக்குகந்ததும் முன்பு அனுபவிக்கப்பட்டதுமான ஒரு பொருளைப் பற்றிக் கேட்கும் போதும், நினைக்கும்போதும் எழும் நாட்டமாகும். சினம் (குரோதம்)

கேட்கும் போதும், நினைக்கும்போதும் எழும் நாட்டமாகும். சினம் (க்ரோதம்) என்பது நம்மால் ஏற்றுக் கொள்ள முடியாததும், நமது துன்பத்திற்குக் காரணமுமான ஒரு பொருளைப் பற்றிக் கேட்கும் போதும் நினைக்கும் போதும் எழுவதாகும். விருப்பத்திலிருந்து விளையும் வேகத்திற்கு மெய்புளகமுறல், மலர்ந்த முகம், மகிழ்ச்சி நிறைந்த கண்கள், அடையாளமாகும். சினத்திலிருந்து பிறந்த வேகத்திற்கு உடல் நடுக்கம், வியர்வை பொடித்தல், உதட்டைக் கடித்தல், சிவந்த கண்கள் போன்றவை அடையாளமாகும். விருப்பம் மற்றும் சினத்திலிருந்து பிறக்கும் வேகத்தை எவன் தாங்கிக் கொள்கின்றானோ அவனே யோகியும் இவ்வுலகில் இன்பவானும் ஆவான்.

எத்தகைய மனிதன் பிரம்மத்தில் நிலைபெற்று பிரம்மத்தை அடைகிறான்? - பகவான் கூறுகிறார்.

**योऽन्तःसुखोऽन्तरारामस्तथान्तर्ज्योतिरेव यः ।**
**स योगी ब्रह्मनिर्वाणं ब्रह्मभूतोऽधिगच्छति ॥२४॥**

**யோ (அ)ந்த: - ஸுகோ (அ)ந்தர் - ஆராமஸ் ததாந்தர்-ஜ்யோதிர் ஏவ ய:।**
**ஸ யோகீ ப்ரஹ்ம - நிர்வாணம் ப்ரஹ்ம - பூதோ (அ)திகச்சதி ॥ 24॥**

*எவன் உள்ளே இன்பமுடையவனாய், உள்ளே மகிழ்ச்சியுடையவனாய், அதுபோல் உள்ளே ஒளியுடையவனாய் இருக்கின்றானோ அந்த யோகி தானே பிரம்மமாய் பிரம்ம நிர்வாணத்தை அடைகிறான்.*

உள்ளே - ஆத்மாவிடம். அவன் பிரம்மானந்தத்தினை (நிர்வாணம்) அடைகிறான். அதாவது அவன் இப்பூமியில் உயிர் வாழும்போதே முக்தியடைகிறான்.

மேலும்,

**लभन्ते ब्रह्मनिर्वाणमृषयः क्षीणकल्मषाः ।**
**छिन्नद्वैधा यतात्मानः सर्वभूतहिते रताः ॥२५॥**

**லபந்தே ப்ரஹ்ம - நிர்வாணம் ருஷய: க்ஷீண - கல்மஷா : ।**
**சின்ன - த்வைதா யதாத்மான: ஸர்வ - பூத - ஹிதே ரதா: ॥ 25॥**

*தீ வினைகள் ஒழிந்து, ஐயங்கள் அகன்று, புலன்கள் அடங்கி, எவர்கள் எவ்வுயிர்க்கும் நன்மையினையே நாடுகின்றனரோ, அந்த ரிஷிகள் பிரம்ம நிர்வாணம் அடைகின்றனர்.*

ரிஷிகள் - உண்மை காணும் துறவிகள். நன்மை நாடுதல் - மனத்தாலும் பிறர்க்குத் தீங்கு செய்யாதிருத்தல்.

மேலும்,

**कामक्रोधवियुक्तानां यतीनां यतचेतसाम् ।**
**अभितो ब्रह्मनिर्वाणं वर्तते विदितात्मनाम् ॥ २६॥**

**காம- க்ரோத - வியுக்தானாம் யதீனாம் யத - சேதஸாம் ।**
**அபித்தோ ப்ரஹ்ம - நிர்வாணம் வர்த்ததே விதிதாத்மனாம் ॥ 26॥**

***விருப்பமும் சினமும் தவிர்த்து சித்தத்தைக் கட்டுப்படுத்திய ஆத்மஞானிகளாகிய முனிவர்களுக்கு பிரம்ம நிர்வாணம் எங்குமுளது.***

கர்மம் அனைத்தையும் துறந்து, உண்மை காணும் துறவிகள் இருந்தாலும் இறந்தாலும் முக்தியடைகின்றனர்.

நல்லறிவில் நிலைநிற்கும் துறவிகள் உடனே முக்தியடைகின்றனர் என்று கூறப்படுகிறது. பகவானிடம் அர்ப்பணிக்கப்பட்டு அவருக்காகச் செய்யும் கர்மயோகம் படிப்படியாக முக்தியளிக்கிறது என்று பகவானால் மீண்டும் மீண்டும் வற்புறுத்தப்படுகிறது. முதலில் மனத்தூய்மை பெறுதல், அடுத்து ஞானம் எய்துதல், பின்னர் கர்மங்களைத் துறத்தல், இறுதியில் முக்தியடைதல். மெய்யறிவு பெறுதற்கு உரிய சாதனமான தியான யோகத்தை விரிவாக விளக்கும் நோக்கில், பகவான் அதற்குச் சூத்திரமாக விளங்கும் பின்வரும் சுலோகங்களை உபதேசிக்கின்றார்.

**स्पर्शान्कृत्वा बहिर्बाह्यांश्चक्षुश्चैवान्तरे भ्रुवोः ।**
**प्राणापानौ समौ कृत्वा नासाभ्यन्तरचारिणौ ॥ २७॥**

**ஸ்பர்ஸான் க்ருத்வா பஹிர் பாஹ்யாம்ஸ் சக்ஷுஸ் சைவாந்தரே ப்ருவோ:।**
**ப்ராணாபானௌ ஸமௌ க்ருத்வா நாஸாப்யந்தர - சாரிணௌ ॥ 27॥**

**यतेन्द्रियमनोबुद्धिर्मुनिर्मोक्षपरायणः ।**
**विगतेच्छाभयक्रोधो यः सदा मुक्त एव सः ॥ २८॥**

**யதேந்த்ரிய - மனோ - புத்திர் முனிர் மோக்ஷ - பராயண: ।**
**விகதேச்சா - பய - க்ரோதோ ய: ஸதா முக்த ஏவ ஸ: ॥ 28॥**

***புறத்தேயுள்ள நுகர்ச்சிப் பொருட்களை புறத்தே நிறுத்தி, இருபுருவங்களுக்கு மத்தியில் விழிகளை நிறுத்தி, நாசியின் உள்ளும், வெளியும் செல்லும் மூச்சுக் காற்றுக்களை சமப்படுத்தி, புலன் மனம் புத்தியினை அடக்கி, விருப்பமும், அச்சமும், சினமும் நீங்கி முக்தியை நாடி எப்போதும் பகவானைத் தியானித்துக் கொண்டிருப்பவன் எவனோ அவனே விடுதலை பெற்றவன்.***

ஓசை, நாற்றம் முதலியப் புலனுகர்ச்சிப் பொருட்கள் அவற்றிற்குரியப் [illegible]களின் வழியே மனதினுள் புகுகின்றன. புறத்தேயுள்ள அப்பொருட்களைச்

சிந்திக்காதிருக்கும்போது அவை புறத்தே வைக்கப்படுகின்றன. இவ்வாறு அவற்றைப் புறத்தே நிறுத்தி, விழிகளைப் புருவங்களுக்கு மத்தியில் வைத்து, அதுபோல் உள் மூச்சு, வெளி மூச்சுக் காற்றுக்களை நாசியில் சமப்படுத்தி, புலன் மனம் புத்தியினை அடக்கி, எல்லாக் கர்மங்களையும் துறந்து, ஞானமெய்திய துறவி மேற்கூறியவாறு உடலை வைத்து, முக்தியை நாடி எப்போதும் பகவானைத் தியானித்தல் வேண்டும். எவன் இவ்வாறு எப்பொழுதும் துறவியாகவே வாழ்கின்றானோ அவன் விடுதலை பெற்றவன் தான். முக்திக்காக அவன் செய்ய வேண்டியது வேறொன்றுமில்லை.

இவ்வாறு ஒருநிலைப்பட்டு சமாதியடைந்த மனத்தினன் எதனை அறிய வேண்டும்? - பதில் பின்வருமாறு:

**भोक्तारं यज्ञतपसां सर्वलोकमहेश्वरम् ।**
**सुहृदं सर्वभूतानां ज्ञात्वा मां शान्तिमृच्छति ॥२९॥**

**போக்தாரம் யஜ்ஞ - தபஸாம் ஸர்வ - லோக - மஹேஶ்வரம் ।**
**ஸுஹ்ருதம் ஸர்வ - பூதானாம் ஜ்ஞாத்வா மாம் ஶாந்திம் ருச்சதி ॥ 29॥**

***வேள்வி, தவம் போன்வற்றை அனுபவிப்பவனும், உலகங்கள் அனைத்திற்கும் ஈசனாகவும், எல்லா உயிர்கட்கும் நண்பனாகவும் விளங்கும் என்னை அறிந்து அவன் அமைதியடைகிறான்.***

"வேள்விகளுக்கும், தவங்களுக்கும் கர்த்தாவாகவும், அவற்றால் வழிபடப்படும் இறைவனாகவும் விளங்கும் நாராயணன் நானே. உலகங்களுக்கெல்லாம் ஒரு பேரிறைவன். கைம்மாறு கருதாது அனைத்துயிர்க்கும் நன்மை செய்யும் நண்பன். உயிர்களின் உள்ளத்தில் இருந்து கொண்டு அவர்களின் செயல்களுக்குரிய பலன்களை அளிப்பவனும், அவர்களின் உணர்வுகளுக்கு ஒரு சாட்சியாக விளங்குபவனும் நானே." இவ்வாறு என்னை அறிபவன் இகலோக வாழ்க்கை ஒழிந்து அமைதியில் நிலை பெறுகிறான்.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்மவித்தையும் யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் 'சந்யாஸ-யோகம்' என்னும் ஐந்தாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் ஆறு

# தியான யோகம்

இதற்கு முந்தைய அத்தியாயத்தின் இறுதியில் மெய்யறிவு பெறுவதற்கு அகக் கருவியாக விளங்கும் தியான யோகத்தைப் பற்றி சூத்திரம் போன்று சில சுலோகங்களில் (5-27-29) குறிப்பிடப்பட்டது. இந்த ஆறாம் அத்தியாயம் அச்சூத்திரங்களுக்கு விளக்கவுரை போன்றதாகும். கர்மம் என்னும் செய்கையானது தியான யோகத்திற்குப் புறக்கருவியாக விளங்குவதால், அக்கர்மத்திற்குரிய இல்லறத்தான் தியான யோகத்தில் பொருந்துவதில் திறன் பெறும் வரை கர்மத்தைச் செய்ய வேண்டும்; இதனைக் கருத்தில் கொண்டே பகவான் 6-1 வது சுலோகத்தில் அதனைப் புகழ்ந்துரைக்கின்றார்.

மறுப்பு: விதிக்கப்பட்டக் கர்மத்தினை வாழ்நாள் முழுவதும் செய்ய வேண்டுமென்றால், பின்னர் தியான யோகத்தில் பொருந்தும் திறன் பெறும்வரை என்று அதற்கோர் வரையறை வகுப்பானேன்?

பதில்: அந்த மறுப்பு இங்கு பொருந்தாது. ஏனெனில் யோகத்தில் கூடுவதில் கருத்துடைய முனிவனுக்குக் கர்மம் ஓர் கருவியாகும். (6-3) என்று சிறப்பிக்கப்படுகிறது. மேலும் துறவிற்காக மட்டுமே யோகமானது எய்தப்படுகின்றது என்றும் கூறப்படுகிறது. யோகத்தில் விருப்புடையவனும், யோகத்தினை எய்தியவனும், கர்மம் மற்றும் துறவு என்னும் இரண்டினையும் மேற்கொள்ள வேண்டுமென்பது பொருளானால் கர்மம் மற்றும் துறவு எனும் இவையிரண்டும் யோகத்தில் விருப்புடையவனுக்கும் யோகத்தினை எய்தப் பெற்றவனுக்கும் உரியன என்று தனித்தனியே பிரித்துக் கூறுதல் பயனற்றதாகும். அதாவது அவர்களை இருவேறு பிரிவுகளாகப் பிரிப்பது அர்த்தமற்றதாம்.

மறுப்பாளர்: அவ்வாறெனில், ஆஸ்ரமத்தாருள் (கிருகஸ்தர்களுள்) ஒரு பிரிவினர் யோகம் எய்துவதில் விருப்புடையோர், மற்றொரு பிரிவினர் யோகம் எய்தப் பெற்றோர், மூன்றாவது பிரிவினர் யோகம் எய்துவதில் விருப்புடையோருமல்லர், யோகம் எய்தப் பெற்றவர்களுமல்லர். இந்த மூன்றாம் பிரிவினரிலிருந்து முதல் இரண்டு பிரிவினரும் "யோகம் எய்துவதில் விருப்புடையவரென்றும், யோகம் எய்தப் பெற்றவரென்றும்" பிரித்தும், வேறுபடுத்தியும் பார்ப்பது பொருந்துகிறது என்றால் -

பதில்: அவ்வாறன்று; "அவனுக்கே" (6-3) என்று குறிப்பிடப்பட்டிருப்பதாலும் "யோக நிலையில் ஏற விரும்பும்" (6.3) என யோகம் என்னும் சொல் மீட்டும் உரைக்கப்பட்டிருப்பதாலும், எவன் முன்பு

யோக நிலை எய்துவதில் விருப்புடையவனாக இருந்தானோ, அவனே யோக நிலை எய்தப் பெற்றவுடன் யோகத்தின் பயனுக்குக் கருவியான துறவினை மேற்கொள்ள வேண்டுமென்று கூறப்படுகின்றது. ஆதலினால், எந்தவொரு கர்மத்தையும் வாழ்நாள் முழுதும் கடைபிடிக்க வேண்டும் என்பதில்லை.

யோகத்தில் தவறியவர்களைப் பற்றியும் கூட இங்கு பேசப்படுகின்றது (6-37, 38) ஆறாம் அத்தியாயத்தில். யோகமானது இல்லறத்தானான கர்மிக்கு விதிக்கப்பட்டிருக்கிறது என்றால், அவன் யோகத்தினின்று தவறிய போதிலும் கர்மத்தின் பயனைப் பெறுகிறான் ஆதலால் அவன் அழிந்து விடுகிறான் என்று யூகிப்பதற்கு இடமில்லை. செய்யப்பட்ட ஒரு கர்மம் அது காம்ய கர்மமாயினும், நித்ய கர்மமாயினும் அதனதன் பயனைத் தரவே செய்யும். எனினும் அது முக்தியைத் தராது. முக்தி என்பது நித்தியமாதலால் முக்தி கர்மத்தால் விளைவதன்று. மேலும் காம்ய கர்மம், நித்ய கர்மம் என்பவை வேதங்களில் குறிப்பிடப்பட்டிருப்பதினால் அவை தத்தம் பயனைக் கண்டிப்பாகத் தரும். இல்லையேல் வேதங்களினால் பயனில்லை என்று நாம் ஏற்கெனவே அறிவுறுத்தியுள்ளோம் (4-18). மேலும் ஓர் இல்லறத்தான் தொடர்ந்து கர்மம் செய்வதினால் அவன் தவறுவதற்கு சந்தர்ப்பமில்லை. அதனால் அவன் (ஞானம் கர்மம்) அந்த இரண்டினின்றும் தவறியவனாகிறான் என்று கூறுதல் பொருந்தாது. (எவ்வாறு நோக்கினும் ஒரு கர்மத்திற்கு அதன் பயன் இருக்கவே செய்கின்றது. அதனால் இல்லறத்தானாகிய கிருகஸ்தனை "யோக ப்ரஷ்டன்" (யோகத்தினின்று தவறியவன்) என்று கூறுதல் பொருந்தாது என்று பொருளாகும்.

**மறுப்பாளர்:** பகவானுக்கு அர்ப்பணிக்கப்படும் கர்மம் எப்பயனையும் விளைவிக்காது. ஆதலால் அவ்வாறு கர்மம் செய்பவனுக்கு ஒரு பயனும் உண்டாகாது.

**பதில்:** அவ்வாறன்று. பகவானுக்கு அர்ப்பணிக்கப்படும் கர்மம், பெரும்பயனை விளைவிக்கும்.

**மறுப்பாளர்:** அப்படியானால், அது முக்தி என்னும் பயனை மட்டுமே தரும். எவ்வாறு? தியான யோகத்துடன் செய்யப்படும் கர்மம் முக்தியைத் தவிர வேறு எப்பயனையும் தருவதில்லை. ஆனால் அவன் யோகத்தினின்று தவறினால் அழிந்து விடுவான் என்பது சரியானதே.

**பதில்:** இல்லை. ஆறாம் அத்தியாயம், பத்து, பதினான்காம் சுலோகங்களில் கர்மத்துறவு விதிக்கப்பட்டிருக்கிறது. மேலும் தியானம் செய்கையில், மனைவியின் உதவி ஏதேனும் தேவைப்படும் என்று கருதுவதற்கும் இடமில்லை. அதற்கு இடமிருந்தால் அப்போது அதனைத் தடுக்கும் நோக்கத்தில் 'தனிமை' என்பது (6-10) விதிக்கப்பட்டிருக்கின்றதே என்று வாதிடலாம். மேலும் 6-10வது சுலோகத்தில் குறிப்பிடப்பட்டிருக்கும் 'ஆசையின்றி உடைமையின்றி' என்பவை இல்லறத்தானுக்குப் பொருந்துவதில்லை. மற்றும் (ஞானம், கர்மம் என்னும்) இரண்டிலும் தவறியவனைப் பற்றிய கேள்வியும் எழுவதில்லை.

மறுப்பாளர்: 6-1வது சுலோகத்தில் கர்மம் செய்பவன் (கர்மி) துறவியென்றும் யோகி என்றும் அழைக்கப்படுகிறான் என்றும், அதில் மேலும் தீ வளர்க்காதவனும், கர்மமில்லாதவனும் துறவியோ, யோகியோ ஆக முடியாது என்றும் குறிப்பிடப்பட்டிருக்கின்றது.

பதில்: அவ்வாறன்று. 6-1 தியான யோகத்திற்குப் புறக் கருவியாக விளங்கும் கர்மத்தின் பயனில் பற்று வையாமையைப் பற்றிப் புகழ்ந்துரைக்கின்றது. தீ வளர்க்காதவனும், கர்மமில்லாதவனும் துறவியோ, யோகியோ ஆக முடியாது என்பதோடு, கர்மம் உள்ளவனும் கர்மத்தின் பயனில் பற்றின்றி சித்த சுத்திக்காகக் கர்மம் செய்தானென்றால் அவன் துறவியும், யோகியும் ஆகின்றான் என்றும் போற்றப்படுகின்றது. மேலும் கர்மத்தின் பயனில் பற்றுவையாமையைப் புகழ்தலும், நான்காம் ஆஸ்ரமத்தை (துறவுநெறி) மறுத்தலும், ஒரே வாக்கியத்தில் கூறப்பட்டிருக்கிறது என்பது பொருந்தா வாதமாகும். (வாக்கியம் என்பது ஒரே பொருளையுடையதாகும். இருவேறு பொருள்களை உடையதல்ல என்பது மீமாம்சகர் கொள்கையாகும்.) அடுத்து, தீ வளர்த்தலும், கர்மமுமில்லாத உண்மையான துறவிக்கு, சுருதிகளிலும், ஸ்மிருதிகளிலும், புராணங்களிலும், இதிகாசங்களிலும், யோக சாத்திரங்களிலும் விதிக்கப்பட்டிருக்கும் துறவு மற்றும் யோகத்தினை பகவான் மறுதலிக்கவில்லை. அவ்வாறு மறுப்பது அவரது வாய்மொழிக்கும் முரணானதாகும். 'எல்லாக் கர்மங்களையும் மனதினால் துறந்து, எதனையும் செய்யாமலும் செய்விக்காமலும் ஒன்பது வாயில்களுடைய ஊரில் இன்புற்றிருக்கிறான்' (5.13) என்றும், 'மௌனமுடையவன், கிடைப்பதில் திருப்தி யுறுபவன் இருப்பிடமற்றவன் உறுதியான புத்தியுடையவன்'' (12-19) என்றும், 'எவனொருவன் எல்லா ஆசைகளையும் துறந்து பற்றற்றவனாய்' (2-71) என்றும், 'சகல கர்மங்களையும் துறந்தவன்' (12-16) என்றும் பகவான் தமது கருத்தினைப் பல்வேறு இடங்களில் வெளிப்படுத்தியிருக்கின்றார். அதனால் நான்காம் ஆஸ்ரமத்தை மறுதலித்தல் என்பது இச்சுலோகங்களுக்கு முரணாகும். ஆகையால் இல்லறத்தில் இருந்து கொண்டு தியான யோகத்தினை எய்த விரும்பும் முனிவனுக்கு பயனில் பற்றின்றி செய்யப்படும் அக்னி ஹோத்ரம் போன்ற வேள்விகள் சித்தசுத்தியின் மூலம் தியான யோகத்திற்குக் கருவியாகின்றது. இதன் காரணமாகவே அவன் 'அவனே துறவியும், யோகியுமாவான்' என்று போற்றப்படுகிறான்.

**श्रीभगवानुवाच**

**अनाश्रित: कर्मफलं कार्यं कर्म करोति य: ।**
**स सन्यासी च योगी च न निरग्निर्न चाक्रिय: ॥१॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**அனாஸ்ரித: கர்ம-பலம் கார்யம் கர்ம கரோதி ய: ।**
**ஸ ஸந்ந்யாஸீ ச யோகீ ச ந நிரக்னிர் ந சாக்ரிய: ॥ 1॥**

*ஸ்ரீ பகவான் கூறினார் :*

***எவன் கர்மத்தின் பயனைச் சாராது செய்ய வேண்டிய கர்மத்தைச் செய்கின்றானோ அவனே துறவியும் யோகியுமாகிறான். தீ வளர்க்காதவனும் கர்மம் செய்யாதவனும் அல்லர்.***

எதனைச் சாராதவன்? - கர்மத்தின் பயனைச் சாராதவன் - கர்மத்தின் பயனில் பற்றற்றவன் என்று பொருளாகும். எவன் கர்மத்தின் பயனில் பற்றுடையவனோ அவன் அப்பயனைச் சார்ந்திருக்கின்றான். பற்றில்லாதவன் அப்பயனைச் சார்ந்திருப்பதில்லை.

எவன் இவ்வாறு கர்மத்தின் பயனில் பற்றில்லாதவனோ, எவன் காம்ய கர்மத்திற்கு மாறான அக்னிஹோத்ரம் போன்ற நித்தியக் கர்மத்தைச் செய்கின்றானோ, அவன் பிற கர்மிகளைக் காட்டிலும் சிறந்தவனாவான். இவ்வுண்மையினை எடுத்துக் காட்டவே பகவான், "அவனே சந்நியாசியும், யோகியும் ஆவான்" என்று கூறுகின்றார். சந்நியாசி எனறால் துறவி என்று பொருளாகும். எல்லாவற்றையும் துறந்தவன் துறவியாவான். அவனே யோகியுமாவான். யோகம் என்பதற்கு மனதினை ஒரு நிலைப்படுத்துதல் என்று பொருளாகும். இவ்வாறு மனதினை ஒருநிலைப்படுத்தியவன் யோகியாவான். இம்மனிதனே இக்குணங்களை உடையவனாகக் கருதப்படுகிறான். தீ வளர்க்காதவனும், கர்மமில்லாதவனும் துறவியும் யோகியுமாகிறான் என்று கருதக்கூடாது. கர்மங்களுக்குத் துணை புரியும் அக்னிகள் எவனிடமிருந்து நீங்கி விட்டனவோ அவன் தீ வளர்க்கதாவன் ஆவான். அக்னிகளைக் கருவியாகக் கொள்ளாத தனம் தானம் போன்ற கர்மங்கள் எவனுக்கு இல்லையோ அவன் கர்மமில்லாதவன் ஆவான்.

மறுப்பு: சுருதி ஸ்மிருதிகளிலும், யோக சாத்திரங்களிலும் தீ வளர்க்காதவனும், கர்மமில்லாதவனுமே துறவியும் யோகியும் ஆவான் என்று தெளிவாக உணர்த்தப்பட்டிருக்கிறது. உண்மை இவ்வாறிருக்க தீ வளர்ப்பவனும், கர்மம் செய்பவனுமே துறவியும் யோகியுமாகிறான் என்னும் விந்தைமிகு தத்துவத்தைப் பகவான் எவ்வாறு உபதேசிக்கின்றார்?

பதில்: இதனைத் தவறாகக் கருதக்கூடாது. மரியாதை வழக்கின் காரணமாக (தீ வளர்ப்பவனும், கர்மமுடையவனாகவும் இருப்பவனிடம் துறவி மற்றும் யோகியாதல்) இரண்டினையும் ஏற்றிக் கூறுதல் என்னும் கருத்தினாலானதாம். அவன் ஒரு சந்நியாசியாக் கருதப்படுகிறான். ஏனென்றால் கர்மப் பயனில் அவன் கவனம் வைப்பதில்லை. அவன் ஒரு யோகியாகக் கருதப்படுகிறான். ஏனென்றால் தியான யோகத்திற்குக் கருவியாக அவன் கர்மங்களைச் செய்கிறான் அல்லது மனம் நிலைகுலைவதற்குக் காரணமாக விளங்கும் கர்மப் பயன்களின் மீதான கவனத்தினை ஒழித்தவனாகிறான். இவ்வாறு இவையிரண்டும் மரியாதை வழக்காக அவனிடம் ஏற்றிக் கூறப்படுகின்றது. இதற்கு மாறாக அவன் உண்மையில் சந்நியாசியாகவும், யோகியாகவும் இருக்கின்றான் என்பது பொருளல்ல. அதற்கேற்பவே பகவான் கூறுகிறார்:

यं संन्यासमिति प्राहुर्योगं तं विद्धि पाण्डव ।
न ह्यसंन्यस्तसङ्कल्पो योगी भवति कश्चन ॥२॥

யம் ஸந்ந்யாஸம் இதி ப்ராஹுர் யோகம் தம் வித்தி பாண்டவ ।
ந ஹி அஸந்ந்யஸ்த - ஸங்கல்போ யோகீ பவதி கச்சன ॥ 2 ॥

*பாண்டவா! எதனை சந்நியாசம் என்று கூறுகிறார்களோ அதனை யோகம் என்று அறிவாயாக. ஏனென்றால் எண்ணங்களைத் துறக்காதவன் யோகியாக மாட்டான்.*

பாண்டவா ! சுருதி ஸ்மிருதிகளை முறையாக அறிந்தவர்கள் கூறும் உண்மையான சந்நியாசம் என்பது அனைத்துக் கர்மங்களையும் அவற்றின் பயன்களையும் துறப்பதேயாகும். அந்த உண்மையான சந்நியாசமே கர்மங்களைச் செய்தலாகிய யோகமென்று அறிவாயாக.

கேள்வி: கர்மத்தைச் செய்வதாகிய கர்ம யோகத்திற்கும், அதற்கு நேர்மாறாக விளங்கும் கர்மத்தைத் துறப்பதாகிய சந்நியாசத்திற்கும் இடையில் எத்தகையப் பொதுமையினை ஏற்றுக் கொண்டு அதன் (சந்நியாசத்தின்) தன்மை கூறப்படுகின்றது? என்றால்,

பதில்: செய்பவனைப் பொருத்தமட்டில் உண்மையில் கர்ம யோகத்திற்கும் தூய சந்நியாசத்திற்கும் இடையில் நிச்சயமாக ஒரு குறிப்பிட்ட அளவு பொதுமை இருக்கின்றது. அனைத்துக் கர்மங்களையும் அவற்றிற்கான கருவிகளையும் துறந்த தூய சந்நியாசி, அனைத்துக் கர்மங்கள் மற்றும் அவற்றின் பயன்கள் மீதான எண்ணங்களை (சங்கல்பம்) ஒழித்து விடுகின்றான். இந்த எண்ணங்களே ஒருவனைக் கர்மத்தில் ஈடுபடுத்தும் ஆசைக்குக் காரணமாகின்றன. கர்ம யோகத்தைப் பின்பற்றுபவனும் கூட கர்மங்களைச் செய்யும் பொழுது அவற்றின் பயன்களின் மீதான எண்ணங்களைத் துறந்து விடுகிறான். இதனையே பகவான் பின்வருமாறு உபதேசிக்கிறார்: பயனை நினைப்பது மனம் அலைபாய்வதற்குக் காரணமாவதால் பயனைப் பற்றிய எண்ணத்தைத் துறக்காத எந்தவொரு கர்மியும் யோகியாக, உறுதியுடையவனாக ஆகமாட்டான். அதாவது பயன் மீதான அனைத்து எண்ணங்களையும் துறக்கும் ஒரு கர்மி யோகியாவான். உறுதியுடையவனாவான். ஏனென்றால் மனம் அலைபாய்வதற்குக் காரணமாக விளங்கும், பயன்மீதான எண்ணங்களை அவன் துறந்து விடுகின்றானன்றோ.

இவ்வாறு உண்மையான சந்நியாசத்திற்கும், கர்மயோகத்திற்கும் இடையில், செய்பவனைப் பொருத்தமட்டில் பயனைத் துறத்தல் என்னும் பொதுமையைக் கருத்திற் கொண்டே பகவான் "பாண்டவா! எதனை சந்நியாசம் என்கின்றனரோ அதனை யோகமாக அறிவாயாக" (6-2) என்று கர்மயோகத்தையே சந்நியாசமென்று போற்றிக் கூறுகிறார். பகவான் அதனைப் போற்றுகின்றார். ஏனென்றால் பயனில் எண்ணமின்றி செய்யப்படும் கர்மயோகம் தியான யோகத்திற்கு ஒரு புறக்கருவியாகும். அதாவது அது ஒரு

கர்மியை உரிய காலத்தில் தியான யோகத்திற்கு இட்டுச் செல்கின்றது. தியான யோகத்திற்குக் கர்மயோகம் எவ்வாறு கருவியாகிறது என்பதை பகவான் இப்போது விளக்கத் தொடங்குகிறார்.

**आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।**
**योगारूढस्य तस्यैव शमः कारणमुच्यते ॥ ३॥**

**ஆருருக்ஷோர் முனேர் யோகம் கர்ம காரணம் உச்யதே ।**
**யோகாரூடஸ்ய தஸ்யைவ மைம: காரணம் உச்யதே ॥ 3 ॥**

***யோக நிலையில் ஏற விரும்பும் முனிவனுக்குக் கர்மம் கருவியாகக் கூறப்படுகின்றது. யோக நிலையில் ஏறிய அவனுக்கு சாந்தம் கருவியாகக் கூறப்படுகின்றது.***

பயனில் பற்றறுத்த முனிவன் யோக நிலை எய்த விரும்பினான் என்றால் அதாவது அவன் ஏற்கெனவே யோக நிலையில் ஏறாதவனாகவும், தியானயோகத்தில் நிலைபெற இயலாதவனாகவும் இருந்தானென்றால் அவனுக்கு அவனது குறிக்கோளை அடைவதற்குக் கர்மமே கருவியாகக் கூறப்படுகின்றது. (அவனது குறிக்கோள் தியான யோகத்தை அடைவதாகும். கர்மமானது முதலில் அவனுக்கு சித்த சுத்தியையும், பின்பு தியான யோகத்திலே விருப்பத்தையும் அதன் பின்னர் தியான யோகத்திற்குரிய திறனையும் அளிக்கும் கருவியாகும்.) ஆனால் அவன் யோக நிலையில் ஏறிவிட்டானென்றால் பின்னர் அவனுக்கு அனைத்துக் கர்மங்களிலிருந்தும் விலகி இருக்கும் அமைதி கருவியாகின்றது. எந்த அளவிற்கு அவன் கர்மத்தினின்று விலகி இருக்கின்றானோ அந்த அளவிற்கு அவன் துன்பங்களிலிருந்து விடுதலை பெறுகிறான், புலன்களைக் கட்டுப்படுத்துகிறான்.மனதில் உறுதியுடையவனாகிறான்.பிறகு அவன் 'யோகாரூடன்' என்னும் யோகத்தில் ஏறியவனாகிறான். மகாபாரதம்

'பிரம்மமானது எல்லா உயிர்களிடத்தும் ஒன்றாகவும், சமமாகவும் இருக்கின்றது என்னும் அறிவும், வாய்மையும், உறுதியும், அகிம்ஸையும், நேர்மையும், அனைத்துக் கர்மங்களினின்று விலகி இருக்கும் அமைதியுமாகிய இச்செல்வங்களுக்கு இணையான செல்வம் பிராமணனுக்கு வேறு இல்லை' (சாந்தி பர்வம் 175-38)

'யோகாரூடன்' அதாவது யோகத்தில் ஏறியவனாக ஒருவன் எப்பொழுது அழைக்கப்படுகிறான்? - பதில் பின்வருமாறு:

**यदा हि नेन्द्रियार्थेषु न कर्मस्वनुषज्जते ।**
**सर्वसङ्कल्पसंन्यासी योगारूढस्तदोच्यते ॥ ४॥**

**யதா ஹி நேந்த்ரியார்த்தேஷு ந கர்மஸ்வ அனுஷஜ்ஜதே ।**
**ஸர்வ - ஸங்கல்ப - ஸந்ந்யாஸீ யோகாரூடஸ் ததோச்யதே ॥ 4 ॥**

*எப்போது நிச்சயமாக புலனின்பப் பொருட்களில் பற்றுவைப்பதில்லையோ, கர்மங்களில் பற்று வைப்பதில்லையோ அப்போது எல்லா எண்ணங்களையும் துறந்த அவன் 'யோகாரூடன்' (யோகநிலையில் ஏறியவன்) என்று கூறப்படுகிறான்.*

மனதில் உறுதியும், ஓசை முதலிய புலனுகர்ச்சிப் பொருட்களின் மீது பற்றின்மையும், நித்தியம், நைமித்திகம், காம்யம், பிரதிஷித்தம் என்னும் கர்மங்களினால் தனக்குப் பயனில்லை என்னும் கருத்தில் அவற்றின் மீது பற்றின்மையும் இம்மை மறுமைப் பொருட்களை விரும்புதற்குக் காரணமான அனைத்து எண்ணங்களையும் துறந்திடும் தன்மையும் எப்பொழுது ஒரு யோகி எய்தப் பெறுகின்றானோ அப்பொழுது அவன் 'யோகாரூடன்' (யோகநிலையில் ஏறியவன்) என்று கூறப்படுகிறான். 'எண்ணங்கள் அனைத்தையும் துறத்தல்' என்பதற்கு அனைத்து ஆசைகளையும் அனைத்துக் கர்மங்களையும் துறந்திட வேண்டும் என்று பொருளாகும். ஏனெனில் எண்ணங்களிலிருந்தே அனைத்து ஆசைகளும் எழுந்தோடி வருகின்றன.

'எண்ணங்களிலிருந்தே ஆசைகள் பிறக்கின்றன. எண்ணங்களிலிருந்தே யக்ஞங்கள் பிறக்கின்றன' (மனு. 2-2)

"ஏ! ஆசையே உனது வேரினை நான் அறிவேன். நீ எண்ணத்தினின்று பிறக்கின்றாய். நான் உன்னை நினைக்க மாட்டேன். நீயும் வேருடன் இருக்கமாட்டாய்" (மகாபாரதம் சாந்திபர்வம் 177-25)

ஆசைகள் அனைத்தையும் துறந்திடும் பொழுது கர்மங்கள் அனைத்தையும் துறந்திடுதல் தானே அமைகின்றது. இதனைப் பின்வரும் சுருதிகள் எடுத்துக் காட்டுகின்றன:

"அவன் எதனை விரும்புகின்றானோ அதனைச் செய்ய முற்படுகிறான். எதனைச் செய்ய முற்படுகின்றானோ அக்கர்மத்தைச் செய்கின்றான்" (பி.உ.4-4-5)

"ஒருவன் எச்செயலைச் செய்தாலும் அச்செயல் ஆசையின் விளைவேயாகும்" (மனு. 2-4)

மேலும் யூகத்தினாலும் அவ்வாறே அறிதல் வேண்டும். ஏனென்றால் அனைத்து ஆசைகளையும் துறந்தவனால் அசையக் கூட முடியாது. ஆகையால், "எண்ணங்கள் அனைத்தையும் துறந்திடும் தன்மையனாய்" என்னும் மொழியினால் பகவான் அனைத்து ஆசைகளையும் அனைத்துக் கர்மங்களையும் துறத்தல் வேண்டும் என்று அறிவுறுத்துகிறார்.

இவ்வாறு யோகநிலையின் உச்சியில் ஏறியவுடன் வாழ்க்கைத் துன்பங்களின்று தன்னைத் தானே மீட்டுக் கொள்கிறான்.

उद्धरेदात्मनात्मानं नात्मानमवसादयेत् ।
आत्मैव ह्यात्मनो बन्धुरात्मैव रिपुरात्मनः ॥५॥

**உத்தரேத் ஆத்மனாத்மானம் நாத்மானம் அவஸாதயேத் ।**
**ஆத்மைவ ஹி ஆத்மனோ பந்துர் ஆத்மைவ ரிபுர் ஆத்மன: ॥ 5 ॥**

*தன்னைத்தான் உயர்த்திக் கொள்க; தன்னைத் தன்னால் இழிவுறுத்த வேண்டாம்; தனக்குத்தானே நண்பன்; தனக்குத் தானே பகைவன்.*

வாழ்க்கை என்னும் கடலினுள் மூழ்கிக் கிடக்கும் ஒருவன் அதனின்று மேலெழுந்து தன்னைத்தானே கரையேற்றிக் கொள்ள வேண்டும். அதாவது யோக நிலையினை தானே அடைதல் வேண்டும். தன்னைத் தானே அக்கடலினுள் அமிழ்த்துக் கொள்ளக்கூடாது. ஏனென்றால் தனக்குத் தானே நண்பன் ஆவான். வாழ்க்கையிலிருந்து விடுதலை பெறச் செய்வதற்கு உதவும் நண்பன் தன்னை விட வேறொருவன் நிச்சயமாக இல்லை. மேலும் முக்தி என்பதில் நண்பன் கூடப் பகைவனேயாவான். காரணம் பந்தப்படுவதற்குக் காரணமான பாசம் என்னும் தடையினை அவன் உருவாக்குவான். அதனால்தான் 'தானே தனக்கு நண்பன்' என்று கூறப்பட்டது. தானே தனக்குப் பகைவனும் ஆவான். புறத்திலிருக்கும் ஒரு பகைவனையும் அவன் தானே உருவாக்கிக் கொள்கிறான். அதனால்தான் 'தானே தனக்குப் பகைவனும் ஆவான்' என்று கூறப்பட்டது.

'தானே தனக்கு நண்பன் தானே தனக்குப் பகைவன்' என்று கூறப்பட்டது. இப்போது தனக்குத் தானே நண்பனாயிருப்பவன் தன்மை என்ன? தனக்குத் தானே பகைவனாயிருப்பவன் தன்மை என்ன? என்றால் - பதில் பின்வருமாறு:

बन्धुरात्मात्मनस्तस्य येनात्मैवात्मना जितः ।
अनात्मनस्तु शत्रुत्वे वर्तेतात्मैव शत्रुवत् ॥६॥

**பந்துர் ஆத்மாத்மனஸ் தஸ்ய யேனாத்மைவாத்மனா ஜித:**
**அநாத்மனஸ் து ஶத்ருத்வே வர்த்தேதாத்மைவ ஶத்ரு - வத் ॥ 6 ॥**

*தன்னைத் தான் வென்றவனே தனக்குத்தான் நண்பன். தன்னைத் தான் வெல்லாதான் தனக்குத்தான் பகைவன் போல், பகைமையில் இருக்கின்றான்.*

உடல் மற்றும் புலன்களை அடக்கி தன்னைத்தான் கட்டுப்படுத்தியவன் தனக்குத் தானே நண்பனாவான். அவ்வாறு புலன்களை வெல்லாதவன் தனக்குத் தான் பகைவன் ஆவான். தன்னைத்தான் வெல்லாத மனிதன், புறத்தேயுள்ள பகைவன் அவனுக்குத் தீமை செய்வது போல் தனக்குத் தானே தீமை செய்கிறான்.

जितात्मनः प्रशान्तस्य परमात्मा समाहितः ।
शीतोष्णसुखदुःखेषु तथा मानापमानयोः ॥७॥

ஜிதாத்மன: ப்ரஶாந்தஸ்ய பரமாத்மா ஸமாஹித: ।
ஶீதோஷ்ண - ஸுக - து:க்கேஷு ததா மானாபமானயோ: ॥ 7 ॥

*குளிர் வெப்பம் இன்பதுன்பங்களிலும், அதுபோல் மான அவமானங்களிலும் தன்னை வென்ற அமைதியான உள்ளம் உடையவனிடத்து பரமாத்மா நிலை பிறழாது நிற்கும்.*

ஒருவன், உடல் மற்றும் புலன்களை வென்று, அமைதியுடைய மனதினைக் கொண்ட துறவியாக இருக்கும்பொழுது அவனிடம் பரமாத்மா நிலைபெறுகின்றது. அதாவது பரமாத்மா அவனது ஆத்மா ஆகின்றது என்று பொருள்.

ज्ञानविज्ञानतृप्तात्मा कूटस्थो विजितेन्द्रियः ।
युक्त इत्युच्यते योगी समलोष्टाश्मकाञ्चनः ॥८॥

ஜ்ஞான - விஜ்ஞான - த்ருப்தாத்மா கூட - ஸ்தோ விஜிதேந்த்ரிய: ।
யுக்த இதி உச்யதே யோகீ ஸம - லோஷ்டாஶ்ம - காஞ்சன: ॥ 8 ॥

*நூலறிவினாலும் அனுபவ அறிவினாலும் திருப்தியுற்று மலைபோல் நிலை குலையாது நின்று, புலன்களை வென்று மண்ணையும் கல்லையும் பொன்னையும் சமமாகக் காண்பவன் சமாதியில் நிலைபெற்றான் என்று கூறப்படுகிறான்.*

ஞானமென்பது சாத்திரங்களில் இருக்கும் பொருள்களை அறிதல் எனப்படும். விஞ்ஞானமென்பதோ சாத்திர அறிவினை அனுபவத்தில் உணர்தலாகும். இவ்வாறு சாத்திர மற்றும் அனுபவ அறிவினை உடையவனே முனிவன் (யுக்தன்) எனப்படுகிறான். அதாவது சமாதியில் நிலைபெற்றவன் அல்லது மனதில் உறுதியுடையவன் ஆகிறான்.

மேலும்,

सुहृन्मित्रार्युदासीनमध्यस्थद्वेष्यबन्धुषु ।
साधुष्वपि च पापेषु समबुद्धिर्विशिष्यते ॥९॥

ஸுஹ்ருன் - மித்ராரி - உதாஸீன - மத்யஸ்த - த்வேஷ்ய - பந்துஷு ।
ஸாதுஷ்வபி ச பாபேஷு ஸம-புத்திர் விஶிஷ்யதே ॥ 9 ॥

*நன்மனத்தான், நண்பன், பகைவன், உதாசீனன், நடுவுநிலைமையுடையோன், வெறுப்பவன், உறவினன் இவர்களிடத்தும் நல்லோரிடத்தும் தீயோரிடத்தும் சம புத்தியுடையோன் மேலோனாவான்.*

''ஸுஹ்ருத்'' என்று தொடங்கும் இச்சுலோகத்தின் முற்பாதி கூட்டுவாக்கியமாகும். நன்மனத்தான் - கைம்மாறு கருதாது பிறர்க்குதவி செய்வோன். நண்பன் - பாசமுடையவன், பகைவன் - எதிரி. உதாசீனன் - ஒரு புறமும் சாயாதவன். நடுவுநிலையுடையோன் - பகை கொண்ட இருவருக்கும் நன்மை வேண்டுபவன். உறவினன் - உறவுடையவன் என்னும் இவர்களிடத்தும், சாத்திரத்தைப் பின்பற்றும் நல்லோரிடத்தும் விலக்கப்பட்டதைச் செய்யும் தீயோரிடத்தும் சமபார்வை உடையவன் மேலோனாவான். (இவ்வுலக வாழ்க்கையிலிருந்து விடுபடுகிறான் என்றொரு பொருளும் கூட உண்டு). யோக நிலை ஏறிய அனைவரிலும் இவன் சிறந்தவன் ஆவான்.

யோகத்தைப் பின்பற்றுவதற்கான விதிமுறைகள்

ஆகவே, இவ்வுயர்ந்த பயனை அடைவதற்காக,

**योगी युञ्जीत सततमात्मानं रहसि स्थितः ।**
**एकाकी यतचित्तात्मा निराशीरपरिग्रहः ॥१०॥**

**யோகீ யுஞ்ஜீத ஸததம் ஆத்மானம் ரஹஸி ஸ்தித: ।**
**ஏகாகீ யத - சித்தாத்மா நிராஶீர் அபரிக்ரஹ: ॥ 10 ॥**

*தனிமையான இடத்தில் தனியனாயிருந்து மனத்தையும், உடலையும் அடக்கியவனாய் ஆசையும் உடைமையுமில்லாத யோகி எப்போதும் சமாதியில் நிலைபெற வேண்டும்.*

யோகி - தியானம் செய்பவன். தனிமையான இடத்தில் - மலை குகை போன்ற இடங்களில். தனியனாய் - துணையில்லாதவனாய். ''தனிமையான இடத்தில்'' என்றும் 'தனியனாய்' என்றும் கூறப்படுவதிலிருந்து துறவு நெறியினை மேற்கொள்ள வேண்டும் என்பது பொருளாகும். அவன் துறப்பது உலகினை மட்டுமல்ல அவனது உடைமைகளையும் கூட துறத்தல் வேண்டும்.

அடுத்து யோகத்தினைப் பயிற்சிப்பவனுக்குரிய ஆசனம் (இருக்கை), உணவு, பொழுதுபோக்கு என்னும் யோகத்திற்கு துணை செய்யும் இவை பற்றியும், யோக நிலை எய்தியவனின் குண நலன்களையும், யோகத்தின் பயன்களையும் பகவான் எடுத்து உரைக்கத் தொடங்குகிறார். இவற்றுள் அவர் குறிப்பிட்ட ஆசனத்தைப் பற்றிப் பின்வருமாறு விளக்குகிறார்.

**शुचौ देशे प्रतिष्ठाप्य स्थिरमासनमात्मनः ।**
**नात्युच्छ्रितं नातिनीचं चैलाजिनकुशोत्तरम् ॥११॥**

**ஶுசௌ தேஶே ப்ரதிஷ்டாப்ய ஸ்திரம் ஆஸனம் ஆத்மன: ।**
**நாதி - உச்ச்ரிதம் நாதி - நீசம் சைலாஜின - குஶோத்தரம் ॥ 11 ॥**

*தூய்மையான இடத்தில் அதிக உயரமில்லாமலும் அதிகத் தாழ்வில்லாமலும், துணி, தோல், தர்ப்பபை முதலியவற்றால் விரிக்கப் பெற்றதுமான ஓர் உறுதியான ஆசனத்தைத் தனக்கு அமைத்துக் கொண்டு;*

தூய்மையான - இயற்கையாகவே தூய்மையான இடமாயிருத்தல் அல்லது மெழுகுதல் போன்றவற்றால் தூய்மை செய்யப்பட்ட இடமாக இருத்தல் வேண்டும். துணி, தோல், தர்ப்பை என்பவை வரிசை மாறியிருக்கின்றன. முதலில் தர்ப்பையைப் பரப்பி அதன் மீது தோலை வைத்து அதன் மீது துணியை விரித்தல் வேண்டும்.

ஆசனத்தை அமைத்த பின்னர் என்ன செய்ய வேண்டும்?

**तत्रैकाग्रं मन: कृत्वा यतचित्तेन्द्रियक्रिय: ।**
**उपविश्यासने युञ्ज्याद्योगमात्मविशुद्धये ॥ १२॥**

**தத்ரைகாக்ரம் மன: க்ருத்வா யத - சித்தேந்த்ரிய - க்ரிய: ।**
**உபவிஶ்யாஸனே யுஞ்ஜ்யாத் யோகம் ஆத்ம - விஶுத்தயே ॥ 12 ॥**

*அந்த ஆசனத்தில் அமர்ந்து மனதினை ஒருமுகப்படுத்தி மனம், புலன்கள் இவற்றினை அடக்கி சித்தசுத்திக்காக யோகத்தில் கூட வேண்டும்.*

மனதினை ஒரு முகப்படுத்துவதற்கு முன்பு அவன் தனது மனதினைப் புலனுகர்ச்சிப் பொருட்களிலிருந்து விலக்கிக் கொள்ள வேண்டும். அவன் எதற்காக யோகத்தைக் கூட வேண்டும்? என்றால் அந்தக் கரணம் என்னும் உள்ளம் தூய்மை பெற வேண்டும் என்பதற்காக.

புறத்தே இருக்கும் ஆசனம் பற்றிக் கூறப்பட்டது. இனி உடல் எந்நிலையில் இருத்தல் வேண்டும்? என்றால் பதில் பின்வருமாறு:

**समं कायशिरोग्रीवं धारयन्नचलं स्थिर: ।**
**सम्प्रेक्ष्य नासिकाग्रं स्वं दिशश्चानवलोकयन् ॥ १३॥**

**ஸமம் காய - ஶிரோ - க்ரீவம் தாரயன்னசலம் ஸ்திர: ।**
**ஸம்ப்ரேக்ஷ்ய நாஸிகாக்ரம் ஸ்வம் திஶஶ்சானவலோகயன் ॥ 13 ॥**

*உடலையும், தலையையும், கழுத்தையும் சமமாக அசைவின்றி வைத்துக் கொண்டு உறுதிமிக்கவனாய், தனது மூக்கு நுனியை உற்று நோக்கித் திசைகளை நோக்காமல்,*

உடல், தலை, கழுத்து அவற்றை நேரே வைத்துக் கொண்டவன் அசையக்கூடுமாதலால், ''அசைவின்றி'' என்று குறிப்பாகக் காட்டுகிறார். 'உறுதிமிக்கவனாய்' - உடல் மற்றும் புலன்களின் புலனுகர்ச்சிக்கு ஆளாகாதவனாய் என்று பொருளாகும். தனது மூக்கின் நுனியை உற்று நோக்கியவன் 'போன்று' என்று கூட்டுக. 'போன்று' என்னும் சொல் இருந்து கெட்டதாக எடுத்துக் கொள்ள வேண்டும். ஏனென்றால், இங்கே பகவான் குறிப்பிட விரும்பியது தனது மூக்கின் நுனியைப் பார்க்க வேண்டும் என்பதன்று. பிறகு அவ்வாறு கூறியதின் பொருள் என்னவென்றால் புறத்தேயுள்ளப் பொருட்களினின்று தனது பார்வையினை விலக்கி அகத்தினைப் பார்க்க வேண்டும் என்பதாகும். மேலும் அது மனதின் (அந்தக் கரணத்தின்) அமைதியான நிலையைப் பற்றி நிற்றல் வேண்டும் என்பது பகவான் உணர்த்த விரும்பிய கருத்தாகும். தனது மூக்கின் நுனிப்பகுதியை மட்டுமே பார்க்க வேண்டும் என்பது அவனது கருத்தாக இருந்தால் மனது அதில்தான் ஈடுபடுமேயன்றி ஆத்மாவிடம் ஒருமுகப்படாது. 'மனத்தினை ஆத்மாவினிடத்து நன்கு நிலைபெறச் செய்து' (6-25) என மனம் ஆத்மாவினிடத்து மட்டுமே ஒரு நிலைப்படுதலை பகவான் கூறுகிறார். ஆகையால் 'போன்று' என்னும் சொல் இல்லாதிருத்தலால், கண்களின் பார்வையினை அகத்தின் மீது வைப்பதனைத்தான் ''உற்று நோக்கி'' என்று கூறப்படுகின்றது.

மேலும்,

**प्रशान्तात्मा विगतभीर्ब्रह्मचारिव्रते स्थितः ।**
**मनः संयम्य मच्चित्तो युक्त आसीत मत्परः ॥१४॥**

**ப்ரஶாந்தாத்மா விகத - பீர் ப்ரஹ்மச்சாரி வ்ரதே ஸ்தித: ।**
**மன: ஸம்யம்ய மச் - சித்தோ யுக்த ஆஸீத மத்-பர: ॥ 14 ॥**

***நன்கு சாந்தம் எய்தியவனாய், அச்சம் நீங்கி பிரம்மச்சரிய விரதத்தில் நிலை நின்று மனதினை அடக்கி, சித்தத்தை என்னிடம் வைத்து என்னையே மேலாக எண்ணி அவன் யோகத்திருக்க வேண்டும்.***

பிரம்மச்சாரி விரதம் பூண்டவன் குருவிற்குத் தொண்டு செய்து இரந்துண்டு வாழ வேண்டும் என்பது பொருளாகும். அவன் பிரம்மச்சாரி வாழ்க்கைக்குரிய விரதங்களை கடுமையாகப் பின்பற்ற வேண்டும். அவன் மனதினையும் கட்டுப்படுத்தியவனாக இருத்தல் வேண்டும். அதாவது அவன் மனதினை அதன் போக்கிற்கு அலைபாய விடக் கூடாது. பரமேசுவரனும் பரமபுருஷனுமாகிய என்னையே அவன் எப்போதும் சிந்தித்தல் வேண்டும். ஒரு காதலன் தனது காதலியைப் பற்றி எப்போதும் சிந்தை செய்யலாம் எனினும் அவளை அவன் மேலானவளாகக் கருதுவதில்லை. அவன் மன்னனையோ அல்லது மகாதேவனையோ மேலாகக் கொள்கிறான். ஆனால் இந்த யோகியோ என்னையே சிந்தித்து என்னையே மேலாகக் கொள்கிறான்.

இப்பொழுது யோகத்தின் பயனைப் பற்றிக் குறிப்பிடுகிறார்

युञ्जन्नेवं सदात्मानं योगी नियतमानसः ।
शान्तिं निर्वाणपरमां मत्संस्थामधिगच्छति ॥१५॥

**யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகி நியதமானஸ: ।**
**ஶாந்திம் நிர்வாணபரமாம் மத்ஸம்ஸ்தாம் அதிகச்சதி ॥ 15 ॥**

***இவ்வாறு மனதினை எப்போதும் ஒருமுகப்படுத்தி மனம் அடங்கப் பெற்ற யோகி முக்தியில் முடிவதான என்னிடத்துள்ள சாந்தியைப் பெறுகிறான்.***

இவ்வாறு: மேலே குறிப்பிடப்பட்டுள்ள விதிப்படி

என்னிடத்துள்ள: என்னைச் சார்ந்துள்ள

இப்போது யோகியின் ஒழுங்குமுறைக்குட்பட்ட உணவு போன்றவற்றைப் பற்றிக் கூறுகிறார்:

नात्यश्नतस्तु योगोऽस्ति न चैकान्तमनश्नतः ।
न चाति स्वप्नशीलस्य जाग्रतो नैव चार्जुन ॥१६॥

**நாத்யஶ்னதஸ்து யோகோ (அ)ஸ்தி ந சைகாந்தம் அநஶ்னத : ।**
**ந சாதி ஸ்வப்னஶீலஸ்ய ஜாக்ரதோ நைவ சார்ஜுன ॥ 16॥**

***அர்ஜுனா! மிகுதியாய் உண்போனுக்கு யோகமில்லை. உண்ணாதவனுக்கும் இல்லை. மிகுதியாக உறங்குவோனுக்குமில்லை. மிகுதியாக விழிப்போனுக்குமில்லை.***

மிகுதியாய் உண்போன் - தனக்கு வேண்டிய அளவைக் காட்டிலும் அதிகமாக உண்பவன். சுருதிகள் கூறுகின்றன:

"தனக்கு வேண்டிய அளவு மட்டுமே உண்ணப்படும் உணவு காக்கின்றது. அது தீமை செய்வதில்லை. அளவிற்கு அதிகமான உணவு தீமை செய்கிறது. காப்பதில்லை" (சதபத, ப்ரஹ்மண)

ஆகையால் யோகி தனக்குரிய அளவைக் காட்டிலும் மிகுதியாகவோ குறைவாகவோ உண்ணக்கூடாது. அல்லது இதற்கு யோக சாத்திரங்களில் யோகிக்குக் குறிப்பிடப்பட்டிருக்கும் உணவின் அளவைவிட அதிகமாக உண்பவனுக்கு யோகம் இல்லை என்றும் பொருள் கொள்ளலாம். உணவின் அளவு இவ்வாறு குறிப்பிடப்படுகிறது.

"அன்னம் மற்றும் பதார்த்தங்களுக்கு அரைவயிறும், தண்ணீருக்குக் கால்வயிறும், காற்று உலவுவதற்குக் கால் வயிறும் இடமளித்தல் வேண்டும்". (யோ.சா.)

யோகத்தை எவ்வாறு எய்த முடியும்? - பதில் பின்வருமாறு:

युक्ताहारविहारस्य युक्तचेष्टस्य कर्मसु ।
युक्तस्वप्नावबोधस्य योगो भवति दुःखहा ॥१७॥

யுக்தாஹாரவிஹாரஸ்ய யுக்த சேஷ்டஸ்ய கர்மஸு ।
யுக்த - ஸ்வப்னாவபோதஸ்ய யோகா பவதி துக்கஹா ॥ 17॥

*ஒழுங்கிற்குட்பட்ட உணவும், விளையாட்டும், ஒழுங்கிற்குட்பட்ட வினைச் செயலும், ஒழுங்கிற்குட்பட்ட உறக்கமும், விழிப்பும் உடையோனுக்கு யோகம் துயர் தவிர்ப்பதாகின்றது.*

நூல்களில் விதிக்கப்பட்ட அளவு உணவு உண்டு, உடற்பயிற்சிகள் மேற்கொண்டு, விதிக்கப்பட்ட அளவு வினைகளைச் செய்து குறிப்பிட்டக் கால அளவு உறங்கி, விழிக்கும் யோகிக்கு யோகம் துன்பம் நீக்கும் மருந்தாகின்றது. அதாவது வாழ்க்கைத் துன்பத்தை யோகம் அழிக்கின்றது.

எப்பொழுது அவன் யோகம் கைவரப் பெறுகின்றான்? பதில் பின்வருமாறு:

यदा विनियतं चित्तमात्मन्येवावतिष्ठते ।
निःस्पृहः सर्वकामेभ्यो युक्त इत्युच्यते तदा ॥१८॥

யதா விநியதம் சித்தம் ஆத்மனி ஏவாவதிஷ்டதே ।
நிஸ்ப்ருஹ: ஸர்வகாமேப்யோ யுக்த இதி உச்யதே ததா ॥ 18॥

*நன்றாக அடக்கப்பட்ட மனம் ஆத்மாவினிடத்தில் எப்பொழுது நிலைபெறுகின்றதோ அப்பொழுது அவன் அனைத்துப் பொருட்களினின்றும் ஆசை நீங்கப் பெற்று "யோகம் கைவரப் பெற்றவன்" என்று கூறப்படுகிறான்.*

ஒரு முகப்படுத்தப்பட்ட சித்தம் எப்பொழுது புறப்பொருட்களின் மீதான பற்று நீங்கி ஆத்மாவில் நிலைநிற்கின்றதோ அப்பொழுது அவன் "சமாதி நிலை எய்துகிறான்" என்று கூறப்படுகிறது. எவன் சமாதி நிலை எய்துகிறான்? இம்மை மறுமைப் பொருள்களின் மீதான பற்றறுத்த யோகி சமாதி நிலை எய்துகிறான்.

இவ்வாறான யோகியின் சித்தம் கீழே விளக்கப்படுகின்றது:

यथा दीपो निवातस्थो नेङ्गते सोपमा स्मृता ।
योगिनो यतचित्तस्य युञ्जतो योगमात्मनः ॥१९॥

யதா தீபோ நிவாத - ஸ்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா ।
யோகினோ யத - சித்தஸ்ய யுஞ்ஜதோ யோகம் ஆத்மன: ॥ 19 ॥

*சித்தத்தைக் கட்டி ஆத்ம யோகத்தில் கலந்து நிற்கும் யோகிக்கு காற்றில்லாத இடத்தில் அசைவின்றி நிற்கும் விளக்கை முன்னோர் உவமையாகக் காட்டினர்.*

காற்றில்லாத இடத்தில் விளக்குச் சுடர் அசைவதில்லை இவ்வுண்மையானது யோகத்தை அறிபவர்களாகி, சித்தத்தின் போக்குகளைக் காண்பவர்களால், உள்ளம் ஒடுங்கி சமாதி நிலையைப் பின்பற்றும் யோகியின் சித்தத்திற்கு கூறப்படுகின்றது.

இவ்வாறு யோகப் பயிற்சியின் வலிமையினால் ஒரு முகப்பட்ட சித்தமானது காற்றில்லாத இடத்தில் அசைவற்று இருக்கும் விளக்குப் போன்றதாகும்.

**यत्रोपरमते चित्तं निरुद्धं योगसेवया ।**
**यत्र चैवात्मनात्मानं पश्यन्नात्मनि तुष्यति ॥२०॥**

**யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோக - ஸேவயா ।**
**யத்ர சைவாத்மனாத்மானம் பஶ்யன்னாத்மனி துஷ்யதி ॥ 20 ॥**

*யோகத்தைப் பின்பற்றுவதால் அடங்கப் பெற்ற சித்தம் எப்பொழுது அமைதி பெறுகின்றதோ, எப்பொழுது மனதினால் ஆத்மாவை ஆத்மாவிடம் கண்டு மகிழ்கின்றானோ, (அப்பொழுது அவனுக்கு யோகம் கைவரப் பெறுகின்றது)*

எப்பொழுது யோகத்தைப் பின்பற்றுவதால் சித்தம் அலைபாயாது ஒடுங்கி அமைதி பெறுகின்றதோ, எப்பொழுது எங்கும் ஒளிமயமாக இருக்கும் பரம அறிவாகிய பரம்பொருளை, சமாதியினால் தூய்மை பெற்ற மனத்தினால் (அந்தக்கரணம்) கண்டு தெளிந்து தன் ஆத்மாவினிடத்திலேயே மகிழ்ச்சியைப் பெறுகின்றானோ, (அப்பொழுது அவனுக்கு யோகம் கைவரப் பெறுகிறது).

மற்றும்,

**सुखमात्यन्तिकं यत्तद्बुद्धिग्राह्यमतीन्द्रियम् ।**
**वेत्ति यत्र न चैवायं स्थितश्चलति तत्त्वतः ॥२१॥**

**ஸுகம் ஆத்யந்திகம் யத் தத் புத்தி - க்ராஹ்யம் அதீந்த்ரியம் ।**
**வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதஶ்சலதி தத்த்வத: ॥ 21 ॥**

*எல்லையில்லாததும், புத்தியினால் மட்டும் அறியக் கூடியதும், புலன்களுக்கு அப்பாற்பட்டதுமாக இருக்கும் பேரின்பம் எதுவோ, அதனை எப்பொழுது அறிகின்றானோ எதில் நிலைபெறுவதால் இவன் உண்மையினின்று வழுவுவதில்லையோ,*

முடிவில்லாததும், புலன்களின் உதவியின்றி புத்தியினால் மட்டும் அறியக் கூடியதும், புலன்களுக்கு அப்பாற்பட்டதுமான பேரின்பத்தை இவன் எப்பொழுது அனுபவிக்கின்றானோ அப்பொழுது, இந்த ஞானி ஆத்மாவில் நிலை பெறுகிறான். ஆகையால், உண்மை நிலையினின்று வீழ மாட்டான் என்பது பொருளாகும்.

மேலும்,

**यं लब्ध्वा चापरं लाभं मन्यते नाधिकं ततः ।**
**यस्मिन्स्थितो न दुःखेन गुरुणापि विचाल्यते ॥२२॥**

**யம் லப்த்வா சாபரம் லாபம் மன்யதே நாதிகம் தத: ।**
**யஸ்மின் ஸ்திதோ ந து:க்கேன குருணாபி விசால்யதே ॥ 22 ॥**

*எதனை அடைந்தபின் அதனைவிட வேறு நன்மையைப் பெரிதாகக் கருதுவதில்லையோ, எதில் நிலைபெற்று பெருந்துன்பத்தாலும் அசைக்கப்படுவதில்லையோ, (அது யோகமாம்)*

எதனை - ஆத்மாவை அடைதலை. அதனைவிட - ஆத்மாவை அடைதலை விட. எதில் - ஆத்ம உண்மையில். பெருந்துன்பத்தாலும் - வாள் முதலிய ஆயுதங்களாலும் வெட்டப்படுவதால் விளையும் துன்பம் போன்றவை.

ஆத்மாவின் ஒரு குறிப்பிட்ட நிலையான இந்த யோகமானது 4-20 முதல் பல சுலோகங்களில் விளக்கப்பட்டிருக்கிறது.

**तं विद्याद् दुःखसंयोगवियोगं योगसञ्ज्ञितम् ।**
**स निश्चयेन योक्तव्यो योगोऽनिर्विण्णचेतसा ॥२३॥**

**தம் வித்யாத் து:க்க - ஸம்யோக வியோகம் யோக - ஸம்ஜ்ஞிதம் ।**
**ஸ நிஶ்சயேன யோக்தவ்யோ யோகோ (அ)நிர்விண்ண -**
**சேதஸா ॥ 23॥**

*அந்நிலையே துன்பத்துடன் கலத்தலை விடுதலாகிய யோக நிலையென்று உணர். உள்ளத்தில் ஏக்கமின்றி உறுதியுடன் அந்த யோகத்தை ஒருவன் பற்றி நிற்கக் கடவான்.*

துன்பத்துடன் கலத்தலை விடுதலே யோகம் என்று மறைமுகமாகச் சுட்டப்பட்டிருக்கிறது. யோகத்தின் பயனை எடுத்துரைத்து பின்னர் உறுதியும் மனங்கலங்கி வருந்தாமையும் யோகத்திற்கான கருவிகள் என்பதை விளக்கும் பொருட்டுப் பகவான் அந்த யோகத்தை மீண்டும் எடுத்துரைக்கின்றார். அந்த யோகம் - மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் பயனை விளைவிக்கும் யோகம்.

மேலும்,

सङ्कल्पप्रभवान्कामांस्त्यक्त्वा सर्वानशेषतः ।
मनसैवेन्द्रियग्रामं विनियम्य समन्ततः ॥२४॥

ஸங்கல்பப்ரபவான் காமாம் ஸ்த்யக்த்வா ஸர்வான் அஶேஷத: ।
மனஸைவேந்த்ரியக்ராமம் விநியம்ய ஸமந்தத: ॥ 24 ॥

*நினைப்பைப் பிறப்பிடமாகக் கொண்ட ஆசைகள் அனைத்தையும் மிச்சமறத் துறந்துவிட்டு, புலன்களின் கூட்டத்தை எப்புறத்தும் மனத்தால் ஓடவிடமால் அடக்கி,*

மிச்சமற - பற்றற. மனத்தால் - தெளிவுடைய மனதினால்,

शनैः शनैरुपरमेद्बुद्ध्या धृतिगृहीतया ।
आत्मसंस्थं मनः कृत्वा न किञ्चिदपि चिन्तयेत् ॥२५॥

ஶனை: ஶனைர் உபரமேத் புத்த்யா த்ருதி - க்ருஹீதயா ।
ஆத்ம ஸம்ஸ்தம் மன: க்ருத்வா ந கிஞ்சித் அபி சிந்தயேத் ॥ 25 ॥

*துணிந்த மதியுடன் மனதை ஆத்மாவில் நிலைநிறுத்தி மெல்ல மெல்ல சாந்தியை எய்த வேண்டும். வேறு யாதொன்றையும் நினைக்கக்கூடாது.*

மெல்ல மெல்ல - படிப்படியாக. சாந்தியை எய்தவேண்டும் - அமைதி பெற வேண்டும் - எதனால்? மதியினால் - எப்படிப்பட்ட மதியினால் - துணிவுடைய புத்தியினால் "அனைத்தும் ஆத்மாவே அதைத் தவிர வேறொன்றுமில்லை" என்று எண்ணி ஆத்மாவில் மனதினை நிலைநிறுத்தி அவன் வேறு எதையும் நினைத்தல் கூடாது. இதுவே சிறந்த யோகமாகும் (மனம் அலைபாயாது ஒருமுகப்படுவதே யோகத்தின் உயர்ந்த நிலையாகும் - ஆ)

இனி ஆத்மாவில் மனதினை நிலைபெறச் செய்ய முயலும் யோகி,

यतो यतो निश्चरति मनश्चञ्चलमस्थिरम् ।
ततस्ततो नियम्यैतदात्मन्येव वशं नयेत् ॥२६॥

யதோ யதோ நிஶ்சரதி மனஶ்சஞ்சலம் அஸ்திரம் ।
ததஸ்ததோ நியம்யைதத் ஆத்மனி ஏவ வஶம் நயேத் ॥ 26 ॥

*நிலையில்லாத சஞ்சலமான மனம் எந்தெந்தக் காரணத்தால் அலைகின்றதோ அந்தந்தக் காரணத்தினின்று அதனை மீட்டு அடக்கி ஆத்மாவினிடத்தில் வசப்படுத்த வேண்டும்.*

ஓசை முதலிய நுகர்ச்சிப் பொருட்களே மனம் சஞ்சலப்படுவதற்குக் காரணங்களாகும். புலனுகர்ச்சிப் பொருட்களால் மனம் இவ்வாறு

அலைபாய்வதானது இயற்கையிலேயே அதற்கு இருக்கும் பலவீனமாகும். அப்பொருட்களின் உண்மைத் தன்மையினை ஆராய்ந்து, உறுதியின் மூலம் அதனைப் போலி என்று கண்டு தெளிந்து மனதினை ஆத்மாவிற்கு வசமாகும்படிச் செய்தல் வேண்டும். இவ்வாறு யோகப் பயிற்சியின் வலிமையினால் மனம் ஆத்மாவினிடத்தில் அமைதி பெறுகின்றது.

**प्रशान्तमनसं ह्येनं योगिनं सुखमुत्तमम् ।**
**उपैति शान्तरजसं ब्रह्मभूतमकल्मषम् ॥ २७॥**

**ப்ரஶாந்தமனஸம் ஹி ஏனம் யோகினம் ஸுகம் உத்தமம் ।**
**உபைதி ஶாந்தரஜஸம் ப்ரஹ்மபூதம் அகல்மஷம் ॥ 27 ॥**

*ரஜோ குணம் நீங்கி, பாவமற்று, மனம் அமைதியடைந்து பிரம்மமேயாகிய இந்த யோகியைப் பேரின்பம் வந்தடைகின்றது.*

பேரின்பம் - எல்லாவற்றையும் விடச் சிறந்த இன்பம். ரஜோ குணம் நீங்கி -மயக்கத்திற்குக் காரணமான ரஜோ குணம் நீங்கப் பெற்று. பிரம்மமேயாகிய - எல்லாம் பிரம்மமே என்று உணர்ந்து ஜீவன் முக்தன் ஆகிறான் (உயிரோடு இருக்கும்பொழுதே முக்தியடைதல்) பாவமற்று நல்வினை, தீவினையற்றவனாக.

**युञ्जन्नेवं सदात्मानं योगी विगतकल्मषः ।**
**सुखेन ब्रह्मसंस्पर्शमत्यन्तं सुखमश्नुते ॥ २८॥**

**யுஞ்ஜன்னேவம் ஸதாத்மானம் யோகீ விகதகல்மஷ: ।**
**ஸுகேன ப்ரஹ்மஸம்ஸ்பர்ஶம் அத்யந்தம் ஸுகம் அஶ்னுதே ॥ 28 ॥**

***இவ்வாறு யோகத்தில் மனதினை எப்பொழுதும் நிலைநிறுத்தும் குற்றமற்ற யோகி, பிரம்மத்தைத் தொடுவதாகிய மிக உயர்ந்த இன்பத்தை எளிதில் துய்க்கிறான்.***

இவ்வாறு - மேலே கூறப்பட்டிருக்கும் முறைப்படி. யோகி - யோகத்திற்கு இடையூறுகளாக விளங்கும் ஆசைகள் போன்றவை இல்லாதவன். எளிதில் - கடின முயற்சி ஏதுமின்றி. பிரம்மத்தைத் தொடுதல் - பிரம்மத்தோடு தொடர்புடைய. உயர்ந்த - அளவில்லா, மேலான. துய்க்கிறான் - பிரம்மானந்த அனுபவ வடிவமாக இருக்கிறான்.

"எங்கும் பிரம்மம் ஒன்றுதான்" என்று காண்பதே யோகத்தின் பயனாகும். அது இவ்வுலக வாழ்வினை நீங்கச் செய்கிறது.

**सर्वभूतस्थमात्मानं सर्वभूतानि चात्मनि ।**
**ईक्षते योगयुक्तात्मा सर्वत्र समदर्शनः ॥ २९॥**

ஸர்வபூதஸ்தம் ஆத்மானம் ஸர்வபூதானி சாத்மனி
ஈக்ஷதே யோகயுக்தாத்மா ஸர்வத்ர ஸமதர்ஶன: ॥ 29 ॥

*யோகத்தில் நிலைபெற்ற உள்ளமுடையவன் எங்கும் சம பார்வையுடையவனாய் எல்லா உயிர்களிடத்தும் ஆத்மாவையும், ஆத்மாவினடத்து எல்லா உயிர்களையும் காண்கிறான்.*

அவன் பிரம்மதேவன் முதல் சாதாரணப் புல்வரையில் உள்ள அனைத்து உயிர்களிடத்தும் இருக்கும் ஆத்மா ஒன்றுதானென்று காண்கிறான். அதுபோல் அதே ஆத்மாவினிடத்துப் பிரம்மதேவன் முதல் சாதாரணப் புல்வரையிலுமுள்ள அனைத்து உயிர்களையும் கூடக்காண்கிறான். அதாவது அவன் ஆத்மாவையும் பிரம்மத்தையும் ஒன்றாகவேக் காண்கிறான்.

இனி "எங்கும் ஆத்மா ஒன்றுதான்" என்று காண்பதின் பயன் கூறப்படுகிறது.

यो मां पश्यति सर्वत्र सर्वं च मयि पश्यति ।
तस्याहं न प्रणश्यामि स च मे न प्रणश्यति ॥३०॥

யோமாம் பஶ்யதி ஸர்வத்ர ஸர்வம் ச மயி பஶ்யதி ।
தஸ்யாஹம் ந ப்ரணஶ்யாமி ஸ ச மே ந ப்ரணஶ்யதி ॥ 30॥

*எவன் எல்லாவற்றிலும் என்னைக் காண்கிறோனோ, என்னிடம் எல்லாவற்றையும் காண்கிறானோ, அவனுக்கு நான் காணப்படாமலிருப்பதில்லை, அவனும் எனக்குக் காணப்படாமல் இருப்பதில்லை.*

எல்லா உயிர்களிடத்தும் இருக்கும் ஆத்மாவாக வாசுதேவனாகிய என்னை எவன் காண்கிறானோ, அதுபோல் அனைத்துயிர்களின் ஆத்மாவான என்னிடம் பிரம்மதேவன் உள்ளிட்ட அனைத்து உயிர்களையும் காண்கிறானோ - இவ்வாறு "எங்கும் ஆத்மா ஒன்றுதான்" என்று ஒருவன் காணும்பொழுது - அவனுக்கு ஈசுவரனாகிய நான் காணப்படாமலிருப்பதில்லை. ஏனெனில் அவனுடைய ஆத்மாவும் என்னுடைய ஆத்மாவும் ஒன்றன்றோ. ஒருவனின் ஆத்மா அவனிடம் விளங்காதிருக்க முடியாதன்றோ.

இப்போது, முந்தைய சுலோகத்தில் கூறப்பட்டிருக்கும் "எல்லா உயிர்களிடத்தும் இருக்கும் ஆத்மா ஒன்றென என்னையேக் காண்கிறான்" என்னும் நல்லறிவை மீண்டும் கூறி அதன் பயனாக விளையும் முக்தியையும் உறுதி செய்கின்றார்.

सर्वभूतस्थितं यो मां भजत्येकत्वमास्थित: ।
सर्वथा वर्तमानोऽपि स योगी मयि वर्तते ॥३१॥

**ஸர்வபூதஸ்திதம் யோ மாம் பஜதி ஏகத்வம் ஆஸ்தித: ।**
**ஸர்வதா வர்த்தமானோ (அ)பி ஸ யோகீ மயி வர்த்ததே ॥ 31॥**

*எவன் எல்லா உயிர்களிலும் உறையும் என்னை ஒருமையில் நிலைபெற்றுத் தொழுகின்றானோ அந்த யோகி எந்நிலையில் இருந்தாலும் என்னிடத்திலேயே இருக்கிறான்.*

உள்ளதை உள்ளபடிக் காணும் மெய்யறிவு பெற்ற யோகி விஷ்ணு நிலை என்னும் பரமநிலையாகிய என்னிடத்திலேயே இருக்கிறான். அவன் நித்திய விடுதலை பெறுகிறான். முக்தி எய்தும் பாதையில் அவனுக்குத் தடையாக எதுவுமில்லை. மேலும்,

**आत्मौपम्येन सर्वत्र समं पश्यति योऽर्जुन ।**
**सुखं वा यदि वा दु:खं स योगी परमो मत: ॥ ३२॥**

**ஆத்மமௌபம்யேன ஸர்வத்ர ஸமம் பஶ்யதி யோ(அ)ர்ஜுன ।**
**ஸுகம் வா யதிவா து:க்கம் ஸ யோகீ பரமோ மத: ॥ 32॥**

*அர்ஜுனா! எவன் எங்கும் இன்பமாயினும், துன்பமாயினும் தன்னை உவமையாகக் கொண்டு சமமாகப் பார்க்கின்றானோ அவன் பரமயோகியாகக் கருதப்படுகிறான்.*

தான் பெறும் இன்பம் இவ்வையத்தின் இன்பமென்றும், தான் பெறும் துன்பம் இவ்வையத்தின் துன்பம் என்றும், தன்னையே உவமையாகக் கொண்டு பிற உயிர்களின் இன்பதுன்பங்களைத் தனது இன்ப துன்பமாகக் காண்பவன் பிறர்க்குத் தீங்கு செய்வதில்லை. அவன் துன்புறுத்தாதவன் ஆவான். பிறர்க்குத் தீங்கு செய்யாமல் மெய்யறிவில் நிலை பெறுபவன் பரம யோகியாகக் கருதப்படுகிறான்.

மேலே குறப்பிடப்பட்டிருக்கும் மெய்யறிவாகிய யோகமானது அடைதற்கு மிகவும் அரியதாகும் என்று கருதிய அர்ஜுனன் அதனை அடைதற்குரிய நிச்சயமான வழி என்னவென்று அறிய விரும்பி கூறினான்.

अर्जुन उवाच

**योऽयं योगस्त्वया प्रोक्त: साम्येन मधुसूदन ।**
**एतस्याहं न पश्यामि चञ्चलत्वात्स्थितिं स्थिराम् ॥ ३३॥**

*அர்ஜுன உவாச*

**யோ (அ)யம் யோகஸ் த்வயா ப்ரோக்த: ஸாம்யேன மதுஸூதன ।**
**ஏதஸ்யாஹம் ந பஶ்யாமி சஞ்சலத்வாத் ஸ்திதிம் ஸ்திராம் ॥ 33 ॥**

*அர்ஜுனன் கூறினான் :*

*மதுசூதனா! இங்ஙனம் நீ சமத்துவத்தால் ஏற்படுவதாகச் சொல்லிய யோகம் ஸ்திரமான நிலையுடையதாக எனக்குத் தோன்றவில்லை, எனது சஞ்சலத் தன்மையால்.*

இது ஊரறிந்த உண்மையாகும்.

**चञ्चलं हि मन: कृष्ण प्रमाथि बलवद्दृढम् ।**
**तस्याहं निग्रहं मन्ये वायोरिव सुदुष्करम् ॥ ३४॥**

**சஞ்சலம் ஹி மன: க்ருஷ்ண ப்ரமாதி பலவத் த்ருடம் ।**
**தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோர் இவ ஸு-துஷ்கரம் ॥ 34 ॥**

***கிருஷ்ணா! மனம் சஞ்சலமுடையது, கலங்கச் செய்யும் இயல்பினது. வலிமையுடையது, திண்மையுடையது. அதனை அடக்குவது, காற்றை அடக்குதல்போல் மிகவும் கடினமானதென்று நான் கருதுகிறேன்.***

'கிருஷ்ணர்' என்பது 'முறித்தல்' என்னும் பொருளுடைய 'க்ருஷ்' என்னும் சொல்லிலிருந்து வந்ததாகும். பாவம் முதலிய தீமைகளை முறித்தலால் அவர் கிருஷ்ணர் என்று அழைக்கப்படுகிறார். மனம் சஞ்சலமுடையது மட்டுமல்ல. கலங்கச் செய்யும் இயல்புடையதுமாகும். உடலையும் புலன்களையும் கலங்கச் செய்கின்றது. அதாவது நிலைகுலையச் செய்கின்றது. பிறவற்றிற்கு வசப்படும்படிச் செய்கின்றது. மேலும் வலிமையுடையது, அதனை அடக்கி ஒடுக்குதல் அரியதாதலின் யாராலும் அடக்க முடியாததாகும். அது திண்மையுடையது, தந்து நாகத்தினைப் போல் வெட்ட முடியாதது. (தந்து நாகமென்பது - முதலை போல் நீரில் வாழும் ஓர் உயிராகும்.)இவ்வாறானத் தன்மையுடைய மனதினை அடக்குவதென்பது காற்றினை அடக்குவது போல் மிகவும் கடினமானதாகும்.

பகவான் கூறுகிறார்: நீ கூறுகின்றது போல் மனம் அத்தன்மையதுதான்.

**श्रीभगवानुवाच**

**असंशयं महाबाहो मनो दुर्निग्रहं चलम् ।**
**अभ्यासेन तु कौन्तेय वैराग्येण च गृह्यते ॥ ३५॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**அஸம்ஶயம் மஹா-பாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம் ।**
**அப்யாஸேன து கௌந்தேய வைராக்யேன ச க்ருஹ்யதே ॥ 35 ॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்:*

***பெருந்தோளுடையாய்! மனம் அடக்குதற்கரியது; சஞ்சலமுடையது, ஐயமில்லை; ஆனால் குந்தியின் மகனே, பழக்கத்தாலும், வைராக்கியத்தாலும் அடக்க முடியும்.***

மனம், அடக்க முடியாதது; சஞ்சலமுடையது என்பதில் ஐயமில்லை. ஆனால் அது பழக்கத்தாலும், வைராக்கியத்தாலும் அடக்கப்படுகின்றது. பழக்கம் என்பது ஒன்றைப் பற்றிய எண்ணத்தில் உறுதியுடனிருத்தல், அதாவது அதைப் பற்றியே மீண்டும் மீண்டும் சிந்தித்தல் என்று பொருளாகும். வைராக்கியம் என்பது இம்மை மறுமைகளில் நாடப்படும் இன்பங்களில் உள்ள தீமைகளை நுணுகி ஆராயும் பயிற்சியின் மூலம் பெறப்படும் பற்றின்மையாகும். இவ்வாறு பழக்கத்தாலும் பற்றின்மையாலும் மனம் தடுத்து ஒடுக்கப்படுகின்றது என்று பொருள்.

ஆனால் மனம் அடங்கப் பெறாதவன் எவனோ அந்த,

**असंयतात्मना योगो दुष्प्राप इति मे मतिः ।**
**वश्यात्मना तु यतता शक्योऽवाप्तुमुपायतः ॥ ३६॥**

**அஸம்யதாத்மனா யோகோ துஷ்ப்ராப இதிமே மதி: ।**
**வஶ்யாத்மனா து யததா ஶக்யோ (அ)வாப்தும் உபாயத: ॥ 36 ॥**

***மனம் அடங்கப் பெறாதவன் யோகமெய்துதல் அரிதென்று நான் கருதுகிறேன். ஆனால் மனம் அடங்கப் பெறாதவன் முயற்சியாலும், உபாயத்தாலும் அதனை எய்த முடியும்.***

அடங்காத மனம் : பழக்கத்தாலும் பற்றின்மையாலும் அடங்காத அந்தக்கரணம். மனம் அடங்கப் பெற்றவன் : பழக்கத்தாலும், பற்றின்மையாலும் மனதினை அடக்கியவன்.

யோகப் பயிற்சியில் ஈடுபடும் பொழுது இம்மை மறுமைகளில் அடையப்படும் உயர்நிலைக்குக் காரணமானக் கர்மங்கள் துறக்கப் படுகின்றன என்பதோடு நிறைவான யோகத்தின் பயனும் முக்திக்குக் காரணமானதுமான மெய்யறிவும் அடையப் பெற்றதாக இல்லை. அதனால் மரணிக்கும் வேளையில் அவன் யோகத்தினின்றும் தவறி வீழ்கிறான். அதன் காரணமாக அழிவெய்துகிறான். இந்த அச்சத்தின் காரணமாக அர்ஜுனன் வினவினான்.

**अर्जुन उवाच**

**अयतिः श्रद्धयोपेतो योगाच्चलितमानसः ।**
**अप्राप्य योगसंसिद्धिं कां गतिं कृष्ण गच्छति ॥ ३७॥**

*அர்ஜுன உவாச*

**அயதி: ச்ரத்தயோபேதோ யோகாச்சலிதமானஸ: ।**
**அப்ராப்ய யோக - ஸம்ஸித்திம் காம் கதிம் க்ருஷ்ண கச்சதி ॥ 37 ॥**

*அர்ஜுனன் கூறினான்*

*கிருஷ்ணா! நம்பிக்கையுடையோனெனினும் முயற்சியில்லாமையால் யோகத்தினின்றும் நழுவிய மனமுடையோன் யோகம் கைவரப்பெறாது எக்கதியடைகிறான்?*

யோகத்தின் பயனில் நம்பிக்கையுண்டு ஆனால் யோகவழியில் முயற்சிக்காது, மரணமடையும் வேளையில் நினைவுத் தவறுதலால் யோகத்தினின்றும் நழுவுகிறான். யோகத்தின் பயனாகிய மெய்யறிவினை அடையத் தவறுவதினால் அவன் எக்கதியை அடைகிறான்?

**कच्चिन्नोभयविभ्रष्टश्छिन्नाभ्रमिव नश्यति ।**
**अप्रतिष्ठो महाबाहो विमूढो ब्रह्मणः पथि ॥ ३८॥**

**கச்சின்னோபயவிப்ரஷ்டஶ் சின்னாப்ரமிவ நஶ்யதி ।**
**அப்ரதிஷ்டோ மஹாபாஹோ விமூடோ ப்ரஹ்மண: பதி ॥ 38॥**

*வலிமை மிக்கத் தோள்களையுடையவரே! இரண்டினின்றும் தவறி நிலைபெறாது பிரம்மத்தின் வழியில் குழப்பமெய்திய மூடன் சிதறிய மேகம்போல் அழிந்து போவதில்லையா?*

இரண்டினின்றும் - கர்மமார்க்கத்தினின்றும், யோக மார்க்கத்தினின்றும். நிலைபெறாது - உறுதியுடன் நில்லாது. பிரம்மத்தின் வழியில் - பிரம்மத்தை அடைதற்கான மார்க்கத்தில்.

**एतन्मे संशयं कृष्ण छेत्तुमर्हस्यशेषतः ।**
**त्वदन्यः संशयस्यास्य छेत्ता न ह्युपपद्यते ॥ ३९॥**

**ஏதன்மே ஸம்ஶயம் க்ருஷ்ண சேத்துமர்ஹஸ்யஶேஷத: ।**
**த்வதன்ய: ஸம்ஶயஸ்யாஸ்ய சேத்தா ந ஹ்யுபபத்யதே ॥ 39॥**

*கிருஷ்ணா! எனது இந்த ஐயத்தை நீக்குதற்கு நீரே உரியவராவீர், இந்த ஐயத்தினை நீக்குதற்கு உம்மையன்றி வேறு எவருமிலர்.*

ஓ, கிருஷ்ணா! எனது இந்த ஐயத்தினை வேருடன் களைவதற்கு உம்மைத்தவிர, பிற ரிஷிகளாளோ, தேவர்களாளோ இயலாது. ஆதலினால், நீர் ஒருவர் மட்டுமே இந்த ஐயத்தினை நீக்குதல் வேண்டும். இதுவே கருத்தாகும்.

श्रीभगवानुवाच

पार्थ नैवेह नामुत्र विनाशस्तस्य विद्यते ।
न हि कल्याणकृत्कश्चिद्दुर्गतिं तात गच्छति ॥ ४० ॥

*ஸ்ரீபகவான் உவாச*

**பார்த்த நைவேஹ நாமுத்ர விநாஶஸ்தஸ்ய வித்யதே ।**
**ந ஹி கல்யாணக்ருத்கஶ்சித் துர்கதிம் தாத கச்சதி ॥ 40 ॥**

*ஸ்ரீபகவான் கூறினார்*

*பார்த்தா! அவனுக்கு இம்மையில் அழிவில்லை, மறுமையிலும் இல்லை; மைந்த, நன்மை செய்வோன் ஒருபோதும் இழிநிலை எய்துவதில்லை.*

யோகத்தில் தவறியவன் இம்மையிலும், மறுமையிலும் இழிபிறப்பு எய்துவதில்லை. மைந்த- (சமஸ்கிருதச் சொல் 'தாத' என்பது மைந்தன் என்று மொழிபெயர்க்கப்பட்டுள்ளது). "தாத" என்னும் சமஸ்கிருதச் சொல்லுக்குத் தந்தை என்றே பொருளாகும். காரணம் தந்தையே மரபு ரீதியாகத் தன்னை மைந்தனாக ஆக்கிக் கொள்கிறான். இவ்வாறு தந்தை தன்னையே மைந்தனாக்கிக் கொள்வதால், மைந்தனும் கூடத் தந்தை என்று அழைக்கப்படுகிறான். ஒரு குருவிற்கு அவரது சீடன் பெற்றெடுத்த மைந்தனாக இல்லாதபோதும், அவனும் மைந்தனைப் போன்றவனே. ஆதலினால் மைந்தன் என்றே அழைக்கப்படுகிறான்.

பிறகு அவனுக்கு என்ன நேர்கின்றது?

प्राप्य पुण्यकृतां लोकानुषित्वा शाश्वतीः समाः ।
शुचीनां श्रीमतां गेहे योगभ्रष्टोऽभिजायते ॥ ४१ ॥

**ப்ராப்ய புண்யக்ருதாம் லோகானுஷித்வா ஶாஶ்வதீ: ஸமா: ।**
**ஶுசீனாம் ஸ்ரீமதாம் கேஹே யோகப்ரஷ்டோ (அ)பிஜாயதே ॥ 41 ॥**

*யோகத்தில் தவறியவன், புண்ணியம் செய்தவர்களுக்குரிய உலகங்களை எய்தி அங்கு எண்ணற்ற ஆண்டுகள் வாழ்ந்து தூய்மையுடைய செல்வந்தர்களின் இல்லத்தில் மீண்டும் பிறக்கிறான்.*

இக்கூற்றிலிருந்து யோக மார்க்கத்தினை மேற்கொண்ட துறவி (யோகத்தில் தவறியவன்) என்று தெரியவருகின்றது. அவன், அசுவமேதயாகம் போன்ற நல்வினை செய்தவர்களின் உலகங்களை அடைந்து அங்கு நீண்டநாட்கள் வாழ்ந்து இன்பம் அனுபவித்து அவ்வின்பம் தீர்ந்து போன பின்னர் சாத்திரங்களின் வழியே நடக்கும் தூய செல்வந்தனின் இல்லத்தில் மீண்டும் பிறப்பெடுக்கின்றான்.

अथवा योगिनामेव कुले भवति धीमताम् ।
एतद्धि दुर्लभतरं लोके जन्म यदीदृशम् ॥ ४२॥

அதவா யோகினாமேவ குலே பவதி தீமதாம் ।
ஏதத்தி துர்லபதரம் லோகே ஜன்ம யதீத்ருஶம் ॥ 42॥

*அல்லது புத்திமான்களாகிய யோகிகளின் குலத்திலேனும் பிறக்கின்றான். இதுபோன்ற ஓர் பிறப்பு எதுவோ, அது, உண்மையில் உலகில் எய்தப் பெறுதல் மிகவும் அரியதாகும்.*

அல்லது செல்வந்தர்களின் குலத்திற்கு நேர் எதிரான வறுமையில் வாழும் புத்திமான்களான யோகிகளின் குலத்தில் பிறக்கின்றான். மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் செல்வந்தனின் இல்லத்தில் பிறப்பதை விட வறுமையில் வாழும் மதியிற் சிறந்த யோகியின் இல்லத்தில் பிறத்தல் மிக்க அரிதாகும்.

பின்வரும் காரணத்தினாலும்,

तत्र तं बुद्धिसंयोगं लभते पौर्वदेहिकम् ।
यतते च ततो भूयः संसिद्धौ कुरुनन्दन ॥ ४३॥

தத்ர தம் புத்திஸம்யோகம் லபதே பௌர்வதேஹிகம் ।
யததே ச ததோ பூய: ஸம்ஸித்தௌ குருநந்தன ॥ 43 ॥

*அங்கே (அவன்) முந்தைய உடலில் பெற்ற ஞானத்தின் தொடர்பு எய்தப் பெறுகின்றான். குருநந்தனா! சித்தி எய்துவதற்காக அவன் முன்பைவிட அதிகம் முயல்கிறான்.*

அங்கே - யோகிகளின் குலத்தில். முன்பைவிட அதிகமாக - முந்தையப் பிறப்பில் செய்த முயற்சியை விட அதிகமாக முயற்சி செய்கிறான்.

पूर्वाभ्यासेन तेनैव ह्रियते ह्यवशोऽपि सः ।
जिज्ञासुरपि योगस्य शब्दब्रह्मातिवर्तते ॥ ४४॥

பூர்வாப்யாஸேன தேனைவ ஹ்ரியதே ஹ்யவஶோ (அ)பி ஸ: ।
ஜிஜ்ஞாஸுர் அபி யோகஸ்ய ஶப்தப்ரஹ்மாதிவர்த்ததே ॥ 44 ॥

*முன்னைப் பழக்கத்தால் தன் வசமின்றியே அவன் இழுக்கப்படுகின்றான்; யோகத்தை அறிய விரும்புவோனுங் கூட சப்த பிரம்மத்தைக் கடந்து நிற்கிறான்.*

யோகத்தில் தவறியவன் தனது முந்தைய பிறவியின் பழக்கத்தின் வலிமையால் சித்தி என்னும் நிறைவின்னை நோக்கித் தன் வசமின்றியே இழுக்கப்படுகிறான். யோகப் பயிற்சியினால் உருவாக்கப்பட்ட மனப்பாங்கினை விட சக்திவாய்ந்த அதர்மம் முதலிய கர்மங்களை அவன் செய்யாதிருந்தால் பின்னர் அவன் யோகப் பயிற்சியால் உருவான மனப்பாங்கினால் இழுக்கப்படுகிறான். அவ்வாறின்றி அவன் வலிமையுடைய அதர்மமான செயல் ஏதேனும் செய்திருந்தானென்றால் அது யோகப் பயிற்சியால் உண்டாகும் மனப்பாங்கினை நிச்சயம் கீழ்மையுறச் செய்கின்றது. ஆயினும் அக்கர்மம் தீர்ந்து போனதும் யோகத்தினாலுண்டான மனப்பாங்கு தனது செயலைத் தானே செய்யத் தொடங்குகின்றது. அதாவது அது நெடுங்காலம் இருந்த போதிலும் அதற்கு அழிவு என்பது இல்லை. யுக்தியினால் யோகப்ரஷ்டன் என்பவன் துறவி என்றறிக. யோகத்தினை அறிந்து கொள்ள விரும்புபவனும் அதாவது யோக மார்க்கத்தில் செல்லும் அத்துறவியுங்கூட சப்தபிரம்மத்தை (வேதத்தில் கூறப்பட்டிருக்கும் கர்மத்தைச் செய்வதினாலுண்டாகும் பயனை) கடந்து நிற்கிறான். அதனால் யோகத்தை அறிந்து அதிலே உறுதியாக நின்று பயிற்சி செய்பவன் கர்மத்தையும் அதன் பயனையும் கடந்து நிற்கிறான் என்று கூறவும் வேண்டுமோ?

யோகியாயிருப்பது எதனால் சிறந்தது?

**प्रयत्नाद्यतमानस्तु योगी संशुद्धकिल्बिषः ।**
**अनेकजन्मसंसिद्धस्ततो याति परां गतिम् ॥ ४५॥**

**ப்ரயத்னாத் யதமானஸ்து யோகீ ஸம்ஶுத்தகில்பிஷ: ।**
**அனேகஜன்மஸம்ஸித்தஸ்ததோ யாதி பராம் கதிம் ॥ 45 ॥**

***ஊக்கத்தோடு முயலும் யோகியோ பாவம் நீங்கி பரிசுத்தனாய் பல பிறப்பில் பரிபக்குவம் பெற்று பின்னர் உயர்ந்த கதியை அடைகிறான்.***

ஊக்கத்தோடு முயல்பவன் அதாவது கடுமையாக முயற்சிப்பவன் என்று பொருளாகும். பாவங்கள் நீங்கப் பெற்ற ஞானியாகிய யோகி, பல்வேறு பிறவிகளில் சிறிது சிறிதாகச் சேர்த்த யோக மனப்பாங்குகளின் மொத்தச் சேர்க்கையினால் மெய்யறிவு பெற்று மேன்மையடைகிறான்.

அதனால்,

**तपस्विभ्योऽधिको योगी ज्ञानिभ्योऽपि मतोऽधिकः ।**
**कर्मिभ्यश्चाधिको योगी तस्माद्योगी भवार्जुन ॥ ४६॥**

**தபஸ்விப்யோ (அ)திகோ யோகீ ஜ்ஞானிப்யோ (அ)பி மதோ(அ)திக:।**
**கர்மிப்யஶ்சாதிகோ யோகீ தஸ்மாத்யோகீ பவார்ஜுன ॥ 46 ॥**

*தவஞ்செய்வோரைக் காட்டிலும் யோகி சிறந்தோன்; ஞானிகளிலும் அவன் சிறந்தோனாகக் கருதப்படுகிறான். கர்மிகளிலுங் கூட யோகி சிறந்தோனாவான் ஆதலால் அர்ஜுனா, நீ யோகி ஆகுக.*

ஞானம் - இங்கே நூலறிவு ஆகும். கர்மம் - அக்னி ஹோத்ரம் போன்ற காமங்கள.

**योगिनामपि सर्वेषां मद्गतेनान्तरात्मना ।**
**श्रद्धावान्भजते यो मां स मे युक्ततमो मतः ॥४७॥**

**யோகினாமபி ஸர்வேஷாம் மத்கதேனாந்தராத்மனா ।**
**ஶ்ரத்தாவான் பஜதே யோ மாம் ஸமே யுக்ததமோ மத: ॥ 47 ॥**

*எவன் நம்பிக்கையுடையவனாய் என்னிடம் ஒருமுகப்பட்ட உள்ளத்தோடு என்னைத் தொழுகின்றானோ அவன் யோகிகள் அனைவரினும் மேலானவன் என்பது எனது துணிபு.*

ருத்ரன், ஆதித்தன் போன்றோரைத் தியானிக்கும் எல்லா யோகிகளிலும் வாசுதேவனாகிய என்னிடம் மனதினை ஒருமுகப்படுத்தி நம்பிக்கையுடன் என்னை வழிபடுவோன் என்னால் யோகிகள் அனைவரினும் சிறந்தவனாகக் கருதப்படுகிறான்.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும் பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில், 'தியான யோகம்' என்னும் ஆறாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் ஏழு

## ஞான விஞ்ஞான யோகம்

பகவத் ' தை 6.47ல் ஒரு கேள்விக்கு இடம் வைத்தும், இது, இது அவருக்கு தொடர்புடைய உண்மை என்று உரைக்க விரும்பியும் ஸ்ரீபகவான் கூறலுற்றார்.

श्रीभगवानुवाच

मय्यासक्तमनाः पार्थ योगं युञ्जन्मदाश्रयः ।
असंशयं समग्रं मां यथा ज्ञास्यसि तच्छृणु ॥ १॥

*ஸ்ரீ பகவான் உவாச*

**மய்யாஸக்தமனா: பார்த்த யோகம் யுஞ்ஜன்மதாஶ்ரய: ।**
**அஸம்ஶயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச் ச்ருணு ॥ 1 ॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***பார்த்தா! என்னிடத்துப் பற்றிய மனத்தினனாய் என்னையேச் சார்ந்து யோகத்தில் நிலைநின்று ஐயமின்றி என்னை முழுதும் எவ்வாறு அறிவாயோ அதனைக் கேட்பாயாக.***

உறுதியுடைய மனத்தினால் பரமபுருஷ பகவானாகிய (அவர் பின்னால் விளக்கப்படுகிறார்) என்னைப் பற்றி, மனதினை ஒருமுகப்படுத்தும் யோகத்தைப் பயிற்சி செய்து என்னையே அடைக்கலம் கொள்கின்றான். எவனொருவன் மனித லட்சியத்தை எய்த விரும்புகின்றானோ அவன் அதனை எய்துவதற்குரிய வழிகளான அக்னிஹோத்ரம் போன்ற வேள்விகளையும், தவம் மற்றும் தானத்தை அடைக்கலம் கொள்கிறான். எனினும் இந்த யோகியோ என்னை மட்டுமே அடைக்கலமாகக் கொள்கின்றான். பிற வழிமுறைகளைப் புறக்கணித்து அவன் தனது மனதினை என் மீது மட்டுமே நிலைநிறுத்துகிறான். நான் கூறியவாறே நீயும், எனது கீர்த்தி, ஆற்றல், வலிமை, ஆளுமை போன்ற குணங்களுடன் கூடிய என்னை ஐயந்திரிபற முற்றிலும் அறியவாயாக. பகவான் இத்தன்மையுடையவர் என்னும் ஞானம் மெய்ஞ்ஞானமாகும்.

பகவானைப் பற்றிய அந்த ஞானம் விளக்கப்படுகின்றது :

ज्ञानं तेऽहं सविज्ञानमिदं वक्ष्याम्यशेषतः ।
यज्ज्ञात्वा नेह भूयोऽन्यज्ज्ञातव्यमवशिष्यते ॥ २॥

**ஜ்ஞானம் தே(அ)ஹம் ஸவிஜ்ஞானமிதம் வக்ஷ்யாம்யஶேஷத: ।**
**யஜ்ஜ்ஞாத்வா நேஹ பூயோ (அ)ன்யஜ் ஜ்ஞாதவ்யமவஶிஷ்யதே ॥ 2 ॥**

*எதனை அறிந்த பின்பு இங்கு மீண்டும் அறிய வேண்டியது வேறு ஒன்றும் மீதமிராதோ, இந்த விஞ்ஞானத்தோடு கூடிய ஞானத்தை நான் உனக்கு முற்றிலும் உரைக்கிறேன்.*

விஞ்ஞானத்தோடு (தனது அனுபவத்தோடு) கூடிய அந்த ஞானத்தினை நான் முழுவதும் எடுத்துரைப்பேன். கேட்பவன் கவனத்தை ஈர்ப்பதற்காக பகவான் அந்த ஞானத்தைப் புகழ்ந்துரைக்கின்றார். ஒரு முறை இதனை உணர்ந்து கொண்டால் மனித லட்சியத்தை அடைவதற்காக அறிய வேண்டிய வேறு பிற வழிகள் இங்கு மீதமிருப்பதில்லை. இதன் கருத்து என்னவென்றால் பகவானைப் பற்றிய உண்மை அறிந்தவன் எல்லாமறிந்தவன் ஆகின்றான் என்பதுவாம். சிறந்த பயனளிப்பதால் இந்த ஞானம் அடைதற்கு அரியதாகும்.

அது எப்படி? - கேட்பாயாக.

**मनुष्याणां सहस्रेषु कश्चिद्यतति सिद्धये**
**यततामपि सिद्धानां कश्चिन्मां वेत्ति तत्त्वत: ॥ ३॥**

**மனுஷ்யாணாம் ஸஹஸ்ரேஷு கஶ்சித் யததி ஸித்தயே**
**யததாமபி ஸித்தானாம் கஶ்சின்மாம் வேத்தி தத்த்வத: ॥ 3 ॥**

*மனிதர்கள் ஆயிரம் பேர்களில் ஒருவன் சித்தி பெற முயல்கின்றான். முயற்சியுடைய சித்தர் பலருள் ஒருவன் என்னை உண்மையில் அறிகின்றான்.*

பல்லாயிரம் மனிதர்களுள் ஒருவன் சித்தி பெற (ஞானம் பெற) முயல்கின்றான். சித்தி பெற முயல்பவர்கள் கூட சித்தர்களேயாவர். (ஞானமெய்தியவர்கள்தான்) அவர்களிலும் யாரோ ஒருவன் தான் என்னை உள்ளபடி அறிகின்றான்.

கேட்பவனின் ஆர்வத்தைத் தூண்டுவதன் மூலம் அவனது கவனத்தைத் தக்க வைத்துக் கொண்டு பகவான் கூறுகிறார்:

**भूमिरापोऽनलो वायु: खं मनो बुद्धिरेव च ।**
**अहंकार इतीयं मे भिन्ना प्रकृतिरष्टधा ॥ ४॥**

**பூமிராபோ(அ)னலோ வாயு: கம் மனோ புத்திரேவ ச**
**அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதிர் அஷ்டதா ॥ 4 ॥**

*என்னுடைய இந்த இயற்கையே நிலம், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம், மனம், புத்தி, அகங்காரம் என எட்டு வகையாகப் பிரிந்துள்ளது.*

நிலம் என்பது இங்கே நுண்ணிய மூலக் கூறினைக் குறிப்பிடுகிறதேயன்றி ஸ்தூலமான நிலத்தையன்று. ஏனெனில், 'இயற்கை எட்டு வகையாகப் பிரிந்துள்ளது' என்று குறிப்பிடப்பட்டிருக்கிறது. அது போன்றே நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் என்பவையும் நுணணிய மூலக் கூறினையேக் குறிப்பிடுகின்றன. ''மனம்' என்பது மனத்தின் காரணமாகிய அகங்காரத்தைக் குறிப்பிடுகின்றது. 'புத்தி' என்பது அகங்காரத்தின் காரணமாகிய மகத்தத்துவம் ஆகும். அகங்காரம் என்பது அறியாமையோடு கூடிய அவ்யக்தமாகும். நஞ்சு கலந்த உணவினையும் நஞ்சு என்றே சொல்வதுபோல ஆதிகாரணமான அவ்யக்தமும், அகங்காரத்தின் வாசனை உடையதால் அகங்காரம் என்றே அழைக்கப்படுகின்றது. மேலும் அனைத்தின் தூண்டு விசையாகவும் இந்த அகங்காரமே இருக்கின்றது. இவ்வுலகில் உண்மையில் அகங்காரமே எல்லாச் செயல்களுக்கும் காரணியாகக் காணப்படுகின்றது. இவ்வாறு விளக்கப்பட்ட எனது இயற்கையே கடவுளின் தெய்வீக சக்தியாகும். அது எட்டு பிரிவுகளை உடையது.

**अपरेयमितस्त्वन्यां प्रकृतिं विद्धि मे पराम्**
**जीवभूतां महाबाहो ययेदं धार्यते जगत् ॥५॥**

**அபரேயமிதஸ்த்வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம்**
**ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ॥ 5 ॥**

***உயர் தோள! ஆனால் இது கீழானதாகும். இதனிலும் வேறானதும் உயிர் வடிவமானதும் எதனால் இந்த உலகம் தாங்கப்படுகின்றதோ அதுவுமான எனது உயர்ந்த இயற்கையினை அறிவாயாக.***

இந்த இயற்கை தாழ்ந்தது, தூய்மையற்றது, தீமைகளை விளைவிப்பது, வாழ்க்கைபந்தத்தினை உடையது, இதற்கு மாறாக உயர்ந்த இயற்கையோ தூய்மையானது, எனது ஆத்மாவாக விளங்குவது, க்ஷேத்ரக்ஞனாக இருப்பது, அதனால் உயிர் தாங்கப்படுகின்றது. அதுவே இப்பிரபஞ்சத்தினுள் புகுந்து அதனைத் தாங்குகின்றது.

**एतद्योनीनि भूतानि सर्वाणीत्युपधारय ।**
**अहं कृत्स्नस्य जगतः प्रभवः प्रलयस्तथा ॥६॥**

**ஏதத்-யோனீனி பூதானி ஸர்வாணீதி உபதாரய ।**
**அஹம் க்ருத்ஸ்னஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரளயஸ் ததா ॥ 6**

*உயிர்கள் அனைத்திற்கும் இவையே பிறப்பிடம் என்று அறிந்துகொள். நான் எல்லா உலகிற்கும் உற்பத்தியாகவும், அழிவாகவும் இருக்கின்றேன்.*

க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்னும் உயந்த, தாழ்ந்த, இயற்கைகள் இரண்டும் உயிர்களின் கருவறையாக இருக்கின்ற காரணத்தினால், நானே இப்பிரபஞ்சத்தின் ஆதியும் அந்தமுமாகவும் இருக்கின்றேன். இந்த இரண்டு இயற்கைகளின் மூலம் முற்றுமுணர்ந்த ஈசுவரனாகிய நானே பிரபஞ்சத்திற்குக் காரணம்.

**मत्तः परतरं नान्यत्किञ्चिदस्ति धनञ्जय ।**
**मयि सर्वमिदं प्रोतं सूत्रे मणिगणा इव ॥७॥**

**மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய**
**மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ॥ 7 ॥**

*தனஞ்ஜயா ! என்னைக் காட்டிலும் உயர்ந்த பொருள் வேறு எதுவுமில்லை. நூலில் மணிகள் போல் இவையெல்லாம் என் மீது கோர்க்கப்பட்டிருக்கின்றன.*

பரமேசுவரனான என்னைக் காட்டிலும் இப்பிரபஞ்சத்திற்கு வேறு காரணம் எதுவுமில்லை. நூலிழையில் ஆடை நெய்யப்பட்டிருப்பது போன்றும், நூலில் மணிகள் கோர்க்கப் பட்டிருப்பது போன்றும் அனைத்து உயிர்களும், இப்பிரபஞ்சமும் என்னிடம் கோர்க்கப் பட்டிருக்கின்றன.

எத்தன்மையுடைய உம்மிடம் இவையெல்லாம் கோர்க்கப் பட்டிருக்கின்றன? என்றால் பதில் பின் வருமாறு:

**रसोऽहमप्सु कौन्तेय प्रभास्मि शशिसूर्ययोः ।**
**प्रणवः सर्ववेदेषु शब्दः खे पौरुषं नृषु ॥८॥**

**ரஸோ(அ)ஹமப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி ஶஶி ஸூர்யயோ : ।**
**ப்ரணவ : ஸர்வவேதேஷு ஶப்த : கே பௌருஷம் ந்ருஷு ॥ 8 ॥**

*குந்திமைந்த ! நான் நீரில் சுவை; சந்திரசூரியர்களிடத்து ஒளி; வேதங்கள் அனைத்துள்ளும் ஓம்காரப் பிரணவம்; வானில் ஒலியாகவும், மனிதர்களிடம் ஆண்மையாகவும் இருக்கின்றேன்.*

நீரின் சாரமாக இருக்கும் சுவை எதுவோ, அச்சுவையாக நான் இருக்கின்றேன். சவையான என்மீது நீர் கோர்க்கப் பட்டிருக்கிறது என்பது கருத்து. பின் வருபவற்றையும் அங்ஙனமே அறிந்து கொள்க. நீரில் சுவையாக நான் இருப்பது போல் சந்திரனிடத்தும், சூரியனிடத்தும் ஒளியாக இருக்கின்றேன். எல்லா வேதங்களினுள்ளும் ஓம்காரமாக இருக்கின்றேன். ஓம்காரமாக இருக்கும் என் மீது வேதங்கள் அனைத்தும் கோர்க்கப்

பட்டிருக்கின்றன. அதுபோல் வானின் சாரம் அதன் ஒலியாகும். ஒலியாக விளங்கும் என் மீது வானம் கோர்க்கப்பட்டிருக்கின்றது. அதேபோன்று மனிதன் என்று கூறப்படுவற்குக் காரணமான மானிடத்தன்மையாக நான் இருக்கின்றேன். மானிடத்தன்மையாக நான் இருப்பதினால் மனிதர்கள் என் மீது கோர்க்கப்பட்டிருக்கின்றனர்.

**पुण्यो गन्धः पृथिव्यां च तेजश्चास्मि विभावसौ ।**
**जीवनं सर्वभूतेषु तपश्चास्मि तपस्विषु ॥९॥**

**புண்யோ கந்த : ப்ருதிவ்யாம் ச தேஜஶ்சாஸ்மி விபாவஸௌ ।**
**ஜீவனம் ஸர்வபூதேஷு தபஶ்சாஸ்மி தபஸ்விஷு ॥ 9॥**

***மண்ணில் நன்மணமாகவும், தீயில் ஒளியாகவும், எல்லா உயிர்களிலும் உயிர்ப்பாகவும், தவஞ்செய்வோருள் தவமாகவும் இருக்கின்றேன்.***

மண்ணில் நன்மணமாக நானே இருக்கின்றேன். நன்மணமாக நான் விளங்குவதால் நிலம் என்மீது கோர்க்கப்பட்டிருக்கின்றது. இயற்கை யாகவே நாற்றம் நற்றன்மையுடையதாகும். நீர் போன்றவற்றிலுள்ள சுவை போன்ற நற்றன்மைகளை உணர்த்துவதற்காகவே மண்ணிலுள்ள மணமும் இங்கு எடுத்துக்காட்டப்படுகின்றது. ஆனால் நாற்றம் போன்றவற்றிலுள்ள தீய தன்மையானது, இவ்வுலகிலுள்ள தனிப்பட்ட ஆத்மாக்களின் அறியாமை மற்றும் தீவினையின் பாதிப்பினால், ஒரு பூதம், சில பல பூதங் களோடு கலப்பதினால் உண்டாகிறது. மேலும் நான் தீயில் ஒளியாகவும் இருக்கின்றேன். அதுபோல் எல்லா உயிர்களும் உயிர் வாழ்வதற்குத் தேவையான உயிர்ப்பாகவும் நான் இருக்கின்றேன். தவஞ்செய்வோர்களிடம் நான் தவமாக இருக்கின்றேன். தவமாக இருக்கும் என்னிடம் தவஞ்செய்வோர் கோர்க்கப்பட்டிருக்கின்றனர்.

**बीजं मां सर्वभूतानां विद्धि पार्थ सनातनम् ।**
**बुद्धिर्बुद्धिमतामस्मि तेजस्तेजस्विनामहम् ॥१०॥**

**பீஜம் மாம் ஸர்வபூதானாம் வித்தி பார்த்த ஸநாதனம்**
**புத்திர் புத்திமதாமஸ்மி தேஜஸ்தேஜஸ்விநாமஹம் ॥ 10॥**

***பார்த்தா ! என்னை அனைத்து உயிர்களிடத்தும் இருக்கும் விதையென்று அறிவாயாக. அறிஞர்களின் அறிவாகவும், வீரர்களின் வீரமாகவும் நானே இருக்கின்றேன்.***

- முளைத்தற்குக் காரணமாயிருப்பது. அறிவு - அந்தக் கரணத்தின் (மனதின்) பகுத்தறியும் சக்தியாகும். வீரம் - தான் வெல்லப்படாது, பிறரை வெற்றிகொள்ளும் திறமை.

**बलं बलवतां अस्मि कामरागविवर्जितम् ।**
**धर्माविरुद्धो भूतेषु कामोऽस्मि भरतर्षभ ॥११॥**

**பலம் பலவதாம் அஸ்மி காமராகவிவர்ஜிதம்**
**தர்மாவிருத்தோ பூதேஷு காமோ(அ)ஸ்மி பரதர்ஷப ॥ 11॥**

*பரதகுலத்திற் சிறந்தோனே! வல்லவரிடத்து ஆசையும் பற்றுமில்லாத வலிமையாகவும் இருக்கின்றேன். உயிர்களிடம் தர்மத்திற்குப் புறம்பாயிராத ஆசையாக இருக்கின்றேன்.*

ஆசை - புலன்களுக்குக் கைவசமாகப் பொருட்களின் மீது உண்டாவது. பற்று - கைவசப்பட்டப் பொருட்களிடம் காணப்படும் இன்பம். இவையிரண்டுமற்று, உடல் முதலியவற்றைத் தாங்கும் வலிமையாக நான் இருக்கின்றேன். மாறாக உயிர்களின் ஆசைக்கும், பற்றுக்கும் காரணமாக இருப்பது எதுவோ அது நான் அன்று. உயிர்களிடம் தர்மத்திற்குப் புறம்பாயிராத ஆசை, உதாரணமாக, உடலினை ஓம்புதற்குத் தேவையான உணவு உண்ணுதல், நீர் பருகுதல் போன்றவற்றிற்கான ஆசையாக நான் இருக்கின்றேன்.

மேலும்,

**ये चैव सात्त्विका भावा राजसास्तामसाश्च ये ।**
**मत्त एवेति तान्विद्धि न त्वहं तेषु ते मयि ॥१२॥**

**யே சைவ ஸாத்த்விகா பாவா ராஜஸாஸ்தாமஸாஶ் சயே ।**
**மத்த ஏவேதி தான் வித்தி ந த்வஹம் தேஷு தே மயி ॥ 12॥**

*மேலும் சாத்விகமானப் பொருட்கள் எவையோ, ராஜஸமும், தாமஸமுமானப் பொருட்கள் எவையோ அவை என்னிடமிருந்தே தோன்றுகின்றன என்று அறிந்துகொள். ஆனால் நான் அவற்றுள் இல்லை. அவை என்னுள் இருக்கின்றன.*

சாத்விகம் - சத்துவகுணத்தாலானது. ராஜஸம் - ரஜோ குணத்தாலானது. தாமஸம் - தமோகுணத்தாலானது. உயிர்களின் கர்மத்தின் பயனாகத் தோன்றுமிவையெல்லாம் என்னிடமிருந்தே தோன்றுகின்றனவென்று அறிந்து கொள். அவை என்னிடமிருந்து தோன்றியவையாக இருந்த போதிலும் உயிர்களைப்போல் நான் அவற்றைச் சார்ந்து அவற்றின் வசமாவதில்லை. மாறாக அவை என்னைச் சார்ந்து எனது வசமாகின்றன.

இயற்கையாகவே நித்தியமாகவும், தூய்மையாகவும், புத்தியாகவும், அனைத்து உயிர்களின் ஆத்மாவாகவும், நிர்க்குணமாகவும், பிறப்பு

இறப்புடைய வாழ்க்கையின் வித்தைச் சுடுவதற்குக் காரணமாகவும், பரமேசுவரராகத் தாம் இருந்த போதிலும் இவ்வுலகம் தம்மை அறியவில்லையே என்று பகவான் கழிவிரக்கங்கொள்கிறார். உலகின் இவ்வறியாமைக்குக் காரணம் என்ன ? - பதில் பின்வருமாறு :

**त्रिभिर्गुणमयैर्भावैरेभिः सर्वमिदं जगत् ।**
**मोहितं नाभिजानाति मामेभ्यः परमव्ययम् ॥१३॥**

**த்ரிபிர்குணமயைர்பாவைரேபி: ஸர்வமிதம் ஜகத்**
**மோஹிதம் நாபிஜானாதி மாமேப்ய: பரமவ்யயம் ॥ 13॥**

***இவ்வுலகமெல்லாம் முக்குணங்களாலாகியப் பொருட்களால் மயக்கப்பட்டிருப்பதால், இவற்றினின்று வேறாகவும், மாறுபாடின்றியும் இருக்கும் என்னை அறிவதில்லை.***

விருப்பு, வெறுப்பு, மயக்கம் போன்ற பொருட்களால் இவ்வுலகிலுள்ள உயிர்களனைத்தும் மயக்கப்பட்டிருப்பதால் - அதாவது பகுத்தறியும் திறனற்று இருப்பதால் - இக்குணங்களுக்கெல்லாம் அப்பாற்பட்டவனாக அவை என்னை அறியத் தவறுகின்றன. மாறுபாடற்றவன் - அனைத்து உயிர்களுக்கும் ஏற்படும் பிறப்பு இறப்பு போன்றவை இல்லாதவன்.

முக்குணவடிவமான, ன் தெய்வமாயையைக் கடப்பது எப்படி? கேட்பாயாக.

**दैवी ह्येषा गुणमयी मम माया दुरत्यया**
**मामेव ये प्रपद्यन्ते मायामेतां तरन्ति ते ॥१४॥**

**தைவீ ஹி ஏஷா குணமயீ மம மாயா துரத்யயா ।**
**மாம் ஏவ யே ப்ரபத்யந்தே மாயாமேதாம் தரந்தி தே ॥ 14 ॥**

***முக்குணங்களாலாகிய இத்தைவமாயையானது கடத்தற்கரியது. எவர்கள் என்னைச் சரணடைகின்றார்களோ அவர்கள் இம்மாயையினைக் கடக்கின்றனர்.***

முக்குணங்களாலாகிய இம்மாயை எனைச் சார்ந்ததாகும். இது கடத்தற்கரியது. இவ்வாறிருப்பதினால் எவர்கள் அனைத்துக் கர்மங்களையும் துறந்து, மாயையின் அதிபதியாகவும், அவர்களின் ஆத்மாவாகவும் விளங்கும் என்னைச் சரணடைகின்றார்களோ, அவர்களே உயிர்களை மயக்கும் மாயையினை கடக்கின்றார்கள். அவர்கள் பிறப்பு இறப்புடைய வாழ்க்கையினின்று விடுதலை பெறுகின்றனர் என்று பொருளாகும்.

உம்மைச் சரண்புகுந்தால் மாயையினைக் கடக்கலாம் எனில் உலகத்தார் ஏன் அவ்வாறு செய்வதில்லை? என்றால் பதில் பின்வருமாறு :

न मां दुष्कृतिनो मूढा: प्रपद्यन्ते नराधमा: ।
माययापहृतज्ञाना आसुरं भावमाश्रिता: ॥ १५॥

ந மாம் துஷ்க்ருதினோ மூடா: ப்ரபத்யந்தே நராதமா: ।
மாயயா(அ)பஹ்ருதஜ்ஞானா ஆஸுரம் பாவமாஶ்ரிதா: ॥ 15॥

*தீமைசெய்யும் மூடர்களும், மனிதரில் கடைப்பட்டாரும், மாயையால் ஞானமழிந்தோரும், அசுரத்தன்மைப்பற்றி நிற்போரும், என்னைச் சரண்புகார்.*

என்னை - நாராயணனாகிய என்னை. அசுரத்தன்மை - இம்சை, பொய், முதலானத் தன்மைகள்.

இதற்கு மாறாக நல்வினையுடைய மனிதரிற் சிறந்தோர்,

चतुर्विधा भजन्ते मां जना: सुकृतिनोऽर्जुन ।
आर्तो जिज्ञासुरर्थार्थी ज्ञानी च भरतर्षभ ॥ १६॥

சதுர்விதா பஜந்தே மாம் ஜனா: ஸுக்ருதினோ(அ)ர்ஜுன ।
ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுர் அர்த்தார்த்தி ஜ்ஞானி ச பரதர்ஷப ॥ 16॥

*பரதகுலத்தில் சிறந்த அர்ஜுனா ! துன்புற்றோன், ஞானத்தை நாடுவோன், செல்வத்தை நாடுவோன், ஞானி என நால்வகையான நற்செய்கையுடைய மக்கள் என்னை வழிபடுகின்றனர்.*

நற்செய்கையுடைய - நல்வினையுடைய, புண்ணியமுடைய. துன்புற்றோன் - துன்பத்திற்காளானோன், திருடர்கள், புலி, நோய் முதலியவற்றால் தாக்கப்பட்டோன். ஞானம் நாடுவோன் - பகவானுடைய மெய்ம்மையினை அறிய விரும்புவோன். செல்வத்தை நாடுவோன் - பொருள்களை அடைய விரும்புவோன். ஞானி - விஷ்ணுவின் மெய்ம்மையினை அறிந்தவன்.

तेषां ज्ञानी नित्ययुक्त एकभक्तिर्विशिष्यते ।
प्रियो हि ज्ञानिनोऽत्यर्थमहं स च मम प्रिय: ॥ १७॥

தேஷாம் ஜ்ஞானீ நித்யயுக்த ஏகபக்திர்விஶிஷ்யதே ।
ப்ரியோ ஹி ஜ்ஞானினோ(அ)த்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய: ॥ 17॥

*அவர்களுள் ஒன்றிலேயே பக்தியுடையவனாய் எப்பொழுதும் யோகத்தில் நிலைநிற்கும் ஞானி மேலோனாகிறான். உண்மையில் நான் ஞானிகளுக்கு மிகவும் இனியவன். ஞானியோ எனக்கு மிகவும் இனியவனாவான்.*

இந்நால்வருள்ளும் மெய்ம்மையுணர்ந்த ஞானி எப்போதும் உறுதியுடையவனாக இருக்கிறான். தான் வழிபடுவதற்கு வேறொன்றும் இல்லையெனக் கண்டு, ஒன்றிலேயே பக்தியுடையவனாக இருக்கிறான். இவ்வாறு ஒன்றினையே பற்றித் தொழுபவன் மற்றெல்லோரையும் விட சிறந்தவனாக இருக்கிறான். நான் அவனுடைய ஆத்மாவாக இருத்தலின் நான் ஞானிக்கு மிகவும் இனியவனாக இருக்கின்றேன். ஒவ்வொருவனுக்கும் அவனது ஆத்மா இனிமையானதென்பது உலகினர் அனைவரும் அறிந்த உண்மையன்றோ. ஆகையால், ஞானியின் ஆத்மாவாக இருக்கும் வாசுதேவன் ஞானிக்கு இனியவர் ஆவார். அந்த ஞானியும் எனது ஆத்மாவாக இருக்கின்றான் ஆதலினால் அவனும் எனக்கு மிக மிக இனியவனே.

அவ்வாறெனில் துன்புற்றோன் முதலிய மூவரும் வாசுதேவருக்கு இனியவரல்லரோ ? எனில் அவ்வாறன்று. பிறகு?

**उदारा: सर्व एवैते ज्ञानी त्वात्मैव मे मतम् ।**
**आस्थित: स हि युक्तात्मा मामेवानुत्तमां गतिम् ॥१८॥**

**உதாரா: ஸர்வ ஏவைதே ஜ்ஞானி த்வாத்மைவ மே மதம் ।**
**ஆஸ்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் கதிம் ॥ 18॥**

***இவர்கள் அனைவரும் சிறந்தவரே ஆனால் ஞானியோ நானே என்பது எனது துணிபு. உண்மையில் யோகத்தில் நிலைநிற்கும் அவன் மிகச்சிறந்த அடைக்கலமாக என்னையே நாடுகின்றான்.***

இவர்கள் எல்லோரும் உண்மையில் உயர்ந்தவர்களே. முதல் மூவர்களும் கூட எனக்கு இனிமையானவர்களே. எனது எந்தவொரு பக்தனும் வாசுதேவனாகிய எனக்கு இனியனல்லனாக இருக்கமுடியாதன்றோ. ஆனால் ஞானியோ எனக்கு மிகவும் இனியனாவான். இதுவே வேறுபாடு. ஏன் ? ஏனெனில் ஞானி என்னிலிருந்து வேறுபடாது, நானாகவே இருக்கின்றான். இது எனது கொள்கையாகும். ஞானி ''நானே பகவான் வாசுதேவன், வேறு அல்லேன்'' என்னும் ஞானத்தின் சிகரத்தில் ஏற முயல்கிறான். இந்த ஞானத்தில் ஒரு முகப்பட்ட மனத்தினனாய், தான் அடைய வேண்டிய ஈடு இணையற்ற லட்சியமாக பரப்பிரம்மமாகிய என்னையே அடையக் கடுமையாக முயற்சிக்கின்றான்.

மீண்டும் ஞானி போற்றப்படுகிறான்,

**बहूनां जन्मनामन्ते ज्ञानवान्मां प्रपद्यते ।**
**वासुदेव: सर्वमिति स महात्मा सुदुर्लभ: ॥१९॥**

**பஹூனாம் ஜன்மனாமந்தே ஜ்ஞானவான்மாம் ப்ரபத்யதே**
**வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ॥ 19॥**

*பல பிறவிகளின் இறுதியில் ஞானி "எல்லாம் வாசுதேவனே என்று உணர்ந்து நேரே என்னை அடைகிறான். இத்தகைய மகாத்மா கிடைத்தற்கரியவன்.*

பல்வேறு பிறவிகளில் ஆத்மஞானம் வேண்டி முயற்சித்த ஞானி, அந்த ஞானம் எய்தப் பெற்றவுடன் அனைவரின் ஆத்மாவாக விளங்கும் வாசுதேவனாகிய என்னை அடைகிறான். எவ்வாறு ? "எல்லாம் வாசுதேவரே" என்று உணர்ந்து அனைவரின் ஆத்மாவான நாராயணனாகிய என்னை அடைகிறான். அவன் மகாத்மா ஆவான். அவனுக்கு ஈடாகவோ இணையாகவோ எவருமிலர். அதனால் அவன் கிடைப்பதற்கு அருமையானவன். பகவத்கீதையில் "மனிதர்கள் ஆயிரம் பேர்களில்" (7-3) என்று குறிப்பிடப்பட்டிருக்கிறதன்றோ.

"எல்லாமே வாசுதேவராகிய ஆத்மாதான்" என்று அறிந்துகொள்ளாமைக்குக் காரணம் கூறப்படுகின்றது :

**कामैस्तैस्तैर्हृतज्ञाना: प्रपद्यन्तेऽन्यदेवता: ।**
**तं तं नियममास्थाय प्रकृत्या नियता: स्वया ॥२०॥**

**காமைஸ்தைஸ்தைர்ஹ்ருதஜ்ஞானா: ப்ரபத்யந்தே(அ)ன்யதேவதா:।**
**தம் தம் நியமமாஸ்தாய ப்ரக்ருத்யா நியதா: ஸ்வயா ॥ 20॥**

*அந்த அந்த ஆசைகளால் அறிவிழந்தவர்கள், அந்தந்த முறைகளைக் கைக்கொண்டு தத்தம் இயற்கையால் கட்டுண்டு பிற தெய்வங்களை வழிபடுகின்றனர்.*

மக்கள், மாடு, சொர்க்கம் போன்ற பொருள்களின் மீதான அவர்களின் ஆசை, அவர்களது பகுத்தறிவை இழக்கச் செய்வதால், அவர்கள் ஆத்மாவாகிய வாசுதேவனை விடுத்துப் பிற தேவதைகளை வழிபடுகின்றனர். அவர்கள் இத்தேவதைகளை வழிபடுவதற்கு சில குறிப்பிட்ட நியம நிஷ்டைகளை மேற்கொள்கின்றனர். இம்முறைகளை அவர்கள், தமது முந்தைய பிறவிகளின் வாசனைகளால் பெற்ற இயற்கையினால் கட்டுண்டு செய்கின்றனர்.

இவ்வாறான ஆசையுடையவர்களுள்,

**यो यो यां यां तनुं भक्त: श्रद्धयार्चितुमिच्छति ।**
**तस्य तस्याचलां श्रद्धां तामेव विदधाम्यहम् ॥२१॥**

**யோ யோ யாம் யாம் தனும் பக்த: ஶ்ரத்தயார்ச்சிதுமிச்சதி ।**
**தஸ்ய தஸ்யாச்சலாம் ஶ்ரத்தாம் தாமேவ விததாம்யஹம் ॥ 21॥**

*எவனெவன் எந்தெந்த வடிவத்தை நம்பிக்கையுடன் பக்தனாக வழிபட விரும்புகின்றானோ, அவனவனுக்கு அந்த நம்பிக்கையை நான் அசையாததாகச் செய்கின்றேன்.*

எவனெவன் எந்தெந்த தேவதா மூர்த்தத்தை நம்பிக்கையோடும், பக்தியோடும் வழிபட விரும்புகின்றானோ, அத்தெய்வத்தை வழிபடுவதில் அவனவன் கொண்டிருக்கும் நம்பிக்கையை நான் உறுதியுடையதாகச் செய்கிறேன்.

எவனொருவன் எந்த நம்பிக்கையோடு, இயற்கையாகவே தலைப்பட்டு ஒரு குறிப்பிட்ட தேவதையை வழிபட விரும்புகின்றானோ,

**स तया श्रद्धया युक्तस्तस्याराधनमीहते ।**
**लभते च ततः कामान्मयैव विहितान्हि तान् ॥ २२॥**

**ஸ தயா ஸ்ரத்தயா யுக்தஸ்தஸ்யாராதனமீஹதே**
**லபதே ச தத: காமான்மயைவ விஹிதான்ஹி தான் ॥ 22॥**

*அவன் அந்த நம்பிக்கையோடு கூடினவனாய் அதனுடைய (அத்தேவதையின்) பூஜையை மேற்கொள்கிறான்; மேலும் என்னால் அளிக்கப்பட்ட அந்த விரும்பிய பொருட்களை, அதனிடமிருந்தும் பெறுகிறான்.*

அவன் என்னால் விதிக்கப்பட்ட அந்த நம்பிக்கையுடையவனாக அந்தத் தெய்வ மூர்த்தத்தை வழிபடுகிறான். கர்மபலன்களின் பாகுபாடுகளை நன்கறிந்த முற்றுமுணர்ந்த பரமேசுவரனாகிய என்னால் விதிக்கப்பட்ட அவனது விருப்பத்திற்குரிய பொருட்களை அவன் அத்தேவதையிடமிருந்து பெறுகிறான். அந்த விருப்பங்கள் பகவானால் விதிக்கப்பட்டவையாதலால், அவற்றை அவன் அடைவது உறுதி என்று பொருளாகும்.

"ஹிதான்" என்னும் வார்த்தைக்கு "நலம்பயக்கும்" என்று பொருள் கொண்டால், "நலம் பயக்கும் விருப்பம்" என்பதை ஓர் உருவகமாகத்தான் கொள்ள முடியும். ஏனெனில் விருப்பம் எதுவும் உண்மையில் நலம்பயப்பதில்லையன்றோ.

அவர்கள் விவேகமற்றவர்களாகவும், முற்றிலும் ஆசையுடையவர்களாகவும், தற்காலிகப் பயன்களை அடைவதற்கான வழியிலே முயற்சியுடையவர்களாகவும் இருக்கின்றனர். ஆதலால்,

**अन्तवत्तु फलं तेषां तद्भवत्यल्पमेधसाम् ।**
**देवान्देवयजो यान्ति मद्भक्ता यान्ति मामपि ॥ २३॥**

**அந்தவந்து பலம் தேஷாம் தத் பவத்யல்பமேதஸாம்**
**தேவான் தேவயஜோ யாந்தி மத்பக்தா யாந்தி மாமபி ॥ 23॥**

*ஆனால் அற்பமதியுடைய அன்னோர்க்கு அப்பயன் முடிவுடையதாம். தேவர்களை வழிபடுவோர் தேவர்களை அடைகின்றனர். என் பக்தர்களோ என்னை அடைகின்றனர்.*

ஆனால் சிறுமதியுடைய இவர்கள் அடையும்பயன் முடிவுடையது, நிரந்தரமற்றது. இவ்விருவகையான வழிபாடுகளிலும் முயற்சி ஒன்றாகவே இருந்தபோதிலும், இறுதியற்ற, அழிவற்றப்பயனை வேண்டி அவர்கள் என்னை அடைவதில்லை. அந்தோ, பரிதாபம் ! இவ்வாறு பகவான் பிற தேவதைகளை வழிபடுவோர் மீது கழிவிரக்கங்கொள்கிறார்.

எக்காரணத்தால் அவர்கள் என்னை அடைவதில்லை?

- என்றால், பதில் பின்வருமாறு :

**अव्यक्तं व्यक्तिमापन्नं मन्यन्ते मामबुद्धयः ।**
**परं भावमजानन्तो ममाव्ययमनुत्तमम् ॥ २४॥**

**அவ்யக்தம் வ்யக்திமாபன்னம் மன்யந்தே மாமபுத்தய: ।**
**பரம் பாவமஜானந்தோ மமாவ்யயமனுத்தமம் ॥ 24॥**

***புத்தியற்றோர் எனது உயர்ந்த, மாறுதலற்ற நிலையை அறியாது, தோன்றுதலில்லாத என்னைத் தோற்றத்தைப் பெற்றவனாகக் கருதுகின்றனர்.***

எனது உயர்ந்த பரமாத்ம வடிவை அறியாததினால் அறிவீனர்கள், நித்தியமாக இருக்கும் பகவானாக நான் இருந்தபோதிலும், தோற்றமில்லாதிருக்கும் என்னை தோற்றமுடையவனாகக் கருதுகின்றனர்.

அவர்களின் அறியாமைக்கு என்ன காரணம்?

- பதில் பின்வருமாறு :

**नाहं प्रकाशः सर्वस्य योगमायासमावृतः**
**मूढोऽयं नाभिजानाति लोको मामजमव्ययम् ॥ २५॥**

**நாஹம் ப்ரகாஶ: ஸர்வஸ்ய யோக-மாயா-ஸமாவ்ருத:**
**மூடோ(அ)யம் நாபிஜானாதி லோகோ மாமஜமவ்யயம் ॥ 25॥**

***யோகமாயையினால் மூடப்பட்டுள்ள நான் எல்லோருக்கும் விளங்குவதில்லை. மதியற்ற இவ்வுலகம் பிறப்பும் முடிவும் அற்றவனாக என்னை அறிவதில்லை.***

நான் எல்லோருக்கும் வெளிப்படையாகப் புலனாவதில்லை; அதாவது எனது பக்தர்களுக்கு மட்டுமே நான் புலனாகின்றேன். யோகம் என்பது முக்குணங்களின் சேர்க்கையாகும். அதுவே மாயை எனப்படும். அந்த யோகமாயையினால் நான் பிறர் காணாதவாறு மறைக்கப்பட்டிருக்கின்றேன். அதனால் மயக்கமுற்றிருக்கும் இவ்வுலகம் பிறப்பு இறப்பு அற்றவனாக என்னை அறிவதில்லை.

எந்த யோக மாயையின் மறைத்தலால் இந்த உலகம் என்னை அறியவில்லையோ, அந்த யோகமாயை என்னைச் சார்ந்தது ஆதலினால் அது எனது அறிவைத் தடுப்பதில்லை. ஒரு மந்திரவாதியின் மந்திர வித்தை அவனை மயக்குவதில்லை. அதுபோன்றே இதுவுமாகும்.

அவ்வாறே,

**वेदाहं समतीतानि वर्तमानानि चार्जुन ।**
**भविष्याणि च भूतानि मां तु वेद न कश्चन ॥२६॥**

**வேதாஹம் ஸமாதீதானி வர்த்தமானானி சார்ஜுன ।**
**பவிஷ்யாணி ச பூதானி மாம் து வேத ந கஶ்சன ॥ 26॥**

***அர்ஜுனா! சென்றன, நிகழ்வன, இனிவருவனவாகியப் பொருள்களை நான் அறிவேன். ஆனால் என்னை ஒருவனும் அறிவதில்லை.***

என்னை அடைக்கலமாகக் கொண்டு என்னையே வழிபடும் எனது பக்தனைத் தவிர வேறு எவனும் என்னை அறிவதில்லை. எனது உண்மை நிலையினை அறியாததினால் அவர்கள் என்னை வழிபடுவதில்லை.

மேலும் பிறக்கின்ற எல்லா உயிர்களும் எனது உண்மை நிலையை அறியவிடாது எதனால் தடுக்கப்படுகின்றனர்? பதில் பின்வருமாறு:

**इच्छाद्वेषसमुत्थेन द्वन्द्वमोहेन भारत ।**
**सर्वभूतानि सम्मोहं सर्गे यान्ति परन्तप ॥२७॥**

**இச்சாத்வேஷஸமுத்தேன த்வந்த்வமோஹேன பாரத ।**
**ஸர்வபூதானி ஸம்மோஹம் ஸர்கே யாந்தி பரந்தப ॥ 27॥**

***பகைவர்களைச் சுடும் பாரத! பிறக்கும்போதே எல்லா உயிர்களும் விருப்பு வெறுப்பினால் உண்டாகும் இருமை மயக்கத்தால் மயங்கிவிடுகின்றன.***

விருப்பு வெறுப்பினால் உண்டாகும் எதனால்? என்றால் இருமை மயக்கத்தால் என்று கூறுகிறார். இந்த இருமை என்பது குளிர், வெப்பம் போல ஒன்றிற்கொன்று எதிரான இன்ப துன்பங்களையும், அவற்றின் காரணங்களையும் பற்றி வருபவையாகவும், உரிய காலத்தில் எல்லா உயிர்களையும் பாதிப்பவையாகவும் இருக்கின்றன. இவையே இருமைகள் என்னும் சொல்லால் அழைக்கப்படுகின்றன. இன்பம், துன்பம் மற்றும் இவற்றின் காரணங்களினால் விருப்பு வெறுப்புக்கள் தோன்றும் பொழுது அனைத்து உயிர்களின் அறிவையும் தம் வயப்படுத்திக் கொண்டு, மயக்கத்தினை உண்டு பண்ணுகின்றன. அந்த மயக்கம், ஆத்மாவான பரம

மெய்ப் பொருளைப் பற்றிய ஞானத்தைத் தடை செய்கின்றன. விருப்பு வெறுப்புக்களால் பற்றப்பட்ட சித்தத்தினையுடையவனுக்குப் புறத்தேயுள்ள பொருள்களைப் பற்றிய ஞானம் கூட உண்டாவதில்லையென்றால், எய்துவதற்கரிய உள்ளே இருக்கும் ஆத்மாவைப் பற்றிய ஞானம் மயக்கத்தின் பிடியில் சிக்கியுள்ள சித்தத்தை உடையவனிடம் உண்டாகாது என்று கூறவும் வேண்டுமோ? ஆதலால் பரதகுலத் தோன்றலே! இருமை மயக்கத்தால் எல்லா உயிர்களும் பிறப்பிலேயே பாதிக்கப்படுகின்றன. பிறக்கும் உயிர் அனைத்தும் மயங்கியே பிறக்கின்றன என்பது கருத்து. இருமை மயக்கத்தால் அறிவு தடை செய்யப்பட்டுள்ள உயிர்கள் எல்லாம், அவற்றின் ஆத்மாவான என்னை அறிவதில்லை. அதனால் தமது ஆத்மாவாக என்னைத் தொழுவதில்லை.

பிறகு, இருமை மயக்கம் தெளிந்து, உம்மைத் தமது ஆத்மாவாக அறிந்து கொண்ட யார், சாத்திரங்களில் கூறியுள்ளபடி உம்மைத் தொழுகின்றார்? இதோ பதில்:

**येषां त्वन्तगतं पापं जनानां पुण्यकर्मणाम् ।**
**ते द्वन्द्वमोहनिर्मुक्ता भजन्ते मां दृढव्रताः ॥२८॥**

**ஏஷாம் த்வந்தகதம் பாபம் ஜனானாம் புண்யகர்மணாம் ।**
**தே த்வந்தமோஹநிர்முக்தா பஜந்தே மாம் த்ருடவ்ரதா: ॥ 28॥**

*ஆனால் நல்வினையுடைய எந்த மனிதர்களுக்கு பாவம் அழிவுற்றதோ அவர்கள் இருமை மயக்கந் தீர்ந்து உறுதியான விரதமுடையோராய் என்னை வழிபடுகின்றனர்.*

எவர்களுடைய பாவங்கள் தீர்ந்து போயினவோ, அவர்கள் இருமை மயக்கம் நீங்கி பரமாத்மாவான என்னை உறுதியுடன் வழிப்படுகின்றனர். "பரம் பொருளின் உண்மை இதுவே, வேறு அல்ல" என்னும் ஞானம் வாய்க்கப் பெற்று துறவு நெறியினை உறுதியுடன் பின்பற்றுபவர்கள் 'த்ருடவிரதர்கள்' ஆவர்.

எந்த நோக்கத்திற்காக அவர்கள் வழிபடுகின்றனர்? - பதில் பின்வருமாறு:

**जरामरणमोक्षाय मामाश्रित्य यतन्ति ये ।**
**ते ब्रह्म तद्विदुः कृत्स्नमध्यात्मं कर्म चाखिलम् ॥२९॥**

**ஜராமரணமோக்ஷாய மாமாஶ்ரித்ய யதந்தி யே ।**
**தே ப்ரஹ்ம தத் விது: க்ருத்ஸ்னமத்யாத்மம் கர்ம சாகிலம் ॥ 29॥**

*மூப்பினின்றும் மரணத்தினின்றும் விடுபடுவதற்காக என்னை அடைக்கலம் கொண்டு எவர்கள் முயற்சிக்கின்றார்களோ அவர்கள் அந்த*

*பிரம்மத்தையும் ஆத்ம ஞானம் முழுவதையும் அனைத்துக் கர்மங்களையும் அறிகின்றனர்.*

மூப்பும் இறப்பும் நீங்குதற்காக எவர்கள் பரமேசுவரனான என்னை அடைக்கலம் கொண்டு, என்னிடம் ஒருமுகப்பட்ட மனத்தினராய் முயற்சிக்கின்றார்களோ, அவர்கள் பரப்பிரம்மத்தை அறிகின்றனர்; உள்ளிருக்கும் ஆத்மாவைப் பற்றிய உண்மை அறிகின்றனர்; கர்மமனைத்தையும் அறிகின்றனர்.

**साधिभूताधिदैवं मां साधियज्ञं च ये विदुः ।**
**प्रयाणकालेऽपि च मां ते विदुर्युक्तचेतसः ॥ ३०॥**

**ஸாதிபூதாதிதைவம் மாம் ஸாதியஜ்ஞம் ச யே விது: ।**
**ப்ரயாணகாலே(அ)பி ச மாம் தே விதுர்யுக்தசேதஸ: ॥ 30॥**

*எவர்கள் என்னை பூத ஞானம், தேவ ஞானம், யாக ஞானம், இவற்றுடன் கூடியவனாக அறிகிறார்களோ அவர்கள் மரண காலத்திலும் கூட நிலைத்த மனத்தினராய் என்னை அறிகிறார்கள்.*

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில், 'ஞான விஞ்ஞான யோகம்' என்னும் ஏழாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் எட்டு

## அக்ஷரப்ரஹ்ம யோகம்

अर्जुन उवाच

किं तद्ब्रह्म किमध्यात्मं किं कर्म पुरुषोत्तम ।
अधिभूतं च किं प्रोक्तमधिदैवं किमुच्यते ॥ १॥

*அர்ஜுன உவாச*

**கிம் தத் ப்ரஹ்ம கிம் அத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம ।**
**அதிபூதம் ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிம் உச்யதே ॥ 1॥**

*அர்ஜுனன் வினவினான்*

***புருஷோத்தமா, பிரமம் என்பது என்ன? ஆத்ம ஞானம் எது? கர்மம் என்பது என்ன? பூத ஞானம் யாது? தேவஞானம் யாது?***

அத்தியாயம் ஏழு, சுலோகம் 29ல் பகவான் அர்ஜுனனிடம் "அவர்கள் பரப்பிரம்மத்தை அறகின்றனர்" என்று கூறினார். அதனை விளக்கும் பொருட்டே அவன் பகவானிடம் மேற்கூறிய வினாக்களை எழுப்பினான். அவன் மேலும் வினவினான்.

अधियज्ञः कथं कोऽत्र देहेऽस्मिन्मधुसूदन ।
प्रयाणकाले च कथं ज्ञेयोऽसि नियतात्मभिः ॥ २॥

**அதியஜ்ஞ: கதம் கோ (அ)த்ர தேஹே (அ)ஸ்மின் மதுசூதன ।**
**ப்ரயாண-காலே ச கதம் ஜ்ஞேயோ (அ)ஸி நியதாத்மபி: ॥ 2॥**

***அதியஜ்ஞன் (வேள்வியின் நாயகன்) என்பவர் யார்? அவர் இவ்வுடலில் எவ்வாறு இருக்கின்றார்? ஒ, மதுசூதனா! மரிக்கும் தறுவாயில், தன்னடக்கம் எய்தப் பெற்றோரால் நீ எங்ஙனம் அரியப்படுகின்றாய்?***

பகவான் இக்கேள்விகளுக்கு அவற்றின் வரிசைப்படிப் பதில் கூறத் தொடங்கினார்.

श्रीभगवानुवाच

अक्षरं ब्रह्म परमं स्वभावोऽध्यात्ममुच्यते
भूतभावोद्भवकरो विसर्गः कर्मसञ्ज्ञितः ॥ ३॥

*பகவான் உவாச*

**அக்ஷரம் ப்ரஹ்ம பரமம் ஸ்வபாவோ (அ)த்யாத்மம் உச்யதே**
**பூத-பாவோத்பவ-கரோ விஸர்க: கர்ம-ஸம்ஜ்ஞித: ॥ 3॥**

*ஸ்ரீ பக்வான் கூறினார்*

***பிரம்மம் என்பது அழிவற்றது. அனைத்தினும் உயர்ந்தது. ஒவ்வொரு உடலினுள்ளும் வியாபித்திருக்கும் அதன் சுபாவம் அத்யாத்மம் எனப்படும். பூதங்கள் என்னும் பொருட்களை உருவாக்கும் அந்த தியாகமாகிய வேள்வி கர்மம் ஆகும்.***

அக்ஷரம் என்பது அழிவற்றது. அது பரமாத்மா: "கார்கி இந்த அக்ஷரம் என்னும் அழிவற்ற பரமாத்மாவின் கட்டளையினாலேயே மண்ணும், விண்ணும் நிலைபெறுகின்றன" (பிரு.உ.3-8.9) அத்தியாயம் 8-13ல் குறிப்பிடப்பட்டிருக்கும் 'ஓம்' என்பதை அக்ஷரம் என்று இங்கே பொருள் கொள்ளக்கூடாது. இங்கே அது பிரம்மத்தைக் குறிப்பிடுகின்றது. மேலும் 'உயர்ந்தது' என்பது அனைத்தினும் உயர்ந்த பிரம்மத்திற்கே நன்கு பொருந்துகின்றது.

அப்பரப்பிரம்மம், அனைத்து உடல்களினுள்ளும் ஆத்மாவாக இருத்தலை 'அத்யாத்மம்' என்கின்றனர். முதலில் அது தன்னை உடலினுள் இருக்கும் ஆத்மாவாக உருக்காட்டி இறுதியில், பரம மெய்ப் பொருளானப் பிரம்மமாக உணர்த்துகிறது. அதுவே அத்யாத்மம் என்றறியப்படுகிறது.

வேள்விகளில் தேவதைகளுக்கு உணவுப் பொருள்களை நிவேதனமாக அளிப்பது தியாகம் ஆகும். அதனின்றே அசையும், அசையா உயிர்கள் அனைத்தும் உண்டாகின்றன. ஆகவே இத்தியாகம் என்னும் வேள்வியே கர்மம் என்றழைக்கப்படுகிறது. இந்த வித்திலிருந்தே மழை முதலியவற்றால் அசையும், அசையா உயிர்கள் தோன்றுகின்றன.

अधिभूतं क्षरो भावः पुरुषश्चाधिदैवतम् ।
अधियज्ञोऽहमेवात्र देहे देहभृतां वर ॥ ४॥

**அதிபூதம் க்ஷரோ பாவ: புருஷஶ் சா'திதைவதம் ।**
**அதியஜ்ஞோ (அ)ஹம் ஏவாத்ர தேஹே தேஹ - ப்ருதாம்வர ॥ 4॥**

*அதிபூதம் என்பது அழியும் பொருளாகும். அதிதைவதம் என்பது புருஷன் ஆகும். உடம்பெடுத்தோரில் உத்தமனே, அதியஜ்ஞன் என்பது உடலினுள் இருக்கும் நானே ஆவேன்.*

அதிபூதம் என்பது உயிர்களைக் குறிப்பிடுகின்றது. அது அழியும் பொருள் அல்லது பிறப்பெடுக்கும் எல்லா உயிர்களும் ஆகும்.

புருஷன் என்பவன் எல்லாவற்றையும் முற்றிலும் வியாபித்திருப்பவன் அல்லது உடலினுள் தங்கியிருப்பவன். சூரிய மண்டலத்திலுள்ள ஹிரண்ய கர்ப்பன். எல்லா உயிர்களின் புலன்களையும் நன்கு நிலைப்படுத்தி அருள் புரிபவன். அவனே அதிதைவதம் ஆவான்.

அதியஜ்ஞன் என்பவர் வேள்விகளின் நாயகனான விஷ்ணு ஆவார். "யஜ்ஞம் என்பது உண்மையில் விஷ்ணுவே ஆகும்" (தைத்ரிய சம்ஹிதை 1-7-4) அந்த விஷ்ணு நானே. உடலினுள் உள்ள எந்தவொரு யாகத்திற்கும் நானே யஜ்ஞ தேவதையாவேன்.

யாகமானது உடலினால் செய்யப்படுவது ஆதலின் உடலோடு ஒன்றியதாம். அதனால் உடலினை இடமாகக் கொண்டிருக்கிறது. அதாவது அதில் தங்கியுள்ளது என்றாகும்.

**अन्तकाले च मामेव स्मरन्मुक्त्वा कलेवरम् ।**
**यः प्रयाति स मद्भावं याति नास्त्यत्र संशयः ॥५॥**

**அந்த-காலே ச மாம் ஏவ ஸ்மரன் முக்த்வா கலேவரம் ।**
**ய: ப்ரயாதி ஸ மத்-பாவம் யாதி நாஸ்தி அத்ர ஸம்ஶய: ॥ 5॥**

*அந்திமக் காலத்தில், தனது உடலினைப் பிரியும் வேளையில் என்னை நினைப்போன் என் நிலை எய்துவான் இதில் ஐயமில்லை.*

'அந்திமக் காலத்தில்' - மரண வேளையில், 'என்னையே நினைத்து' - பரமபுருஷ பகவானாகிய விஷ்ணுவை மட்டுமே நினைத்து, தனது உடலைத் துறப்பவன் விஷ்ணுவின் உண்மை நிலையினை எய்துகிறான். 'இதில் ஐயமில்லை' - அவ்வுண்மை நிலையினை எய்துவானா அல்லது எய்த மாட்டானா என்பதில் ஐயங்கொள்ளத் தேவையில்லை.

இவ்விதி எனக்கு மட்டுமே பொருந்துவதல்ல - மாறாக.

**यं यं वापि स्मरन्भावं त्यजत्यन्ते कलेवरम् ।**
**तं तमेवैति कौन्तेय सदा तद्भावभावितः ॥६॥**

**யம் யம் வாபி ஸ்மரன் பாவம் த்யஜதி அந்தே கலேவரம் ।**
**தம் தம் ஏவைதி கௌந்தேய ஸதா தத்-பாவ - பாவித ॥ 6॥**

*குந்தி மைந்த! ஒருவன் முடிவில் எப்பொருளை நினைப்பவனாய் உடலைத் துறக்கின்றானோ அவன் எப்போதும் அப்பொருள் மீது கருத்துடையவனாய் அதனையே எய்துவான்.*

பொருளை - ஒரு குறிப்பிட்ட பொருளை அல்லது தெய்வத்தை. முடிவில் - உடலை விட்டு உயிர் பிரியும் வேளையில். அதனையே அடைவான் - நினைத்த அப்பொருளையன்றி வேறொன்றினை அடைவதில்லை. அவன் அப்பொருளையே சதா சர்வ காலமும் சிந்திப்பதால் இறுதியில் அதனையே எய்துவான்.

இறுதியில் உண்டாகும் எண்ணம் இவ்வாறு அடுத்துப் பெறும் உடலிற்குக் காரணமாகின்றது.

तस्मात्सर्वेषु कालेषु मामनुस्मर युध्य च ।
मय्यर्पितमनोबुद्धिर्मामेवैष्यस्यसंशयम् ॥ ७॥

**தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாம் அனுஸ்மர யுத்ய ச ।**
**மய்யர்ப்பித - மனோ - புத்திர் மாம் ஏவைஷ்யஸ்யஸம்ஶய: ॥ 7॥**

*ஆதலால், எல்லாக் காலங்களிலும் என்னையே நினை. போர் செய். என்னிடத்தே மனத்தையும், புத்தியையும் வைப்பவன் என்னை அடைவான். இதில் ஐயமில்லை.*

நினைத்தல் - சாஸ்திரப்படி சிந்தித்தல் அதாவது தியானம் செய்தல். போர் செய் - உனது சுதர்மமாகிய போரினைச் செய்வாயாக. என்னிடத்தே - வாசுதேவனாகிய என்னிடத்தே. என்னை அடைவாய் - நீ செய்த தியானத்தினால் என்னை அடைவாய். இதில் ஐயமில்லை. மேலும்,

अभ्यासयोगयुक्तेन चेतसा नान्यगामिना ।
परमं पुरुषं दिव्यं याति पार्थानुचिन्तयन् ॥ ८॥

**அப்யாஸ - யோக - யுக்தேன சேதஸா நான்ய - காமினா ।**
**பரமம் புருஷம் திவ்யம் யாதி பார்த்தானுசிந்தயன் ॥ 8॥**

*பார்த்தா! மனதினை யோகத்தில் நிலைநிறுத்தி, பிறிதோரிடத்துச் செல்ல விடாது தொடர்ந்து தியானித்துக் கொண்டிருப்பவன் பரமபுருஷரை அடைகிறான்.*

யோகம் எனப்படுவது, வேறெங்கும் அலைய விடாது என்னைப் பற்றிய சிந்தனையில் மனதினை ஒருமுகப்படுத்துவதாகும். இதுவே பயிற்சி என்னும் அப்யாஸமும் ஆகும். இவ்வாறு வேறு எப்பொருள் மீதும் மனதினைச் செலுத்தாது யோகத்தில் மட்டுமே மனதினை ஒருமுகப்படுத்தும் யோகி, சாத்திரங்கள் மற்றும் ஆச்சாரியரின் உபதேசங்களுக்கேற்ப தியானம்

செய்கிறான். அவ்வாறு தியானிப்பதால் அவன் சூரிய மண்டலத்திலுள்ள உன்னத பரமபுருஷரை அடைகிறான்.

எத்தகையப் பரமபுருஷரை அவன் அடைகிறான். கேட்பாயாக :

**कविं पुराणमनुशासितार- मणोरणीयांसमनुस्मरेद्यः ।**
**सर्वस्य धातारमचिन्त्यरूप- मादित्यवर्णं तमसः परस्तात्॥ ९॥**

**கவிம் புராணம் அனுஶாஸிதாரம் அணோரணீயாம்ஸம்**
**அனுஸ்மரேத் ய: ।**
**ஸர்வஸ்ய தாதாரம் அசிந்த்ய - ரூபம் ஆதித்ய -**
**வர்ணம் தமஸ: பரஸ்தாத் ॥ 9॥**

*கவியை பழையோனை ஆள்வோனை அணுவிலும் அணுவானவனை எல்லாவற்றையும் தரிப்பவனை, எண்ணுதற்கரிய வடிவுடையோனை, இருளுக்கப்பால் உள்ள கதிரவனின் நிறம் உடையவனை எவன் நினைக்கின்றானோ, (அவன் அத்தகைய புருஷரை அடைகிறான்).*

கவி - முக்காலமும் உணர்ந்தவன் அல்லது எல்லாம் அறிந்தவன். பழையோன் - நித்தியமானவன். ஆள்வோன் - பிரபஞ்சம் முழுவதையும் ஆள்பவன். எல்லாவற்றையும் தரிப்பவன் - ஜீவர்களுக்கு அவர்கள் செய்யும் கர்ம வினைக்கேற்ப அவற்றின் பலன்களை அளிப்பவன். அவனுக்கு நித்திய வடிவம் உளதாயினும் அது இப்படித் தான் என்று எவராலும் கருதுதற்கரியதாகும். அவன் சூரிய ஒளியைப் போல் நித்திய அறிவு ஒளி உடையவன். அறியாமை என்னும் இருளுக்கு அப்பாற்பட்டவன். இத்தன்மைகள் உடையவனை இடையறாது தியானிப்பவன் அப்புருஷனை அடைகிறான் என்று முந்தைய சுலோகத்தோடு சேர்த்துக் கொள்க.

மேலும்,

**प्रयाणकाले मनसाचलेन भक्त्या युक्तो योगबलेन चैव ।**
**भ्रुवोर्मध्ये प्राणमावेश्य सम्यक्- स तं परं**
**पुरुषमुपैति दिव्यम् ॥ १०॥**

**ப்ரயாண - காலே மனஸாசலேன பக்த்யா யுக்தோ யோக -**
**பலேன சைவ ।**
**ப்ருவோர் மத்யே ப்ராணம் ஆவேஶ்ய ஸம்யக் ஸ தம் பரம்**
**புருஷம் உபைதி திவ்யம் ॥ 10॥**

*இறுதிக் காலத்தில் சலனமற்ற மனத்துடனும் பக்தியுடனும், யோக வலிமையுடனும் பிராணனை இருபுருவங்களுக்கும் மத்தியில் சரியாக நிலை நிறுத்தி திவ்வியமான அப்பரம புருஷனை அடைகிறான்.*

இறுதிக் காலத்தில் - மரண வேளையில். சலனமற்ற மனத்துடனும், பக்தியுடனும், யோக வலிமையுடனும் (யோக வலிமை என்பது தொடர்ந்து தியானிப்பதால் உண்டாகும் மனதின் உறுதியாகும்) முதலில் இதய தாமரையில் மனதினை வசப்படுத்தி பின்பு மேல் நோக்கிச் செல்லும் (ஸுஷும்நை என்னும்) நாடியினால் நிலத்தையும் (மற்ற நான்கு பூதங்களையும்) படிப்படியாக வென்று, பிராணனை இருபுருவங்களுக்கு மத்தியில் சரியாக நிலைநிறுத்தும் அந்த யோகியானவன் கவியாய், பழையோனாய், ஒளிமிக்கு விளங்கும் அப்பரம புருஷனை (8-9) அடைகிறான்.

அடுத்துக் கூறப் போகும் வழிமுறைகளால் அடைவதற்கு விரும்பப்படுவதும், வேதத்தை அறிந்தவர்களால் சிறப்பாக விளக்கப்படுவதுமாகிய பிரம்மத்தைப் பற்றிப் பகவான் மீண்டும் தெளிவுபடுத்துகிறார்.

**यदक्षरं वेदविदो वदन्ति विशन्ति यद्यतयो वीतरागाः ।**
**यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति तत्ते पदं सङ्ग्रहेण प्रवक्ष्ये॥ ११॥**

**யத் அக்ஷரம் வேத-விதோ வதந்தி விஶந்தி யத்யதயோ வீத - ராகா: ।**
**யத் இச்சந்தோ ப்ரஹ்மச்சர்யம் சரந்தி தத் தே பதம் ஸங்கரஹேண ப்ரவக்ஷ்யே ॥ 11॥**

*எதனை வேதமுணர்ந்தோர் அழிவற்றது என்கின்றனரோ, எதனைப் பற்று அற்ற முனிவர்கள் புகலிடமாய்க் கொள்கின்றனரோ, எதனை அறிய விரும்பி பிரம்மச்சரியம் காக்கப்படுகின்றதோ, அந்த நிலையை உனக்குச் சுருக்கமாகக் கூறுகிறேன்.*

வேதத்தைக் கற்றுணர்ந்தோர் அழிவற்ற அப்பொருள் எத்தகையக் குணநலனும் இல்லாதது என்று கூறுகின்றனர். சுருதிகள் "கார்க்கி! நீ அறிய விரும்பும் அந்த அழிவற்றப் பொருள் பிரம்மத்தை அறிந்தவர்களால் ஸ்தூலமன்று, சூக்குமமன்று என்று கூறப்படுகிறது" என்று கூறுகின்றனர் (பிரு.உ.3-8-8). பற்று நீங்கி முற்றும் துறந்த முனிவர்கள் மெய்ஞ்ஞானம் கைவரப் பெற்றவுடன் அந்த அழியாப் பொருளினுள் புகுகின்றனர். அழிவற்ற அப்பொருளை அறிய விரும்புவோர் ஆச்சாரியரின் வழிகாட்டுதலின் கீழ் பிரம்மச்சரியம் காக்கின்றனர். அடைய வேண்டிய இலக்கான அழிவற்ற அக்ஷரத்தைப் பற்றிச் சுருக்கமாக எடுத்துரைப்பேன்.

"பகவானே! வாழ்நாள் இறுதிவரை ஓங்காரத்தைத் தியானிப்பவன் எவ்வுலகு எய்துகிறான்?" அதற்கு அவர் (பிப்பலாதர்) அவனிடம் கூறுகிறார்.

"சத்தியகாம! சகுணமும் நிர்க்குணமுமான இந்தப் பிரம்மம் ஓங்காரமேயாகும்". (பிர.உ.5-1-2) இவ்வாறு தொடங்கி "மூன்றெழுத்துக்களால் ஆன இந்த ஓங்காரமென்னும் அக்ஷரத்தினால் எவன் பரமபுருஷரை தியானிக்கின்றானோ அவன் சாம மந்திரங்களால் பிரம்ம லோகத்திற்கு இட்டுச் செல்லப்படுகிறான்" (பிரஸ்ன உபநிஷத் 5.5) "தா்ம, அதா்மத்தைத் தவிர வேதங்கள் எல்லாம் அடைய வேண்டிய லட்சியம் என்று எதனைக் கூறுகின்றனவோ, தவங்கள் எல்லாம் எதனை எடுத்துரைக்கின்றனவோ, எந்நிலை எய்த விரும்பி பிரம்மச்சரியமானது கடைபிடிக்கப்படுகின்றதோ அந்நிலையை உனக்குச் சுருக்கமாகத் தெளிவுபடுத்துகிறேன் அது ஓங்காரமேயாகும்" (கட.உ: 2.14,15) ஓம் என்னும் சொல் பிரம்மத்தை உணர்த்துகின்றது. சராசரி அறிவுடையோா்க்கும் அதற்குக் கீழான அறிவுடையவா்களுக்கு ஓம் என்னும் சொல் ஒரு விக்கிரஹமாக அல்லது ஓர் அடையாளமாக, பிரம்மத்தை அறிந்து கொள்வதற்குச் சாதனமாக விளங்குகின்றது. ஓங்காரத்தை ஆழ்ந்து சிந்திப்பது பிற்காலத்தில் முக்திக்கு இட்டுச் செல்லும் என்று கூறப்படுகிறது. இப்போது (யோகத்தில் உறுதியுடன் நிலைநின்று) ஆழ்ந்து தியானப்பதின் மூலம் பிற்காலத்தில் முக்திக்கு இட்டுச் செல்லக் கூடியதும், பகவத் கீதை 8-9, 11ல் விளக்கப்படுகின்ற "கவியை, பழையோனை............" என்னும் பரப்பிரம்மத்தை அறிதற்குச் சாதனமாகவும் உள்ள ஓங்காரமானது வேறு சில விஷயங்களுடன் சோ்த்து உபதேசிக்கப்படப் போகிறது. பின்வரும் சுலோகங்கள் இதன் அடிப்படையில் அமைந்தனவாகும்.

**सर्वद्वाराणि संयम्य मनो हृदि निरुध्य च ।**
**मूर्ध्न्याधायात्मनः प्राणमास्थितो योगधारणाम् ॥१२॥**

**ஸா்வ-த்வாராணி ஸம்யம்ய மனோ ஹ்ருதி நிருத்ய ச ।**
**மூர்த்ன்யாதாயாத்மன: ப்ராணமாஸ்திதோ யோக - தாரணாம் ॥ 12॥**

*எல்லா வாயில்களையும் அடைத்து, மனத்தை இதயத்தில் நிலைநிறுத்தி, பிராணனைத் தலை உச்சியில் நிறுத்தி யோக தாரணையில் நிலைபெற்று.*

உணா்ச்சிக்கு வாயில்களாக விளங்கும் அனைத்துப் புலன்களையும் அடக்கி, மனத்தை இதயத்தாமரையில் அசையாது நிலைநிறுத்தி, இதயத்திற்கு மேலே செல்லும் (ஸுஷும்நை என்னும்) நாடியினால் மேலே ஏறி, சுவாசக் காற்றினை உச்சந்தலையில். நிலைநிறுத்தி ஒருவன் யோக தாரணையில் நிலை பெறுகிறான்.

இவ்வாறு சுவாசக் காற்றினை அங்கே நிறுத்தி,

**ओमित्येकाक्षरं ब्रह्म व्याहरन्मामनुस्मरन् ।**
**यः प्रयाति त्यजन्देहं स याति परमां गतिम् ॥१३॥**

ஏகாக்ஷரம் ப்ரஹ்ம வ்யாஹரன் மாம் அனுஸ்மரன் ।
ய: ப்ரயாதி த்யஜன் தேஹம் ஸ யாதி பரமாம் கதிம் ॥ 13॥

*பிரம்மம் என்னும் ஓங்கார அக்ஷரத்தை உச்சரித்து என்னை இடைவிடாது சிந்தித்து எவன் தனது உடலைத் துறக்கின்றானோ அவன் பரமகதி அடைகின்றான்.*

பிரம்மத்தைக் குறிக்கும் ஓம் என்னும் அக்ஷரத்தை உச்சரித்து அதன் உட்பொருளாக விளங்கும் ஈசுவரனான என்னை இடைவிடாது சிந்தித்து எவன் தனது உடலைத் துறக்கின்றானோ அவன் பரமகதி அடைகிறான். துறத்தல் என்பது இங்கு உடலைத் துறப்பதை மட்டுமே குறிப்பிடுகிறதே அன்றி ஆத்மாவின் அழிவை அல்ல. இதுவே பொருளெனக் கொள்க. மேலும்,

अनन्यचेताः सततं यो मां स्मरति नित्यशः ।
तस्याहं सुलभः पार्थ नित्ययुक्तस्य योगिनः ॥ १४॥

அனன்ய - சேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யஶ:
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்ய-யுக்தஸ்ய யோகின: ॥ 14॥

*பார்த்தா! பிறிதொன்றில் மனம் வையாது, எவனொருவன் என்னையே எப்போதும் சிந்தித்துக் கொண்டிருக்கின்றானோ, அந்த மனம் ஒருமுகப்பட்ட யோகிக்கு நான் எளிதில் அடையக் கூடியவன்.*

'மனம் ஒரு முகப்படல்' - பிறிதொன்றில் மனதினை அலைய விடாதிருத்தல். ஒரு யோகி எந்தவிதமானக் குறுக்கீடுமின்றி எப்போதும் பரமபுருஷரையே எண்ணிக் கொண்டிருக்கிறான். எந்தவிதக் குறுக்கீடுமின்றி என்பது தொடர்ந்து, நித்தியமாக நீண்ட காலத்திற்கு என்று குறிப்பிடுகிறது. அதாவது ஆறுமாதம், ஒருவருடம் என்பதானக் காலமன்று. மாறாக 'வாழ்நாள்' முழுவதும் தொடர்ந்து என்னை நினைக்கின்றான் என்பதே பொருளாகும். நித்தியத் தொடர்பு வைத்திருப்பதால் அந்த யோகிக்கு நான் எளிதில் அகப்படுவேன். இவ்வாறு ஒருவன் ஒருமுகப்பட்ட மனத்துடன் எப்போதும் என்னுடன் தொடர்பு கொண்டிருக்க வேண்டும், இதுவே கருத்து.

உமது எளிதில் அகப்படும் தன்மையினால் பயன் என்ன? கேட்பாயாக:

मामुपेत्य पुनर्जन्म दुखालयमशाश्वतम् ।
नाप्नुवन्ति महात्मानः संसिद्धिं परमां गताः ॥ १५॥

மாம் உபேத்ய புனர் ஜன்ம து:க்காலயம் அஶாஶ்வதம்
நாப்னுவந்தி மஹாத்மான: ஸம்ஸித்திம் பரமாம் கதா: ॥ 15॥

*என்னையடைந்து பரம சித்தி பெற்ற மகாத்மாக்கள் மீண்டும் நிலையற்றதும், துன்பத்தின் ஆலயமுமான மறுபிறப்பினை எய்தமாட்டார்.*

'பகவானாகிய என்னை அடைந்து' என் நிலை எய்திய பிறகு அவர்கள் மறுபடியும் பிறப்பதில்லை. அவர்கள் எப்படிப்பட்ட மறுபிறப்பினைத் தவிர்க்கின்றனர். பிறப்பு என்பது ஆத்யாத்மிகம் போன்ற துன்பங்கள் உறையுமிடமாகும். உறையுமிடம் மாத்திரமன்று, நிலையற்றதுமாம். மகாத்மாக்களான முனிவர்கள் மோட்சமெனும் பரம சித்தி எய்தப் பெற்றமையினால் அவர்கள் மறுபிறப்பு எய்துவதில்லை. ஆனால் எவர்கள் என்னை அடைவதில்லையோ அவர்கள் மீண்டும் பிறக்கின்றனர்.

உங்களை அடையாது வேறொன்றினை அடைந்தவர்கள் மீண்டும் இப்பூமிக்குத் திரும்பி விடுகின்றனரா?

**आब्रह्मभुवनाल्लोका: पुनरावर्तिनोऽर्जुन ।**
**मामुपेत्य तु कौन्तेय पुनर्जन्म न विद्यते ॥१६॥**

**ஆ - ப்ரஹ்ம - புவனால் லோகா: புனர் ஆவர்தினோ (அ)ர்ஜுன ।**
**மாம் உபேத்ய து கௌந்தேய புனர்ஜன்ம ந வித்யதே ॥ 16॥**

***அர்ஜுனா! பிரம்மலோகம் முதலாக உள்ள அனைத்து உலகங்களும் மீண்டும் திரும்பி வரும் தன்மை உடையன. ஆனால் குந்தி மைந்த, என்னை அடைந்தோர்க்கு மறுபிறப்பு இல்லை.***

உயிர்கள் தோன்றுமிடம் உலகமாகும். பிரம்ம லோகம் பிரம்மாவிற்கு உரியதாகும். அவரது உலகம் உள்ளிட்ட அனைத்து உலகங்களும் மீண்டும் வரும் தன்மையுடையன. ஓ அர்ஜுனா! ஆனால் என்னை அடைந்தவனுக்கு மறுபிறப்பு ஒழிகிறது.

பிரம்மலோகம் உள்ளிட்ட உலகங்கள் எல்லாம் ஏன் மீண்டும் திரும்பிவரும் தன்மையுடையனவாக இருக்கின்றன? அவை கால வரையறைக்குட்பட்டவை காரணமாகவா, எப்படி?

**सहस्रयुगपर्यन्तमहर्यद्ब्रह्मणो विदु: ।**
**रात्रिं युगसहस्रान्तां तेऽहोरात्रविदो जना: ॥१७॥**

**ஸஹஸ்ர - யுக - பர்யந்தம் அஹர் யத் ப்ரஹ்மணோ விது: ।**
**ராத்ரிம் யுக - ஸஹஸ்ராந்தாம் தே (அ)ஹோ - ராத்ர -**
**॥ 17॥**

***பிரம்மாவுக்கு ஆயிரம் யுகம் ஒரு பகல், ஆயிரம் யுகம் ஓரிரவு, இதையறிந்தோரே இராப்பகல் இயல்பறிவார்.***

பிரம்மா அல்லது விராட் பிரஜாபதியின் ஒரு பகல் ஆயிரம் யுகங்கள் என்றும் அவரது இரவும், இதேபோன்று ஆயிரம் யுகங்கள் என்றும் அவர்கள் அறிவர். எவர்கள் அறிவர் என்றால்; பகல் மற்றும் இரவின் இயல்பை அறிந்தவர்கள் அல்லது காலக் கணக்கினை அறிந்தவர்களே அறிவர். (இங்கே யுகம் என்பது சதுர் யுகத்தைக் குறிப்பிடுவதாகும்.) இவ்வாறு அந்த உலகங்கள் காலத்தால் வரையறுக்கப்பட்டவை ஆதலால் திரும்பிவரும் தன்மை உடையனவாம்.

பிரஜாபதியின் பகல் மற்றும் இரவு வேளையில் என்ன நடைபெறுகிறது என்பது இப்போது கூறப்படுகின்றது.

**अव्यक्ताद्व्यक्तय: सर्वा: प्रभवन्त्यहरागमे ।**
**रात्र्यागमे प्रलीयन्ते तत्रैवाऽव्यक्तसञ्ज्ञके ॥१८॥**

**அவ்யக்தாத் வ்யக்தய: ஸர்வா: ப்ரபவந்தி அஹர் - ஆகமே ।**
**ராத்ரி - ஆகமே ப்ரளீயந்தே தத்ரைவாவ்யக்த - ஸம்ஜ்ஞகே ॥ 18॥**

*பகல் வேளையில் மறைவுபட்ட உலகத்தினின்று தோற்றப் பொருள்கள் வெளிப்படுகின்றன. இரவு வந்தவுடன் அவை மீண்டும் அந்த மறைவுலகத்துக்கேச் சென்று விடுகின்றன.*

அவ்யக்தமென்றால், பிரஜாபதியின் ஆழ்ந்த நித்திரை நிலையாகும். சராசரங்கள் எல்லாம் பிரம்மாவின் விழிப்பு நிலையில், அவ்யக்தத்தினின்று வெளிப்படுகின்றன. அதுபோன்றே பிரம்மாவின் நித்திரை நிலையில் தோற்றங்களெல்லாம் மீண்டும் மறைகின்றன.

செய்யாத வினையின் பயனை அனுபவித்தலும், செய்த வினையின் பயனிலிருந்து தப்பிவிடுதலுமாகியப் போலியுக்தியை நீக்கும் பொருட்டும், பந்தப்படுதலும், அதனின்று விடுதலையடைவதுமான (முக்தி) சாத்திரத்திற்குப் பொருள் உண்டு என்று நிலைநிறுத்துவதற்கும், அறியாமை முதலிய குற்றங்களை வேராக உடைய தர்மம் அதர்மம் என்னும் கர்ம வலிமையால் சுதந்திரமற்ற உயிர்கள் மீண்டும் மீண்டும் பிறக்கின்றன (தோன்றுகின்றன) ஆகையால் அவற்றிற்கு சம்சாரமாகிய வாழ்க்கையில் பற்றின்மையை உணர்த்துவதற்கும், பகவான் இதனை அருளிச் செய்கின்றார்.

**भूतग्राम: स एवायं भूत्वा भूत्वा प्रलीयते ।**
**रात्र्यागमेऽवश: पार्थ प्रभवत्यहरागमे ॥१९॥**

**பூத-க்ராம: ஸ ஏவாயம் பூத்வா பூத்வா ப்ரளீயதே**
**ராத்ரி - ஆகமே (அ)வஶ: பார்த்த ப்ரபவதி அஹர் ஆகமே ॥ 19॥**

*பார்த்தா! இந்தப் பூத வர்க்கம், தம் வசமின்றியேப் பிறந்து, இரவு வரும்போது மறைகின்றது, பகல் வரும்போது வெளிப்படுகின்றது.*

கல்பம் என்பது பிரம்மாவின் ஒரு நாள் ஆகும். சராசரங்களாகிய எந்தப் பூதவர்க்கம் முந்தின கல்பத்தில் இருந்ததோ, அதே பூதவர்க்கந்தான் இப்போதும் இருக்கின்றது. வேறுபாடு கிடையாது. அது (பிரம்மாவின்) பகலில் தன் வசமின்றியே வெளிப்பட்டு, இரவு வேளையில் தன் வசமின்றியே மறைகின்றது.

அழிவற்றப் பொருளை அடைதற்குரிய வழியானது "பிரம்மமாகிய ஓம் என்னும் அக்ஷரத்தை" என்று 8.13ல் குறிப்பிடப்பட்டது. இப்போது அழிவற்றப் பொருளின் உண்மை நிலையினை உணர்த்துவதற்கும், அதனை யோக மார்க்கத்தால் எவ்வாறு அடைய முடியும் என்பதை விளக்குவதற்கும் பகவான் பின்வருமாறு அருளிச் செய்கிறார்.

**परस्तस्मात्तु भावोऽन्योऽव्यक्तोऽव्यक्तात्सनातनः ।**
**यः स सर्वेषु भूतेषु नश्यत्सु न विनश्यति ॥२०॥**

**பரஸ் தஸ்மாத் து பாவோ (அ)ன்யோ**
**(அ)வ்யக்தோ (அ)வ்யக்தாத் ஸநாதன: ।**
**ய: ஸ ஸர்வேஷு பூதேஷு நஶ்யத்ஸு ந விநஶ்யதி ॥ 20॥**

***ஆனால் அந்த அவ்யக்தத்தினின்று வேறானதும், எந்நாளும் இருப்பதுமான மற்றொரு அவ்யக்தப் பொருள் எதுவோ, அது எல்லா உயிர்களும் அழியும்போது தான் அழிவதில்லை.***

'மற்றொன்று' - எதிலிருந்து வேறானதாகும்? முற்கூறியதிலிருந்து வேறானதாகும். 'ஆனால்' என்னும் சொல் இங்கு விளக்கப்படவிருக்கும் அவ்யக்தத்தினின்று வேறானதைக் குறிப்பிடுகின்றது. 'பொருள்' - அக்ஷரம் எனப்படும பரப்பிரம்மம். அது அவ்யக்தத்தினின்று வேறானதாக இருந்தபோதிலும், ஒருவன் அதுவும், அவ்யக்தமும் ஒத்தத்தன்மையுடையன என்று கருதலாம். இக்கருத்தினை நீக்குவதற்காக பகவான், அது அவ்யக்தத்தினின்று வேறானது என்னும் பொருள் தரும். 'மற்றொன்று' என்று கூறுகிறார். அது வெளிப்படாதது புலன்களுக்கு எட்டாதது. பிரம்மமானது உயிர்களுக்கு வித்தாக விளங்கும் அவித்யை (அறியாமை)யாகிய அவ்யக்தத்தினின்றும் வேறானதாகும். அதாவது அது அவ்யக்தத்தினின்று நேர் எதிரான தன்மையுடையதாகும். பிரம்ம தேவனிலிருந்து எல்லா உயிர்களும் அழியும்பொழுதும் அது அழிவதில்லை.

**अव्यक्तोऽक्षर इत्युक्तस्तमाहुः परमां गतिम् ।**
**यं प्राप्य न निवर्तन्ते तद्धाम परमं मम ॥२१॥**

**அவ்யக்தோ (அ)க்ஷர இதியுக்தஸ் தம் ஆஹு : பரமாம் கதிம் ।**
**யம் ப்ராப்ய ந நிவர்தந்தே தத் தாம பரமம் மம ॥ 21॥**

*அக்ஷரம் எனப்படும் அவ்யக்தம் எதுவோ அதுவே பரமகதி என்று கூறுவர். எதனை எய்தியபின் திரும்பி வருதல் இல்லையோ, அது என் பரமபதமாகும்.*

அழிவற்றது எனப்படும் அந்த வெளிப்படையாக இல்லாததே பரம கதியாகும். (அடைய வேண்டிய புருஷார்த்தமாகும்). எதனை எய்தியபின் இந்த லௌகீக வாழ்விற்கு மீண்டும் வருவதில்லையோ அதுவே எனது பரமபதமாகும். அதாவது விஷ்ணுவின் பரமபதம் என்று பொருளாகும்.

அதனை அடைதற்குரிய வழி கூறப்படுகின்றது.

**पुरुषः स परः पार्थ भक्त्या लभ्यस्त्वनन्यया ।**
**यस्यान्तःस्थानि भूतानि येन सर्वमिदं ततम् ॥२२॥**

**புருஷ: ஸ பர: பார்த்த பக்த்யா லப்யஸ் த்வனன்யயா ।**
**யஸ்யாந்த: - ஸ்தானி பூதானி யேன ஸர்வம் இதம் ததம் ॥ 22॥**

*பார்த்தா! எவனிடம் எல்லாப் பொருள்களும் நிலைபெற்றுள்ளனவோ, எவனால் இப்பொருள்கள் எல்லாம் வியாபிக்கப்பட்டுள்ளனவோ, அந்தப் பரமபுருஷன் வேறிடஞ் செல்லாத பக்தியினால் அடைதற்குரியவன்.*

உடலில் தங்கியுள்ளதால் அல்லது எங்கும் நிறைந்துள்ளதால் அவன் புருஷன் என்று அழைக்கப்படுகிறான். அவனை விட உயர்ந்தது ஒன்றுமில்லை, அர்ஜுனா! அவன் ஆத்மஞானமாகிய பக்தியால் அடையத்தக்கவன் (7:17) காரியமாகிய (படைக்கப்பட்ட) பொருள்கள் எல்லாம் அந்தப் புருஷனுக்குள்ளேயே நிலைபெற்றுள்ளன. ஏனெனில் காரியமே காரணத்துள்தானே இருக்கின்றது. காரியமாகிய பானை ஆகாயத்தினால் வியாபிக்கப்பட்டுள்ளது போல் அப்புருஷனால் இவ்வுலகமனைத்தும் வியாபிக்கப்பட்டுள்ளது.

இப்போது உத்தரமார்க்கத்தைப் பற்றி (வடக்கு வழி அல்லது ஒளி வழி) எடுத்துரைப்பது அவசியமாகும். அதுவே ஓம் என்னும் பிரணவத்தில் புத்தியை வைத்துப் பின்னாளில் முக்தியடைவர் என்று கூறப்பட்ட யோகிகளுக்கு உகந்ததாகும். இது 8.23லிருந்து விளக்கப்படுகிறது. மற்றைய வழியைச் சிறப்பிக்கும் பொருட்டு திரும்பிவரும் வழியும் விளக்கப்படுகிறது.

**यत्र काले त्वनावृत्तिमावृत्तिं चैव योगिनः ।**
**प्रयाता यान्ति तं कालं वक्ष्यामि भरतर्षभ ॥२३॥**

**யத்ர காலே த்வனாவ்ருத்திம் ஆவ்ருத்திம் சைவ யோகின: ।**
**ப்ரயாதா யாந்தி தம் காலம் லக்ஷ்யாமி பரதர்ஷப ॥ 23॥**

*பரத குலத்திற் சிறந்தோனே! இனி எந்தக் காலத்தில் (உடலைவிட்டு) பயணப்பட்ட யோகிகள் திரும்பிவாராமையையும், திரும்பி வருதலையும் அடைகின்றார்களோ, அந்தக் காலத்தைக் கூறுவேன்.*

"எந்தக் காலத்தில்" என்பதை தனியே நிற்கும் "பயணப்பட்ட" என்ற சொல்லுடன் கூட்டுக. திரும்பி வாராமை - மீண்டும் பிறவாமை. திரும்பி வருதல் - மீண்டும் பிறத்தல். 'யோகிகள்' என்பது இங்கே யோகிகளையும், கர்மிகளையும் குறிப்பிடுகின்றது. கர்மிகள் கூட 'கர்மயோகத்தால் யோகிகட்கு (3-3) என்று சிறப்பித்துக் கூறியுள்ளபடியால் மரியாதை வழக்காக யோகிகள் என்றழைக்கப்படுகின்றனர். எக்காலத்தில் இறந்த யோகிகள் மீண்டும் பிறக்கின்றனரோ, எக்காலத்தில் இறந்த யோகிகள் மீண்டும் பிறப்பதில்லையோ அக்காலத்தைப் பற்றி உனக்கு எடுத்துரைப்பேன்.

அக்காலத்தைக் கூறுகிறார்:

**अग्निर्ज्योतिरहः शुक्लः षण्मासा उत्तरायणम् ।**
**तत्र प्रयाता गच्छन्ति ब्रह्म ब्रह्मविदो जनाः ॥२४॥**

**அக்னிர் ஜ்யோதிர் அஹ: ஶுக்ல: ஷண்-மாஸா உத்தராயணம் ।**
**தத்ர ப்ரயாதா கச்சந்தி ப்ரஹ்ம ப்ரஹ்ம - விதோ ஜனா: ॥ 24॥**

*நெருப்பு, ஒளி, பகல், சுக்கிலபக்ஷம், உத்தராயணத்தின் ஆறு மாதங்கள் இவற்றில் பயணப்பட்ட பிரம்மவித்துக்களான ஜனங்கள் பிரம்மத்தை அடைகிறார்கள்.*

நெருப்பு என்னும் அக்னி காலத்தை ஆளும் தெய்வம் ஆகும். அதுபோல் ஒளி என்பதும் அவ்வாறான தெய்வம் தான். அல்லது நெருப்பும் ஒளியும் தேவதைகள் என்றும் கூறலாம். மாமரங்கள் பெரும்பான்மை நிற்கும் காடு, மாமரக்காடு என்று அழைக்கப்படுவது போல 'எக்காலத்தில்' 'அக்காலத்தில்' என்று காலம் என்னும் சொல்லினால் வழியைக் குறிப்பிடுவது காலத்தின் ஆதிபத்தியத் தேவதைகளின் பெரும்பான்மையினால் என்க. அவ்வாறே பகல் என்பது பகலின் ஆதிபத்தியத் தேவதையாகும். சுக்கிலபக்ஷம் என்பது சுக்கிலபக்ஷ தேவதையாகும். இங்கே உத்தராயணத்தின் ஆறுமாதங்கள்

என்பதுவுங்கூட வழியாக ஆகிநிற்கும் தேவதையேயாகும். இந்த விளக்கம் சாரீரக மீமாம்சை 4-3-4ன் அடிப்படையில் அமைந்ததாகும். பிரம்மத்தைத் தியானித்து இறந்தவர்கள் இந்த வழியே பிரம்மத்தை அடைகின்றனர். 'காலக்கிரமத்தில்' என்னும் சொல் சொற்றொடரில் தொக்கி நிற்கின்றது. மெய்ஞ்ஞானத்தில் நிலைநின்று உடனடி முக்தி பெற்றவர்களுக்குப் போவதற்கும், திரும்பி வருவதற்கும் ஓரிடமும் இல்லை. "அவனுடைய உயிர் மூச்சுப் பிரிந்து செல்வதில்லை" (பி.உ.4-4-6) அவர்களின் உயிர்மூச்சு பிரம்மத்தில் இணைகிறது. அவர்கள் பிரம்மத்தின் மீது படர்கின்றனர். உண்மையில் அவர்கள் பிரம்மமாகவே ஆகிவிடுகின்றனர்.

**धूमो रात्रिस्तथा कृष्णः षण्मासा दक्षिणायनम् ।**
**तत्र चान्द्रमसं ज्योतिर्योगी प्राप्य निवर्तते ॥२५॥**

**தூமோ ராத்ரிஸ் ததா க்ருஷ்ண: ஷண்-மாஸா தக்ஷிணாயனம் ।**
**தத்ர சாந்த்ரமஸம் ஜ்யோதிர் யோகீ ப்ராப்ய நிவர்த்ததே ॥ 25॥**

*புகை, இரவு, அவ்வாறே கிருஷ்ணபக்ஷம், தக்ஷிணாயத்தின் ஆறுமாதங்கள் இவற்றில் இறக்கும் யோகி சந்திரனுடைய ஒளியை அடைந்து திரும்பிவிடுகிறான்.*

'புகை' மற்றும் 'நெருப்பு' என்பவை அவற்றின் ஆதிபத்தியத் தேவதைகளாகும். அதுபோல் கிருஷ்ணபக்ஷம் என்பது அதன் ஆதிபத்தியத் தேவதையாகும். தக்ஷிணாயனத்தின் ஆறுமாதங்களும், முற்கூறியதுபோல் தேவதையேயாகும். இப்பாதையின் மூலம் யோகியானவன் - யக்ஞம் போன்றவற்றைச் செய்யும் கர்மி - தனது கர்மத்தின் பலனாக சந்திரனின் ஒளியை (சொர்க்கம்) எய்துகிறான். அப்பலன் தீர்ந்து போனவுடன் மீண்டும் பூமிக்குத் திரும்பிவிடுகிறான்.

**शुक्लकृष्णे गती ह्येते जगतः शाश्वते मते ।**
**एकया यात्यनावृत्तिमन्ययावर्तते पुनः ॥२६॥**

**ஶுக்ல - க்ருஷ்ணே கதீ ஹ்யேதே ஜகத: ஶாஶ்வதே மதே ।**
**ஏகயா யாத்யனாவ்ருத்திம் அன்யயா(ஆ)வர்த்ததே புன: ॥ 26॥**

*ஒளியும், இருளும் என்ற இவ்விருவழிகளும் உலகிற்கு என்றும் உள்ளனவாகக் கருதப்படுகின்றன. ஒன்றினால் (ஒருவன்) திரும்பி வாராமையை அடைகின்றான். மற்றொன்றினால் மீண்டும் திரும்பிவருகிறான்.*

ஒன்று ஒளிவழியாகும். காரணம் அது அறிவைத் துலங்கச் செய்கிறது. மற்றொன்று இருள் வழியாகும். காரணம் ஒளியை மங்கச் செய்கிறது.

இவ்விரண்டு வழிகளும் இவ்வுலகில் கர்மம் செய்பவர்களுக்கும், ஞானத்தில் ஈடுபாடுடையவர்களுக்கும் மாத்திரமேயன்றி எல்லோருக்கும் உரியதல்ல. லௌகீக வாழ்க்கை நித்தியமாக இருக்கும் காரணத்தினால் அப்பாதைகளும் நித்தியமானவையேயாகும். அவற்றுள் ஒன்றினால் (ஒருவன்) திரும்பிவாராமையை அடைகிறான். மற்றொன்றினால் மீண்டும் திரும்பிவருகிறான்.

नैते सृती पार्थ जानन्योगी मुह्यति कश्चन ।
तस्मात्सर्वेषु कालेषु योगयुक्तो भवार्जुन ॥ २७॥

**நைதே ஸ்ருதீ பார்த்த ஜானன் யோகீ முஹ்யதி கஶ்சன ।**
**தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு யோக - யுக்தோ பவார்ஜுன ॥ 27॥**

*பார்த்தா! இவ்வழிகளை அறிகின்ற எந்த யோகியும் மயங்குவதில்லை. ஆதலால் அர்ஜுனா! நீ எக்காலத்தும் யோகத்தில் கலந்திரு.*

'இவ்விரண்டு வழிகளையும் அறிகின்றவன்' அதாவது ஒன்று சம்சாரத்திற்கும் மற்றொன்று முக்திக்கும் இட்டுச் செல்கின்றது என்று அறியும் யோகி ஒருநாளும் மயங்குவதில்லை. ஆகையால் அர்ஜுனா! எப்போதும் நீ யோகத்தில் கலந்திருப்பாயாக - ஒரு முகப்பட்டவனாக இருப்பாயாக.

அந்த யோகத்தின் மகிமையைக் கேட்பாயக:

वेदेषु यज्ञेषु तपःसु चैव दानेषु यत्पुण्यफलं प्रदिष्टम् ।
अत्येति तत्सर्वमिदं विदित्वा योगी परं स्थानमुपैति चाद्यम् ॥ २८॥

**வேதேஷு யஜ்ஞேஷு தப:ஸு சைவ தானேஷு யத்**
**புண்ய-பலம் ப்ரதிஷ்டம் ।**
**அத்யேதி தத்ஸர்வம் இதம் விதித்வா யோகீ பரம் ஸ்தானம்**
**உபைதி சாத்யம் ॥ 28॥**

*யோகியானவன் இதனை அறிந்து வேதங்களிலும் யக்ஞங்களிலும் தவங்களிலும், தானங்களிலும் எது புண்ணியத்தின் பயனாகக் கூறப்பட்டுள்ளதோ அது அனைத்தையும் கடந்து ஆதி நிலையாகிய பரநிலையை எய்துகிறான்.*

வேதங்களை முறையாகக் கற்பதினாலும், யாகங்களைச் செய்வதாலும், தவங்களை நன்கு இயற்றுவதாலும் எத்தகைய புண்ணிய பலன்கள் கிடைக்கும் என்று சாத்திரங்கள் கூறுகின்றனவோ, அவற்றையெல்லாம் ஏழு வினாக்களுக்குப் பகவானால் அளிக்கப்பட்டப் பதில்களை நன்கு புரிந்து கொண்டு, அவ் உபதேசங்களைப் பின்பற்றும் யோகி கடந்து நிற்கிறான்.

மேலும் அவன் ஈசுவரனின் பரமபதத்தை அடைகிறான். - அது ஆதியிலுள்ளதாகும். - அதாவது அவன் முதற் காரணமாக விளங்கும் பிரம்மத்தை எய்துகிறான்.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்மவித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீ .மத் பகவத் கீதையில் "அக்ஷரப்ரஹ்ம யோகம்" என்னும் எட்டாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் ஒன்பது

# ராஜ வித்தியா ராஜ ரகசிய யோகம்

ஸுஷும்நை என்னும் நாடியின் வழியே இதயம், கழுத்து, இருபுருவங்களுக்கு மத்தியில் பிராணனை நிறுத்துகின்ற யோகமானது எட்டாம் அத்தியாயத்தில் எடுத்துரைக்கப்பட்டது. மேலும் அதில் நெருப்பு, ஒளி, முதலியவற்றின் வழியே படிப்படியாகப் பிற்காலத்தில் பிரம்மத்தை எய்துவதாகிய திரும்பி வாராமையும் விளக்கப்பட்டது. அடுத்து ''முக்தியை இம்முறையினால் மட்டுமேயன்றி பிற முறைகளினால் பெற முடியாது என்னும் ஐயத்தை நீக்கும் பொருட்டுப் பகவான் பின்வருமாறு கூறினார்:

श्रीभगवानुवाच

इदं तु ते गुह्यतमं प्रवक्ष्याम्यनसूयवे ।
ज्ञानं विज्ञानसहितं यज्ज्ञात्वा मोक्ष्यसेऽशुभात् ॥१॥

*ஸ்ரீ பகவான் உவாச*

**இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி அநஸூயவே**
**ஜ்ஞானம் விஜ்ஞான-ஸஹிதம் யஜ் ஜ்ஞாத்வா**
**மோக்ஷ்யஸே (அ)ஸுபாத்** ॥ 1॥

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***நீ எதனை அறிந்து அஞ்ஞானமாகியத் தீமையினின்று விடுபடுவாயோ அப்படிப்பட்ட இந்த அதிரகசியமானதும், விஞ்ஞானத்துடன் கூடியதுமாகிய ஞானத்தை அசூயையற்ற உனக்கு எடுத்துரைப்பேன்.***

'இந்த' - முந்தின அத்தியாயங்களில் விளக்கப்பட்டதும், அடுத்து விளக்கப்படப் போவதுமான பிரம்ம ஞானத்தினை. 'இனி' - என்னும் சொல் தியானத்தை விட ஞானம் உயர்ந்தது என்று குறிப்பிடுகிறது. முக்தி பெறுவதற்கு இந்த மெய்ஞ்ஞானமே உரிய வழியென்று சுருதி மற்றும் ஸ்மிருதிகள் கூறுகின்றன.

''எல்லாம் வாசுதேவனே'' - (பகவத் கீதை 7-19)

''இவையனைத்தும் ஆத்மாவே'' - (சா-உ. 7-25-2)

"இரண்டற்ற ஒன்றேயாகும்" - (சா.உ.6-2-1)

மேலும் முக்தியடைதற்கு இதைவிட நேரான மார்க்கம் வேறொன்றுமில்லை என்பதை சுருதி பின்வருமாறு கூறுகின்றது.

"இவ்வாறு அறியாது, வேறுவிதமாக அறிந்து கொள்ளும் பிற மன்னர்கள் அழிகின்ற உலகங்களை எய்துகின்றனர்" - (சா.உ.6-2-1)

இந்த ஞானம் எய்தப் பெற்றால் நீ சம்சாரத்தினின்றும் விடுபடுவாய்.

**राजविद्या राजगुह्यं पवित्रमिदमुत्तमम् ।**
**प्रत्यक्षावगमं धर्म्यं सुसुखं कर्तुमव्ययम् ॥ २॥**

**ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ரம் இதம் உத்தமம் ।**
**ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸு - ஸுகம் கர்த்தும் அவ்யயம் ॥ 2॥**

*இது வித்தைகளில் அரசன்; இரகசியங்களிலும் அரசன்; உத்தமமானது; தூய்மை தருவது; நேரில் காண்பதற்குரியது; அறத்தினின்று வழுவாதது; செய்தற்கு எளிதானது; அழிவற்றது.*

இது 'வித்தைகளில் அரசன் என்றழைக்கப்படுகிறது. காரணம் அதீத ஒளிமிக்கதாகும். வித்தைகள் எல்லாவற்றிலும் பிரம்ம வித்தையே நன்கு ஒளிர்கின்றது. அதுபோல் இரகசியங்களிலும் இது அரசனாகும். தூய்மை செய்வன எல்லாவற்றிலும் இதுவே சிறந்ததாகும். பிரம்ம ஞானமே தூய்மை செய்வதனைத்திலும் மிகமிக உயர்ந்ததாகும். ஆயிரக்கணக்கானப் பிறவிகளில் சேர்க்கப்பட்டத் தர்மம், அதர்மம் முதலிய கர்மவினைகளின் பயன்களை பிரம்ம ஞானமானது கணப்பொழுதில் வேரோடும், வேரடி மண்ணோடும் சுட்டுச் சாம்பலாக்கி விடுகின்றது. அதனால் அதன் தூய்மை செய்யுந்தன்மையைக் கூறவும் வேண்டுமோ? இதற்கும் மேலாக அது இன்ப அனுபவங்களை உணர்வதுபோல் எளிதில் நேரடியாக உணரக் கூடியதுமாகும். பல்வேறு நலன்களை உடையவை, தர்மத்திற்கு விரோதமானவையாகக் காணப்படலாம். ஆனால் ஆத்ம ஞானமோ தர்மத்திற்கு எதிரானதல்ல. அது தர்மத்திற்கு இசைந்ததாகும். அப்படியானால் அது அடைதற்கு அரியதாகும் என்றால் இல்லை, ரத்தினங்களை பகுத்தறியும் அனுபவ அறிவு போல மிக எளிதில் அடையத்தக்கதாகும் என்று பகவான் கூறுகிறார். சிறிது சிரமத்தின் பேரில் அடையக் கூடியவற்றின் பயன்கள் சிறிதளவும், மிகுந்த சிரமத்தின் பேரில் அடையக் கூடியவற்றின் பயன்கள் பெரிதளவும் காணப்படுகின்றது. ஆகவே, இப்பிரம்ம ஞானம் அடைதற்கு எளிதானதாயின், அதன் பயன் தீருமளவில் அது அழிந்து விடுமே என்றால் அவ்வாறன்று. அழிவற்றது என்கிறார். கர்மத்திற்கு அதன் பயனால் அழிவு உண்டாவது போல் ஆத்ம ஞானத்திற்கு அதன் பயனால் அழிவு உண்டாவதில்லை. ஆகவே ஆத்ம ஞானத்தை நாட வேண்டும்.

अश्रद्दधानाः पुरुषा धर्मस्यास्य परन्तप
अप्राप्य मां निवर्तन्ते मृत्युसंसारवर्त्मनि ॥ ३॥

**அஶ்ரத்ததானா: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப**
**அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யுஸம்ஸாரவர்த்மனி ॥ 3॥**

*பகைவனைச் சுடுவோய்! இந்தத் தருமத்தில் நம்பிக்கையற்ற மனிதர்கள் என்னை அடையாமல் சாதலுக்குரிய சம்சார வழியில் நிலை பெறுகின்றனர்.*

இந்த ஆத்ம ஞானத்தின் தன்மையிலும், பயனிலும் நம்பிக்கையில்லாதவர்கள், நாத்திகர்கள் , அசுரக் கொள்கைகளைச் சரண புகுந்த பாவிகள், தேகமே ஆத்மா என்று நினைக்கும் லௌகீகவாதிகள், அவர்கள் மரணம் சம்பவிக்கும் லௌகீக வாழ்க்கைப் பாதையில் நிலைபெறுகின்றனர். அப்பாதை விலங்குகளுக்குரியது. அல்லது நரகத்திற்கு இட்டுச் செல்வதாகும். அவர்கள் என்னை அடைதற்குச் சாதனமாக விளங்கும் பக்தி நெறி கூட எய்தப் பெறாது அப்பாதையிலேயே நிலைத்திருக்கின்றனர்.

போற்றிக் கூறுவதன் மூலம் அர்ஜுனனின் கவனத்தை ஈர்த்து பகவான் கூறுகிறார்.

मया ततमिदं सर्वं जगदव्यक्तमूर्तिना ।
मत्स्थानि सर्वभूतानि न चाहं तेष्ववस्थितः ॥ ४॥

**மயா ததம் இதம் ஸர்வம் ஜகத் அவ்யக்த மூர்த்தினா ।**
**மத்ஸ்தானி ஸர்வபூதானி ந சாஹம் தேஷ்வவஸ்தித: ॥ 4॥**

*எனது அவ்யக்த வடிவத்தால் இந்த உலகம் முழுவதும் வியாபிக்கப்பட்டுள்ளது. பொருள்கள் எல்லாம் என்னிடத்தில் நிலைபெற்றுள்ளன. அவற்றினிடத்து நான் நிலைபெறுவதில்லை.*

'என்னால்' - எனது பரம வடிவத்தால் இவ்வுலகம் முழுதும் வியாபிக்கப்பட்டிருக்கிறது. எனது அவ்வடிவம் அவ்யக்தமானதாகும். - புலனுணர்வுக்கு அப்பாற்பட்டதாகும். எனது அந்த அவ்யக்த வடிவத்தில் பிரம்மதேவன் முதல் சிறுபுல் வரையுள்ள எல்லாப் பொருள்களும் நிலை பெற்றுள்ளன. ஆத்மா இல்லாத எப்பொருளும் உணரக் கூடியப் பொருளாக முடியாது. ஆகையால், அவை என்னில் நிலைபெறுகின்றன அல்லது என்னையேத் தமது ஆத்மாவாகக் கொண்டிருக்கின்றன. அதனால்தான் பொருள்கள் என்னிடத்தில் நிலைபெறுகின்றனவென்று கூறப்படுகின்றது. அப்பொருள்களுக்கு நான் ஒருவனே ஆத்மாவாக இருக்கின்ற போதிலும் புத்தி மயக்கம் உடையோர்க்கு நான் அப்பொருள்களில் நிலைபெறுவதாகத் தோன்றுகின்றது. உருவமுடைய ஒன்றிற்கு மற்றொன்றின் தொடர்பு இருப்பது

போல் எனக்கு எவ்விதத் தொடர்பும் இல்லை. ஆதலால் நான் அப்பொருள்களிடத்து நிலை பெறுவதில்லை. நிச்சயமாக நான் ஆகாயத்திற்கும் கூட உள்ளே இருப்பவன் ஆவேன். எந்தவொரு பொருளோடும் தொடர்பில்லாத ஒன்று, ஒரு கொள்கலத்தில் உள்ளது போல் எங்கும் நிலைபெறுவதில்லை.

ஆகவே நானும் எப்பொருளோடும் தொடர்பின்றி இருக்கிறேன்.

**न च मत्स्थानि भूतानि पश्य मे योगमैश्वरम् ।**
**भूतभृन्न च भूतस्थो ममात्मा भूतभावन: ॥ ५॥**

**ந ச மத் - ஸ்தானி பூதானி பஶ்ய மே யோகம் ஐஶ்வரம் ।**
**பூதப்ருன்ன ச பூதஸ்தோ மமாத்மா பூத பாவன: ॥ 5॥**

*மேலும் பொருள்கள் என்னிடம் நிலைபெறுவதுமில்லை. எனது தெய்வீகமான யோகத்தைப் பார். என்னுடைய ஆத்மா பொருள்களைத் தாங்குவது, பொருள்களை உண்டாக்குவது ஆயினும் பொருள்களிடத்து நிலைபெறுவதில்லை.*

பிரம்ம தேவன் உள்ளிட்டப் பொருள்கள் என்னிடம நிலை பெறுவதில்லை. எனது தெய்வீக யோகத்தின் அமைப்பினை அதாவது ஆத்மாவின் இயற்கையினைப் பார். அவ்வாறே சுருதிகளும், ஆத்மாவிற்கு எதனோடும் தொடர்பில்லை என்பதைக் கண்டு அதன் பற்றற்ற நிலையினை எடுத்துரைக்கின்றன. ''பற்றுதலில்லாதது எதனிடத்தும் பற்று வைப்பதில்லை'' (பி.உ.3-9-26)

மற்றொரு விந்தையைப் பார். எனது ஆத்மா எப்பொருளோடும் தொடர்பற்றதாக இருப்பினும் எல்லாப் பொருள்களையும் தாங்குகின்றது, எனினும் முற்கூறியுள்ளபடி எப்பொருளினிடத்தும் நிலைபெறுவதில்லை. அவ்வாறெனில் பகவான் ''என்னுடைய ஆத்மா'' என்று கூறுகின்றாரே என்றால் அதற்குப் பதில் கூறுவோம். உண்மையான ஆத்மாவினின்று தேகத்தின் தொடர்பினைப் பிரித்து அதில் 'நான்' என்னும் எண்ணத்தை வைத்து சாதாரண ஜனங்களைப் பின்பற்றிப் பகவான் 'இது என்னுடைய ஆத்மா' என்று கூறுகிறார். ஆயினும் ஆத்மா தன்னிலிருந்து வேறானது என்று பாமர ஜனங்கள் கருதுவது போல் அவர் கருதுபவரல்லர்.

மேலும் எனது ஆத்மாவே பொருள்களை உண்டாக்குகின்றது அல்லது பல்கிப் பெருகச் செய்கின்றது.

முந்தைய இரண்டு சுலோகங்களிலும் கூறப்பட்டக் கருத்தினை பகவான் ஒரு எடுத்துக்காட்டின் மூலம் விளக்குகிறார்.

**यथाकाशस्थितो नित्यं वायुः सर्वत्रगो महान् ।**
**तथा सर्वाणि भूतानि मत्स्थानीत्युपधारय ॥६॥**

**யதா(ஆ)கா ஶஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ர கோ மஹான் ।**
**ததா ஸர்வாணி பூதானி மத்ஸ்தானீதி உபதாரய ॥ 6॥**

*எங்கும் உலவுவதும் பெரியதுமானக் காற்று எப்போதும் எவ்வாறு வானில் நிலைபெற்றுள்ளதோ அவ்வாறு எல்லாப் பொருள்களும் என்னில் நிலைபெற்றுள்ளனவென்று அறிந்து கொள்.*

எங்கும் உலவுவதும் அளவில் பெரியதுமானக் காற்று எப்போதும் வானில் நிலைபெற்றுள்ளதை இவ் உலகில் நாம் காண்கிறோம். அதுபோன்றே எல்லாப் பொருள்களும் வானைப் போல் எங்கும் வியாபித்திருக்கும் என்னிடம் எவ்விதத் தொடர்புமின்றி நிலை பெற்றுள்ளன.

இவ்வாறு காற்று வானில் இருப்பதைப் போல் பிரபஞ்சம் உள்ளவரை எல்லாப் பொருள்களும் என்னிடத்தில் இருக்கின்றன.

**सर्वभूतानि कौन्तेय प्रकृतिं यान्ति मामिकाम् ।**
**कल्पक्षये पुनस्तानि कल्पादौ विसृजाम्यहम् ॥७॥**

**ஸர்வபூதாணி கௌந்தேய ப்ரக்ருதிம் யாந்தி மாமிகாம் ।**
**கல்பக்ஷயே புனஸ்தானி கல்பாதௌ விஸ்ருஜாம்யஹம் ॥ 7॥**

*குந்தி மைந்த! எல்லாப் பொருள்களும் கல்பத்தின் முடிவில் எனது பிரகிருதியை அடைகின்றன. கல்பத்தின் தொடக்கத்தில் நான் அவற்றை மறுபடியும் படைக்கிறேன்.*

பிரகிருதி - முக்குணவடிவமானத் தாழ்ந்த பிரகிருதி. கல்பத்தின் முடிவில் - எல்லாம் ஒடுங்கும் பிரளயகாலத்தில். கல்பத்தின் தொடக்கத்தில் - எல்லாம் உற்பத்தியாகும் காலத்தில் (எல்லாம் வெளிப்படும் காலத்தில்). படைக்கிறேன் - உண்டாக்குகிறேன் (மீண்டும் வெளிப்படுத்துகிறேன்)

இவ்வாறு அவித்யையாகிய,

**प्रकृतिं स्वामवष्टभ्य विसृजामि पुनः पुनः ।**
**भूतग्राममिमं कृत्स्नमवशं प्रकृतेर्वशात् ॥८॥**

**ப்ரக்ருதிம் ஸ்வாம் அவஷ்டப்ய விஸ்ருஜாமி புன: புன: ।**
**பூதக்ராமம் இமம் க்ருத்ஸ்னம் அவஸம் ப்ரக்ருதேர் வஶாத் ॥ 8॥**

*எனது பிரக்ருதியை வசப்படுத்தி பிரக்ருதியின் வசப்பட்டதால் தம் வசமிழந்த பொருள் கூட்டம் முழுவதையும் நான் மீண்டும் மீண்டும் படைக்கின்றேன்.*

பிரக்ருதியினின்றும் பிறந்து சுபாவத்தால் சுதந்திரமற்று அவித்யை முதலிய குற்றங்களால் ஈர்க்கப்பட்டு நம் எதிரே இருக்கும் இப்பொருள் கூட்டத்தை எல்லாம் நான் மீண்டும் மீண்டும் படைக்கின்றேன்.

அவ்வாறெனில் இப்பொருள் கூட்டத்தை எல்லாம் ஏற்றத் தாழ்வுடன் படைக்கும் பரமேசுவரனான உமக்கு அவ்வாறு ஏற்றத் தாழ்வுடன் படைக்கும் காரணத்தினால் தர்மம், அதர்மத்தினோடுத் தொடர்பு உண்டாகும், என்னும் ஐயத்திற்குப் பகவான் பின்வருமாறு பதில் கூறுகிறார்.

**न च मां तानि कर्माणि निबध्नन्ति धनञ्जय**
**उदासीनवदासीनमसक्तं तेषु कर्मसु ॥९॥**

**ந ச மாம் தானி கர்மாணி நிபத்னந்தி தனஞ்ஜய**
**உதாஸீனவத் ஆஸீனம் அஸக்தம் தேஷு கர்மஸு ॥ 9॥**

*தனஞ்ஜயா! அந்தச் செயல்கள், அச்செயல்களின் மீது பற்றற்றும், உதாசீனனைப் போன்றும் இருப்பவனாகிய என்னைக் கட்டுப்படுத்துவதில்லை.*

'பொருள் கூட்டத்தை ஏற்றத்தாழ்வுடன் படைப்பதாகிய எனது செயல்கள் ஈசுவரனாகிய என்னைக் கட்டுப்படுத்துவதில்லை. ஓ அர்ஜுனா! இதன் காரணம் என்னவென்றால் நான் உதாசீனனாக (எதனோடும் தொடர்பற்றவனாக) இருக்கின்றேன்'' என்று பகவான் கூறுகிறார். ஆத்மாவிற்கு மாற்றமில்லை என்பதை நன்கறிந்த நான் ஓர் உதாசீனனைப் போல் செயலின் பயனில் பற்றற்றவனாக இருக்கின்றேன். அதாவது நான் செய்கிறேன் என்னும் ஆணவமின்றி இருக்கின்றேன். ஆகவே, பிறர் விஷயத்திலும் கூட கர்த்தா என்னும் ஆணவமின்மையும், பயனிலே பற்றின்மையும் (தர்ம அதர்மத்திலிருந்து) விடுதலை பெறுவதற்குக் காரணமாகின்றன. இல்லையேல் பட்டுப் பூச்சியானது அதன் நூலில் சிக்கிக் கொள்வது போலக் குழம்பிய மனிதன் அவனது செயல்களில் சிக்கிக் கொள்கிறான்.

முந்தைய சுலோகத்தில் 'நானே பொருள் கூட்டத்தைப் படைக்கின்றேன்' (9-7) என்று கூறியதற்கும், இப்போது 'உதாசீனனைப் போல் இருக்கின்றேன்' என்று கூறுவதற்கும் ஒரு முரண்பாடு இருப்பதாகத் தோன்றலாம். அதனை நீக்கும் பொருட்டு பகவான் கூறுகிறார்:

**मयाध्यक्षेण प्रकृतिः सूयते सचराचरम् ।**
**हेतुनानेन कौन्तेय जगद्विपरिवर्तते ॥१०॥**

**மயாத்யக்ஷேண ப்ரக்ருதி: ஸூயதே ஸ சராசரம்**
**ஹேதுனா(அ)னேன கௌந்தேய ஜகத் விபரிவர்த்ததே ॥ 10॥**

*எனது மேற்பார்வையினால் பிரகிருதி அசையும் பொருட்களையும் அசையாப் பொருட்களையும் பிறப்பிக்கின்றது. இந்தக் காரணத்தினால்தான் குந்தி மைந்த! உலகம் சுழல்கின்றது.*

மாறாத சாட்சியாக விளங்கும் மேற்பார்வையாளனாகிய என்னால், முக்குணங்களினாலான எனது மாயை அல்லது அவித்யை அசையும் அசையா உயிர்களோடு கூடிய உலகத்தை உண்டாக்குகிறது. அதனால்தான் சுவே.உ. மந்திரம் 6-11. 'மெய்ப்பொருள் ஒன்றே. அது ஒளிமயமானது; எல்லாப் பொருட்களிலும் மறைந்துள்ளது. எங்கும் வியாபித்திருக்கிறது. அனைவரின் ஆத்மா; செயல்களின் மேற்பார்வையாளன்; எல்லாவற்றிற்கும் உறைவிடம்; அனைத்திற்கும் சாட்சி; அறிவாயுள்ளது; தனியானது; நிர்க்குணமானது'' என்று கூறுகிறது.

நான் சுத்த சாட்சியாகவும் மேற்பார்வையாளனாகவும் இருக்கின்ற காரணத்தினால் வெளிப்பட்டதும் வெளிப்படாததுமாகியப் பிரபஞ்சம், அசையும் அசையா பொருள்களுடன் அதன் எல்லா நிலைகளிலும் சுழல்கின்றது. 'நான் இதனை அனுபவிப்பேன்' 'நான் இதனைக் காண்கிறேன்' 'நான் இன்பம் அனுபவிக்கின்றேன்' 'நான் துன்பம் அனுபவிக்கின்றேன்' என்று இவ்வுலகில் காணப்படும் இன்னோரன்ன செயல்கள் எல்லாம் அறிவிலிருந்து கிளைப்பவையாகும். அவை அறிவிலே தோன்றி, அறிவிலே முடிகின்றன. 'இவ்வுலகின் மேற்பார்வையாளர் பரமவானத்தில் (இதயத்தில்) இருக்கின்றார்' (ரிக்,வே.10.129.7: தை.ப்ரா.2.8.9) அதனால் பகவானைத் தவிர இங்கு அனுபவிப்பவன் வேறொருவன் இல்லையாதலால், இவ்வுலகம் ஏன் படைக்கப்பட்டது? என்று கேட்பதோ, அக்கேள்விக்குப் பதிலளிப்பதோ பொருத்தமற்றதாகும். இதனை 'இவ்விகார சிருஷ்டி எதிலிருந்து பிறந்தது? ஏன் பிறந்தது? என்பதை யார் அறிவார்? யார் இதனை விளக்கவல்லார்?' (ரிக்.வே.10.129.6, தை.ப்ரா.2.89) என்னும் வேத மந்திரங்களால் அறிக. பகவானும் இதனை பகவத் கீதையில் (5-15) 'அஞ்ஞானத்தால் ஞானம் மூடப்பட்டிருக்கின்றது. அதனால் உயிர்கள் மயக்கமெய்துகின்றன,' என்று உணர்த்தியுள்ளார். (சிருஷ்டியானது அஞ்ஞானம் அல்லது அறியாமையினாலானது என்று அறிக).

நான் இவ்வாறு நித்தியனாய், சுத்தனாய், முக்தனாய், முற்றும் உணர்ந்தவனாய் உயிர்கள் அனைத்தினுடைய ஆத்மாவாக இருந்தபோதிலும்,

**अवजानन्ति मां मूढा मानुषीं तनुमाश्रितम् ।**
**परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥ ११॥**

**அவஜானந்தி மாம் மூடா மானுஷீம் தனும் ஆஶ்ரிதம்**
**பரம் பாவம் அஜானந்தோ மம பூத - மஹேஶ்வரம் ॥ 11॥**

*உயிர்கட்கெல்லாம் மகேசுவரனாயுள்ள எனது மேலாந் தன்மையை அறியாத மூடர்கள் மனித உடலினை மேற்கொண்ட என்னை அவமதிக்கின்றனர்.*

பகுத்தறிவில்லா மூடர்கள் "நான் பரமாத்ம உண்மை, ஆகாயத்தைப் போல விரிந்தவன். அதனைவிட நுண்மையானவன், உயிர்கள் அனைவரின் ஆத்மா, அவர்களின் பரமேசுவரன்' என்னும் எனது மேலாந்தன்மையினை அறியாது என்னை அவமதிக்கின்றனர். இவ்வாறு என்னை அவமதிப்பதால் அப்பேதையர் அழிந்து போகின்றனர்.

எப்படி?

**मोघाशा मोघकर्माणो मोघज्ञाना विचेतस: ।**
**राक्षसीमासुरीं चैवं प्रकृतिं मोहिनीं श्रिता: ॥ १२॥**

**மோகாஶா மோக-கர்மாணோ மோக-ஜ்ஞானா விசேதஸ: ।**
**ராக்ஷஸீம் ஆஸுரீம் சைவ ப்ரக்ருதிம் மோஹினீம் ஶ்ரிதா: ॥ 12॥**

*வீணாசை உடையோரும், வீண் செயல் செய்வோரும், வீணறிவுடையோரும், விவேகமற்றோரும் மதியை மயக்கும் ராக்ஷஸ, அசுரத் தன்மைகளைச் சார்ந்திருக்கின்றனர்.*

அவர்கள் வீணாசை உடையவர்கள். அவர்கள் பகவானைப் பழிப்பதால் தமது ஆத்மாவாக இருப்பவரை அலட்சியம் செய்வதால் அக்னி ஹோத்திரம் போன்ற எக்கர்மங்களைச் செய்யினும் அவை பயன் தரமாட்டா. அவ்வண்ணமே அவர்களின் அறிவும், பயனற்றதுவேயாகும். அதாவது அவர்கள் பகுத்தறிவில்லாதவர் ஆவர். மேலும் அவர்கள் மதியை மயக்கும் இவ்வுடலே ஆத்மாவென்று கூறுகின்ற ராக்ஷஸ, அசுரத்தன்மை உடையவர்களாக இருக்கின்றனர். அவர்கள் 'வெட்டு, குத்து, குடி, விழுங்கு, பிறர் பொருளைப் பிடுங்கு' என்று முழக்கமிடுவதை வழக்கமாகக் கொண்டிருக்கின்றனர். அவர் தம் செயல்கள் கொடூரமானவையாகும். 'அவை அசுரலோகங்கள் என்றழைக்கப்படுகின்றன' (ஈ.உ.3)

இதற்கு மாறாக, பகவத் பக்தியினால் மோட்ச வழியிலே செல்லும் நம்பிக்கையாளர்கள்,

**महात्मानस्तु मां पार्थ दैवीं प्रकृतिमाश्रिता: ।**
**भजन्त्यनन्यमनसो ज्ञात्वा भूतादिमव्ययम् ॥ १३॥**

**மஹாத்மானஸ் து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதிம் ஆஶ்ரிதா:**
**பஜந்தி அனன்ய-மனஸோ ஜ்ஞாத்வா பூதாதிம் அவ்யயம் ॥ 13॥**

*பார்த்தா! மகாத்மாக்கள் தெய்வத்தன்மை உடையோராய் வேறு சிந்தனை இன்றி உயிர்களின் ஆதியும், அழிவற்றவனுமாக இருப்பவன் நான் என அறிந்து என்னை வழிபடுகின்றனர்.*

ஆனால் மகாத்மாக்கள் தெளிந்த மதியுடையோராய் என்னை பகவான் எனப் போற்றுகின்றனர். பார்த்தா! தெய்வத்தன்மை உடையோராய் - மனம், மொழி, மெய் அடக்கம், புலனடக்கம், தயை மற்றும் நம்பிக்கை உடையோராய் வேறு சிந்தனை இன்றி - என்னைத் தவிர வேறு எதையும் சிந்திக்காதவராய் அவர்கள் அழிவற்றவனாக அதாவது - ஆகாயம் போன்றவற்றிற்கும் உயிர்களுக்கும் நித்திய காரணனாக இருப்பவன் நான் - என்பதை அறிந்து என்னை வழிபடுகின்றனர். எவ்வாறு?

**सततं कीर्तयन्तो मां यतन्तश्च दृढव्रताः ।**
**नमस्यन्तश्च मां भक्त्या नित्ययुक्ता उपासते ॥१४॥**

**ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தஶ் ச த்ருட - வ்ரதா:**
**ந மஸ்யந்தஶ் ச மாம் பக்தயா நித்ய - யுக்தா உபாஸதே ॥ 14॥**

*எப்போதும் என்னைப் போற்றுவோராய். உறுதியான விரதமுடையோராய், முயற்சியுடையோராய், பக்தியுடன் வழிபடுவோராய் ஒரு நிலைப்பட்ட மனமுடையோராய் என்னைத் தொழுகின்றனர்.*

அவர்கள் எப்போதும் - பிரம்ம ஸ்வரூபமாகியப் பகவானான என்னை அவர்கள் எப்போதும் போற்றுகின்றனர். அவர்கள் புலனடக்கம், மனக்கட்டுப்பாடு, தயை, அஹிம்சை முதலியவற்றில் முயற்சியுடையோராய் இருக்கின்றனர். அவர்களின் விரதம் - அசைக்கவொண்ணா உறுதியுடையதாகும். அவர்கள் ஒரு நிலைப்பட்ட மனமுடையோராய், உள்ளத்தில் உறையும் ஆத்மாவான என்னை பக்தியோடு வழிபடுகின்றனர்.

அவர்கள் எவ்வெவ் வழிகளில் தொழுகின்றனர்? - பதில்

**ज्ञानयज्ञेन चाप्यन्ये यजन्तो मामुपासते ।**
**एकत्वेन पृथक्त्वेन बहुधा विश्वतोमुखम् ॥१५॥**

**ஜ்ஞானயஜ்ஞேன சாபி அன்யே யஜந்தோ மாம் உபாஸதே ।**
**ஏகத்வேன ப்ருதக்த்வேன பஹுதா விஶ்வதோ - முகம் ॥ 15॥**

*வேறு சிலர் ஞானமாகிய வேள்வியினால் எங்கும் முகமுள்ள (எங்கும் ஆத்மவடிவமாயுள்ள) என்னை ஒன்றாக, வேறாக வழிபடுகின்றனர்.*

ஞானம் என்னும் வேள்வியால் - பகவானைப் பற்றிய ஞானமே வேள்விதான். வேறுசிலர் அந்த ஞானம் என்னும் வேள்வியால் பிற தேவதைகளை வழிபடுவதைக் கைவிட்டு ஈசுவரனாகிய என்னை மட்டுமே வழிபடுகின்றனர். 'பரப்பிரம்மம் ஒன்றே' என்று உணர்ந்து அவர்கள் வழிபடுகின்றனர். மற்றவர்கள் பகவான் விஷ்ணுவே சூரியனாகவும், சந்திரனாகவும் விளங்குகின்றார் என்னும் ஞானத்தோடு என்னை வழிபடுகின்றனர். இன்னும் சிலர் பல்வேறு வடிவங்களில் என்னை - எங்கும் முகமுள்ள ஒரே பகவான் பல்வேறு வடிவங்களாக இருக்கின்றார், எல்லா வடிவங்களும் அவருடையதே என்னும் ஞானத்தால் - வழிபடுகின்றனர்.

பல்வேறு வடிவங்களில் வழிபடுகின்றனர் என்றால் அவர்கள் உம்மை மட்டுமே எப்படி வழிபடுகின்றனர்?

என்றால் - பதில் :

**अहं क्रतुरहं यज्ञः स्वधाहमहमौषधम् ।**
**मन्त्रोऽहमहमेवाज्यमहमग्निरहं हुतम् ॥१६॥**

**அஹம் க்ரதுர் அஹம் யஜ்ஞ: ஸ்வதா (அ)ஹம் ஔஷதம் ।**
**மந்த்ரோ (அ)ஹம் அஹம் ஏவாஜ்யம் அஹம் அக்னிர்**
**அஹம் ஹுதம் ॥ 16॥**

*நான் க்ரது; நான் யாகம்; நான் ஸ்வதா; நான் மருந்து; நான் மந்திரம்; நான் ஹவிஸ்; நான் அக்னி; நான் ஹோம கருமம்.*

வேதத்தில் விதிக்கப்பட்டுள்ள சடங்குகளுள் ஒன்றான 'க்ரது' என்பது நானே. ஸ்மிருதியில் விதிக்கப்பட்டுள்ள 'யாகம்' என்பது நானே, பித்ருக்களுக்குப் படைக்கப் படும் 'ஸ்வதா' என்னும் அன்னம் நானே. நெல், வாற்கோதுமை என்று உயிர்கள் அனைத்தும் உண்ணும் 'ஔஷதமாகிய' மருந்து நானே. அல்லது 'ஸ்வதா' என்பது சாதாரண உணவையும், 'ஔஷதம்' என்பது பிணி தீர்க்கும் மருந்தையும் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். எதன் மூலம் பித்ருக்களுக்கும், தேவர்களுக்கும் கொடுக்கப்படுகின்றதோ அந்த மந்திரம் நான். ஹவிஸும் நானேதான். எதில் ஹவிஸானது ஹோமம் செய்யப்படுகின்றதோ அந்த அக்னி நானே. அதுபோல் ஹவிஸை அர்ப்பித்தலாகிய ஹோம கருமமும் நானே ஆவேன்.

மேலும்,

पिताहमस्य जगतो माता धाता पितामहः ।
वेद्यं पवित्रमोङ्कार ऋक्साम यजुरेव च ॥१७॥

பிதா(அ)ஹம் அஸ்ய ஜகதோ மாதா தாதா பிதாமஹ: ।
வேத்யம் பவித்ரம் ஓம்கார ருக் ஸாம யஜுர் ஏவ ச ॥ 17॥

*இவ்வுலகின் தந்தையும், தாயும், தாங்குபவனும், பாட்டனும் அறியப்படுபவனும், பரிசுத்தமளிப்பவனும், ஓங்காரமும், ரிக், சாம, யஜுர் வேதங்களும் நானே ஆவேன்.*

இவவுலகைப படைதத தநதை நான். இதன் தாய் நான். இதனைத் தாங்குபவன் அல்லது உயிர்களுக்கு அவர்கள் செய்த கர்ம பலனைக் கொடுப்பவன் நானே. இதன் பாட்டனும், அறியப்படு பொருளும், ஓங்காரம், ரிக், யஜுர், சாமம் என்னும் அனைத்தும் நானே ஆவேன்.

மேலும்,

गतिर्भर्ता प्रभुः साक्षी निवासः शरणं सुहृत् ।
प्रभवः प्रलयः स्थानं निधानं बीजमव्ययम् ॥१८॥

கதிர் பர்த்தா ப்ரபு: ஸாக்ஷி நிவாஸ: ஶரணம் ஸுஹ்ருத்
ப்ரபவ: ப்ரளய: ஸ்தானம் நிதானம் பீஜம் அவ்யயம் ॥ 18॥

*சேருமிடமும், பேணி வளர்ப்பவனும், ஆள்பவனும், பார்த்துக் கொண்டிருப்பவனும், வாழுமிடமும், துன்பம் துடைப்பவனும், நண்பனும், பிறப்பிடமும், அழிவும், இருப்பிடமும், களஞ்சியமும், அழிவில்லா வித்தும் நானே.*

கதி என்பது கர்மங்களின் பயனாகும். பேணி வளர்ப்பவன் தாங்கிக் கொள்பவன் ஆவான். ஆள்பவன் எஜமானன் என்பதாகும்.

செய்யப்பட்டதற்கும், செய்யப்படாதிருப்பதற்கும் அவரே சாட்சியாக விளங்குகின்றார். வாழுமிடம் - எல்லா உயிர்களும், வசிக்குமிடம் அவரே ஆவார். ஆற்றொணாது வருந்துவோர்க்கு அவரே 'புகலிடம்' - அவரைப் புகலிடமாகக் கொண்டவர்களின் துன்பத்தை நீக்குபவர் ஆவார். கைம்மாறு கருதாது உதவி செய்யும் 'நண்பனும்' அவரே ஆவார். அவரே இவ்வுலகின் 'பிறப்பிடம்' ஆவார். அவரே இவ்வுலகின் அழிவிடமும் ஆவார். இவ்வுலகம் அவரிடம் இயல்கின்றபடியால் அவரே அதன் இருப்பிடமும் ஆவார். உயிர்கள் எதிர்காலத்தில் அனுபவிக்கப் போகும் பலன்களின் 'களஞ்சியமும்' அவரே ஆவார். முளைப்பவை எல்லாம் முளைவிடும் 'விதையும்' அவரே ஆவார். அந்த விதையானது வாழ்க்கை என்னும் சம்சாரம் உள்ளவரையில் இருப்பதால் 'அழிவில்லாதது' ஆகும். விதையின்றி ஒன்றும் முளைக்காது, எப்போதும் முளை காணப்படுவதால் விதையின் தொடர்ச்சியானது அற்றுப் போகவில்லை என்று தெரிகிறது.

மேலும்,

तपाम्यहमहं वर्षं निगृह्णाम्युत्सृजामि च ।
अमृतं चैव मृत्युश्च सदसच्चाहमर्जुन ॥ १९॥

**தபாமி அஹம் அஹம் வர்ஷம் நிக்ருஹ்ணாமி உத்ஸ்ருஜாமி ச ।**
**அம்ருதம் சைவ ம்ருத்யுஶ் ச ஸத் அஸச்சாஹம் அர்ஜுன ॥ 19॥**

*நான் வெப்பந்தருகிறேன், மழையைப் பெய்விக்கிறேன், பெய்ய விடாமல் தடுக்கின்றேன், அர்ஜுனா! சாதலும், சாதலின்மையும் உள்ளதும், இல்லதும் நானே.*

நான் சூரியனாகி சுட்டெரிக்கும் அதன் கதிர்களால் வெப்பந் தருகிறேன். சில கதிர்களால் மழை பெய்யச் செய்கிறேன். பின்பு சில கதிர்களால் மழையை எட்டு மாதங்கள் பெய்ய விடாது தடுக்கின்றேன். மீண்டும் அதனை மாரிக்காலத்தில் பெய்யச் செய்கிறேன். தேவர்களின் அமரத்துவமும், மனிதர்களின் மரணமும் நானே. காரணத்தோடு கூடிய காரியம் எதுவோ அது உள்ளது ஆகும். இதற்கு மாறானது 'இல்லது' ஆகும். காரணம் மற்றும் காரியம் என்னும் இவை இரண்டும் நானே ஆவேன். அர்ஜுனா! பகவான் முற்றிலும் இல்லாதவராக ஒரு போதும் ஆவதில்லை. அதுபோல் காரியமும், காரணமும் 'உள்ளதும்' 'இல்லதுமாக' ஒருபோதும் ஆவதில்லை.

முதலில் கூறியவாறு ஒன்றாகவும், வேறாகவும் ஞான வேள்விகளால் என்னை வழிபடும் ஞானம் உணர்ந்தோர் அவரவர் அனுபவ அறிவிற்கேற்ப என்னையே அடைகின்றனர். ஆனால் அஞ்ஞானிகளான ஆசை உடையவர்களோ,

त्रैविद्या मां सोमपाः पूतपापा- यज्ञैरिष्ट्वा स्वर्गतिं
प्रार्थयन्ते ।
ते पुण्यमासाद्य सुरेन्द्रलोक- मश्नन्ति दिव्यान्दिवि
देवभोगान् ॥ २०॥

**த்ரை வித்யா மாம் ஸோம-பா: பூதபாபா யஜ்ஞைரிஷ்ட்வா**
**ஸ்வர்கதிம் ப்ரார்த்தயந்தே ।**
**தே புண்யமாஸாத்ய ஸுரேந்த்ரலோகம் அஶ்நந்தி திவ்யான்**
**திவி தேவ-போகான் ॥ 20॥**

***மூன்று வேதங்களையும் கற்றறிந்தவர்கள், சோமபானமுண்டு, பாவம் நீங்கி பரிசுத்தராகி யாகங்களால் என்னை வழிபட்டு சொர்க்கம் வேண்டுகின்றனர். அவர்கள் புண்ணியமயமான தேவேந்திர உலகை அடைந்து வானுலகில் திவ்யமான தேவ போகங்களை அனுபவிக்கிறார்கள்.***

ரிக், யஜுர், சாமம் என்னும் மூன்று வேதங்களைக் கற்றுணர்ந்து சோம பானம் பருகி அதன் பயனாக பாவம் நீங்கி பரிசுத்தமடைந்தவர்கள், வசுக்கள் முதலிய தேவர்கள் வடிவத்தையுடைய என்னை 'அக்னிஷ்டோமம்' போன்ற யாகங்களால் வழிபட்டு சொர்க்கத்தை அடைய வேண்டுமென்று விரும்புகின்றனர். அவர்கள் தங்கள் புண்ணியத்தின் பலனாக நூறு யாகங்களைச் செய்த இந்திரனது உலகினை அடைந்து அங்கு மனிதர்க்குக் கிடைக்காத தேவ போகங்களை அனுபவித்து மகிழ்கின்றனர்.

**ते तं भुक्त्वा स्वर्गलोकं विशालं- क्षीणे पुण्ये**
**मर्त्यलोकं विशन्ति ।**
**एवं त्रयीधर्ममनुप्रपन्ना- गतागतं कामकामा लभन्ते ॥२१॥**

**தே தம் புக்த்வா ஸ்வர்க - லோகம் விஶாலம் க்ஷீணே புண்யே**
**மர்த்ய லோகம் விஶந்தி ।**
**ஏவம் த்ரயீ - தர்மம் அனுப்ரபன்னா கதாகதம் காம -**
**காமா லபந்தே ॥ 21॥**

*அவர்கள் அந்த விரிந்த சொர்க்க லோகத்தை அனுபவித்துப் புண்ணியம் தீர்ந்தவுடன் மனித உலகத்துக்குத் திரும்புகிறார்கள். இவ்வாறு மூன்று வேத அறநெறிகளைப் பின்பற்றியவராய் போகங்களில் இச்சை கொண்டு போதலையும் வருதலையும் அடைகின்றனர்.*

விரிந்த பரந்த சொர்க்க லோகத்தை அனுபவித்து மகிழ்ந்து பின்னர் அவர்கள் தம் புண்ணியம் தீர்ந்தவுடன் மனித லோகத்தை அடைகின்றனர். இவ்வாறு மூன்று வேதங்களின் தர்மங்களைக் கடைபிடித்து போகம் துய்க்க விரும்புபவர்கள் சொர்க்கத்துப் போய்க் கொண்டும் வந்து கொண்டும் இருக்கின்றனர். அவர்களுக்கு எங்கும் சுதந்திரம் என்பது இல்லை. இதுவே கருத்தாகும்.

ஆசைகள் நீங்கி உள்ளதை உள்ளபடிக் காணும் மனிதர்கள் எப்படி?

**अनन्याश्चिन्तयन्तो मां ये जनाः पर्युपासते ।**
**तेषां नित्याभियुक्तानां योगक्षेमं वहाम्यहम् ॥२२॥**

**அனன்யாஶ் சிந்தயந்தோ மாம் யே ஜனா: பர்யுபாஸதே ।**
**தேஷாம் நித்யாபியுக்தானாம் யோகக்ஷேமம் வஹாம்யஹம் ॥ 22॥**

*என்னைத் தவிர வேறு எதிலும் நாட்டமின்றி என்னையே சிந்திப்பவராய் எவர்கள் பரிவுடன் உபசரிக்கின்றார்களோ அந்த உறுதியுடைய மனிதர்களின் யோக க்ஷேமத்தை நான் கவனித்துக் கொள்கிறேன்.*

(என்னிலிருந்து) வேறானவரல்லராய், பரமபுருஷர் நாராயணனையே தமது ஆத்மாவாக உணர்ந்து அந்த ஆத்மாவையே எப்போதும் தியானித்து என்னை எங்கும் வழிபடுகின்ற பற்றறுத்தத் துறவிகளின் யோக க்ஷேமத்தை நான் பார்த்துக் கொள்கிறேன். யோகம் - அடையப் பெறாததை அடைதல், க்ஷேமம் - அதனைக் காப்பாற்றுதல். ஞானியின் ஆத்மா எனது ஆத்மா என்பது எனது கொள்கை. 'அவனே எனக்குப் பிரியமானவன்' (ப.கீ.7.17,18) அவர்களே எனது ஆத்மாவாகவும் எனக்குப் பிரியமானவர்களாகவும் இருக்கின்றனர். ஆனால் பிற பக்தர்களின் யோக க்ஷேமத்தையும் பகவான் பார்த்துக் கொள்கிறாரா? என்றால், ஆம் பார்த்துக் கொள்கிறார் என்றாலும் அதில் ஒரு வேறுபாடு இருக்கிறது. இப்பிற பக்தர்கள் அவர்களின் யோக க்ஷேமத்திற்காக அவர்களும் முயற்சி செய்கின்றனர். இதற்கு மாறாக, பகவானிலிருந்து தம்மை வேறாகக் காணாதவர்கள் தங்கள் யோக க்ஷேமத்திற்காக அவ்வாறு முயற்சிப்பதில்லை. அவர்கள் தம் வாழ்விலும், சாவிலும் எதையும் விரும்புவதில்லை. அவர்கள் பகவான் ஒருவரை மட்டுமே புகலிடமாகக் கொள்கின்றனர். ஆகவே அவர்களின் யோக க்ஷேமத்தைப் பகவானே பார்த்துக் கொள்கிறார்.

இங்ஙனம் வேறு தேவதைகளும்நீரே என்றால் அவர்களின் பக்தர்களும் உமது பக்தர்கள்தானே - ஆம்! அது உண்மையே.

**येऽप्यन्यदेवता भक्ता यजन्ते श्रद्धयान्विताः ।**
**तेऽपि मामेव कौन्तेय यजन्त्यविधिपूर्वकम् ॥२३॥**

**யே(அ)பி அன்ய - தேவதா - பக்தா யஜந்தே ஶ்ரத்தயான்விதா: ।**
**தே(அ)பி மாம் ஏவ கௌந்தேய யஜந்தி அவிதிபூர்வகம் ॥ 23॥**

*அன்னிய தேவதைகளை நம்பிக்கையுடன் எவர்கள் வழிபடுகின்றனரோ, அவர்களும் குந்தியின் மகனே! அறியாமையினால் என்னையே வழிபடுகின்றனர்.*

பிற தேவதைகளின் பக்தர்கள் அத்தேவதைகளை நம்பிக்கையுடன் வழிபடுகின்ற போதிலும் குந்தியின் மகனே! அவர்கள் என்னைத்தான் வழிபடுகின்றனர். ஆனால் அது முறையானதன்று. அதாவது அவ்வழிபாடு அறியாமையில் செய்யப்படுகின்றது. அவர்கள் எனது அறியாமை மிகு பக்தர்கள் என்பது கருத்து.

அவர்கள் ஏன் அறியாமையுடன் வழிபடவேண்டும் என்றால்,

**अहं हि सर्वयज्ञानां भोक्ता च प्रभुरेव च ।**
**न तु मामभिजानन्ति तत्त्वेनातश्च्यवन्ति ते ॥२४॥**

**அஹம் ஹி ஸர்வயஜ்ஞானாம் போக்தா ச ப்ரபுர் ஏவச ।**
**ந து மாம் அபிஜானந்தி தத்த்வேனாதஶ்ச்யவந்திதே ॥ 24॥**

*எல்லா யக்ஞங்களிலும் உண்பவனும் தலைவனும் நானே ஆவேன். ஆனால் அவர்கள் என்னை உள்ளபடி அறிவதில்லை அதனால் நழுவுகின்றனர்.*

சுருதி ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டுள்ள எல்லா வேள்விகளிலும் நானே வழிபடப்படுகின்றேன். உண்மையில் அவற்றில் உண்பவனும், தலைவனும் நானே ஆவேன். 'இந்த சரீரத்தில் நானேதான் அதியக்ஞம்' (ப.கீ.8-4) ஆனால் அவர்கள் என்னை அவ்வாறு அறிவதில்லை. அதனால் அவர்கள் அறியாமையுடன் யாகம் செய்து அதன் பயனிலிருந்து தவறுகின்றனர்.

பிற தேவதைகளின் மேல் பக்தி கொண்டு அறியாமையுடன் வழிபடுபவர்களுக்கும் யக்ஞத்தின் பலன் கிடைப்பதுண்டு. எப்படி?

**यान्ति देवव्रता देवान्पितॄन्यान्ति पितृव्रता: ।**
**भूतानि यान्ति भूतेज्या यान्ति मद्याजिनोऽपि माम् ॥२५॥**

**யாந்தி தேவவ்ரதா தேவ்ான் பித்ரூன் யாந்தி பித்ரு - வ்ரதா: ।**
**பூதானி யாந்தி பூதேஜ்யா யாந்தி மத்-யாஜினோ (அ)பி மாம் ॥ 25॥**

*தேவதைகளை வழிபடுவோர் தேவதைகளை அடைகின்றனர்; பிதிருக்களை வழிபடுவோர் பிதிருக்களை அடைகின்றனர். பூதங்களை பூஜை செய்வோர் பூதங்களை அடைகின்றனர். என்னை வழிபடுவோர் என்னை அடைகின்றனர்.*

தேவர்களிடத்துப் பக்தி கொண்டு அவர்களை வழிபடுவோர் தேவர்களை அடைகின்றனர். சிரார்த்தம் முதலிய கருமங்களை முறையே செய்து பிதிருக்களை வழிபடுவோர் 'அக்னிஷ்வாத்தர்' போன்ற பிதிருக்களை அடைகின்றனர். பூதங்களை பூஜை செய்வோர் விநாயகர்கள் மாதிரு கணங்கள் நான்கு பகினிகள் (சகோதரிகள்) முதலான பூத கணங்களை அடைகின்றனர். என்னை வழிபடுவதை வழக்கமாகக் கொண்டவர்கள் - விஷ்ணுபக்தர்கள் - என்னை அடைகின்றனர். இவையனைத்திலும் உழைப்பு ஒன்றாயிருந்தும் அறியாமையினால் அவர்கள் என்னை வழிபடுவதில்லை. ஆகையினால் அவர்கள் அற்பப்பயனை அடைகின்றனர். இதுவே கருத்தாகும்.

எனது பக்தர்கள் லௌகீக வாழ்க்கைக்கு திரும்பி வாராமை என்னும் நித்தியப் பலனை எய்துவதோடு, அவர்கள் எனது வழிபாட்டினை மிக எளிதாகவும் செய்கின்றனர். என்னை வழிபடுவது மிகமிக எளியதன்றோ, எங்ஙனம்?

**पत्रं पुष्पं फलं तोयं यो मे भक्त्या प्रयच्छति ।**
**तदहं भक्त्युपहृतमश्नामि प्रयतात्मन: ॥२६॥**

பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ப்ரயச்சதி ।
தத் அஹம் பக்தி - உபஹ்ருதம் அஸ்னாமி ப்ரயதாத்மன: ॥ 26॥

*எவன் எனக்கு இலையேனும் பூவேனும் கனியேனும் நீரேனும் பக்தியுடன் அளிக்கின்றானோ, தூயமனமுடைய அன்னோன் பக்தியுடன் அளித்ததை நான் உண்பேன்.*

இலையேனும், மலரேனும், கனியேனும், நீரேனும் தூயமனமுடைய ஒருவனால் பக்தியுடன் எனக்கு அளிக்கப்பட்டதென்றால் அதனை நான் ஏற்றுக் கொள்கின்றேன்.

இவ்வாறு இருப்பதினால்,

यत्करोषि यदश्नासि यज्जुहोषि ददासि यत् ।
यत्तपस्यसि कौन्तेय तत्कुरुष्व मदर्पणम् ॥ २७॥

யத் கரோஷி யத்அஸ்நாஸி யஜ்ஜுஹோஷி ததாஸி யத் ।
யத் தபஸ்யஸி கௌந்தேய தத் குருஷ்வ மத்-அர்ப்பணம் ॥ 27॥

*நீ எதனைச் செய்யினும் எதனை உண்பினும், எதனை ஹோமம் செய்யினும், எதனைத் தானமாகக் கொடுப்பினும், எந்தவொரு தவம் செய்யினும் குந்தி மைந்தனே! அதனை எனக்கு அர்ப்பணம் என்று செய்.*

தன்னிச்சையாக நடைபெறும் எதனை நீ செய்யினும் (உண்ணல், நடத்தல் போன்றவை) எதனை நீ உண்பினும், சுருதி ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டுள்ள எத்தகைய வேள்வியை நீ செய்யினும், பொன், உணவு, நெய் போன்று எதனை நீ அந்தணர்க்கும் பிறர்க்கும் தானமாக அளிப்பினும், எத்தவத்தைச் செய்யினும் அவற்றை குந்தி மைந்த! எனக்கு அர்ப்பணமென்று செய்வாயாக.

அவ்வாறு நீ செய்தால் உனக்கு என்ன உண்டாகும்? அதனைக் கேட்பாயாக.

शुभाशुभफलैरेवं मोक्ष्यसे कर्मबन्धनैः ।
संन्यासयोगयुक्तात्मा विमुक्तो मामुपैष्यसि ॥ २८॥

ஶுபாஶுபபலைர் ஏவம் மோக்ஷ்யஸே கர்ம பந்தனை: ।
ஸந்ந்யாஸ - யோக - யுக்தாத்மா விமுக்தோ மாம் உபைஷ்யஸி ॥ 28॥

*இவ்வாறு புண்ணிய பாவ பயன்களையுடைய கர்மக்கட்டுக்களினின்று நீ விடுபடுவாய். சந்நியாச யோகத்தில் நிலைபெற்ற மனத்தினனாய் என்னை எய்துவாய்.*

வினைகள் மற்றும் அவற்றின் பயன்களான நன்மை, தீமைகள் என்பவற்றிலிருந்து நீ விடுபடுவாய். இவ்வினைகளே ஒருவனை பந்தப்படுத்துகின்றன. எல்லா வினைகளையும் எனக்கு அர்ப்பணித்து, நீ அவற்றிலிருந்து விடுதலை பெறுவாயாக. இதுவே சந்நியாச யோகம் எனப்படுகிறது. எனக்கு அர்ப்பணிக்கப்படுவதால் இது சந்நியாசமாகிறது. வினையாக இருப்பதால் இது யோகமாகிறது. நீ உயிரோடிருக்கும் பொழுதே பந்தங்களிலிருந்து விடுபட்டு உடல் மாய்ந்தவுடன் என்ன எய்துவாய்.

'அப்படியென்றால் பகவான் ஒருபுறச் சார்புடையவரா? - அவர் பக்தர்களுக்கு மட்டுமே அருள்வார், மற்றவர்களுக்கு இல்லையா? என்றால் - இல்லை அப்படியன்று.

**समोऽहं सर्वभूतेषु न मे द्वेष्योऽस्ति न प्रियः ।**
**ये भजन्ति तु मां भक्त्या मयि ते तेषु चाप्यहम् ॥२९॥**

**ஸமோ(அ)ஹம் ஸர்வபூதேஷு ந மே த்வேஷ்யோ (அ)ஸ்தி ந ப்ரிய: ।**
**யே பஜந்தி து மாம் பக்த்யா மயி தே தேஷு சாபி அஹம் ॥ 29॥**

***நான் எல்லா உயிர்களிடத்தும் சமமானவன் எனக்கு வெறுக்கத்தகுந்தவனும் இல்லை. விரும்பத்தகுந்தவனும் இல்லை. ஆனால் எவர்கள் என்னை பக்தியுடன் வழிபடுகின்றனரோ அவர்கள் என்னிடத்தில் இருக்கின்றனர். நான் அவர்களிடத்து இருக்கிறேன்.***

சமமானவன் - நான் எல்லா உயிர்களிடத்தும் நடுவுநிலையுடன் நடந்து கொள்கிறேன். எனக்கு எவரிடத்தும் வெறுப்போ அல்லது விருப்போ கிடையாது. நெருப்பு தூரத்தில் இருப்பவர்களின் குளிரை நீக்குவதில்லை. மாறாக அருகிலிருப்பவர்களின் குளிரைப் போக்குகிறது. அதுபோல் நான் பக்தர்களுக்கு அருள் புரிகிறேன். ஈசுவரனாகிய என்னை பக்தியுடன் வழிபடுவோர் என்னிடத்தில் இருக்கின்றனர். இது எனது ஒரு புறச்சார்பின் காரணத்தினால் அன்று. அதுபோல் நானும் அவர்களிடத்து இருக்கின்றேனேயன்றி பிறர்களிடத்து இல்லை. அதனால் அவர்கள் மீது எனக்கு வெறுப்பில்லை என்று அறிக.

என் மீது வைக்கும் பக்தியின் மேன்மையைக் கேட்பாயாக :

**अपि चेत्सुदुराचारो भजते मामनन्यभाक् ।**
**साधुरेव स मन्तव्यः सम्यग्व्यवसितो हि सः ॥३०॥**

**அபி சேத்ஸுதுராசாரோ பஜதே மாம் அனன்யபாக் ।**
**ஸாதுர் ஏவ ஸ மந்தவ்ய: ஸம்யக் வ்யவஸிதோ ஹிஸ: ॥ 30॥**

*தீயொழுக்கம் உடையவனும் பிறிதொரு நாட்டமின்றி என்னை வழிபடுவானெனில் அவனை நல்லவன் என்றே கருத வேண்டும். ஏனென்றால் அவன் நல்ல நிச்சயத்தை உடையவனாவான்.*

ஒருவனது நடத்தை தீயொழுக்கத்தின் பாற்பட்டதாகவும், இழிந்த புலை நடையாக இருப்பினும் கூட அவன் பக்தியுடன் என்னை வழிபடுவானெனில் அவனது நடத்தை நல்லொழுக்கத்தின் பாற்பட்டதென்றே கருதப்பட வேண்டும். ஏனென்றால் அவன் தனது உறுதியில் அல்லது தீர்மானத்தில் நிச்சயத்தன்மை உடையவனாக இருக்கிறான்.

அவன் அகத்திலுள்ள நேரான நிச்சயத்தின் வலிமையினால் புறத்திலுள்ள தீயொழுக்கத்தைப் புறக்கணிப்பதினால்,

**क्षिप्रं भवति धर्मात्मा शश्वच्छान्तिं निगच्छति ।**
**कौन्तेय प्रतिजानीहि न मे भक्तः प्रणश्यति ॥ ३१॥**

**க்ஷிப்ரம் பவதி தர்மாத்மா ஶஶ்வச்சாந்திம் நிகச்சதி ।**
**கௌந்தேய ப்ரதிஜானீஹி ந மே பக்த: ப்ரணஶ்யதி ॥ 31॥**

*விரைவில் நன்னெறியாளன் ஆகிறான். எப்போதும் அமைதியுடையவனாகிறான். குந்தி புத்திரனே! எனது பக்தன் அழியமாட்டான் என்று உறுதியுடன் உரைப்பாயாக.*

விரைவில் அவனது மனம் நன்னெறியில் நிலைபெறுகிறது. அவன் நித்திய சாந்தி அல்லது நிறைவமைதி பெறுகிறான். இப்பரம சத்தியத்தை குறிக் கொள்வாயாக! தனது ஆத்மாவை முற்றிலும் எனக்கு அர்ப்பணித்த எனது பக்தன் அழிவதில்லை என்பதை உணர்ந்து இவ்வுலகிற்கு உரைப்பாயக.

மேலும்,

**मां हि पार्थ व्यपाश्रित्य येऽपि स्युः पापयोनयः ।**
**स्त्रियो वैश्यास्तथा शूद्रास्तेऽपि यान्ति परां गतिम् ॥ ३२॥**

**மாம் ஹி பார்த்த வ்யபாஶ்ரித்ய யே (அ)பிஸ்யு: பாப யோனய: ।**
**ஸ்த்ரியோ வைஶ்யாஸ் ததா ஶூத்ராஸ் தே (அ)பி யாந்தி பராம் கதிம் ॥ 32॥**

*பார்த்தா! பெண்களும், வைசியர்களும், சூத்திரர்களும் இழிகுலத்தில் பிறந்தவர்களும் கூட என்னைச் சரணடைந்து நற்கதி அடைகின்றனர்.*

என்னைச் சரண் புகுந்து தாழ்ந்த குலத்தில் பிறந்தவர்களும் – பெண்கள், வைசியர்கள், சூத்திரர்கள் - நற்கதி அடைகின்றனர்.

**किं पुनर्ब्राह्मणाः पुण्या भक्ता राजर्षयस्तथा ।**
**अनित्यमसुखं लोकमिमं प्राप्य भजस्व माम् ॥ ३३॥**

**கிம்புனர் ப்ராஹ்மணா: புண்யா பக்தா ராஜர்ஷயஸ் ததா ।**
**அநித்யம் அஸுகம் லோகம் இமம் ப்ராப்ய பஜஸ்வ மாம் ॥ 33॥**

***புண்ணியவான்களான பிராம்மணர்களும், அதுபோல் பக்தர்களான ராஜரிஷிகளும் நற்கதியடைவர் என்று கூறவும் வேண்டுமோ? நிலையற்றதும், இன்பமற்றதுமான இவ்வுலகினை அடைந்து என்னையே வழிபடுவாயாக.***

புண்ணியப் பிறவிகளான பிராம்மணர்களும், பக்தர்களான ராஜரிஷிகளும், பரம நற்கதி பெறுவர் என்பதைக் கூறவும் வேண்டுமோ? இவ்வாறிருப்பதால் கணப்பொழுதில் அழியக் கூடியதும், இன்பமில்லாததுமான இந்த மனிதலோகத்தை அடைந்து கிடைத்தற்கரிய மானிடப் பிறவியை நற்கதி பெறுதற்கான சாதனமாகக் கொண்டு என்னையே வழிபடுவாயாக.

எவ்வாறு?

**मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।**
**मामेवैष्यसि युक्त्वैवमात्मानं मत्परायणः ॥ ३४॥**

**மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।**
**மாம் ஏவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மானம் மத்பராயண: ॥ 34॥**

***மனதினை என்னிடத்தில் வைத்து எனது பக்தனாகி என்னை வழிபடவும் வணங்கவும் வேண்டும். இவ்வாறு என்னையே பரமகதியாகக் கொண்டு ஒருமுகப்பட்ட உள்ளத்தினனாய் என்னை வந்தடைவாய்.***

வாசுதேவனாகிய என்னிடத்தில் மனதினை வைத்து எனது பக்தனாவாயக. எல்லாவற்றையும் எனக்கர்ப்பணித்து என்னை மட்டுமே வழிபடுவாயாக. இவ்வாறு உனது உள்ளம் ஒரு முகப்படும் பொழுது நீ ஈசுவரனாகிய என்னை நிச்சயம் வந்தடைவாய். நானே அனைத்து உயிர்களின் ஆத்மாவாகவும், அடைதற்கரிய பரம நற்கதியாகவும் விளங்குவதால் உள்ளத்தை என்னிடத்தில் ஒருமுகப்படுத்துவாயாக. அதன் மூலம் என்னை வந்தடைவாய். இதில் 'ஆத்மானம்' அதாவது ஆத்மா என்னும் சொல்லை 'வந்தடைவாய்' என்னும் முந்தின சொல்லுடன் கூட்டிக் கொள்க.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும் யோக சாஸ்திரமும் ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் ''ராஜ வித்தியா ராஜ ரகசிய யோகம்'' என்னும் ஒன்பதாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் பத்து

# விபூதி யோகம்

எட்டாம் அத்தியாயத்திலும், ஒன்பதாம் அத்தியாயத்திலும் பகவானுடைய சத்தியமும், சக்தியும் எடுத்து விளக்கப்பட்டன. இப்போது எந்தெந்தத் தோற்றங்களின் மூலம் பகவான் ஆழ்ந்து சிந்திக்கதக்கவர் என்பது கூறப்படப் போகிறது. அறிதற்கு அரியது ஆதலின் பகவானின் சத்தியம் ஏற்கெனவே விளக்கப்பட்டுள்ள போதிலும் மீண்டும் விளக்கப்படுகிறது. ஆகையினால் பகவான் கூறுகிறார்:

श्रीभगवानुवाच

भूय एव महाबाहो श्रृणु मे परमं वचः ।
यत्तेऽहं प्रीयमाणाय वक्ष्यामि हितकाम्यया ॥१॥

*ஸ்ரீ பகவான் உவாச*

**பூய ஏவ மஹாபாஹோ ஶ்ருணு மே பரமம் வச: ।**
**யத்தே (அ)ஹம் ப்ரீய மாணாய வக்ஷ்யாமி ஹித-காம்யயா ॥ 1॥**

*ஸ்ரீ பகவான் கூறுகிறார்*

***உயர் தோளுடையாய்! கேட்பதில் மனம் மகிழும் உனக்கு நான் நன்மையைக் கருதி எதனைக் கூறுவேனோ அந்த என் மேலான வார்த்தையை மீண்டும் ஒரு முறை கேட்பாயாக.***

'மீண்டும் ஒரு முறை' - ஓ, உயர் தோளுடையாய்! - உண்மையினை எடுத்தியம்புவதும், எல்லாவற்றிற்கும் மேலானதுமான எனது மேன்மைமிகு வார்த்தைகளை செவிமடுப்பாயாக. அமிர்தத்தை சுவைத்து மகிழ்பவன் போல் நீ எனது வார்த்தைகளில் மகிழ்கின்றாய். ஆதலினால் உனது நலன் விரும்பி நான் இதனை உனக்குக் கூறுவேன்.

நான் ஏன் கூறவேண்டும்? என்றால் பதிலைக் கேள்.

न मे विदुः सुरगणाः प्रभवं न महर्षयः ।
अहमादिर्हि देवानां महर्षीणां च सर्वशः ॥२॥

ந மே விது: ஸு்ர-கணா: ப்ரபவம் ந மஹர்ஷய: ।
அஹம் ஆதிர் ஹி தேவானாம் மஹர்ஷீணாம் ச ஸர்வஶ: ॥ 2॥

*என்னுடைய ஆதியை தேவர்கள் உணரவில்லை. மகரிஷிகளும் அறியவில்லை. நான் தேவர்களுக்கும் மகரிஷிகளுக்கும் எல்லா வகையிலும் முற்பட்டவன்.*

பிரம்மா முதலிய தேவர்கள் உணரவில்லை - அவர்கள் எதனை உணரவில்லை? எனது இறைசக்தியை அல்லது ஆதியை. பிருகு முதலான மகரிஷிகளும் அறியவில்லை - அவர்கள் ஏன் அறியவில்லை? ஏனென்றால் இந்தத் தேவர்களுக்கும், முனிவர்களுக்கும் நானே எல்லா வகையிலும் ஆதி காரணன். மேலும்,

यो मामजमनादिं च वेत्ति लोकमहेश्वरम् ।
असम्मूढः स मर्त्येषु सर्वपापैः प्रमुच्यते ॥ ३॥

யோமாம் அஜம் அநாதிம் ச வேத்தி லோகமஹேஶ்வரம் ।
அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ॥ 3॥

*எவன் என்னை பிறவாதவனாகவும், ஆதியில்லாதவனாகவும், உலகுக்கெல்லாம் இறைவனாகவும் அறிகின்றானோ அவன் மனிதர்களுள் மதிமயக்கம் இல்லாதவனாவான். எல்லாப் பாவங்களிலிருந்தும் விடுதலை பெறுகிறான்.*

நான் தேவர்களுக்கும், மகரிஷிகளுக்கும் ஆதியாதலால் எனக்கு வேறொரு ஆதியில்லை. ஆகையினால் நான் பிறவாதவன், ஆதியில்லாதவன் ஆவேன். நான் பிறவாதவன் என்பதற்குக் காரணம் எனக்கு ஆதி இல்லை என்பதுவேயாகும். என்னைப் பிறவாதவனாகவும் ஆதியில்லாதவனாகவும் உலகங்களுக்கெல்லாம் பரமேசுவரனாகவும் அறியாமையும் அதன் பலன்களும் இல்லாத பரமனாகவும் எவன் அறிகின்றானோ மனிதர்களுள் அந்த மதிமயக்கமில்லாதவன் அவன் அறிந்தும், அறியாமலும் செய்த எல்லாப் பாவங்களினின்றும் விடுதலை பெறுகிறான்.

பின்வரும் காரணத்தினாலும் நான் எல்லா உலகங்களுக்கும் பரமேசுவரன் ஆவேன்.

बुद्धिर्ज्ञानमसम्मोहः क्षमा सत्यं दमः शमः
सुखं दुःखं भवोऽभावो भयं चाभयमेव च ॥ ४॥

புத்திர்ஞானம் அஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தம: ஶம:
ஸு்கம் து:கம் பவோ (அ)பாவோ பயம் சாபயம் ஏவ ச ॥ 4॥

*புத்தி, ஞானம், மதிமயக்கமின்மை, பொறுமை, உண்மை, அடக்கம், அமைதி, இன்பம், துன்பம், பிறப்பு, இறப்பு, அச்சமும், அஞ்சாமையும்;*

நுட்பமான விஷயங்களைப் புரிந்து கொள்வதற்கான அகச் சக்தியே 'புத்தியாகும்'. அதனைப் பெற்றிருப்பவன் புத்திமான் ஆவான். 'ஞானம்' என்பது ஆத்மா போன்ற பொருள்களை உணர்வது ஆகும். 'மதிமயக்கமின்மை' என்பது தற்போது செய்ய வேண்டியது பற்றியோ அல்லது அறிந்து கொள்ள வேண்டியது பற்றியோ பகுத்தறிவுடன் செயல்படுவதாகும். 'பொறுமை' என்பது தாக்கப்படினும், இழிவு செய்யப்படினும் கிளர்ச்சியடையாது இருத்தல் என்பதாகும். பிறிதொருவன் புத்தியில் ஏறும்படித் தான் கண்டவற்றையும், கேட்டவற்றையும் அப்படியே எடுத்துரைப்பது 'உண்மை' ஆகும். 'அடக்கம்' என்பது புறத்திலுள்ளப் புலன்களைக் கட்டுப்பாட்டிற்குள் வைப்பதாகும். 'அமைதி' என்பது மனவடக்கம் ஆகும். 'இன்பம்' என்பது களித்தல் ஆகும். 'துன்பம்' என்பது வருந்துதல் ஆகும். 'பிறப்பு' என்பது இருத்தலும், 'இறப்பு' என்பது போதலும் ஆகும். 'அச்சம்' என்பது பீதியினால் நடுங்குதல் என்றும் அதற்கு எதிரானது 'அஞ்சாமையும்' ஆகும்.

**अहिंसा समता तुष्टिस्तपो दानं यशोऽयशः ।**
**भवन्ति भावा भूतानां मत्त एव पृथग्विधाः ॥५॥**

**அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ் தபோ தானம் யஶோ (அ)யஶ: ।**
**பவந்தி பாவா பூதானாம் மத்த ஏவ ப்ருதக்விதா: ॥ 5॥**

*அஹிம்சை, நடுவுநிலைமை, திருப்தி, தவம், தானம், புகழ், இகழ், போன்ற பல்வேறு நிலைகளும் உயிர்களுக்கு என்னிடமிருந்தே உண்டாகின்றன.*

'அஹிம்சை' என்பது உயிர்களுக்கு ஊறு செய்யாமையாகும். 'நடுவு நிலைமை' என்பது ஒரு பக்கம் சாயாது சமமாயிருக்கும் மனதின் உறுதியாகும். திருப்தி - கிடைத்தப் பொருட்களின் மீது போதுமென்ற மனம் உடைமை. தவம் - புலனடக்கத்தோடு, உடலையும் வருத்துதல். தானம் - தனது சக்திக்கேற்பப் பொருட்களைப் பிறர்க்குப் பகிர்ந்தளித்தல். 'இகழ்' - அதர்ம வழி செல்வதால் உண்டாவது. மேலே கூறப்பட்டவையெல்லாம் உயிர்களுக்கு அவை செய்யும் கர்மவினைக்கேற்ப என்னிடமிருந்தே உண்டாகின்றன.

மேலும்,

**महर्षयः सप्त पूर्वे चत्वारो मनवस्तथा ।**
**मद्भावा मानसा जाता येषां लोक इमाः प्रजाः ॥६॥**

**மஹர்ஷய: ஸப்த பூர்வே சத்வாரோ மனவஸ் ததா ।**
**மத்பாவா மானஸா ஜாதா யேஷாம் லோக இமா: ப்ரஜா: ॥ 6॥**

*உலகில் இந்த உயிர்கள் எவர்களிடமிருந்து வந்தனவோ அந்த முன்னவர்களான ஏழு மகரிஷிகளும் நான்கு மனுக்களும் என்னிடம் சிந்தை வைத்து என் மனத்தினின்றே பிறந்தவர்களாவர்!*

பிருகு முதலிய மகரிஷிகள் எழுவரும், பூர்வ காலத்தில் 'ஸாவர்ணர்கள்' என்று புகழப்பட்ட நான்கு மனுக்களும் என்னையே தியானித்தவர்கள் ஆவர். அவர்கள் விஷ்ணுவின் சக்தியைப் பெற்றவர்கள் என்பதோடு அவர்கள் அனைவரும் என் மனதிலிருந்தே தோன்றியவர்களாவர். இவ்வுலகில் உள்ள அசையும் அசையா உயிர்கள் எல்லாம் இந்த மனுக்கள் மற்றும் மகரிஷிகளின் படைப்பென்று அறிக.

**एतां विभूतिं योगं च मम यो वेत्ति तत्त्वत: ।**
**सोऽविकम्पेन योगेन युज्यते नात्र संशय: ॥ ७॥**

**ஏதாம் விபூதிம் யோகம் ச மம யோ வேத்தி தத்த்வத: ।**
**ஸோ நாத்ர ஸம்ஶய: ॥ 7॥**

*என்னுடைய இந்தப் பராக்கிரமத்தையும் யோக சக்தியையும் எவன் உண்மையாக அறிகின்றானோ அவன் அசைவிலா யோகத்தோடு கூடுகிறான். இதில் ஐயமில்லை.*

மேலே குறிப்பிடப்பட்டிருக்கும் எனது பராக்கிரமத்தையும் (எங்குமுளன் என்னும் தன்மை) எனது யோகத்தையும் (ப.கீ.9.5) அதாவது யோகம் என்பது எனது எல்லாம் அறியவல்ல தன்மையாகும். (பகவானைத் தியானிப்பதால் உண்டாவது) உண்மையில் அறிபவன் மெய்யறிவில் நிலைநிற்றல் என்னும் அசைவிலா யோகத்தோடு கூடுகிறான். இதில் ஐயமில்லை.

எத்தகைய அசைவிலா யோகத்தோடு கூடுகிறான்? என்றால், கவனிப்பாயாக.

**अहं सर्वस्य प्रभवो मत्त: सर्वं प्रवर्तते ।**
**इति मत्वा भजन्ते मां बुधा भावसमन्विता: ॥ ८॥**

**அஹம் ஸர்வஸ்ய ப்ரபவோ மத்த: ஸர்வம் ப்ரவர்த்ததே ।**
**இதி மத்வா பஜந்தே மாம் புதா பாவஸமன்விதா: ॥ 8॥**

*நான் எல்லாவற்றிற்கும் பிறப்பிடம், என்னிடம் தொடங்கியே எல்லாம் இயங்குகின்றன என்று உணரும் ஞானிகள் எப்போதும் என்னையே தியானித்து என்னை வழிபடுகின்றனர்.*

வாசுதேவன் என்னும் பரப்பிரம்மமாகிய நானே எல்லா உலகிற்கும் பிறப்பிடம் ஆவேன். இருத்தல், அழிதல், வினைப்பயன் மற்றும் அதனை அனுபவித்தல் என்னும் விகாரவடிவமான இப்பிரபஞ்சம் அனைத்தும்

என்னிடமிருந்து தோன்றி விரிகின்றன. பரம சத்தியத்தின் தன்மையை இங்ஙனம் உணரும் ஞானியர் என்னை நம்பிக்கையுடன் வழிபடுகின்றனர். நம்பிக்கை என்றால் பரம சத்தியத்தின் மீது வைக்கப்படும் மனப்பற்றாகும். இதன் பொருள் என்னை அவர்கள் பற்றுடன் வழிபடுகிறார்கள் என்பதாம். மேலும்,

**मच्चित्ता मद्गतप्राणा बोधयन्तः परस्परम्**
**कथयन्तश्च मां नित्यं तुष्यन्ति च रमन्ति च ॥९॥**

**மச்சித்தா மத் கதப்ராணா போதயந்த: பரஸ்பரம் :।**
**கதயந்தஶ்ச மாம் நித்யம் துஷ்யந்தி ச ரமந்தி ச ॥ 9॥**

*சித்தத்தை என்பால் வைத்து என்னை உயிர் நிலையாய்க் கொண்டு என்னையே ஒருவருக்கொருவர் போதித்துக் கொண்டு எப்போதும் என்னைப் பற்றியே பேசிக் கொண்டும் இருப்பவர்கள் எப்போதும் திருப்தியடைகின்றனர். மகிழ்ச்சி கொள்கின்றனர்.*

'சித்தத்தை என்பால் வைத்து' என்றால் அவர்களின் உயிர் எனக்கு அர்ப்பணிக்கப்பட்டிருக்கின்றது. அல்லது அவர்களின் விழிகள் போன்ற புலன்கள் என்னில் ஆழ்ந்திருக்கின்றன என்று பொருளாகும். ஞானம், சக்தி வீர்யம் உடைய என்னைப் பற்றி ஒருவருக்கொருவர் எடுத்துரைத்து திருப்தியடைகின்றனர். மேலும் தமது அன்பிற்குரிய ஒருவருடன் கொள்ளும் தொடர்பினால் மகிழ்பவர்கள் போல் மகிழ்ச்சியடைகின்றனர்.

என்னை இவ்வாறு வழிபடும் பக்தர்களைப் பற்றி மேலும் கூறுகிறேன்

**तेषां सततयुक्तानां भजतां प्रीतिपूर्वकम् ।**
**ददामि बुद्धियोगं तं येन मामुपयान्ति ते ॥१०॥**

**தேஷாம் ஸதத - யுக்தானாம் பஜதாம் ப்ரீதி - பூர்வகம் ।**
**ததாமி புத்தி யோகம் தம் யேன மாம் உபயாந்தி தே ॥ 10॥**

*நிலைபெற்ற உள்ளத்தோடு அன்புடன் வழிபடும் அன்னோர்க்கு அவர்கள் எதனால் என்னை அடைவார்களோ அந்த புத்தியோகத்தை அளிக்கிறேன்.*

எந்தவித மாறுபாடுமின்றி நிலைபெற்ற உள்ளத்தோடு, புலனுகர்ச்சிப் பொருட்களின் மீதான ஆசைகளைத் துறந்து, பொருட்கள் வேண்டியோ அல்லது பிற நன்மை வேண்டியோ என்னை வழிபடாது அன்பினால் வழிபடும் அன்னோர்க்கு நான் புத்தி யோகத்தை அளிக்கிறேன். 'புத்தி' என்பது எனது உண்மைத் தன்மையை அறியும் ஞானமாகும். அதனை அடையப் பெறுவது 'புத்தி-யோக' மாகும். அதன் மூலம் அவர்கள், பரமேசுவரனின் ஆத்மாவாகிய

என்னை அதாவது அவர்களின் ஆத்மாவை அடைகின்றனர். யார் இவ்வாறு அடையப் பெறுகின்றனர்? என்றால், தங்கள் மனதினை என்னில் நிலை நிறுத்தி வழிபடுவோர்கள் அடையப் பெறுகின்றனர்.

உம்மை அடைவதற்குத் தடையாக இருக்கும் எதனை நீக்குவதற்காக, ஏன் அந்தப் புத்தியோகத்தினை உமது பக்தர்களுக்குத் தந்தருள்கிறீர்? என்றால் பதில் பின்வருமாறு:

**तेषामेवानुकम्पार्थमहमज्ञानजं तमः ।**
**नाशयाम्यात्मभावस्थो ज्ञानदीपेन भास्वता ॥ ११॥**

**தேஷாம் ஏவானுகம்பார்த்தம் அஹம் அஜ்ஞானஜம் தம:**
**நாஶயாமி ஆத்ம - பாவ - ஸ்தோ ஜ்ஞான - தீபேன பாஸ்வதா ॥ 11॥**

***அவர்களிடம் அறியாமையினாலுண்டான இருளை, நான் அவர்கள் உள்ளத்தில் நிலைபெற்று ஒளிர்கின்ற ஞான விளக்கின் மூலம் எனது அருளினால் தொலைக்கின்றேன்.***

அவர்களுக்கு எவ்வாறு நன்மை செய்வது? என்று சிந்தித்து, எனது அருளினால், அவர்களின் உள்ளத்தில் நிலைபெற்று, ஞானமாகிய விளக்கினால் அவர்களின் அறியாமை இருளை போக்குகிறேன். அறியாமையானது தவறான எண்ணங்களின் அடிப்படையினாலானது. அவர்களின் அகத்தில் அமர்ந்து, ஞான விளக்கினால் நான் அவர்களின் அறியாமையினை நீக்குகிறேன். ஞானவிளக்கு என்பது விவேக உணர்வாகும். இந்த ஞான விளக்கு பக்தி என்னும் எண்ணெயினாலும், என்னை தியானித்தல் என்னும் காற்றினாலும் சுடர்விட்டு எரிகின்றது. அதன் திரி, பிரம்மச்சரியம் என்னும் விரதத்தினால் வலிமை பெற்ற புத்தியாகும். பற்றற்ற உள்ளம் என்னும் அகலை ஆதாரமாக உடையது. விஷயங்களினின்று நீங்கியதும், விருப்பு வெறுப்புக்கள் இல்லாததுமான சித்தம் என்னும் காற்றடக்கமான அறையிலே இருப்பதாகும். இடையறாது மனதினை ஒருமுகப்படுத்தித் தியானிப்பதால் உண்டாகும் மெய்யறிவு என்னும் ஒளியினை உடையதாகும்.

பகவானின் ஆற்றலையும், யோகத்தையும் கேட்டு அர்ஜுனன் வினவினான்.

अर्जुन उवाच

**परं ब्रह्म परं धाम पवित्रं परमं भवान्**
**पुरुषं शाश्वतं दिव्यमादिदेवमजं विभुम् ॥ १२॥**

*அர்ஜுன உவாச*

**பரம் ப்ரஹ்ம பரம் தாம பவித்ரம் பரமம் பவான்**
**புருஷம் ஶாஶ்வதம் திவ்யம் ஆதி தேவம் அஜம் விபும் ॥ 12॥**

आहुस्त्वामृषयः सर्वे देवर्षिर्नारदस्तथा ।
असितो देवलो व्यासः स्वयं चैव ब्रवीषि मे ॥१३॥

ஆஹுஸ் த்வாம் ருஷய: ஸர்வே தேவர்ஷிர் நாரதஸ் ததா ।
அஸிதோ தேவலோ வ்யாஸ: ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ॥ 13॥

*அர்ஜுனன் கூறினான்:*

*நீயே பரப்பிரம்மம், நீயே பரவீடு, தூய்மையனைத்தினும் பரம தூய்மை நீ, மேலும் எல்லா ரிஷிகளும், அதுபோல் தேவரிஷியான நாரதரும், அசிதரும், தேவரும், வியாசரும், உன்னை என்றுமுள புருஷனென்றும் ஆதி தேவனென்றும் பிறப்பிலானென்றும் இறைவனென்றும் கூறுகிறார்கள். நீயும் எனக்கு அவ்வாறே கூறுகிறாய்.*

'பரப்பிரம்மம்' என்பது பரமாத்மாவாகும். 'பரவீடு' என்பது பரம ஒளியாகும். 'பரம தூய்மை' என்பது பகவானின் பரம தூய்மை செய்யும் சக்தியாகும். 'என்றுமுள புருஷன்' என்பது நித்திய தெய்வமாகும். 'ஆதி தேவன்' என்பது தேவர்களுக்கெல்லாம் ஆதியானவர், பிறப்பற்றவர், எங்கும் வியாபித்துள்ளவர் என்று பொருளாகும். வசிஷ்டர் முதலான எல்லா முனிவர்களும் உன்னை இவ்வாறு சார்ந்திருக்கின்றனர். தேவரிஷிகளான நாரதர், அசிதர், தேவலர், வியாசர், போன்றோரும், அவ்வாறே கூறுகின்றனர். அதனையே நீயும் உறுதி செய்கின்றாய்.

सर्वमेतदृतं मन्ये यन्मां वदसि केशव ।
न हि ते भगवन्व्यक्तिं विदुर्देवा न दानवाः ॥१४॥

ஸர்வம் ஏதத்ருதம் மன்யே யன்மாம் வதஸி கேஶவ ।
ந ஹி தே பகவன்வ்யக்திம் விதுர்தேவா ந தானவா: ॥ 14॥

*கேசவா! எனக்கு எதனைக் கூறுகிறாயோ அதனை நான் உண்மை என்று உணர்கிறேன் எனினும் பகவானே உனது வடிவத்தை தேவர்களும் அறியவில்லை, அசுரர்களும் அறியவில்லை.*

கேசவா! நீயும், முனிவர்களும் கூறியுள்ளதை நான் உண்மை என்று ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் பகவானே, உனது வடிவத்தை அல்லது மூலத்தை தேவர்களும் அறியவில்லை, அசுரர்களும் அறியவில்லை.

ஏனென்றால் நீயே தேவர்களுக்கு மூலாதாரமாக இருக்கின்றாய். ஆகையினால்,

स्वयमेवात्मनात्मानं वेत्थ त्वं पुरुषोत्तम ।
भूतभावन भूतेश देवदेव जगत्पते ॥१५॥

ஸ்வயம் ஏவாத்மனா(ஆ)த்மானம் வேத்த த்வம் புருஷோத்தம ।
பூதபாவன பூதேஶ தேவதேவ ஜகத்பதே ॥ 15॥

*புருஷோத்தமா! பொருட்களை படைப்போனே, பொருட்களின் நாயகனே, தேவர்களின் தெய்வமே, உலகினை ஆள்பவனே, நீ நீயாகவே, உன்னை உன்னால் அறிகின்றாய்.*

யாவற்றினும் மேம்பட்ட ஞானம், ஆளுந்தன்மை, வல்லமை, ஆற்றல் மிக்க ஈசுவரனாகிய நீ, உன்னையே அறிவாய். புருஷோத்தமா! நீயே எல்லா பொருட்களுக்கும் மூல காரணம். எல்லாப் பொருட்களையும் உண்டாக்குவதால் நீயே அவற்றின் இறைவனும், தேவதேவனும், உலகின் நாயகனுமாவாய்.

वक्तुमर्हस्यशेषेण दिव्या ह्यात्मविभूतयः ।
याभिर्विभूतिभिर्लोकानिमांस्त्वं व्याप्य तिष्ठसि ॥ १६॥

வக்தும் அர்ஹஸி அஶேஷேண திவ்யா ஹி ஆத்மவிபூதய: ।
யாபிர் விபூதிபிர் லோகான் இமாம்ஸ் த்வம் வ்யாப்ய திஷ்டஸி ॥ 16॥

*எந்தெந்த தெய்வீக சக்திகளால் நீ இவ்வுலகங்களை வியாபித்திருக்கின்றாயோ அந்த உனது தெய்வீக சக்திகளை எனக்குக் குறைவின்றி எடுத்துரைக்க வேண்டும்.*

உனது தெய்வீக சக்திகளை நீ குறைவின்றி முழுவதும் எடுத்துரைக்க வேண்டும். உனது எல்லையற்ற அத்தெய்வீக சக்திகளால் நீ எல்லா உலகங்களையும் வியாபித்து நிற்கின்றாய்.

कथं विद्यामहं योगिंस्त्वां सदा परिचिन्तयन् ।
केषु केषु च भावेषु चिन्त्योऽसि भगवन्मया ॥ १७॥

கதம் வித்யாம் அஹம் யோகிம்ஸ் த்வாம் ஸதா பரிசிந்தயன் ।
கேஷு கேஷு ச பாவேஷு சிந்த்யோ(அ)ஸி பகவன்மயா ॥ 17॥

*யோகியே! எப்போதும் ஆழ்ந்து சிந்தித்து நான் உன்னை எவ்வாறு அறிவது? மேலும் பகவானே, என்னால் எந்தெந்தப் பொருள்களில் நீ சிந்திக்கத்தக்கவனாக இருக்கின்றாய்?*

ஓ யோகியே! எப்போதும் ஆழ்ந்து சிந்தித்து நான் உன்னை எவ்வாறு அறிவேன்? எவ்வெப் பொருட்களில் நான் உன்னை தியானிப்பது? ஓ, பகவானே.

**विस्तरेणात्मनो योगं विभूतिं च जनार्दन**
**भूयः कथय तृप्तिर्हि शृण्वतो नास्ति मेऽमृतम् ॥१८॥**

**விஸ்தரேணாத்மனோ யோகம் விபூதிம் ச ஜனார்தன**
**பூய: கதய த்ருப்திர் ஹி ஶ்ருண்வதோ நாஸ்தி மே(அ)ம்ருதம் ॥ 18॥**

***ஜனார்த்தனா! உனது யோகத்தையும், தெய்வீக சக்திகளையும், மீட்டுமொருமுறை எனக்கு எடுத்துரைப்பாயாக. ஏனெனில் உனது அமிர்தம் போன்ற வார்த்தைகளைக் கேட்க எனக்குத் தெவிட்டவில்லை.***

ஓ ஜனார்த்தனா! நீ ஏற்கெனவே விளக்கியருளிய உனது மேன்மை மிகு யோகத்தையும், தெய்வீக சக்திகளையும் மீண்டும் ஒரு முறை எடுத்துரைப்பாயாக. 'ஜனார்த்தன' என்னும் பெயர் செல்லுதல் என்னும் தொழிலைக் குறிக்கும். 'அர்த' என்னும் சொல்லிலிருந்து பிறந்ததாகும். தேவர்களின் பகைவர்களான அசுரர்களை நரகம் முதலியவற்றிற்குச் செல்லும்படி செய்வதால் ஜனார்த்தனன் என்றழைக்கப்படுகிறார். மேலும் செல்வம், மோக்ஷம் என்னும் புருஷார்த்தங்களுக்காக அனைவராலும் பகவான் 'வேண்டப்படுகிறார்' என்பதாலும் ஜனார்த்தனன் என்க. உனது அமிர்தம் போன்ற வார்த்தைகளைக் கேட்கக் கேட்க எனக்குத் தெவிட்டவே இல்லை. ஆதலினால் அவற்றை மீண்டும் ஒரு முறை எடுத்துரைப்பாயாக.

**श्रीभगवानुवाच**

**हन्त ते कथयिष्यामि दिव्या ह्यात्मविभूतयः ।**
**प्राधान्यतः कुरुश्रेष्ठ नास्त्यन्तो विस्तरस्य मे ॥१९॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**ஹந்த தே கதயிஷ்யாமி திவ்யா ஹி ஆத்ம விபூதய: ।**
**ப்ரதான்யத: குருஶ்ரேஷ்ட நாஸ்தி அந்தோ விஸ்தரஸ்ய மே ॥ 19॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***குருகுலத்தில் சிறந்தோனே! என்னுடைய தெய்வீக சக்திகளுள் முக்கியமானவற்றை எடுத்துக் கூறுகிறேன். எனது தெய்வீக சக்திகளின் விரிவுக்கு எல்லை என்பது இல்லை.***

ஆகட்டும், நான் உனக்கு எனது தெய்வீக சக்திகளுள் முக்கியமானவற்றை எடுத்துரைக்கிறேன். முக்கியமானவற்றை என்றால் எவையெல்லாம் முக்கியமான சக்திகளோ அவற்றை நான் உனக்கு எடுத்துரைப்பேன். குருகுலத்திற் சிறந்தோனே! அவற்றின் விரிவினைப் பொருத்தமட்டில் நூறு வருடங்களானாலும் அவற்றை எடுத்துரைக்க இயலாது. ஏனெனில் எனது சக்திகளின் விரிவிற்கு ஓர் எல்லை என்பது இல்லை. இதுவே பொருளாகும்.

இனி முதலாவதாக இதனைக் கேள்,

**अहमात्मा गुडाकेश सर्वभूताशयस्थितः ।**
**अहमादिश्च मध्यं च भूतानामन्त एव च ॥२०॥**

**அஹம் ஆத்மா குடாகேஶ ஸர்வபூதாஶய ஸ்தித:**
**அஹம் ஆதிஶ் ச மத்யம் ச பூதானாம் அந்த ஏவ ச ॥ 20॥**

*குடாகேசா! நான் அனைத்து உயிர்களின் உள்ளிருக்கும் ஆத்மா. உயிர்களின் முதலும், நடுவும், முடிவும் நானே.*

நான் எல்லா உயிர்களினுள்ளும் ஆத்மாவாக இருக்கிறேன் குடாகேசா! குடாகேசன் என்றால் நித்திரையை வென்றவன் அல்லது அடர்த்தியான முடியுள்ளவன் என்று பொருளாகும். அனைத்து உயிர்களினுள்ளும் ஆத்மாவாக இருக்கும் நான் அனைவராலும் எப்போதும் தியானிப்பதற்கு உரியவன் ஆவேன். இவ்வாறு தியானிப்பதற்குத் தகுதியில்லாதவர்கள், நான் இருக்கும் பின்வரும் பொருட்களைத் தியானித்தல் வேண்டும். ஏனெனில் நானே உயிர்களின் காரணமாகவும், நடுவாகவும், முடிவாகவும் விளங்குகின்றேன்.

நான் பின்வருமாறும் தியானிக்கத் தக்கவன்,

**आदित्यनामहं विष्णुर्ज्योतिषां रविरंशुमान् ।**
**मरीचिर्मरुतामस्मि नक्षत्राणामहं शशी ॥२१॥**

**ஆதித்யானாம் அஹம் விஷ்ணுர் ஜ்யோதிஷாம் ரவிர் அம்ஶுமான்।**
**மரீசிர் மருதாம் அஸ்மி நக்ஷத்ராணாம் அஹம் ஶஶீ ॥ 21॥**

*நான் ஆதித்யர்களில் விஷ்ணு, ஒளிப் பொருள்களில் கதிர்களுடன் கூடிய ஞாயிறு, காற்றுக்களில் மரீசியும் நட்சத்திரங்களில் சந்திரனும் ஆவேன்.*

பன்னிரண்டு ஆதித்யர்களில் நான் விஷ்ணு. ஒளிப் பொருள்களில் நான் கதிர்களுடைய சூரியன். காற்றுத் தேவதைகளில் நான் மரீசி. நட்சத்திரங்களில் நான் சந்திரன் ஆவேன்.

**वेदानां सामवेदोऽस्मि देवानामस्मि वासवः**
**इन्द्रियाणां मनश्चास्मि भूतानामस्मि चेतना ॥२२॥**

**வேதானாம் ஸாம வேதோ (அ)ஸ்மி தேவானாம் அஸ்மி வாஸவ: ।**
**இந்த்ரியாணாம் மனஶ்சாஸ்மி பூதானாம் அஸ்மி சேதனா ॥ 22॥**

*வேதங்களில் நான் சாம வேதம்; தேவர்களில் இந்திரன்; புலன்களில் மனம் நான்; உயிர்களிடம் உணர்வு நான்.*

வேதங்களில் நான் சாமவேதம். ருத்திரர்கள் ஆதித்யர்கள் போன்ற தேவர்களில் நான் இந்திரன்; கண் முதலிய பதினொரு புலன்களில் நான் எண்ணங்களுக்கும், ஐயங்களுக்கும் இடமான மனம். உயிர்களின் உடல் மற்றும் புலன்களின் சேர்க்கையினால் வெளிப்படும் புத்திவிருத்தி என்னும் உணர்வு நான்.

**रुद्राणां शङ्करश्चास्मि वित्तेशो यक्षरक्षसाम् ।**
**वसूनां पावकश्चास्मि मेरुः शिखरिणामहम् ॥२३॥**

**ருத்ராணாம் ஸங்கரஸ்சாஸ்மி வித்தேஸோ யக்ஷரக்ஷஸாம் ।**
**வஸூனாம் பாவகஸ்சாஸ்மி மேரு: ஸிகரிணாம் அஹம் ॥ 23॥**

*ருத்திரர்களில் நான் சங்கரன்; இயக்கர் அரக்கர்களில் நான் குபேரன்; வசுக்களில் நான் அக்னி; உயர்ந்த மலைகளில் நான் மேரு.*

பதினோரு ருத்திரர்களில் நான் சங்கரன்; இயக்கர் மற்றும் அரக்கர்களில் நான் செல்வந்தனாகிய குபேரன், அஷ்ட வசுக்களில் நான் அக்னி; உயர்ந்த சிகரங்களையுடைய மலைகளில் நான் மேருமலை.

**पुरोधसां च मुख्यं मां विद्धि पार्थ बृहस्पतिम् ।**
**सेनानीनामहं स्कन्दः सरसामस्मि सागरः ॥२४॥**

**புரோதஸாம்ச முக்யம் மாம் வித்தி பார்த்த ப்ருஹஸ்பதிம் ।**
**ஸேனானீனாம் அஹம் ஸ்கந்த: ஸரஸாம் அஸ்மி ஸாகர: ॥ 24॥**

*பார்த்தா, புரோகிதர்களில் நான் தலைமை சான்ற பிருகஸ்பதி, என்றறிவாய். படைத் தலைவரில் நான் கந்தன். நீர் நிலைகளில் நான் கடல்.*

ராஜ புரோகிதர்களில் நான் தலைமை சான்ற பிருகஸ்பதி. பிருகஸ்பதி இந்திரன் புரோகிதர்களில் தலைவராவார். படைக்குத் தலைமை தாங்கும் தேவர்களில் நான் கந்தன். தேவர்கள் தோண்டிய நீர் நிலைகளில் நான் சமுத்திரம்.

**महर्षीणां भृगुरहं गिरामस्म्येकमक्षरम् ।**
**यज्ञानां जपयज्ञोऽस्मि स्थावराणां हिमालयः ॥२५॥**

**மஹர்ஷீணாம் ப்ருகுர் அஹம் கிராம் அஸ்மி ஏகம் அக்ஷரம் ।**
**யஜ்ஞானாம் ஜப - யஜ்ஞோ (அ)ஸ்மி ஸ்தாவராணாம் ஹிமாலய:॥ 25॥**

*மகரிஷிகளில் நான் பிருகு; சொற்களில் நான் 'ஓம்' என்னும் ஓரெழுத்து; யக்ஞங்களில் நான் ஜபயக்ஞம், அசையாப் பொருள்களில் நான் இமயம்.*

மாமுனிவர்களில் நான் பிருகு; உச்சரிக்கும் எழுத்துக்களில் நான் 'ஓம்' என்னும் ஓரெழுத்து மந்திரம். யக்ஞங்களில் நான் ஜப யக்ஞம்; அசையாப் பொருட்களில் நான் இமாலயம்.

**अश्वत्थ: सर्ववृक्षाणां देवर्षीणां च नारद: ।**
**गन्धर्वाणां चित्ररथ: सिद्धानां कपिलो मुनि: ॥ २६॥**

**அஶ்வத்த: ஸர்வ - வ்ருக்ஷாணாம் தேவர்ஷீணாம் ச நாரத: ।**
**கந்தர்வாணாம் சித்ரரத: ஸித்தானாம் கபிலோ முனி: ॥ 26॥**

*மரங்களில் நான் அரசமரம்; தேவரிஷிகளில் நான் நாரதன்; கந்தர்வர்களில் நான் சித்ரரதன்; சித்தர்களில் நான் கபிலமுனி.*

மரங்களில் நான் புனிதமான அரசமரம்; தேவ ரிஷிகளில் நான் நாரதன்; பிறப்பால் தேவர்களாயினும் சில தேவர்கள் (நாரதர் போன்றோர்) மந்திரங்களைத் தரிசிக்கும் திறன்பெற்று முனிவர்களாகின்றனர். அவர்களுள் நான் நாரதன் ஆவேன். கந்தர்வர்களுள் நான் சித்ரரதன். பிறப்பிலேயே தர்மமும், ஞானமும் வைராக்கியமும் கைவரப் பெற்ற சித்தர்களுள் நான் கபில முனி ஆவேன்.

**उच्चै:श्रवसमश्वानां विद्धि माममृतोद्भवम् ।**
**ऐरावतं गजेन्द्राणां नराणां च नराधिपम् ॥ २७॥**

**உச்சை: ஶ்ரவஸம் அஶ்வானாம் வித்தி மாம் அம்ருதோத்பவம் ।**
**ஐராவதம் கஜேந்த்ராணாம் நராணாம் ச நராதிபம் ॥ 27॥**

*குதிரைகளில் நான் அமிர்தத்தோடு பிறந்த உச்சை சிரவஸ் என்று அறிவாயாக. யானைகளுள் ஐராவதமாகவும், மனிதர்களுள் அரசனாகவும் என்னை அறி.*

குதிரைகளுள் நான் பாற்கடலைக் கடைந்தபோது அமிர்தத்துடன் பிறந்த உச்சைசிரவஸ் ஆவேன். ராஜ யானைகளுள் நான் இராவதிக்குப் பிறந்த ஐராவதம் என்று அறிந்து கொள். 'என்னை இவ்வாறு அறிந்து கொள்' என்பது ஒவ்வொன்றுடனும் தொக்கியுள்ளது. மனிதர்களிடையே நான் அரசன் என்று அறிவாயாக.

**आयुधानामहं वज्रं धेनुनामस्मि कामधुक् ।**
**प्रजनश्चास्मि कन्दर्प: सर्पाणामस्मि वासुकि: ॥ २८॥**

**ஆயுதானாம் அஹம் வஜ்ரம் தேனூனாம் அஸ்மி காமதுக்**
**ப்ரஜனஶ்சாஸ்மி கந்தர்ப்ப: ஸர்ப்பாணாம் அஸ்மி வாஸுகி: ॥ 28॥**

*ஆயுதங்களில் நான் வஜ்ராயுதம்; பசுக்களில் நான் காமதேனு; பிறப்பிப்போரில் நான் மன்மதன்; சர்ப்பங்களுள் நான் வாசுகி.*

ஆயுதங்களில் நான் ததீசி முனிவரின் எலும்பிலிருந்து உண்டான வஜ்ராயுதம் ஆவேன். பசுக்களிடையே நான் இச்சைகளைப் பூர்த்தி செய்யும், வசிஷ்டரின் காமதேனு ஆவேன். காமதேனு என்பது நமது விருப்பங்களை நிறைவேற்றும் பசுவாகும். புத்திரர்களைப் பெறச் செய்வதில் நான் காதல் தெய்வமான மன்மதன் ஆவேன். பாம்புகளுக்கிடையில் நான் ராஜநாகமான வாசுகி ஆவேன்.

**अनन्तश्चास्मि नागानां वरुणो यादसामहम् ।**
**पितॄणामर्यमा चास्मि यमः संयमतामहम् ॥ २९॥**

**அனந்தஶ் சாஸ்மி நாகானாம் வருணோ யாதஸாம் அஹம் ।**
**பித்ருணாம் அர்யமா சாஸ்மி யம: ஸம்யமதாம் அஹம் ॥ 29॥**

*நாகங்களுள் நான் அனந்தன்; நீர் வாழ்வோரில் நான் வருணன்; பிதிர்க்களில் நான் அரியமான்; தண்டிப்பவருள் நான் யமன்.*

நாகங்கள் அல்லது பாம்புகளில் நான் அனந்தன், பாம்புகளின் அரசனான அனந்தன் ஆவேன். நீர் தேவதைகளில் நான் வருணன் ஆவேன். பிதிர்க்களில் நான் பிதிர்க்களின் தலைவனாகிய அரியமான் ஆவேன். தண்டித்து அடக்குவோருள் நான் யமன் ஆவேன்.

**प्रह्लादश्चास्मि दैत्यानां कालः कलयतामहम् ।**
**मृगाणां च मृगेन्द्रोऽहं वैनतेयश्च पक्षिणाम् ॥ ३०॥**

**ப்ரஹ்லாதஶ்சாஸ்மி தைத்யானாம் கால: கலயதாம் அஹம் ।**
**ம்ருகாணாம் ச ம்ருகேந்த்ரோ(அ)ஹம் வை'னதேயஶ் ச பக்ஷிணாம்॥30॥**

*திதி வம்சத்தவருள் நான் பிரகலாதன்; கணக்கிடுவோரில் நான் காலம்; விலங்குகளில் நான் சிங்கம்; பறவைகளில் நான் கருடன்.*

திதி வம்சத்தில் தோன்றியவர்களுள் நான் பிரகலாதன் என்றழைக்கப்படுபவன் ஆவேன். கணக்கிடுபவர்களில் நான் காலம் ஆவேன். மிருக ஜாதியில் நான் அவற்றின் அரசனான சிங்கம் அல்லது புலி ஆவேன். பறவைகளில் நான் விநதையின் மைந்தனான கருடன் ஆவேன்.

पवनः पवतामस्मि रामः शस्त्रभृतामहम् ।
झषाणां मकरश्चास्मि स्रोतसामस्मि जाह्नवी ॥ ३१॥

**பவன: பவதாம் அஸ்மி ராம: ஸாஸ்த்ரப்ருதாம் அஹம் ।**
**ஜஷாணாம் மகரஸ்சாஸ்மி ஸ்ரோதஸாம் அஸ்மி ஜாஹ்நவீ ॥ 31॥**

***தூய்மை செய்வனவற்றுள் நான் காற்று; ஆயுதம் தரித்தோரில் நான் இராமன்; மீன்களில் நான் சுறாமீன்; ஆறுகளுள் நான் கங்கை.***

தூய்மை செய்யும் பொருள்களில் நான் காற்று; ஆயுதம் அணிந்துள்ளோரில் நான் தசரத புத்திரனாகிய இராமன். மீன்கள் போன்ற நீர்வாழ் உயிர்களில் நான் சுறாமீன். நதிகளுள் நான் கங்கை நதி ஆவேன்.

सर्गाणामादिरन्तश्च मध्यं चैवाहमर्जुन ।
अध्यात्मविद्या विद्यानां वादः प्रवदतामहम् ॥ ३२॥

**ஸர்காணாம் ஆதிர் அந்தஸ் ச மத்யம் சைவாஹம் அர்ஜுன**
**அத்யாத்ம வித்யா வித்யானாம் வாத: ப்ரவததாம் அஹம் ॥ 32॥**

***படைப்புக்களின் முதலும் நடுவும் முடிவும் நான் அர்ஜுனா! வித்தைகளுள் நான் அத்யாத்ம வித்தை. வாதம் புரிவோரிடையே நான் வாதம் ஆவேன்.***

அர்ஜுனா! படைப்புகளுக்கு நான் முதலாகவும், நடுவாகவும், முடிவாகவும் இருக்கிறேன். அதாவது உயிர்களுக்கு நான் தோற்றமும், வாழ்வும், அழிவுமாக இருக்கின்றேன். ஆரம்பத்தில் (20 வது சுலோகத்தில்) ஆத்மாக்களையுடைய உயிர்களைப் பற்றிப் பேசப்பட்டது. ஆனால் இங்கோ எல்லா உயிர்களுமே பொதுவாகக் குறிப்பிடப்படுகின்றன. வித்தைகளுள் நான் அத்யாத்ம வித்தை. அதாவது அத்யாத்ம வித்தை என்றால் ஆத்மாவைப் பற்றிய அறிவு ஆகும். அது முக்திக்கு வழிகோலுவதால் அவ்வறிவே உயர்ந்ததாகும். உண்மை காண்பதற்கு உறுதுணையாக இருப்பது வாதம். ஆகையால் வாதம் செய்வோரிடையே நான் வாதம் ஆவேன். 'ப்ரவததாம்' அதாவது வாதம் செய்தல் என்பது இங்கே 'வாதம்' 'ஜல்பம்' 'விதண்டா' என்பவற்றைக் குறிப்பிடுகின்றது. இவற்றுள் உண்மை அறிவதற்கு உறுதுணையாக இருப்பது 'வாதம்'. ஆகையால் நான் வாதம் ஆவேன். ('வாதம்' என்பது வாதி, பிரதிவாதி இருவரும் (குரு சிஷ்ய அடிப்படையில்) உண்மை காணும் நோக்கில் தகுந்த சான்றுகளுடன் விவாதிப்பதாகும். 'ஜல்பம்' என்பது வாதி பிரதிவாதி இருவரும் போலி சான்றுகளுடன் பிறர் கொள்கையினை மறுத்துத் தம் கொள்கையினை நிலைநிறுத்துவதாகும். 'விதண்டா' என்பது வாதி, பிரதிவாதி இருவரும் தத்தம் கொள்கையை நிலைநிறுத்தாது போலி சான்றுகளுடன் பிறர் கொள்கையை தான் வெற்றி பெற வேண்டும் என்பதற்காக மறுத்தல் ஆகும்.)

अक्षराणामकारोऽस्मि द्वन्द्वः सामासिकस्य च ।
अहमेवाक्षयः कालो धाताहं विश्वतोमुखः ॥ ३३॥

அக்ஷராணாம் 'அ' காரோ அஸ்மி த்வந்த்வ: ஸாமாஸிகஸ்ய ச ।
அஹம் ஏவாக்ஷய: காலோ தாதாஹம் விஶ்வதோமுக: ॥ 33॥

*எழுத்துக்களில் நான் அகரம்; தொகை மொழியில் நான் உம்மைத் தொகை. நான் அழிவற்ற காலம். எங்கும் முகமுள்ளவனும் கருமபலனை அளித்துக் காப்பவனும் நானே*

எழுத்துக்களுள் நான் 'அ' என்னும் அகரமாவேன். தொகை மொழியில் நான் உம்மைத் தொகையாவேன். நான் ஒவ்வொரு கணமாக இடையறாது செல்கின்ற அழிவற்றக் காலம் ஆவேன் அல்லது பரமேசுவரனாகிய காலன் ஆவேன். மற்றும் நான் எங்கும் முகங்கள் உடையவனாக எல்லோருக்கும் கர்ம பலன்களைப் பகிர்ந்தளிப்பவனும் ஆவேன்.

मृत्युः सर्वहरश्चाहमुद्भवश्च भविष्यताम्
कीर्तिः श्रीर्वाक्च नारीणां स्मृतिर्मेधा धृतिः क्षमा ॥ ३४॥

ம்ருத்யு: ஸர்வஹரஶ் சாஹம் உத்பவஶ் ச பவிஷ்யதாம் ।
கீர்த்தி: ஶ்ரீர்வாக் ச நாரீணாம் ஸ்ம்ருதிர் மேதா திருதி: க்ஷமா ॥ 34॥

*எல்லாவற்றையும் அபகரிக்கும் மரணம் நான். எதிர்காலப் பொருள்களின் பிறப்பு நான். பெண்களிடத்து நான் புகழ், திரு, வாக்கு, நினைவு, அறிவு, தைரியம், பொறுமை.*

மரணம் இருவகைத்து.ஒன்று பொருள்களை அபகரிப்பது. மற்றொன்று உயிர்களை அபகரிப்பது. இவற்றுள் உயிரை அபகரிப்பது எதுவோ அதுவே எல்லாவற்றையும் அபகரிப்பது என்று குறிப்பிடப்படுகின்றது. நான் அதுவாக இருக்கின்றேன். அல்லது ஊழிக் காலத்தில் பரமேசுவரன் எல்லாவற்றையும் அபகரித்துக் கொள்வான் என்று கூறப்படுவதால் நான் அப்பரமேசுவரன் ஆவேன். நான் பெருகுகின்ற செல்வமாகவும், அதனை அடைதற்குரிய கருவியாகவும் இருக்கின்றேன். எவருக்கு? என்றால் இனிமேல் செல்வத்தை அடையப் போகின்றவர்க்கு, செல்வத்தை அடையும் தகுதி உடையவர்க்கு, பெண்களிடத்து நான் புகழ், திரு, வாக்கு, நிறை, அறிவு, தைரியம், பொறுமை என்பவையாக இருக்கின்றேன். இம்மேண்மைக் குணங்களுள் ஏதேனும் ஒன்று நிரம்பப் பெற்றவர்கள் கூட வெற்றி பெற்றவர்களாகக் கருதப்படுகின்றனர்.

बृहत्साम तथा साम्नां गायत्री छन्दसामहम् ।
मासानां मार्गशीर्षोऽहमृतूनां कुसुमाकरः ॥ ३५॥

**ப்ருஹத்ஸாம ததா ஸாம்னாம் காயத்ரீ சந்தஸாம் அஹம் ।**
**மாஸாணாம் மார்க - ஶீர்ஷோ (அ)ஹம் ருதூணாம் குஸுமாகர: ॥ 35॥**

*அவ்வாறே நான் சாம கானங்களில் உயர்ந்த பிருகத் சாமம். சந்தங்களுள் காயத்ரீ. மாதங்களில் மார்கழி. பருவ காலங்களில் பூக்கள் பூத்துக் குலுங்கும் இளவேனில்.*

அவ்வாறே சாமகானங்களில் நான் உயர்ந்த பிருகத் சாமம் ஆவேன். சந்தங்களினாலான வேத மந்திரங்களில் நான் காயத்ரீ மந்திரமாவேன். அதுபோல் மாதங்களில் நான் மார்கழி ஆவேன். பருவ காலங்களுள் பூக்கள் மலரும் இளவேனிற்காலமாவேன்.

द्यूतं छलयतामस्मि तेजस्तेजस्विनामहम् ।
जयोऽस्मि व्यवसायोऽस्मि सत्त्वं सत्त्ववतामहम् ॥ ३६॥

**த்யூதம் சலயதாம் அஸ்மி தேஜஸ் தேஜஸ்விநாம் அஹம் ।**
**ஜயோ(அ)ஸ்மி வ்யவஸாயோ(அ)ஸ்மி ஸத்த்வம் ஸத்த்வவதாம் அஹம் ॥ 36॥**

*நான் வஞ்சகரிடம் சூதாகவும், ஒளியுடையோரிடம் ஒளியாகவும் இருக்கின்றேன். நான் வெற்றியாகவும், முயற்சியாகவும், நற்குணவான் களிடம் நற்குணமாகவும் இருக்கின்றேன்.*

ஏமாற்றும் வஞ்சகரிடம் நான் சூதாட்டமாக இருக்கின்றேன். ஒளியுடையோரிடம் நான் ஒளியாக இருக்கின்றேன். வெல்பவர்களிடம் நான் வெற்றியாக இருக்கின்றேன். ஊக்கமுடையோரிடம் நான் முயற்சியாகவும், நற்குணவான்களிடம் நற்குணமாகவும் இருக்கின்றேன்.

वृष्णीनां वासुदेवोऽस्मि पाण्डवानां धनञ्जयः ।
मुनीनामप्यहं व्यासः कवीनामुशना कविः ॥ ३७॥

**வ்ருஷ்ணீனாம் வாஸுதேவோ (அ)ஸ்மி பாண்டவானாம் தனஞ்ஜய: ।**
**முனீனாம் அபி அஹம் வ்யாஸ: கவீனாம் உஶனா கவி: ॥ 37॥**

*விருஷ்ணி குலத்தவரில் நான் வாசுதேவன்; பாண்டவர்களுள் நான் தனஞ்ஜயன்; முனிவர்களுள் நான் வியாசராகவும், கவிகளுள் சுக்கிரக் கவியாகவும் இருக்கின்றேன்.*

விருஷ்ணிக்களில் அதாவது யாதவர்களில் நான் உனது நண்பனான வாசுதேவன். பாண்டவர்களுள் நான், நீதான். அர்ஜுனா! எல்லாப் பொருள்களையும் அறியும் முனிவர்களுள் நான் வியாசன் ஆவேன். தொலை

நோக்குத் திறனுடைய கவிகளில் நான் உசனா கவியாக (சுக்கிராச்சாரியனாக) இருக்கின்றேன்.

दण्डो दमयतामस्मि नीतिरस्मि जिगीषताम् ।
मौनं चैवास्मि गुह्यानां ज्ञानं ज्ञानवतामहम् ॥ ३८॥

**தண்டோ தமயதாம் அஸ்மி நீதிர் அஸ்மி ஜிகீஷதாம் ।**
**மௌனம் சைவாஸ்மி குஹ்யானாம் ஜ்ஞானம் ஜ்ஞானவதாம் அஹம் ॥ 38 ॥**

***அடக்கி ஆள்வோரிடம் நான் செங்கோலாக இருக்கின்றேன்; வெற்றி கொள்ள விரும்புவோரிடம் நீதியாக இருக்கின்றேன்; ரகசியங்களுள் மௌனமாகவும், ஞானிகளிடம் ஞானமாகவும் இருக்கின்றேன்.***

அடங்காதவரை அடக்கி ஆள்வோரின் கையில் நான் செங்கோலாக இருக்கின்றேன். வெற்றியை நாடுவோரிடம் நான் நீதியாக இருக்கின்றேன். ரகசியங்களுள் நான் மௌனமாகவும், ஞானிகளிடம் நான் ஞானமாகவும் இருக்கின்றேன்.

यच्चापि सर्वभूतानां बीजं तदहमर्जुन ।
न तदस्ति विना यत्स्यान्मया भूतं चराचरम् ॥ ३९॥

**யச்சாபி ஸர்வபூதானாம் பீஜம் தத் அஹம் அர்ஜுன ।**
**ந தத் அஸ்தி விநா யத்ஸ்யான் மயா பூதம் சராசரம் ॥ 39॥**

***அர்ஜுனா! எல்லா உயிர்களுக்கும் விதை எதுவோ, அது நான். என்னையன்றி அசையும் அசையாப் பொருள் எதுவுமில்லை.***

பல்கிப் பெருகும் உயிர்கள் எல்லாவற்றிற்கும் எது விதையோ, அது நான்தான் அர்ஜுனா! நிறைவு செய்வதற்காக பகவான் தமது சக்திகளை சுருக்கிக் கூறுகிறார். என்னையன்றி அசையும் அசையாப் பொருள் எதுவும் இல்லை; என்னால் புறக்கணிக்கப்பட்டதும் என்னை நான் விலக்கிக் கொண்டதுமாகிய எப்பொருளும் பாழாம். எனவே எல்லாவற்றின் சாரமாகவும் நான் இருக்கின்றேன் என்பது இதன் பொருளாகும்.

नान्तोऽस्ति मम दिव्यानां विभूतीनां परन्तप ।
एष तूद्देशतः प्रोक्तो विभूतेर्विस्तरो मया ॥ ४०॥

**நாந்தோ(அ)ஸ்தி மம திவ்யானாம் விபூதீனாம் பரந்தப ।**
**ஏஷ துத்தேஶத: ப்ரோக்தோ விபூதேர் விஸ்தரோ மயா ॥ 40॥**

*பரந்தபா! எனது தெய்வீக சக்திகளுக்கு எல்லை என்பது இல்லை. எனினும் எனது தெய்வீக சக்திகளின் விரிவு என்னால் மிகவும் சுருக்கமாக உரைக்கப்பட்டது.*

எனது தெய்வீக சக்தியானது எல்லையற்றதாகும். உண்மையில் அனைவரின் ஆத்மாவான இறைசக்தியின் எல்லையினை அறிந்தவனோ, எடுத்துக் கூறியவனோ எவனுமிலன். எனினும் இங்கு உனக்கு உரைக்கப்பட்டது எனது விரிந்த சக்தியின் சுருக்கமேயாகும்.

**यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।**
**तत्तदेवावगच्छ त्वं मम तेजोंऽशसम्भवम् ॥ ४१॥**

**யத்யத் விபூதிமத் ஸத்த்வம் ஸ்ரீமத் ஊர்ஜிதம் ஏவ வா ।**
**தத்தத் ஏவாவகச்ச த்வம் மமதேஜோ (அ)ம்ஶ ஸம்பவம் ॥ 41॥**

*எதுஎது வலிமையுடையதாகவும், புகழுடையதாகவும், வளமுடையதாகவும் உள்ளதோ அதுஅது எனது ஒளியின் அம்சத்தில் பிறந்ததென்று அறிவாயாக.*

இவ்வுலகில் எப்பொருளெல்லாம் வலிமையுடையதாகவும், புகழுடையதாகவும், வளமுடையதாகவும் உள்ளதோ அப்பொருளெல்லாம் எனது ஒளியின் ஒரு சிறு துளியில் பிறந்ததென்று உணர்ந்து கொள்.

**अथवा बहुनैतेन किं ज्ञातेन तवार्जुन ।**
**विष्टभ्याहमिदं कृत्स्नमेकांशेन स्थितो जगत् ॥ ४२॥**

**அதவா பஹுனைதேன கிம் ஜ்ஞாதேன தவார்ஜுன ।**
**விஷ்டப்யாஹம் இதம் க்ருத்ஸ்னம் ஏகாம்ஶேன ஸ்திதோ ஜகத் ॥ 42॥**

*அல்லது அர்ஜுனா! இதனைப் பலவாறாக அறிந்து கொள்வதால் உனக்கு என்ன பயன்? எனது யோகசக்தியின் ஒரு அம்சத்தால் நான் இந்த உலகமனைத்தையும் தாங்கி நிற்கின்றேன்.*

அல்லது அர்ஜுனா, மேலே கூறியுள்ளவாறு மிகவும் விரிவான இதனை மிகவும் சுருக்கமாக அறிந்து கொள்வதால் உனக்கு என்ன பயன்? நான் கூறப்போவதைக் கேள். நான் இந்த பிரபஞ்சம் முழுவதையும் பொருள்கள் எல்லாவற்றின் வடிவமாக விளங்கும் ஒரு பாதத்தினால் தாங்கி நிற்கின்றேன். இதனையே "பொருள்களெல்லாம் அவருடைய பாதமாக இருக்கின்றன" என்று வேதங்கள் கூறுகின்றன (ரிக். வே. 10.90.3; தை. ஆ. 30.12).

இவ்வாறு மகாபாரதத்தில் பீஷ்மபர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோகசாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "விபூதியோகம்" என்னும் பத்தாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

## அத்தியாயம் பதினொன்று

## விசுவரூப தரிசனம்

பகவானுடைய தெய்வீக ஆற்றல்கள் விளக்கிக் கூறப்பட்டவுடன், அர்ஜுனன் அதில் பகவான் கூறிய "நான் இப்பிரபஞ்சம் முழுவதையும் எனது ஒரு அம்சத்தினால் தாங்கி நிற்கின்றேன்" (10.42) என்பதைக் கேட்டு, பகவானது பிரபஞ்ச வடிவமான ஆதிரூபத்தினைக் காண விரும்பிக் கூறினான்.

अर्जुन उवाच

**मदनुग्रहाय परमं गुह्यमध्यात्मसञ्ज्ञितम्**
**यत्त्वयोक्तं वचस्तेन मोहोऽयं विगतो मम ॥ १॥**

*அர்ஜுன உவாச*

**மத்அனுக்ரஹாய பரமம் குஹ்யம் அத்யாத்ம ஸம்ஜ்ஞிதம் ।**
**யத் த்வயோக்தம் வசஸ் தேன மோஹோ(அ)யம் விகதோ மம ॥ 1॥**

*அர்ஜுனன் கூறினான்*

***எனக்கு அருள் செய்ய வேண்டி எனக்கிரங்கி எந்த ரகசியமான ஆத்ம ஞானமானது எனக்கு உன்னால் எடுத்துரைக்கப்பட்டதோ அந்த ஞானத்தினால் என் மயக்கம் தீர்ந்து போயிற்று.***

'எனக்கு அருள் செய்யவேண்டி' அதாவது என்னை ஈடேற்றுவதற்காக மிக உயர்ந்ததும், விஞ்சுதற்கரியதும், மிகவும் ரகசியமானதும், மறைபொருளானதும், ஆன்மீகமானதும், ஆத்மாவையும், ஆத்மா அல்லாததையும் பகுத்தறியக் கூடியதுமான 'அத்யாத்மம்' என்னும் ஆத்ம ஞானத்தினை நீ எனக்கு எடுத்துரைத்தாய். அந்த ஞானத்தினால் எனது மதிமயக்கம் என்னிடமிருந்து நீங்கிவிட்டது என்பது கருத்தாகும்.

மேலும்,

**भवाप्ययौ हि भूतानां श्रुतौ विस्तरशो मया**
**त्वत्तः कमलपत्राक्ष माहात्म्यमपि चाव्ययम् ॥ २)॥**

**பவாப்யயௌ ஹி பூதானாம் ஶ்ருதௌ விஸ்தரஶோ மயா**
**த்வத்த: கமலபத்ராக்ஷ மாஹாத்ம்யம் அபி சாவ்யயம் ॥ 2॥**

*செந்தாமரையிதழ் போன்ற சிவந்த விழியுடையாய், உயிர்களின் தோற்றமும் அழிவும் உன்னிடமிருந்து என்னால் கேட்கப்பட்டது. மற்றும் உனது குறைவற்ற பெருமையும் கேட்கப்பட்டது.*

'தோற்றம்' - உயிர்களின் பிறப்பு. 'அழிவு' - அவற்றின் இறப்பு. இவற்றைப் பற்றி உன்னிடமிருந்து சுருக்கமாக இன்றி ஒரு நீண்ட விளக்கத்தினை நான் கேட்டேன். ஓ செந்தாமரைக் கண்ணனே! செந்தாமரைக் கண்ணன் என்றால் தாமரையிதழ் போன்ற கண்களை உடையவன் என்று பொருளாகும். உனது பெருமை என்பது உனது அழிவற்றப் புகழாகும். இதனையும் கூட நான் கேட்டேன் என்பது தொக்கி நிற்கிறது.

**एवमेतद्यथात्थ त्वमात्मानं परमेश्वर ।**
**द्रष्टुमिच्छामि ते रूपमैश्वरं पुरुषोत्तम ॥ ३॥**

**ஏவம் ஏதத் யதாத்த த்வம் ஆத்மானம் பரமேஶ்வர ।**
**த்ரஷ்டும் இச்சாமி தே ரூபம் ஐஶ்வரம் புருஷோத்தம ॥ 3॥**

*பரமேசுவரா! எவ்வாறு நீ உன்னை வர்ணித்தாயோ அதனை அவ்வாறே நான் உணர்ந்தேன். எனினும் புருஷோத்தமா, உனது ஈசுவர வடிவத்தைக் காண விரும்புகிறேன்.*

பரமேசுவரா, நீ உன்னைப் பற்றி எவ்வாறு எடுத்துரைத்தாயோ அதனை அவ்வாறே நான் உணர்ந்தேன். இப்போது நான் உனது ஞானம், சக்தி, வலிமை, தேஜஸ், வீரம், ஐஸ்வர்யம் முதலியவையுடைய எங்கும் பரந்திருக்கும் உனது ஈசுவர வடிவத்தைக் காண விரும்புகிறேன், புருஷோத்தமா!

**मन्यसे यदि तच्छक्यं मया द्रष्टुमिति प्रभो ।**
**योगेश्वर ततो मे त्वं दर्शयात्मानमव्ययम् ॥ ४॥**

**மன்யஸே யதி தச் சக்யம் மயாத்ரஷ்டும் இதி ப்ரபோ ।**
**யோகேஶ்வர ததோ மே த்வம் தர்ஶயாத்மானம் அவ்யயம் ॥ 4॥**

*இறைவனே, அது என்னால் காண்பதற்கு சாத்தியமானது என்று நீ கருதினால், யோகேசுவரா, எனக்கு, உனது அழிவற்ற வடிவத்தைக் காட்டியருள்வாய்.*

பிரபுவே, அர்ஜுனனாகிய என்னால் அது காண்பதற்கு சாத்தியமானது என்று நீ கருதினால் யோகேசுவரா, (யோகிகளின் தலைவர் என்பதாகும்) எனக்கு உனது அழிவற்ற ஆத்மாவைக் காட்டியருள்வாயாக. நான் அதனைக் காணப் பேராவல் கொண்டுள்ளேன்.

இவ்வாறு அர்ஜுனனால் வேண்டப்பட்டதும்,
ஸ்ரீ பகவான் கூறினார்,

श्रीभगवानुवाच

**पश्य मे पार्थ रूपाणि शतशोऽथ सहस्रशः ।**
**नानाविधानि दिव्यानि नानावर्णाकृतीनि च ॥५॥**

**பஶ்ய மே பார்த்த ரூபாணி ஶதஶோ (அ)த ஸஹஸ்ரஶ: ।**
**நானாவிதானி திவ்யானி நானாவர்ணாக்ருதீனி ச ॥ 5॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

*பார்த்தா! வகைபல, நிறம்பல, வடிவம் பல கொண்டு நூற்றுக்கணக்காகவும், ஆயிரக்கணக்காகவும் உள்ள எனது தெய்வீக வடிவங்களைப் பார்.*

ஸ்ரீ பகவான் கூறினார்,

பார் அர்ஜுனா! நூற்றுக்கணக்கில் அல்ல ஆயிரக்கணக்கில் பல்கிப் பெருகியிருக்கும் எனது வடிவங்களைப் பார்! அவை பல்வேறு வகையின, பல்வேறு வடிவின, அவை பிரகிருதி தொடர்புடையவையன்று, மாறாக தெய்வீகமானவை. நீலம், மஞ்சள் என்று பலவண்ணமுடையன.

**पश्यादित्यान्वसून्रुद्रानश्विनौ मरुतस्तथा ।**
**बहून्यदृष्टपूर्वाणि पश्याश्चर्याणि भारत ॥६॥**

**பஶ்யாதித்யான் வஸூன் ருத்ரான் அஶ்வினௌ மருதஸ்ததா ।**
**பஹூன்யத்ருஷ்டபூர்வாணி பஶ்யாஶ்சர்யாணி பாரத ॥ 6॥**

*ஆதித்தியர்களையும், வசுக்களையும், ருத்திரர்களையும், அசுவனி தேவர்களையும், மருத்துக்களையும் பார். பார்த்தா! முன்பு காணாத பல ஆச்சர்யங்களைப் பார்.*

பன்னிரு ஆதித்தியர்களையும், எட்டு வசுக்களையும், பதினோரு ருத்திரர்களையும், இரு அசுவினி தேவர்களையும், ஏழு வகுப்பினரான மருத்துக்களையும் பார். அதுபோல் உன்னாலும் மனித ஜாதியில் வேறு எவனாலும் முன்பு காணப்படாத பல விந்தைகளைப் பார் பாரதா!

இது மட்டுமன்று,

**इहैकस्थं जगत्कृत्स्नं पश्याद्य सचराचरम् ।**
**मम देहे गुडाकेश यच्चान्यद्द्रष्टुमिच्छसि ॥७॥**

**இஹைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம் பஶ்யாத்ய ஸ சராசரம் ।**
**மம தேஹே குடாகேஶ யச்சான்யத் த்ரஷ்டும் இச்சஸி ॥ 7॥**

*குடாகேசா! அசையும் அசையா உலகங்கள் அனைத்தையும் எனது உடலில் இப்போது பார்! மேலும் எதை நீ பார்க்க விரும்புகின்றாயோ, அதனையும் பார்.*

குடாகேசா! அசையும் அசையா உலகங்கள் அனைத்தையும் இப்போது எனது உடலாகிய ஒரே இடத்தில் பார்ப்பாயாக. மேலும் எந்த வெற்றி, தோல்வியின் மீது நீ ஐயங்கொண்டு ''நாம் வெற்றி பெறுவோமோ அல்லது தோற்று விடுவோமோ?'' (2.6) என்று கேட்டாயோ, அந்த பிறவற்றையும் கூட நீ காண விரும்பினால் காணலாம்.

ஆனால்,

**न तु मां शक्यसे द्रष्टुमनेनैव स्वचक्षुषा ।**
**दिव्यं ददामि ते चक्षुः पश्य मे योगमैश्वरम् ॥८॥**

**ந து மாம் ஶக்யஸே த்ரஷ்டும் அனேனைவ ஸ்வசக்ஷுஷா ।**
**திவ்யம் ததாமி தே சக்ஷு: பஶ்ய மே யோகம் ஐஶ்வரம் ॥ 8॥**

*ஆனால் உனது இவ்விழிகளால் என்னைக் காண முடியாது. நான் உனக்கு தெய்வீக விழிகளை அருள்கிறேன். அதன் மூலம் எனது ஈசுவர யோகத்தைப் பார்.*

ஆனால் எனது விசுவரூபத்தை உனது சாதாரண விழிகளால் காண முடியாது. எனினும் உன்னால் காணக் கூடிய தெய்வீக விழிகளை நான் உனக்குத் தருகிறேன். அவற்றின் மூலம் மிக உயர்ந்த எனது ஈசுவர யோகத்தைக் காண்பாயாக என்பது இதன் பொருளாகும்.

**सञ्जय उवाच**

**एवमुक्त्वा ततो राजन्महायोगेश्वरो हरिः ।**
**दर्शयामास पार्थाय परमं रूपमैश्वरम् ॥९॥**

*சஞ்ஜய உவாச*

**ஏவம் உக்த்வா ததோ ராஜன் மஹாயோகேஶ்வரோ ஹரி: ॥**
**தர்ஶயாமாஸ பார்த்தாய பரமம் ரூபம் ஐஶ்வரம் ॥ 9॥**

*சஞ்ஜயன் கூறினான்*

*திருதராஷ்டிர மன்னரே, மகா யோகேசுவரராகிய ஹரி இவ்வாறு கூறிய பிறகு பார்த்தனுக்குப் பரம ஈசுவர வடிவத்தைக் காட்டியருளினார்.*

இவ்வாறு கூறிய பின்பு, ஓ, திருதிராஷ்டிர மன்னரே, மகாயோகேசுவரராகிய ஹரி அல்லது நாராயணர் பார்த்தனுக்கு தமது பரம விசுவருபத்தைக் காட்டியருளினார்.

**अनेकवक्त्रनयनमनेकाद्भुतदर्शनम् ।**
**अनेकदिव्याभरणं दिव्यानेकोद्यतायुधम् ॥ १०॥**

**அனேகவக்த்ரநயனம் அனேகாத்புத தர்ஶனம் ।**
**அனேகதிவ்யாபரணம் திவ்யானேகோத்யதாயுதம் ॥ 10॥**

***அவ்வடிவம் பலவாய்களும், பல விழிகளுமுடையது; பல அற்புதக் காட்சிகளையுடையது; பல தெய்வீக ஆபரணங்கள் பூண்டது; பல தெய்வீக ஆயுதங்களை ஏந்தியது.***

பல வாய்களும், பல விழிகளும், பல அற்புதக் காட்சிகள் உடையதும், பல தெய்வீக ஆபரணங்கள் பூண்டதும், பல தெய்வீக ஆயுதங்களை ஏந்தியதுமான ஒரு வடிவமாக அது இருந்தது. அப்படிப்பட்ட வடிவத்தை 9வது சுலோகத்தின் இறுதியிலுள்ள ''காட்டியருளினார்'' என்னும் வார்த்தையோடு கூட்டிக் கொள்க.

மேலும்,

**दिव्यमाल्याम्बरधरं दिव्यगन्धानुलेपनम् ।**
**सर्वाश्चर्यमयं देवमनन्तं विश्वतोमुखम् ॥ ११॥**

**திவ்யமால்யாம்பரதரம் திவ்யகந்தானுலேபனம் ।**
**ஸர்வாஶ்சர்ய மயம் தேவம் அனந்தம் விஶ்வதோமுகம் ॥ 11॥**

***தெய்வீக மாலைகளும், ஆடைகளும் அணிந்து, தெய்வீக களபங்கள் பூசப்பெற்று, முற்றும் ஆச்சரியமயமாகி, ஒளிபெற்றதாய், எல்லையற்றதாய், எங்கும் முகம் உடையதாய்.***

பகவான் தெய்வீக மலர்களினாலான மாலைகளும், ஆடைகளும் அணிந்திருந்தார். தெய்வீக மணமுடைய களபங்கள் பூசியிருந்தார். முற்றிலும் ஆச்சரியமயமானவராகவும், ஒளியுடையவராகவும், எல்லையற்றவராகவும், எங்கும் முகங்களுடையவராகவும் இருந்தார். எல்லா உயிர்களுக்கும் பகவான் ஆத்மாவாக இருப்பவர் ஆதலினால் எங்கும் முகமுடையவர் என்று கூறப்பட்டது. இப்படிப்பட்ட வடிவத்தை அவர் அர்ஜுனனுக்கு காட்டினார் என்றோ அல்லது அர்ஜுனன் கண்டான் என்றோ எடுத்துக் கொள்க.

இனி பகவானுடைய விசுவ ரூபத்திலிருந்து வீசிய ஒளிக்கு ஓர் உவமை கூறப்படுகிறது.

दिवि सूर्यसहस्रस्य भवेद्युगपदुत्थिता ।
यदि भाः सदृशी सा स्याद्भासस्तस्य महात्मनः ॥ १२॥

**திவி ஸூர்யஸஹஸ்ரஸ்ய பவேத் யுகபத் உத்திதா ॥**
**யதி பா: ஸத்ருஶீ ஸா ஸ்யாத் பாஸஸ் தஸ்ய மஹாத்மன: ॥ 12॥**

*வானத்தில் ஆயிரம் சூரியன்களின் ஒளி ஒரே சமயத்தில் தோன்றுமாயின் அது அந்த மகாத்மாவின் ஒளிக்கு ஒப்பாக இருக்கும்.*

வானத்தில் அல்லது மூன்றாவது உலகம் எனப்படும் தேவருலகில் ஒரே சமயத்தில் ஆயிரம் சூரியன்கள் உதிக்குமாயின் அவற்றின் ஒருங்கிணைந்த ஒளியோ அல்லது அதைவிடவும் அதிக ஒளி வீசுவதாக இருந்தது, அந்த மகாத்மாவின் விசுவரூபத்தின் ஒளி. இதன் பொருள் ஆயிரம் சூரியன்களின் ஒளியையும் விஞ்சும் வண்ணம் இருந்தது பகவானின் விசுவ ரூபத்தின் ஒளி என்பதாகும்.

மேலும்,

तत्रैकस्थं जगत्कृत्स्नं प्रविभक्तमनेकधा ।
अपश्यद्देवदेवस्य शरीरे पाण्डवस्तदा ॥ १३॥

**தத்ரைகஸ்தம் ஜகத் க்ருத்ஸ்னம் ப்ரவிபக்தம் அனேகதா ।**
**அபஶ்யத் தேவதேவஸ்ய ஶரீரே பாண்டவஸ் ததா ॥ 13॥**

*அப்பொழுது பலவகையாகப் பிரிந்துபட்ட உலகனைத்தும் அங்கே தேவதேவனுடைய உடலில் ஒருங்கு கூடி நிற்பதை பாண்டவன் பார்த்தான்.*

தேவ தேவனான பகவான் ஹரியின் ஒரே விசுவரூபத்தில் தேவர்கள், பிதிர்க்கள், மனிதர்கள் போன்ற பல்வேறு பேதங்களுடைய முழு உலகையும் பாண்டவனான அர்ஜுனன் பார்த்தான்.

ततः स विस्मयाविष्टो हृष्टरोमा धनञ्जयः ।
प्रणम्य शिरसा देवं कृताञ्जलिरभाषत ॥ १४॥

**தத: ஸ விஸ்மயாவிஷ்டோ ஹ்ருஷ்டரோமா தனஞ்ஜய**
**ப்ரணம்ய ஶிரஸா தேவம் க்ருதாஞ்ஜலிர பாஷத ॥ 14॥**

*அப்போது அந்த தனஞ்ஜயன் பெருவியப்புற்று, புளகாங்கிதமடைந்து அந்த இறைவனைத் தலையால் வணங்கிக் கூறலுற்றான்.*

பகவானின் அந்த வடிவத்தைக் கண்டவுடன் அர்ஜுனன் ஆச்சரிய வயப்பட்டுப் போனான். அவனது உடலில் மயிர்க் கூச்செறிந்தது. தலைதாழ்த்தி இருகரம் கூப்பி விசுவரூபத்திலிருந்த பகவானிடம் அர்ஜுனன் கூறினான்

எவ்வாறு? - "நான் உன்னால் வெளிப்படுத்தப்பட்ட உனது விசுவரூபத்தைக் கண்டேன்" என்னும் தனது அனுபவ வார்த்தைகளினால் கூறலுற்றான்.

अर्जुन उवाच

**पश्यामि देवांस्तव देव देहे सर्वांस्तथा भूतविशेषसङ्घान् ।**
**ब्रह्माणमीशं कमलासनस्थ- मृषींश्च सर्वानुरगांश्च दिव्यान्।। १५।।**

*அர்ஜுன உவாச*

**பஸ்யாமி தேவாம்ஸ் தவதேவ தேஹே ஸர்வாம்ஸ்ததா பூதவிஶேஷஸங்கான் ।**
**ப்ரஹ்மாணமீஶம் கமலாஸனஸ்தம் ருஷீம்ஶ்ச ஸ்ர்வானுரகாம்ஶ் ச திவ்யான் ॥ 15॥**

*அர்ஜுனன் கூறினான்*

***இறைவா, உனது உடலில் அனைத்துத் தேவர்களையும், அதுபோல் பல்வகை உயிர்த்தொகுதிகளையும் தாமரை மலரில் வீற்றிருக்கும் ஈசனாகிய பிரம்மாவையும், எல்லா ரிஷிகளையும், தேவ சர்ப்பங்களையும் நான் காண்கின்றேன்.***

ஓ, இறைவனே, உனது உடலில் எல்லாத் தேவர்களையும், பல்வேறு வடிவங்களையுடைய அசையும் அசையா உயிர்த்தொகுதிகளையும், பூமி என்னும் தாமரை மலரின் மையப் பகுதியாகிய மேருமலையின் மீது அமர்ந்திருக்கும் நான்முகப் பிரம்மனையும் அதுபோல் வசிஷ்டர் உள்ளிட்ட முனிவர்களையும், வாசுகி உள்ளிட்ட தெய்வீக நாகங்களையும் நான் பார்க்கின்றேன்.

**अनेकबाहूदरवक्त्रनेत्रं- पश्यामि त्वां सर्वतोऽनन्तरूपम् ।**
**नान्तं न मध्यं न पुनस्तवादिं- पश्यामि विश्वेश्वर विश्वरूप ।। १६।।**

**அனேகபாஹூதரவக்த்ரநேத்ரம் பஶ்யாமி த்வாம் ஸர்வதோ (அ)னந்த ரூபம் ।**
**நாந்தம் ந மத்யம் ந புனஸ்தவாதிம் பஶ்யாமி விஶ்வேஶ்வர விஶ்வரூப ॥ 16 ॥**

*பல புயங்கள், பல வயிறுகள், பல வாய்கள், பல விழிகள் கொண்ட உனது எல்லையில்லா வடிவத்தை எங்கும் நான் காண்கின்றேன். எனினும் உலகிற்கிறைவனே, உனது முடியையும், நடுவையும், அடியையும் நான் காண்கிலேன்.*

எண்ணிலா கரங்கள், வயிறுகள், முகங்கள் மற்றும் விழிகளையுடைய உனது எல்லையிலா வடிவங்களை எங்கணும் நான் காண்கின்றேன். முடிவுமில்லை, நடுவுமில்லை, அதாவது இரு முனைகளுக்கும் இடையிலுள்ள இடைவெளியையும் அதுபோல் முதலையும் அதாவது தொடக்கத்தையும் நான் காண்கிலேன் விசுவேசுவரனே! உனது தோற்றத்தின் முதலையும், நடுவையும், முடிவையும் நான் காணவில்லை இறைவனே.

மேலும்,

**किरीटिनं गदिनं चक्रिणं च तेजोराशिं सर्वतो दीप्तिमन्तम् ।**
**पश्यामि त्वां दुर्निरीक्ष्यं समन्ता- द्दीप्तानलार्कद्युतिमप्रमेयम्॥१७॥**

**க்ரீட்டினம் கதினம் சக்ரிணம் ச தேஜோராஶிம் ஸர்வதோ தீப்திமந்தம் ।**
**பஶ்யாமி த்வாம் துர்நிரீக்ஷ்யம் ஸமந்தாத் தீப்தானலார்க்கத்யுதிம் அப்ரமேயம் ॥ 17॥**

*மகுடமும், கதையும், சக்கரமும் ஏந்தி நிற்கும் பிரகாசிக்கும் ஒளிப்பிழம்பாகி காணக் கூசும் கொழுந்து விட்டெரியும் தீப்போன்றும், சூரியன்போன்றும் ஒளியுடையதாய் உன்னைச் சுற்றிலும் எல்லாவிடத்திலும் காண்கின்றேன்.*

நான் காண்கின்றேன், உன்னை மகுடமும் - தலையிலணியும் கிரீடம், கதாயுதமும், சக்கரமும் ஏந்தியபடியும், எங்கும் பிரகாசிக்கும் ஒளிப்பிழம்பாகவும். அந்த ஒளி கொழுந்துவிட்டு எரியும் தீப்போன்றும், சூரியனின் ஒளி போன்றும் அளவிடற்கரியதாகவும் நான் காண்கின்றேன்.

உனது யோக சக்தியைக் கண்டதினால் நான் இவ்வாறு யூகிக்கின்றேன்,

**त्वमक्षरं परमं वेदितव्यं- त्वमस्य विश्वस्य परं निधानम्।**
**त्वमव्ययः शाश्वतधर्मगोप्ता सनातनस्त्वं पुरुषो मतो मे ॥१८॥**

**த்வம் அக்ஷரம் பரமம் வேதிதவ்யம் த்வம் அஸ்ய விஶ்வஸ்ய பரம் நிதானம் ।**
**த்வம் அவ்யய: ஶாஶ்வததர்மகோப்தா ஸநாதனஸ் த்வம் புருஷோமதோ மே ॥ 18॥**

*நீ அழிவற்றவன், அறிதற்குரிய பரம்பொருள், இப்பிரபஞ்சத்தின் பரம இருப்பிடம்; நீ மாறுபாடில்லாதவன், என்றுமுள தர்மத்தின் காவலன்; சநாதன புருஷன் என்பதாக உனை நான் காண்கின்றேன்.*

இறுதியற்றது எதுவோ அது அழிவற்றது ஆகும். அதுவே முக்தியடைந்தோர அறிய விரும்பும் பரப்பிரம்மம் ஆகும். இப்பிரபஞ்சத்தின் இறுதி அடைக்கலமாக அதாவது அதனைத் தாங்குவதாக இருக்கும். பரம இருப்பிடமும் நீயே. அதுபோல் அழிவற்ற நீயே என்றுமுள தர்மத்தின் காவலனும் ஆவாய். நீயே சநாதன புருஷனும் ஆவாய். இது என் துணிபு.

மேலும்,

**अनादिमध्यान्तमनन्तवीर्य- मनन्तबाहुं शशिसूर्यनेत्रम् ।**
**पश्यामि त्वां दीप्तहुताशवक्त्रं- स्वतेजसा विश्वमिदं तपन्तम् ॥ १९॥**

**அநாதிமத்யாந்தம் அனந்தவீர்யம் அனந்த பாஹும் ஶஶி ஸூர்ய நேத்ரம்।**
**பஶ்யாமி த்வாம் தீப்த ஹுதாஶ வக்த்ரம் ஸ்வதேஜஸா விஶ்வம் இதம் தபந்தம் ॥ 19॥**

*ஆதியும் நடுவும் அந்தமுமற்றவனாய் அளவிலா சக்தியுடையவனாய் எண்ணிறந்த புயங்களை உடையவனாகவும், சந்திர சூரியர்களை விழிகளாகவும், எரியும் கனலை முகமாகவும், தனது ஒளியால் இப்பிரபஞ்சத்தை எரிப்பவனாகவும் உன்னை நான் காண்கின்றேன்.*

உனக்கு முதல் இடை கடை என்பது இல்லை. உனது சக்தியோ வரம்பற்றது, புயங்களோ எண்ணிறந்தன. சூரியனும், சந்திரனும் உனது விழிகளாகும். கொழுந்து விட்டெரியும் நெருப்பு உன் முகமாகும். உனது ஒளியால் இப்பிரபஞ்சத்தை எரிப்பவனாகவும் உன்னை நான் காண்கின்றேன்.

**द्यावापृथिव्योरिदमन्तरं हि व्याप्तं त्वयैकेन दिशश्च सर्वाः ।**
**दृष्ट्वाद्भुतं रूपमुग्रं तवेदं- लोकत्रयं प्रव्यथितं महात्मन् ॥ २०॥**

**த்யாவா ப்ருதிவ்யோர் இதம் அந்தரம் ஹி வ்யாப்தம் த்வயைகேன திஶஶ் ச ஸர்வா: ।**
**த்ருஷ்ட்வாத்புதம் ரூபம் உக்ரம் தவேதம் லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மம் ॥ 20॥**

*மகாத்மாவே! விண்ணுக்கும் மண்ணுக்கும் இடையிலுள்ள இப்பெரு வெளியும், எல்லாத் திசைகளும் உன்னால் வியாபிக்கப்பட்டுள்ளன. உனது அற்புதமும், உக்கிரமுமுடைய இவ்வடிவத்தைக் கண்டு மூவுலகங்களும் பயத்தால் நடுங்குகின்றன.*

விண்ணுக்கும், மண்ணுக்கும் இடையிலுள்ள இப்பெரு வெளியானது உன்னால் மட்டுமே வியாபிக்கப்பட்டிருக்கின்றது. ஓ, விசுவ ரூபனே! அதுபோல் எல்லாத் திசைகளும் கூட உன்னாலேயே வியாபிக்கப்பட்டிருக்கின்றன. உனது அற்புதமான உக்கிர வடிவமானது அச்சத்தினால் மூவுலகங்களையும் கதிகலங்கச் செய்கின்றது, ஓ, மகாத்மாவே!

"நாம் வெல்வோமா அல்லது அவர்கள் வெல்வார்களா" (ப.கீ.2.68) என்று அர்ஜுனனுக்கு முன்னர் எழுந்த ஐயத்தினை நீக்கும் பொருட்டு பகவான் 'பாண்டவர்களின் உறுதி மிக்க வெற்றியை இப்போது நான் காட்டுவேன்' என்னும் எண்ணத்துடன் அதனை காட்சிப்படுத்தினார். அதனைக் கண்டு அர்ஜுனன் கூறுகிறான்;

**अमी हि त्वां सुरसङ्घा विशन्ति केचिद्भीताः प्राञ्जलयो गृणन्ति ।**
**स्वस्तीत्युक्त्वा महर्षिसिद्धसङ्घाः स्तुवन्ति त्वां स्तुतिभिः पुष्कलाभिः ॥ २१॥**

**அமீ ஹி த்வாம் ஸுர-ஸங்கா-விஶந்தி கேசித் பீதா: ப்ராஞ்ஜலயோ க்ருணந்தி ।**
**ஸ்வஸ்தீதி உக்த்வா மஹர்ஷி ஸித்த ஸங்கா: ஸ்துவந்தி த்வாம் ஸ்துதிபி: புஷ்கலாபி: ॥ 21॥**

*இந்த தேவகணங்கள் உன்னைப் புகுகின்றன; சிலர் அஞ்சி இருகை கூப்பி உன்னை துதிக்கின்றனர்; மகரிஷிகள், சித்த கணங்கள் 'வாழி' என்று கூறி உன்னைப் போற்றித் துதிக்கின்றனர்.*

பூமியின் பாரத்தை குறைப்பதற்காக மனிதவடிவம் மேற்கொண்டு இப்போது போர் புரிகின்ற வசுக்கள் முதலிய தேவர்கள் உன்னில் புகுகின்றவர்களாகக் காணப்படுகின்றனர். அவர்களில் சிலர் ஓட முடியாதவர்களாக அஞ்சி உன்னை இருகை கூப்பித் தொழுகின்றனர். யுத்தம் தொடங்குகையில் மகரிஷிகளும், சித்த கணங்களும் சில துர்நிமித்தங்களைக் கண்டு 'உலகிற்கு சர்வ மங்களம் உண்டாகுக' என்று கூறி உன்னை போற்றித் துதிக்கின்றனர். அன்றியும்,

**रुद्रादित्या वसवो ये च साध्या- विश्वेऽश्विनौ मरुतश्चोष्मपाश्च ।**
**गन्धर्वयक्षासुरसिद्धसङ्घा- वीक्षन्ते त्वां विस्मिताश्चैव सर्वे॥ २२॥**

**ருத்ராதித்யா வஸவோ யே ச ஸாத்யா விஶ்வே(அ)ஶ்விநௌ மருதஶ் சோஷ்மபாஶ்ச ।**
**கந்தர்வயக்ஷாஸுர ஸித்த ஸங்கா வீக்ஷந்தே த்வாம் விஸ்மிதாஸ் சைவ ஸர்வே ॥ 22॥**

*ருத்திரர்களும், ஆதித்யர்களும், வசுக்களும், சாத்யர்களும், விசுவ தேவர்களும், அசுவினி தேவர்களும், ஊஷ்மபர்களும், கந்தர்வர், யக்ஷர், அசுரர், சித்தர் இவர்தம் கூட்டத்தினரும் எவர்களோ அவர்கள் அனைவரும் உன்னை வியப்புடன் நோக்குகின்றனர்.*

ருத்திரர்களும், ஆதித்யர்களும், வசுக்களும், சாத்யர்களும் விசுவ தேவர்களும், இரு அசுவினி தேவர்களும், மருத்துக்களும், ஊஷ்மபர்கள் என்னும் பிதிருக்களும், கந்தர்வர்களான ஹாஹா ஹூஹூ முதலியோரும், குபேரன் போன்ற யக்ஷர்களும், விரோசனன் போன்ற அசுரர்களும், கபிலர் போன்ற சித்தர்களும் எவர்களோ அவர்கள் அனைவரும் உன்னை வியப்புடன் நோக்குகின்றனர்.

எதற்காக,

**रूपं महत्ते बहुवक्त्रनेत्रं- महाबाहो बहुबाहूरुपादम् ।**
**बहूदरं बहुदंष्ट्राकरालं- दृष्ट्वा लोकाः प्रव्यथितास्तथाहम् ॥२३॥**

**ரூபம் மஹத் தே பஹு வக்ர நேத்ரம் மஹாபாஹோ பஹுபாஹூரு பாதம் ।**
**பஹூதரம் பஹுதம்ஷ்ட்ரா கராளம் த்ருஷ்ட்வா லோகா: ப்ரவ்யதிதாஸ் ததாஹம் ॥ 23॥**

*பெருந்தோளாய்! பலவாய்களும் விழிகளும், கரங்களும், தொடைகளும், பாதங்களும், வயிறுகளும் பயங்கரமான பற்களுமுடைய உனது பேருருவைக் கண்டு உலகங்கள் நடுங்குகின்றன. நானும் அவ்வாறே,*

பெருந்தோளுடையாய், பலவாய்களும், விழிகளும், கரங்களும், தொடைகளும், பாதங்களும், வயிறுகளும், பயங்கரமான பற்களும் கொண்ட உனது மகா வடிவத்தைக் கண்டு இவ்வுலகிலுள்ள உயிர்கள் எல்லாம் நடுநடுங்குகின்றன. நானும் அவ்வாறே நடுங்குகின்றேன்.

அதற்கானக் காரணம் இதுவாகும்,

**नभःस्पृशं दीप्तमनेकवर्णं- व्यात्ताननं दीप्तविशालनेत्रम् ।**
**दृष्ट्वा हि त्वां प्रव्यथितान्तरात्मा धृतिं न विन्दामि शमं च विष्णो ॥२४॥**

**நப:ஸ்ப்ருஶம் தீப்தம் அனேகவர்ணம் வ்யாத்தானனம் தீப்த விஶால நேத்ரம் ।**
**த்ருஷ்ட்வா ஹி த்வாம் ப்ரவ்யதிதாந்தர் ஆத்மா த்ருதிம் ந விந்தாமி ஶமம் ச விஷ்ணோ ॥ 24॥**

*விஷ்ணுவே! விண்ணைத் தொடுவது, ஒளி வீசுவது, பல வண்ணமுடையது, திறந்த வாய்களுடையது அகன்ற கண்கள் உடைய உன்னைக் கண்டு நடுக்குறும் உளமுடைய நான் தைரியத்தையும், அமைதியையும் இழந்துவிட்டேன்.*

ஓ, விஷ்ணுவே! உனது விண்ணைத் தொடுவதும். ஒளி வீசுவதும், பல்வேறு நிறங்களையுடையதும், திறந்த வாய்களையுடையதும், அகன்ற விழிகளையுதுமான உன் வடிவத்தைக் கண்டு எனது மனதிலிருந்த தைரியமும், அமைதியும் எங்கோ காணாமல் போய்விட்டன.

ஏன்?

**दंष्ट्राकरालानि च ते मुखानि दृष्ट्वैव कालानलसन्निभानि।**
**दिशो न जाने न लभे च शर्म प्रसीद देवेश जगन्निवास ॥२५॥**

**தம்ஷ்ட்ராகராளானி ச தேமுகானி த்ருஷ்ட்வைவ காலாநல ஸன்னிபானி ।**
**திஶோ ந ஜானே ந லபே ச ஶர்ம ப்ரஸீத தேவேஶ ஜகன்னிவாஸ ॥25॥**

*தேவதேவனே! கோரமான பற்களையும், ஊழித் தீக்கு நிகரான உனது வாய்களையும் பார்த்தவுடன் திக்குத் திசை எனக்குத் தெரியவில்லை. மன அமைதியும் பெறவில்லை. உலகிற்கு உறைவிடமாக இருப்பவனே! அருள் செய்வாய்.*

கோரமான பற்களையும், உலகினை அழிக்கும் ஊழித் தீக்கு ஒப்பான உனது வாய்களையும் கண்டு எனக்கு கிழக்கு எது, மேற்கு எது என்று தெரியவில்லை. அதாவது சுய உணர்வினை நான் இழந்து விட்டேன். அதனால் நான் மன அமைதி இழந்து விட்டேன். ஓ, தேவதேவனே! உலகங்களின் உறைவிடமே! எனக்கு அருள் புரிவாயாக!

எந்தத் திருதராஷ்டிரனின் புதல்வர்களால் நான் தோற்று விடுவேனோவென்று ஐயுற்றேனோ, அந்த ஐயம் என்னை விட்டு நீங்கிவிட்டது.

**अमी च त्वां धृतराष्ट्रस्य पुत्राः सर्वे सहैवावनिपालसङ्घैः।**
**भीष्मो द्रोणः सूतपुत्रस्तथासौ सहास्मदीयैरपि योधमुख्यैः ॥२६॥**

**அமீ ச த்வாம் த்ருதராஷ்ட்ரஸ்ய புத்ரா: ஸர்வே ஸஹைவாவனி பாலஸங்கை: ।**
**பீஷ்மோ த்ரோண: ஸூதபுத்ரஸ் ததாஸௌ ஸஹாஸ்மதீயைர் அபியோத முக்யை: ॥ 26॥**

*திருதராஷ்டிரனின் புத்திரர்களுடன் உலகாளும் அரசர்களும், அதுபோல் பீஷ்மர், துரோணர், சூதபுத்திரன் எல்லோரும் நம்முடைய சிறந்த போர்வீரர்களுடன் சேர்ந்து (உனது வாயினுள் புகுகின்றனர்)*

துரியோதனன் முதலிய திருதராஷ்டிரனின் புதல்வர்கள் உனது வாயினுள் 'மிகவும் வேகமாகப் புகுகின்றனர்' என்பது அடுத்த சுலோகத்தில் கூறப்படுகின்றது(27). அவர்களுடன் சேர்ந்து புவியாளும் மன்னர்களும், பீஷ்மரும், துரோணரும், சூதபுத்திரனாகிய கர்ணனும், அதுபோல் திருஷ்டத்துய்ம்நன் போன்ற நமது பக்கத்து வீரர்களும் பிறரும்,

**वक्त्राणि ते त्वरमाणा विशन्ति दंष्ट्राकरालानि भयानकानि ।**
**केचिद्विलग्ना दशनान्तरेषु सन्दृश्यन्ते चूर्णितैरुत्तमाङ्गैः ॥२७॥**

**வக்த்ராணி தே த்வரமாணா விஶந்தி தம்ஷ்ட்ரா கராளானி பயானகானி ।**
**கேசித் விலக்னா தஶனாந்தரேஷு ஸந்த்ருஶ்யந்தே சூர்ணிதைர் உ.த்தமாங்கை: ॥ 27॥**

*பதற்றத்தோடு உந்தன் கோரப் பற்களையுடைய பயங்கரமான வாய்களினுள் புகுகின்றனர். சிலர் உனது பற்களுக்கிடையில் அகப் பட்டுப் பொடிப்பொடியாகப் போன தலைகளுடன் காணப்படுகின்றனர்.*

கோரப் பற்களையுடைய உனது பயங்கரமான வாய்களினுள் அவர்கள் மிக்கப் பதற்றத்துடன் விரைந்து புகுகின்றனர். அப்படிப் புகுந்தவர்களில் சிலர் உனது பற்களுக்கிடையில் சிக்கியுள்ள மாமிசத் துண்டுகளைப் போல் பொடிப்பொடியாகிப் போன தலைகளுடன் காணப்படுகின்றனர்.

அவர்கள் எதனைப் போல் வாய்களினுள் நுழைகின்றனர்? என்றால் பதில் பின்வருமாறு:

**यथा नदीनां बहवोऽम्बुवेगाः समुद्रमेवाभिमुखा द्रवन्ति ।**
**तथा तवामी नरलोकवीरा- विशन्ति वक्त्राण्यभिविज्वलन्ति ॥२८॥**

**யதா நதீனாம் பஹவோ (அ)ம்புவேகா: ஸமுத்ரம் ஏவாபிமுகா த்ரவந்தி ।**
**ததா தவாமீ நரலோகவீரா விஶந்தி வக்த்ராணி அபிவிஜ்வலந்தி ॥ 28॥**

*எவ்வாறு நதி வெள்ளம் கடலை மட்டும் நோக்கியே ஓடுகின்றதோ அதுபோல் இந்த மானிட உலக வீரர்கள் எப்புறமும் ஒளி உமிழும் உனது வாய்களினுள் புகுகின்றனர்.*

நதிகளின் வெள்ளங்கள் விசையுடன் கடலை நோக்கியே ஓடுகின்றன. அதுபோல் இந்த மனித குல வீரர்களாகிய பீஷ்மர் போன்றோர் உனது ஒளி உமிழும் வாய்களினுள் புகுகின்றனர்.

அவர்கள், ஏன், எதற்காக அவ்வாறு புகுகின்றனர்?

**यथा प्रदीप्तं ज्वलनं पतङ्गा- विशन्ति नाशाय समृद्धवेगाः ।**
**तथैव नाशाय विशन्ति लोका- स्तवापि वक्त्राणि समृद्धवेगाः ॥२९॥**

**யதா ப்ரதீப்தம் ஜ்வலனம் பதங்கா விஶந்தி நாஶாய ஸம்ருத்த வேகா: ।**
**ததைவ நாஶாய விஶந்தி லோகாஸ் தவாபி வக்த்ராணி ஸம்ருத்தவேகா: ॥ 29॥**

*எவ்வாறு விட்டில் பூச்சிகள் மடிவதற்காக தீபச் சுடரினுள் வேகமாகப் பாய்கின்றனவோ அவ்வாறு உயிர்களும் உனது வாயினுள் அழிவதற்காக மிகுந்த வேகத்துடன் பாய்கின்றன.*

சுடர் விட்டெரியும் நெருப்பினுள் தம்மை அழித்துக் கொள்வதற்காக விட்டில் பூச்சிகள் வேகவேகமாகப் பாய்வது போல், மக்கள் அதாவது உயிர்கள் அனைத்தும் உனது வாயினுள் தம்மை அழித்துக் கொள்வதற்காக வேகவேகமாகப் போகின்றனர்.

மற்றும் நீ,

**लेलिह्यसे ग्रसमानः समन्ता- ल्लोकान्समग्रान्वदनैर्ज्वलद्भिः।**
**तेजोभिरापूर्य जगत्समग्रं- भासस्तवोग्राः प्रतपन्ति विष्णो ॥३०॥**

**லேலிஹ்யஸே க்ரஸமான: ஸமந்தாவ் லோகான் ஸமக்ரான் வதனைர் ஜ்வலத்பி: ।**
**தேஜோபிர் ஆபூர்ய ஜகத் ஸமக்ரம் பாஸஸ் தவோக்ரா: ப்ரதபந்தி விஷ்ணோ : ॥ 30॥**

*கனல் வீசும் உனது வாய்களால் உலகம் முழுவதையும் விழுங்கி எத்திசையிலும் உனது நாவினால் நக்குகின்றாய். உனது கடுமையான ஒளிக்கதிர்கள் உலகனைத்தையும் சுட்டெரிக்கின்றன.*

இவ்வளவு கொடூரமான இயல்பு காணப்படுகிறது. ஆதலினால்,

**आख्याहि मे को भवानुग्ररूपो- नमोऽस्तु ते देववर प्रसीद।**
**विज्ञातुमिच्छामि भवन्तमाद्यं- न हि प्रजानामि तव प्रवृत्तिम् ॥३१॥**

**ஆக்யாஹி மே கோ பவான் உக்ரரூபோ நமோ (அ)ஸ்து தே தேவவர ப்ரஸீத ।**
**விஜ்ஞாதும் இச்சாமி பவந்தம் ஆத்யம் ந ஹி ப்ரஜானாமி தவ ப்ரவ்ருத்திம் ॥ 31॥**

*கொடூரமான வடிவுடைய நீ யார்? எனக்குச் சொல். உனக்கு என் வந்தனம். தேவர்களில் சிறந்தவனே, அருள் புரிவாயாக. உன்னை அறிய விரும்புகிறேன். உனது செய்கையை நான் அறியவில்லை.*

காண்பதற்கு கொடூரமான வடிவுடைய நீ யார் என்பதை எனக்குக் கூறவேண்டும். எனது வந்தனம் உனக்கு உரித்தாகுக. ஓ தேவர் தலைவனே! அருள் புரிவாயாக. நான் உன்னை அறிய விரும்புகிறேன். ஆதி தேவனே! உனது செய்கை என்னவென்று நான் அறியவில்லை.

श्रीभगवानुवाच

**कालोऽस्मि लोकक्षयकृत्प्रवृद्धो- लोकान् समाहर्तुमिह प्रवृत्तः।**
**ऋतेऽपि त्वां न भविष्यन्ति सर्वे येऽवस्थिताः प्रत्यनीकेषु योधाः॥३२॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**காலோ (அ)ஸ்மி லோக - க்ஷயக்ருத் ப்ரவ்ருத்தோ லோகான்**
**ஸமாஹர்த்தும் இஹ ப்ரவ்ருத்த: ।**
**ருதே (அ)பி த்வாம் ந பவிஷ்யந்தி ஸர்வே யே (அ)வஸ்திதா:**
**ப்ரத்யனீகேஸு யோதா:॥ 32॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்:*

*உலகை அழிக்கும் காலமே நான் தான். இப்போது உலகங்களை அழிப்பதற்குத் தலைப்பட்டுள்ளேன், எதிரிகளின் படைப்பிரிவில் எவ்வெவ் வீரர்கள் உளரோ அவர்கள் அனைவரும் நீ இல்லாமலுங் கூட இங்கு கொல்லப்படுவர்.*

ஆக்கிரமிக்கும் காலமாக நானே இந்த உலகங்கள் எல்லாவற்றையும் அழிக்கின்றேன். நான் ஏன் இங்குற்றேன் என்பதைக் கேட்பாயாக! நான் இப்போது இந்த உலகங்களை அழிப்பதில் ஈடுபட்டுள்ளேன். நீ இல்லாவிடினும் கூட உனது அச்சத்திற்கு யார் காரணமாக இருந்தார்களோ அந்த எதிரிகளின் தளபதிகளான பீஷ்மர், துரோணர், கர்ணன் போன்றவர்கள் அனைவரும் கொல்லப்படுவர்.

இவ்வாறிருப்பதினால்,

**तस्मात्त्वमुत्तिष्ठ यशो लभस्व जित्वा शत्रून् भुङ्क्ष्व राज्यं समृद्धम्।**
**मयैवैते निहताः पूर्वमेव निमित्तमात्रं भव सव्यसाचिन् ॥ ३३॥**

**தஸ்மாத் த்வம் உத்திஷ்ட யஶோ லபஸ்வ ஜித்வா ஶத்ரூன் புங்க்ஷ்வ**
**ராஜ்யம் ஸம்ருத்தம் ।**
**மயைவைதே நிஹதா: பூர்வம் ஏவ நிமித்த மாத்ரம் பவ ஸவ்யஸாச்சின் ॥ 33॥**

*ஆதலினால் நீ எழுந்து நில். புகழெய்து; பகைவர்களை வென்று வளமிக்க ராஜ்யத்தினை அனுபவி. என்னால் முன்பே இவர்கள் கொல்லப்பட்டுவிட்டனர். இடது கையாலும் அம்பெய்தும் வீரா, நீ வெளிக் காரணமாக மட்டும் இருப்பாயாக.*

ஆகையினால் நீ எழுவாயாக. தேவர்களாலும் வெல்வதற்கரிய பீஷ்மர், துரோணர் போன்ற மாவீரர்களை அர்ஜுனன் வென்று விட்டான் என்னும் புகழினைப் பெறுவாயாக! புண்ணியத்தால் மட்டுமே இப்புகழ் எய்தப்படும். பகைவர்களான துரியோதனனையும், பிறரையும் வெல்வதின் மூலம் பகைவர்களற்றதும், தடையற்றதும், வளமிக்கதுமான ராஜ்யத்தை அனுபவிப்பாயாக. என்னால் இவர்கள் ஏற்கெனவே கொல்லப்பட்டு விட்டனர். நீ புறக்கருவியாக மட்டும் இருப்பாயாக. ஓ, சவ்யசாச்சியே! அர்ஜுனன் இடது கரத்தினாலும் அம்பு எய்துவான். ஆதலினால் சவ்யசாச்சி என்றழைக்கப்படுகிறான்.

**द्रोणं च भीष्मं च जयद्रथं च कर्णं तथान्यानपि योधवीरान् ।**
**मया हतांस्त्वं जहि मा व्यथिष्ठा- युध्यस्व जेतासि रणे सपत्नान् ॥ ३४॥**

**த்ரோணம் ச பீஷ்மம் ச ஜயத்ரதம் ச கர்ணம் ததான்யான் அபி யோதவீரான் ।**
**மயா ஹதாம்ஸ் த்வம் ஜஹி மா வ்யதிஷ்டா யுத்யஸ்வ ஜேதாஸி ரணே ஸபத்னான் ॥ 34॥**

*என்னால் கொல்லப்பட்ட துரோணரையும், பீஷ்மரையும் ஜயத்ரதனையும், கர்ணனையும், பிற போர் வீரர்களையும் நீ கொல்வாயாக. கலங்காதே. யுத்தத்தில் எதிரிகளை வெல்வாய். போர் புரிக.*

அர்ஜுனனின் அச்சத்திற்கு எந்த வீரர்கள் காரணமாக இருந்தார்களோ, அவர்களையெல்லாம் பகவான் தாம் ஏற்கெனவே கொன்று விட்டதாகக் கூறுகிறார். துரோணரும், பீஷ்மரும் ஏன் அச்சத்திற்குக் காரணமாக இருந்தனர் என்பது எல்லோரும் அறிந்த ஒன்றே. வில்வித்தையில் துரோணர் ஒரு நிபுணர் ஆவார். அவரிடம் தெய்வீக அஸ்திரங்கள் பல இருந்தன. மேலும் அவர் அர்ஜுனனின் குருவுமாவார். பீஷ்மரோ தான் விரும்பிய பொழுதே மரணமடைவார். தெய்வீக அஸ்திரங்களும் அவரிடம் ஏராளம் இருந்தன. பரசுராமராலும் கூட வெல்லப்படாதவர் ஆவார். ஜயத்ரதனும் அவ்வாறே வெல்வதற்கரியவன்தான். ஏனெனில் அவனது தந்தை தன் மைந்தனின் தலைதனை நிலத்தில் விழச் செய்பவரின் தலை வெடித்து விடும் என்றொரு வரம் வாங்கியிருந்தார். கன்னித் தாய்க்குப் பிறந்த கர்ணனோவெனில் தேவேந்திரனின் சக்தி ஆயுதத்தினை உடையவனாவான். இவர்கள்

அனைவரும் என்னால் ஏற்கெனவே கொல்லப்பட்டு விட்டனர். புற உலகின் கண்களுக்கு இவர்களை நீ மீண்டும் கொல்வாயாக. இவர்களிடம் அச்சம் வேண்டாம். போர் செய். இந்த யுத்தத்தில் உனது பகைவர்களான துரியோதனனையும் பிறரையும் வெல்வாயாக.

सञ्जय उवाच

**एतच्छ्रुत्वा वचनं केशवस्य कृताञ्जलिर्वेपमानः किरीटी ।**
**नमस्कृत्वा भूय एवाह कृष्णं सगद्गदं भीतभीतः प्रणम्य ॥ ३५॥**

*ஸஞ்ஜய உவாச*

**ஏதச் ச்ருத்வா வசனம் கேஶவஸ்ய க்ருதாஞ்ஜலிர் வேபமான: கிரீடீ।**
**நமஸ்க்ருத்வா பூய ஏவாஹ க்ருஷ்ணம் ஸகத்கதம் பீதபீத: ப்ரணம்ய॥35॥**

*சஞ்சயன் கூறினான்:*

*கேசவனுடைய இந்த வாய்மொழி கேட்டு நடுங்கிய மெய்யனாய் இருகரம் கூப்பி கிருஷ்ணரை வணங்கிய அர்ஜுனன், அச்சம் கொண்டு தழுதழுத்த குரலில் அவரை மீண்டும் வணங்கி கூறலுற்றான்:*

அர்ஜுனன் தழுதழுத்தக் குரலில் பேசினான், காரணம் கிருஷ்ணர் மீது அவன் கொண்ட அன்பும், அவன் அச்சத்தின் பிடியில் சிக்குண்டிருந்ததுமேயாகும். கண்களிலிருந்து கண்ணீர் வெள்ளமெனப் பெருகி ஓடியதால் அவனது குரல் கம்மியது. அவனது வார்த்தைகள் கிணற்றுக்குள்ளிருந்து வருவனபோல் மெலிதாக ஒலித்தன. மீண்டும் மீண்டும் அச்சத்திற்காளானதினால் அவன் தாழ்ந்து பணிந்து பேசினான். ஆகவே தழுதழுத்தக் குரலில் பேசினான் என்பதற்கு இதுவே பொருளாகும்.

இங்கு சஞ்ஜயன் கூறிய மொழிகள் உட்பொருளுடையன. எவ்வாறு என்றால், வெல்ல முடியாத துரோணர் முதலிய நால்வரையும் அர்ஜுனன் கொன்று விட்டால் அப்போது துரியோதனன் தனியனாகிவிடுவான். அதனால் அவனும் கொல்லப்பட்டவனே என்று கருதி திருதராஷ்டிரன் வெற்றியிலே பற்று நீங்கியவனாய் சமாதானம் செய்து கொள்வான். அதன் பிறகு இரு படையினர்க்கும் இடையே அமைதி நிலவும் என்பதே அதன் உட்பொருளாகும். விதி வலிமையினால் திருதராஷ்டிரன் சஞ்ஜயன் வார்த்தைகளைச் செவியில் போட்டுக் கொள்ளவில்லை.

अर्जुन उवाच

**स्थाने हृषीकेश तव प्रकीर्त्या जगत्प्रहृष्यत्यनुरज्यते च ।**
**रक्षांसि भीतानि दिशो द्रवन्ति सर्वे नमस्यन्ति च सिद्धसङ्घाः ॥३६॥**

*அர்ஜுன உவாச*

**ஸ்தானே ஹ்ருஷீகேஸ தவ ப்ரகீர்த்யா ஜகத் ப்ரஹ்ருஷ்யதி அனுரஜ்யதே ச ।**
**ரக்ஷாம்ஸி பீதானி திஸோ த்ரவந்தி ஸர்வே நமஸ்யந்தி ச ஸித்தஸங்கா: ॥ 36॥**

*அர்ஜுனன் கூறினான்*

*இருஷீகேசா! உன்னைப் போற்றிப் புகழ்வதால் உலகம் மகிழ்கின்றது; ஆனந்தமும் அடைகின்றது. ராக்ஷதர்கள் திகில் கொண்டு திக்கு நோக்கி ஓடுகின்றனர். சித்தர்கள் எல்லாம் உன்னை வணங்குகின்றனர். இது தகவுடைத்தே!*

'இது தகவுடைத்தே' - எது? என்றால், உன்னைப் போற்றிப் புகழ்வதால் உலகம் மகிழ்கின்றது என்பது. அல்லது 'தகவுடைத்து' என்பதை போற்றிப் புகழும் பொருளுக்கு உரியதாகவும் கொள்ளலாம். ஏனென்றால், பகவான் எல்லா உயிர்களுக்கும் ஆத்மாவும், நண்பனும் ஆவார். அதனால் மகிழ்ச்சி முதலியவற்றிற்குப் பொருத்தமுடையவர் பகவானே ஆவார். இவ்வாறே இது விளக்கப்படுதல் வேண்டும். அவ்வாறே அச்சங்கொண்ட ராக்ஷதர்கள் திக்குகளை நோக்கி ஓடுகின்றனர் என்பதும் பொருத்தமுடையதே. அதுபோல் நித்திய சித்தர்களான கபிலர் போன்றவர்கள் உனக்குப் பக்தி செய்கின்றனர் என்பதுவும் கூடப் பொருத்தமுடையதேயாகும்.

பகவான் மகிழ்ச்சி முதலியவற்றிற்கு உரியவர் என்பதற்கானக் காரணம் பின்வருமாறு:

**कस्माच्च ते न नमेरन्महात्मन् गरीयसे ब्रह्मणोऽप्यादिकर्त्रे।**
**अनन्त देवेश जगन्निवास त्वमक्षरं सदसत्तत्परं यत् ॥ ३७॥**

**கஸ்மாச் ச தே ந நமேரன் மஹாத்மன் கரீயஸே ப்ரஹ்மனோ (அ)பி ஆதிகர்த்ரே ।**
**அனந்த தேவேஸ ஜகந்நிவாஸ த்வம் அக்ஷரம் ஸத் அஸத் தத் பரம் யத் ॥ 37॥**

*மகாத்மாவே! அளவிறந்தோனே! தேவர்களிறைவா! உலகின் உறைவிடமே! பிரம்மாவுக்கும் பெரியவனும் ஆதி காரணமும் ஆன உன்னை யாரே வணங்குதல் செய்யார்? அழியாப் பொருளும், உண்மையும், இன்மையும், மேலானதும் எதுவோ அதுவும் நீயே ஆவாய்.*

மகாத்மாவே எல்லோரையும் விட மேன்மை மிக்கவனாக விளங்கும் உன்னை ஏன் அவர்கள் தாழ்ந்து பணிந்து வணங்கமாட்டார்கள்? ஹிரண்ய

கர்ப்பனாகிய பிரம்மாவைப் படைத்தவனே நீ தானே. அதனால் அவர்கள் ஏன் உன்னை வணங்கமாட்டார்கள்? ஆகவே மகிழ்ச்சிக்கும், வணக்கத்திற்கும் உரிய பொருள் நீயே ஆவாய். ஓ, அளவிறந்தோனே! தேவதேவனே! உலகின் உறைவிடமே! வேதாந்தங்கள் கூறும் உண்மையாகிய அந்த மேலான அழியாப் பொருள் நீயே. அது என்ன? உண்மையும், இன்மையுமாம். உண்மை என்பது உள்ளது. இன்மை என்பது இல்லாதது அந்த அழியாப் பொருளுக்கு உண்மை, இன்மை என்பவை மரியாதை நிமித்தமாகக் கூறப்படுகின்றதேயன்றி அது உண்மை, இன்மை என்னும் இரண்டும் கடந்து மேலே இருக்கின்றது. அது உன்னைத்தவிர வேறு எவருமிலர்.

அர்ஜுனன் மீண்டும் போற்றுகின்றான்,

**त्वमादिदेव: पुरुष: पुराण- स्त्वमस्य विश्वस्य परं निधानम् ।**
**वेत्तासि वेद्यं च परं च धाम त्वया ततं विश्वमनन्तरूप॥ ३८॥**

**த்வம் ஆதிதேவ: புருஷ: புராணஸ் த்வம் அஸ்ய விஸ்வஸ்ய பரம் நிதானம் ।**
**வேத்தா(அ)ஸி வேத்யம் ச பரம் ச'தாம த்வயா ததம் விஸ்வம் அனந்தரூப ॥ 38॥**

*நீ ஆதிதேவன், பழையோன், நீ இவ்வுலகின் உயர்ந்த உறைவிடம், அறிபவனும், அறியப்படுபொருளும் உயர்ந்த நிலையும் நீயே. உன்னால் உலகம் வியாபிக்கப்பட்டுள்ளது.*

நீ உலகைப் படைத்ததினால் ஆதிதேவன் ஆவாய். உடலினுள் தங்குவதால் பழையோன் அல்லது புருஷன் ஆவாய். உலகம் அழியும் ஊழிக்காலத்தில் அதனை நீ மட்டுமே தாங்கிக் கொள்வதால் இவ்வுலகின் உயர்ந்த உறைவிடம் நீயே. மேலும் அறிய வேண்டிய பொருள்கள் அனைத்தையும் அறிந்தவனும் நீயே. அறிய வேண்டிய பொருளாகிய உயர்ந்த விஷ்ணுவும் நீயே.

ஓ, அளவிறந்த வடிவத்தோனே, உன்னால் இவ்வுலகம் முழுதும் வியாபிக்கப்பட்டுள்ளது.

மேலும்,

**वायुर्यमोऽग्निर्वरुण: शशाङ्क: प्रजापतिस्त्वं प्रपितामहश्च ।**
**नमो नमस्तेऽस्तु सहस्रकृत्व: पुनश्च भूयोऽपि नमो नमस्ते ॥ ३९॥**

**வாயுர்யமோ (அ)க்னிர் வருண: ஶஶாங்க: ப்ரஜாபதிஸ் த்வம் ப்ரபிதாமஹஶ் ச ।**
**நமோ நமஸ்தே(அ)ஸ்து ஸஹஸ்ரக்ருத்வ: புனஶ்ச பூயோ(அ)பி நமோ நமஸ்தே ॥ 39॥**

*நீ வாயு, யமன், அக்னி, வருணன், சந்திரன், பிரஜாபதியும் முப்பாட்டனும் நீயே. ஆயிரம் முறையும் அதற்கு மேலும் உன்னை நான் வணங்குகிறேன். நமோ நம.*

நீயே வாயு, யமன், அக்னி, வருணன், சந்திரன், காச்யபர் போன்ற பிரஜாபதி, (பாட்டனுக்கும் தகப்பன் முப்பாட்டன் ஆவான்) படைக்கும் கடவுள் பிரம்மாவின் தந்தை. ஆயிரந் தடவைகள் உன்னை வணங்குகிறேன். மீண்டும் மீண்டும் உன்னை வணங்குகிறேன். வணங்குதல் என்னும் வினை திரும்பத் திரும்பச் செய்யப்படுவதை 'தடவைகள்' (க்ருத்வஸுச்) என்னும் வார்த்தை குறிப்பிடுகின்றது. 'மீண்டும்' 'மீண்டும்' என்பது அன்பு மற்றும் பக்தியின் மிகுதியால் உண்டாகும் திருப்தியின்மையைச் சுட்டுகின்றது.

அவ்வாறே,

**नमः पुरस्तादथ पृष्ठतस्ते नमोऽस्तु ते सर्वत एव सर्व ।**
**अनन्तवीर्यामितविक्रमस्त्वं- सर्वं समाप्नोषि ततोऽसि सर्वः ॥ ४०॥**

**நம: புரஸ்தாத் அத ப்ருஷ்டதஸ்தே நமோ (அ)ஸ்து தே**
**ஸர்வத ஏவ ஸர்வ ।**
**அனந்த வீர்யாமித விக்ரமஸ் த்வம் ஸர்வம் ஸமாப்னோஷி**
**ததோ (அ)ஸி ஸர்வ: ॥ 40॥**

*உன்னை முன்புறத்தும் வணங்குகிறேன், பின்புறத்தும் வணங்குகிறேன். அனைத்துமாவோனே உன்னை எப்புறத்தும் வணங்குகிறேன். அளவிலா வீர்யமும், எல்லையிலா பராக்கிரமும் உடைய நீ எங்கும் நிறைந்துள்ளாய் அதனால் எல்லாம் நீயாவாய்.*

உன்னை 'முன்புறம்' அதாவது கிழக்குத் திசையில் வணங்குகிறேன். எங்கும் நிறைந்து எல்லாம் ஆவோனே உன்னை எல்லாத் திசைகளிலும் வணங்குகிறேன். அளவிலா வீர்யமும், எல்லையிலா பராக்கிரமும் உடையவன் ஆவாய். 'வீர்யம்' என்பது வலிமையையும், 'விக்ரம்' என்பது பராக்கிரமத்தையும் அதாவது வீரத்தையும் குறிப்பிடுகின்றது. ஆயுதங்களைப் பயன்படுத்தும் ஒருவன் கூட சிலசமயம் வீரமில்லாதவனாக இருக்கிறான். ஆனால் நீயோ அளவிலா வீர்யமும் எல்லையிலா பராக்கிரமும் உடையவனாவாய். நீ இவ்வுலகம் முழுவதும் நிறைந்திருப்பதால் நீ எல்லாமாகவும் இருக்கின்றாய். அதாவது நீ இன்றி ஒருபொருளும் இவ்வுலகில் இல்லை என்பதாம்.

உனது மகிமை என்னவென்று அறியாதிருந்து விட்டேன். ஆதலினால்,

**सखेति मत्वा प्रसभं यदुक्तं- हे कृष्ण हे यादव हे सखेति ।**
**अजानता महिमानं तवेदं- मया प्रमादात्प्रणयेन वापि ॥ ४१॥**

ஸ்கேதி மத்வா ப்ரஸபம் யத் யுக்தம் ஹே க்ருஷ்ண
ஹே யாதவ ஹே ஸகேதி ।
அஜானதா மஹிமானம் தவேதம் மயா ப்ரமாதாத்
ப்ரணயேன வாபி ॥ 41॥

यच्चावहासार्थमसत्कृतोऽसि विहारशय्यासनभोजनेषु ।
एकोऽथवाप्यच्युत तत्समक्षं- तत्क्षामये त्वामहमप्रमेयम् ॥४२॥

யச் சாவஹாஸார்த்தம் அஸத் க்ருதோ (அ)ஸி விஹார
ஶய்யாஸன போஜனேஷு ।
ஏகோ (அ)த வாபி அச்யுத தத்ஸமக்ஷம் தத் க்ஷாமயே
த்வாம் அஹம் அப்ரமேயம் ॥ 42॥

*உனது இந்த மகிமையை அறியாத என்னால் நண்பனென்று கருதப்பட்டு அன்பினாலோ, அசட்டையினாலோ 'அடே கிருஷ்ணா! அடே யாதவா! அடே நண்பா! என்று எது துடுக்காகச் சொல்லப்பட்டதோ அதனையும், அச்சுதா! விளையாட்டிலும், படுக்கையிலும், அமர்ந்திருக்கையிலும், உண்ணுகையிலும், தனிமையிலும், பிறர் முன்னிலையிலும் நீ விளையாட்டாக எதில் அவமதிக்கப் பட்டனையோ அதனையும் அளவிடற்கரிய உன்னை நான் மன்னித்தருளும்படி வேண்டுகின்றேன்.*

ஒத்த வயது உள்ளவனாக - நண்பனாக உன்னைக் கருதி அறியாமையினால் நான் உன்னை ஏ, கிருஷ்ணா! ஏ, யாதவா! ஏ, நண்பா! என்றழைத்து விட்டேன். எதனை அறியாமல்? உனது இந்த விசுவரூபத்தினை - ஈசுவரனாகிய உனது மகிமையினை அறியாததினால்.

"தவ இதம் மஹிமானம் அஜானதா' அதாவது உனது மகிமையை அறியாததினால் என்னும் பொருள் தரும் இச்சொற்றொடரில் உள்ள 'இதம்' (இந்த) என்பது ஒன்றன்பால், ஆதலினால் அது 'மஹிமானம்' (மகிமை) என்னும் ஆண்பாலுடன் ஒன்று சேராது. எனவே 'இதம்' என்பது விசுவரூபத்தையும், மஹிமானம் என்பது யோகஐஸ்வர்யம் போன்ற பெருமையைக் குறிப்பிடுவதாகவும் பொருள் கொள்க. இதற்கு மாறாக 'தவ இமம்' என்று இருந்தால் அவையிரண்டும் ஒரே பால் வகையைச் சேர்ந்தவையாகும். நான் அசட்டையினால் அல்லது அன்பினால் அவ்வாறு அழைத்து விட்டேன். இதில் 'அன்பினால்' என்பதற்கு அன்பின் காரணமாக விளைந்த நம்பிக்கையினால் என்று பொருளாகும்.

விளையாட்டாக நான் உன்னை அவமதித்திருக்கின்றேன் - எங்கே? என்றால், நடக்கையிலும், படுக்கையிலும், அமர்ந்திருக்கையிலும், உண்ணுகையிலும், தனிமையிலும், பிறர் முன்னிலையிலும் நீ

அவமதிக்கப்பபட்டிருக்கின்றாய். இக்குற்றங்களுக்கெல்லாம் ஓ, அச்சுதா! அளவிடற்கரியோனே, அறிவதற்கரியோனே, என்னை மன்னித்தருளும்படி வேண்டுகிறேன்.

ஏனெனில்,

**पितासि लोकस्य चराचरस्य त्वमस्य पूज्यश्च गुरुर्गरीयान् ।**
**न त्वत्समोऽस्त्यभ्यधिकः कुतोऽन्यो- लोकत्रयेऽप्यप्रतिमप्रभाव ॥ ४३॥**

**பிதாஸி லோகஸ்ய சராசரஸ்ய த்வம் அஸ்ய பூஜ்யஶ் ச**
**குருர் கரீயான் ।**
**ந த்வத்ஸமோ (அ)ஸ்தி அப்யதிக: குதோ (அ)ன்யோ**
**லோகத்ரயே (அ)பி அப்ரதிம ப்ராபவ ॥ 43॥**

*அசையும் அசையா உலகிற்கு நீ தந்தை ஆவாய். வணங்கத் தக்கோனும், மிகச் சிறந்த குருவும் நீயே. உனக்கு ஒப்பாரும் மிக்காரும் எவரும் இலர். நிகரற்றப் பெருமையுடையவனே, உன்னைவிட உயர்ந்தவன் மூவுலகிலும் உளனோ?*

அசையும் அசையா உலகிற்கு நீ தந்தை ஆவாய். தந்தை மட்டுமல்ல. வணங்கத் தக்கோனும் ஆவாய். ஏனென்றால், நீ மிகச் சிறந்த குருவன்றோ. எதனால் நீ சிறந்த குருவாகின்றாய்? என்றால் உனக்கு ஒப்பாரும் மிக்காரும் எவரும் இல்லை என்பதினால்.

இரு கடவுளர்கள் இருப்பது உண்மையில் சாத்தியமன்று. ஒன்றுக்கு மேல் கடவுளர்கள் இருந்தால் உலக வாழ்க்கை நடைபெறாது. உனக்கு இணையானவன் ஒருவனும் இல்லையென்றால் உன்னைவிட உயர்ந்தவன் மூவுலகிலும் உளனோ? என்றால் இல்லை என்பதே பதிலாகும். நிகரற்றப் பெருமையுடையவனே! - ஈடிணையற்ற மகிமையுடையவர் என்று பொருளாகும்.

இவ்வாறு இருப்பதினால்,

**तस्मात्प्रणम्य प्रणिधाय कायं- प्रसादये त्वामहमीशमीड्यम् ।**
**पितेव पुत्रस्य सखेव सख्युः प्रियः प्रियायार्हसि देव सोढुम् ॥ ४४॥**

**தஸ்மாத் ப்ரணம்ய ப்ரணிதாய காயம் ப்ரஸாதயே த்வாம்**
**அஹம் ஈஶம் ஈட்யம் ।**
**பிதேவ புத்ரஸ்ய ஸகேவ ஸக்யு: ப்ரிய: ப்ரியாயார்ஹஸி**
**தேவ ஸோடும் ॥ 44॥**

*ஆதலினால் இறைவா! என் உடலைக் கீழே கிடத்தி துதிக்கத்தக்கவனும், ஈசுவரனுமாகிய உன்னை இறைஞ்சுகின்றேன். மகனைத் தந்தை போலும், நண்பனை நண்பன் போலும், காதலியைக் காதலன் போலும் என்னை நீ பொறுத்தருள வேண்டும்.*

ஆதலினால் உன் முன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து உன்னை வணங்கி வேண்டுகின்றேன்; போற்றுதற்குரிய ஈசனே. நீ எந்தன் பிழைதனை மகனைத் தந்தை மன்னித்தருளுதல் போலும், நண்பனை நண்பன் பொறுத்தருளுதல் போலும், காதலியைக் காதலன் மன்னித்தருளுதல் போலும், மன்னித்தருள வேண்டும்.

अदृष्टपूर्वं हृषितोऽस्मि दृष्ट्वा भयेन च प्रव्यथितं मनो मे ।
तदेव मे दर्शय देवरूपं- प्रसीद देवेश जगन्निवास ॥४५॥

அத்ருஷ்டபூர்வம் ஹ்ருஷிதோ (அ)ஸ்மி த்ருஷ்ட்வா பயேன ச
ப்ரவ்யதிதம் மனோ மே ।
தத் ஏவ மே தர்ஶய தேவ ரூபம் ப்ரஸீத தேவேஶ ஜகன் நிவாஸ ॥ 45॥

*முன்பு நான் காணாததைக் கண்டு இன்று நான் மகிழ்ச்சியடைகின்றேன். அச்சத்தினால் என் மனம் நடுங்குகின்றது. எனக்கு உன் பழைய வடிவத்தினைக் காட்டுக. தேவர்க்கு ஈசனே, உலகின் உறைவிடமே எனக்கு அருள் செய்வாய்.*

மனிதர்களாலும் மற்று எவனாலும் இதற்கு முன்பு காணப் பெறாத உனது விசுவரூபத்தைக் கண்டு நான் மேலான மகிழ்ச்சியடைகின்றேன். மேலும் என் மனம் அச்சத்தால் நடுங்குகின்றது. ஆதலினால் எனது நண்பனாகவுள்ள அப்பழைய வடிவினை மீண்டும் காட்டுக. தேவர்க்கு ஈசனே, உலகின் உறைவிடமே எனக்குக் கருணை புரிக

किरीटिनं गदिनं चक्रहस्त- मिच्छामि त्वां द्रष्टुमहं तथैव ।
तेनैव रूपेण चतुर्भुजेन सहस्रबाहो भव विश्वमूर्ते ॥४६॥

**கிரீட்டினம் கதினம் சக்ரஹஸ்தம் இச்சாமி த்வாம் த்ரஷ்டும்**
**அஹம் ததைவ ।**
**தேனைவ ரூபேண சதுர்புஜேன ஸஹஸ்ரபாஹோ பவ**
**விஶ்வ மூர்த்தே ॥ 46॥**

*கிரீடம் தரித்து கதாயுதமும், சக்கரமும் கைகளில் ஏந்தியிருக்கும் அதே வடிவினை நான் காண விரும்புகிறேன். ஆயிரந் தோள்களுடைய விசுவ மூர்த்தியே நான்கு கரங்களையுடைய அதே வடிவினை மேற்கொள்வாய்.*

முன்பு போலவே கிரீடம் அணிந்து கதாயுதமும், சக்கராயுதமும் ஏந்திய கரத்தினனாய் உள்ள வடிவத்தைக் காண்பதற்கு நான் விரும்புகிறேன் - பிரார்த்திக்கின்றேன். அதனால் ஓ, ஆயிரந் தோள்களுடையாய்! உனது விசுவரூபத்தை விடுத்து, வசுதேவ புத்திரனாகிய நாற்கர வடிவத்தை மேற்கொள்வாயாக.

அர்ஜுனன் அச்சத்திற்காளாகியுள்ளதை அறிந்த பகவான் தமது விசுவரூபத்தை விடுத்து அவனைத் தேற்றும் முகத்தான் கனியினும் இனிய வார்த்தைகளைக் கூறலானார்.

श्रीभगवानुवाच

**मया प्रसन्नेन तवार्जुनेदं- रूपं परं दर्शितमात्मयोगात् ।**
**तेजोमयं विश्वमनन्तमाद्यं- यन्मे त्वदन्येन न दृष्टपूर्वम् ॥४७॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**மயா ப்ரஸன்னேன தவார்ஜுனேதம் ரூபம் பரம் தர்ஶிதம்**
**ஆத்மயோகாத் ।**
**தேஜோமயம் விஶ்வம் அனந்தம் ஆத்யம் யன்மே த்வத்**
**அன்யேன ந த்ருஷ்டபூர்வம் ॥ 47॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***அர்ஜுனா! அன்புடைய நான் எனது ஆத்மயோகத்தினால் உனக்கு இந்தப் பரம வடிவத்தினைக் காட்டியருளினேன். ஒளிமயமாய், அனைத்துமாய், எல்லையற்றதாய், முதற் பொருளாய் உள்ள எனது இந்த வடிவம் இதற்கு முன் உன்னைத் தவிர வேறு எவராலும் பார்க்கப்பட்டதில்லை.***

அருளினால் - உனக்கு நலம் செய்ய வேண்டும் என்னும் கருணையினால் ஓ, அர்ஜுனா! இந்த விசுவரூபம் எனது ஆத்ம யோகத்தினால் உனக்கு காண்பிக்கப்பட்டது. இந்தப் பரமவடிவம், ஒளிமயமானது, உலகு தழுவியது எல்லையில்லாதது, முதற்பொருளானது. எனது இந்த வடிவத்தினை உன்னைத் தவிர இதற்கு முன்பு வேறு எவரும் கண்டிலர்.

உலகின் ஆன்மாவாகிய எனது இந்த வடிவத்தைக் கண்டதால் நீ பெரும் பேறு பெற்றுவிட்டாய். அக்காட்சி இப்போது போற்றப்படுகிறது.

**न वेदयज्ञाध्ययनैर्न दानैर्न च क्रियाभिर्न तपोभिरुग्रैः ।**
**एवंरूपः शक्य अहं नृलोके द्रष्टुं त्वदन्येन कुरुप्रवीर ॥४८ ॥**

ந வேதயஜ்ஞாத்யயனைர் ந தானைர் ந ச க்ரியாபிர் ந த போபிர்
உக்ரை: ।
ஏவம்ரூப: ஶக்ய அஹம் ந்ருலோகே த்ரஷ்டும் த்வத் அன்யேன
குருப்ரவீர ॥ 48॥

*குருகுலத்தில் சிறந்த வீரனே! வேதங்களாலும், வேள்விகளாலும், கல்விகளாலும், தானங்களாலும், தர்மங்களாலும், தவங்களாலும் எனது இந்த வடிவத்தினை மனித உலகில் உன்னைத் தவிர வேறு எவரும் இதற்கு முன் பார்த்ததில்லை.*

நான்கு வேதங்களை நன்கு கற்பதினாலும், வேள்விகளை முறையாகச் செய்வதினாலும், தனது எடைக்கு எடை தங்கத்தினைப் பிறருக்குத் தானமாகக் கொடுப்பதினாலும், சுருதிகளில் விதிக்கப்பட்டுள்ள அக்னிஹோத்ரம் போன்ற கர்மங்களைச் செய்வதினாலும், 'சாந்த்ராயணம்' போன்ற தவங்களைச் செய்வதினாலும் இவ்வுலக மாந்தர்களால் எனது இந்த விசுவரூபத்தை நீ கண்டது போல் காணமுடியாது. வேதங்களைக் கற்றல் என்பது வேள்விகளைக் கற்பதையும் உள்ளடக்கியதாம்.

मा ते व्यथा मा च विमूढभावो- दृष्ट्वा रूपं घोरमीदृङ्ममेदम् ।
व्यपेतभीः प्रीतमनाः पुनस्त्वं- तदेव मे रूपमिदं प्रपश्य ॥४९॥

மா தே வ்யதா மா ச விமூடபாவோ த்ருஷ்ட்வா ரூபம் கோரம்
ஈத்ருங்மமேதம் ।
வ்யபேதபீ: ப்ரீதமனா: புனஸ் த்வம் தத் ஏவ மே ரூபம் இதம்
ப்ரபஶ்ய ॥ 49॥

*இதுபோன்ற எனது பயங்கரமான வடிவத்தைக் கண்டு நீ அஞ்ச வேண்டாம்; மயங்க வேண்டாம். அச்சம் நீங்கி, மகிழ்ச்சிமிக்கவனாய் எனது முன்னை வடிவத்தை இதோ நீ பார்!*

உனக்குக் காட்டப்பட்ட எனது கோர வடிவத்தைக் கண்டு நீ அச்சமோ மதிமயக்கமோ கொள்ள வேண்டாம்.

அச்சம் நீங்கி மகிழும் மனத்தினனாய் சங்கும், சக்கரமும், கதாயுதமும் ஏந்திய எனது நாற்கர வடிவத்தை, உனக்குப் பிரியமானதை மீண்டும் பார்!

सञ्जय उवाच

इत्यर्जुनं वासुदेवस्तथोक्त्वा स्वकं रूपं दर्शयामास भूयः।
आश्वासयामास च भीतमेनं- भूत्वा पुनः सौम्यवपुर्महात्मा ॥ ५०॥

*சஞ்ஜய உவாச*

**இதி அர்ஜுனம் வாஸுதேவஸ் ததோக்த்வா ஸ்வகம்**
**ரூபம் தர்ஶயாம் ஆஸ பூய: ।**
**ஆஶ்வாஸயாம் ஆஸ ச பீதம் ஏனம் பூத்வா புன:**
**ஸௌம்ய வபுர் மஹாத்மா ॥ 50॥**

*சஞ்ஜயன் கூறினான்*

*வாசுதேவன் அர்ஜுனனிடம் இவ்வாறு கூறி மீண்டும் தமது பழைய வடிவத்தைக் காட்டினார். அந்த மகாத்மா மறுபடியும் தமது இனிய வடிவங்கொண்டு அச்சமுற்றிருந்த அவனைத் தேற்றினார்.*

இவ்வாறு அர்ஜுனனிடம் கூறிய வாசுதேவர், வசுதேவப் புத்திரனாகப் பிறந்த தமது முன்னைய வடிவத்தைக் காட்டியருளினார். அந்த மகாத்மா, இனிமையான மனித வடிவம் எய்தி அச்சமுற்றிருந்த அர்ஜுனனுக்கு ஆறுதல் மொழிகள் கூறினார்.

अर्जुन उवाच

**दृष्ट्वेदं मानुषं रूपं तव सौम्यं जनार्दन ।**
**इदानीमस्मि संवृत्तः सचेताः प्रकृतिं गतः ॥५१॥**

*அர்ஜுன உவாச*

**த்ருஷ்ட்வேதம் மானுஷம் ரூபம் தவ ஸௌம்யம் ஜனார்த்தன ।**
**இதானீம் அஸ்மி ஸம்வ்ருத்த: ஸசேதா: ப்ரக்ருதிம் கத: ॥ 51॥**

*அர்ஜுனன் கூறினான்*

*ஜனார்த்தனா! உனது இனிய மனிதவடிவத்தைக் கண்டு இப்போது நான் அமைதியடைந்துள்ளேன். எனது இயல்பு நிலை எய்தப் பெற்றுள்ளேன்.*

ஜனார்த்தனா! நட்புணர்வுடைய உனது இனிமையான மனித வடிவத்தைக் கண்டு நான் அமைதியடைந்துள்ளேன். எனது இயல்பு நிலைதனை எய்தப் பெற்றுள்ளேன்.

श्रीभगवानुवाच

**सुदुर्दर्शमिदं रूपं दृष्टवानसि यन्मम ।**
**देवा अप्यस्य रूपस्य नित्यं दर्शनकाङ्क्षिणः ॥५२॥**

ஸ்ரீ பகவான் உவாச

ஸுதுர்தர்ஸம் இதம் ரூபம் த்ருஷ்டவான் அஸி யன் மம ।
தேவா அபி அஸ்ய ரூபஸ்ய நித்யம் தர்ஸன காங்க்ஷிண: ॥ 52॥

ஸ்ரீ பகவான் கூறினார்

*என்னுடைய எந்த வடிவத்தை நீ கண்டனையோ அந்த வடிவம் காண்பதற்கரியதாகும். தேவர்களுங் கூட அவ்வடிவத்தை எப்போதும் காணப் பேரவா உடையோராயிருக்கின்றனர்.*

காண்பதற்கரிய அந்த வடிவத்தை, நீ கண்ட எனது வடிவத்தைக் காணத் தேவர்களும் பேரவா உடையோராய் இருக்கின்றனர். அவா உடையோராயினும் உன்னைப் போல் அவர்கள் கண்டதில்லை. காணப் போவதுமில்லை என்பது கருத்தாகும்.

ஏன்?

नाहं वेदैर्न तपसा न दानेन न चेज्यया ।
शक्य एवंविधो द्रष्टुं दृष्टवानसि मां यथा ॥५३॥

நாஹம் வேதைர் ந தபஸா ந தானேன ந சேஜ்யயா ।
ஸக்ய ஏவம்விதோ த்ரஷ்டும் த்ருஷ்டவான் அஸி மாம் யதா ॥ 53॥

*என்னை நீ எவ்வாறு கண்டனையோ அவ்வாறு நான் வேதங்களாலும், தவத்தாலும், தானத்தாலும், வேள்வியாலும் காணக் கூடியவனன்று.*

ரிக், யஜுர், சாமம், அதர்வணம் என்னும் நான்கு வேதங்களாலோ, அல்லது சாந்த்ராயணம் போன்ற கடுமையான தவத்தினாலோ அல்லது பசுக்களையும், நிலத்தையும், பொன்னையும், பொருளையும் தானமாகக் கொடுப்பதினாலோ அல்லது வேள்விகளாலோ, வழிபாட்டினாலோ என்னை நீ காண முடியாது.

பிறகு எவ்வாறு காண முடியும்?

भक्त्या त्वनन्यया शक्य अहमेवंविधोऽर्जुन ।
ज्ञातुं द्रष्टुं च तत्त्वेन प्रवेष्टुं च परन्तप ॥५४॥

பக்த்யா த்வ அனன்யயா ஸக்ய அஹம் ஏவம் விதோ (அ)ர்ஜுன ।
ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்த்வேன ப்ரவேஷ்டும் ச பரந்தப ॥ 54॥

*பகைவரைச் சுடும் அர்ஜுனா! பிறிதொன்றின் மீது நாட்டமில்லாத பக்தியால் இவ்வாறு நான் அறிவதற்கும், காண்பதற்கும், புகுதற்கும் உரியவன்.*

பக்தியினால் - எத்தகைய பக்தியினால்? என்றால், பகவானைத் தவிர பிறிதொன்றின் மீது நாட்டமில்லாத பக்தியால். எல்லாப் புலன்களாலும் வாசுதேவனைக் காட்டிலும் வேறு எது உணரப்படுவதில்லையோ அது வேறிடஞ் செல்லாத பக்தி, பிறிதொன்றின் மீது நாட்டமில்லாத பக்தியாகும். இவ்வாறான பக்தியினால் விசுவ ரூபியான என்னை சாத்திரங்களின் மூலம் அறிய முடியும். சாத்திரங்களின் மூலம் அறிவது மட்டுமல்ல நேரடியாகக் காணவும், முக்தியடைவதற்காக என்னுள் புகவும் முடியும். ஓ, பகைவரைச் சுடுவோய்!

முக்தியை நோக்கமாகக் கொண்டு அனுஷ்டிப்பதற்குரிய கீதா சாத்திரத்தின் முழுச்சாரமும் இங்கே ஒருங்கு திரட்டிக் கொடுக்கப்படுகின்றது.

**मत्कर्मकृन्मत्परमो मद्भक्तः सङ्गवर्जितः ।**
**निर्वैरः सर्वभूतेषु यः स मामेति पाण्डव ॥५५॥**

**மத் கர்மக்ருன் மத் பரமோ மத்பக்த: ஸங்க வர்ஜித: ।**
**நிர்வைர: ஸர்வ பூதேஷு ய: ஸ மாம் ஏதி பாண்டவ ॥ 55॥**

***பாண்டவா! எனக்குத் தொண்டு செய்பவனாய், என்னையே பரமாகக் கருதுபவனாய், என்னுடைய பக்தனாய், பற்றற்றவனாய், எவ்வுயிரிடத்தும் வன்மம் இல்லாதவனாய் எவன் உளனோ அவன் என்னை எய்துவான்.***

எனக்காக செய்யப்படும் தொண்டு எனது தொண்டாகும். ஒரு பணியாள் தனது எஜமானனுக்குத் தொண்டு செய்கிறான். ஆனால் அவனது மரணத்திற்குப் பின் அவன் தனது பரம லட்சியமாகத் தனது எஜமானனை அடைவதில்லை. இங்கு அவன் எனக்குத் தொண்டு செய்வது மட்டுமல்ல நானே அவனது பரமலட்சியமாக இருப்பதினால் அவன் என்னை வந்தடைகிறான். அதுபோல் என்னை எல்லா வழிகளிலும் முழுமனதோடு வழிபடுபவன் என்னுடைய பக்தனாவான். செல்வம், மக்கள், நண்பர், மனைவி, உற்றார், உறவினர், இன்பம், இவற்றின் மீது ஆசை அறுத்தவன் பற்றற்றவன் ஆவான். தனக்கு ஊறு செய்தவனிடம் கூடப் பகைமை பாராட்டாதவனே எல்லா உயிர்களிடத்தும் வன்மம் இல்லாதவன் ஆவான். இக்குணங்கள் வாய்க்கப் பெற்றவன் எவனோ அவன் என்னை வந்தடைகிறான். நானே அவனது பரம லட்சியமாவேன். அவனுக்கு வேறொரு லட்சியம் என்பது இல்லை. பாண்டவா! உனக்கு நான் செய்த உபதேசத்தின் சாரம் இதுவாம்.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீ கிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீ மத் பகவத் கீதையில் "விசுவ ரூப தரிசனம்" என்னும் பதினோராம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் பன்னிரண்டு

# பக்தி யோகம்

இரண்டாம் அத்தியாயம் முதல் பத்தாம் அத்தியாயமான விபூதி யோகம் வரை குணங்களற்றதும், அழிவற்றதுமான பிரம்மம் என்னும் பரமாத்மாவை வழிபடுவது உபதேசிக்கப்பட்டது. அவற்றுள் பல்வேறு இடங்களில் தெய்வீக சக்தியும், எல்லாம் அறியும் வல்லமையும், சத்துவ குணமும் உடைய உன்னை வழிபடுவது பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் 'விசுவ ரூப தரிசன' அத்தியாயத்தில் முதற்பொருளும், இப்பிரபஞ்சத்தைத் தன்னுள் கொண்டதுமான உனது ஈசுவர வடிவமானது வழிபடுவதற்காக உன்னால் காட்டப்பட்டது. அதனைக் காட்டிய பின்னர் நீ 'எனக்குத் தொண்டு செய்பவனாய்' (11-55) என்று தொடங்கும் திருவாக்கினை அருளிச் செய்துள்ளாய். ஆகையினால் இந்த இரண்டு வழிகளுள் எது சிறந்தது என்பதை அறிந்து கொள்வதற்காக நான் உன்னை வினவுகிறேன் :

अर्जुन उवाच

**एवं सततयुक्ता ये भक्तास्त्वां पर्युपासते ।**
**ये चाप्यक्षरमव्यक्तं तेषां के योगवित्तमाः ॥१॥**

*அர்ஜுன உவாச*

**ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ் த்வாம் பர்யுபாஸதே ।**
**யே சாபி அக்ஷரம் அவ்யக்தம் தேஷாம் கே யோக வித்தமா: ॥ 1॥**

*அர்ஜுனன் கூறினான்*

***இவ்வாறு எப்போதும் நிலைபெற்ற மனத்தினராய் எந்த பக்தர்கள் உன்னை நன்கு வழிபடுகின்றனரோ, மேலும் எவர்கள் புலனாகாத அழியாப் பொருளை வழிபடுகின்றனரோ, அவர்களுள் எவர்கள் யோகத்தை நன்குணர்ந்தவர்கள்?***

'இவ்வாறு' என்னும் சொல், 'எனக்குத் தொண்டு செய்பவனாய்' (11.55) என்று தொடங்கும் முந்தின சுலோகத்தைத் தொடர்ந்து வரும் செய்தியைக் குறிப்பிடுகின்றது. 'இவ்வாறு எப்போதும் நிலைபெற்ற மனத்தினராய்' வேறிடஞ் செல்லாமல் இறைவனுக்காக இறைத் தொண்டில் தம்மை

அர்ப்பணித்துக் கொண்ட பக்தர்கள் பற்றி ஏற்கெனவே விளக்கப்பட்டுள்ளது. ஒரு புறம் உன்னைச் சரணடைந்து, உனது விசுவரூபத்தை வழிபடும் பக்தர்கள், மறுபுறம் பற்றற்று, கர்மங்கள் துறந்து, ஏற்கெனவே விளக்கப்பட்டுள்ளவாறு வெளிப்படாததும், குணங்களற்றதும் புலன்களுக்கு எட்டாததுமான அழிவற்றப் பிரம்மத்தை வழிபடுபவர்கள். புலன்களுக்கு எட்டக் கூடியது வெளிப்படுதல் எனக் கூறப்படுகிறது. 'அஞ்ஜ்' என்னும் வேர்ச்சொல் வெளிப்படுதலைக் குறிப்பிடுகின்றது. இந்த அழியாப் பொருளோ அதற்கு மாறானது ஆகும். இது தனக்கென சிறப்புப் பண்புகள் உடையது என்று இனி கூறப்படப் போகின்றது. இந்த இருவகைப் பக்தருள் யோகத்தினை நன்கறிந்தவர் யார்? இதுவே பொருளாகும்.

தற்சமயம், மெய்யறிவு பெற்றுப் பற்று நீங்கி அழியாப் பொருளை வழிபடுபவர்களை விட்டு விடுவோம். அவர்களைப் பற்றிப் பின்னர் கூறுகிறேன். (சுலோகங்கள் 12-20) மற்றவர்களைப் பற்றி இப்போது பார்ப்போம்.

**श्रीभगवानुवाच**

**मय्यावेश्य मनो ये मां नित्ययुक्ता उपासते ।**
**श्रद्धया परयोपेतास्ते मे युक्ततमा मताः ॥ २॥**

*பகவான் உவாச*

**மய்யாவேஶ்ய மனோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே ।**
**ஶ்ரத்தயா பரயோபேதாஸ் தே மே யுக்ததமா மதா: ॥ 2॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***எவர்கள் என்னிடத்து மனதினை வைத்து, ஒரு நிலைப்பட்டு, உயர்ந்த நம்பிக்கையுடன் என்னை வழிபடுகின்றனரோ அவர்கள் யோகத்தில் சிறந்தோர் என்பது என் கருத்து.***

பக்தர்களாகிய எவர்கள் விசுவரூபினனான பரமேசுவரனும், யோகேசுவரனும், எல்லாம் அறியவல்லவனும், ஆசைகள் முதலிய தீமைகளால் பற்றப்படாதவனுமாகிய என்னிடத்துத் தங்கள் மனதினை வைத்து, உறுதியான பக்தியுடன் முந்தின அத்தியாயத்தின் இறுதியில் கூறப்பட்டுள்ள உபதேசத்தின் படி நடந்து, உயர்ந்த நம்பிக்கை உடையவர்களாக இருக்கின்றார்களோ, அவர்கள் மேலான யோகிகள் என்று என்னால் கருதப்படுகின்றனர். அவர்கள் அல்லும் பகலும் தங்கள் மனதினை என்னிடத்தில் நிலைநிறுத்துகின்றனர். ஆகையினால் அவர்களே மேலான யோகிகளாம் என்று கூறுவது பொருத்தமுடைத்தாம்.

மற்றவர்கள் அவர்களைப் போல் மேலான யோகிகள் அல்லரோ? என்றால், இல்லை, அவர்களைப் பற்றிக் கூறுகிறேன், கேள்.

ये त्वक्षरमनिर्देश्यमव्यक्तं पर्युपासते
सर्वत्रगमचिन्त्यं च कूटस्थमचलं ध्रुवम् ॥ ३॥

யே த்வக்ஷரம் அநிர்தேஶ்யம் அவ்யக்தம் பர்யுபாஸதே ।
ஸர்வத்ரகம் அசிந்த்யம் ச கூடஸ்தம் அசலம் த்ருவம் ॥ 3॥

सन्नियम्येन्द्रियग्रामं सर्वत्र समबुद्धय:
ते प्राप्नुवन्ति मामेव सर्वभूतहिते रता: ॥ ४॥

ஸந்நியம் யேந்த்ரிய க்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய: ।
தே ப்ராப்னுவந்தி மாம் ஏவ ஸர்வபூதஹிதே ரதா: ॥ 4॥

*மற்று எவர்கள் எப்போதும் சமபுத்தி உடையவராய், புலன்களின் கூட்டத்தை நன்கு அடக்கி, சொல்லுக்கடங்காததாகவும், விளக்கவொண்ணாததாகவும், மனதுக்கு எட்டாததாகவும், எங்குமுள்ளதாகவும், மாறுதலற்றதாகவும், அசைவற்றதாகவும், உறுதியுடையதாகவும் உள்ள அழியாப் பொருளை நன்கு வழிபடுகின்றனரோ, எல்லா உயிர்களும் இன்புற்றிருக்க நினைக்கும் அவர்களும் என்னையே அடைகின்றனர்.*

அழியாப் பொருளானது வெளிப்படையாக இல்லாமையினால் சொல்லுக்கடங்காததாகும் எனவே அதனை ஒருவராலும் இன்னதென்று குறிப்பிட்டு உணர்த்த முடியாது. அது வெளிப்படையாக இல்லாததினால் அறிவதற்குக் கருவியாக உள்ள எதற்கும் புலப்படாததாகும். 'நன்கு வழிபடுகின்றனர்' என்றால் எல்லா வழிகளிலும் வழிபடுகின்றனர் என்று பொருளாகும்.

வழிபடுதல் என்றால் சாத்திர நெறிக்கேற்ப வழிபட வேண்டிய பொருளை தியானித்தும், எப்போதும் சிந்தித்தும் அதன் அருகாமையினை அடைந்து எண்ணெயின் ஒழுக்கைப் போல இடையறாது அதனையே சிந்தித்தல் என்று பொருளாகும்.

பகவான் அழியாப் பொருளின் சிறப்பியல்புகளை பற்றி அருளிச் செய்கிறார். ஆகாயம் போல எங்கும் வியாபித்திருப்பது. வெளிப்படையாக இல்லாததினால் நினைத்தற்கரியது. புலன்களுக்கு எட்டுவது மனதினால் நினைக்கக்கூடியதாகும். அழியாப் பொருளோ அதற்கு மாறாக இருப்பதினால் நினைத்தற்கரியதாகும். 'கூடஸ்தமானது' அதாவது மாற்றமில்லாததாகும். 'கூடம்' என்னும் சொல் வெளியே குணமும் உள்ளே குற்றமுமுடையதோர் பொருளைக் குறிப்பதாகும். 'கூடம்' என்னும் சொல் 'கூட-ரூபம்' மாயத் தோற்றம், 'கூட-ஸாக்ஷ்யம்' - பொய் சாட்சி என்னும் சொற்களாக இவ்வுலகில் வழங்கப்படுகின்றது. அதுபோல் 'மாயை', 'அவ்யகிருதம்' என்னும் பெயர்களால் எது அழைக்கப்படுகின்றதோ, லௌகீக வாழ்க்கைக்கு அறியாமை

போன்று ஏராளமான விதைகளையுடையதாக எது இருக்கின்றதோ அதுவும் 'கூடமேயாகும்'. இதனையே வேதங்கள் ''பிரகிருதியை மாயை என்றும் அம்மாயைக்குத் தலைவனை மகேசன் என்றும் அறிய வேண்டும்' (சுவே. 4.10) என்றும், ''என்னுடைய மாயை கடத்தற்கரியது' (ப.கீ.7.14) என்றும் கூறுவதிலிருந்து இக் 'கூடம்' என்பது நன்கறியப்படுகின்றது. அக்கூடத்திற்குத் தலைவராக (சாட்சியாக) இருப்பவர் அல்லது ஒரு குவியலாக இருப்பது கூடஸ்தமென்க. அது அசைவற்றதாகும். அசைவற்றதாக இருப்பதால் நித்தியமானதாகும்.

புலன்களின் கூட்டத்தை நன்கடக்கி, இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதும் இயல்புடையவராய், எல்லா உயிர்களும் இன்புற்றிருக்க வேண்டும் என்று நினைப்பவர்கள் என்னை அடைகின்றனர். அவர்களைப் பொருத்தமட்டில் அவர்கள் என்னை அடைகின்றனர் என்று கூறத் தேவையில்லை. ஏனென்றால் 'ஞானியோ எனது ஆத்மாவாக இருக்கிறான் என்பது என் கருத்தாகும்' (ப.கீ.7.18) என்று ஏற்கெனவே கூறப்பட்டுள்ளது. பகவானோடு ஒன்றியிருக்கும் அவர்களை யோகிகள் என்றோ யோகிகள் அல்லர் என்றோ கூறுவது பொருத்தமற்றதாகும்.

ஆனால்,

**क्लेशोऽधिकतरस्तेषामव्यक्तासक्तचेतसाम् ।**
**अव्यक्ता हि गतिर्दुःखं देहवद्भिरवाप्यते ॥५॥**

**க்லேஶோ (அ)திகதரஸ் தேஷாம் அவ்யக்தாஸக்த - சேதஸாம் ।**
**அவ்யக்தா ஹி கதிர்து:க்கம் தேஹவத்பிர் அவாப்யதே ॥ 5॥**

***அவ்யக்தப் பொருளில் (வெளிப்படாப் பொருள்) நாட்டங் கொண்டோர்க்கு சிரமம் அதிகம். உடல் பெற்றோர்க்கு அவ்யக்த கதி அரிதாகவே அடையப்படுகின்றது.***

'அவர்களுடைய சிரமம் அதிகம்' எனக்குத் தொண்டு செய்பவர்களின் சிரமமும் அதிகமானதே ஆயினும் அழிவற்ற அவ்யக்தப் பொருளினிடத்தில் நாட்டங் கொண்டோர்க்கு உண்டாகும் சிரமம் அதைவிட அதிகமானதாகும். காரணம் அவர்கள் தமது உடற் கருத்தினைத் துறப்பதற்குப் பெரிதும் சிரமப்படுகின்றனர். நிர்க்குணப் பிரம்மமான அழியாப் பொருளை அடைவது உடல் பெற்றோர்க்கு அவர்களின் உடற்கருத்தின் காரணமாக அரிதாகும்.

அழியாப் பொருளாகிய நிர்க்குணப் பிரம்மத்தை வழிபடுபவர்களின் வாழ்க்கை மற்றும் செயல்கள் பற்றிப் பின்னர் கூறப்படும் (சுலோ.13-20)

**ये तु सर्वाणि कर्माणि मयि संन्यस्य मत्पराः**
**अनन्येनैव योगेन मां ध्यायन्त उपासते ॥६॥**

**யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத் பரா: ।**
**அனன்யேனைவ யோகேன மாம் த்யாந்த உபாஸதே ॥ 6॥**

*ஆனால் எல்லாக் கர்மங்களையும் என்னிடம் சமர்ப்பித்து என்னையே பரமாகக் கொண்டு பிரிதொன்றினைச் சாராத யோகத்தினால் என்னையே தியானித்து வழிபடுகின்றனரோ,*

பகவானாகிய என்னையேத் தங்கள் பரமகதியாகக் கொண்டு, பிறிதொன்றில் நாட்டமின்றி, விசுவரூபினனான என்னையே தியானித்து வழிபட்டு எல்லாக் கர்மங்களையும் என்னிடம் சமர்ப்பித்தவர்கள் எவர்களோ;

அவர்களுக்கு என்ன?

**तेषामहं समुद्धर्ता मृत्युसंसारसागरात् ।**
**भवामि नचिरात्पार्थ मय्यावेशितचेतसाम् ॥ ७॥**

**தேஷாம் அஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யுஸம்ஸார ஸாகராத் ।**
**பவாமி ந சிராத் பார்த்த மய்யாவேஶிதசேதஸாம் ॥ 7॥**

*பார்த்தா! என்னிடத்தில் மனதினை நிலைநிறுத்திய அவர்களை நான் சாவுடன் கூடிய சம்சாரக் கடலினின்று விரைந்து கரையேற்றுகிறேன்.*

பகவானாகிய நான், என்னிடம் மனதினை நிலைநிறுத்தி என்னை வழிபடுவோர்களை கரையேற்றுகிறேன். எதிலிருந்து கரையேற்றுகிறேன்? - மரணத்திற்கு இட்டுச் செல்லும் சம்சாரக்கடலிலிருந்து. அது கடப்பதற்கு அரிதாதலின் கடல் எனக் கூறப்படுகிறது. நான் அவர்களைக் கரையேற்றுவது காலங்கடந்தன்று. 'விரைந்து' கரையேற்றுவேன். ஓ, பார்த்தா! அவர்கள் விசுவரூபினனான என்னிடத்தில் தங்கள் மனதினை நிலைநிறுத்தியவர்கள் அல்லவா.

இவ்வாறிருத்தலால்,

**मय्येव मन आधत्सव मयि बुद्धिं निवेशय ।**
**निवसिष्यसि मय्येव अत ऊर्ध्वं न संशयः ॥ ८॥**

**மய்யேவ மன ஆதத்ஸ்வ மயிபுத்திம் நிவேஶய ।**
**நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் ந ஸம்ஶய: ॥ 8॥**

*மனதினை என்னிடம் நிறுத்து, மதியை என்னிடம் புகுத்து, இனி என்னில் நீ உறைவாய், ஐயமில்லை.*

'என்னிடம்' - அதாவது விசுவரூபினனான இறைவனாகிய என்னிடம் எண்ணத்திற்கும், கற்பனைக்கும் இடமாயிருக்கும் உனது மனதினை நிலைநிறுத்திவிடு. எதையும் நிர்ணயம் செய்யும் மதியையும் என்னிடம் புகுத்திவிடு. அதாவது எனது சிந்தனையில் ஒருமுகப்படுத்து. அதனால் விளைவதென்ன? என்றால், கவனிப்பாயாக; அதனால் இனிமேல் - இந்த உடல் மறைந்தபின்னர், நீ என்னில் வாழ்வாய், நானாகவே வாழ்வாய். இதில் உனக்கு ஐயம் வேண்டாம்.

**अथ चित्तं समाधातुं न शक्नोषि मयि स्थिरम् ।**
**अभ्यासयोगेन ततो मामिच्छाप्तुं धनञ्जय ॥ ९॥**

**அத சித்தம் ஸமாதாதும் ந ஶக்நோஷி மயி ஸ்திரம் ।**
**அப்யாஸயோகேன ததோ மாம் இச்சாப்தும் தனஞ்ஜய ॥ 9॥**

*ஆனால் அர்ஜுனா! மனதினை என்னிடம் உறுதியாக நிலைநிறுத்த முடியாவிட்டால், அப்பியாச யோகத்தினால் என்னை அடைவதற்கு விரும்பு.*

நான் கூறியபடி மனதினை என்னிடம் உறுதியாக உன்னால் நிலைநிறுத்த முடியவில்லையென்றால் விசுவரூபினனான என்னை அப்பியாச யோகத்தினால் அடைதற்கு விரும்புவாயாக. 'அப்பியாசம்' என்றால் எல்லாவற்றிலுமிருந்து மனதினை இழுத்து ஒரே பொருளின் மீது மனதினை ஒருமுகப்படுத்துவதற்காக மீண்டும் மீண்டும் செய்யும் முயற்சியாகும். 'யோகம்' என்றால் அம்முயிற்சியின் பயனாக மனம் ஒருமுகப் படுதலாகும்.

**अभ्यासेऽप्यसमर्थोऽसि मत्कर्मपरमो भव ।**
**मदर्थमपि कर्माणि कुर्वन्सिद्धिमवाप्स्यसि ॥ १०॥**

**அப்யாஸே (அ)பி அஸமர்த்தோ (அ)ஸி மத்கர்மபரமோ பவ**
**மத் அர்த்தம் அபிகர்மாணி குர்வன் ஸித்திம் அவாப்ஸ்யஸி ॥ 10॥**

*அப்பியாசத்திலும் திறமையில்லையென்றால், எனக்காகவே கர்மங்கள் செய்வாயாக. எனக்காகக் கர்மங்கள் செய்வதாலும் சித்தி பெறுவாய்.*

அப்பியாசம் எனப்படும் மீண்டும் மீண்டும் முயற்சி செய்திலும் நீ திறமையற்றவனாக இருந்தால், எனக்கானக் கர்மங்கள் செய்வதில் உன்னை முற்றிலும் அர்ப்பணித்துவிடு. எனக்காகச் செய்யப்படும் கர்மம் ''என்னுடைய கர்மம்'' ஆகும். அதில் உன்னை முற்றிலும் ஈடுபடுத்து. அதாவது அக்கர்மமே உனக்கு முக்கியமானதாகட்டும் என்பது கருத்து. தொடர்ந்து செய்யப்படும் முயற்சிகள் இல்லாதவிடத்து மனத்தூய்மையினாலும் மனதினை ஒருமுகப் படுத்துதலினாலும் சித்திபெறுவாயாக.

अथैतदप्यशक्तोऽसि कर्तुं मद्योगमाश्रितः ।
सर्वकर्मफलत्यागं ततः कुरु यतात्मवान् ॥ ११॥

**அதைதத் அபி அஶக்தோ (அ)ஸி கர்த்தும் மத்-யோகம் ஆஶ்ரித: ।**
**ஸர்வகர்மபலத்யாகம் தத: குரு யதாத்மவான் ॥ 11॥**

*இதனைச் செய்யவும் உனக்கு சக்தியில்லையென்றால், அதன்பின்னர் எனது தொடர்புடைய யோகத்தினை அடைக்கலமாகக் கொண்டு, மனதினை அடக்கி, செய்யும் கர்மங்கள் அனைத்தின் பயனையும் துறந்திடுவாயாக.*

'இதனையும்' - 'எனக்கானக் கர்மங்களைச் செய்திடுவாயாக' என்றுரைத்த உபதேசத்தையும் செயல்படுத்த உனக்கு சக்தியில்லையென்றால் பின்னர் 'எனது தொடர்புடைய யோகத்தினை அடைக்கலமாகக் கொண்டு' - எனக்கு அர்ப்பணித்துச் செய்யப்படும் கர்மங்கள் எனது தொடர்புடைய யோகம் ஆகும். மனதினை அடக்கிச் செய்யும் கர்மங்களின் பயனை முற்றிலும் துறந்திடுவாயாக.

பகவான் இப்போது கர்மப் பயனைத் துறப்பதைப் போற்றிக் கூறுகின்றார்.

श्रेयो हि ज्ञानमभ्यासाज्ज्ञानाद्ध्यानं विशिष्यते ।
ध्यानात्कर्मफलत्यागस्त्यागाच्छान्तिरनन्तरम् ॥ १२॥

**ஶ்ரேயோ ஹி ஜ்ஞானம் அப்யாஸாஜ் ஜ்ஞானாத் த்யானம் விஶிஷ்யதே ।**
**த்யானாத் கர்மப்பலத்யாகஸ் த்யாகாச் சாந்திர் அனந்தரம் ॥ 12॥**

*அப்பியாசத்தை விட ஞானம் சிறந்தது. ஞானத்தினும் தியானம் சிறந்தது. கர்மப்பயனைத் துறத்தல் தியானத்தினும் சிறந்தது; துறவினால் அமைதி உண்டாகிறது.*

'ஞானம் சிறந்தது' - எதைவிடச் சிறந்ததென்றால்? மீண்டும் மீண்டும் செய்யப்படுவதாகிய அப்பியாசத்தினும் ஞானம் சிறந்ததாகும். ஞானத்தைவிட அந்த ஞானவழி செய்யப்படும் தியானம் சிறந்ததாம். ஞானமுடைய மனிதன் செய்யும் தியானத்தைவிடக் கர்மப் பயனைத் துறத்தல் சிறந்ததாம். முன்னர் கூறியவாறு (சுலோ. 11) கர்மப்பயனைத் துறப்பதால் அமைதி உண்டாகின்றது. அதன் பின்னர் லௌகீக வாழ்க்கையும், அதற்கானக் காரணமும் உடனே ஒழிந்து விடுகின்றன. அதாவது அவை ஒழிவதற்கு நீண்ட நாட்கள் ஆவதில்லை என்பது கருத்து.

கர்மங்களைச் செய்து கொண்டிருக்கும் அறியாமை உடையவனுக்கு முன்னர் கூறப்பட்ட உபதேசங்களை பின்பற்றுவதற்கானச் சக்தியில்லாத போழ்து அவனுக்கு முக்திக்கு வழி கர்மப்பயனைத் துறத்தல் என்று

கூறப்பட்டது. முதலில் அவனுக்க இது பரிந்துரைக்கப்படவில்லை. அதனால்தான் "அப்பியாசத்தைவிட ஞானம் சிறந்தது. ஞானத்தினும் ............ சிறந்தது, என்று பிந்தினது சிறந்தது, பிந்தினது சிறந்தது என்று கூறப்பட்டதின் மூலம் (12.12) கர்மப்பயனைத் துறப்பது புகழ்ந்து கூறப்படுகின்றது. முன்னர் கூறப்பட்ட உபதேசங்களைப் பின்பற்றும் திறனில்லாதவனுக்கு இக்கர்மப் பயனைத் துறப்பதானது உபதேசிக்கப்படுகின்றது.

**கேள்வி :** எதனால் இது (கர்மப் பயனைத் துறத்தல்) புகழப்படுகின்றது?

**பதில் :** ஆசைகள் அனைத்தும் துறக்கப்படும்பொழுது" (க.உ. 2.3.14) என்று குறிப்பிடப்பட்டதின் மூலம் ஆசைகள் அனைத்தையும் துறப்பதினால் இறவாமை உண்டாகுமென்று கூறப்பட்டது. இதனை பி.உ. 4.4.6-ம் உறுதிசெய்கின்றது. ஆசைகள் என்பவை சுருதிஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டுள்ள கர்மப் பயன்களாகும். எனவே கர்மப்பயனைத் துறப்பதால் ஞானமுடைய மனிதனுக்கு அமைதி உடனே உண்டாகின்றது. ஆசைகளைத் துறப்பதற்கும், அஞ்ஞானி கர்மப்பயனைத் துறப்பதற்கும் இடையே ஓர் பொதுத்தன்மை இருப்பதால் கர்மப்பயனைத் துறப்பது புகழ்ந்து கூறப்படுகின்றது. அப்பொதுத் தன்மையின் காரணமாகக் கர்மப்பயனைப் புகழ்ந்து கூறுவதின் மூலம் அதனைக் கேட்பவனுக்கு அதில் ஓர் ஈடுபாடு உண்டாகின்றது. உதாரணமாக கடல் குடித்த குறுமுனி அகத்தியன், பிராமணன் ஆதலினால், இன்றைய பிராமணர்களும் பிராமணர் என்னும் பொதுத் தன்மையினால் புகழப்படுகின்றனர். இவ்வாறு கர்மயோகமானது கர்மப்பயனைத் துறப்பதினால் முக்திக்கு வழி என்று உபதேசிக்கப்பட்டது.

இங்கே ஆத்மாவுக்கும் இறைவனுக்கும் இடையில் ஒரு வேறுபாட்டினை வைத்துக் கொண்டு விசுவரூபத்தில் இறைவனிடம் மனம் உறுதியுடன் நிலைநிற்பதாகிய யோகமும், இறைவனுக்காகச் செய்யப்படும் கர்மங்களும் உபதேசிக்கப்பட்டன. "இதைச் செய்யவும் நீ சக்தியற்றவனாயின்" (12.11) என்று கூறியதின் மூலம் ஆத்மாவுக்கும் இறைவனுக்குமிடையே வேறுபாடு காணாது அழியாப் பொருளை வழிபடுபவனுக்குக் 'கர்ம-யோகம்' பொருந்தாது என்று குறிப்பிடுகிறார். ஏனென்றால் அது அறியாமையின் குழந்தையாகும். அவ்வாறே பகவான் அழியாப் பொருளை வழிபடுதல் கர்மயோகிக்கும் பொருந்தாது என்று கூறுகிறார். அழியாப் பொருளை வழிபடுவோர்க்கு "அவர்கள் என்னையே அடைகின்றனர்" (12.4) என்று கூறிப் பின்னர் மற்றையோர்க்கு "நான் அவர்களைக் கரையேற்றுகிறேன்" (12.7) என்று கூறியதின் மூலம் அவர்கள் இறைவனைச் சார்ந்து நிற்றலை உணர்த்தியுள்ளார். அழியாப் பொருளை வழிபடுவோர் ஆத்மாவுக்கும் இறைவனுக்கும் வேறுபாடு காண்பதில்லையாதலினால் அவர்கள் அழியாப் பொருளாகவே ஆகிவிடுகின்றனர். எனவே கரையேற்றுதல் என்பதற்கு அவர்கள் பொருத்தமுடையோர் அல்லர்.

அர்ஜுனனின் நலத்தில் அக்கறையுடையவர் ஆதலினால் பகவான் அவனுக்கு வேறுபாடுடையதும், (ஆத்மாவுக்கும் இறைவனுக்கும் இடையிலுள்ள வேறுபாடு) மெய்யறிவோடு தொடர்பில்லாததுமானக் கர்மயோகத்தை

உபதேசிக்கிறார். மெய்யறிவினால் இறைவனைத் தனது ஆத்மாவாக உணராதவன் மற்றவனுக்குக் கீழ்ப்படிகிறான். அவ்வாறு உணர்ந்தவன் ஒருவனுக்குக் கீழ்ப்படிந்தால் அது முரண்பாடாகும். ஆதலினால் ஆசைகள் அனைத்தையும் துறந்து மெய்யறிவோடு, அழியாப் பொருளை வழிபடுவோர்கள் இறவாமையினை நேரடியாக அடைவதற்குச் சாதனங்களான "எவ்வுயிர்களிடத்தும் பகைமையில்லாதவனாய்" (12.13) என்பது முதலானவற்றைப் பகவான் கூறத் தொடங்குகிறார்.

**अद्वेष्टा सर्वभूतानां मैत्रः करुण एव च ।**
**निर्ममो निरहङ्कारः समदुःखसुखः क्षमी ॥१३॥**

**அத்வேஷ்டா ஸர்வபூதானாம் மைத்ர: கருண ஏவ ச ।**
**நிர்மமோ நிரஹங்கார: ஸம து:க்க ஸுக: க்ஷமீ ॥ 13॥**

**सन्तुष्टः सततं योगी यतात्मा दृढनिश्चयः ।**
**मय्यर्पितमनोबुद्धिर्यो मद्भक्तः स मे प्रियः ॥१४॥**

**ஸந்துஷ்ட: ஸததம் யோகீ யதாத்மா த்ருட நிஸ்சய:**
**மய்யர்ப்பித மனோபுத்திர் யோமத் பக்த: ஸமே ப்ரிய: ॥ 14॥**

***எவ்வுயிர்களிடத்தும் பகைமை பாராட்டாதவனாய், நட்பும் கருணையும் உடையவனாய், 'நான்' 'எனது' என்னும் எண்ணமில்லாதவனாய், இன்பதுன்பங்களை சமமாகக் கருதுபவனாய் பொறுமையுடையவனாய், எப்போதும் மகிழ்ச்சியுடையவனாய், யோகியாய், அடங்கிய மனத்தினனாய், என்னிடத்தில் மனத்தையும், புத்தியையும் அர்ப்பணித்தவனாயுள்ள என்பக்தன் எவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.***

தனக்குத் துன்பம் செய்வோரிடத்தும் அவன் பகைமை பாராட்டுவதில்லை. ஏனென்றால், அவன் எல்லா உயிர்களையும் தானாகவேக் காண்கின்றான். அனைவரிடத்தும் நட்பும், துன்புறுவோரிடத்துக் கருணையும் உடையவனாக இருக்கின்றான். எல்லா உயிர்களுக்கும் அபயமளிப்பவனாக இருக்கின்றான். உலகைத் துறந்த துறவியாக இருக்கின்றான். அஹங்காரம், மமகாரமாகிய 'நான்' 'எனது' என்னும் எண்ணமில்லாதவனாக இருக்கின்றான். இன்ப துன்பங்களைச் சமமாகக் கருதுகின்றான். தூற்றப்பட்டாலும், துன்புறுத்தப்பட்டாலும் உணர்ச்சிக் கொந்தளிப்பின்றி மிக்கப் பொறுமையுடன் இருக்கின்றான்.

எப்போதும் மகிழ்ச்சியுடைவனாக இருக்கின்றான். அதாவது தனது உடலைப் பேணுவதற்குரியவை கிடைப்பினும், கிடைக்காமற் போயினும், போதுமென்னும் மனமுடையவன். அதனால் நல்லவை கிடைப்பினும், கிடைக்காமற்போயினும் அவன் இரண்டிலும் மகிழ்ச்சியுடையவனாகவே

இருக்கின்றான். எப்போதும் ஒரு நிலைப்பட்ட மனத்தினையுடைய யோகியாக இருக்கின்றான். அவன் தனது மனத்தையும், புத்தியையும் என்னிடத்தில் நிலைநிறுத்துகிறான். குறிப்பாக மனம் எண்ணங்களும், ஐயங்களுமுடையது. புத்தியோ ஒன்றை நிர்ணயிக்கும் சக்தியாகும். இங்கே குறிப்பிடப்படுவது தனது மனத்தையும், புத்தியையும் என்னிடத்தில் மட்டுமே நிலைநிறுத்திய துறவியைப் பற்றியதாகும். இத்தகையக் குணநலன்களுடைய என் பக்தன் எவனோ அவன் எனக்கு மிகவும் பிரியமானவன். அத்தியாயம் 7 சுலோகம் 17ல் குறிப்பிடப்பட்டது, இங்கு விரிவாக விளக்கப்படுகிறது.

**यस्मान्नोद्विजते लोको लोकान्नोद्विजते च यः ।**
**हर्षामर्षभयोद्वेगैर्मुक्तो यः स च मे प्रियः ॥ १५॥**

**யஸ்மான் நோத்விஜதே லோகோ லோகான் நோத்விஜதே சய: ।**
**ஹர்ஷாமர்ஷபயோத்வேகைர் முக்தோ ய: ஸ ச மே ப்ரிய: ॥ 15॥**

*எவனால் உலகம் வருந்துவதில்லையோ, உலகத்தால் எவன் வருந்துவதில்லையோ, எவன் மகிழ்ச்சி, சினம், அச்சம், கலக்கம் என்பவை நீங்கியவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.*

எந்தத் துறவியால் இந்த உலகம் துன்பத்திற்காளாவதில்லையோ, உலகத்தினால் எந்தத் துறவி துன்புறுவதில்லையோ அவன் மகிழ்ச்சி, சினம், அச்சம், கலக்கம் போன்றவற்றிலிருந்து விடுதலை பெறுகிறான். மகிழ்ச்சி என்பது மனதிற்கினியது கிடைக்கும் பொழுது உண்டாகும் மனதின் கொண்டாட்டமாகும்; அது மயிர்க்கூச்செறிதல், கண்ணீர் சிந்துதல் போன்ற அடையாளங்களை உடையதாகும். சினம் என்பது பொறுமையின்மையின் விளைவாகும். அச்சம் என்பது ஆபத்துக்காலத்தில் உண்டாகும் மன உணர்வு. கலக்கம் என்பது மனக்கிளர்ச்சியாகும். எவன் இத்தகு குணங்கள் இல்லாதவனாக இருக்கின்றானோ அவன் எனக்குப் பிரியமானவன்.

**अनपेक्षः शुचिर्दक्ष उदासीनो गतव्यथः ।**
**सर्वारम्भपरित्यागी यो मद्भक्तः स मे प्रियः ॥ १६॥**

**அனபேக்ஷ: ஶுசிர்தக்ஷ உதாஸீனோ கதவ்யத:**
**ஸர்வாரம்பபரித்யாகி யோ மத்பக்த: ஸமே ப்ரிய: ॥ 16॥**

*எதையும் நாடாதவனாய், தூயோனாய், திறமை உடையவனாய், ஒருபுறம் சாராதவனாய், கவலையற்றவனாய், எல்லா முயற்சிகளையும் அறவே விலக்கியவனாய் எவன் எனது பக்தனாக இருக்கின்றானோ அவன் எனக்குப் பிரியமானவன்.*

எதையும் நாடாதவன் என்றால், உடல், புலன்கள், விஷயங்கள் முதலியவற்றின் மீது ஆசையில்லாதவன் என்று பொருளாகும். அகத்தும்,

புறத்தும் தூயோனாக இருப்பவன். திடீரென்று நிகழும் நிகழ்வுகளை உண்மையாகப் புரிந்து கொள்பவனே திறமையுடையவன் ஆவான். ஒருபுறம் சாராதவன், நண்பனாக இருந்தபோதிலும் கூட அவன் பக்கம் சேராதிருத்தலே ஒருபுறம் சாராதிருத்தலாகும். கவலையற்றவனாக அல்லது அச்சமற்றவனாக இருப்பவன் - "எல்லா முயற்சிகளையும் அறவே விலக்கியவன்" - முயற்சிகள் என்பது இம்மை மறுமைக்கான இன்பத்தின் மீது உண்டாகும் ஆசையின் காரணமாகச் செய்யப்படும் செயல்களாகும். அச்செயல்களை அறவே விலக்கியவனாக இருக்கும் எனது பக்தன் எனக்கு மிகவும் பிரியமானவன் ஆவான்.

தவிர,

**यो न हृष्यति न द्वेष्टि न शोचति न काङ्क्षति ।**
**शुभाशुभपरित्यागी भक्तिमान्य: स मे प्रिय: ॥१७॥**

**யோ ந ஹ்ருஷ்யதி ந த்வேஷ்டி ந ஶோசதி ந காங்க்ஷதி**
**ஶுபாஶுபபரித்யாகீ பக்திமான்ய: ஸ மே ப்ரிய: ॥ 17॥**

***எவன் மகிழ்வதில்லையோ, வெறுப்பதில்லையோ, வருந்துவதில்லையோ, விரும்புவதில்லையோ; எவன் நன்மை தீமைகளை விட்டொழிந்தவனோ, பக்தியுள்ளவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.***

விரும்பிய பொருள் கிடைக்கப் பெற்றால் உண்டாவது மகிழ்ச்சியாகும். விரும்பாத பொருள் கிடைக்கப் பெற்றால் உண்டாவது வெறுப்பாகும். இவ்வாறு விருப்பு வெறுப்புக்கள் இல்லாதவனாகவும், மனதிற்கினிய பொருளை இழந்துவிட்டால் வருந்தாதவனாகவும், கிட்டாதப் பொருளின் மீது ஆசை முற்றாகத் துறந்தவனாகவும், நன்மைதீமைகளற்றவனாகவும், பக்தியுடையவனாகவும் உள்ளவன் எவனோ அவன் எனக்குப் பிரியமானவன்.

**सम: शत्रौ च मित्रे च तथा मानापमानयो: ।**
**शीतोष्णसुखदु:खेषु सम: सङ्गविवर्जित: ॥१८॥**

**ஸம: ஶத்ரௌ ச மித்ரேச ததா மானாபமானயோ: ।**
**ஶீதோஷ்ண ஸுக து:க்கேஷு ஸம:ஸங்க விவர்ஜித: ॥ 18॥**

***பகைவரிடத்தும் நண்பனிடத்தும், அதுபோல் மானத்திலும் அவமானத்திலும், குளிரிலும், வெப்பத்திலும், இன்பத்திலும், துன்பத்திலும் சமமானவனும், பற்றற்றவனும்.***

பகைவனிடத்தும் நண்பனிடத்தும் சமமானவன். அதுபோல் மானத்திலும் அவமானத்திலும் அல்லது போற்றுதலிலும், தூற்றுதலிலும்

சமமாக இருப்பவன். அவன் குளிரிலும், வெப்பத்திலும் இன்பத்திலும் துன்பத்திலும் சமமாக இருப்பவன். எப்போதும் பற்றற்றவனாக இருப்பவன்.

तुल्यनिन्दास्तुतिर्मौनी सन्तुष्टो येन केनचित् ।
अनिकेतः स्थिरमतिर्भक्तिमान्मे प्रियो नरः ॥ १९॥

துல்ய நிந்தாஸ்துதிர் மௌனீ ஸந்துஷ்டோ யேன கேனசித் ।
அனிகேத: ஸ்திரமதிர் பக்திமான் மே ப்ரியோ நர: ॥ 19॥

*இகழ்ச்சி புகழ்ச்சிகளை சமமாகக் கருதுபவனாகவும், மௌனியாகவும், எது வந்துற்றப் போதும் அதில் திருப்தியுடையவனாகவும், உறைவிடமற்றவனாகவும், உறுதி கொண்ட மனத்தினனாகவும், பக்திமானாகவும் உள்ள மனிதன் எனக்குப் பிரியமானவன்.*

இகழ்ச்சியையும் புகழ்ச்சியையும் சமமாக எடுத்துக் கொள்பவன், தனது வாக்கினைக் கட்டுப்படுத்தி மௌனமாக இருப்பவன். தனது உடலைப் பேணுவதற்கு மட்டுமே கிடைக்கும் எதிலும் திருப்தியுற்றவன். அதனால்தான் "எதனையும் உடுப்பவன், எதனையும் உண்பவன், எங்கேயும் படுப்பவன் எவனோ அவனையே தேவர்கள் பிராமணன் என்கின்றனர்" (மகா.பா. 12.245.12) என்று கூறப்பட்டுள்ளது.

மேலும் 'உறைவிடமற்றவன்' - நிரந்தரமாக வசிப்பதற்கு வீடில்லாதவன் என்று மற்றொரு ஸ்மிருதியில் கூறப்பட்டுள்ளது. 'உறுதி கொண்ட மனத்தினன்' - உண்மையின் பேர் தெய்வம் என்போம் என்பதிலே உறுதிமிக்கவனாக இருப்பவன். பரம்பொருளிடத்துப் பக்தியுடையவனாக இருப்பவன். அவனே எனக்கு மிகவும் பிரியமானவன்.

உண்மை அறிவில் உறுதிமிக்கவராய், அழியாப் பொருளை வழிபடும் துறிவிகட்கு "எவ்வுயிர்களிடத்தும் பகைமை பாராட்டாதவன்" (12.13) என்பது முதலானக் குணநலன்களை பகவான் கூறி முடிக்கிறார்.

ये तु धर्म्यामृतमिदं यथोक्तं पर्युपासते ।
श्रद्दधाना मत्परमा भक्तास्तेऽतीव मे प्रियाः ॥ २०॥

யே து தர்மாம்ருதம் இதம் யதோக்தம் பர்யுபாஸதே ।
ஶ்ரத்ததானா மத்பரமா பக்தாஸ் தே(அ)தீவ மே ப்ரியா: ॥ 20॥

*எவர்கள் நம்பிக்கையுடையவராய், என்னையே பரமாகக் கொண்ட பக்தர்களாய் தருமத்தினின்று வழுவாத மேலே கூறப்பட்டிருக்கும் அமிர்தத்தினை நன்கு கடைப்பிடிக்கின்றனரோ அவர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள்.*

'எவர்கள்' - துறவிகள். 'தருமத்தினின்று வழுவாத' - தரும நெறிகளிலிருந்து பிறழாதவர்கள் அல்லது மேலே கூறப்பட்டிருக்கும் அமிர்தத்தினை நன்கு கடைப்பிடிப்பவர்கள். அதாவது தர்மநெறி நடக்கும் துறவிகள், 'என்னையே பரமாகக் கொண்டவர்களான' அவர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள். அழிவற்ற ஆத்மாவாகிய நானே அவர்களின் இறுதி லட்சியமாக அல்லது வெல்லற்கரிய லட்சியமாக இருக்கின்றேன். அவர்கள் உண்மை அறிவென்னும் உயர்ந்த பக்தியை புகலிடமாகக் கொண்டவர்கள். ''நான் ஞானிக்கு மிகவும் பிரியமானவன்'' (7.17) என்று குறிப்பிட்டு அதனை விளக்கமாக விரித்துரைத்து ''அவர்கள் எனக்கு மிகவும் பிரியமானவர்கள்'' (12.20) என்று இங்கே நிறைவு செய்யப்படுகின்றது. முக்திக்கு வழிசெய்யும் மேலே கூறப்பட்டிருக்கும் அமிர்தம் போன்ற தர்மநெறிகளைக் கடைப்பிடிப்பவன் பகவானுக்கு மிகவும் பிரியமானவன் ஆகின்றான். ஆதலினால் முக்தியின் மேல் நாட்டங்கொண்டு, விஷ்ணுவிற்கு உகந்த உயர்ந்த நிலையை அடையக் கருதுபவன் அமிர்தம் போன்ற இந்த உயர்ந்த நெறிகளைக் கடுமையாகப் பின்பற்ற வேண்டும் என்பது இச்சுலோகத்தின் சாரமாகும்.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் ''பக்தி யோகம்'' என்னும் பன்னிரண்டாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் பதின்மூன்று

## க்ஷேத்ர-க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்

ஏழாம் அத்தியாயத்தில் இறைவனின் இருவேறு பிரகிருதிகள் (இயற்கைகள்) எடுத்துரைக்கப்பட்டன. ஒன்று முக்குணங்களினாலானது, எட்டு வகைப் பிரிவுகளையுடையது, பிறப்பு இறப்பிற்குக் காரணமாவதால் தாழ்ந்தது. மற்றொன்று உயர்ந்தது, உயிராயிருப்பது, க்ஷேத்திரத்தை (ஜடப்பொருளை) அறிவது, தெய்வீகமானது. இந்த இரண்டு பிரகிருதிகளின் வாயிலாக இறைவன் பிரபஞ்சம் தோன்றுவதற்கும், நிலைத்தற்கும், மறைவதற்கும் காரணமாக இருக்கின்றார். க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்னும் இரண்டு பிரகிருதிகளை எடுத்துரைப்பதின் மூலம் அவற்றையுடைய இறைவனின் உண்மையை நிச்சயிக்கும் வண்ணம் க்ஷேத்திரத்தைப் பற்றிய அத்தியாயம் தொடங்கப்படுகின்றது.

சென்ற அத்தியாயத்தில் "எவ்வுயிரிடத்தும் பகைமை பாராட்டாதவன்" (12-13) என்று தொடங்கி அத்தியாயத்தின் இறுதிவரை மெய்யறிவுள்ள துறவிகட்கு அவர்கள் பின்பற்ற வேண்டிய அறநெறிகள் கூறப்பட்டன.

**கேள்வி:** எத்தகைய மெய்யறிவுடையவர்கள் மேலே கூறப்பட்டுள்ள அறநெறிகளைக் கடைப்பிடிப்பதால் இறைவனுக்கு மிகவும் பிரியமானவர்களாகின்றார்கள்?

**பதில்:** இதனையும் விளக்கும் பொருட்டே இந்த அத்தியாயம் தொடங்கப் பெறுகின்றது.

மேலும், முக்குணங்களினாலானதும், உடல்களாகவும் புலன்களாகவும், புலனுகர்ச்சிப் பொருட்களாகவும் மாறுகின்ற இப்பிரகிருதியானது, தனிப்பட்ட ஆத்மா இன்பம் துய்த்தல், முக்தியடைதல் என்னும் பயன்களை அடைவதற்கு உதவும் முகத்தான் உடலாகவும், புலன்களாகவும் ஒருங்கிணைக்கப்படுகின்றது. இவ்வாறு ஒருங்கிணைக்கப்பட்டதே இவ்வுடலாகும்.

**श्रीभगवानुवाच**

**इदं शरीरं कौन्तेय क्षेत्रमित्यभिधीयते**
**एतद्यो वेत्ति तं प्राहुः क्षेत्रज्ञ इति तद्विदः ॥१॥**

*பகவான் உவாச*

**இதம் ஶரீரம் கௌந்தேய க்ஷேத்ரம் இதி அபிதீயதே ।**
**ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: ॥ 1॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

*குந்தி மைந்த! இது (அதாவது) இந்த உடல் 'க்ஷேத்ரம்' என்று கூறப்படுகிறது. இதனை அறிந்தவனை 'க்ஷேத்ரக்ஞன்' என்று அறிந்தவர்கள் கூறுவர்.*

'இது' என்னும் சர்வநாமத்தால் கூறப்பட்டது 'இந்த உடலினைக்' குறிப்பிடுகின்றது. குந்தி மைந்த! (இந்த உடல்) தீமையினின்று பாதுகாக்கப்படுவதாலும், அழிவதனாலும், தேய்வதினாலும், வயலில் நெல் போல இதில் கர்மத்தின் பயன் விளைவதாலும், க்ஷேத்ரம் என்று கூறப்படுகின்றது. 'இதி' என்னும் சமஸ்கிருதச் சொல் 'என்று' என்னும் பொருளில் பயன்படுத்தப்படுகின்றது. இந்த உடலை உச்சிமுதல் உள்ளங்கால் வரை சுய அறிவினாலோ அல்லது உபதேச அறிவினாலோ அறிபவனை 'க்ஷேத்ரக்ஞன்' என்று கூறுகின்றனர். யாவர்? அந்த க்ஷேத்ரத்தையும், க்ஷேத்ரக்ஞனையும் அறிந்தவர்கள். முன்பு போலவே இப்போதும் 'இதி' என்னும் சமஸ்கிருதச் சொல் 'என்று' என்னும் பொருளிலேயே பயன்படுத்தப்படுகின்றது.

இங்கே இவ்வாறு குறிப்பிடப்படும் க்ஷேத்ரத்தையும், க்ஷேத்ரக் ஞனையும் இந்த அளவு அறிவினாலேயே அறிந்து கொள்ள முடியுமா? என்றால் 'முடியாது' என்பதே பதிலாகும்.

**क्षेत्रज्ञं चापि मां विद्धि सर्वक्षेत्रेषु भारत ।**
**क्षेत्रक्षेत्रज्ञयोर्ज्ञानं यत्तज्ज्ञानं मतं मम ॥२॥**

**க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத ।**
**க்ஷேத்ரக்ஷேத்ரஜ்ஞயோர்ஜ்ஞானம் யத்தஜ்ஞானம் மதம் மம ॥ 2॥**

*பாரதா! எல்லா க்ஷேத்ரங்களிலும் க்ஷேத்ரக்ஞன் 'நான்' என்று அறிவாயாக. க்ஷேத்ரத்தையும், க்ஷேத்ரக்ஞனையும் பற்றிய ஞானம் எதுவோ அதுவே ஞானம் என்பது எனது கொள்கை.*

ஜனன மரண பாதிப்பற்ற பரமேசுவரனாகிய நானே க்ஷேத்ரக்ஞன் என்றறிவாயாக. இதன் கருத்து என்னவெனில், பிரம்மதேவன் முதல் சிறு புல்வரையிலான எண்ணற்ற க்ஷேத்திரங்களில் பல்வேறு குணங்களினால் பலவாறாக வேறுபட்டிருக்கும் க்ஷேத்ரக்ஞன் குணங்களினால் வேறுபடாதவனாகவும், 'உள்ளது' 'இல்லது' போன்ற சொற்களுக்கும் நினைப்பிற்கும் எட்டாதவனாகவும் இருக்கின்றான் என்பதைத் தெரிந்து கொள் என்பதாகும்.

ஓ, பரத குலத் தோன்றலே! க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன், இறைவன் இவர்களின் உண்மைத் தன்மையைத் தவிர, அறிய வேண்டியது இங்கு வேறொன்றும் எஞ்சியிருப்பதில்லை. ஆதலினால் அறியப்படும் பொருள்களாகிய க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞர்கள் போன்றோர் எந்த அறிவினால் அறியப்படுகின்றார்களோ அந்த அறிவே மெய்யறிவு என்பது, எங்கும் நிறைந்திருக்கும் ஈசுவரனாகிய எனது கொள்கையாகும்.

மறுப்பு: அவ்வாறெனில் எல்லா க்ஷேத்திரங்களிலும் இறைவன் ஒருவனைத் தவிர அனுபவிப்பவன் வேறொருவன் இல்லையென்றால் அப்போது இறைவன் சம்சாரியாகிவிடுவான் அல்லது இறைவனைத் தவிர வேறு சம்சாரிகள் இல்லையென்றாலோ சம்சாரமாகிய லௌகீக வாழ்க்கையே இல்லையென்றாகி விடும். இவையிரண்டுமே ஏற்கத் தக்கவையன்று. ஏனெனில் அப்பொழுது பந்தமும், அவற்றிலிருந்து விடுதலை பெறும் முக்தியும் அவற்றிற்கானக் காரணங்களையும் எடுத்தியம்பும் சாத்திர நூல்கள் பயனற்றதாகிவிடும். அனுபவ அறிவுக்கும் இது விரோதமாகும். மேலும் உலகில் பல்வேறு வேற்றுமைகள் காணப்படுவதாலேயே புண்ணிய பாவங்களாலாகும் லௌகீக வாழ்க்கையானது அனுமானிக்கப்படுகின்றது. ஒருவனது ஆத்மாவும், இறைவனும் ஒன்று என்னும்போது இவையெல்லாம் பொருந்தாது.

பதில்: அவ்வாறன்று. அறிவுக்கும் அறியாமைக்கும் உள்ள வேறுபாட்டினால் இது பொருத்தமானதேயாகும். 'அறியாமையென்றும், அறிவு என்றும் அறியப்படும் இரண்டும் ஒன்றுக்கொன்று நேர் விரோத மானவையாகும். அவையிரண்டும் எதிர் எதிர்த் திசைகளைச் சுட்டுவன.' (கட.உ-2.4) அவ்வாறே அறிவு மற்றும் அறியாமையின் பயன்களான முக்தியும், இன்பம் துய்த்தலும் கூட ஒன்றுக்கொன்று மாறுபட்டவைதான். அறிவின் இலக்கு முக்தியாகும். அறியாமையின் இலக்கு இன்பம் துய்த்தலாகும். (கட.உ-2.2) வியாசதேவரும் பின்வருமாறு கூறுகின்றார். 'இப்போது இந்த இரண்டுவழிகளே உள்ளன' 'இந்த இரண்டு வழிகள் மட்டுமே உள்ளன' (மகா.பா.சா.ப.240.6) அதுபோல் இங்கு பகவத் கீதையிலும் இரண்டு வழிகளே கூறப்படுகின்றன. அறியாமையினை அதன் செயல்களுடன் சேர்த்து நீக்க வேண்டுமென்று சுருதி, ஸ்மிருதி மற்றும் யுக்தியினால் தெரியவருகின்றது. சுருதிகள்,

'இகத்திலே அதனை ஒருவன் உணர்ந்து கொண்டானென்றால் அவனுக்கு உண்மை உறுதி செய்யப்படுகின்றது. அவ்வாறு உணர்ந்து கொள்ளாதவனுக்கு அழிவு காத்திருக்கின்றது' (கே.உ-2-5)

'அதனை இவ்வாறு அறிந்தவன் இங்கே அமர நிலை எய்துகிறான்; கடைத்தேறுதற்கு வேறு வழியில்லை.' (புருஷஸூக்தம்; தை.ஆ.3.12; சுவே.3.8)

'அறிந்தவனுக்கு அச்சமில்லை' (தை.உ-2.4) கூறுகின்றன.

இதற்கு நேர்மாறாக அஞ்ஞானிகளைப் பற்றி அவை,

'அறியாதவன் அச்சப்படுகிறான்' (தை.உ-2.7)

'அறியாமையில் உழல்கின்றனர்' (கட.உ-2.5)

'பிரம்மத்தை அறிந்தவன் பிரம்மமாகிறான்' (மு.உ.3.2.9)

(பிற தெய்வத்தை வழிபடுபவன்) "அத்தெய்வம் வேறு நான் வேறு என்று கருதுபவன், தான் தேவர்களுக்கு ஒரு மிருகத்தைப் போன்றவன் என்பதை அறிவதில்லை' என்றும் கூறுகின்றன. (பிரு.1.4.10)

மேலும் ஆத்மாவை அறிந்தவன் 'அவன் இவையெல்லாமாக (பிரபஞ்சமாக) ஆகின்றான் (பிரு.1.4.10) என்றும், 'ஒருவன் வானத்தைத் தோலாகச் சுருட்டினாலும், ஆத்மாவை அறியாமல் அவனுக்குத் துன்பம் நீங்காது' (சுவே.6.20) என்றும் சுருதிகள் கூறுகின்றன. இது போன்ற சுருதிகள் ஆயிரக்கணக்கில் உள்ளன.

அதுபோல் ஸ்மிருதிகளும் பின்வருமாறு கூறுகின்றன: 'ஞானம் அஞ்ஞானத்தினால் மூடுண்டு கிடக்கிறது. அதனால் உயிர்கள் மயங்குகின்றன' (ப.கீ.5.15)

'எவர்களுடைய மனம் சமநிலையில் இருக்கிறதோ, அவர்களின் பிறப்பு இங்கேயே வெற்றி கொள்ளப்படுகின்றது' (ப.கீ.5.19)

'எங்கும் ஒரே பிரம்மத்தைக் காண்பவன் பரகதியடைகிறான்' (ப.கீ.13.28)

யுக்திக்கும் கூட ஏற்புடையதேயாகும். 'பாம்புகளையும் முட்களையும் கிணறுகளையும் அறிந்த மனிதர்கள் அவற்றினின்று விலகிச் செல்கின்றனர். சிலர் அறியாமையினால் அவற்றுள் வீழ்கின்றனர். அதனால் ஞானத்தினின்று உண்டாகும் பயன் எத்தகையது என்பதைத் தெரிந்து கொள். (ம.பா.சா.201.16) அவ்வாறே உடலை ஆத்மாவாகக் கருதும் அஞ்ஞானி விருப்பு, வெறுப்புக்களினால் தூண்டப்பட்டு நல்வினை, தீவினைகளைச் செய்து அவற்றின் காரணமாகப் பிறப்பு இறப்பிற்கு ஆட்படுகிறான் என்றும் அறியப்படுகின்றது. உடலினின்று ஆத்மா வேறானது என்று அறிபவர்கள் விருப்பு வெறுப்புக்களைத் துறப்பதினால் நல்வினை, தீவினைகள் அற்றுப் போக அவர்கள் முக்தியடைகின்றனர். யுக்தியினாலும் ஒருவனால் இதனை மறுக்க முடியாது. இவ்வாறிருப்பதால், உண்மையில் க்ஷேத்ரக்ஞன் இறைவனாகவே இருந்த போதிலும், அறியாமையில் பிறக்கும் குணங்களையுடைய ஒரு சம்சாரி போலத் தோன்றுகிறான். இது ஆத்மா, உடலாக அடையாளம் காணப்படுவது போன்றதாகும். ஒரு தூணைப் பார்த்து மனிதன் என நினைப்பது போல ஆத்மாவற்ற உடலை அறியாமையினால் ஆத்மாவாகக் கருதுவது உயிர்களிடத்தில் சர்வசாதாரணமாகக் காணப்படுகின்றது. அறியாமையின் காரணமாகத் தூணை மனிதன் என்று உறுதியாகக் கருதினும், மனிதனின் குணங்கள் தூணிடம் காணப்படுவதில்லை அதுபோல, தூணின் குணங்கள் மனிதனிடம் இருப்பதில்லை. ஆகையினால் இன்பம், துன்பம், மயக்கம் போன்றவை ஆத்மாவுக்குப் பொருந்தாது. மூப்பு, இறப்புப் போல இவையெல்லாம் அறியாமையில் விளைபவையாகும்.

மறுப்பு: 'இல்லை, இந்த உவமை பொருத்தமுடையதன்று. உண்மையில் தூணும், மனிதனும் அறியப்படும் பொருள்களாகும். அறியும் பொருளன்றோ அறியாமையின் மூலம் ஒன்றில் மற்றொன்றை ஏற்றுகின்றது. இதற்குமாறாக உடலையும், ஆத்மாவையும் எடுத்துக் கொண்டால் இங்கு ஒன்றில் மற்றொன்றை ஏற்றுவது என்பது அறியும் பொருளுக்கும் அறியப்படும் பொருளுக்குமிடையில் நடைபெறுகின்றது. அதனால் மேலே கூறப்பட்டிருக்கும் உவமை பொருந்தாது. ஆதலினால் உடலின் தன்மைகள் அறியப்படும் பொருளைச் சார்ந்ததாயினும் அறியும் பொருளாகிய ஆத்மாவைச் சேர்ந்தவையாகக் கூறப்படுகின்றது.

பதில்: இல்லை; அப்போது ஆத்மாவிற்கு உணர்ச்சியின்மை போன்றத் தன்மைகள் வரவேண்டும். அறியப்படும் பொருளான உடம்பாகிய க்ஷேத்ரத்தின் இன்ப துன்பங்கள், மயக்கம், விருப்பு வெறுப்புக்கள் போன்ற தன்மைகள் அறியும் பொருளான ஆத்மாவிற்கு உண்டு என்றால், ''அறியப்படும் பொருளான க்ஷேத்திரத்தினுடைய சில தன்மைகள், அறியாமையினால் ஏற்றப்பட்டு ஆத்மாவுக்கு இருக்கின்றனவேயன்றி மூப்பு, பிறப்பு முதலியவை இல்லை'' என்னும் வேறுபாட்டிற்குக் காரணம் கூறவேண்டும். க்ஷேத்திரத்தின் தன்மைகள் ஆத்மாவுக்கு இல்லை என்பதற்கு அனுமானம் உள்ளது. க்ஷேத்திரத்தின் தன்மைகள் ஆத்மாவின் மீது அறியாமையினால் மூப்பு, இறப்பு என்பது போல ஏற்றப்பட்டுள்ளது என்பதே அந்த அனுமானம். மேலும் அவை தள்ளப்படுபவையாகவும், கொள்ளப்படுபவையாகவும் இருக்கின்றன. இவ்வாறிருப்பதினால் அறியப்படு பொருளுக்குரியதான, செய்வதும், அனுபவிப்பதுமாகிய வாழ்க்கையானது அறியாமையினால் ஆத்மாவின் மீது ஏற்றப்படுகின்றது. அதனால் அறியும் பொருளுக்கு எந்தவிதாமனப் பாதிப்பும் இல்லை. இது அறியாத பாலர்களால் ஏற்றப்படும் உட்குழிவு, அழுக்கு முதலியவற்றால் ஆகாயம் பாதிக்கப்படாதது போன்றதாகும். அதனால் பகவான் எல்லா க்ஷேத்திரங்களிலும் இருந்தாலும், லௌகீக வாழ்க்கையின் நாற்றம் கூட, க்ஷேத்ரக்ஞனான அவர்மேல் படிவதில்லை. அறியாமையினால் ஒருவன் மீது ஏற்றப்படும் தன்மைகளால் அவன் நன்மையோ, அல்லது தீமையோ அடைவது உலகில் ஓர் புறத்தும் காணப்படுவதில்லை.

அடுத்து, கொடுக்கப்பட்டுள்ள உவமை பொருத்தமற்றது என்பது. இதுவும் சரியன்று.

மறுப்பு: எப்படி?

பதில்: எப்படியெனில், உவமான உவமேயத்திற்கிடையே பொதுத் தன்மையாகக் கூறப்பட்டது, அறியாமையினால் ஏற்றப்படுகிறது என்பதுவேயாகும். இப்பொதுத்தன்மை இரண்டிற்கும் பொருந்துவதாகும். எனினும் உனது கூற்றான அறியும் பொருளினிடத்து இந்த உவமை பொருந்தாது என்பதுவும், மூப்பு பிறப்பு முதலிய எடுத்துக் காட்டுக்களால் செல்லாததாக்கப்பட்டது.

மறுப்பு: அறியாமையுடைமையினால் க்ஷேத்ரக்ஞன் சம்சாரியாவானா?

பதில்: இல்லை. அறியாமை தமஸிலிருந்து உண்டாகின்றது. (தமஸ் என்றால் தமோ குணமாகும்) அறியாமையானது மறைக்கும் இயல்புடையது. ஒன்றை வேறொன்றாக உணர்த்துவது ஐயந்தருவது, உணரவிடாது தடுப்பது, பகுத்தறிவுப் பகலவன் தோன்றும் பொழுது அறியாமை இருள் அற்றுப் போகின்றது. மேலும் மறைக்கும் இயல்புடைய தமோ குணத்தில் பார்வை இன்மை முதலிய குற்றங்கள் இருப்பதினால், உணர்வின்மை போன்ற மூன்று வகையான அறியாமைகள் காணப்படுகின்றன.

மறுப்பு: அப்படியென்றால் அறியும் பொருளினுடைய தன்மைதான் அறியாமையா?

பதில்: அப்படியன்று. பார்வையின்மை முதலிய குற்றங்கள் புலனாகியக் கண்ணில் காணப்படுகின்றன.

மறுப்பின் விளக்கம்: அறியும் பொருளின் தன்மை அறியாமையாகும். அறியாமை உடைமையினால் க்ஷேத்ரக்ஞன் ஒரு சம்சாரியாவான். ஆகையினால் க்ஷேத்ரக்ஞன் இறைவனே, சம்சாரி அல்லன், என்று கூறுவது பொருந்தாது.

பதிலின் விளக்கம்: இம்மறுப்புத் தவறானது. பார்வையின்மை முதலிய குற்றம் கண்ணிற்குரியதாகும். அதனால் பிழையுடை உணர்வோ அல்லது அதன் காரணமாக உண்டாகும் பார்வையின்மை போன்ற குற்றங்களோ உணர்பவனுக்குரியதல்ல. கண்ணின் பார்வையின்மை உணர்பவனுக்குரியதல்ல. அதுபோல் சிகிச்சையினால் பார்வையின்மை நீங்கிப் பார்வை கிடைத்தாலும் அதுவும் உணர்பவனுக்குரியதல்ல. அதுபோல் உணர்வின்மை, பிழைபட உணர்தல், ஐயம் போன்றவையும் அவற்றின் காரணங்களும் புலன்களைச் சார்ந்தவையே அன்றி க்ஷேத்ரக்ஞனாகிய உணர்பவனைச் சார்ந்தவையன்று. மேலும் அவை உணரப்படும் பொருள்களானதினால் விளக்கிற்கு ஒளிபோல உணர்பவனின் தன்மைகளாக மாட்டா. உணரப்படும் பொருள்கள் என்பதினால் அவை அவற்றைத் தவிர வேறொன்றினால் உணரப்படும் பொருள்கள் என்பதாம். மேலும் எல்லாப் புலன்களும் இல்லாமற் போகும் முக்திநிலையில் அறியாமை போன்ற குற்றங்கள் உண்டு என்பதை எந்தவொரு தத்துவவாதியும் ஏற்றுக் கொள்ளவில்லை. அவை (குற்றங்கள்) தீயின் வெம்மை போல க்ஷேத்ரக்ஞனான ஆத்மாவைச் சேர்ந்தவையாக இருப்பின், அவை ஒருபோதும் பிரிந்து போகமாட்டா. மேலும் மாற்றமற்றதாய், வானம் போல எங்கும் பரந்திருப்பதாய் உருவமற்றதான ஆத்மாவிற்கு ஒன்றோடு கூடுதலும், பிரிதலும் பொருந்தாது. அதனால்தான் க்ஷேத்ரக்ஞன் இறைவன் என்று கூறப்பட்டது. பகவானும் 'ஆதியின்மையால், குணமின்மையால்' (13-31) என்று கூறியுள்ளதைக் காண்க.

மறுப்பு : அப்படி சம்சாரமும், சம்சாரத்தை உடையவனும் இல்லையென்றால் சாத்திரங்கள் பயனற்றவை என்றொரு குற்றம் உண்டாகுமே.

பதில் : அவ்வாறன்று இது (குற்றம்) எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. ஆத்மாவை நம்பும் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்ட ஒரு குற்றம் ஒருவனால் மட்டும் நீக்குதற்குரியுதாகாது.

மறுப்பு : இது எங்ஙனம் எல்லோராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டது?

பதில் : முக்திபெற்ற ஆத்மாக்களுக்கு சம்சாரமும, சம்சாரத் தன்மையுள்ள செயல்களும் இல்லை என்பது ஆத்மாவை நம்பும் அனைவராலும் ஏற்றுக் கொள்ளப்பட்டிருக்கிறது. இக்காரணத்தினால் அவர்களுக்கு சாத்திரம் பயனற்றது என்னும் குற்றம் உண்டாவதில்லை. எங்களைப் பொருத்தமட்டில் க்ஷேத்ரக்ஞர்கள் இறைவனுடன் ஒன்று கலக்கும் நிலையில் சாத்திரங்கள் பயனற்றவையாக இருக்கின்றன. அறியாமை இருக்கும்பொழுது சாத்திரங்கள் பயனுடையவையாக இருக்கின்றன. துவைதிகளும் இவ்வாறே பந்தப்பட்ட நிலையில் சாத்திரங்கள் பயனுடையவை என்றும், முக்திநிலையில் அவை பயனற்றவை என்றும் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

மறுப்பு : துவைதிகள், ஆத்மாவுக்குப் பந்தமும், முக்தியும் உண்டு என்பதில் உறுதியுடையவர்களாவர். ஆகவே, தள்ள வேண்டியதும், கொள்ள வேண்டியதும், அவற்றிற்கானக் கருவிகளும் இருப்பதினால் சாத்திரங்கள் பயனுடையவையாகும். இதற்கு மாறாக அத்வைதிகளுக்கோ, துவைதம் உண்மையன்று, ஆத்மா பந்தப்படுவது அறியாமையினால் அதனால் அதுவும் உண்மையன்று. எனவே சாத்திரங்கள் பயனற்றவையாகும்.

பதில் : அப்படியன்று. ஆத்மாவுக்குப் பலநிலைகள் இருக்கின்றன என்பது பொருத்தமற்றதாகும். ஆத்மாவுக்கு அவ்வாறு பந்தப்படுதலும் முக்கியடைதலும் உண்மையில் இருக்குமென்றால் அவை ஒருங்கே இருத்தல் வேண்டும் அல்லது ஒன்றன்பின் ஒன்றாக இருத்தல் வேண்டும். மேலும் அவையிரண்டும் ஒருங்கே இருப்பதற்கு வாய்ப்பே இல்லை. ஏனென்றால், நிற்றலும், நடத்தலும் ஒரே சமயத்தில் நிகழாததுபோல் பந்தப்படுதலும், முக்தியடைதலும் ஒருசேர நடைபெறாது. சரி, இரண்டும் ஒன்றன்பின் ஒன்றாகவும் காரணமின்றியும் நிகழுமென்றால் அவை இயல்பாக இல்லாமையினால் முக்தி என்பது இறுதியில் உண்மையானதல்ல என்றாகிவிடும். சரி, அப்படியே காரணத்தோடு நிகழுமென்றால் அதுவும் இயல்பாக இல்லாமையினால் உண்மையல்ல என்றேயாகும்.

இக்கருத்து பந்த நிலையும், முக்தி நிலையும் உண்மையானவையே என்பதற்கு எதிரானதாகும்.

மேலும் பந்தமுக்தி நிலைகள் முன்பின் விளைவதாக நாம் எடுத்துக்கொண்டால், பந்த நிலையை ஆதியில் உள்ளதாகக் கொள்ள வேண்டும். அப்போது அது தொடக்கமில்லாததும் முடிவுள்ளதுமாகும். அப்படியாயின் இது பிரமாணத்திற்கு எதிரானதாகும். அதுபோல் முக்திநிலையை ஆரம்பம் உள்ளதும் முடிவற்றதாகவும் ஏற்றுக்கொண்டால்

இதுவும் பிரமாணத்திற்கு எதிரானதேயாகும் ("ஆதியில்லாப் பொருளுக்கு அழிவு இல்லை, ஆதியுள்ள பொருளுக்கு அழிவு உண்டு என்பது பிரமாணம்). மற்றும் ஒரு பொருள் ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலையினை அடைகின்றதென்றால் அதனை நித்தியப் பொருளென்று நிறுவ முடியாது. அடுத்து நித்தியம் என்னும் குற்றத்திலிருந்து தப்பித்துக் கொள்வதற்காக பந்த முக்தி நிலைகளுக்கிடையில் வேறுபாடு இல்லை என்று கொண்டால் அப்போது சாத்திரங்கள் பயனற்றவை என்னும் குற்றத்தினை துவைதிகளாலும் தவிர்க்க முடியாது. இவ்வாறு குற்றமானது பொதுவாக இருப்பதினால் அது அத்வைதிகளால் மட்டுமே தவிர்க்கப்பட வேண்டியதாகாது.

சாத்திரங்கள் பயனற்றவையாக ஒருபோதும் ஆவதில்லை. ஏனென்றால், சாத்திரங்கள் அஞ்ஞானிகளுக்குத் தேவையானவை என்பது அனைவரும் அறிந்த ஒன்றே. அஞ்ஞானிகள் பயனும் காரணமுமாகிய ஆத்மா அல்லாத பொருட்களிலே ஆத்மாவைக் காண்கின்றனர். ஞானிகளோ பயன் காரணம் என்பவற்றிலிருந்து வேறாக ஆத்மாவைக் காண்கின்றனர். (பயன் - அனுபவிப்பவன் தன்மை, காரணம் - கர்த்தாவின் தன்மை. அல்லது காரணம் - கர்மம், பயன் - கர்மத்தின் பயனாக உண்டாகும் ஓர் உடல். அஞ்ஞானி "நான் அனுபவிப்பவன், நான் செய்பவன், நான் மனிதன்" என ஆத்மா அல்லாத பொருட்களில் ஆத்மாவைக் காண்கிறான். ஞானியோ அவற்றினின்று வேறாக ஆத்மாவைக் காண்கிறான்.) மதிமயங்கியுள்ள பித்தன் கூட நீரும் நெருப்பும் இருளும் ஒளியும் ஒன்றெனக் கொள்வதில்லை. அப்படியென்றால் பகுத்தறிவுள்ளவனைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? அதனால் கட்டளைகள் மற்றும் தடைகள் உடைய சாத்திரங்கள் பயன், காரணம் என்பவற்றிலிருந்து ஆத்மாவை வேறாகக் காண்பவனுக்கு தேவையற்றவையாகும். "தேவதத்தா! நீ இதனைச் செய்" என்று ஒருவன் கட்டளையிட அங்கு நின்று கொண்டிருந்த விஷ்ணுமித்திரன் என்பவன் அக்கட்டளையினைக் கேட்டுக் கொண்டிருந்த போதிலும் அது தனக்கிடப்பட்டதாகக் கொள்வதில்லை. ஆனால் கட்டளையிடப்பட்டவனைத் தன்னிலிருந்து வேறாக ஒருவன் காணவில்லையென்றால் அப்போது அவன் அக்கட்டளைத் தனக்கிடப்பட்டதாகக் கருதக் கூடும். இவ்வுண்மை பயன் மற்றும் காரணத்திற்கும் கூடப் பொருந்துவதாகும்.

மறுப்பு : அவ்வாறெனில், பயன், காரணம், என்பவற்றிலிருந்து ஆத்மா வேறானது என்பதை உணர்ந்தபின்னும் உடலுக்கும், ஆத்மாவுக்கும் அறியாமையினால் உண்டாகும் தொடர்பை நோக்குகையில், "வேண்டிய பயனைத்தரும் தொழிலில் ஈடுபடவும், வேண்டாத பயனைத் தரும் தொழிலில் ஈடுபடாதிருக்கவும் நான் விதிக்கப்பட்டிருக்கிறேன்" என்னும் சாத்திரங்களின் கூற்று ஞானிக்கும் கூடப் பொருந்துவதாகும். உதாரணமாக தந்தையும், தனயனும் தாம் வேறு வேறு என்று அறிந்திருந்தாலும் ஒருவனுக்குக் கட்டளையாகவும், தடையாகவும் விதிக்கப்பட்டதை மற்றொருவன் ஏற்றுக் கொள்வது போன்றதாகும். (ஒருவன் நோயுற்றப் பொழுது அவன் செய்ய வேண்டிய சந்தியாவந்தனம், போன்ற நியம நிஷ்டைகளை அவன் மைந்தன் செய்ய வேண்டுமென்று பி.உ. 1.5.17 கூறுகிறது).

பதில் : அவ்வாறன்று. பயன், காரணம் என்பவற்றில் ஆத்மாவைக் காண்பது அவற்றினின்று ஆத்மா வேறானது என்னும் ஞானம் வருவதற்கு முன்புதான் சாத்தியமாகும். சாத்திரங்கள் கூறும் கட்டளைகளையும் கட்டுப்பாடுகளையும் கடைபிடிப்பவனே பயன் காரணம் என்பவற்றிறினின்று ஆத்மா வேறானது என்று உணர்கிறான். அதற்கு முன்பு உணர்வதில்லை (வே. சூ. 3-4-26,27). ஆகையினால், சாத்திரங்கள் கூறும் கட்டளைகளும், கட்டுப்பாடுகளும் அஞ்ஞானிகளுக்கு உரியவையாகும்.

மறுப்பு : ஆத்மாவை வேறாகக் காண்பவர்களும், உடலையே ஆத்மாவாகக் காண்பவர்களும், "சொர்க்கம் வேண்டுவோர், யாகம் செய்க," "நஞ்சு கலந்த உணவை உண்ணற்க" போன்ற கட்டளைகளையும், தடைகளையும் பின்பற்றுவதில்லை. இவ்வாறு பின்பற்றுவோன் எவனும் இல்லையாதலால் சாத்திரங்கள் பயனற்றவையாகும்.

பதில் : இல்லை. காரணம், சாத்திரத்திற்கு இணங்கவே கட்டளைகளை நிறைவேற்றலும், தடைகளைத் தவிர்த்தலும் நடைபெறுகின்றன. பகவானையும், க்ஷேத்ரக்ஞனையும் ஒன்றாகக் காண்பவன், அதாவது பிரம்மத்தை உணர்ந்தவன் செயல்களில் ஈடுபடுவதில்லை. அதுபோல் ஆத்மாவை மறுப்பவனும் "மறுமை இல்லை" என்று நம்புவதால் செயல்களில் ஈடுபடமாட்டான். ஆனால், சாத்திரங்களின் வழிநடப்பவன், கட்டளைகளையும், தடைகளையும் உடைய சாத்திரக் கல்வியின் அடிப்படையில் ஆத்மாவை அறிந்து அதனை நேரில் காணாதவனாய் கர்மப் பயனிலே பற்று வைத்து நம்பிக்கையுடன் செயல்களில் ஈடுபடுகிறான். இவ் உண்மை நாமனைவரும் அறிந்ததே. அதனால் சாத்திரங்கள் பயனின்றிப் போவதில்லை.

மறுப்பு : மெய்யறிவுடையவர்கள் தடைகளைத் தவிர்த்திருப்பதைக் கண்டு அவர்களைப் பின்பற்றுவோரும் அவ்வாறே தவிர்ப்பார்களெனில் அப்போது சாத்திரங்கள் பயனற்றவைதானே?

பதில் : இல்லை. மெய்யறிவு ஒருசிலருக்கே வாய்க்குமாதலின், இப்போது இருப்பது போன்றே பல்லோருள் ஒருவனே உண்மையான மெய்யறிவு உடையவனாக இருப்பான். அன்றியும், மூடர்கள் மெய்யறி வுடையவனைப் பின்பற்றமாட்டார்கள்; ஏனெனில் செய்கையானது ஆசை முதலிய குற்றங்கள் உடையதாகும். மேலும் அவர்கள் சூனியம் வைத்தல் போன்ற மாந்திரீக வேலைகளிலும் ஈடுபடக் காண்கின்றோம். மற்றும் செய்கை இயற்கையானதாகும். இதனையே பகவத்கீதையும், "ஆனால் ஒருவனது இயற்கையே செயல்படுகின்றது" (ப.கீ. 5-14) என்று உறுதி செய்கின்றது.

ஆகவே, சம்சாரமானது அவித்யையை மட்டுமே அடிப்படையாகக் கொண்டும், புற உலகம் தனக்கு எவ்வாறு தோன்றுகின்றதோ அவ்வாறே அதனைக் காணும் அஞ்ஞானிக்கு உரியதாகும். அவித்யையும், அதன் பாதிப்பும் க்ஷேத்ரக்ஞனுக்கு இல்லை. மேலும் பொய்யறிவு மெய்ப் பொருளைத் தாக்க முடியாது. இதற்கு உதாரணம் வறண்ட பாலை நிலத்தை கானல் நீர் நனைத்து சேறாக்க முடியாது என்பதாகும். அதுபோல் அவித்யை க்ஷேத்ரக்ஞனை

ஒருபோதும் பாதிக்க முடியாது. அதனால்தான் "நானே க்ஷேத்ரக்ஞன் என்பதை அறிவாயாக" (13-2) என்றும், "ஞானம் அஞ்ஞானத்தால் மூடப்பட்டிருக்கின்றது" (5-15) என்றும் பகவான் அருளிச் செய்தார்.

மறுப்பு : ஆனால், "நான் இன்னார், இது என்னுடையது மட்டுமே" என்று சம்சாரிகளிடம் காணப்படும் கருத்து, அறிஞர்களிடமும் காணப்படுகின்றதே. இதன் காரணம் என்ன?

பதில் : கேட்பாயாக! அவர்கள் கற்றக் கல்வி க்ஷேத்ரத்தையே (உடலையே) ஆத்மாவாகக் காணச் செய்கின்றது. ஆனால் மாறுதலற்ற க்ஷேத்ரக்ஞனை உணர்ந்து கொண்டால் அவர்கள் லௌகீக இன்பத்தை நாடுவதோ, இது எனது என்று ஒரு செயலுக்கு உரிமை கொண்டாடுவதோ இல்லை. போகமும், கர்மமும் மாறுதலுக்குரியவையாகும். இதன் காரணமாகத்தான் கர்மப்பலனை நாடி அஞ்ஞானி செயல்படுகிறான். இதற்கு மாறாக மாறுதலற்ற ஆத்மாவை உணர்ந்தவனும், கர்மப்பலனில் பற்றற்றவனுமான ஞானி செயல்களில் ஈடுபடுவதில்லை. அவனது உடலும், புலன்களும் செயல்களை நிறுத்திக் கொள்ளும்பொழுது அவன் செயல்களில் ஈடுபடாதவன் என்று கூறப்படுகிறான்.

இனி மற்றொரு விளக்கமும் கூறப்படுகிறது. அது பின்வருமாறு : "க்ஷேத்ரக்ஞன் என்பவன் இறைவனே. அவனிடமிருந்து க்ஷேத்ரம் வேறானது. ஆனால் அதேசமயம் அவனால் அறியப்படுவது. நானோ பிறப்பு இறப்பிற்கு உரியவன். இன்ப துன்பங்கள் உடையவன். சம்சாரத்தினின்று விடுதலை பெறுவதற்காக க்ஷேத்ரத்தையும், க்ஷேத்ரக்ஞனையும் அறிந்து தியானத்தினால் க்ஷேத்ரக்ஞனாகிய இறைவனை உணர்ந்து அவனோடு இணைவதே எனது கடமையாகும்". இவ்வாறு அறிபவனும், இவ்வாறு உபதேசிப்பவனும் உண்மையான க்ஷேத்ரக்ஞன் அல்லன்.

இவ்வாறு எவன் பந்தப்படுதலையும், முக்தியடைதலையும் பற்றி விளக்கும் சாத்திரத்தைப் பொருளுடையதாகச் செய்வேன் என்று கருதுகின்றானோ அவன் கற்றவர்களுள் கடையனாவான். ஆத்மாவைக் கொல்பவனாவான். சாத்திரங்களுக்குப் பொருளுரைக்கும் பரம்பரையினரின் தொடர்பில்லாததினால், அவற்றில் சொல்லப்பட்டிருப்பதற்குத் தவறான பொருள் உரைப்பான். அவற்றில் சொல்லப்படாதவற்றைச் சொன்னதாகக் கற்பிப்பான். அதன் மூலம் தானும் மயங்கி மற்றவர்களையும் மயக்கத்தில் ஆழ்த்துவான். எனவே பரம்பரையாகச் சொல்லப்பட்டுவரும் பொருள் விளக்கத்தை அறியாதவன் எல்லா வேதங்களையும் கற்றவனாயினும் அவனை மூடனெனப் புறந்தள்ளுக.

இறைவனும் க்ஷேத்ரக்ஞனும் ஒன்று என்று கொண்டால் பின்னர் இறைவன் சம்சாரி என்றாகிவிடும். அஃதன்றி க்ஷேத்ரக்ஞர்களும், இறைவனும் ஒன்று என்று கொண்டால் சம்சாரி இல்லாமையினால் சம்சாரம் இல்லையென்றாகிவிடும். இந்த இரு மறுப்புக்களும் அறிவும், அறியாமையும் வெவ்வேறு தன்மையுடையன என்பதை ஒத்துக் கொள்வதின் மூலம் மறுதலிக்கப்படுகின்றன.

மறுப்பு : எப்படி?

பதில் : அறியாமையினால் கற்பனை செய்யப்படும் எந்தவொரு குற்றமும் அக்கற்பனைக்கு ஆதாரமாயுள்ள பரம மெய்ப்பொருளை பாதிப்பதில்லை. இக்கூற்றுக்கு எடுத்துக்காட்டு, கானல் நீரினால் பாலைவனம் சேறாவதில்லை என்பதாகும். அவ்வாறே, சம்சாரி இல்லாமையினால் சம்சாரம் இல்லை, எனும் மறுப்பும் சம்சாரமும், சம்சாரியும் அவித்யையினால் கற்பிக்கப்படுகின்றன என்னும் விளக்கத்தினால் மறுதலிக்கப்படுகின்றது.

மறுப்பு : ஆனால், அவித்யை உடையவனாக இருப்பதினாலேயே க்ஷேத்ரக்ஞன் சம்சாரியாகின்றான். மேலும் அவித்யையினால் உண்டாகும் இன்பதுன்பங்கள் நேரடியாக உணரப்படுகின்றனவே.

பதில் : அவ்வாறன்று. அறியப்படும் பொருளானது க்ஷேத்திரத்தின் தன்மையாகும். அதனால் அறியப்படும் பொருளிலிருந்து உண்டாகும் குற்றங்கள் க்ஷேத்ரக்ஞனுக்கு இல்லை. க்ஷேத்ரக்ஞனுக்கு இல்லாத குற்றத்தை நீ என்னதான் க்ஷேத்ரக்ஞனோடு பொருத்தினாலும் அக்குற்றம் அறியப்படும் பொருளாக இருப்பதால் அது க்ஷேத்ரத்தின் தன்மையாகுமேயன்றி க்ஷேத்ரக்ஞனின் தன்மையாகாது. அதனால் க்ஷேத்ரக்ஞன் பாதிக்கப்படுவதில்லை. ஏனென்றால் அறியப்படும் பொருளோடு அறிபவன் தொடர்பு கொள்வது சாத்தியமாகாது. அப்படி ஏதேனும் தொடர்பு இருக்குமாயின் அது அறியப்படும் பொருள் ஆகாது. அறியாமை, துன்பம், இன்பம் என்பவை ஆத்மாவின் தன்மையாயின் அவை எவ்வாறு நேரடியாக உணரப்படுகின்றன? அவை எவ்வாறு க்ஷேத்ரக்ஞனின் தன்மைகளாகும்? ஆத்மா தன் தன்மையை அறியுமாயின் அது தன்னையும் அறியக்கூடும். இதுபொருந்தாது. ஏனென்றால் ஒரே பொருள் ஒரு செய்கைக்கு கர்த்தாவாகவும், செயப்படு பொருளாகவும் இருக்க முடியாது. நிறமும், வடிவமும் போல் உணரப்படும் பொருளானது உணரும் பொருளின் தன்மையாயிருக்க முடியாது. எனவே, க்ஷேத்ரம் க்ஷேத்ரக்ஞனது தன்மையாகாது. "அறியப்படும் பொருள்களெல்லாம் க்ஷேத்ரம் (13-5,6) அறியும் பொருளே க்ஷேத்ரக்ஞன்" என்று உறுதிபடக் கூறப்பட்டுள்ளது. "அறியாமை, துன்பம் போன்றவை க்ஷேத்ரக்ஞனுடையத் தன்மைகள் என்றும் அவை நேரடியாக உணரப்படுகின்றனவென்றும்" முரண்பாடாகக் கூறுவதற்கு அறியாமையே அடிப்படையாகும்.

இங்கே மறுப்பாளன் கேட்கிறான் : அப்படியென்றால் அறியாமை யாருக்குரியது?

(இதற்குப் பதில்) அது எவனிடம் காணப்படுகின்றதோ அவனுக்குரியது என்பதாகும்.

மறுப்பு : யாரிடம் காணப்படுகின்றது?

பதில் : இது அர்த்தமற்றக் கேள்வியாகும்.

மறுப்பு : எப்படி?

பதில் : அறியாமை ஒருவனிடம் காணப்படுகின்றதென்றால், அது எவனிடம் காணப்படுகின்றதோ அவனையும் நீ காண்கின்றாய். அவ்வாறு அவனைக் காண முடியுமாயின், அது யாருக்குரியது? எனும் கேள்வி சரியன்று. பசுக்களுடையவன் காணப்படும் பொழுது அப்பசுக்கள் யாருக்குரியவை? என்று கேட்பதில் அர்த்தம் இல்லையன்றோ!

மறுப்பு : இந்த உவமை பொருந்தாது. பசுக்களும், அவற்றை உடையவனும் நேரடியாகக் காணப்படுவதால், அவர்களுடைய தொடர்பும் நேரடியாகத் தெரிகின்றது. எனவே உங்கள் கேள்விதான் பொருளற்றதாகிறது. ஆனால் அறியாமையையும், அதனை உடையவனையும் அவ்வாறு நேரடியாகக் காணமுடியாது. அப்படிக் காண முடியுமாயின் அப்போதுதான் எனது கேள்வி அர்த்தமற்றதாகும்.

பதில் : நேரடியாகக் காண முடியாத அறியாமை உள்ளவனோடு, அறியாமைக்கு இருக்கும் தொடர்பினை அறிந்து கொள்வதால் உனக்கு ஆவதென்ன?

மறுப்பு: அறியாமை, தீமையின் ஆணிவேராகும். அதனால் அது பிடுங்கி எறியப்பட வேண்டியதாகும்.

பதில்: எவனிடம் அறியாமை உள்ளதோ, அவனே அதனை நீக்கிக் கொள்வான்.

மறுப்பு: ஏன், என்னிடமே அறியாமை உள்ளது.

பதில்: அப்படியானால், நீ அறியாமையையும், அதனை உடையவனையும் நன்கறிவாய்.

மறுப்பு: நான் அறிவேன். ஆனால் நேரடியாக அன்று.

பதில்: (நான் அறியாமையுடையவன், ஏனெனில் அறியாமையினால் விளையும் துன்பம் முதலியவை எனக்கு இருக்கின்றன. எனக்கு அறியாமை இல்லையென்றால் துன்பம் முதலியவை இல்லை. எடுத்துக்காட்டாக அறியாமையிலிருந்து விடுதலை பெற்ற ஆத்மாக்களுக்கு அவை இல்லை என்னும்) அனுமானத்தினால் (அறியாமையையும், அதனை உடையவனையும்) அறிவாயாயின் அவ்விரண்டிற்குமுள்ளத் தொடர்பினை எவ்வாறு அறிதல் கூடும்? ஏனென்றால் அறிபவன், அறியாமையை அறிவதாக அப்போது ஆகின்றது. (ஒரு பொருள் அறிபவனாகவும், அறியப்படு பொருளாகவும் ஒரே காலத்தில் இருக்க முடியாது) அறிபவனுக்கும் (ஆத்மா) அறியாமைக்கும் உள்ளத் தொடர்பினை (தனியாக) அறிபவன் வேறொருவன் இருக்க முடியாது. அவ்வாறிருந்தால் அதற்கு ஓர் அளவே இருக்க முடியாது. அறிபவனோடு (ஆத்மாவுக்கு) அறியப்படும் பொருளுக்குள்ள உறவு அறியப்படுமாயின் அப்போது தனியாக மற்றொரு அறிபவன் இருப்பதாகக் கொள்ள வேண்டும். அந்த மற்றொரு அறிபவனுக்கும் அறியப்படு பொருளுக்கும் இருக்கும் தொடர்பினை அறிந்து கொள்ள மூன்றாவதாக ஓர் அறிபவனைக் கொள்ள வேண்டும். இவ்வாறு அறிபவன், மற்றொரு அறிபவன்

மூன்றாவது அறிபவன் என்று போய்க் கொண்டேயிருந்தால் அது அளவும் முடிவும் அற்றதாக விரிந்து கொண்டேயிருக்கும். அடுத்து அறியப்படும் பொருள் அறியாமையோ அல்லது வேறு எதுவோ ஆகட்டும், அப்போதும் அறியப்படும் பொருள் என்றுமே அறியப்படும் பொருள்தான். அதுபோல் அறிபவன் அறிபவனேதான். அவன் அறியப்படும் பொருள் ஆவதில்லை. இவ்வாறு இருப்பதால் (அறிபவனை அறிய முடியாது ஆதலினால் அவனுக்கும் அறியாமைக்கும் உள்ள தொடர்பினை அவனாலோ, பிறராலோ அறிய முடியாது என்பதால்) அறிபவன் - க்ஷேத்ரக்ஞன் - அறியாமை, துன்பம் முதலிய குற்றங்களால் பாதிக்கப்படுவதில்லை.

மறுப்பு: அப்படியென்றால் (ஆத்மாவுக்கு) குற்றமுடைய க்ஷேத்திரத்தை அறிந்து கொள்வதும் குற்றமாகுமே. என்றால்,

பதில்: அவ்வாறன்று. ஏனெனில் அறிவு வடிவமாய், மாற்றமின்றி இருக்கும் ஒன்றே (ஆத்மா) இங்கு அறிபவன் என்று உருவகமாகக் கூறப்படுகின்றது. இது சுடுகின்ற ஒன்றினை நெருப்பு என்று உருவகமாகக் கூறுவது போன்றதாகும். பகவானும் வினை, காரணம், பயன் என்பவை ஆத்மாவுக்குக் கிடையாதென்றும், அவை அறியாமையினால் ஆத்மாவின் மீது உருவகமாக ஏற்றப்படுகின்றனவென்றும் கூறுகிறார். இதனைப் பல்வேறு இடங்களில் அவர் எடுத்துக் காட்டியுள்ளார். உதாரணமாக 'எவன் இதனைக் கொல்வதாகக் கருதுகின்றானோ' (2-19) 'இயற்கையின் குணங்களால் செய்யப்படுகின்ற' (3-27) 'ஒருவனுடைய பாவத்தை' (5-15) என்பது முதலான சுலோகங்களில் கூறியுள்ளார். அதற்கேற்பவே நாமும் விளக்கியுள்ளோம். இனி வருபவற்றிற்கும் அவ்வாறே உரை செய்வோம்.

மறுப்பு: நன்று! வினை, காரணம், பயன் இவற்றின் உருவகமாக இருத்தல் ஆத்மாவுக்கு இல்லை. அவை அறியாமையினால் ஆத்மாவின் மீது ஏற்றப்படுகின்றன என்பது உண்மையாயின் அப்போது 'கர்மங்கள் அஞ்ஞானிகளுக்கேயன்றி ஞானிகளுக்கு இல்லை' என்றாயிற்று. (ஞானத்தோடு கர்மத்தைச் செய்ய வேண்டும் என்னும் சாத்திரத்திற்கு இது முரணாகும்.)

பதில்: உண்மை. அவ்வாறே ஆயிற்று. 'உடம்பெடுத்தவனால்..... (18-11) என்ற சுலோகத்திற்கும் நாம் இவ்வாறே பொருளுரைப்போம் அதுபோல் சாத்திரம் முழுவதும் உபதேசித்த உபதேசத்தினை நிறைவு செய்யும் 'குந்தி மைந்த! சுருக்கமாகவே' என்னும் சுலோகத்திலும் (18-50) இதனை விரிவாக எடுத்துரைப்போம். இங்கே விரித்துரைப்பது தேவையற்றது அதனால் இத்துடன் முடிக்கின்றோம்.

'இந்த உடல் க்ஷேத்ரம்.....' (13-1) என்று இந்த அத்தியாயத்தின் ஆரம்பத்தில் க்ஷேத்திரத்தைப் பற்றி விளக்கப்பட்டது. இனி 'அந்த க்ஷேத்திரம்' (13-3) என்னும் சுலோகம் முதல் விரிவாக அது விளக்கப்படுகின்றது. காரணம் - கூற வந்ததை முன்னரே விரித்துரைப்பது அவசியம் ஆதலின்

तत्क्षेत्रं यच्च यादृक्च यद्विकारि यतश्च यत् ।
स च यो यत्प्रभावश्च तत्समासेन मे शृणु ॥ ३॥

**தத்க்ஷேத்ரம் யச்ச யாத்ருக் ச யத் விகாரியதஸ் ச யத் ।**
**ஸ ச யோ யத் ப்ரபாவஸ் ச தத் ஸமாஸேன மே ஸ்ருணு ॥ 3॥**

*அந்த க்ஷேத்திரம் எது, எத்தகையது, என்ன வேறுபாடுடையது, எதிலிருந்து எது தோன்றியது, க்ஷேத்ரக்ஞன் யார், அவன் வல்லமை எப்படிப்பட்டது என்பதைச் சுருக்கமாக என்னிடமிருந்து கேட்பாயாக.*

'தத்' அதாவது 'அது' என்னும் வார்த்தையினால் குறிப்பிடப்படுவது 'இந்த உடல்' ஆகும். இவ்வாறு கட்டப்பட்ட இந்த க்ஷேத்திரமானது எவ்வடிவத்தை உடையதென்பதையும், எத்தன்மைகளை உடையதென்பதையும், என்ன மாறுபாடுடையது என்பதையும், எதிலிருந்து எது உண்டாகிறது அதாவது எக்காரணத்தினின்று எக்காரியம் உண்டாகிறது என்றும், க்ஷேத்ரக்ஞன் என்பவன் யார்? என்பதையும், குணங்களினாலான எச்சக்திகளை உடையவன் என்பதையும் சுருக்கமாக எனது வார்த்தைகளினால் கேட்பாயாக. 'ச' என்னும் வார்த்தை உம்மைப் பொருளாகும்.

இப்போது பகவான் தாம் உபதேசிக்க விரும்பிய க்ஷேத்திரம் மற்றும் க்ஷேத்ரக்ஞனுடைய தன்மைகளைப் பற்றிக் கேட்பவனின் மனதில் ஆர்வத்தை வளர்ப்பதற்காகப் புகழ்ந்துரைக்கிறார்.

ऋषिभिर्बहुधा गीतं छन्दोभिर्विविधैः पृथक् ।
ब्रह्मसूत्रपदैश्चैव हेतुमद्भिर्विनिश्चितैः ॥ ४॥

**ருஷிபிர் பஹுதா கீதம் சந்தோபிர் விவிதை: ப்ருதக் ।**
**ப்ரஹ்மஸூத்ர பதைஸ் சைவ ஹேதுமத்பிர் விநிஸ்சிதை: ॥ 4॥**

*(க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞர்களுடைய உண்மைநிலை) ரிஷிகளால் பலவிதமாகவும், பல சந்தஸ்களால் தனித்தனியாகவும் பாடப்பட்டுள்ளது. காரணமும் நிச்சயமும் உடைய பிரம்மத்தைக் குறிக்கும் சொற்களாலும் (பாடப்பட்டுள்ளது).*

வசிஷ்டர் முதலிய ரிஷிகளால் அது பலவிதமாகப் பாடப்பட்டுள்ளது. சந்தஸ்கள் - ரிக் வேதம் முதலியன. இப்பல்வேறு வேத சந்தஸ்களினாலும் அது தனித்தனியாகவும் பாடப்பட்டுள்ளது. இது தவிர பிரம்மசூத்திரத்திலுள்ள பதங்களாலும் அது பாடப்பட்டுள்ளது. பிரம்ம சூத்திரங்கள் என்பவை பிரம்மத்தைச் சுட்டும் பதங்களாகும். பிரம்மத்தை அறிவதற்கு அல்லது அடைவதற்குரியவையாக இருப்பதால் அவை "பதை:" அதாவது 'அடிகள்'

என்று அழைக்கப்படுகின்றன. அவற்றின் மூலம் பிரம்மமானது அறியப்படுகிறது அல்லது அடையப்படுகிறது. அவற்றின் மூலம் க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞனுடைய உண்மை நிலையானது பாடப்பட்டுள்ளது. 'ஆத்மா என்றே வழிபடவேண்டும்' (பி.உ.1.4.7) பிரம்மத்தைச் சுட்டும் பதங்களாலும் ஆத்மாவானது அறியப்படுகின்றது. இப்பதங்கள் காரணமும் நிச்சயமும் உடையன - அதாவது அவை ஐயத்திற்கிடமில்லாதவையாகவும், அறிவிலே தெளிவினை உண்டு பண்ணுபவையாகவும் உள்ளன.

அர்ஜுனனின் கவனம் ஒருமுகப்பட்டதினால் (கவரப்பட்டதினால்) பகவான் கூறுகிறார்:

**महाभूतान्यहङ्कारो बुद्धिरव्यक्तमेव च**
**इन्द्रियाणि दशैकं च पञ्च चेन्द्रियगोचराः ॥ ५॥**

**மஹாபூதானி அஹங்காரோ புத்திர் அவ்யக்தம் ஏவ ச**
**இந்த்ரியாணி தசைகம் ச பஞ்சசேந்த்ரிய கோசரா: ॥ 5॥**

*மகா பூதங்கள், அகங்காரம், புத்தி அவ்யக்தம், பதினோரு இந்திரியங்கள், இந்திரிய விஷயங்கள் ஐந்தும் (க்ஷேத்ரமாம்).*

பூதங்கள் 'பெரியவை' அல்லது எங்கும் வியாபித்திருப்பவையாகும். அவை பிரக்ருதியின் எல்லா விகாரங்களிலும் வியாபித்திருக்கின்றன. இங்கு குறிப்பிடப்படும் பூதங்கள் சூக்குமங்கள் ஆகும். ஸ்தூலங்களோ 'இந்திரிய விஷயங்கள்' என்னும் சொற்களால் பின்னர் கூறப்படும். அகங்காரம் என்பது மகாபூதங்களுக்குக் காரணமாகவும், 'நான்' என்னும் எண்ணமாகவும் இருக்கின்றது. அகங்காரத்திற்குக் காரணமாகிய 'புத்தி' என்பது நிச்சய வடிவமாயிருக்கிறது. அப்புத்திக்குக் காரணமாக இருப்பது வெளிப்படையாக இல்லாதது, விகாரத்தை, வேறுபாட்டை அடையாதிருப்பதாகும். 'எனது மாயை கடத்தற்கரியது' (7.14) என்று குறிப்பிடப் பெற்றது. 'ஏவ' என்னும் சொல் பிரகிருதியைத் தெளிவுறுத்துவதாகும். (பிரகிருதி எட்டு விதமானது என்பதில் ஐயமில்லை என்று தெளிவுறுத்துவதாகும்). இதுவரை எட்டு விதமாகத்தான் பிரகிருதி பிரிந்துள்ளது. 'ச' என்னும் சொல் தன்மாத்திரை முதலிய பிரிவுகளை ஒருங்கிணைக்கும் சொல்லாகும். செவி முதலியவை பத்துப்புலன்களாம். ஐவகை உணர்வுகளைத் தோற்றுவிக்கும் ஐந்து புலன்கள் அறிபுலன்கள் அல்லது ஞானேந்திரியங்களாகும். வாய், கை, முதலிய ஐந்து புலன்களும் செயலுக்குரியவை அவை செயற்புலன்கள் அல்லது கர்மேந்திரியங்களாகும். இவையிரண்டும் சேர்ந்து புலன்கள் பத்தாகும். மேலும் ஒரு புலன் உள்ளது அது நினைவுகளின் வடிவமாயிருக்கும் 'மனம்' ஆகும். பத்துப் புலன்களுடன் மனம் எனனும் ஒரு புலன் சேர்ந்து மொத்தம் பதினோரு புலன்களாகும். ஓசை முதலியன இந்திரிய விஷயங்களாகும். சாங்கிய நூலார் இவை எல்லாவற்றையும் ஒருங்கிணைத்து இருபத்து நான்கு தத்துவங்கள் என்பர்.

இனி வைஸேஷிகர் எவற்றை ஆத்மாவினுடையத் தன்மைகள் என்று கூறுகின்றனரோ அவை க்ஷேத்திரத்தின் தன்மைகளேயன்றி ஆத்மாவினுடையத் தன்மைகள்அல்லவென்று பகவான் அருளிச் செய்கிறார்.

**इच्छा द्वेषः सुखं दुःखं सङ्घातश्चेतना धृतिः ।**
**एतत्क्षेत्रं समासेन सविकारमुदाहृतम् ॥ ६॥**

**இச்சா த்வேஷ: ஸுகம் து:க்கம் ஸங்காதஶ் சேதனா த்ருதி: ।**
**ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேன ஸவிகாரம் உதாஹ்ருதம் ॥ 6॥**

*விருப்பு, வெறுப்பு, இன்பம், துன்பம், சேர்க்கை, உணர்வு, உள்ளத்துறுதி, என்னும் இந்த க்ஷேத்திரம் அவற்றின் விகாரங்களோடு சுருக்கமாக எடுத்துக் கூறப்பட்டது.*

'விருப்பு' என்பது இங்கே அகக்கரணத்தின் தன்மையாகக் கருதப்படுகிறது. ஒருவன் தனக்கு இன்பம் அளித்த ஒரு பொருளை மீண்டும், காணும்பொழுது அப்பொருளை அடைய விரும்புகின்றான். அறியப்படும் பொருளாதலால் இது க்ஷேத்திரமாகும். அவ்வாறே வெறுப்புமாகும். எப்பொருளினால் ஒருவன் துன்பம் அனுபவித்தானோ அப்பொருளைக் காணுங்கால் அவன் அதனை வெறுத்து ஒதுக்குகிறான். இந்த வெறுப்பு அறியப்படும் பொருளாதலால் க்ஷேத்திரமாகும். இன்பமென்பது நலம் பயப்பது, அமைதியுடையது, சத்துவ குணவடிவமாய் நிற்பது அறியப்படும் பொருளாதலால் க்ஷேத்திரமாகும். துன்பமென்பது தீமையின் வடிவமாகும். அறியப்படும் பொருளாதலால் அதுவும் க்ஷேத்திரமாகும். சேர்க்கை என்பது உடல் மற்றும் இந்திரியங்களைக் குறிப்பிடுகின்றது. உணர்வு என்றால் உடல் மற்றும் இந்திரியங்ளின் சேர்க்கையில் வெளிப்பட்ட அந்தக்கரண விருத்தியாகும். பழுக்கக் காய்ந்த ஓர் உலோகத் துண்டில் நெருப்பு வியாபித்து வெளிப்படுவது போல, உடல் இந்திரியச் சேர்க்கையில் அந்தக் கரண விருத்தி வெளிப்படுகின்றது. நெருப்பு உலோகத் துண்டில் வியாபித்து வெளிப்படுவதால் அவ் உலோகத்துண்டையே நெருப்பென்று எண்ணச் செய்கிறது. அதுபோல் ஆத்ம அறிவு அல்லது ஸ்வரூப ஞானமானது அந்தக் கரண விருத்தியில் வெளிப்பட்டு அப்புத்தி விருத்தியையே ஆத்மாவாக உணர்த்துகின்றது. ஆகவே ஸ்வரூப அறிவின் போலித் தோற்றத்தினால் வியாபிக்கப் பெற்ற அப்புத்தி விருத்தியே உணர்வு எனப்படுகிறது. இதுவும் அறியப்படும் பொருளாதலால் க்ஷேத்திரமாகும். பகவான் இங்கு விருப்பு,வெறுப்பு முதலிய சொற்களால் அவற்றின் இனமாகிய நினைப்பு முதலிய அந்தக் கரணத் தர்மங்கள் அனைத்தையும் கூடக் குறிப்பதாகக் கொள்ள வேண்டும். ஏனெனில் எதனைக் கூறத் தொடங்கினாரோ அந்த க்ஷேத்திரத்தைப் பற்றி இங்கு முடித்துக் கொள்கின்றார். இந்த க்ஷேத்திரமான மஹத் (புத்தி) முதலான விகாரத்தோடு உரைக்கப்பட்டது.

எந்த க்ஷேத்திர வேறுபாடுகள் எல்லாவற்றின் சேர்க்கையானது இவ்வுடலாகிய க்ஷேத்திரம் என்று கூறப்பட்டதோ (13-1) அந்த க்ஷேத்திரம் மகா பூதங்கள் முதலிய பிரிவுகளாக விகாரங்களுடன் திண்மை வரை விளக்கிக் கூறப்பட்டது. க்ஷேத்ரக்ஞனுடைய சிறப்பியல்புகள் இனிக் கூறப்படும். (13.12) க்ஷேத்ரக்ஞனைப் பற்றிய அறிவும் அவனது ஆற்றலும் அமரத்துவம் அளிக்கும். ஆனால் இப்பொழுது அறிவிற்கு சாதனமான பணிவு முதலிய ஒழுக்கங்களை விளக்கியருள்கிறார். எது இருந்தால் ஒருவன் அறிய வேண்டியதை அறிவதற்குத் தகுதியும் உரிமையும் உள்ளவனாக ஆகின்றானோ! எதனுள் சித்தத்தை வைத்தத் துறவி, ஞான நிஷ்டன் (ஞானவழியில் நிலைபெற்றவன்) ஆகின்றானோ, அந்தப் பணிவு முதலான ஒழுக்கங்களை பகவான் விளக்கியருள்கிறார்.

**अमानित्वमदम्भित्वमहिंसा क्षान्तिरार्जवम् ।**
**आचार्योपासनं शौचं स्थैर्यमात्मविनिग्रहः ॥७॥**

**அமாநித்வம் அதம்பித்வம் அஹிம்ஸா க்ஷாந்திர் ஆர்ஜவம் ।**
**ஆச்சார்யோபாஸனம் ஶௌசம் ஸ்தைர்யம் ஆத்மவிநிக்ர: ॥ 7॥**

*பணிவு, பகட்டின்மை, தீங்கு செய்யாமை, பொறுமை, நேர்மை, ஆச்சாரியனைத் தொழுதல், தூய்மை, உறுதி, தன்னடக்கம் (இவை மேற்கொள்ள வேண்டிய ஒழுக்கங்களாகும்)*

கர்வம் என்பது தற்புகழ்ச்சியுடையவன் குணமாகும். அது இல்லாமையே 'பணிவு' ஆகும். தனது ஒழுக்கத்தைப் பறைசாற்றுவது வெளிப்பகட்டாகும். அஃதில்லாததே 'பகட்டின்மையாகும்'. பிற உயிர்களைத் துன்புறுத்தாமை தீங்கு செய்யாமையாகும். 'பொறுமை' என்பது பிறர் பிழை பொறுத்தலாகும். 'நேர்மை' என்பது ஒளிவு மறைவற்றத் தன்மை அல்லது கோணலின்மையாகும். 'ஆச்சாரியனைத் தொழுதல்' என்பது முக்திக்கு வழிகாட்டும் குருவிற்குத் தொண்டு செய்தல் என்பதாகும். 'தூய்மை' என்பது மண், நீர் முதலியவற்றினால் புற அழுக்கை நீக்குவதும், பற்று முதலியவற்றிற்கு எதிரானத் தன்மைகளை வளர்த்துக் கொள்வதின் மூலம் அக அழுக்கை நீக்குவதுமாகும். 'உறுதி' என்பது முக்திக்கான பாதையில் நிலைபிறழாது நிற்றல் என்பதாகும். தன்னடக்கம் என்பது நமது ஆத்ம நலத்திற்கு எதிரான செயல்களில் நமது உடலையும், புலன்களையும் செல்லவிடாது, தடுத்து தர்மத்தின் பாதையில் செல்வதற்கான செயல்களில் அவற்றை செலுத்துவதாகும்.

மேலும்,

**इन्द्रियार्थेषु वैराग्यमनहङ्कार एव च**
**जन्ममृत्युजराव्याधिदुःखदोषानुदर्शनम् ॥८॥**

**இந்த்ரியார்த்தேஷு வைராக்யமனஹங்கார ஏவ ச ।**
**ஜன்ம ம்ருத்யு ஜராவ்யாதிது:க்கதோஷானுதர்ஶனம் ॥ 8॥**

*புலனுகர்ச்சிப் பொருட்களின் மீது பற்றின்மை, அகங்காரமின்மை, பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு, துன்பம் முதலானவற்றிலுள்ள தீமையை உணர்தல்.*

ஓசை முதலியப் புலனுகர்ச்சிப் பொருட்களின் மீது பற்றின்மை. நேரடியாகவும், மறைமுகமாகவும் அனுபவிக்கப்படும் போகங்களின் மீது அவா அறுத்தல். அதுபோல் அகங்காரமின்மை, பிறப்பு, இறப்பு, பிணி, மூப்பு போன்றவற்றிலே உள்ள தீமையை உணர்தல். பிறப்பிலே உள்ள தீமை கருவறையில் சிறைப்படுதலும், அதனின்று வெளிவருதலுமாகும். இதனை உணர்தல் என்றால் இதனால் விளையும் தீமையை அறிதல் என்று பொருளாகும். அதுபோல் இறப்பில் உள்ள தீமையையும் உணர்தல் வேண்டும். அடுத்து மூப்பிலே அறிவு தடுமாறுதல், வலிமை குன்றுதல், ஒளிமங்குதல் என்னும் தீமைகளையும் பிறரால் அவமதிக்கப்படுவதாகியத் தீமையையும் உணர்தல் வேண்டும். பிணியில் உண்டாகும் தீமைகளாகிய தலைவலி, உடல்வலி போன்றவற்றையும், தன்னாலும் (அத்யாத்மிகம்) பிறராலும் (அதிபௌதிகம்) தேவர்களாலும் (அதிதைவிகம்) உண்டாகும் தீமைகளையும் உணர்தல் வேண்டும்.

இதற்குப் பிறிதொரு வகையிலும் பொருள் கொள்ளலாம். துன்பமே தீமைதான். பிறப்பும் தீமைதான், இறப்பும் தீமைதான். பிணியும் தீமைதான், மூப்பும் தீமைதான். பிறப்பு உள்ளிட்ட எல்லாமே துன்பத்திற்குக் காரணமாக விளங்குகின்றனவாதலால் அவை துன்பங்களாகின்றனவே அன்றி தாமே துன்ப வடிவங்கள் அல்ல.

இவ்வாறு பிறப்பு, இறப்பு முதலியவற்றில் துன்பம் என்னும் தீமையை உணர்வதால் உடல், புலன்கள், புலனுகர்ச்சிப் பொருட்கள், இவற்றினுடைய போகங்கள் என்று எல்லாவற்றின் மீதும் பற்றின்மை உண்டாகின்றது. அதனால் புலன்கள், உள்ளிருக்கும் ஆத்மாவை உணர்வதற்காக அந்த ஆத்மாவை நோக்கிச் செல்கின்றன. பிறப்பு முதலியவற்றிலுள்ள துன்பம் என்னும் தீமையை உணர்வதால் அந்த உணர்வே ஞானமாகும்.

மேலும்,

असक्तिरनभिष्वङ्गः पुत्रदारगृहादिषु ।
नित्यं च समचित्तत्वमिष्टानिष्टोपपत्तिषु ॥ ९॥

**அஸக்திர் அனபிஷ்வங்க: புத்ரதார க்ருஹாதிஷு ।**
**நித்யம் ச ஸமசித்தத்வம் இஷ்டானிஷ்டோபபத்திஷு ॥9॥**

*மனைவி மக்கள் வீடு முதலியவற்றில் பற்றின்மையும், அவற்றைத் தனதெனக் கருதாமையும், வேண்டியன, வேண்டாதன வந்துற்ற போது திட சித்தமுடைமையும்.*

பற்று என்பது - பற்றுக்குக் காரணமான பொருள்களினிடத்தில் பாசம் வைப்பதாகும். அது இல்லாதது பற்றின்மையாகும். தனது எனக் கருதுதல் - பற்றுவைக்கப்பட்ட பொருளும் தானும் ஒன்றெனக் கருதுவதாகும். உதாரணமாக, மற்றொருவன் இன்பமோ, துன்பமோ அடையும்பொழுது தானே இன்பமடைவதாக, துன்பமடைவதாகக் கருதுவது, அல்லது மற்றொருவன் உயிர் வாழ்ந்தாலோ, உயிர் பிரிந்து இறந்தாலோ, தானே வாழ்வது போன்றும், இறப்பது போன்றும் கருதுவதாகும். எவரிடத்து? என்றால் மனைவி, மக்கள், வீடு முதலியவரிடத்து. முதலியவர் என்றால் அதுபோல் பற்றுக்கும், பாசத்திற்கும் காரணமாயிருக்கும் பிறர் என்பதாகும். வேண்டியன, வேண்டாதன வந்துற்ற அளவில் திட சித்தமுடைமை அல்லது மனம் அழியாமை. இவ்வாறு மனம் அழியாது உறுதியுடன் இருப்பதே ஞானமாகும்.

மேலும்,

**मयि चानन्ययोगेन भक्तिरव्यभिचारिणी ।**
**विविक्तदेशसेवित्वमरतिर्जनसंसदि ॥ १०॥**

**மயி சானன்யயோகேன பக்திரவ்ய பிசாரிணீ**
**விவிக்த தேஶ ஸேவித்வம் அரதிர்ஜனஸம்ஸதி ॥ 10॥**

*பிறழ்ச்சியற்ற யோகத்தினால் என்னிடம் மாறாத பக்தி வைத்தல், தனியிடத்தை நாடி அமர்தல், ஜனக்கூட்டத்தை வெறுத்தல்,*

பிறிதொன்றினிடத்துப் பற்றின்றி பகவானாகிய என்னிடத்து பற்று வைத்தல், அதாவது மாறாத பக்தியுடையவனாக இருத்தல். இதன் பொருள் வாசுதேவனைக் காட்டிலும் வேறொருவர் இல்லை, அவரே நமது அடைக்கலம் என்ற உறுதியுடன் பிறவற்றின் மீது பற்றின்றி அவர் மீது மட்டும் மாறாத பக்தி செலுத்துவதாகும். இவ்வாறான பக்தியே ஞானமாகும். தனியிடத்தை நாடுதல் என்றால், இயற்கையாக அல்லது சுத்தம் செய்வதால் அசுத்தமற்றதாகவும், பாம்பு, திருடன், புலி முதலியவற்றின் பயம் இல்லாத இடங்களாகிய வனம், நதிக்கரை, ஆலயம் போன்றவையாகும். இப்படிப்பட்ட இடத்தை நாடுவது என்பதாகும். இதுபோன்ற இடத்தில் மனம் அமைதியடைகிறது. ஆத்ம உணர்வு உண்டாகிறது. அதனால் இப்படிப்பட்டத் தனி இடங்களை நாடுவது ஞானமாகும். ஜனக் கூட்டத்தை வெறுத்தல் என்றால் ஒழுக்கமும், தூய்மையும், பண்பும் இல்லாத ஜனங்களை வெறுத்தல் என்பதாகுமேயன்றி, ஒழுக்கம் மற்றும் பண்பில் சிறந்த ஜனங்களை வெறுப்பதன்று. இவர்கள் ஞானம் வளர்வதற்கு உறுதுணையாயிருப்பர். அதனால் பண்பாடில்லாத ஜனங்களை வெறுப்பது ஞானமாகும்.

अध्यात्मज्ञाननित्यत्वं तत्त्वज्ञानार्थदर्शनम् ।
एतज्ज्ञानमिति प्रोक्तमज्ञानं यदतोऽन्यथा ॥११॥

**அத்யாத்ம ஞான நித்யத்வம் தத்வ ஜ்ஞானார்த்த தர்ஶனம் ।**
**ஏதஜ்ஞானமிதி ப்ரோக்தம் அஜ்ஞானம் யததோ (அ)ன்யதா ॥ 11॥**

*ஆத்ம ஞானத்தில் எப்பொழுதும் நிலைநிற்றலும், தத்துவ ஞானத்தின் பொருளை உணர்தலும் - இவையெல்லாம் ஞானம் எனப்படும். இவற்றினின்றும் வேறுபட்டது அஞ்ஞானம் ஆகும்.*

ஆத்ம ஞானத்தில் எப்பொழுதும் நிலைநிற்றல்: ஆத்மஞானம் என்பது ஆத்மாவைப் பற்றிய அறிவாகும். அதில் உறுதியுடன் நிலைத்து இருப்பது. தத்துவ ஞானம் என்பது பணிவு முதுலிய ஞான சாதனங்களின் பயிற்சியின் பரிபக்குவத்தினால் வருவதாகும். (13.7) இதுவே தத்துவ ஞானமாகும். இதன் பயன் விடுதலை அல்லது லௌகீக வாழ்க்கை ஒழிதல் ஆகும். தத்துவ ஞானத்தின் பொருளை உணர்தல் – தத்துவ ஞானத்தின் பயனை அறிவதாகும். தத்துவ ஞானத்தின் பயனை அறியும் அளவிலேதான் ஒருவன் அதன் சாதனங்களை அனுஷ்டிப்பதில் தலைப்படுவான். 'பணிவு' முதலாக 'ஆத்ம ஞானத்தின் பயனை உணர்தல்' ஈறாக இங்கு கூறப்பட்டவை ஞானத்திற்குத் துணை செய்வதால் இவை ஞானம் என்று கூறப்பட்டது. இதற்கு மாறாக செருக்கு, போலிப்பகட்டு, வன்முறை, பொறுமையின்மை, நேர்மையின்மை போன்ற குணங்கள் அஞ்ஞானமாகும். இவை பௌதீக வாழ்க்கைக்குக் காரணமாக இருப்பதினால் இவை தவிர்க்க வேண்டிய அஞ்ஞானமென்று அறிக.

இந்த ஞானத்தினால் அறியப்படுவது யாது? இதற்கான பதில் 13.12ல் கூறப்படுகிறது.

மறுப்பு: பணிவு முதலானவை சுய அடக்கத்தின் வடிவங்களாகும். அவற்றினால் ஞானம் பெற முடியாது. பணிவு முதலானவை ஒரு பொருளை தீர்மானிப்பதில்லை. மேலும் ஒரு பொருளைப் பற்றிய ஞானம் எதுவோ அதுவே அந்தப் பொருளைத் தீர்மானிக்கிறது என்பது உலகளாவிய உண்மையாகும். ஒரு பொருளைப் பற்றிய ஞானத்தினால் மற்றொரு பொருள் அறியப்படுவதில்லை. பானையைப் பற்றிய ஞானத்தினால் நெருப்பு அறியப்படுவதில்லை.

பதில்: இது குற்றமன்று. பணிவு முதலானவை ஞானத்திற்கு சாதனங்களாகவும், ஞானம் பெறுவதற்குக் காரணமாகவும் இருக்கின்றபடியால் அவை ஞானம் ஆகும் என்று ஏற்கெனவே விளக்கியுள்ளோம்.

ज्ञेयं यत्तत्प्रवक्ष्यामि यज्ज्ञात्वामृतमश्नुते ।
अनादिमत्परं ब्रह्म न सत्तन्नासदुच्यते ॥१२॥

ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி யஜ்ஞாத்வா (அ)ம்ருதமஶ்னு தே ।
அநாதிமத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தன்னாஸதுச்யதே ॥ 12॥

*எது அறியத்தக்கப் பொருளோ, எதை அறிவதினால் ஒருவன் இறவாமையை அடைகின்றானோ அதனை விரித்துரைப்பேன். பரப்பிரம்மம் ஆதியில்லாதது. அது சத் (உள்ளது) எனப்படுவதில்லை. அசத் (இல்லது) எனப்படுவதுமில்லை.*

அறியத்தக்கப் பொருள் எதுவோ அதனை உண்மையாகவும், தெளிவாகவும், எடுத்துரைப்பேன். கேட்பவன் கவனத்தை ஈர்ப்பதற்காக இந்த ஞானத்தின் பயன் எடுத்துக் கூறப்படுகிறது. அறியத்தக்கப் பொருளை அறிவதின் மூலம் ஒருவன் இறவாமை எய்துகிறான். அவனுக்கு மரணம் என்பது இல்லை. எது ஆதியில்லாததோ எது பரமானதோ அதுவே பிரம்மமாகும். அதுவே அறியத்தக்கப் பொருளாக இங்கு பேசப்படுகிறது.

கூறியது கூறல் என்னும் குற்றத்தைத் தவிர்ப்பதற்காக சிலர் 'அநாதிமத்பரம்' என்னும் சொல்லை 'அநாதி' 'மத்பரம்' என்று பிரித்து பிரம்மம் ஆதியில்லாதது, நானே அதன் பராசக்தியாகிய வாசுதேவன் என்று வேறுவிதமான விளக்கம் தருகின்றனர்.

(ஆனால் நாம் கூறுவோம்) உண்மை. இவ்வாறு கூறுவது பொருளுடையதாயின், கூறியது கூறல் என்னும் குற்றம் தவிர்க்கப்படக் கூடியதேயாகும். ஆனால் அந்த விளக்கத்தில் பொருளில்லை. ஏனெனில் இங்கு பிரம்மம் அது 'சத்' எனப்படுவதில்லை. 'அசத்' எனப்படுவதில்லை என்று எல்லாச் சிறப்பியல்புகளையும் மறுத்தே விவரிக்கப்படுகிறது. சிறப்புச் சக்தியுடையதாக பிரம்மத்தை உணர்த்துவதும் அதன் சிறப்பியல்புகளை மறுப்பதும் ஒன்றிற்கொன்று எதிரானதாகும். எனவே கூறியது கூறலானது சுலோகத்தை இட்டு நிரப்புவதற்கானது என்றே விளக்கப்படவேண்டும்.

இறவாமை என்னும் பயனையுடைய அறிய வேண்டிய பொருளைப் பற்றி நான் கூறுகிறேன் என்று கேட்பவனது ஆர்வத்தைத் தூண்டி கூறுகிறார். அந்த அறிய வேண்டிய பொருள் 'சத்' எனப்படுவதில்லை. அது 'அசத்' எனப்படுவதில்லை.

மறுப்பு: அப்படியென்றால் 'அறிய வேண்டிய பொருளைத் தெளிவாகக் கூறுவேன், என்று பெருங்குரலெடுத்துக் கூறி பின்னர் அது 'சத்' எனபட |தில்லை. அசத் எனப்படுவதில்லை என்பது ஏற்புடைத்தன்று.

பதில்: இல்லை. ஏற்புடையதுதான். எவ்வாறு? அறியத்தக்கப் பொருளாகிய பிரம்மமானது எல்லா உபநிஷத்துக்களிலும், 'இதுவன்று இதுவன்று' (பி.உ.2.3.6) 'ஸ்தூலமன்று, சூக்குமமன்று' (பி.உ.3.8.8) என்று

இதுபோன்ற சிறப்பியல்புகளை மறுத்தே கூறப்படுகின்றது. காரணம் பிரம்மமானது சொல்லுக்கு எட்டாததாகும்.

ஆட்சேபம்: சொல்லுக்கு எட்டாத ஒன்றை இல்லை என்றே கொள்ள முடியும். சொல்லினால் ஒன்றைச் சுட்ட முடியாது என்றால் அது இல்லை என்றுதானே பொருள். அறியத்தக்க பொருள் ஒன்று உள்ளது என்றும் ஆனால் அதைச் சொல்லால் சுட்ட முடியாது என்று கூறுவதும் முரண்பாடாகும்.

பதில்: இல்லை என்பது இல்லை. உண்மையில் அது இல்லை என்னும் உணர்வினால் கூறப்படவில்லை.

மறுப்பு: எல்லா உணர்வுகளும் நிச்சயமாக ஒன்று 'உள்ளது' என்பதைச் சார்ந்திருக்க வேண்டும். அல்லது 'இல்லை' என்பதைச் சார்ந்திருக்க வேண்டும். அதனால் அறியத்தக்க பொருள் ஒன்று 'உள்ளது' என்னும் உணர்வினைச் சார்ந்திருக்க வேண்டும் அல்லது 'இல்லை' என்னும் உணர்வினைச் சார்ந்திருக்க வேண்டும்.

பதில்: இல்லை. பிரம்மமானது புலனுணர்வுக்கு எட்டாதது ஆதலின் அது 'உள்ளது' 'இல்லை' என்னும் இரண்டு உணர்வுகளுக்கும் அப்பாற்பட்டதாக இருக்கின்றது. புலனுணர்வினால் அறியக்கூடிய 'பானை' போன்ற பொருள் எதுவோ, அதுதான் 'உள்ளது' என்னும் உணர்வைச் சார்ந்ததாகவோ அல்லது 'இல்லை' என்னும் உணர்வைச் சார்ந்ததாகவோ இருத்தல் கூடும். ஆனால் அறியத்தக்கப் பொருளாகிய பிரம்மமோ புலனுணர்விற்கு எட்டாதது ஆதலினால் அது சுருதிப் பிரமாணம் ஒன்றினாலேயே அறியக் கூடியதாகும். ஆகவே பானை முதலியவை போல் 'உள்ளது' 'இல்லை' என்னும் இரண்டு உணர்வுகளையும் தழுவிய உணர்வினால் சுட்டப்படுவதில்லை. எனவே அது 'உள்ளது அன்று, இல்லது அன்று' என்று கூறப்படுகின்றது. இது முரண்பாடன்றோ என்ற மறுப்பிற்குப் பதில்வருமாறு: முரண்பாடன்று, ஏனென்றால் அது அறியப்பட்ட பொருளினும் வேறாகவும், அறியப்படாதப் பொருளுக்கு அப்பால் உள்ளதாகவும் சுருதிகள் (கே.உ.1.3) கூறுகின்றன.

மறுப்பு: சுருதியும் முரண்பாடுடையதுதான். உதாரணமாக யாகத்திற்கு மண்டபம் அமைத்தப் பின்னர் 'மறுமையில் நன்மை உண்டா இல்லையா என்பதை எவன் அறிகிறான்' (தை-சம்-6.1.1) என்று சுருதிகள் கூறுகின்றன.

பதில்: அப்படியன்று. 'பிரம்மம் அறியப்பட்டதினும், அறியப்படாத தினும் வேறு' என்னும் சுருதியினானது அறியத்தக்கப் பொருளை உணர்த்து கின்றது. 'மறுமையில் நன்மை உண்டா, இல்லையா என்பதை எவன் அறிகிறான்' என்னும் தைத்ரீய சம்ஹிதையின் கூற்று 'அர்த்தவாதமாகும்'.

மேலும் பிரம்மமானது 'உள்ளது' முதலான சொற்களால் எடுத்துரைக்கப்பட முடியாதது என்பது யுக்தியினால் தெரியவருகின்றது. கேட்பவர்கள் புரிந்து கொள்ள வேண்டும் என்பதற்காக வார்த்தைகள், அவற்றிற்குத் தொடர்புடைய இனம், வினை, குணம், தொடர்பு போன்றவற்றினால் எடுத்துரைக்கப்படுகின்றன. இத்தொடர்புகளின்றி விஷயத்தைத் தெரிவிப்பதற்கு வேறு வழியில்லை. உதாரணமாக, பசு, குதிரை என்பவை இனத்தினாலும், சமைக்கிறான், படிக்கிறான் என்பவை வினையினாலும், வெண்மை, கருமை என்பவை குணத்தினாலும்,

பணமுள்ளவன், பசுக்களுடையவன் என்பவை தொடர்பினாலும் சுட்டப்படுகின்றன. இதற்கு மாறாக, பிரம்மத்திற்கு இனம் இல்லை, ஆகவே உள்ளது என்னும் சொல்லினால் சுட்டப்பட முடியாததாகும். குணத்தைக் கொண்டு சுட்டுவதென்றாலோ அது நிர்க்குணம், அதற்குக் குணமில்லை. அதற்கு வினையேதுமில்லை. அதனால் அதனை வினையைக் கொண்டும் சுட்ட முடியாது. 'உறுப்பில்லாதது, வினையில்லாதது, அசைவற்றது' என்று சுருதிகள் கூறுகின்றன. (சுவே. உ. 6.19) அதற்குத் தொடர்பில்லை ஏனெனில் அது ஒன்றாயுள்ளது. இரண்டற்றது, புலன்களுக்கு எட்டாதது, ஆத்மாவாக இருப்பது அதனால் வார்த்தைகளினால் அதைச் சுட்ட முடியாது என்பது பொருத்தமுடையதேயாகும். எனவேதான் 'சொற்கள் திரும்புகின்றன' என்பது சுருதிமொழியாகும். (தை.உ..2.9.9) (சொற்கள் பிரம்மத்தை அணுக முடியாது திரும்புகின்றன என்று பொருளாகும்.)

'உள்ளது' என்றும் சொல்லுக்கும் எண்ணத்திற்கும் எட்டாததாக இருப்பதினால் அறியத்தக்கப் பொருளானது (பிரம்மம்) இல்லை என்னும் ஐயம் எழுகிறது. இந்த ஐயத்தினை நீக்க வேண்டும் என்பதற்காக உயிர்களின் உடல்களிலுள்ள உபாதிகளின் துணையினால் அதன் இருப்பினை உறுதி செய்கின்றார்.

**सर्वत:पाणिपादं तत्सर्वतोऽक्षिशिरोमुखम् ।**
**सर्वत:श्रुतिमल्लोके सर्वमावृत्य तिष्ठति ॥१३॥**

**ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வதோ (அ)க்ஷி ஶிரோமுகம் ।**
**ஸர்வத: ஶ்ருதிமல்லோகே ஸர்வமாவ்ருத்ய திஷ்டதி ॥ 13॥**

***அது எங்கும் கைகால்களுடையது, எங்கும் கண்களும், தலைகளும், வாய்களுமுடையது. எங்கும் செவிகளுடையது. உலகில் அனைத்தையும் வியாபித்து நிற்கின்றது.***

அறியத்தக்கப் பொருளுக்கு எங்கும் கைகளும், கால்களும் இருக்கின்றன. க்ஷேத்ரக்ஞன் எல்லா உயிர்களின் உடல் உறுப்புக்களாகிய உபாதிகளால் உணர்த்தப்படுகின்றான். க்ஷேத்ரம் என்னும் உபாதியின் காரணமாகவே க்ஷேத்ரக்ஞன் என்று கூறப்படுகிறான். க்ஷேத்ரம் கைகள், கால்கள் போன்றவற்றினால் வேறுபட்டிருக்கின்றது. க்ஷேத்ரத்தின் உபாதிகளின் பேதத்தினால் க்ஷேத்ரக்ஞனிடம் காணப்படும் வேற்றுமைகள் எல்லாம், பொய்ம்மையேயாகும். எனவே அவற்றை நீக்கி அறியத்தக்கப் பொருளை அறிய வேண்டும் என்பதற்காகவே 'அது உள்ளது எனப்படுவதில்லை' 'இல்லது எனப்படுவதில்லை' என்று கூறப்பட்டது. உபாதிகளாலானது பொய்ம்மையே என்பது உண்மையாயினும், அறியத்தக்கப் பொருளின் இருப்பைத் தெரிவிப்பதற்காக - அது எங்கும் கை, கால்களுடையது - என்று கூறப்படுகின்றது. சம்பிரதாயவாதிகளும் "நிஷ்பிரபஞ்சமானது 'அத்யாரோபத்தினாலும்' 'அபவாதத்தினாலும்' அதாவது ஏற்றுதலாலும்,

விலக்குதலாலும் விளக்கப்படுகின்றது'' என்றே கூறுகின்றனர். (அத்யாரோபம் என்பது பாம்பல்லாத கயிற்றிலே பாம்பை ஏற்றுதல் போன்று உண்மைப் பொருளிலே உண்மையல்லாத பொருளை ஏற்றிக் கூறுவதாகும். அபவாதமென்பது கயிற்றின் பொய்த் தோற்றமாகியப் பாம்பை விலக்கிக் கயிறு மட்டுமே காணப்படுதல்போல், உண்மைப் பொருளின் பொய்த் தோற்றமாகியப் பிரபஞ்சத்தை விலக்கி உண்மைப் பொருள் மட்டுமே காணப்படுதலாகும்). எல்லா விடங்களிலும் எல்லா உயிர்களின் உறுப்புக்களாகத் தெரிகின்ற கை, கால்கள் போன்றவை அறியத்தக்கப் பொருளின் (பிரம்மத்தின்) சக்தி இருப்பதினால் தங்களுக்குரியக் கடமைகளைச் செய்கின்றன. எனவே அவை அறியத்தக்கப் பொருளுக்குச் சொந்தமானவை என்று உருவக வழக்காகக் கூறப்படுகின்றது. இதே போன்று மற்றவையும் கூட விளக்கப்படலாம். அறியத்தக்கப் பொருளுக்கு எங்கும் கைகளும், கால்களும், விழிகளும், தலைகளும், வாய்களும் இருக்கின்றன. அது எங்கும் செவியுடையதாக இருக்கின்றது. அது எல்லாவற்றையும் வியாபித்து நிற்கின்றது என்பதின் மூலம் அதன் இருப்பு உறுதி செய்யப்படுகின்றது.

அறியத்தக்கப் பொருளுக்குக் கைகால்கள் உண்டென்பது ஐயத்தைத் தரலாம். இந்த ஐயத்தை நீக்க வேண்டும் என்பதற்காகவும், அவை அதன் மீது ஏற்றிக் கூறப்படும் உபாதிகள் என்பதைக் காட்டுவதற்காகவும் அடுத்து வரும் சுலோகம் தொடங்கப் பெறுகின்றது.

**सर्वेन्द्रियगुणाभासं सर्वेन्द्रियविवर्जितम् ।**
**असक्तं सर्वभृच्चैव निर्गुणं गुणभोक्तृ च ॥ १४॥**

**ஸர்வேந்த்ரிய குணாபாஸம் ஸர்வேந்த்ரிய விவர்ஜிதம் ।**
**அஸக்தம் ஸர்வ ப்ருச்சைவ நிர்குணம் குணபோக்த்ரு ச ॥ 14॥**

***இந்திரியங்கள் அனைத்தின் செய்கைகளினால் விளங்குவது, ஆனால் அனைத்து இந்திரியங்களும் இல்லாதது. பற்றற்றதாயினும் எல்லாவற்றையும் தாங்குவது; குணங்களற்றதாயினும் குணங்களை அனுபவிப்பது.***

அனைத்து இந்திரியங்கள் என்றால் செவி முதலான ஞானேந்திரியங்களும், கன்மேந்திரியங்களுமாம். புத்தி, மனம், என்ற அகக்கரணங்களையும் சேர்த்துக் கொள்க. அறியத்தக்கப் பொருளின் உபாதிகளான இவையெல்லாம் 'ஸர்வேந்த்ரிய' எனனும சொல்லினால் புரிந்து கொள்ளப்படுகின்றன. மேலும் அகக்கரணத்தின் வழியேதான் இந்திரியங்கள் அறியத்தக்கப் பொருளின் உபாதிகளாகின்றன. எனவே அறியத்தக்கப் பொருளானது அகக்கரணம், புறக்கரணம் என்னும் உபாதிகளின் வழியே அனைத்து இந்திரியங்களின் செய்கைகளான நிச்சயித்தல், நினைத்தல், கேட்டல், மொழிதல் போன்றவற்றினால் வெளிப்படுகின்றது. அந்த அறியத்தக்கப் பொருளானது அனைத்து இந்திரியங்களின் செய்கைகளால்

வினை புரிகின்றது. அதனால் தான் 'தியானிப்பது போலும், அசைவது போலும்' என்று சுருதிகள் கூறுகின்றன. (பி.உ.4.3.7) வேறு எக்காரணத்தினால் அது வினை புரிவது இல்லை எனக் கொள்ளப்படுகிறது? என்றால் அது எல்லா இந்திரியங்களும் இல்லாதது, எத்தகைய கருவியும் இல்லாதது என்று பொருளாகும். அதனால் அந்த அறியத்தக்கப் பொருள் இந்திரியங்களின் வழியே வினை புரிவதில்லை என்றறியப்படுகிறது. சுவேதஸ்வதர உபநிஷத் (3:19) 'அது கைகால்கள் இல்லாதாதாயினும் விரைந்து செல்லும், பற்றிப் பிடிக்கும், விழிகளில்லை ஆனால் பார்க்கும், செவிகளில்லை ஆனால் கேட்கும்' என்று கூறுகிறது. அந்த அறியவேண்டிய பொருள் எல்லா இந்திரியங்களின் உபாதிகளின் செய்கைகளுக்கு அனுசரணையாக நடக்கும் வலிமையுள்ளது என்பதே அதன் பொருளாகுமேயன்றி, உண்மையிலேயே அதற்கு (பிரம்மத்திற்கு) விரைந்து செல்லுதல் போன்ற தொழில்கள் உண்டு என்பதை எடுத்துக் காட்டுவது அதன் நோக்கமன்று. 'குருடன் ரத்தினக் கல்லைக் கண்ணுற்றான்'' (தை.ஆ.1.11) என்னும் மந்திரத்திற்குள்ள அர்த்தம் போன்று அந்த மந்திரத்திற்கும் அர்த்தமாம். அறியத்தக்கப் பொருளுக்கு அனைத்து இந்திரியங்களும் இல்லை. எனவே அது எல்லாத் தொடர்புகளையும் விட்டொழித்து பற்றற்றதாக இருக்கின்றது. 'சத்' என்னும் எண்ணம் தொடர்ச்சியாக இருக்கின்ற காரணத்தினால் 'சத்' அன்றோ எல்லாவற்றிற்கும் ஆதாரமாக இருக்கின்றது. அதனால் கானல் நீர் கூட ஆதாரமற்றதாக இல்லை. ஆகவே பிரம்மமே எல்லாவற்றையும் தாங்குகின்றது.

அறியத்தக்கப் பொருள் உள்ளது என்பதை அறிந்து கொள்வதற்கு இது மற்றொரு வழியாகும். அது நிர்குணமானது – சத்துவம், ரஜோ, தமோ என்னும் குணங்களிலிருந்து அது விடுதலை பெற்றதாகும். எனினும், ஓசை முதலியவற்றின் வழியாக இன்பம், துன்பம், மயக்கம் என்று மாறியிருக்கும் சத்துவ, ரஜோ, தமோ குணங்களை அது அனுபவிக்கின்றது.

மேலும்,

**बहिरन्तश्च भूतानामचरं चरमेव च**
**सूक्ष्मत्वात्तदविज्ञेयं दूरस्थं चान्तिके च तत् ॥१५॥**

**பஹிரந்தஶ்ச பூதானாம் அசரம் சரமேவ ச**
**ஸூக்ஷ்மத்வாத் தத் தவிஜ்ஞேயம் தூரஸ்தம் சாந்திகே ச தத் ॥ 15॥**

***பூதங்களுக்கு உள்ளும் புறமுமாவது, அசையும், அசையா பொருளாவது சூக்குமத்தன்மையால் அறிவதற்கரியது; தூரத்திலிருப்பது, அருகிலும் உள்ளது.***

அறியாமையினால் ஆத்மாவாகக் கொள்ளப்பட்ட தோல்வரையிலான உடலைக் கருத்திற்கொண்டு அதனையே எல்லையாகக் கொண்டு 'புறம்' எனக் கூறப்படுகின்றது. அதுபோல் உள்ளிருக்கும் ஆத்மாவைக் கருதி உடலையே எல்லையாகக் கொண்டு 'உள்' எனக் கூறப்படுகின்றது. உள்ளும் புறமுமாகக்

கூறப்பட்டதால் இரண்டிற்கும் இடையில் ஒன்றுமில்லை என்னும் பொருள் தொக்கி நிற்கின்றது. இதனை நீக்குவதற்காகவே பகவான் அது அசையும், அசையாப் பொருளானது என்று கூறுகிறார். கயிற்றிலே பாம்பு தெரிவதுபோல அசையும், அசையா உடல் தோற்றம் எதுவோ அதுவும்தான் அறிய வேண்டிய பொருளாகும் (பிரம்மம்). அசையும், அசையாப் பொருட்களெல்லாம் நம்மால் அறிந்து கொள்ளத்தக்கப் பொருளென்றால், அது "இதுதான்" என்று சுட்டி ஏன் எல்லோராலும் நேரடியாக அறிந்து கொள்ளப்படவில்லை? என்றால், உண்மைதான் அதுவே எல்லாமாக உள்ளது, ஆனால் அது ஆகாயம் போல் சூக்குமமாக இருக்கின்றது. ஆகவே அது அறியத்தக்கதாக இருப்பினும் சூக்குமமாக இருப்பதால் அஞ்ஞானிகட்கு அறியமுடியாததாக இருக்கிறது. ஆனால் ஞானிகட்கோ அது எப்போதும் அறியப்படுவதாகவே இருக்கிறது. இதனைச் சுருதிகள் பின் வருமாறு கூறுகின்றன.

'இதெல்லாம் ஆத்மாவேயாகும்' (பி.உ.2.4.6)

'இதெல்லாம் பிரம்மமேயாகும்' (பி.உ.2.5.1)

அறியப்படாததினால், அஞ்ஞானிகட்கு அது ஆயிரங்கோடி வருடங்களானாலும் அது அடைய முடியாத தூரத்தில் இருக்கிறது. அதே சமயம் ஞானிகட்கு அது அவர்களின் ஆத்மாவாக இருப்பதினால் அவர்களுக்கு மிக அருகில் இருக்கிறது.

அன்றியும்,

**अविभक्तं च भूतेषु विभक्तमिव च स्थितम् ।**
**भूतभर्तृ च तज्ज्ञेयं ग्रसिष्णु प्रभविष्णु च ॥ १६॥**

**அவிபக்தம் ச பூதேஷு விபக்தம் இவ ச ஸ்திதம் ।**
**பூத-பர்த்ரு ச தஜ்ஞேயம் க்ரஸிஷ்ணு ப்ரபவிஷ்ணு ச ॥ 16॥**

***அறியத்தக்கப் பொருள் பூதங்களிடத்துப் பிரிவுபடாததாக இருப்பினும் அது பிரிவு பட்டதுபோல் காணப்படுகின்றது. மேலும் பூதங்களைத் தாங்குவது, விழுங்குவது, உண்டாக்குவது அதுதான்.***

ஒவ்வோர் உடலிலும் அது பிரிக்கப்படாததாக, ஆகாயம் போல் ஒன்றாக இருக்கிறது. உயிர்களிடத்துப் பிரிவு பட்டதுபோல் காணப்படுகிறது. காரணம், உடல்களில் மட்டுமே அது வெளிப்படையாகப் புலப்படுகின்றது. அந்த அறியத்தக்கப் பொருள் பிரபஞ்சம் இருக்கின்ற காலையில் (ஸ்திதி) உயிர்களைத் தாங்குகின்றது. பிரபஞ்சம் அழிக்கப்படும் பொழுது (பிரளயம்) உயிர்களை விழுங்குகின்றது. மீண்டும் பிரபஞ்சத்தைப் படைக்கும் பொழுது (உற்பத்தி) உயிர்களை உண்டாக்குகின்றது. இது கயிற்றிலிருந்து மாயா பாம்பு உண்டாவது போன்றதாகும்.

அறியத்தக்கப் பொருள் எங்கும் உளதாயிருந்தும் அது உணரப்படவில்லையென்றால் அது என்ன இருளா?

இல்லை, அது என்னவென்றால்.

**ज्योतिषामपि तज्ज्योतिस्तमसः परमुच्यते ।**
**ज्ञानं ज्ञेयं ज्ञानगम्यं हृदि सर्वस्य विष्ठितम् ॥१७॥**

**ஜ்யோதிஷாமபி தஜ்யோதிஸ் தமஸ: பரமுச்யதே ।**
**ஜ்ஞானம் ஜ்ஞேயம் ஜ்ஞானகம்யம் ஹ்ருதி ஸர்வஸ்ய விஷ்டிதம் ॥ 17॥**

*அது ஒளிக்கும் ஒளியாக இருளுக்கு அப்பால் உள்ளது என்று சொல்லப்படுகின்றது. அறிவாய், அறியத்தக்கதாய், அறிவினால் அடைய வேண்டிய பொருளாய் எல்லோருடைய இருதயத்திலும் நிலைபெற்றதாய் இருக்கின்றது.*

அந்த அறியத்தக்கப்பொருள் சூரியனைப் போன்று ஒளி பொருட்கெல்லாம் ஒளியாகத் திகழ்கின்றது. ஆத்ம அறிவு ஒளியினால் மட்டுமே சூரியன் போன்றவை பிரகாசிக்கின்றன.

'எந்த ஒளியால் சூரியன் ஒளிபெற்று பிரகாசிக்கின்றானோ' (தை.ப்ரா. 3.12.19).

'அதனுடைய ஒளியால் இவையெல்லாம் பிரகாசிக்கின்றன' (ஸ்வே.உ. 6.14).

என்பவை சுருதி மொழிகளாகும். ஸ்மிருதியில் கூட (பகவத் கீதை 15.12) 'சூரியனைச் சேர்ந்த ஒளி எதுவோ' என்று கூறப்படுகிறது. அது அறியாமை இருளுக்கு அப்பால் உள்ளது. அதாவது அறியாமையினால் பற்றப்படாததாகும்.

பிரம்ம ஞானத்தை எய்துவது அரிதினும் அரிதாகும் என்று எண்ணி விரக்தியுற்ற அர்ஜுனனை உற்சாகப்படுத்தும் முகத்தான் பகவான் கூறுகிறார்: 'அறிவு' (13-7,8,9,10,11) 'அறியத்தக்கது' (13-12,13,14,15,16,17) 'அறிவினால் அடைய வேண்டிய பொருள்' என்னும் இவை மூன்றும் எல்லோருடைய இருதயத்தில், புத்தியில் நிலைபெற்று இருக்கின்றன. அதனாலன்றோ அவை தெளிவாகப் புலப்படுகின்றன.

இதுவரை விவாதிக்கப்பட்டதை நிறைவு செய்வதற்காகப் பின்வரும் சுலோகம் கூறப்படுகின்றது.

**इति क्षेत्रं तथा ज्ञानं ज्ञेयं चोक्तं समासतः ।**
**मद्भक्त एतद्विज्ञाय मद्भावायोपपद्यते ॥१८॥**

**இதிக்ஷேத்ரம் ததாஞானம் ஞேயம் சோக்தம் ஸமாஸத: ।**
**மத்பக்த ஏதத் விஜ்ஞாய மத்பாவாயோபபத்யதே ॥ 18॥**

*இவ்வாறு க்ஷேத்ரமும், அறிவும், அறியவேண்டிய பொருளும் சுருக்கமாக உரைக்கப்பட்டன. எனது பக்தன் இதனை நன்குணர்ந்து எனது நிலைக்குத் தக்கோனாகின்றான்.*

இங்ஙனம் க்ஷேத்ரமும் (13.5-6) அறிவும் (13.7-11) அறிய வேண்டிய பொருளும் (13.12-17) சுருக்கமாக கூறப்பட்டது. இதுவரை வேதங்களின் முழுப்பொருளும், கீதையின் முழுப்பொருளும் சுருக்கமாக எடுத்துரைக்கப்பட்டது. எவன் இந்த மெய்யறிவைப் பெறுதற்குத் தக்கோனாவான்? "பரம புருஷ பகவானாகவும், எல்லாம் வல்ல பரமாச்சாரியனாகவும் இருக்கும் வாசுதேவனாகிய என்னிடத்துத் தனது ஆத்மாவை முற்றிலும் ஒப்படைத்து, தான் காண்பது, கேட்பது, தொடுவது எல்லாம் பகவான் வாசுதேவனே என்னும் புத்தியுடைய எனது பக்தனே அதற்குத் தக்கோனாவான். இந்த மெய்யறிவு எய்தப் பெற்ற எனது பக்தன் பரமாத்மாவாகிய எனது நிலை எய்தப் பெறுகிறான்' - முக்தியடைகிறான் என்பதாம்.

ஏழாம் அத்தியாயத்தில் தாழ்ந்ததும், உயர்ந்ததுமான 'க்ஷேத்ரம்', 'க்ஷேத்ரக்ஞன்' என்னும் இரண்டு பிரகிருதிகள், அல்லது இறைவனின் சக்திகள் விவரிக்கப்பட்டன. மேலும் அவை உயிர்களின் பிறப்பிடம் (7.6) என்றும் கூறப்பட்டன. க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்னும் இந்த இரண்டு சக்திகளிடமிருந்து உயிர்கள் எப்படிப் பிறக்கின்றன என்னும் கேள்விக்குப் பதில் பின்வருமாறு :

**प्रकृतिं पुरुषं चैव विद्ध्यनादी उभावपि ।**
**विकारांश्च गुणांश्चैव विद्धि प्रकृतिसम्भवान् ॥१९॥**

**ப்ரக்ருதிம் புருஷம் சைவ வித்த்யநாதீ உபாவயி**
**விகாராம்ஸ்ச குணாம்ஸ்சைவ வித்தி ப்ரக்ருதிஸம்பவான் ॥ 19॥**

*பிரகிருதி, புருஷன் என்னும் இவையிரண்டும் அநாதி என்று அறிந்துகொள். விகாரங்களுடன் குணங்களும் பிரகிருதியினின்று பிறந்தவை என்றும் அறிந்து கொள்.*

பிரகிருதியும், புருஷனும், இறைவனின் சக்திகளாகும். அவற்றிற்கு ஆதியில்லை அதனால் அநாதியாகும். இறைவன் நித்தியன் ஆதலினால் அவருடைய சக்திகளும் நித்தியமானவையாகவே இருத்தல் வேண்டும். இந்த இரண்டு சக்திகளும் இருப்பதினாலேயே இறைவன் இறைவனாக இருக்கின்றான் என்பதாம். பிரபஞ்சம் உண்டாவதற்கும், நிலைப்பதற்கும், அழிவதற்கும் இந்த இரண்டு சக்திகளுமே காரணமாகின்றன. அநாதியான அந்த இரு சக்திகளுமே சம்சாரத்திற்குக் காரணமாகும்.

சிலர் அந்த இரண்டும் அநாதி அல்லவென்று, தத்புருஷ ஸமாஸத்தைக் கூறுகின்றனர். (கூட்டுவாக்கியத்தை 'ந' 'ஆதி' - 'அதுவே காரணமல்ல' என்று

பிரித்துப் பொருள் கொள்கின்றனர்). அதனால் அவர்கள் இறைவனே பிரபஞ்சத்திற்குக் காரணம் என்கின்றனர். "மேலும் பிரகிருதி, புருஷன் என்னும் இவையிரண்டும் அநாதியானவையென்றால், பிரபஞ்சத்திற்கு அவை காரணமாகுமேயன்றி, இறைவன் கர்த்தாவாக மாட்டான்" என்பது அவர்கள் வாதமாகும்.

இந்த வாதத்தில் உயிர் இல்லை. ஏனெனில், பிரகிருதியும், புருஷனும் உண்டாவதற்கு முன் ஆளப்படும் பொருள் ஏதும் இல்லாமமையினால் இறைவன் இறைவனில்லை என்றாகும், முக்தி இல்லை என்றாகும், சாஸ்திரம் வீண் என்றாகும், பந்தமும், விடுதலையும் இல்லை என்றாகும்.

மாறாக இறைவனும் அவருடைய சக்தியும் நித்தியமானவை என்றால், இவையெல்லாம் ஏற்புடையதாகும். எப்படி? வேறுபாட்டிற்குக் காரணமான இறைவனின் சக்தியாகவும், முக்குண வடிவமாகவும் விளங்கும் மாயையானது புத்தி முதல் உடம்பு ஈறாக உள்ள விகாரங்களுக்கும், இன்பம், துன்பம், மயக்கம் போன்ற எண்ணங்களின் வடிவங்களாக மாறியிருக்கும் முக்குணங்களுக்கும் பிறப்பிடம் என்பதை அறிந்து கொள். இவையெல்லாம் பிரகிருதியின் வேறுபாடு என்றும் அறிந்துகொள். (பிரகிருதி அநாதியாகவும், விகாரங்கள் மற்றும் குணங்களின் பிறப்பிடமாகவும் இருப்பதினால் ஆத்மா நிர்விகாரியாகவும், நிர்க்குணமாகவும் இருக்கிறது).

பிரகிருதியைப் பிறப்பிடமாகக் கொண்ட இந்த விகாரங்களும், குணங்களும் யாவை?

பதில் வருமாறு :

**कार्यकारणकर्तृत्वे हेतुः प्रकृतिरुच्यते ।**
**पुरुषः सुखदुःखानां भोक्तृत्वे हेतुरुच्यते ॥ २०॥**

**கார்ய காரண கர்த்ருத்வே ஹேது: ப்ரக்ருதிருச்யதே ।**
**புருஷ: ஸுகது:க்கானாம் போக்த்ருத்வே ஹேதுருச்யதே ॥ 20॥**

***காரியம் மற்றும் கருவிகள் உண்டாவதற்கு பிரகிருதி காரணம் என்பர். இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்கு புருஷன் காரணம் என்பர்.***

காரியம் என்பது - உடல். கருவிகள் என்பவை உடலிலுள்ள பதின்மூன்று புலன்களாகும் (அறிபுலன்கள் ஐந்து, செயற்புலன்கள் ஐந்து, மனம், புத்தி, அகங்காரம் மூன்று, ஆக மொத்தம் பதின்மூன்று புலன்கள்). விகாரங்கள் என்று முன்னர் குறிப்பிடப்பட்ட உடலுக்குக் காரணமான ஐந்து பூதங்களும், ஐந்து புலனுகர்ச்சிப் பொருட்களும் இங்கு காரியம் என்று குறிப்பிடப்படுகிறது. பிரகிருதியைப் பிறப்பிடமாகக் கொண்ட, இன்ப, துன்ப, மயக்க வடிவங்களான குணங்கள் கருவிகள் என்று குறிப்பிடப்படுகின்றன. காரியங்களுக்கும், கருவிகளுக்கும் பிறப்பிடமாகப் பிரகிருதி இருப்பதினால்

அது காரணம் எனப்படுகின்றது. இவ்வாறு காரியங்களையும், கருவிகளையும் உண்டாக்குவதால் பிரகிருதியே சம்சாரத்திற்குக் காரணமாம்.

'காரியம் மற்றும் கருவிகள் உண்டாவதற்கு' என்று கூறப்பட்டிருப்பதால் எது எதனுடைய வேறுபாடோ, 'விகாரமோ' அது காரியமாகும். அப்படி விகாரமடைந்த 'விகாரி' காரணமாகும். காரிய, காரணத்தை உண்டாக்குவதால் பிரகிருதியே காரணமாகும். அல்லது பதினாறு விகாரங்கள் (அறிபுலன் ஐந்து, செயற்புலன் ஐந்து, மனம் ஒன்று, புலனுகர்ச்சிப் பொருட்கள் ஐந்து) காரியங்களாகும். ஏழு விகாரங்கள் (மஹத், அகங்காரம், தன்மாத்திரைகள் ஐந்து) காரணமாகும். இவையனைத்தையும் உண்டாக்குவதால் பிரகிருதி காரணம் எனப்படுகின்றது. புருஷர் எவ்வாறு சம்சாரத்திற்குக் காரணம் என்பது விளக்கப்படுகின்றது. புருஷன், ஜீவன், க்ஷேத்ரக்ஞன், அனுபவிப்பவன் என்பவை ஒரு பொருள் பல சொற்களாகும். இன்ப துன்பங்களை அனுபவிப்பதற்குப் புருஷன் காரணம் என்று கூறப்படுகிறான்.

கார்ய காரணங்களை உருவாக்குவதாலும், இன்பதுன்பங்களை அனுபவிப்பதாலும் பிரகிருதியும், புருஷனும் ஏன் சம்சாரத்திற்குக் காரணம் என்று கூறப்படுகின்றது? என்னும் கேள்விக்குப் பதில் பின்வருமாறு: பிரகிருதி, தன்னை கார்ய காரணங்களாக, உடல் மற்றும் புலன்களாக இன்ப துன்பமாக மாற்றிக் கொள்ளவில்லை என்றாலோ, புருஷன் அவற்றை உணரவில்லை என்றாலோ, சம்சாரம் என்பது எங்கிருந்து வரும்? என்றால், உடல், புலன்கள் இன்ப, துன்பம், காரண, காரியங்களாக விகாரப்பட்டு அனுபவிக்கப்படும் பிரகிருதியோடு, அதற்கு எதிரான புருஷனுக்கு அனுபவிக்கும் தன்மையினால் அறியாமை வடிவமாகிய தொடர்பு எப்போது உண்டாகின்றதோ அப்போது சம்சாரம் உண்டாகும். எனவே பிரகிருதியும் புருஷனும், உடல் புலன்களை உருவாக்குவதாலும் இன்பதுன்பங்களை அனுபவிப்பதாலும் சம்சாரத்திற்குக் காரணம் என்று கூறப்பட்டது மிகச்சரியே. இப்போது சம்சாரம் என்பது என்ன? என்றால், இன்பதுன்பங்களை அனுபவிப்பதே சம்சாரமாகும். சம்சாரி என்பது புருஷன் இன்பதுன்பங்களை அனுபவிக்கும் நிலையாகும்.

புருஷன் சம்சாரத்தில் கிடந்து உழன்று ஏன் இன்ப துன்பங்களை அனுபவிக்கின்றான்?

**पुरुषः प्रकृतिस्थो हि भुङ्क्ते प्रकृतिजान्गुणान् ।**
**कारणं गुणसङ्गोऽस्य सदसद्योनिजन्मसु ॥ २१॥**

**புருஷ: ப்ரக்ருதிஸ்தோ ஹி புங்க்தே ப்ரக்ருதிஜான்குணான் ।**
**காரணம் குணஸங்கோ (அ)ஸ்ய ஸதஸத்யோனி ஜன்மஸு ॥ 21॥**

***புருஷன் பிரகிருதியில் இருந்துகொண்டு, பிரகிருதியினிடம் பிறக்கும் குணங்களை அனுபவிக்கின்றான். குணங்களிடம் இவனுக்குள்ள பற்றுதலே, இவன் நல்லனவும், தீயனவுமாகிய பிறவிகளில் பிறப்பதற்குக் காரணமாகிறது.***

புருஷனாகிய அனுபவிக்கின்றவன், அறியாமையாகிய பிரகிருதியில் இருந்து கொண்டு உடல் மற்றும் புலன்களைத் தான் என்று கருதுவதால் பிரகிருதியினின்று தோன்றும் இன்பம், துன்பம், மயக்கம் ஆகிய துன்பங்களை, 'நான் இன்பம் உடையேன், நான் துன்பமுடையேன், நான் மயக்கமுடையேன், நான் அறிவுடையேன்' என்று கருதுகிறான். அறியாமையாகிய அவித்யை பிறப்பிற்குக் காரணமாக இருந்த போதிலும், இன்பம், துன்பம், மயக்கம் என்று தான் அனுபவிக்கும் குணங்களின் மீதான இவனது பற்றே பிறப்பிற்கு முக்கியக் காரணமாகும். இதனை 'எதனை விரும்புகின்றானோ அதனை அடைகிறான்' (பி.உ. 4.4.5) என்று சுருதிகள் உறுதிசெய்கின்றன. அதனால்தான் பகவான் இங்கே 'அனுபவிப்பவனுக்குக் குணங்களின் மீதுள்ள பற்றே அவனது நற்பிறவிகளுக்கும், தீயபிறவிகளுக்கும் காரணம் என்று கூறுகிறார். அல்லது நற்பிறவி, தீயப்பிறவிகளின் மூலம் இவனது சம்சாரத்திற்குக் குணங்களின் மீது இவனுக்கு இருக்கும் பற்றே காரணம் என்றும் பொருள் கொள்ளலாம். நற்பிறவி என்றால் தேவபிறப்பாகும். தீயப்பிறவி என்றால் விலங்கு பிறப்பாகும். நல்லதும் தீயதும் சேர்ந்த பிறவி மனிதப் பிறப்பாகும்.

அதன் விளக்கம் பின்வருமாறு : பிரகிருதியில் இருக்கும் தன்மை அவித்யையாகும். குணங்களின் மீதுள்ள பற்று காமம் ஆகும். இவையிரண்டுமே சம்சாரத்திற்குக் காரணமாம். (அவித்யை - உபாதான காரணம். காமம் - நிமித்த காரணம் - ஆ).

இவ்விரண்டும் நீங்குவதற்குக் காரணமாக இருப்பவை துறவோடு கூடிய ஞான வைராக்கியமாகும். இந்த உண்மையானது கீதா-சாஸ்திரத்தில் மிகத் தெளிவாக உபதேசிக்கப்பட்டுள்ளது. க்ஷேத்ர, க்ஷேத்ரக்ஞனைப் பற்றிய அந்த அறிவு 'எந்த அறிவினால் இறவாமையை எய்துகின்றானோ' என்று முன்னர் விளக்கப்பட்டது (13.12). மேலும் வேறானவற்றை நீக்குவதாலும் (13.12). அதன் தன்மையல்லாதவற்றை அதன் மீது ஏற்றுவதாலும் (13.13) என்றும் இது கூறப்பட்டது.

மீண்டும் அந்த அறிவே நேரடியாக விளக்கப்படுகிறது.

**उपद्रष्टानुमन्ता च भर्ता भोक्ता महेश्वरः ।**
**परमात्मेति चाप्युक्तो देहेऽस्मिन्पुरुषः परः ॥२२॥**

**உபத்ரஷ்டானுமந்தா ச பர்தா போக்தா மஹேஶ்வர ।**
**பரமாத்மேதி சாப்யுக்தோ தேஹே(அ)ஸ்மின் புருஷ: பர: ॥ 22॥**

***அருகிருந்து பார்ப்பவன், அனுமதி தருபவன், தாங்குபவன், அனுபவிப்பவன், பரமேசுவரன், பரமாத்மா - இவனே இந்த உடலினுள் இருக்கும் பரம புருஷனாவான்.***

அருகிருந்து பார்ப்பவன் - தான் தொழில் செய்யாவிடினும் அருகில் பார்த்துக் கொண்டிருப்பவன், கண்காணிப்பவன். யாகம் செய்யும் பொழுது புரோகிதர்களும், யாகத்தின் எஜமானனும் தங்கள் காரியங்களில்

மிகவும் தீவிரமாக ஈடுபட்டிருக்கும் பொழுது, யாகம் செய்வதில் தேர்ச்சி பெற்ற ஒருவன், தான் ஒன்றும் செய்யாமல், அதில் ஈடுபட்டிருப்பவர்களின் குற்றங்களையும், குணங்களையும் அருகிலிருந்து பார்த்துக் கொண்டிருப்பது போன்றதாகும் இது. அல்லது உடல், கண், மனம், புத்தி, ஆத்மா போன்றவை பார்க்கும் பொருள்களாகும். அவற்றுள் வெளியிலிருந்து பார்ப்பது உடலாகும். அது தொடங்கி மிகவும் உள்ளே உள்ளதும் மிக அருகிலிருந்து பார்ப்பதும் ஆத்மாவாகும். ஏனெனில் அதைவிட மிகவும் உள்ளேயிருந்து பார்க்கும் பொருள் வேறொன்றுமில்லை. இவ்வாறு மிகவும் உள்ளேயிருந்து பார்க்கும் பொருளாக இருப்பதால் அது அருகிலிருந்து பார்க்கும் பொருள் அல்லது யாகத்தைக் கண்காணிப்பவன் போல எல்லாவற்றையும் கண்காணிப்பதால் அது கண்காணிக்கும் பொருள் எனப்படுகிறது. செயல்களில் ஈடுபடுவோர்க்கு அச்செயலைச் செய்வதற்கான அனுமதியளிப்பவனும் அவனேயாவான். அல்லது உடல் மற்றும் புலன்களின் செயல்களில் அவன் பங்கு கொள்வதில்லை எனினும் அவற்றிற்குத் துணையாக அச்செயல்களைச் செய்பவன் போலக் காணப்படுகிறான். அதனால் அவன் அனுமதியளிப்பவன் ஆவான். அல்லது அச்செயல்களைச் செய்ய விடாது தடுக்காமல், அவற்றிற்குச் சாட்சியாக இருப்பதால் அவன் அனுமதியளிப்பவன் ஆவான். 'தாங்குபவர்' - ஆத்மா என்னும் மெய்ப்பொருளே இங்கு தாங்குபவன் எனப்படுகிறான். காரணம், சைதன்யத்தின் தோற்றங்களாக சைதன்யமான ஆத்மாவிற்கு சேவை செய்ய வேண்டும் என்பதற்காக ஒருங்கு கூடியுள்ள உடல், மனம், புத்தி புலன்கள் முதலியவற்றைத் தாங்கிக் கொண்டிருப்பது சைதன்யமான ஆத்மாவே ஆதலின் அவன் (புருஷன்) 'தாங்குபவன்' எனப்படுகிறான். ஆத்மாவே அனுபவிப்பவன், எனப்படுகிறான் காரணம் ஆத்மா 'நித்ய சைதன்ய ஸ்வரூபம்' ஆகும். நெருப்பின் இயற்கை வெம்மை என்பது போல் ஆத்மாவின் இயற்கை நித்திய அறிவாம். இன்பம், துன்பம், மயக்கம் என்று புத்திக்குத் தொடர்புடைய எல்லா விஷயங்களும், அறிவு வடிவமான ஆத்மாவினால், விழுங்கப் பெற்றவை போலக் காணப்பட்டு வெவ்வேறாகத் தெளிவாகப் புலப்படுகின்றன. ஆகவே ஆத்மா 'அனுபவிப்பவன்' எனப்படுகிறான். அவன் அனைவரின் ஆத்மாவாகவும் சுதந்திரமுடையவனாகவும்இருப்பதினால் அவன் 'மகேசுவரன்' ஆவான். அறியாமையின் காரணமாக உள்ளிருக்கும் ஆத்மாவாகக் கற்பிக்கபடுகின்ற உடல் முதல் அவ்யக்தம் வரை உள்ள எல்லாவற்றிற்கும் அவன் உயர்ந்த ஆத்மா ஆவான். அருகிருந்து பார்க்கும் தன்மையுள்ள மேலான ஆத்மா ஆவான். எனவே அவன் 'பரமாத்மா' ஆவான். சுருதிகளில் அவனே பரமாத்மாவாகக் குறிப்பிடப்படுகிறான். யார்? - உடலினுள் உறையும் பரமாத்மா. அவன் அவ்யக்தத்திற்கும் அப்பாற்பட்டவன் ஆவான். அவனே இனி அத்தியாயம் 15.17ல் உயர்ந்த புருஷனாகக் கூறப்படுவான்..

அத்தியாயம் 13.2ல் "க்ஷேத்ரக்ஞனாகவும் என்னை அறி" என்று கூறப்பட்ட விஷயம் எதுவோ அது முற்றிலும் விளக்கி முடிக்கப்பட்டுள்ளது. அந்த ஆத்மாவை அறிந்தவன் பின்வருமாறு விளக்கப்படுகிறான்.

य एवं वेत्ति पुरुषं प्रकृतिं च गुणैः सह ।
सर्वथा वर्तमानोऽपि न स भूयोऽभिजायते ॥ २३॥

ய ஏவம் வேத்தி புருஷம் ப்ரக்ருதிம் ச குணை: ஸஹ ।
ஸர்வதா வர்த்தமானோ (அ)பி ந ஸ பூயோ (அ) பிஜாயதே ॥ 23॥

*இவ்வாறு புருஷனையும், பிரகிருதியையும் அதன் குணங்களையும் அறிந்தோன், எப்படிப்பட்டவனாயினும் அவன் மீண்டும் பிறப்பதில்லை.*

எவன் புருஷனை மேலே கூறியுள்ளபடி 'இதோ நான் இருக்கின்றேன்' என்று ஆத்மாவாக அறிகின்றானோ, அதுபோல் ஆதியில்லாததாய், இன்னதென்று சொல்லுதற்கு அரியதாய், அனர்த்தங்களுக்கெல்லாம் அடிக்காரணமாக விளங்கும் அவித்யை என்னும் பிரகிருதியையும், அதன் வேறுபாடுகளையும் அறிகின்றானோ அவன் எப்படிப்பட்டவனாக இருப்பினும் (விதிப்படி நடந்தாலும் அல்லது விளக்கியதைச் செய்தாலும்) மீண்டும் பிறப்பதில்லை. 'அபி' என்னும் சொல் (எப்படியிருந்தாலும்) நல்லொழுக்கத்தில் நிலைநிற்கும் ஒருவன் மீண்டும் பிறப்பதில்லை எனச் சொல்லவும் வேண்டுமோ? எனச் சுட்டுகிறது.

மறுப்பு : அவ்வாறெனில் ஞானம் பிறந்த பின்பு மறுபிறப்பு இல்லை என்றாகிறது. ஞானம் பெறுவதற்கு முன் செய்த கர்மங்களும், பெற்றப்பின் செய்த கர்மங்களும், முந்தைய பல பிறவிகளில் செய்த கர்மங்களும் அவற்றின் பயனைக் கொடாது அழிந்து போகும் என்பது ஒரு சிறிதும் பொருந்தாது. காரணம் கர்மம் தனது பலனைத் தராது அழிவதில்லை. ஆகவே மூவகைக் கர்மங்களும், மூவகைப் பிறவிகளை உண்டாக்குதல் வேண்டும். எல்லாம் ஒருங்கிணைந்து ஒரு பிறப்பையாவது தருதல் வேண்டும். இல்லையேல் செய்தன அழியும் அளவில் விதிகளின் மீது அவநம்பிக்கை உண்டாகும். சாத்திரங்களும் பயனற்றுப் போம். ஆகவே 'அவன் மீண்டும் பிறப்பதில்லை' என்பது பொருந்தாது.

பதில் : அவ்வாறன்று. அதற்கு நூற்றுக்கணக்கானச் சுருதிகள் ஆதாரமாக இருக்கின்றன. உதாரணமாக 'அவனது கர்மங்கள் அழிந்து போகின்றன' (மு.உ. 2.2.8) ''பிரம்மத்தை அறிபவன் பிரம்மமாகிறான்'' (மு.உ. 3.2.9) ''அவனுக்கு அதுவரைமட்டுமே தாமதம்'' (சா.உ. 6.14.2.). ''கர்மங்கள் எல்லாம் நாணல் பூப்பஞ்சுபோல் எரிக்கப்படுகின்றன'' (சா.உ. 5.24.3) என்பவை ஒரு சிலவாகும். பகவத்கீதையிலும் (4.37) ''விறகினைப் போல் எல்லாக் கர்மங்களும் எரித்துச் சாம்பலாக்கப்படும்'' என்று உறுதிசெய்யப்படுகிறது. அது 18.66ல் மீண்டும் உறுதிசெய்யப்படுகிறது. மேலும் யுக்தியும் இதனையே உறுதி செய்கின்றது. ஆசை மற்றும் அறியாமையின் காரணமாகச் செய்யப்படும் செயல்களே மற்றொரு பிறவிக்கு அடித்தளமிடுகின்றன. இங்கு கீதையிலும் பகவான் அகங்காரம் மற்றும் ஆசையின் காரணமாகச் செய்யப்படும் கர்மங்களால் மட்டுமே மறுபிறவி உண்டாகின்றதென்றும், மற்றையக்

கர்மங்களால் அல்லவென்றும் பலவிடங்களில் உறுதி செய்கின்றார். "தீயினால் வறுக்கப்பட்ட விதைகள் மீண்டும் முளையாதவாறு போல், ஞானத்தீயினால் வறுக்கப்பட்ட ஆசை முதலிய குற்றங்களால் உடல் மீண்டும் உண்டாவதில்லை (வனபர்வம். 200.110).

மறுப்பு : ஞானம் பெறப்பட்டபின் செய்த கர்மங்கள் ஞானத்தோடு ஒருங்கு நிகழ்வனவாதலால், ஞானத்தீயினால் எரிக்கப்படும் என்பதை ஒப்புக் கொள்ளும் அதே சமயம், ஞானம் பெறுவதற்கு முன்பு செய்த கர்மங்களும், இதற்கு முன்பு பல்வேறு பிறவிகளில் செய்தகர்மங்களும் ஞானத்தீயினால் எரிக்கப்படுவது சாத்தியமன்று.

பதில் : அப்படியன்று. "எல்லாக் கர்மங்களும் எரிக்கப்படுகின்றன" ப.கீ. 4.37.

மறுப்பு : ஆனால், ஞானம் பெற்ற பின் செய்த கர்மங்களே ஞானத்தீயினால் எரிக்கப்படுகின்றன என்று தானே கூறப்படுகின்றது.

பதில் : இல்லை. அவ்வாறு வரையறுத்தற்குக் காரணமில்லை.

மேலும், பலன் கொடுக்கத் தலைப்பட்டதின் மூலம் இப்போதைய உடலைக் கொடுத்தக் கர்மங்கள் ஞானம் பெற்றப் பின்பும் அழிந்து போகாததுபோல், பலன் கொடுக்கத் தொடங்காதக் கர்மங்களும் அழிந்து போவதில்லை என்பதே ஏற்புடைத்தாகும் என்பது பொருந்தாது. ஏன்? அக்கர்மங்கள் வில்லினின்று எய்யப்பட்ட அம்பு போல் பலனைக் கொடுக்கத் தலைப்பட்டவையாகும். ஓர் குறியை நோக்கிச் செலுத்தப்பட்ட அம்பு அக்குறியைத் துளைத்தப் பின்னர் தன் வேகம் குறைந்து கீழே விழுந்து ஓய்கின்றது. அதுபோல் உடல் உருவாவதற்குக் காரணமானக் கர்மங்கள், உடலைக் கொடுத்தப்பின்னரும் வாசனா வலிமையின் வேகம் குறையும் வரை தொடர்ந்து இருந்து கொண்டேயிருக்கின்றன. ஆனால் அதேசமயம் வில்லில் பொருத்தப்பட்டும், செலுத்தப்படாத அம்பு மீண்டும் எடுத்துக் கொள்ளப்படுவதுபோல் பலன் கொடுக்கத் தலைப்படாதக் கர்மங்கள் மெய்யறிவினால் சுட்டெரிக்கப்படுகின்றன. ஆகவே ஞானியின் உடல் மரித்தப் பின்பு "அவன் மீண்டும் பிறப்பதில்லை" என்று கூறியது சரிதான்.

அடுத்து ஆத்ம உணர்விக்காகத் தியானம் போன்ற மற்றைய வழிமுறைகள் விளக்கப்படுகின்றன.

ध्यानेनात्मनि पश्यन्ति केचिदात्मानमात्मना
अन्ये साङ्ख्येन योगेन कर्मयोगेन चापरे ॥ २४॥

த்யானேனாத்மனி பஶ்யந்தி கேசித் ஆத்மானம் ஆத்மனா
அன்யே ஸாங்க்யேன யோகேன கர்மயோகேன சாபரே ॥ 24॥

*சிலர் தியானத்தால் அகத்தினுள் தாமே ஆத்மாவைக் காண்கின்றனர். வேறு சிலர் சாங்கிய யோகத்தால் காண்கின்றனர். மற்றுஞ்சிலர் கர்மயோகத்தால்.*

தியானமென்பது ஓசை முதலிய விஷயங்களினின்று செவி முதலியப் புலன்களைப் பிரித்து ஒடுக்கி, மனத்தையும் அகத்தினுள் இருக்கும் அறிவுப் பொருளினிடத்து ஒடுக்கி அப்பொருளையே ஆழ்ந்து சிந்திப்பதாகும். "கொக்கு தியானிப்பது போல், பூமி தியானிப்பது போல், மலைகள் தியானிப்பன போல் என்பவை சில உதாரணங்களாகும் (சா.உ. 7.6.1). இவ் உவமைகளிலிருந்து தியானம் என்பது எண்ணெயின் ஒழுக்கைப் போல் தொடர்ச்சியான இடையறாத சிந்தனையாகும் என்றாகிறது. யோகிகள் இத்தியானத்தினால் அதாவது தியானத்தால் தூய்மையடைந்த அந்தக் கரணத்தினால் புத்தியினுள் ஆத்மாவை அதாவது அறிவுப் பொருளைக் காண்கின்றனர். "வேறு சிலர் சாங்கிய யோகத்தால் காண்கின்றனர்." இங்கே சாங்கியமென்பது, சத்துவ, ரஜஸ், தமஸ் என்னும் குணங்கள் என்றும், ஆத்மா, இவற்றிற்குச் சாட்சியாக, குணங்களுக்கு வேறாயுள்ளது என்றும் சிந்த்தித்தலாகும். சிலர் அந்த சாங்கிய யோகத்தால் ஆத்மாவை அந்தக் கரணத்தின் மூலம் காண்கின்றனர். இறைவனுக்கே எல்லாம் அர்ப்பணம் என்னும் எண்ணத்தினால் செய்யப்படுவதால், இங்கு 'கர்மம்' என்பது 'கர்ம-யோகம்' எனப்படுகின்றது. இக்கர்மத்தால் மனதைத் தூய்மை செய்து ஞானம் பெறுவதின் மூலம் சிலர் ஆத்மாவைக் காண்கின்றனர்.

**अन्ये त्वेवमजानन्तः श्रुत्वान्येभ्य उपासते ।**
**तेऽपि चातितरन्त्येव मृत्युं श्रुतिपरायणाः ॥ २५॥**

**அன்யே த்வேவம் அஜானந்த: ஶ்ருத்வான்யேப்ய உபாஸதே ।**
**தே(அ)பி சாதிதரந்த் யேவ ம்ருத்யும் ஶ்ருதி - பராயணா: ॥ 25॥**

*இத்னை அறியாத வேறுசிலர் ஆத்மாவைப் பற்றிப் பிறரிடம் கேட்டு அதன்படி வழிபடுகின்றனர். கேட்டதையேக் கதியாகக் கொண்ட அவர்களும் கூட மரணத்தை வென்று விடுகின்றனர்.*

மேலே குறிப்பிடப்பட்டுள்ள வழிகள் ஏதேனும் ஒன்றின் மூலம் ஆத்மாவை அறியாதவர்கள், பிறரிடமிருந்து அல்லது ஆச்சாரியர்களிடமிருந்து உபதேசம் பெற்று அவ் உபதேசத்தின்படி பயபக்தியுடன் வழிபடுகின்றனர். அல்லது தியானிக்கின்றனர். அவர்களும் கூட சாதலில் முடிவடையும் இச்சம்சாரத்தைக் கடந்து விடுகின்றனர்.

"கேட்டதையே சிறந்த கதியாகக் கொண்ட" அதாவது தாம் பிறரிடம் கேட்டதையே, மோட்சத்திற்குச் சாதனமாகக் கொள்ளுதல் என்று பொருளாகும். இவர்கள் பிறரது உபதேசத்தையே பிரமாணமாகக் கொள்வர், தாமாகவே பகுத்தறியும் திறனற்றவர்கள். பிரமாண விஷயத்தில், சுதந்திரமாகத் தாமே

பகுத்தறியும் திறனுடையோர், மரணத்தை வெல்வர் என்று கூறவும் வேண்டுமோ?

"க்ஷேத்ரக்ஞனை நானாகவும் அறி" என்னும் (13-2). அதாவது ஈசுவரனும், க்ஷேத்ரக்ஞனும் ஒன்று என்னும் அறிவானது முக்திக்கு சாதனமாகக் கூறப்பட்டுள்ளது. (13-12). அதற்கான காரணத்தை விளக்கும் முகத்தான், இச்சுலோகம் தொடங்கப் பெறுகின்றது.

**यावत्सञ्जायते किञ्चित्सत्त्वं स्थावरजङ्गमम् ।**
**क्षेत्रक्षेत्रज्ञसंयोगात्तद्विद्धि भरतर्षभ ॥२६॥**

**யாவத் ஸஞ்ஜாயதே கிஞ்சித் ஸத்த்வம் ஸ்தாவரஜங்கமம் ।**
**க்ஷேத்ர-க்ஷேத்ரஜ்ஞ - ஸம்யோகாத் தத் வித்தி பரதர்ஷப ॥ 26॥**

*பரதர் ஏறே, ஸ்தாவரமும், ஜங்கமுமான (அசைகின்ற, அசையாத) யாதொரு பொருள் உண்டாகின்றதோ அது க்ஷேத்திரமும், க்ஷேத்ரக்ஞனும் தொடர்பு கொள்வதால் உண்டாகின்றது என்று அறிவாயாக.*

அசையும், அசையா உயிர் எதுவொன்று தோன்றினாலும் அது க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் தொடர்பினால் உண்டாவதாக அறிந்து கொள் பரதர் ஏறே.

மறுப்பு : க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்னும் இருவருக்கும் இடையில் உண்டாகும் தொடர்பு யாது? உறுப்புக்கள் ஒன்றோடொன்று சேர்வதின் மூலமாக வரும் 'சம்யோகம்' என்னும் ஓர் வகைத் தொடர்பு கயிற்றுக்கும், குடத்திற்கும் உண்டாவது போல், க்ஷேத்ரத்தோடு, க்ஷேத்ரக்ஞனுக்கு நிகழாது. காரணம் இங்கு க்ஷேத்ரக்ஞன் ஆகாயம் போல் உறுப்புக்கள் அற்றவனாக இருக்கின்றான். க்ஷேத்திரத்திற்கும், க்ஷேத்ரக்ஞனுக்குமிடையே காரண காரியத் தொடர்பு இல்லலையாதலின் அவர்களுக்கிடையே 'ஸமவாயம்' அதாவது பிரிதலின்றி ஒருங்கு சேர்ந்திருத்தல் என்னும் உறவு இல்லை.

பதில் : கயிறு, சிப்பி முதலியவற்றின் மேல், அவற்றைப் பகுத்தறியாமையினால் ஏற்றப்பட்ட பாம்பு, வெள்ளி முதலியவற்றின் தொடர்பு போன்று, வெவ்வேறு தன்மையுள்ள விஷய விஷமிகளான க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞனை இப்படிப்பட்டது இத்தன்மையன் என்று பகுத்தறியாமையினால் ஒன்றில் மற்றொன்றையும், அவற்றின் தன்மைகளையும் ஏற்றுதலாகியத் தொடர்பாம். (அதாவது தலைதடுமாற்றமாக ஒன்றில் மற்றொன்றைக் கண்டு மயங்கும் தொடர்பாம்) ஏற்றிக் காண்பதாகிய இத்தொடர்பு அறியாமையே ஆகும். இந்த அறியாமை க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞனுக்கிடையிலான வேற்றுமைகளைப் பகுத்தறியும் ஞானம் பெறும் பொழுது மறைந்து விடும். அதாவது இந்த அறியாமையானது, 'அது உளதென்பதுவுமன்று, இலதென்பதுவுமன்று' (ப.கீ.13-12) என்று கூறும் பகவத் கீதை மற்றும் பிற சாத்திரங்களின் துணைக் கொண்டு, முஞ்ஜை என்னும் புல்லினின்று அதன் நடுவிலுள்ள குருத்தைப் பிரிப்பது போல்,

க்ஷேத்ரத்தினின்று க்ஷேத்ரக்ஞனைப் பிரித்து ஒருவன் உபாதி வேற்றுமைகள் அற்ற அறிய வேண்டிய பிரம்மத்தை மெய்யுணர்வினால் காணும்பொழுது நீங்குகின்றது. அதன்பின் அவன் மாய யானைகள் மற்றும் மாளிகைகள் போன்றும் கனவில் காணும் கந்தர்வ நகரம் போன்றும் உண்மையில் இல்லாததேயான க்ஷேத்ரம் உள்ளது போல் தோன்றுகின்றது என்று உணர்கிறான். 'எவன் இவ்வாறு உணர்கின்றானோ' (ப.கீ.13-23) என்பதற்கேற்ப அவன் மீண்டும் பிறப்பதற்கானக் காரணம் ஒழிந்து விடுவதால் ஞானி மீண்டும் பிறப்பதில்லை என்று நேரடியாகக் கூறப்பட்டது.

'அவன் மீண்டும் பிறப்பதில்லை' (ப.கீ.13-23) என்று மெய்யறிவின் பயனானது அறியாமை முதலிய சம்சார வித்துக்கள் ஒழிவதின் மூலமாகப் பிறப்பற்றுப் போகிறது என்று கூறப்பட்டது. அதுபோல் பிறவிக்குக் காரணமாக அறியாமையினாலுண்டாகும் க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞனின் தொடர்பும் கூறப்பட்டது. இங்கே மீண்டும் அந்த அறியாமையைப் போக்கும் மெய்யறிவானது தெளிவாக எடுத்துக் கூறப்படுகிறது.

**समं सर्वेषु भूतेषु तिष्ठन्तं परमेश्वरम् ।**
**विनश्यत्स्वविनश्यन्तं यः पश्यति स पश्यति ॥२७॥**

**ஸமம் ஸர்வேஷு பூதேஷு திஷ்ட்டந்தம் பரமேஶ்வரம் ।**
**விநஶ்யத்ஸ்வவிநஶ்யந்தம் ய: பஶ்யதி ஸ பஶ்யதி ॥ 27॥**

***எல்லாப் பொருள்களிலும் நிலைபெற்றிருப்பவனும், அழியும் பொருள்களில் கூட அழியாதிருப்பவனுமாகிய பரமேசுவரனை எவன் காண்கின்றானோ அவனே காட்சியுடையோன்.***

வேற்றுமையின்றி சரிசமமாக இருக்கின்றார் - எவற்றுள்? பிரம்மா முதல் அசையாப் பொருட்கள் அனைத்திலும் நிலை பெறுகின்ற - யாரை? உடல், புலன்கள், மனம், புத்தி, அவ்யக்தம், ஜீவாத்மா என்பவற்றை நோக்க மேலானவனும், அவற்றை ஆள்கின்றவனுமாகிய பரமேசுவரனை, அவன் எல்லா உயிர்களிடத்தும் சரிசமமாக நிலைபெறுகின்றான். அப்பரமேசுவரன், அழியும் பொருட்களிலும் இருக்கின்றார் என்றும், அதிலும் அவர் 'அழிவற்றவராக' இருக்கின்றார் என்றும் சிறப்பாகக் குறிப்பிடப்படுகின்றார். பரமேசுவரனுக்கும் மற்றுமுள்ள பொருட்களுக்கும் இடையிலுள்ள வேற்றுமையை எடுத்துக் காட்டுவதற்காகவே அவர் இவ்வாறு சிறப்பாகக் குறிப்பிடப்படுகின்றார். எல்லா விகாரங்களுக்கும் (பிறத்தல், இருத்தல், வளர்தல், முதிர்தல், தேய்தல், அழிதல் என்னும் விகாரங்கள்) அடிநாதமாக இருப்பது பிறப்பு என்னும் விகாரமாகும். பிறப்பைத் தொடர்ந்து வரும் எல்லா விகாரங்களும் அழிதல் என்னும் விகாரத்தோடு நின்று போய்விடுகின்றன. அழிதலுக்குப் பின் பொருளே இல்லாமற் போய்விடுவதால் அதற்குப் பிறகு விகாரமும் இல்லாமற் போகின்றது. உண்மையில் பொருளுள்ளவிடத்தே அதற்குண்டான குணங்களும் இருக்கின்றன. எனவே இறுதி விகாரமாகிய அழிதலின் இன்மையை அழுத்திக் கூறுவதின் மூலம் அதற்கு முந்தைய

விகாரங்கள் எல்லாம் அவற்றின் விளைவுகளோடுச் சேர்த்து மறுதலிக்கப்படுகின்றன. ஆகவே, பரமேசுவரன் பிற உயிர்களிலிருந்து முற்றிலும் வேறானவன் என்றும், வேறுபாடில்லாதவன் என்றும், ஒருவன்தான் என்றும் நிலைநிறுத்தப்படுகின்றது.

பரமேசுவரனை எவன் இங்ஙனம் காண்கின்றானோ அவனே காட்சியுடையான் என்று கூறப்படுகிறான்.

மறுப்பு : இவ்வுலகிலுள்ள எல்லோருந்தான் காண்கின்றனர். இல்லையா? அவ்வாறிருக்க குறிப்பாகச் சுட்டுவது ஏன்?

பதில் : உண்மைதான். அவர்களும் காண்கின்றனர். ஆனால், மாறாகக் காண்கின்றனர். அதனால்தான் பகவான், ''அவன் ஒருவனே காட்சியுடையான்'' என்று குறிப்பாகச் சுட்டுகின்றார். 'திமிரம்' என்னும் கண் நோயினால் பாதிக்கப்பட்டவனுக்குப் பலசந்திரன்கள் தெரிகின்றன. அவனோடு ஒப்பிடும் பொழுது ஒரு சந்திரனைக் காண்பவனே 'காட்சியுடையவன்' என்று சுட்டப்படுகிறான். ஆதுபோல் இங்கு வேறுபாடற்ற ஒரே ஆத்மாவைக் காண்பவன், வெவ்வேறு ஆத்மாக்களை காண்பவனை விடக் 'காட்சியுடையவன்' என்று சிறப்பாகக் கூறப்படுகிறான். மற்றையவர்கள், பல சந்திரன்களைக் காண்பவன் போல் காண்கின்றனர். ஆதலினால் அவர்கள் காட்சியுடையோர் அல்லர். இதுவே பொருளாகும்.

மேற்கூறிய மெய்யறிவின் பயனை எடுத்துரைப்பதின் மூலம் அதனைப் போற்றும் முகத்தான் பின்வரும் சுலோகம் தொடங்கப் பெறுகின்றது.

**समं पश्यन्हि सर्वत्र समवस्थितमीश्वरम् ।**
**न हिनस्त्यात्मनात्मानं ततो याति परां गतिम् ॥२८॥**

**ஸமம் பஸ்யன் ஹி ஸர்வத்ர ஸமவஸ்த்திதமீஸ்வரம்**
**ந ॥ 28॥**

***எங்கும் சமமாக நிற்கும் ஈசுவரனைக் காண்பவன் தன்னைத்தான் துன்புறுத்துவதில்லை. அதனால் பரகதியடைகின்றான்.***

இதற்கு முந்தைய சுலோகத்தில் கூறியுள்ளபடி எல்லாப் பொருள்களிடத்தும் வேற்றுமையின்றி நிலைபெற்றிக்கும் பரமேசுவரனை சமமாகக் கண்டுணர்பவன் தன்னைத்தானே துன்புறுத்திக் கொள்வதில்லை. அவ்வாறு துன்புறுத்திக் கொள்ளாமையின் பயனாக அவன் முக்தியென்னும் பரகதியை அடைகின்றான்.

மறுப்பு : எந்த உயிர்தான் தன்னைத்தானே துன்புறுத்திக் கொள்ளும்? அவ்வாறிருக்க 'அக்னியை நிலத்திலோ, ஆகாயத்திலோ, சொர்க்கத்திலோ மூட்டுதல் கூடாது'' (தை.சம். 5.2.7.1) என்பதுபோல் 'துன்புறுத்துவதில்லை' என்று இல்லாததை ஏன் குறிப்பிடவேண்டும்?

பதில் : இது குற்றமன்று. காரணம் அஞ்ஞானி ஆத்மாவை அலட்சியப்படுத்துகின்றான். ஆதலின் எல்லோருக்கும் நேரடியாகத் தெரிகின்ற ஆத்மாவை அஞ்ஞானிகள் அலட்சியம் செய்து ஆத்மா அல்லாததை (உடல் போன்றவற்றை) ஆத்மாவாகக் கொள்கின்றனர்.அப்படி தனதாக்கிக் கொண்ட ஆத்மாவையும் தமது நல்வினை, தீவினைகளின் மூலம் கொன்றுவிட்டு வேறோர் புதிய ஆத்மாவை தனதாக்கிக் கொள்கின்றனர். பிறகு அதையும் கொன்று பிறிதோர் ஆத்மாவை தனதாக்கிக் கொள்கின்றனர். இவ்வாறு அவர்கள் அடுத்தடுத்துப் பெறும் ஆத்மாவைக் கொல்கின்றனர். அதனால் அஞ்ஞானிகள் எல்லோரும் ஆத்மாவைக் கொல்பவர்கள் என்க. மேலும் உண்மையான ஆத்மா எதுவோ அதுவும் தான் இருப்பதின் பயன் இல்லாதிருப்பதின் காரணமாக அறியாமையினால் எப்போதும் கொல்லப்பட்டதாகவே இருக்கின்றது. ஆதலினால் அஞ்ஞானிகள் எல்லோரும் ஆத்மாவைக் கொல்பவர்கள்தான்.

இதற்கு மாறாக முன்னர் விளக்கியுள்ளபடி ஆத்மாவைக் காணும் மற்றையவனோ இருவகையாலும் தன்னைத்தான் துன்புறுத்திக் கொள்வதில்லை. அதனால் அவன் பரமகதியை அடைகிறான். அதாவது மேற்கூறிய பயன் அவனுக்கு உறுதியாகக் கிடைக்கும் என்று பொருள்.

எல்லாப் பொருள்களிடத்தும் வேறுபாடின்றி இருக்கும் ஈசுவரனை சமமாகக் காண்பவன் தன்னைத் தான் துன்புறுத்துவதில்லை என்று கூறப்பட்டது, தமது குணம், செயல் வேறுபாட்டின் காரணமாக வேறுபட்ட பல ஆத்மாக்கள் இருக்கின்றன ஆதலின் மேலே கூறியுள்ளபடி சமமாகப் பார்த்தல் என்பது பொருந்தாது என்னும் ஐயத்திற்கு விடை பகர்வதாகப் பகவான் அடுத்த சுலோகத்தை அருளிச் செய்கின்றார்.

**प्रकृत्यैव च कर्माणि क्रियमाणानि सर्वशः ।**
**यः पश्यति तथात्मानमकर्तारं स पश्यति ॥२९॥**

**ப்ரக்ருத்யைவ ச கர்மாணி க்ரியமாணானி ஸர்வஶ: ।**
**ய: பஶ்யதி ததாத்மானமகர்த்தாரம் ஸ பஶ்யதி ॥ 29॥**

***பிரகிருதியினாலேயே கர்மங்கள் அனைத்தும் செய்யப்படுகின்றனவென்று எவன் காண்கின்றானோ, அவன் அவ்வாறே ஆத்மாவை அகர்த்தாவாகக் காண்கின்றான்.***

'பிரகிருதி' என்பது முக்குணவடிவாயிருக்கும் பகவானின் மாயை ஆகும். ''மாயையையே பிரகிருதியாக அறிதல் வேண்டும்'' (ஸ்வே. 4.10). பிரகிருதியே (ஈசுவரனின் சக்தியே) வாக்கு, மனம், மெய்யினால் செய்யப்படும் செயல்களை உண்மையில் செய்கின்றதேயன்றி மஹத் முதலான கார்ய காரணங்களாக வேறுபட்டிருக்கும் மற்றொன்றினால் அன்று. (மற்றொருவகையில் பிரக்ருதி என்றறியப்படும் சாங்கியர்களின் பிரதானமன்று). க்ஷேத்ரக்ஞனாகிய ஆத்மா, அகர்த்தா, உபாதிகளற்றவன் என்று எவன் உணர்கின்றானோ அவனே மெய்ப்பொருளைக் கண்டுணர்ந்தவன்

ஆவான். இதுவே கருத்தாகும். ஆகாயத்திற்குப் பேதம் இல்லாததுபோல் நிர்க்குணமாய், அகர்த்தாவாய், வேற்றுமையில்லாப் பொருளுக்கு பேதம் உண்டு என்பதற்குப் பிரமாணம் இல்லை என்பது பொருளாகும்.

பகவான் மீண்டும் அந்த மெய்யறிவையே பின்வரும் சுலோகத்தில் விரித்துரைக்கிறார்.

**यदा भूतपृथग्भावमेकस्थमनुपश्यति ।**
**तत एव च विस्तारं ब्रह्म सम्पद्यते तदा ॥३०॥**

**யதா பூதப்ருதக்பாவமேகஸ்த்தமனுபஶ்யதி**
**தத ஏவ ச விஸ்தாரம் ப்ரஹ்ம ஸம்பத்யதே ததா ॥ 30॥**

*எப்போது ஒருவன் பூதங்களின் வெவ்வேறு தன்மைகள் ஒன்றினிடமே இருப்பதாகவும், மற்று அவ்வொன்றிலிருந்தே விரிவடைவதாகவும் அனுபவத்தால் காண்கின்றானோ அப்போது அவன் பிரம்மமாகின்றான்.*

ஒருவன் சாத்திரம், ஆச்சாரியன் இவர்களின் உபதேசத்திற்கேற்ப பொருள்களின் வேற்றுமையானது ஒரே ஆத்மாவினிடத்து உள்ளது என்று எப்போது கண்டு தெளிந்து "இவையெல்லாம் ஆத்மாதான்" என்று ஆத்மாவை நேரடியாகப் பார்க்கின்றானோ, மற்றும் அந்த ஒன்றாகிய ஆத்மாவினின்றே - "உயிர் ஆத்மாவினின்று வருகிறது, ஆசை ஆத்மாவினின்று வருகிறது, காதல் ஆத்மாவினின்று வருகிறது, ஆகாயம் ஆத்மாவினின்று வருகிறது, ஒளி ஆத்மாவினின்று வருகிறது, நீர் ஆத்மாவினின்று வருகிறது, தோற்றமும் மறைவும் ஆத்மாவினின்று வருகின்றன, உணவு ஆத்மாவினின்று வருகிறது" (சா.உ. 7-26-1) - அனைத்தும் தோன்றி விரிவடைகின்றனவென்ற அனுபவத்தால் காண்கின்றானோ அப்போது அவன் பிரம்மமே ஆகின்றான்.

ஒரே ஆத்மாவே எல்லா உடல்களின் ஆத்மாவாக இருக்குமென்றால் அவ்வுடல்களின் குற்றங்களினால் அது கண்டிப்பாகப் பாதிக்கப்படும் என்னும் ஐயத்தை நீக்கும் பொருட்டு அடுத்து வரும் சுலோகத்தை அருளிச் செய்கிறார்.

**अनादित्वान्निर्गुणत्वात्परमात्मायमव्ययः ।**
**शरीरस्थोऽपि कौन्तेय न करोति न लिप्यते ॥३१॥**

**அநாதித்வாந் நிர்குணத்வாத் பரமாத்மாயம் அவ்யய: ।**
**ஶரீரஸ்தோ(அ)பி கௌந்தேய ந கரோதி ந லிப்யதே ॥ 31॥**

***ஆதியின்மையால், குணமின்மையால் இப்பரமாத்மா அழிவற்றது, குந்தி மைந்த! அது உடல்களில் உள்ளதாயினும், செயல்படுவதுமில்லை, பற்றப்படுவதுமில்லை.***

ஆத்மாவிற்கு அழிவுமில்லை, காரணமுமில்லை. எதற்குக் காரணம் உள்ளதோ, அது தன்னாலேயே அழிகிறது. இது (ஆத்மா) காரணமில்லாதது. ஆதலால் அழிவதில்லை. இதற்கு அங்கங்கள் இல்லை. எதற்கு குணம் உள்ளதோ அது குண இழப்பினால் அழிகிறது. ஆத்மாவோ நிர்க்குணமாதலால் அது அழிவதில்லை. இவ்வாறு பரமாத்மா அழிவற்றதாகும். ஆகவே உடல்களில் உள்ள போதிலும் - ஆத்மா உடலில் வெளிப்படும் காரணத்தால் உடலில் உள்ளதாகக் கூறப்படுகின்றது - ஆத்மா செயல்படுவதில்லை. செயல்படாத காரணத்தினால் செயல்களின் பயன்களால் அது பற்றப்படுவதில்லை. அதாவது கர்த்தாவோ செயல்களின் பயனால் பற்றப்படுகிறான். ஆத்மா அகர்த்தாவாதலால் அது செயல்படுவதில்லை. அதனால் செயல்களின் பயனால் அது பற்றப்படுவதில்லை என்று பொருளாம்.

மறுப்பு : பிறகு உடல்களில் செயல்படுபவனும் பற்றப்படுபவனும் யார்? இதற்கு மாறாக உடல் பெற்ற ஆத்மா, பரமாத்மாவினின்று வேறாகி, செயல்படுகிறான். பற்றப்படுகிறான் என்றால் "க்ஷேத்ரக்ஞனை நானாகவும் அறி" (13-2) என்று கூறியது பொருந்தாது. இதற்கும் மாறாக ஈசுவரனின்று வேறான உடல் பெற்ற ஆத்மா இல்லையென்றால், பிறகு யார் செயல்படுகிறான், பூற்றப்படுகிறான் என்பதை விளக்க வேண்டும். அல்லது அவன் ஈசுவரன்தான் என்றால் ஈசுவரன் பரம்பொருள் அல்ல என்று கூறுக. அதனால்தான் உபநிஷத்துக்களின் அல்லது தத்துவத்தின் அடிப்படையில் பகவான் உபதேசித்தது எவ்வாவற்றானும் அறிந்து கொள்ளவும் விளக்கிக் கூறவும் கடினமானது என்று வைசேஷிகர்களாலும், சாங்கியர்களாலும் ஆர்ஹதர்களாலும், பௌத்தர்களாலும் நிராகிக்கப்படுகின்றது.

பதில் : இம்மறுப்பிற்குப் பகவானே பின்வருமாறு பதில் கூறியிருக்கிறார். "சுபாவமே செயல்படுகின்றது" (5-14). (உண்மையில் பரம்பொருள் செய்வதுமில்லை. அனுபவிப்பதுமில்லை. செய்கையும், அனுபவமும் அவித்யையால் அதன்மீது ஏற்றப்படுகின்றன. ஆகவே பகவானது உபதேசம் சத்தியமாகும்.-ஆ) இதன் கருத்து என்னவென்றால் ஒருவன் செயல்படுகிறான் என்பதும், பற்றப்படுகிறான் என்பதும் மயக்கமே (அவித்யை)" தவிர வேறொன்றுமில்லை. பரமாத்மாவிடம் செய்கையும், அனுபவமும் உண்மையில் இல்லை. அதனால்தான் இப்பரமசத்தியத்தில் நிலைத்து நின்று, 'அவித்யை' மற்றும் 'வ்யவஹாரத்தை' புறந்தள்ளிய பரமஹம்சத் துறவிகட்கு கர்மத்தில் அதிகாரமில்லையென்று பகவானால் பல்வேறு இடங்களில் அறிவுறுத்தப்பட்டுள்ளது.

எதுபோல் செயல்படுவதில்லை? எதுபோல் பற்றப்படுவதில்லை? பின்வரும் எடுத்துக்காட்டு கூறப்படுகிறது.

**यथा सर्वगतं सौक्ष्म्यादाकाशं नोपलिप्यते ।**
**सर्वत्रावस्थितो देहे तथात्मा नोपलिप्यते ॥ ३२॥**

**யதா ஸர்வகதம் ஸௌக்ஷ்ம்யாத் ஆகாஶம் நோபலிப்யதே ।**
**ஸர்வத்ராவஸ்திதோ தேஹே ததாத்மா நோபலிப்யதே ॥ 32॥**

*எங்கும் நிறைந்துள்ள ஆகாயம் தனது நுண்மையினால் கறைபடியாததுபோல் உடலெங்குமுள ஆத்மாவும் கறைபடிவதில்லை.*

எல்லாவிடத்தும் இருக்கின்ற ஆகாய்மானது எங்கும் நிறைந்திருந்தபோதிலும் தனது நுண்மைத் தன்மையினால் அது கறைபடிவதுமில்லை, பற்றப்படுவதுமில்லை. அதுபோல் உடலெங்கும் நிறைந்துள்ள ஆத்மாவும் கறைபடிவதில்லை.

மேலும்,

**यथा प्रकाशयत्येक: कृत्स्नं लोकमिमं रवि: ।**
**क्षेत्रं क्षेत्री तथा कृत्स्नं प्रकाशयति भारत ॥ ३३॥**

**யதா ப்ரகாஶயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி: ।**
**க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம் ப்ரகாஶயதி பாரத ॥33॥**

*ஒரே சூரியன் இவ்வுலகம் முழுவதையும் ஒளியுறச் செய்வது போல், ஓ, பாரத! க்ஷேத்திரத்தையுடையோன், க்ஷேத்ரம் முழுவதையும் ஒளியுறச் செய்கிறான்.*

க்ஷேத்ரத்தையுடையவனாகிய பரமாத்மா அவ்யக்தம் முதல் அசையாப் பொருட்கள்வரை, மகாபூதங்கள் முதல் உறுதியான தன்மை வரை உள்ள க்ஷேத்ரங்களை தனி ஒருவனாக இருந்தே ஒளியுறச் செய்கிறான் (13.5-6). சூரிய உவமையானது இங்கு ஆத்மாவிற்கு இருவிதங்களில் பயன்படுகிறது. 1. சூரியன் போல் ஆத்மாவும் எல்லா க்ஷேத்ரங்களிலும் ஒன்றுதான். 2. சூரியன்போல் ஆத்மாவும் கறைபடிவதில்லை.

அத்தியாயத்தின் சாரம் முழுவதும் பின்வரும் சுலோகத்தில் எடுத்துரைக்கப்படுகிறது.

**क्षेत्रक्षेत्रज्ञयोरेवमन्तरं ज्ञानचक्षुषा ।**
**भूतप्रकृतिमोक्षं च ये विदुर्यान्ति ते परम् ॥ ३४॥**

**க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோர் ஏவம் அந்தரம் ஜ்ஞானசக்ஷுஷா ।**
**பூதப்ரக்ருதிமோக்ஷம் ச யே விதுர்யாந்தி தே பரம் ॥ 34॥**

*எவர்கள் இவ்வாறு ஞானக்கண்ணால் க்ஷேத்ரத்துக்கும் க்ஷேத்ரக்ஞனுக்கும் இடையிலுள்ள வேற்றுமைகளையும், பூதங்களின் பிரகிருதி விடுதலையையும் காண்பரோ அவர்கள் பரம்பொருளை எய்துகின்றனர்.*

மேலே விரித்துக் கூறப்பட்ட க்ஷேத்ரன் மற்றும் க்ஷேத்ரக்ஞன் இவற்றிற்கிடையிலுள்ள வேற்றுமைகளை, சாத்திரம், ஆச்சாரியன்

முதலியவர்களிடத்து பெற்ற ஆத்மாவைப் பற்றிய அறிவாகிய ஞானக்கண்ணால் யாவர் காண்கின்றனரோ, மற்றும் உயிர்களின் அவித்யையாகிய அவ்யத்தம் என்னும் பிரகிருதி இல்லாமற் போவதையும் காண்கின்றனரோ அவர்கள் பரம சத்தியமாகிய பிரம்மத்தை எய்துகின்றனர். மீண்டும் அவர்கள் உடல் பெறுவதில்லை.

இவ்வாறு மகாபாரதத்தில் பீக்ஷ்மபர்வத்தில் உபநிஷத்தும், பிரம்மவித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீ மத் பகவத் கீதையில் ''க்ஷேத்ர க்ஷேத்ரக்ஞ விபாக யோகம்'' என்ற பதின்மூன்றாம் அத்தியாயம் நிறைவுபெறகின்றது.



# அத்தியாயம் பதினான்கு

# குணத்ரய விபாக யோகம்

## இந்த அத்தியாயத்தின் சாரம்

உண்டாகும் பொருளெல்லாம் க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞன் தொடர்பினாலேயே உண்டாகின்றனவென்று முன்னர் கூறப்பட்டது. அது எப்படி ? - என்பதை விளக்கும் முகத்தான் இந்த அத்தியாயம் தொடங்கப்பெறுகின்றது.

அல்லது முந்தைய அத்தியாயத்திற்கும், இந்த அத்தியாயத்திற்குமுள்ளத் தொடர்பினை இவ்வாறு விளக்கலாம் : க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞன் ஈசுவரனைச் சார்ந்தே பிரபஞ்சத்திற்குக் காரணமாகின்றனவேயன்றி சாங்கியர்களின் கூற்றுப்படி சுதந்திரமாக அன்று என்பதை எடுத்துக் காட்டுவதற்காகவே க்ஷேத்ரக்ஞன் பிரகிருதியில் தங்கி நிற்றலும், சம்சாரத்திற்குக் காரணமான குணங்களின் மீது அவனுக்குள்ள பற்றும் (13-21) எடுத்துரைக்கப்பட்டது. எந்தக் குணத்தில் எப்படிப்பட்டப் பற்று? குணங்கள் என்பன யாவை? அது அவனை எப்படி பந்தப்படுத்துகின்றது? குணங்களினின்று விடுபடுதல் எவ்வாறு? அப்படி விடுதலைபெற்றவனுடையத் தன்மைகள் யாவை? - இக்கேள்விகளுக்குப் பதில் கூறும் முகத்தான் பகவான் இந்த அத்தியாயத்தை அருளிச் செய்கிறார்.

**श्री भगवानुवाच**

**परं भूयः प्रवक्ष्यामि ज्ञानानां ज्ञानमुत्तमम्**
**यज्ज्ञात्वा मुनयः सर्वे परां सिद्धिमितो गताः ॥ १॥**

*பகவான் உவாச*

**பரம் பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞானானாம் ஜ்ஞானமுத்தமம் ।**
**யஜ் ஜ்ஞாத்வா முனய: ஸர்வேபராம் ஸித்திமிதோ கதா: ॥ 1॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***முனிவர்களெல்லாம் எதனை அறிந்து இதைவிட மேலான ஸித்தியை எய்தியுள்ளனரோ, ஞானங்களுள் உயர்ந்த மேலான அந்த ஞானத்தை மீட்டும் விரித்துரைப்பேன்.***

முந்தைய அத்தியாயத்தில் ஒரு முறைக்குப் பலமுறை அந்த ஞானம் எடுத்துரைக்கப்பட்டப் போதிலும், பரம்பொருள் பற்றியதாதலால் அந்த ஞானம்

மேன்மை மிக்கது என்று நான் மீண்டும் கூறுவேன். அது சிறந்த பயனை விளைவிப்பதால் ஞானங்களுள் எல்லாம் உயர்ந்ததாகும். "எல்லா ஞானங்களும்" என்று இங்கே குறிப்பிடப்படுவது 13-7,8,9,10ல் கூறப்பட்ட ஞானம் அல்ல. மாறாக யாகங்கள் மற்றும் அதுபோல் அறிய வேண்டிய பிற விஷயங்களைப் பற்றிய ஞானங்களாகும். அவை முக்திக்குரியனவல்ல. ஆனால் இப்போது கூறப்போகும் ஞானமோ- முக்திக்குரியதாகும். இதன் காரணமாகவே பகவான் கேட்பவர்கள் மனங்களில் ஆர்வத்தைத்தூண்டுவதற்காக "மேலானது" "சிறந்தது" என்று இந்த ஞானத்தைப் புகழ்ந்துரைக்கின்றார். இந்த ஞானத்தைப் பெற்றே சிறந்த முனிவர்கள் தங்கள் உடல் பந்தத்தினின்று உயர்ந்த ஸித்தியை அதாவது விடுதலை அல்லது முக்தியடைந்துள்ளனர்.

அந்த ஸித்தி தவறாது முக்தியளிக்கும் என்பது உறுதி செய்யப்படுகின்றது.

**इदं ज्ञानमुपाश्रित्य मम साधर्म्यमागता: ।**
**सर्गेऽपि नोपजायन्ते प्रलये न व्यथन्ति च ॥ २)॥**

**இதம் ஜ்ஞானம் உபாஶ்ரித்ய மமஸாதர்ம்யம் ஆகதா: ।**
**ஸர்கே(அ)பி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச ॥ 2॥**

***இந்த ஞானத்தை அடைந்து எனதியல்பு எய்தப் பெற்றோர் சிருஷ்டியிலும் பிறப்பதில்லை; பிரளயத்திலும் கலங்குவதில்லை.***

அதாவது ஞான சாதனங்களை அனுஷ்டித்து மேற்கூறிய ஞானம் கைவரப்பெற்றோர், பரமேசுவரனின் இயல்பினை எய்தப் பெறுகின்றனர். "இயல்பு" என்பது இங்கு அவருக்கு இணையான குணங்களைக் குறிப்பிடுவன அல்ல. கீதா-சாஸ்திரத்தில் ஈசுவரனுக்கும் க்ஷேத்ரக்ஞனுக்குமிடையே வேறுபாடு ஏற்றுக்கொள்ளப்படவில்லை ஆதலின் இறுதியில் முக்தியடைதல் என்று பயனைக் கூறியது இந்த ஞானத்தைப் புகழ்ந்துரைப்பதற்காம். "அவர்கள் சிருஷ்டியிலும் பிறப்பதில்லை, பிரளயத்திலும், அதாவது பிரம்ம தேவன் அழியும்பொழுது கூட அவர்கள் கலங்குவதில்லை அதாவது நிலைகுலைவதில்லை.

எல்லா உயிர்களும் உண்டாவதற்குக் காரணமாக இருக்கும் க்ஷேத்ரக்ஷேத்ரக்ஞனின் கூட்டுறவு எத்தன்மையது என்பது பற்றிப் பகவான் அடுத்து விளக்குகிறார்.

**मम योनिर्महद्ब्रह्म तस्मिन्गर्भं दधाम्यहम् ।**
**सम्भव: सर्वभूतानां ततो भवति भारत ॥ ३॥**

**மம யோனிர்மஹத்ப்ரஹ்ம தஸ்மின்கர்ப்பம் ததாம்யஹ ।**
**ஸம்பவ: ஸர்வபூதானாம் ததோ பவதி பாரத ॥ 3॥**

*எனது கருப்பை பெரிய ப்ரஹ்மம் ஆகும். அதில் நான் கருத்தரிக்கின்றேன். எல்லா உயிர்களும் அதிலிருந்தே பிறக்கின்றன.*

கருப்பை-எனது மூலப்ரக்ருதி, அதாவது என்னைச் சார்ந்த பிரக்ருதி, முக்குண வடிவமான மாயை, எல்லா உயிர்களுக்கும் காரணமாக இருப்பது. இப்பிரக்ருதி 'பெரியது' என்று கூறப்படுகிறது, காரணம் காரியங்கள் எல்லாவற்றினும் இது பெரிதாம் என்க. தனது எல்லா வேறுபாடுகளுக்கும் காரணமாகவும் அவற்றை ஓங்கி வளரச் செய்வதாலும் இது ''ப்ரஹ்மம்'' என்றும் சிறப்பித்துக் கூறப்படுகின்றது. இப்பெரிய பிரம்மத்திலேயே நான் ஹிரண்ய கர்ப்பன் உண்டாவதற்கான விதையையும் அதாவது எல்லா உயிர்களும் உண்டாவதற்குக் காரணமான வித்தை வைக்கின்றேன். இரண்டு சக்திகளை, அதாவது க்ஷேத்ரம், க்ஷேத்ரக்ஞன் என்னும் இரண்டு பிரகிருதிகளையுடைய நான் க்ஷேத்ரத்தை அவித்யை, காமம், கர்மம் என்னும் உபாதிகளையுடைய க்ஷேத்ரக்ஞனுடன் இணைக்கின்றேன். ஹிரண்ய கர்ப்பன் பிறத்தல் மூலமாக எல்லா உயிர்களும் உண்டாகின்றன.

**सर्वयोनिषु कौन्तेय मूर्तयः सम्भवन्ति याः ।**
**तासां ब्रह्म महद्योनिरहं बीजप्रदः पिता ॥ ४॥**

**ஸர்வயோனிஷு கௌந்தேய மூர்த்தய: ஸம்ப்பவந்தி யா: ।**
**தாஸாம் ப்ரஹ்ம மஹத்யோனிரஹம் பீஜப்ரத: பிதா ॥ 4॥**

*கௌந்தேய! எந்தெந்த உருவங்கள் எல்லாக் கருப்பைகளிலும் பிறக்கின்றனவோ அவற்றிற்கெல்லாம் பெரிய பிரம்மமே கருப்பையாகும். நான் விதை தரும் தந்தையாவேன்.*

எல்லாக் கருப்பைகளிலும் அதாவது தேவர்கள், பித்ருக்கள், மனிதர்கள், விலங்குகள் ஆகியவற்றின் கருப்பைகள். உருவங்கள் - பல்வேறு உறுப்புக்களையும், அங்கங்களையும் தன்னிடத்தேக் கொண்ட பெரிய, சிறிய உருவங்கள். அவ்வுருவங்களுக்கு எல்லா நிலைமைகளுமுடையப் பெரிய பிரம்மம் (பிரகிருதி) காரணமாகும். ஈசுவரனாகிய நானே விதையைக் கொடுக்கும் தந்தை, கர்ப்பதானம் செய்பவன்.

குணங்கள் யாவை? அவை எவ்வாறு பந்தப் படுத்துகின்றன? பதில் பின்வருமாறு :

**सत्त्वं रजस्तम इति गुणाः प्रकृतिसम्भवाः**
**निबध्नन्ति महाबाहो देहे देहिनमव्ययम् ॥ ५॥**

**ஸத்வம் ரஜஸ்தம இதி குணா: ப்ரக்ருதிஸம்பவா:**
**நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹினமவ்யயம் ।5॥**

*சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் குணங்கள் பிரகிருதியைப் பிறப்பிடமாகக் கொண்டிருக்கின்றன. அழிவில்லாத தேகியை தேகத்தில் பந்தப்படுத்துகின்றன.*

சத்வம், ரஜஸ், தமஸ் என்னும் பெயருடைய குணங்கள். 'குணம்' என்பது இங்கே கலைச்சொல்லாகும். நிறம், பண்பு முதலியனபோல் ஒரு பொருளைச் சார்ந்ததல்ல. குணங்கள் பிரகிருதியின் வடிவமாகும். எல்லாவற்றிற்கும் ஆதாரமாகும். ஆகவே பொருள்களைச் சார்ந்தவையன்று. இங்கு குறிப்பிட வந்தது குணம் மற்றும் குணத்தையுடையவனின் வேற்றுமையன்று. அதாவது குணம் தனி, குணத்தையுடையவன் தனி என்பதன்று. இங்கு குணம் என்று கூறுவதின் காரணம் என்னவென்றால் இக்குணங்கள் ஒரு பொருளைச் சார்ந்திருக்கும் பண்புகள் போன்று அவித்யா வடிவமாயுள்ள குணங்கள் எப்போதும் க்ஷேத்ரக்ஞனைச் சார்ந்து அவனைப் பந்தப்படுத்துகின்றன போலும். அதாவது க்ஷேத்ரக்ஞனை ஆதாரமாகக் கொண்டு தம்மை நிலை நிறுத்திக் கொள்கின்றன. எனவேதான் 'பந்தப்படுத்துகின்றனவென்று' கூறப்படுகிறது. பகவானின் மாயைக்குப் பிறந்த அவை தேகத்தையுடைய அழிவில்லாத ஆத்மாவை தேகத்தில் விரைந்து பந்தப்படுத்துகின்றன போலும். ஆத்மாவின் அழிவற்றத் தன்மையானது 13-31ல் விளக்கிக் கூறப்பட்டுள்ளது. பெருந்தோளாய்-முழந்தாள் வரை நீண்ட வலிய பெரிய கரங்களையுடையவன்.

மறுப்பு : தேகியானவன் கறைப்படுத்தப்படுவதில்லை என்று முன்னர் கூறப்பட்டது (13-31) அதற்கு மாறாக இங்கே 'குணங்கள் அவனை பந்தப்படுத்துகின்றன' என்று கூறப்படுகிறது. இது என்ன முரண்பாடு?

பதில் : ''பந்தப்படுத்துகின்றன போலும்'' என்று தான் கூறப்பட்டுள்ளது. 'போலும்' என்ற சொல்லினால் மேற்படி மறுப்பு மறுதலிக்கப்படுகிறது.

அவற்றுள் சத்வ குணம் இப்போது விவரிக்கப்படுகிறது :

**तत्र सत्त्वं निर्मलत्वात्प्रकाशकमनामयम्**
**सुखसङ्गेन बध्नाति ज्ञानसङ्गेन चानघ ॥ ६॥**

**தத்ர ஸத்த்வம் நிர்மலத்வாத்ப்ரகாஶகம் அநாமயம் ।**
**ஸுகஸங்கேன பத்நாதி ஜ்ஞானஸங்கேன சாநக ॥ 6॥**

*அவற்றுள் சத்துவ குணம் நிர்மலத்தன்மையால் ஒளிபொருந்தியது, இடர் செய்யாதது, இன்பத்தில் பற்றுதலாலும், ஞானத்தில் பற்றுதலாலும் ஒருவனைப் பந்தப்படுத்துகின்றது.*

பளிங்குபோல் மாசின்றி இருப்பதால் சத்துவகுணம் ஒளியும், வளமும் உடையதாக இருக்கின்றது. அது ஆத்மாவை பந்தப்படுத்துகின்றது. எங்ஙனம்? 'நான் இன்பமுடையவன்' என்று இன்பத்தின் மீது ஆத்மாவை பற்றுக் கொள்ளச்

செய்வதால் என்க. இன்பத்தின் மீது பற்று வைப்பது மயக்கமாகும். அதாவது அவித்யையாகும். விஷயத்தின் தன்மையானது விஷயிக்குக் கிடையாது. ஆசைமுதல் உறுதி ஈறாக உள்ளத்தன்மைகள் அனைத்தும் க்ஷேத்ரமாகிய விஷயத்தின் தன்மைகள் என பகவான் ஏற்கெனவே உறுதிசெய்துள்ளார் (13-6). எனவே அது ஆத்மாவை விஷய விஷயிகளைப் பகுத்தறியாமை என்னும் அவித்யையின் மூலம் தனக்குரியதல்லாத இன்பத்தின் மீது பற்றுறச் செய்கின்றது போலும். அதாவது பற்றில்லாததை பற்றுறச் செய்கின்றது, இன்பமில்லாததை இன்புறச் செய்கின்றது. அதுபோல் சத்துவகுணம் ஆத்மாவை ஞானத்தின் மீதுள்ள பற்றினால் பந்தப்படுத்துகின்றது. இன்பத்தோடு சேர்ந்து இங்கே ஞானம் கூறப்பட்டிருப்பதால் அது க்ஷேத்ரமாகிய விஷயத்தின் அகக்கரணத்தின் தன்மையாகுமேயன்றி ஆத்மாவின் தன்மையாகாது. அப்படி அது ஆத்மாவின் தன்மையாக இருக்கும் பட்சத்தில் பற்றும், பந்தமும் அதற்கு இருக்க முடியாது. இன்பத்தின் மீது உண்டாகும் பற்றைப் போலவே ஞானத்தின் மீதும் பற்று உண்டாகிறது.

रजो रागात्मकं विद्धि तृष्णासङ्गसमुद्भवम् ।
तन्निबध्नाति कौन्तेय कर्मसङ्गेन देहिनम् ॥ ७॥

**ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணாஸங்கஸமுத்பவம் ।**
**தந்நிபத்னாதி கௌந்தேய கர்மஸங்கேன தேஹினம் ॥ 7॥**

*ரஜோ குணத்தை விருப்பத்தின் விளைநிலமாக, வேட்கை, மற்றும் பற்றின் பிறப்பிடமாக அறிந்து கொள்; கௌந்தேய அது கர்மப் பற்றினால் தேகியை பந்தப்படுத்துகின்றது.*

ரஜோ குணம் ராகம் என்னும் காமத்தின் வடிவமாகும். காவிக் கட்டியைப் போல் அது ஆத்மாவிற்கு வண்ணம் கொடுக்கிறது. அது விருப்பத்தினின்றும், வேட்கையினின்றும் உண்டாகின்றது. விருப்பம் என்பது கிடைக்காத ஒன்றின் மீது அவா கொள்வது. பற்று என்பது கிடைத்த ஒன்றின் மீது கொள்ளும் மனத்தின் ஒட்டுதலாகும். அது தேகியை கர்மத்தின் மீது பற்றுறச் செய்வதின் மூலம் விரைந்து பந்தப்படுத்துகின்றது. கர்மம் என்பது இம்மை, மறுமைக்கானப் பலன்களைக் கொடுக்கும் செயலாகும். (ஆத்மா அகர்த்தாவாயினும் ரஜோகுணம் அவனை "நானே செய்கின்றேன்" என்று நினைக்கச் செய்கிறது. - ஆ)

तमस्त्वज्ञानजं विद्धि मोहनं सर्वदेहिनाम् ।
प्रमादालस्यनिद्राभिस्तन्निबध्नाति भारत ॥ ८॥

**தமஸ்த்வஜ்ஞானஜம் வித்தி மோஹனம் ஸர்வதேஹினாம் ।**
**ப்ரமாதாலஸ்யநித்ராபிஸ்தந்நிபத்னாதி பாரத ॥ 8॥**

*தமோ குணம் அஞ்ஞானத்தின் பிறப்பென்றும் அனைத்துத் தேகிகளையும் மயங்கச் செய்வது என்றும் அறிவாயாக. தவறுதல், சோம்பல், நித்திரை என்பவற்றால் அது பந்தப்படுத்துகின்றது. பாரத!*

தமோ குணம் மூன்றாவது குணமாகும். அது அஞ்ஞானத்தினின்று பிறந்து எல்லாத் தேதிகளையும் மயங்கச் செய்கிறது. அதாவது பகுத்தறிவின்மையை உண்டாக்குகிறது.

மீண்டும் குணங்களின் செயல்கள் விரிவாகக் கூறப்படுகிறது.

**सत्त्वं सुखे सञ्जयति रजः कर्मणि भारत ।**
**ज्ञानमावृत्य तु तमः प्रमादे सञ्जयत्युत ॥ ९॥**

**ஸத்வம் ஸுகே ஸஞ்ஜயதி ரஜ: கர்மணி பாரத ।**
**ஜ்ஞானமாவ்ருத்ய து தம: ப்ரமாதே ஸஞ்ஜயத்யுத ॥ 9॥**

*பாரத! சத்துவ குணம் இன்பத்திலும், ரஜோ குணம் கர்மத்திலும் பற்றுறச் செய்கின்றன. தமோ குணமோ ஞானத்தை மறைத்து தவறுதலில் பற்றுறச் செய்கிறது.*

சத்துவ குணம் இன்பத்தின் மீதும், ரஜோ குணம் கர்மத்தின் மீதும் பற்றுக் கொள்வதற்குக் காரணமாகின்றன. தமோ குணமோவெனில் சத்துவ குணத்தினின்று தோன்றும் பகுத்தறிவை மறைத்து தவறுதலில் பற்றுறச் செய்கிறது. 'தவறுதல்' என்றால் செய்ய வேண்டிய கடமையைச் செய்யத் தவறுதல் என்று பொருளாகும்.

மேற்படி குணங்கள் தமது செயல்களை எப்போது செய்கின்றன? பின்வருமாறு:

**रजस्तमश्चाभिभूय सत्त्वं भवति भारत ।**
**रजः सत्त्वं तमश्चैव तमः सत्त्वं रजस्तथा ॥ १०॥**

**ரஜஸ்தமஸ்சாபிபூய ஸத்த்வம் பவதி பாரத**
**ரஜ: ஸத்த்வம் தமஸ் சைவ தம: ஸத்த்வம் ரஜஸ்ததா ॥ 10॥**

*பாரத! சத்துவம் ரஜஸையும் தமஸையும், அமுக்கி மேலேழுகிறது. ரஜஸ் சத்துவத்தையும், தமஸையும் அமுக்கி மேலெழுகிறது. அவ்வாறே தமஸ் சத்துவத்தையும், ரஜஸையும் அமுக்கி மேலெழுகின்றது.*

எப்பொழுது சத்துவ குணம் ரஜோ, தமோ குணங்களை அமுக்கி மேலெழுகின்றதோ அப்பொழுது ஞானம், இன்பம் முதலிய தனக்குரியச் செயல்களைச் செய்கின்றது. அவ்வாறே எப்பொழுது ரஜோ குணம் சத்துவ, தமோ குணங்களை அமுக்கித் தான் மேலெழுகின்றதோ அப்பொழுது அது வேளாண்மை போன்ற தனக்குரியச் செயல்களைச் செய்கின்றது.

அவ்வண்ணமே எப்பொழுது தமோ குணம், சத்துவ ரஜோ குணங்களை அமுக்கித் தான் மேலெழுகின்றதோ அப்பொழுது அது ஞானத்தை மறைத்தல் போன்ற தனக்குரியச் செயல்களைச் செய்கின்றது.

எப்போது எக்குணம் ஓங்கியிருக்கும்? அதற்கு என்ன அடையாளம்? பதில் பின்வருமாறு:

**सर्वद्वारेषु देहेऽस्मिन्प्रकाश उपजायते ।**
**ज्ञानं यदा तदा विद्याद्विवृद्धं सत्त्वमित्युत ॥११॥**

**ஸர்வத்வாரேஷு தேஹே(அ)ஸ்மின்ப்ரகாஶ உபஜாயதே ।**
**ஜ்ஞானம் யதா ததா வித்யாத்விவ்ருத்தம் ஸத்வமித்யுத ॥ 11॥**

***எப்போது இந்த உடலிலுள்ள வாயில்கள் அனைத்திலும் ஞான ஒளி வீசுகின்றதோ அப்போது சத்துவ குணம் ஓங்கியிருப்பதை அறியலாம்.***

செவி முதலிய புலன்கள் எல்லாம் ஆத்மாவிற்கு அறியும் வாயில்களாகும். அந்தக்கரணம் அதாவது புத்தியின் மேலாந்தன்மையே ஒளியாகும். அந்த ஒளியே ஞானம் எனப்படுகிறது. அந்த ஞான ஒளி இவ்வுடலிலுள்ள எல்லா வாயில்களிலும் எப்போது வீசுகின்றதோ அப்போது சத்துவ குணம் ஓங்கியிருக்கிறது என அறியலாகும்.

ரஜோ குணம் ஓங்கியிருக்கும் பொழுது இது அடையாளமாகும்.

**लोभः प्रवृत्तिरारम्भः कर्मणामशमः स्पृहा**
**रजस्येतानि जायन्ते विवृद्धे भरतर्षभ ॥१२॥**

**லோப: ப்ரவிருத்திர் ஆரம்ப: கர்மணாம் அஶம: ஸ்ப்ருஹா ।**
**ரஜஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே பரதர்ஷப: ॥ 12॥**

***பரதரிற் சிறந்தோனே! அவா, முயற்சி, கர்மத்தை மேற்கொள்ளல், அமைதியின்மை, ஆசை இவையெல்லாம் ரஜோ குணம் ஓங்கியிருக்கும் போது உண்டாகின்றன.***

அவா - பிறர்பொருளை அடைய நினைப்பது. முயற்சி - பொதுவானச் செயல்களைச் செய்வதற்கான ஊக்கம். அமைதியின்மை - மகிழ்ச்சி, பற்று முதலியவற்றுள் ஊடாடிச் செல்வது. ஆசை - சாதாரணமாக எல்லாப் பொருட்களின் மீதும் உண்டாகும் தாபம். ரஜோ குணம் ஓங்கியிருக்கும்போது இவ்வறிகுறிகள் தோன்றுகின்றன.

**अप्रकाशोऽप्रवृत्तिश्च प्रमादो मोह एव च**
**तमस्येतानि जायन्ते विवृद्धे कुरुनन्दन ॥१३॥**

அப்ரகாஶோ(அ)ப்ரவ்ருத்திஶ்ச ப்ரமாதோ மோஹ ஏவ ச ।
தமஸ்யேதானி ஜாயந்தே விவ்ருத்தே குருநந்தன ॥ 13॥

*அவிவேகம், முயற்சியின்மை, தவறுதல், மயக்கம் இவையெல்லாம் தமோ குணம் ஓங்கும் போது தோன்றுகின்றன, குருநந்தன!*

அவிவேகம் - பகுத்தறிவின்மை. முயற்சியின்மை - முற்றிலும் ஊக்கமின்மை. தவறுதல், மயக்கம் என்பன அவிவேகத்தின் அதாவது பகுத்தறிவின்மையின் பயன்களாகும்.

இறந்தபின் எப்பயன் அடையப் பெறுகின்றதோ அதுவும் கூட குணங்களின் காரணமாக உண்டாகும் பற்று மற்றும் ஆசையினாலேதான் என்பது இப்போது விளக்கப்படுகிறது.

यदा सत्त्वे प्रवृद्धे तु प्रलयं याति देहभृत् ।
तदोत्तमविदां लोकानमलान्प्रतिपद्यते ॥ १४॥

யதா ஸத்த்வே ப்ரவ்ருத்தே து ப்ரளயம் யாதி தேஹப்ருத் ।
ததோத்தமவிதாம் லோகான் அமலான் ப்ரதிபத்யதே ॥ 14॥

*சத்துவ குணம் ஓங்கி நிற்கையில் தேகி இறப்பானாயின் உயர்ந்தவற்றை அறிந்த ஞானிகளின் பரிசுத்த உலகங்களை அடைகிறான்.*

சத்துவ குணம் ஓங்கி நிற்கையில் ஒருவன் மரித்தால் அவன் உயர்ந்தவற்றை அறிந்த அதாவது மஹத் முதலிய தத்துவங்களை அறிந்த ஞானிகளின் மாசற்ற, பரிசுத்த லோகங்களை எய்தப் பெறுகிறான்.

रजसि प्रलयं गत्वा कर्मसङ्गिषु जायते ।
तथा प्रलीनस्तमसि मूढयोनिषु जायते ॥ १५॥

ரஜஸி ப்ரளயம் கத்வா கர்மஸங்கிஷு ஜாயதே ।
ததா ப்ரளீனஸ்தமஸி மூடயோனிஷு ஜாயதே ॥ 15॥

*ரஜோ குணத்தில் இறப்போன் கர்மப்பற்றுடையோரிடையே பிறக்கிறான். அவ்வாறே தமோ குணத்தில் இறப்போன் மூட கர்ப்பங்களில் பிறக்கின்றான்.*

ரஜோ குணம் ஓங்கியிருக்கையில் மரிப்போன் கர்மப் பற்றுடைய மனிதர்களிடையே பிறக்கிறான். அதுபோல் தமோ குணம் ஓங்கி நிற்கையில்

மரிப்போன் மூட கர்ப்பங்களில் - அதாவது விலங்குகளின் கர்ப்பங்களில் பிறக்கின்றான்.

சென்ற சுலோகங்களின் சாரம் சுருக்கிக் கூறப்படுகிறது.

**कर्मणः सुकृतस्याहुः सात्त्विकं निर्मलं फलम् ।**
**रजसस्तु फलं दुःखमज्ञानं तमसः फलम् ॥१६॥**

**கர்மண : ஸுக்ருதஸ்யாஹு: ஸாத்த்விகம் நிர்மலம் பலம் ।**
**ரஜஸஸ்து பலம் து:க்கம் அஜ்ஞானம் தமஸ: பலம் ॥ 16॥**

*நற்கருமத்திற்குப் பயன் சாத்விகமும் பரிசுத்தமும் என்பர். ரஜோ குணத்தின் பயன் துன்பம். தமோ குணத்தின் பயன் அறியாமையாகும்.*

நற்கருமமே அதாவது சாத்விகச் செயலாகிய தர்மச் செயலுக்குப் பயன் சாத்விகமும் பரிசுத்தமுமாகும் என்று ஆன்றோர் கூறுவர். ரஜஸ் என்பது ராஜஸிகச் செயலாகிய கர்மங்களைப் பற்றியதாகும். இதற்குப் பயன் துன்பமாகும். அதாவது ராஜஸமே தான். தாமஸிக கர்மமான அதர்மத்திற்கு அறியாமை பயனாகும்.

மேலும் குணங்களினின்று எவை பிறக்கின்றன?

பார்ப்போம்.

**सत्त्वात्सञ्जायते ज्ञानं रजसो लोभ एव च ।**
**प्रमादमोहौ तमसो भवतोऽज्ञानमेव च ॥१७॥**

**ஸத்த்வாத்ஸஞ்ஜாயதே ஜ்ஞானம் ரஜஸோ லோப ஏவ ச ।**
**ப்ரமாதமோஹெள தமஸோ பவதோ(அ)ஜ்ஞானம் ஏவ ச ॥ 17॥**

*சத்துவத்தினின்று ஞானம் பிறக்கின்றது. ரஜோ குணத்தினின்று அவா. த்மோ குணத்தினின்று தவறுதலும், மயக்கமும், அஞ்ஞானமும் பிறக்கின்றன.*

சத்துவ குணம் ஓங்கும் பொழுது ஞானம் பிறக்கின்றது. அவா ரஜோ குணத்தினின்றும், தவறுதல், மயக்கம், அஞ்ஞானம் முதலியன தமோ குணத்தினின்றும் பிறக்கின்றன.

மேலும்,

**ऊर्ध्वं गच्छन्ति सत्त्वस्था मध्ये तिष्ठन्ति राजसाः ।**
**जघन्यगुणवृत्तिस्था अधो गच्छन्ति तामसाः ॥१८॥**

**ஊர்த்வம் கச்சந்தி ஸத்த்வஸ்தா மத்யே திஷ்டந்தி ராஜஸா:**
**ஜகன்யகுணவ்ருத்திஸ்தா அதோ கச்சந்தி தாமஸா: ॥ 18॥**

*சத்துவ குணமுடையோர் மேலே செல்கின்றனர். ரஜோ குணமுடையோர் நடுவில் நிற்கின்றனர். இழிகுணமும், செய்கையுமுடைய தமோ குணத்தார் கீழே செல்கின்றனர்.*

சத்துவ குண ஒழுக்கமுடையோர் தேவலோகம் போன்ற மேல் உலகங்களில் பிறக்கின்றனர். ரஜோ குணத்தார் மனிதர்களிடையே பிறக்கின்றனர். கடைக் குணமாகிய தமோ குணத்தார் உறக்கம், சோம்பல், உடையவர்களாக இருப்பதினால் விலங்குகளிடையே பிறக்கின்றனர்.

பிரகிருதியையே ஆத்மாவாகக் கண்டு மயங்கும் புருஷனுக்கு இன்பம், துன்பம், மயக்கம் என்னும் வடிவங்களினால் அனுபவிக்கப்படும் குணங்களின் மேல், "நான் இன்பமுடையேன், நான் துன்பமுடையேன், நான் மயக்கமுடையேன் என எண்ண வைக்கும் பற்று எதுவோ அதுவே அவனது நற்பிறவி, தீய பிறவி என்னும் சம்சாரத்திற்குக் காரணமாகின்றது என்று எது முந்தைய அத்தியாயத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டதோ அதுவே இங்கு (14-5) குணங்கள் அவற்றின் செயல்கள், அவை எவ்வாறு தமது செயல்களால் பந்தப்படுத்துகின்றன, அதன் மூலம் புருஷன் எதனை அடைகின்றான் என்பவற்றையும், மயக்கத்தை அடிவேராகக் கொண்ட பந்தத்திற்கு உரிய காரணத்தையும் விரித்துரைக்கிறார். மெய்யறிவினால் மோக்ஷம் எய்தப்படுகிறது. என்பதை உபதேசிக்கும் நோக்கத்தில் இப்போது பகவான் கூறுகிறார்.

**नान्यं गुणेभ्य: कर्तारं यदा द्रष्टानुपश्यति ।**
**गुणेभ्यश्च परं वेत्ति मद्भावं सोऽधिगच्छति ॥१९॥**

**நான்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ரஷ்டானுபஶ்யதி ।**
**குணேப்யஶ்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோ(அ)திகச்சதி ॥ 19॥**

*காண்பவன் எப்போது குணங்களைத் தவிர வேறு ஒரு கர்த்தா இல்லையென்பதைக் காண்கின்றானோ, குணங்களுக்கும் மேலே உள்ளவனை அறிகின்றானோ அப்போது அவன் என் நிலை எய்தப் பெறுகிறான்.*

ஒருவன் மெய்யறிவு பெற்று எப்போது உடல்களாகவும், புலன்களாகவும், புலனுகர்ச்சிப் பொருட்களாகவும், மாறியுள்ள குணங்களை விட வேறொரு கர்த்தா இல்லையென்றும், எல்லாச் செயல்களிலும் எல்லாத் தன்மைகளுமுடைய குணங்களே தான் கர்த்தாக்கள் என்றும் கண்டு, குணங்களுக்கு மேலாக நின்று, குணங்களுக்கும், அவற்றின் செயல்களுக்கும் சாட்சியாக இருப்பவனை எப்போது உணர்கின்றானோ, அப்போது அவன் என்

நிலை எய்தப் பெறுகிறான். அதாவது எல்லாவற்றையும் வாசுதேவனாகக் காண்கிறான். (ப.கீ.7-19)

அவன் எவ்வாறு அந்நிலை எய்துகிறான்?

பார்ப்போம்.

**गुणानेतानतीत्य त्रीन्देही देहसमुद्भवान् ।**
**जन्ममृत्युजरादुःखैर्विमुक्तोऽमृतमश्नुते ॥ २०॥**

**குணானேதான் அதீத்ய த்ரீன்தேஹீ தேஹஸமுத்பவான் ।**
**ஜன்மம்ருத்யுஜராது: க்கைர்விமுக்தோ (அ)ம்ருதம் அஶ்னுதே ॥ 20॥**

***தேகத்திற்குக் காரணமாகிய இம்முக்குணங்களையும் கடந்து, பிறப்பு, இறப்பு, மூப்பு, துன்பம் இவற்றினின்று விடுபடும் பொழுது தேகி இறவாமையைப் பெறுகிறான்.***

ஞானியாகிய தேகி தான் உயிரோடு வாழும் காலத்தே, மாயையாகிய உபாதிகளாகவும். உடல் உண்டாவதற்குக் காரணமான வித்துக்களாகவும் இருக்கின்ற இம்மூன்று குணங்களையும் கடந்து பிறப்பு, இறப்பு, மூப்பு, பிணி என்பவற்றிலிருந்து விடுபடுகிறான், இவ்வாறு என்நிலை எய்தப் பெறுகிறான்.

உயிர் வாழும்பொழுதே ஒருவன் குணங்களைக் கடந்து இறவாமை எய்தப் பெறுகிறான் என்று கேட்டவுடன் அர்ஜுனன் கூறுகிறான்:

अर्जुन उवाच

**कैर्लिङ्गैस्त्रीन्गुणानेतानतीतो भवति प्रभो ।**
**किमाचारः कथं चैतांस्त्रीन्गुणानतिवर्तते ॥ २१॥**

*அர்ஜுன உவாச*

**கைர்லிங்கைஸ்த்ரீன் குணான் ஏதான் அதீதோ பவதி ப்ரபோ ।**
**கிம் ஆச்சார: கதம் சைதாம்ஸ்த்ரீன்குணான் அதிவர்த்ததே ॥21॥**

*அர்ஜுனன் கூறினான்*

***பிரபுவே! இம் முக்குணங்களையும் கடந்தவனின் அடையாளம் என்ன? அவன் நடத்தை என்ன? மேலும் எவ்வாறு அவன் இம்முக்குணங்களையும் கடக்கின்றான்?***

முக்குணங்களைக் கடந்தவனின் அடையாளம் என்ன? அக்குணங்களைக் கடப்பதற்கு வழி என்ன? எனும் அர்ஜுனனின் வினாக்களுக்கு பகவான் விடை பகரலானார். முதற்கண், "குணங்களைக் கடந்தவனின் அடையாளம் என்ன?" என்பதற்கு விடை கூறுகிறார்.

श्रीभगवानुवाच

प्रकाशं च प्रवृत्तिं च मोहमेव च पाण्डव ।
न द्वेष्टि सम्प्रवृत्तानि न निवृत्तानि काङ्क्षति ॥२२॥

*ஸ்ரீ பகவான் உவாச*

**ப்ரகாஶம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹம் ஏவ ச பாண்டவ ।**
**ந த்வேஷ்டி ஸம்ப்ரவ்ருத்தானி ந நிவ்ருத்தானி காங்க்ஷதி ॥ 22॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***பாண்டவா! ஒளி, செயல், மயக்கம் இவை வரும்பொழுது அவன் வெறுப்பதில்லை, விட்டுச் செல்லும்பொழுது அவன் விரும்புவதில்லை.***

சத்துவ குணத்தின் விளைவு ஒளி, ரஜோ குணத்தின் விளைவு செயல், தமோ குணத்தின் விளைவு, மயக்கமாகும். இவை வந்துற்றுழி அவன் வெறுப்புக் கொள்வதில்லை. மெய்யறிவு இல்லாமையினாலன்றோ "எனக்குத் தாமஸிக எண்ணம் உண்டாகியுள்ளது அதனால் நான் மயங்குகின்றேன், எனக்கு ராஜஸிகமான செயல் துன்பத்தின் வடிவமாக வாய்த்துள்ளது அது என்னை எனது உண்மை நிலையினின்று தவறி விழச் செய்துள்ளது. ஆத்மாவாகிய எனது உண்மை நிலையினின்று நான் தவறியது எனக்குப் பெருந்துயரத்தைத் தருகின்றது. சாத்விகக் குணமானது என்னைப் பகுத்தறிவுடையவனாக்கி இன்பத்தைப் பற்றச் செய்து பந்தப்படுகின்றது" என்று ஒருவன் அவற்றை வெறுக்கிறான். ஆனால் குணங்களைக் கடந்தவனோ இவ்வாறு வந்தவற்றை வெறுப்பதில்லை. சாத்விக, ராஜஸிக, தாமஸிக மனிதன் இவை இல்லாதபோது அவற்றை விரும்புமாறு போல் குணங்களைக் கடந்தவன் விரும்புவதில்லை. இதுவே பொருளாகும். குணங்களைக் கடந்தவனின் இந்த அடையாளம் பிறர் கண்களுக்குத் தெரிவதில்லை. இது அவனுக்கு மட்டுமே தெரியுமாதலால் அவனால் மட்டுமே இந்த அடையாளத்தைக் காண முடியும். ஒருவனது மனதிலுள்ள விருப்பு, வெறுப்புக்களை பிறன் அறியமாட்டானன்றோ.

குணங்களைக் கடந்தவனின் நடத்தை என்ன என்பதற்கு இப்போது விடையளிக்கப்படுகிறது.

उदासीनवदासीनो गुणैर्यो न विचाल्यते ।
गुणा वर्तन्त इत्येव योऽवतिष्ठति नेङ्गते ॥२३॥

**உதாஸீனவத் ஆஸீனோ குணைர் யோ ந விசால்யதே ।**
**குணா வர்த்தந்த இத்யேவ யோ (அ)வதிஷ்டதி நேங்கதே ॥ 23॥**

***எவன் சட்டை செய்யாதவனாக இருந்து கொண்டு குணங்களால் அசைக்கப்படுவதில்லையோ, குணங்களே தொழில் புரிகின்றனவென்று***

*அசைவின்றி உறுதியாக நிற்கின்றானோ (அவன் குணங்களைக் கடந்தவனாவான்.)*

சட்டை செய்யாதவன் என்பவன் எந்தவொரு பக்கமும் சாராதிருப்பது போல் ஆத்ம ஞானத் துறவி குணங்களைக் கடந்து செல்லும் பாதையிலே உறுதியுடன் பயணம் செய்வான். விவேகப் பார்வையுடையவனாதலால் அதனின்று அவன் குணங்களால் அசைக்கப்படுவதில்லை. இது விளக்கப்படுகிறது: உடல், புலன்கள், புலனுகர்ச்சிப் பொருட்களாக மாறி நிற்கும் குணங்கள் ஒன்றிலொன்று செயல்படுகின்றன என்னும் உணர்வில் அவன் உரத்து நிற்கிறான். ஒரு சிறிதும் அசைவதில்லை. அதாவது அவன் தனது உண்மை நிலையில் உறுதியுடன் நிற்கிறான் என்று பொருளாகும். சுலோகத்தின் அளவு கருதி இங்கே 'அவதிஷ்டதி' என்னும் சொல் பரஸ்மைபதத்தில் பயன்படுத்தப்பட்டுள்ளது. 'அனுதிஷ்டதி' (அனுஷ்டிக்கிறான்) என்றும் வேறோர் பாடம் உண்டு. (அனுஷ்டானமென்பது இங்கே மெய்யறிவினால் விலக்கப்பட்ட போலிக் கர்மமாகும். 'உதாஸீனன்' என்னும் உவமையானது ஆத்ம ஞானமுடையவன் 'ஆத்மாநிர்விகாரி' என்பதை அறிந்து தன்னைக் கர்மங்களுக்குக் கர்த்தாவாகக் கொள்ளாது தான் செயல்படுதலின்றி நிற்கும் தனித்துவ நிலையை விளக்குகின்றது - ஆ)

மேலும்,

**समदुःखसुखः स्वस्थः समलोष्टाश्मकाञ्चनः ।**
**तुल्यप्रियाप्रियो धीरस्तुल्यनिन्दात्मसंस्तुतिः ॥ २४॥**

**ஸமது: க்கஸுக: ஸ்வஸ்த: ஸமலோஷ்டாஶ்மகாஞ்சன: ।**
**துல்யப்ரியாப்ரியோ தீரஸ்துல்யநிந்தாத்மஸம்ஸ்துதி: ॥ 24॥**

***இன்ப துன்பங்களை சமமாகக் கொண்டோன், தன் நிலையில் நிற்போன், ஓடு, கல், பொன் இவற்றை சமமாகக் காண்போன், இனியன இன்னாதனவற்றை நிகராகக் கொண்டோன், ஞானவான், தூற்றலையும், போற்றலையும் பொதுவாகக் கொள்வோன்.***

இப்படிப்பட்ட ஞானவான் தன்னில்தான் அசைவின்றி இருப்பான். மண்ணும், பொன்னும் கல்லும் அவனுக்கு ஒன்றே. அவ்வாறே இனியவையும், இன்னாதவையும் போற்றலும், தூற்றலுமாம்.

மேலும்,

**मानापमानयोस्तुल्यस्तुल्यो मित्रारिपक्षयोः ।**
**सर्वारम्भपरित्यागी गुणातीतः स उच्यते ॥ २५॥**

**மாநாபமாநயோஸ்துல்யஸ்துல்யோ மித்ராரிபக்ஷயோ: ।**
**ஸர்வாரம்பபரித்யாகீ குணாதீத: ஸ உச்யதே ॥ 25॥**

*மானத்தையும் அவமானத்தையும் நிகராய்க் கொள்வோன், நண்பரிடத்தும், பகைவரிடத்தும் நடுநிலைமை கொண்டோன், எக்கர்மத்திலும் முயற்சியில்லான், அவனே குணங்களைக் கடந்தவன் எனப்படுகிறான்.*

மானம், அவமானம் இரண்டும் அவனுக்கு ஒன்றே. நண்பரும், பகைவரும் ஒன்றே. சிலர் தம்மளவில் ஒரு பக்கம் சாராதவர்களாக இருந்த போதிலும், பிறர் பார்வையில் நண்பனாகவோ, பகைவனாகவோ ஒரு புறச் சார்புடையவர்களாக பார்க்கப்படுகின்றனர். அதனால்தான் பகவான் "இவன் நண்பரிடத்தும், பகைவரிடத்தும், நடுநிலைமை கொண்டவன்" என்று கூறுகிறார். இவன் இம்மை, மறுமைக்ககான எல்லாக் கர்மங்களையும் துறந்தவன், அதாவது உடலைப் பேணுதற்கான கர்மங்களைத் தவிர வேறு கர்மங்கள் எதையும் செய்யான் என்பது கருத்து, இப்படிப்பட்டவனே குணங்களைக் கடந்தவன் எனப்படுகிறான்.

சுலோகங்கள் 14.23-25ல் கூறப்பட்டுள்ள தன்மைகள் யாவும் முக்தியை நாடும் துறவியால் எத்துணைக் காலம் பின்பற்றப்பட வேண்டுமோ, அத்துணைக் காலம் ஊக்கத்துடன் பின்பற்றப்பட வேண்டியவையாகும். எந்தவித முயற்சியுமின்றி உறுதியுடன் நிலை நின்று ஒருவனுக்கு இவை இயல்பாகவே எய்தப் பெறுமாயின் குணங்களைக் கடந்த துறவிக்கு அவை அடையாளங்களாகின்றன.

முக்குணங்களை ஒருவன் எவ்வாறு கடக்கின்றான்? என்னும் வினாவிற்குப் பதில பின்வருமாறு:

**मां च योऽव्यभिचारेण भक्तियोगेन सेवते ।**
**स गुणान्समतीत्यैतान्ब्रह्मभूयाय कल्पते ॥ २६॥**

**மாம் ச யோ(அ)வ்யபிசாரேண பக்தியோகேன ஸேவதே ।**
**ஸ குணான் ஸமதீத்யைதான்ப்ரஹ்மபூயாய கல்பதே ॥ 26॥**

*வேறுபாடில்லாத பக்தி யோகத்தால் என்னை வழி படுவோனும் இக்குணங்களை எளிதில் கடந்து பிரம நிலைக்குத் தகுதியுடையோனாவான்.*

வேறுபாடில்லாத பக்தியோகத்தால், எல்லோருடைய உள்ளங்களிலும், உறையும் பகவான் நாராயணனாகிய என்னை வழிபடும் துறவி அல்லது கர்மி குணங்களைக் கடந்து பிரம்ம நிலைக்குத் தகுதியுடையவனாகிறான். அதாவது முக்திக்குரியவனாகிறான். அந்தப் பக்தி யோகமானது பகவானது கருணையினாலன்றோ அருளப் படுகின்றது. (பக்தி யோகம் என்பது பரமப்பிரேமையாகிய பேரன்பு கொள்ளல் என்று பொருளாகும். பக்தி யோகத்தால் பகவானை வழிபடல் என்பது - மனத்தை அங்குமிங்கும் அலையவிடாது பகவானை எப்போதும் தியானித்தலாகும். அப்போது

பகவானின் கருணையினால் மெய்ஞ்ஞானம் பிறக்கின்றது. அதன் பின் ஞானி உயிருடனிருக்கும் பொழுதே முக்தி யடைந்து விடுகிறான்.-ஆ)

இது எங்ஙனம் நிகழக்கூடும்? விளக்கம் பின்வருமாறு:

**ब्रह्मणो हि प्रतिष्ठाहममृतस्याव्ययस्य च ।**
**शाश्वतस्य च धर्मस्य सुखस्यैकान्तिकस्य च ॥२७॥**

**ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹம் அம்ருதஸ்யாவ்யயஸ்ய ச ।**
**ஶாஶ்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யைகாந்திகஸ்ய ச ॥ 27॥**

***அழிவும், மாறுபாடுமற்ற பிரம்மத்துக்கு நானே நிலைக்களன். நித்திய தர்மத்திற்கும் நிகரில்லா இன்பத்திற்கும் நானே உறைவிடம்.***

உள்ளிருக்கும் ஆத்மாவாகிய நான், பிரம்மமாகிய பரமாத்மாவிற்கு நிலைக்களனாக இருக்கின்றேன். இப்பிரம்மத்தின் தன்மை என்ன? அது அழிவும் மாறுபாடுமற்றது. அதுவே நித்திய தர்மம். அதாவது ஞானயோக தர்மத்தினால் எய்தப்படுவது. அது நிகரற்றப் பேரின்பம், அதாவது பரமானந்தமாகும். உள்ளிருக்கும் ஆத்மாவே பரமாத்மா என்பது மெய்யறிவினால் உறுதி செய்யப்படுகிறது. இவ் உண்மையானது "பிரம்ம நிலைக்குத் தகுதியுடையவனாகிறான்" என்று ஏற்கெனவே (14-26) உறுதி செய்யப்பட்டுள்ளது.

பிரம்மம் எந்த ஈசுவர சக்தியால் பக்தர்களுக்கு அருள்பாலித்தல் முதலியவற்றைச் செய்கின்றதோ அந்த சக்தி பிரம்மமாகிய நான் தான். காரணம் சக்தியும், சக்தியை உடையதும் வேறல்ல ஒன்றுதான் என்பது கருத்தாகும்.

அல்லது பிரம்மம் என்பது சொல்லால் சுட்டக்கூடிய சகுணப் பிரம்மத்தைக் குறிப்பிடுவதாகக் கொள்ளலாம். குணங்களுக்கு அப்பாற்பட்டவனாகிய நானே அந்தப் பிரம்மத்திற்கு நிலைக்களனாக இருக்கின்றேன். குணங்களுடன் கூடிய பிரம்மத்திற்கு 'அழிவின்மையும் மாறுபாடின்மையும்' தன்மைகளாகும். ஞான நிஷ்டையாகிய சநாதன தர்மத்திற்கும் அதிலிருந்து உண்டாகும் தவறாத ஆனந்தத்திற்கும் நானே உறைவிடமாவேன்.

இவ்வாறு மகாபாரதத்தில் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "குணத்ரயவிபாக யோகம்" என்னும் பதினான்காம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் பதினைந்து

## புருஷோத்தம யோகம்

கருமிகளின் கா்மத்தின் பயனையும், ஞானிகளின் ஞானத்தின் பயனையும் உயிர்கள் என்னைச் சார்ந்தே பெற வேண்டியிருப்பதால், பக்தி யோகத்தால் என்னை வழிபடுவோர், எனது அருளினால் பெற்ற ஞானத்தின் மூலம் பிரகிருதியின் குணங்களைக் கடந்து முக்தியடைகின்றனர். அப்பிடியிருக்க ஆத்மாவின் உண்மை நிலையை அறிந்தவர்களைப் பற்றிக் கூறவும் வேண்டுமோ? அதனால்தான் பகவான், அர்ஜுனன் கேட்காத போதிலும், ஆத்மாவைப் பற்றிய உண்மை நிலையை விவரிக்க முன்வந்து 'மேலே வேருள்ளதும்' என்பது முதலான சுலோகங்களை அருளிச் செய்கிறார். முதற்கண் சம்சாரத்தை, பற்றின்மையை உண்டாக்குவதற்காக ஒரு மரமாக உருவகஞ்செய்கிறார். (பற்றின்மையால் மட்டுமே வெட்டக் கூடியது சம்சாரம் எனவே இங்கு அதற்கு மரம் உவமை) மேலும் பகவானது உண்மையை அறிய பற்றின்மை உடையவனைத் தவிர வேறொருவனுக்கு உரிமை இல்லை. ஆதலின்,

श्रीभगवानुवाच

**ऊर्ध्वमूलमधःशाखमश्वत्थं प्राहुरव्ययम् ।**
**छन्दांसि यस्य पर्णानि यस्तं वेद स वेदवित् ॥१॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**ஊர்த்வமூலமத:ஶாகமஶ்வத்தம் ப்ராஹுர் அவ்யயம் ।**
**சந்தாம்ஸி யஸ்ய பர்ணானி யஸ்தம் வேத ஸ வேதவித் ॥ 1॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***மேலே வேருள்ளதும் கீழே கிளையுள்ளதுமான அழிவற்ற அரச மரத்தைப் பற்றிப் பேசுகின்றனர். அதன் இலைகள் வேதங்களாகும். எவன் அதனை அறிகின்றானோ அவன் வேதங்களை அறிபவனாவான்.***

அவ்யக்தமென்னும் மாயா சக்தியினையுடைய பிரம்மமானது காலத்தால் சூக்குமமானது என்பதோடு, காரணமாகவும், நித்தியமானதாகவும், பெரியதாகவும் இருக்கின்றது. அந்தப் பிரம்மமே சம்சாரமாகிய மரத்தின் வேராக இருக்கிறது. ''வேர்கள் மேலாகவும், கிளைகள் கீழாகவுமுடைய இந்த அரசமரம் நித்தியமானது' (கட.உ.3.2.1) புராணங்களும் பிரம்மம் என்னும் நித்திய

விருட்சமானது அவ்யக்தம் என்னும் வேரை பிறப்பிடமாகக் கொண்டது, அதன் (அவ்யக்தம்) வலிமையினாலேயே ஓங்கி வளர்ந்துள்ளது. அதன் அடிமரம் புத்தியாகும். புலன்கள் அதன் பொந்துகளாகும். நிலம், நீர் முதலிய மகா பூதங்கள் அதன்கிளைகளாகும். புலனுகர்ச்சிப்' பொருட்கள் (விஷயங்கள்) அதன் இலைகளாகும். தர்ம அதர்மங்கள் அதன் அழகிய மலர்களாகும். இன்பதுன்பங்கள் அதன் கனிகளாகும். உயிர்கள் அனைத்தும் அதனைச் சார்ந்திருக்கின்றன. இவ்விருட்சமே பிரம்மத்தின் உறைவிடமாகும். அதற்குப் பிரம்மமே ஆதாரமாகும் (அதாவது பிரம்மத்தைத் தவிர சம்சாரத்திற்கு வேறு ஆதாரமில்லை). ஞானமாகிய வலிய கோடரியால் அதைப் பிளந்து ஆத்மானந்தத்தைப் பெற்றவன் மீண்டும் அதனின்று திரும்பி வருவதில்லை. (ம.பா. அஸ்வ. பர்வம் 35. 20-22; 47. 12-15).

மயக்கமிகு சம்சாரத்தை மேலே வேராகக் கொண்ட விருட்சம் அது என்கின்றனர். மஹத், அஹங்காரம், தன்மாத்திரைகள் என்னும் அதன் கிளைகள் கீழ்ப்புறமாக உள்ளன. அது 'அச்வத்தம்' என்றழைக்கப்படுகிறது. காரணம் அது கணங்கள் தோறும் அழியும் தன்மை உடையதால் மறுநாள் கூட இராது என்று (முனிவர்கள்) கூறுகின்றனர். சம்சார மாயை அனாதியாதலால் அச்சம்சார விருட்சம் அழிவற்றதுமாகும். ஏனெனில் அது முதலும், முடிவும் இல்லாத உடல் போன்றவற்றின் தொடர்ச்சிக்குப் பின்புலமாக இருப்பதாக அறியப் படுகின்றது. ரிக்,யஜுர், சாமம் என்னும் ''சந்தஸ்கள்'' அதாவது வேதங்கள் அதனை மறைத்து அதற்குப் பாதுகாப்பாக இருப்பதால் சம்சார விருட்சத்திற்கு அவை இலைகளைப் போன்றுள்ளன. இலைகள் மரத்தை மூடிப் பாதுகாப்பது போல், தர்மம், அதர்மம், அதன் காரணம், பயன் இவற்றை உணர்த்துவதற்குரியவையாகிய வேதங்கள் (கர்ம காண்டங்கள்) சம்சார விருட்சத்தைப் பாதுகாப்பதற்காக உள்ளன. மேற் கூறியவண்ணம் வேதங்களை அறிந்தவனே வேதங்களை அறிந்தவன் அதாவது வேதங்களின் சாரத்தை அறிந்தவனாவான். இச்சம்சார விருட்சத்தை அடிமுதல் நுனி வரை அறிவதை விட வேறு அறியக் கூடியப் பொருள் அணுவளவும் இல்லை. எனவே வேதங்களின் சாரத்தை அறிந்தவன் எல்லாமறிந்தவனாவான், அதாவது சம்சார விருட்சத்தையும் அதன் வேரையும் அறிவதைச் சிறப்பித்துக் கூறுகின்றார்.

இம்மரத்தின் பாகங்களுக்கு மற்றோர் உருவகம் தரப்படுகின்றது.

अधश्चोर्ध्वं प्रसृतास्तस्य शाखा गुणप्रवृद्धा विषयप्रवालाः ।
अधश्च मूलान्यनुसन्ततानि कर्मानुबन्धीनि मनुष्यलोके ॥ २॥

அதஶ் சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய
ஶாகா குணப்ரவ்ருத்தா விஷயப்ரவாளா: ।
அதஶ்ச மூலான்யனுஸந்ததானி
கர்மானுபந்தீனி மனுஷ்யலோகே ॥ 2॥

*அதன் கிளைகள் குணங்களால் ஓங்கி வளர்ந்து கீழும், மேலும் விஷயங்களாகியத் தளிர்களுடன் அடர்ந்திருக்கின்றன. கீழேயும் மனிதர் உலகில் அதன் வேர்கள் கர்மத்தைத் தோற்றுவிப்பவையாய் பல்கிப் பெருகியிருக்கின்றன.*

'கீழ்' என்பது மனிதன் முதல் அசையா உயிர்களாகிய மரம் செடி, கொடிகள் ஈறாக உள்ள உயிரினங்களாகும். 'மேல்' என்பது மனிதன் முதல் பிரம்ம தேவன் ஈறாக உள்ள உயிர்களாவர். மனிதன் முதல் மரம் செடி கொடிகள் வரை, மனிதன் முதல் பிரம்ம தேவன் வரை அவர்களின் கர்மம் மற்றும் ஞானத்திற்கேற்ப, கர்மத்தின் பயனாகவும், ஞானத்தின் பயனாகவும் உள்ள உயிர்கள் அனைத்தும் அந்த மரத்தின் கிளைகளாகப் பல்கிப் பெருகியுள்ளன. அவை அவற்றின் பௌதீகக் காரணங்களாகிய சத்துவ, ரஜஸ், தமஸ் முதலிய குணங்களினால் பருத்து, செழித்து வளர்ந்திருக்கின்றன. ஓசை முதலிய புலனுகர்ச்சிப் பொருட்கள் கர்மத்தின் பயனாகிய உடல் போன்ற கிளைகளினின்று முளைத்துள்ள தளிர்கள் போலும். எனவே விஷயங்கள் கிளைகளின் தளிர்கள் ஆகும். சம்சார மரத்தின் பௌதீகக் காரணமாகிய அதன் ஆணிவேர் பற்றி முன்னரே விளக்கியாகிவிட்டது. இப்பொழுது கர்மத்தின் பயன்களாகிய விருப்பு வெறுப்பு முதலிய வாசனைகள் அதன் சல்லிவேர்கள் போலும். இவையே பின்னர் ஒருவன் தர்ம, அதர்மத்தில் ஈடுபடுவதற்குக் காரணமாகின்றன என்று விளக்கப்படுகின்றது. இவ்வேர்கள் தேவருலகிற்குக் கீழ் மனிதர் உலகில் பல்கிப் பெருகியுள்ளன. இவையே தர்மம், அதர்மம் என்னும் கர்மங்களை உண்டாக்குகின்றன. இவ்வேர்கள் குறிப்பாக மானிட உலகிலேயே படர்ந்திருக்கின்றன. காரணம் மனிதர்களுக்கு மட்டுமே இங்கு கர்மத்தில் அதிகாரம் ஆதலின்.

சம்சார விருட்சம் இங்கு விவரிக்கப்படுகிறது.

**न रूपमस्येह तथोपलभ्यते नान्तो न चादिर्न च सम्प्रतिष्ठा ।**
**अश्वत्थमेनं सुविरूढमूल-मसङ्गशस्त्रेण दृढेन छित्त्वा ॥ ३॥**

**ந ரூப்மஸ்யேஹ ததோபலப்யதே**
**நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்டா ।**
**அஶ்வத்தமேனம் ஸுவிரூட மூலம்**
**அஸங்க ஶஸ்த்ரேண த்ருடேன சித்த்வா ॥ 3॥**

*இங்கே அதன் வடிவம் அவ்வாறு காணப்படவில்லை. முடிவும், ஆதியும், இருப்பும் காணப்படவில்லை. நன்கு வேரூன்றியுள்ள இந்த அரச மரத்தை (அச்வத்தை) பற்றின்மையெனும் வலிய கோடரியால் வெட்டி,*

கனவுபோல், கானல் நீர் போல் ஆகாயப் பட்டினம் போல், மேலே கூறியுள்ளபடி அதன் வடிவம் இங்கு காணப்படவில்லை. இது தோன்றும்

போதே அழிகின்றது. அதனால் அதற்கு முடிவுமில்லை, இறுதியுமில்லை. இது இன்றிலிருந்து தோன்றியது என இதன் ஆதி யாராலும் அறியப்படவில்லை. மேலும் இதன் இருப்பும், நிலைப்பும், நடுவும் அறிந்தவர் எவருமில்லை. நன்றாக வேரூன்றியுள்ள இந்த அரச மரத்தை மக்கள், செல்வம், புகழ், இவற்றின் மீது ஆசையைத் துறத்தலாகியப் பற்றின்மை என்னும் வலிய கோடரியால் வெட்டி வீழ்த்த வேண்டும். இக்கோடரியின் வலிமையானது பரமாத்மாவின் மீது மனத்தை வைத்தலென்னும் உறுதியினின்று பெறப்படுகிறது. இதன் சுடர் பகுத்தறிவென்னும் சாணைக் கல்லில் அடிக்கடி தீட்டப்படுகிறது.

**ततः पदं तत्परिमार्गितव्यं-यस्मिन्गता न निवर्तन्ति भूयः।**
**तमेव चाद्यं पुरुषं प्रपद्ये यतः प्रवृत्तिः प्रसृता पुराणी ॥ ४॥**

**தத: பதம் தத் பரிமார்கிதவ்யம்**
**யஸ்மின்கதா ந நிவர்தந்தி பூய: ।**
**தம் ஏவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே**
**யத: ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ॥ 4॥**

***அப்பால் எதனுள் புகுந்தோர் மீட்டும் வருவதில்லையோ அந்நிலையைத் தேடுதல் வேண்டும். எவனிடம் இச்சம்சாரம் ஆதியில் முகிழ்த்ததோ, அந்த ஆதிபுருஷனைச் சரணடைகின்றேன்.***

சம்சார விருட்சத்திற்கு அப்பால், எங்கும் வியாபித்துள்ள பொருளின் நிலை எதுவோ, எங்கு புகுந்தவர்கள் மீண்டும் சம்சாரத்திற்குத் திரும்பி வருவதில்லையோ, அதனைத் தேட வேண்டும், தேடி அறிய வேண்டும் என்பது பொருளாகும். அதனை எவ்வாறு தேடுவது? 'நிலை' என்னும் சொல்லால் சுட்டப்பட்டவன் எவனோ, அந்த ஆதிபுருஷனை, அவனையே முற்றிலும் அடைக்கலமாகக் கொண்டு தேட வேண்டும். இந்த ஆதிபுருஷன் யார்? மாயா ஜாலக்காரனிடமிருந்து பொய்த் தோற்றங்கள் தோன்றுவதுபோல் சம்சார மாயா மரம் எவனிடமிருந்து ஆதியில் வெளிப்பட்டதோ அவனே ஆதி புருஷனாவான்.

எப்படிப்பட்டோர் அந்நிலை எய்தப் பெறுகின்றனர்? பதில் பின்வருமாறு:

**निर्मानमोहा जितसङ्गदोषा-अध्यात्मनित्या विनिवृत्तकामाः।**
**द्वन्द्वैर्विमुक्ताः सुखदुःखसञ्ज्ञै-र्गच्छन्त्यमूढाः पदमव्ययं तत् ॥ ५॥**

**நிர்மானமோஹா: ஜிதஸங்கதோஷா**
**அத்யாத்மநித்யா விநிவ்ருத்தகாமா: ।**
**த்வந்த்வைர்விமுக்தா: ஸுகது:க் ஸம்ஜ்ஞை:**
**கச்சந்த்ய மூடா: பதம் அவ்யயம் தத் ॥ 5॥**

*செருக்கும், மயக்கமும் அற்றவர், பற்றெனும் குற்றம் விட்டவர், ஆத்ம ஞானத்தில் எப்போதும் நிற்பவர், முற்றும் ஆசை ஒழிந்தவர், இன்ப துன்பமெனும் இருமைகளினின்று விடுபட்டு மயக்கம் தெளிந்தவர் அழிவிலா அந்நிலை அடைகின்றனர்.*

செருக்கு - நான் எனும் கர்வம், மயக்கம் - அவிவேகம். ஆத்ம ஞானத்தில் எப்பொழுதும் நிற்பவர் - பரமாத்மாவைப் பற்றியே சதா சிந்திப்பவர். முற்றும் ஆசை ஒழிந்தவர் - ஆசை தனது அடிச்சுவட்டைக் கூட அவர்களிடம் மிச்சம் வைக்காது முற்றிலும் ஒழிந்து போய்விடுவது. இப்படிப்பட்ட துறவிகள், சந்நியாசிகள் இன்ப துன்பமெனும் இருமைகளினின்று முற்றிலும் விடுபடுகின்றனர். மயக்கம் தெளிந்தவர் - மயக்கம் நீங்கியவர்கள் அதாவது விவேகிகள், மெய்யறிவுடையவர்கள்.

அந்நிலை மேலும் விளக்கப்படுகிறது.

न तद्भासयते सूर्यो न शशाङ्को न पावकः ।
यद्गत्वा न निवर्तन्ते तद्धाम परमं मम ॥६॥

**ந தத் பாஸயதே ஸூர்யோ ந ஶஶாங்கோ ந பாவக: ।**
**யத்கத்வா ந நிவர்த்தந்தே தத்தாம பரமம் மம ॥ 6॥**

*அதற்கு சூரியனும், சந்திரனும், அக்னியும் ஒளியேற்றுவதில்லை. எதனை எய்தினோர் திரும்பி வருவதில்லையோ அதுவே எனது பரமபதம்.*

எல்லாவற்றையும் ஒளிரச் செய்யும் சக்தியுடையதாக சூரியன் இருப்பினும் அது ஒளிமிக்க எனது பரமபதத்தை ஒளியுறச் செய்வதில்லை. அதுபோல் சந்திரனும், அக்னியும் கூட அதனை ஒளியுறச் செய்வதில்லை. எங்குமுள பொருளின் எந்நிலை எய்தப் பெற்றால் மீண்டும் திரும்பி வருவதில்லையோ, எந்த இடத்தைச் சூரியனும் மற்றவையும் ஒளியுறச் செய்வதில்லையோ அந்த இடம் எனது பரமபதமாகும்.

'எதனை எய்தினோர் திரும்பி வருவதில்லையோ' என்று கூறப்பட்டது. போக்கு என்பது வரவில் முடியும், சேர்க்கை என்பது பிரிவில் முடியும் என்பது எல்லோரும் அறிந்ததன்றே. அவ்வாறிருக்க 'எதனை எய்தினோர் திரும்பி வருவதில்லையோ' என்று எங்ஙனம் கூறப்பட்டது. விளக்கம் பின்வருமாறு:

ममैवांशो जीवलोके जीवभूतः सनातनः ।
मनःषष्ठानीन्द्रियाणि प्रकृतिस्थानि कर्षति ॥७॥

**மமைவாம்ஶோ ஜீவலோகே ஜீவபூத: ஸநாதன: ।**
**மன:ஷஷ்டானீந்த்ரியாணி ப்ரக்ருதிஸ்தானி கர்ஷதி ॥ 7॥**

*எனது அம்சமே ஜீவலோகத்தில் என்றுமுள ஜீவனாகி, பிரகிருதியில் உள்ள மனம் உள்ளிட்ட ஆறு புலன்களை ஈர்க்கின்றது.*

"பரமாத்மாவான நாராயணனாகிய எனது 'ஒருபாகம்' 'ஓர் அங்கமே' உயிரினங்களின் உலகில் ஒரு ஜீவனாகியுள்ளது. ஜீவனே நித்திய கர்த்தாவாகவும், அனுபவிப்பவனாகவும், நன்கு அறியப்படுகிறது. தண்ணீரில் காணப்படும் சூரிய பிம்பம் சூரியனின் அம்சமேயாகும். நீராகிய காரணம் இல்லாத காலத்து அப்பிம்பம் மீண்டும் உண்மைச் சூரியனைச் சென்றடையுமேயன்றி திரும்பி வருவதில்லை. அதுபோல் பானையில் உள்ள ஆகாயமானது உண்மை ஆகாயத்தின் ஓர் அம்சமேயாகும். அப்பானை இல்லாது ஒழியின் அந்த அம்ச ஆகாயம் மீண்டும் உண்மை ஆகாயத்தில் இணைகிறதேயன்றி மீண்டும் அங்கிருந்து திரும்பிவருவதில்லை. அவ்வாறே எனது அம்சமாகிய ஜீவனும் என்னை எய்தியபின் மீண்டும் திரும்பிவருவதில்லை." அதனால் என்னை எய்தினோர் மீண்டும் இங்கு திரும்பிவருவதில்லை (15.6) என்று கூறியது மிகச் சரியாகும்.

மறுப்பு: அவ்வாறாயின் அங்கங்கள் இல்லாத பரமாத்மாவிற்கு அங்கம் என்றும் அம்சம் என்றும் இருப்பது எது? அப்படி ஒருக்கால் அங்கங்கள் இருக்குமாயின் அவை பிரியும்பொழுது அது அழிய நேரிடுமே?

பதில்: அப்படி அழிவு உண்டாகும் அபாயம் ஏதுமில்லை. காரணம் இந்த 'அங்கம்', 'அம்சம்' என்பதெல்லாம் அவித்யையினால் வரையறுக்கப்பட்டக் கற்பிதமேயாகும். இக்கருத்து 13ம் அத்தியாயத்தில் விரிவாக விளக்கப்பட்டுள்ளது.

எனது அம்சமாகக் கற்பிக்கப்பட்ட அந்த ஜீவன் இவ்வுலகில் எவ்வாறு வாழ்கிறான்? அல்லது எவ்வாறு இவ்வுலகை விட்டுச் செல்கிறான்? கூறுவோம். ஜீவன் பிரகிருதியில் உள்ள செவி முதலிய ஐம்புலன்களோடு ஆறாவதாக உள்ள மனத்தையும், சேர்த்து இழுக்கின்றான். பிரகிருதியில் உள்ள — செவிக்கு, செவித் துவாரம் போல் அவ்வப் புலன்களின் தங்குமிடங்களில் உள்ள என்று பொருளாகும். எப்பொழுது இவ்வாறு இழுக்கிறான்?

**शरीरं यदवाप्नोति यच्चाप्युत्क्रामतीश्वरः ।**
**गृहीत्वैतानि संयाति वायुर्गन्धानिवाशयात् ॥ ८॥**

**ஶரீரம் யத் அவாப்நோதி யச் சாப்யுத்க்ராமதீஶ்வர: ।**
**க்ருஹீத்வைதானி ஸம்யாதி வாயுர்கந்தாநிவாஶயாத் ॥ 8॥**

*உடலை ஆளும் ஜீவன் யாதேனுமோர் உடலை எய்துங் காலத்தும் நீங்குங்காலத்தும், நாற்றங்களைக் காற்று பற்றிச் செல்வதுபோல் இவற்றை (புலன்களை) பற்றிச் செல்கின்றான்.*

உடலை ஆளும் ஜீவன், உடல் முதலியவற்றின் எஜமானனாகிய அவன் அவ்வுடலை விட்டு வெளியேறும் பொழுது இப்புலன்களைப் பற்றிச்

செல்கிறான் என்று சுலோகத்தின் இரண்டாம் அடியை முதல் அடியுடன் இணைத்துப் படிக்கவும். முந்தைய உடலிலிருந்து வெளியேறி ஜீவன் மற்றோர் உடலைப் பெறும் பொழுது ஜீவன் மனம் உள்ளிட்ட ஆறு புலன்களைப் பற்றிச் செல்கிறான். காற்று நாற்றங்களை அவற்றின் இருப்பிடங்களாகிய மலர்கள் போன்றவற்றினின்று பற்றிச் செல்வது போல்.

அப்புலன்கள் யாவை?

श्रोत्रं चक्षुः स्पर्शनं च रसनं घ्राणमेव च ।
अधिष्ठाय मनश्चायं विषयानुपसेवते ॥९॥

**ஶ்ரோத்ரம் சக்ஷு: ஸ்பர்ஶனம் ச ரஸனம் க்ராணம் ஏவ ச ।**
**அதிஷ்டாய மனஶ்சாயம் விஷயான் உபஸேவதே ॥ 9॥**

***இவன் செவி, கண், மெய், நாக்கு, மூக்கு, மனம் என்னும் இவற்றைச் சார்ந்து விஷயங்களை நுகர்கின்றான்.***

உடலில் இருப்பவன், ஆறாவதாகிய மனத்தை ஐம்புலன்களோடும் தனித்தனியே சார்ந்து விஷயங்களை அனுபவிக்கின்றான்.

இவ்வாறு உடல் உள்ளவன் அதைவிட்டுச் செல்கையில்,

उत्क्रामन्तं स्थितं वापि भुञ्जानं वा गुणान्वितम् ।
विमूढा नानुपश्यन्ति पश्यन्ति ज्ञानचक्षुषः ॥१०॥

**உத்க்ராமந்தம் ஸ்திதம் வாபி புஞ்ஜானம் வா குணான்விதம் ।**
**விமூடா நானுபஶ்யந்தி பஶ்யந்தி ஜ்ஞான சக்ஷுஷ: ॥ 10॥**

***குணங்களோடு கூடி, (உடலை) விட்டுப் பிரிபவனும், அதில் வாழ்பவனும் அதிலிருந்து அனுபவிப்பவனுமாகிய இவனை மதிமயங்கியவர்கள் காண்பதில்லை, மாறாக ஞானக் கண்ணுடையோர் காண்கின்றனர்.***

முன்னர் பெற்ற உடலை விட்டுப் பிரிபவனாகவும், அதில் வாழ்பவனாகவும், ஓசை முதலிய விஷயங்களை நுகர்பவனாகவும், இன்பம், துன்பம், மயக்கம் என்னும் தன்மைகளையுடையக் குணங்களோடுத் தொடர்புடையவனாகவும் இருக்கும் ஜீவனை எளிதில் உய்த்துணர்தற்கு எளியவனாக இருக்கும் அவனை அஞ்ஞானிகள் அறிவதில்லை. அதாவது இம்மை, மறுமையிலுள்ள விஷய போகங்களின் வன்மையினால் மனம் கவரப்பட்டு பலவாறு மதிமயங்கியவர்கள் இவனை உணர்வதில்லை. "ஆ! ஈதென்ன கொடுமை' என்று பகவான் கழிவிரக்கங் கொள்கிறார். எனினும் பிரமாணத்தினால் யாவர் ஞானக் கண் பெற்றுள்ளனரோ, அந்த ஞானக் கண்ணுடையவர்கள் அதாவது பகுத்தறிவு. வாய்க்கப் பெற்றோர் இவனைக் காண்கின்றனர். அதாவது

ஆனால் சிலர்,

**यतन्तो योगिनश्चैनं पश्यन्त्यात्मन्यवस्थितम् ।**
**यतन्तोऽप्यकृतात्मानो नैनं पश्यन्त्यचेतसः ॥११॥**

**யதந்தோ யோகினஶ்சைனம் பஶ்யந்தி ஆத்மன்யவஸ்திதம் ।**
**யதந்தோ(அ)ப்யக்ருதாத்மானோ நைனம் பஶ்யந்தயசேதஸ: ॥11॥**

*முயற்சியுடையவர்களான யோகிகள் இவனைத் தம்முள்ளே காண்கின்றனர். புத்தியிலே தெளிவு பெறாத அவிவேகிகள், முயற்சியுடையவர்களாயினும் இவனைக் காண்பதில்லை.*

மனத்தை ஒருமுகப்படுத்தி முயற்சியுடையவர்களான யோகிகள், ஆத்மாவை தம்முள்ளே, தமது புத்தியில் ''இதோ நான் இருக்கின்றேன்'' என்று காண்கின்றனர். அதே சமயம் தவத்தாலும், புலனடக்கத்தாலும் மனத்தைத் தூய்மை செய்யாமலும், தீயொழுக்கத்தினின்று விலகாதவராகவும், புத்தி தெளிவில்லாதவராகவும் ஆணவம் ஒழியாதவராகவும் இருக்கும் அவிவேகிகள் முயற்சியுடையவர்களாக இருந்த போதிலும் இவனைக் காண்பதில்லை. (புத்தி தெளிவில்லாத அவிவேகிகளுக்கு சிரவணம், மனனம் முதலியவை பயன்தரா - ஆ)

அக்னி, சூரியன் போன்றவை எல்லாவற்றையும் ஒளியுறச் செய்பவையாயினும், எதனை ஒளியுறச் செய்வதில்லையோ, எதனை அடைந்த முமுக்ஷுக்கள் (சம்சாரத்தினின்று விடுபட விரும்புவோர்) மீண்டும் சம்சாரத்திற்குத் திரும்புவதில்லையோ, மேலும் பானையிலுள்ள ஆகாசம், உண்மை ஆகாசத்தின் அம்சமாக இருப்பது போன்று பற்பல வரையறைக்குட்பட்ட ஜீவன்கள் எதனுடைய அம்சங்களாக இருக்கின்றனவோ அதனை அந்த நிலையே எல்லாவற்றின் ஆத்மா எனவும், எல்லாச் செயல்களுக்கும் அடிநாதமாக இருக்கின்றது எனவும் எடுத்துக் காட்டு முகத்தான் பகவான் விபூதியின் சுருக்கத்தை (தாம் எங்கும் வியாபித்திருக்கும் நிலையை) பின்வரும் நான்கு சுலோகங்களில் விளக்கியருள்கின்றார்.

**यदादित्यगतं तेजो जगद्भासयतेऽखिलम् ।**
**यच्चन्द्रमसि यच्चाग्नौ तत्तेजो विद्धि मामकम् ॥१२॥**

**யதாதித்யகதம் தேஜோ ஜகத்பாஸயதே(அ)கிலம் ।**
**யச்சந்த்ரமஸி யச்சாக்னௌ தத்தேஜோ வித்தி மாமகம் ॥ 12॥**

*எந்த ஒளி சூரியனைச் சார்ந்து உலகையெல்லாம் ஒளியுறச் செய்கின்றதோ, எது சந்திரனிலும், அக்னியிலும் உள்ளதோ அந்த ஒளியை எனதென்று அறிவாயாக.*

எது சூரியனைச் சார்ந்து உலகம் முழுவதையும் ஒளியுறச் செய்கின்றதோ, எது சந்திரனிலும், அக்னியிலும் உள்ளதோ அந்த ஒளி, பிரகாசம், விஷ்ணுவாகிய எனது என்று அறிவாயாக அல்லது அந்த ஒளியை அறிவொளியாகவும் (சைதன்யம்) அறிந்து கொள்ளலாம்.

மறுப்பு : அந்த அறிவொளி அசையும் அசையா உயிர்களிடத்து சரிசமமாக இருக்கின்றது. இவ்வாறிருக்க அந்த ஒளி சூரியனைச் சார்ந்து..... என்று ஏன் குறிப்பாகச் சுட்ட வேண்டும்?

பதில் : அதில் தவறில்லை. சத்துவ குணம் மிகுதியாக இருக்குமிடத்து அறிவொளியும் அதிகமாகப் புலப்படும் ஆகவே சூரியன் போன்றவற்றில் சத்துவ குணம் மிகத் துலக்கமாக பளபளப்பாக உள்ளது. எனவேதான் அது குறிப்பாக சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. மேலும் அதில் மட்டும்தான் அது அதிகமாக இருக்கிறது என்பதன்று. மேலும் உலகில் ஒரு முகத்தின் வடிவம் ஒன்றாக இருந்த போதிலும் அது மரம், சுவர் முதலியவற்றில் பிரதிபலிப்பதில்லை. அது தெளிவாகவும், மிகத் தெளிவாகவும் கண்ணாடியில் அதன் தன்மைக்கேற்ப பிரதிபலிக்கின்றது. இவ்வாறு கொள்க.

மேலும்,

**गामाविश्य च भूतानि धारयाम्यहमोजसा ।**
**पुष्णामि चौषधीः सर्वाः सोमो भूत्वा रसात्मकः ॥१३॥**

**காமாவிஶ்ய ச பூதானி தாரயாம்யஹ மோஜஸா ।**
**புஷ்ணாமி சௌஷதீ: ஸர்வா: ஸோமோ பூத்வா ரஸாத்மக: ॥ 13॥**

***நான் பூமியுட்புகுந்து வலிமையினால் உயிர்களைத் தாங்குகின்றேன். சாறு மிகுந்த சந்திரனாகி பயிர்களனைத்தையும் வளர்க்கின்றேன்.***

நான் பூமியுட்புகுந்து ஆசையும் பற்றும் அற்ற எனது வலிமையினால் உயிர்கள் அனைத்தையும் - இப்பிரபஞ்சத்தையே - தாங்குகின்றேன். அவ்வலிமை தெய்வ வலிமையாகும். இதன் காரணமாகவே பூமி விழுவதுமில்லை, சிறுதுண்டுகளாக நொறுங்குவதுமில்லை. பின்வரும் மந்திரங்கள் உறுதி செய்கின்றன.

"எதனால் பரந்த விண்ணும், மண்ணும் உறுதியுடன் தாங்கப்பட்டுள்ளனவோ," "அவன் பூமியை உறுதியுடன் தாங்கினான்" (தை.ஸம்.4.1.8)

மேலும் சாறு மிகுந்த சந்திரனாகி பூமியில் விளையும் நெல், கோதுமை முதலிய பயிர்களையெல்லாம் வளமும், சுவையுமுடையனவாக வளர்க்கின்றேன். எல்லாச் சுவையுமுள்ள சாறுகளுக்கெல்லாம் சந்திரன் உறைவிடமாவான். அவ்வவற்றுக்குரிய சாற்றை அவனே பயிர்கட்கெல்லாம் அளிக்கின்றான். அது தவிர,

अहं वैश्वानरो भूत्वा प्राणिनां देहमाश्रितः ।
प्राणापानसमायुक्तः पचाम्यन्नं चतुर्विधम् ॥ १४॥

**அஹம் வைஶ்வாநரோ பூத்வா ப்ராணினாம் தேஹம் ஆஶ்ரித: ।**
**ப்ராணாபானஸமாயுக்த: பசாம்யன்னம் சதுர்விதம் ॥ 14॥**

*நானே வைசுவாநரனாகி உயிர்களின் உடல்களைச் சார்ந்து உள்மூச்சு (பிராணன்) மற்றும் வெளி மூச்சுடன் கூடி நால்வகையான உணவைச் செரிக்கின்றேன்.*

வைசுவாநரன் என்பது வயிற்றிலுள்ள நெருப்பாகும். "வைசுவாநரன் என்னும் தீ மனிதனுள் இருக்கின்றது. அதன் மூலம் உணவு ஜீரணிக்கப்படுகின்றது" (பி.உ.5.9.1) நால்வகை உணவுகளாவன: உண்டல் (சோறு), மென்று தின்றல் (கறி), பருகுதல் (நீர்), நக்குதல் (தேன்)

உண்பவன் வைசுவாநரன் என்னும் அக்னியாகும். உண்ணப்படும் உணவு சோமன் என்னும் சந்திரனுமாகும். அக்னி சோமன் என்னும் இவர்களே எல்லாம் என்று பார்ப்பவன் உணவினால் உண்டாகும் குற்றத்திற்கு ஆளாவதில்லை.

மேலும்,

सर्वस्य चाहं हृदि सन्निविष्टो-मत्तः स्मृतिर्ज्ञानमपोहनं च ।
वेदैश्च सर्वैरहमेव वेद्यो-वेदान्तकृद्वेदविदेव चाहम् ॥ १५॥

**ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸன்னிவிஷ்டோ**
**மத்த: ஸ்ம்ருதிர் ஜ்ஞானம் அபோஹனம் ச ।**
**வேதைஸ்ச ஸர்வைர் அஹம் ஏவ வேத்யோ**
**வேதாந்தக்ருத் வேதவித் ஏவ சாஹம் ॥ 15॥**

*நான் எல்லோருடைய அகத்திலும் இருக்கின்றேன். நினைவும், அறிவும், மறதியும் என்னிடமிருந்தே வருகின்றன. எல்லா வேதங்களாலும் அறியப்படும் பொருள் நான். வேதாந்தத்தை ஆக்கியோன் நான், வேதமுணர்ந்தோன் நான்.*

புலனறிவுடைய உயிர்கள் அனைத்தின் அகத்திலும் (புத்தியிலும்) நான் ஆத்மாவாக இருக்கின்றேன். ஆத்மாவாகிய என்னிடமிருந்தே புலனறிவுடைய உயிர்கள் அனைத்திற்கும் நினைவும், அறிவும், மறதியும் வருகின்றன. புண்ணியச் செயல் செய்யும் தர்மாத்மாக்களுக்கு அச்செயல்களின் பலனாக நினைவும், அறிவும் உண்டாவதுபோல், பாவிகளுக்கு அவர் செய்யும் பாவத்தின் பலனாக நினைவு மறதியும், அறிவு நீக்கமும் உண்டாகின்றன. பரமாத்மாவாகிய நானே வேதங்களில் அறியப்படுபவனாக இருக்கின்றேன்.

வேதாந்தத்தை (உபநிஷத) பரம்பரை வழியாக உபதேசிப்பதற்குக் காரணம் நானே. வேதப் பொருளை அறிந்தவனும் நானே.

நாராயணனாகிய ஈசுவரனின் பெருமைகள், அவரது சிறப்பியல்புகளின் (சூரியன் போன்றவை) மூலமாக எடுத்துரைக்கப்பட்டன. இப்போது பரிசுத்தமானவரும், எல்லையற்றவரும் அழியும் (க்ஷரம்) அழியா (அக்ஷரம்) இயல்புகளிலிருந்து முற்றிலும் வேறுபட்டு இருப்பவருமான அந்த ஈசுவரனின் உண்மைத் தன்மையை இன்னதென்று தீர்மானிக்கும் நோக்கத்தில் பின்வரும் சுலோகங்கள் அருளப்படுகின்றன. முந்தைய அத்தியாயங்களில் கூறப்பட்டதையும், இனிவரும் அத்தியாயங்களில் கூறப் போவதையும் மூன்று வகையாகப் பிரித்துப் பகவான் கூறுகிறார்.

**द्वाविमौ पुरुषौ लोके क्षरश्चाक्षर एव च ।**
**क्षरः सर्वाणि भूतानि कूटस्थोऽक्षर उच्यते ॥१६॥**

**தாவிமௌ புருஷௌ லோகே க்ஷரம்ஶ்சாக்ஷர ஏவ ச ।**
**க்ஷர:-ஸர்வாணி பூதானி கூடஸ்தோ(அ)க்ஷர உச்யதே ॥ 16॥**

*உலகில் க்ஷரன் என்றும் அக்ஷரன் என்றும் இருவகைப் புருஷர்கள் உளர். உயிர்கள் அனைத்தும் க்ஷர புருஷனாகும். கூடஸ்த்தன் (மாறுதலற்றோன்) அக்ஷர புருஷனாவான்.*

சம்சாரத்தில் தனித்தனியாகப் பிரிக்கப்பட்ட இருவேறு புருஷர்கள் இருக்கின்றனர். அழியக்கூடியது ஒரு பிரிவு. மற்றொரு பிரிவு அழிவற்றதாகும். இது முதல் பிரிவுக்கு எதிரானதாகும். பகவானின் மாயாசக்தியே க்ஷரன் என்னும் புருஷன் உருவாவதற்கு வித்தாகவும், ஜனன மரணத்திற்காளாகும் உயிர்களின் ஆசை, கர்மம் போன்றவற்றிற்கு உறைவிடமாகவும் இருக்கின்றது. இம்மாயா சக்தியே அக்ஷர புருஷன் என்பதை பகவானே விளக்கி அருள்கிறார். க்ஷர புருஷன் என்பவன் மாறுதல்களுக்காளாகும் உடல்களையுடைய அனைத்து உயிர்களுமாவான். அக்ஷர புருஷன் என்பவன் குவியல் போல (கூடம்) மாறுதலற்றவனாவான். அல்லது கூடம், மாயை, வஞ்சனை, கோணல், வக்கிரம் என்பன ஒரு பொருள் தரும் பல சொற்கள் ஆகும். கூடஸ்தம் - மாயையின் பல்வேறு வடிவங்களாகத் தோன்றுவது. இது அழிவற்றது எனப்படுகிறது. காரணம் சம்சார விதைக்கு முடிவில்லையாதலால் அழிவற்றது எனப்படுகின்றது.

க்ஷர அக்ஷர புருஷர்களினின்று வேறுபட்டவனாகவும், இவ்விரு பிரிவுகளின் இயல்புகளின் கறை படியாதவனாகவும், நித்தியனாகவும், பரிசுத்தனாகவும், புத்தனாகவும், முக்தனாகவும் வேறொரு மேலான புருஷன் இருக்கின்றான்.

**उत्तमः पुरुषस्त्वन्यः परमात्मेत्युदाहृतः ।**
**यो लोकत्रयमाविश्य बिभर्त्यव्यय ईश्वरः ॥१७॥**

**உத்தம: புருஷஸ்த்வன்ய: பரமாத்மேத்யுதாஹ்ருத: ।**
**யோ லோகத்ரயமாவிஶ்ய பிபர்த்யவ்யய ஈஶ்வர: ॥ 17॥**

*இவ்விருவரில் வேறுபட்டோன் உத்தமபுருஷன், பரமாத்மா எனப்படுகிறான். அவனே மூன்று உலகங்களிலும் புகுந்து அவற்றைத் தாங்குகின்ற மாறுதலற்ற ஈசுவரனாவான்.*

மாறாக இவ்விருவரிலும் வேறுபட்ட மற்றொருவன் உத்தம புருஷனாகிய பரமாத்மா ஆவான். இவன் உடல் போன்று அவித்யையினாலான இருவரைக் காட்டிலும் மேலானவன். இவன் எல்லா உயிர்களின் அகத்திலும் ஒளிரும் அறிவுப் பொருளாகிய ஆத்மா, எனவேதான் வேதாந்தங்களில் (உபநிஷத்துக்களில்) பரமாத்மா எனக் கூறப்படுகிறான். இவனே மூவுலகங்களிலும் (பூர்லோகம், புவர்லோகம், ஸ்வர்லோகம்) தனது சைதன்ய சக்தியினால் புகுந்து, அவற்றில் இருந்து கொண்டு அவற்றைத் தாங்குகின்றான். இவன் மாறுதலற்றான், முற்றுணர்ந்தான், நாராயணன் என்னும் திருநாமமுடையான், அவனே அனைத்தையும் ஆள்கின்றான்.

போற்றுதற்குரிய பகவான் மேலே 'புருஷோத்தமன்' என்று குறிப்பிடப்படுகிறார். இதன் சொல் இலக்கணமும், பொருளும் யாவர்க்கும் தெரியுமாதலால், பகவான் தம்மை அச்சொல்லின் மூலம் 'மேலான ஈசுவரன்' என்று உணர்த்துகிறார்.

**यस्मात्क्षरमतीतोऽहमक्षरादपि चोत्तमः ।**
**अतोऽस्मि लोके वेदे च प्रथितः पुरुषोत्तमः ॥१८॥**

**யஸ்மாத்க்ஷரமதீதோ(அ)ஹம் அக்ஷராத் அபி சோத்தம:**
**அதோ(அ)ஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ॥ 18॥**

*நான் க்ஷரத்தைக் கடந்தவன், அக்ஷரத்தை விட மேலானவன். ஆகவே உலகத்தாராலும், வேதங்களாலும் புருஷோத்தமன் என்று கூறப்படுகிறேன்.*

நான் 'அச்வத்தம்' என்னும் சம்சார மாயாமரத்தைக் கடந்தவன். சம்சாரத்திற்கு வித்தான அக்ஷரத்தை விட மேலானவன். இவ்வாறு நான் க்ஷரம், அக்ஷரம் எனுமிவற்றைவிட உயர்ந்தோனாக இருப்பதால், உலகத்தாராலும், வேதங்களாலும் 'புருஷோத்தமன்' என்று கூறப்படுகிறேன். பக்தர்களும் என்னை இவ்வாறே அறிகின்றனர். கவிஞர்கள் கூட தமது கவிதைகளிலும், காவியங்களிலும் இப்பெயரையே பயன்படுத்துகின்றனர்.

மேலே கூறியுள்ளவாறு ஆத்மாவை அறிபவனுக்கு உண்டாகும் பலன் கூறப்படுகிறது:

यो मामेवमसम्मूढो जानाति पुरुषोत्तमम् ।
स सर्वविद्भजति मां सर्वभावेन भारत ॥१९॥

**யோ மாம் ஏவ அஸம்மூடோ ஜானாதி புருஷோத்தமம்**
**ஸ ஸர்வவித்பஜதி மாம் ஸர்வபாவேன பாரத ॥ 19॥**

*பாரதா! எவன் புருஷோத்தமனாகிய என்னை மதிமயக்கமின்றி இவ்வாறு அறிகின்றானோ அவன் எல்லாம் அறிந்தவனாய் அனைத்துப் பாவங்களிலும் என்னை வழிபடுகிறான்.*

மேற்கூறிய சிறப்புக்களையுடைய ஈசுவரனாகிய புருஷோத்தமனை 'நானே அவன்' என்று எந்தவொரு மயக்கத்திற்கும் இடமின்றி எவன் அறிகின்றானோ அவன் எல்லாம் அறிந்தவனாகி அனைத்துயிர்க்கும் ஆத்மாவான என்னை அனைத்துப் பாவங்களிலும் வழிபடுகின்றான்.

பகவானைப் பற்றிய உண்மை அறிவினை - முக்திபலன் அளிக்கும் அறிவு - இவ்வத்தியாயத்தில் எடுத்துரைத்தப் பகவான் அதனை மேலும் சிறப்பித்துக் கூறுகின்றார்.

इति गुह्यतमं शास्त्रमिदमुक्तं मयानघ ।
एतद्बुद्ध्वा बुद्धिमान्स्यात्कृतकृत्यश्च भारत ॥२०॥

**இதி குஹ்யதமம் ஶாஸ்த்ரம் இதம் உக்தம் மயாநக**
**ஏதத்புத்த்வா புத்திமான் ஸ்யாத்க்ருதக்ருத்யஶ்ச பாரத ॥ 20॥**

*பாவமற்றவனே! இவ்வாறு மிகவும் ரகசியமான இச்சாத்திரம் என்னால் எடுத்துரைக்கப்பட்டது. பாரதா! இதை உணர்ந்தோன் புத்திமானாவான், செய்யத்தக்கதைச் செய்தோனாவான்.*

இது மிகவும் ரகசியமான சாத்திரமாகும். கீதை முழுவதுமே சாத்திரம் எனக் கூறப்படினும், இவ்வத்தியாயத்தைச் சிறப்பிக்கும் பொருட்டே இது சாத்திரம் எனக் கூறப்பட்டது. காரணம் கீதையிலுள்ள முழுச்சாரமும் இவ்வத்தியாயத்தில் சுருக்கமாகக் கூறப்பட்டுள்ளது. கீதையின் சாரம் மட்டுமன்று. வேதங்களின் சாரம் முழுவதும் இதில் சுருக்கிக் கூறப்பட்டுள்ளது. 'எவன் இதனை அறிந்தவனோ அவன் வேதங்கள் அனைத்தையும் அறிந்தவனாவான்' (15.1) 'எல்லா வேதங்களிலும் அறியப்படுபவன் நானே' (15.15)மேலே கூறியுள்ளவாறு இச்சாத்திரத்தை அதன் சாரத்துடன் உணர்ந்தவன் புத்திமான் ஆவதன்றி வேறொன்றாவதில்லை. அவன் செய்யத்தக்கனவெல்லாம் செய்தவனும் ஆவான். உயர் குலத்தில் பிறந்த பிராமணன் செய்ய வேண்டிய கடமைகள் எவையோ அவையனைத்தும் பகவானுடைய உண்மையை அறிந்த அளவிலேயே செய்யப்பட்டவையாகிவிடும் என்று பொருள். வேறு வழியில் ஒருவனது

கடமை முற்றிலும் நிறைவேற்றப்படுவதில்லை. 'பாரதா! எல்லாக் கர்மங்களும் ஞானத்தில் முடிவு பெறுகின்றன' (ப.கீ.4.33) 'இதுவே ஒருவனுக்கு குறிப்பாக பிராமணனுக்கு வாழ்க்கை ஈடேற்றமாகும். காரணம் இருபிறப்பாளன் இதனை எய்துவதன் மூலம் எல்லாக் கடமைகளையும் செய்தவனாவான் அன்றி வேறொன்றாவதில்லை.' (மநு 12.93)

'இப்பரமார்த்த உண்மையை என்னிடமிருந்து கேட்டதினால் பாரதா! நீ வாழ்க்கை லட்சியம் நிறைவேறியவனாவாய்.'

மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்மவித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "புருஷோத்தம யோகம்" என்னும் பதினைந்தாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் பதினாறு

# தெய்வாசுர சம்பத் விபாக யோகம்

உயிர்களின் தன்மைகள் தெய்வம், ஆசுரம், ராக்ஷஸம் என மூன்று வகைப்படும் என்று ஒன்பதாம் அத்தியாயத்தில் குறிப்பிடப்பட்டது (9-12,13) அவற்றை விரிவாக எடுத்துரைக்க 'அஞ்சாமை, மனத்தூய்மை' என்று தொடங்கும் அத்தியாயம் இப்போது ஆரம்பிக்கப்படுகின்றது. அவற்றுள் தெய்வத்தன்மை சம்சாரத்தினின்று விடுதலை பெறுதற்குரியதானது. அதே சமயம் ஆசுரமும், ராக்ஷஸமும் பந்தப்படுத்துவதற்குரியவையாகும். அதனால் தெய்வத்தன்மை பற்றிக் கொள்வதற்கும், மற்றைய இரண்டும் விட்டுவிடுதற்கும் உரியன என்று இப்போது எடுத்துக் காட்டுகிறார்.

श्रीभगवानुवाच

**अभयं सत्त्वसंशुद्धिर्ज्ञानयोगव्यवस्थितिः ।**
**दानं दमश्च यज्ञश्च स्वाध्यायस्तप आर्जवम् ॥ १॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**அபயம் ஸத்த்வஸம்ஶுத்திர் ஜ்ஞான யோக வ்யவஸ்திதி: ।**
**தானம் தமஶ்ச யஜ்ஞஶ் ச ஸ்வாத்யாயஸ் தப ஆர்ஜவம் ॥ 1॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***அஞ்சாமை, மனத்தூய்மை, ஞானத்திலும், யோகத்திலும் நிலைத்து நிற்றல், தானம், புலனடக்கம், வேள்வி, சாத்திரங்களைக் கற்றல், தவம், நேர்மை.***

அஞ்சாமை - கோழைத்தனமின்மை ஆகும். மனத்தூய்மை - பிறரை வஞ்சித்தல், ஏமாற்றுதல், பொய்யுரைத்தல் என்னும் தன்மைகளற்ற நடத்தை உடையவனாக இருத்தல். அதாவது தமது செயல்களில் ஒழுக்கமுடையவனாக இருத்தல் என்று பொருளாகும். ஞானம் - சாத்திரங்கள் மற்றும் ஆச்சாரியர்களிடமிருந்து ஆத்மா போன்றவற்றை அறிந்து கொள்ளும் அறிவாகும். யோகம் - அவ்வாறு அறிந்து கொண்டதை புலனடக்கத்தின் மூலம் ஒருமுகப்படுத்தி தான் நேரடியாக உணர்தல். இப்படிப்பட்ட ஞானத்திலும் யோகத்திலும் நிலைத்து நிற்றல். இதுவே முதன்மையான தெய்வத்தன்மை அதாவது சாத்விகத் தன்மையாகும். தானம் - தனது வசதிக்கேற்ப உணவு

முதலியவற்றைப் பிறர்க்குக் கொடுத்தல். புலனடக்கம் - வெளிப்புலன்களை அடக்குதல். அகப்புலன்களைப் பற்றிப் பின்னர் எடுத்துரைப்பார் (16.2-3). வேள்வி - வேதங்களில் கூறப்பட்டுள்ள அக்னிஹோத்ரம் போன்றவையும் ஸ்மிருதியில் கூறப்பட்டுள்ள தேவ யக்ஞம் போன்றவையாகும். சாத்திரங்களைக் கற்றல் - மறுமை நலன் வேண்டி ரிக்வேதம் முதலியவற்றை ஓதுதல். தவம் - உடலை வருத்திச் செய்யப்படுவது. நேர்மை - எப்பொழுதும் நேராக நடத்தல்.

மற்றும்,

**अहिंसा सत्यमक्रोधस्त्यागः शान्तिरपैशुनम् ।**
**दया भूतेष्वलोलुप्त्वं मार्दवं ह्रीरचापलम् ॥ २॥**

**அஹிம்ஸா ஸத்யம் அக்ரோதஸ் த்யாக: ஶாந்திர் அபைஶுனம் ।**
**தயா பூதேஷ்வலோலுப்த்வம் மார்தவம் ஹ்ரீரசாபலம் ॥ 2॥**

*அஹிம்சை, வாய்மை, சினமின்மை, துறவு, அமைதி, புறங்கூறாமை, உயிர்களிடத்துக் கருணைகாட்டல், அவாவின்மை, மென்மை, நாணம், சலியாமை.*

அஹிம்சை - பிறஉயிர்களைத் துன்புறுத்தாமையாகும். வாய்மை - விருப்பு வெறுப்பின்றி உள்ளதை உள்ளபடிக் கூறல். சினமின்மை - பிறரால் தூற்றப்பெறினும், தாக்கப்படினும் தனக்கு வரும் ஆத்திரத்தை அடக்கிக் கொள்ளுதல். தானத்தைப் பற்றி முன்பே கூறிவிட்டபடியால் 'துறவு' என்பது தியாகமாகும். அமைதி - அகத்தில் சலனமின்றி இருத்தலாகும். புறங்கூறாமை - ஒருவனது குற்றங்களை அவன் இல்லாதவிடத்துப் பிறனுக்குக் கூறாதிருத்தல். உயிர்களிடத்துக் கருணை காட்டல் - வருந்தும் உயிர்களின் மீது கழிவிரக்கங் கொள்ளல். அவாவின்மை - புலன்கள் அவற்றின் நுகர்பொருளைக் கண்டவிடத்து பாதிக்கப்படாதிருத்தல். மென்மை - கடினத்தன்மையின்றி மிருதுவாக இருத்தல். நாணம் - செயத்தகாத செயலைச் செய்ய நாணுதல். சலியாமை - பயனற்ற வழியில் வாய், கை, கால் முதலியவற்றை ஈடுபடுத்தாதிருத்தல்.

மேலும்,

**तेजः क्षमा धृतिः शौचमद्रोहो नातिमानिता ।**
**भवन्ति सम्पदं दैवीमभिजातस्य भारत ॥ ३॥**

**தேஜ: க்ஷமா த்ருதி: ஶௌசம் அத்ரோஹோ நாதிமானிதா ।**
**பவந்தி ஸம்பதம் தைவீம் அபிஜாதஸ்ய பாரத ॥ 3॥**

*ஒளி, பொறை, உறுதி, சுத்தம், துரோகமின்மை, தருக்கின்மை இவை தெய்வத்தன்மை உள்ளவனிடம் காணப்படுகின்றன பாரதா!*

ஒளி என்பது தோலின் நிறமன்று. ஆற்றலைக் குறிப்பதாகும். பொறை - தூற்றப்படினும், தாக்கப்படினும் பொங்கி எழாது அமைதியுடனிருத்தல். சினமின்மை என்பதற்கு ஆத்திரத்தை அடக்குதல் என்று ஏற்கெனவே விளக்கியுள்ளோம். இவ்வாறு பொங்கி எழாதிருத்தலும், அப்படி எழுந்தால் அதை அடக்குதலும் பொறைக்கும், சினமின்மைக்கும் உள்ள வேறுபாடு என்பதை அறிந்து கொள்க. உறுதி - உடலும், புலன்களும் சோர்வுற்றுழி அதனை நீக்குதற்குரிய மனப்போக்காகும். அதன் மூலம் உடலும், புலன்களும் தாங்கப் பெற்றுத் தளர்ச்சியடைவதில்லை. சுத்தம் - அகச் சுத்தம், புறச்சுத்தம் என்று இருவகைப்படும். புறச்சுத்தம் மண், நீர் இவற்றால் அமையும், அகச்சுத்தம் என்பது கள்ளம், காமம் முதலிய கறைகளின்றி மனமும் புத்தியும் மாசற்று இருப்பதாகும். துரோகமின்மை - பிறர்க்குக் கெடுதி செய்யாமை. தருக்கின்மை - தம்மை வியவாமை அதாவது தான் என்னும் கர்வம் கொள்ளாமையாகும். இவ்வாறு அஞ்சாமை முதல் செருக்கின்மை ஈறாக உள்ள தன்மைகள் தெய்வத்தன்மை உள்ளவனிடத்துக் காணப்படுகின்றன. இவை தேவர்களின் தன்மைகளானபடியால் எதிர்காலத்தில் அவனுக்கு எல்லா மங்களமும் உண்டாகும்.

இப்போது அசுரத்தன்மை என்னவென்று விளக்குகிறார் :

**दम्भो दर्पोऽभिमानश्च क्रोधः पारुष्यमेव च ।**
**अज्ञानं चाभिजातस्य पार्थ सम्पदमासुरीम् ॥४॥**

**தம்போ தர்ப்போ(அ)பிமானஶ்ச க்ரோத: பாருஷ்யம் ஏவ ச ।**
**அஜ்ஞானம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பதம் ஆஸுரீம் ॥ 4॥**

***பகட்டு, இறுமாப்பு, தற்புகழ்ச்சி, சினம், கடுமை, அறிவின்மை - இவை பார்த்தா! ஆஸுரத்தன்மை உள்ளவனிடம் காணப்படுகின்றன.***

பகட்டு - தர்மவானாக நடித்தல். இறுமாப்பு - கல்வி, செல்வம், மேலிடத் தொடர்பு போன்றவற்றால் உண்டாகும் செருக்கு. தற்புகழ்ச்சி என்பது பற்றி முன்னரே கூறப்பட்டுள்ளது. கடுமை - கொடுஞ்சொல், உதாரணமாக, குருடனைக் கண்ணுடையோன் என்றும், குரூபியை அழகுடையோன் என்றும், இழிபிறப்பாளனை உயர்பிறப்பாளன் என்றும் நேரே குதர்க்கமாகப் பேசுவதாகும். அறிவின்மை - பகுத்தறியுந்திறமின்மை, செய்ய வேண்டியக் கடமைகளைத் தவறாகப் புரிந்து கொள்ளுதல். ஆஸுரத்தன்மை உள்ளவனிடம் இவையெல்லாம் காணப்படுகின்றன.

இவ்விரு தன்மைகளின் பயன்களைக் கூறுகிறார் :

**दैवी सम्पद्विमोक्षाय निबन्धायासुरी मता**
**मा शुचः सम्पदं दैवीमभिजातोऽसि पाण्डव ॥५॥**

**தைவீ ஸம்பத்விமோக்ஷாய நிபந்தாயாஸுரீ மதா**
**மா ஶுச: ஸம்பதம் தைவீம் அபிஜாதோ(அ)ஸி பாண்டவ ॥ 5॥**

*தெய்வத்தன்மை விடுதலைக்கும், ஆஸுரத்தன்மை பந்தத்திற்கும் உரியனவாகக் கருதப்படுகின்றன. பாண்டவா! வருந்தாதே, தெய்வத்தன்மை உடையவனாகப் பிறந்துள்ளாய்.*

தெய்வத்தன்மை சம்சார பந்தத்தினின்று விடுபடுதற்குரியதாகும். ஆஸுரத்தன்மை நிச்சயம் பந்தப்படுத்துதற்குரியதாகும். அவ்வாறே ராக்ஷஸத்தன்மையையும் கொள்க. இதனைக் கேட்டு "நான் தெய்வத்தன்மை உள்ளவனா? அல்லது ஆஸுரத்தன்மை உள்ளவனா?" என்று அர்ஜுனன் தனக்குள் யோசிப்பதைக் கண்டு பகவான் "பாண்டவா! வருந்தாதே, தெய்வத்தன்மை உடையவனாகப் பிறந்துள்ளாய். உனக்கு சர்வ மங்களமும் உண்டாகும்" என்று கூறுகிறார்.

**द्वौ भूतसर्गौ लोकेऽस्मिन्दैव आसुर एव च ।**
**दैवो विस्तरश: प्रोक्त आसुरं पार्थ मे शृणु ॥ ६॥**

**த்வௌ பூதஸர்கௌ லோகே(அ)ஸ்மின்தைவ ஆஸுர ஏவ ச ।**
**தைவோ விஸ்தரஶ: ப்ரோக்த ஆஸுரம் பார்த்த மே ஶ்ருணு ॥ 6॥**

*இவ்வுலகில் உயிர்படைப்புக்கள் தெய்வம், ஆஸுரம் என இருவகைப்படும். தெய்வப்படைப்பு விரிவாகச் சொல்லப்பட்டுவிட்டது, பார்த்தா! இப்போது ஆஸுர படைப்பு என்னவென்று கேட்பாயாக.*

தெய்வம் என்றும் ஆஸுரம் என்றும் இருவகைத் தன்மையுடைய மனிதர்கள் இங்கு, இவ்உலகில் படைக்கப்பட்டிருக்கின்றனர். அதுதான் இருவகைப் படைப்பு என்று இங்கே கூறப்படுகிறது. "பிரஜாபதியால் இங்கு தேவர்கள் என்றும் அசுரர்கள் எனறும் இருவகை உயிர்கள் படைக்கப்பட்டனர்" (பி.உ. 1-3-1). மனிதர்கள் இவ்விருவகைத் தன்மைகளான தெய்வத்தன்மை அல்லது அசுரத்தன்மை என்னும் இரண்டில் ஏதேனும் ஒன்றுடையவர்களாகப் படைக்கப்படுகின்றனர். இவற்றுள் தெய்வத்தன்மைபற்றி 16.1 ல் ஏற்கெனவே விளக்கியாகிவிட்டது. ஆனால் ஆஸுரம் என்பது பற்றிக் கூறப்படவில்லை. ஆகவே பார்த்தா, அதனை இப்போது விரிவாகக் கூறப்போகிறேன் கேட்பாயாக.

இவ்வத்தியாயத்தின் இறுதிவரை சில மனிதர்களிடம் காணப்படுகின்ற ஆஸுரத்தன்மையை விரிவாக எடுத்துக் கூறுகிறார். காரணம் அது என்னவென்று நேரடியாக உணர்ந்தாலன்றோ அதனை நீக்குவது சாத்தியமாகும்.

**प्रवृत्तिं च निवृत्तिं च जना न विदुरासुरा:**
**न शौचं नापि चाचारो न सत्यं तेषु विद्यते ॥ ७॥**

ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜனா ந விதுர் ஆஸுரா:
ந ஶௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே ॥ 7॥

*அசுரத்தன்மையுடையோர் செய்யத்தக்க நல்வினை, விலக்கவேண்டிய தீவினை என்னவென்று அறியார். தூய்மையும், ஒழுக்கமும், வாய்மையும் அவர்களிடம் காணப்படுவதில்லை.*

அவர்களுக்கு வாழ்க்கை லட்சியத்தை அடைவதற்குச் செய்ய வேண்டிய நல்வினை என்னவென்றும், அதற்குப் புறம்பான தீவினை எதுவென்றும் தெரியாது. அவர்களுக்கு இவை தெரியாது என்பது மட்டுமல்ல, அவர்களிடம் தூய்மையும், ஒழுக்கமும், வாய்மையும் காணப்படுவதில்லை. அவர்கள் தூய்மையற்றோர், ஒழுக்கமற்றோர், பொய்யர்கள் ஆவர்.

மேலும்,

असत्यमप्रतिष्ठं ते जगदाहुरनीश्वरम् ।
अपरस्परसम्भूतं किमन्यत्कामहैतुकम् ॥ ८॥

அஸத்யம் அப்ரதிஷ்டம் தே ஜகத் ஆஹுர் அனீஶ்வரம் ।
அபரஸ்பரஸம்பூதம் கிம் அன்யத்காமஹைதுகம் ॥ 8॥

*அவர்கள் இவ்வுலகம் உண்மையற்றது, ஆதாரமற்றது, ஆண்டவனற்றது, ஒருவரோடொருவர் புணர்வதால் உண்டானது, காமத்தையே காரணமாக உடையது என்கின்றனர்.*

அசுரத்தன்மையுடைய இம்மனிதர்கள், "நாம் பொய்யானவர்களாக இருப்பதினால் இவ்வுலகமும் பொய்யானதே, இதற்கு தர்மமும், அதர்மமும் ஆதாரமாக இல்லை. தர்ம அதர்மங்களுக்கேற்ப இதனை ஆளும் ஆண்டவன் யாருமில்லை. இவ்வுலகம் ஆண், பெண், என்னும் இருபாலர்தம் புணர்ச்சியினால் உண்டானது. காமத்தைக் காரணமாகக் கொண்டது. இதற்கு வேறு என்ன காரணம் உண்டு? தர்மம், அதர்மம் என்னும் காரணமெல்லாம் ஒன்றுமில்லை" என்று கூறுகின்றனர். காமமே உயிர்களுக்குக் காரணம் என்பது நாத்திகர்களான லோகாயதர்களின் கொள்கையாகும்.

एतां दृष्टिमवष्टभ्य नष्टात्मानोऽल्पबुद्धय:
प्रभवन्त्युग्रकर्माण: क्षयाय जगतोऽहिता: ॥ ९॥

ஏதாம் த்ருஷ்டிம் அவஷ்டப்ய நஷ்டாத்மானோ (அ)ல்ப புத்தய:
ப்ரபவந்த்யுக்ர கர்மாண: க்ஷயாய ஜகதோ (அ)ஹிதா: ॥ 9॥

*அற்பமதியுடைய இத்துராத்மாக்கள் இக்கொள்கையைச் சிக்கெனப் பற்றிக் கொண்டு, உலகின் பகைவர்களாய் அதனை அழிக்கக் கொடுந்தொழில் செய்கின்றனர்.*

மறுமைக்கான சாதனம் என்னவென்று அறியாத இத்துராத்மாக்கள் விஷயங்களைப் பற்றிய அற்ப மதி உடையவர்களாவர். உலகின் பகைவர்களான இவர்கள் அதனை அழிக்கக் கொடுந்தொழில் செய்பவர்களாக இருக்கின்றனர். (உலகம் என்பது இங்கு உயிர்களைக் குறிக்கின்றது - ஆ)

மேலும் அவர்கள்,

**काममाश्रित्य दुष्पूरं दम्भमानमदान्विताः**
**मोहाद्गृहीत्वासद्ग्राहान्प्रवर्तन्तेऽशुचिव्रताः ॥१०॥**

**காமம் ஆஶ்ரித்ய துஷ்பூரம் தம்பமானமதான் விதா:**
**மோஹாத் க்ருஹீத்வாஸத் க்ராஹான் ப்ரவர்த்தந்தே (அ)ஶுசிவ்ரதா: ॥ 10॥**

*நிரப்பவொண்ணா ஆசையுடையோராய், பகட்டும் கர்வமும், மதமும் உடையோராய், மயக்கத்தால் பொய்க் கொள்கைகளை மேற்கொண்டு, அசுத்தமான விரதங்களுடையோராய்ச் செயல் புரிகின்றனர்.*

திருப்தியடையாத ஆசையுடையோராய், பகட்டும், கர்வமும் மதமும் கொண்டு, மயக்கத்தால் - பகுத்தறிவின்றி, பொய்க் கொள்கைகளை - தீய எண்ணங்கள் கொண்டு, அசுத்தமான விரதங்கள் உடையோராய் - வேதத்தில் விதிக்கப்படாதக் கொள்கைகள்(சிறு தேவதைகளை ஆராதித்தல், கள் குடித்தல், பிறன் மனைவியைக் கூடுதல் முதலியவற்றைச் செய்தல்)

மேலும்,

**चिन्तामपरिमेयां च प्रलयान्तामुपाश्रिताः ।**
**कामोपभोगपरमा एतावदिति निश्चिताः ॥११॥**

**சிந்தாம் அபரிமேயாம் ச ப்ரளயாந்தாம் உபாஶ்ரிதா: ।**
**காமோபபோகபரமா ஏதாவத் இதி நிஶ்சிதா: ॥ 11॥**

*சாவு மட்டுந் தீராத கவலையுடையோராய், காம நுகர்ச்சியையே பிரதானமாகக் கொண்டோராய், உண்மையே இவ்வளவுதான் எனும் தீர்மானமுடையோராய்,*

சாவு மட்டுந் தீராத கவலையுடையோர் - அளவிட முடியாத எண்ணற்றக் கவலைகளில் எப்போதும் அழுந்திக் கிடப்பவர். காமநுகர்ச்சி - ஓசை முதலிய புலனுகர்ச்சிகளை அனுபவிப்பதில் இச்சையுடையோர். இதுதான் வாழ்க்கை லட்சியம் என்று, தீர்மானித்தவர்கள் - முடிவு செய்தவர்கள்.

आशापाशशतैर्बद्धाः कामक्रोधपरायणाः ।
ईहन्ते कामभोगार्थमन्यायेनार्थसञ्चयान् ॥१२॥

**அஶாபாஶஶதைர்பத்தா: காமக்ரோதபராயணா: ।**
**ஈஹந்தே காமபோகார்த்தம் அன்யாயேனார்த்தஸஞ்சயான் ॥ 12॥**

*நூற்றுக்கணக்கான ஆசைக்கயிறுகளால் கட்டுண்டு, காமத்திற்கும், சினத்திற்கும் ஆட்பட்டு, காம நுகர்ச்சிக்காகத் தவறான வழிகளில் பொருள் சேர்க்க விரும்புகின்றனர்.*

அவர்கள் ஆசையென்னும் நூற்றுக்கணக்கானக் கயிறுகளால் கட்டப்பட்டு இங்குமங்கும் இழுத்தடிக்கப்படுகின்றனர். அவர்கள் தர்மகாரியத்துக்கல்லாது காம நுகர்ச்சிக்காக, தவறான வழிகளில் பிறர் பொருளைக் கொள்ளையடித்துச் சேர்க்க விரும்புகின்றனர்.

அவர்தம் கருத்து பின்வருமாறு:

इदमद्य मया लब्धमिमं प्राप्स्ये मनोरथम् ।
इदमस्तीदमपि मे भविषयति पुनर्धनम् ॥१३॥

**இதம் அத்ய மயா லப்தம் இமம் ப்ராப்ஸ்யே மனோரதம்**
**இதம் அஸ்தீதம் அபி மே பவிஷ்யதி புனர் தனம் ॥ 13॥**

***இன்று எனக்கு இன்ன லாபம் கிடைத்தது. இந்த இச்சையை இனி தீர்த்துக் கொள்வேன். இது இப்போது என்னிடம் இருக்கின்றது. இன்னபொருளை இனி எய்தப் பெறுவேன்.***

எதிர்காலத்தில் - அடுத்த வருடம் இச் செல்வம் என்னை வந்து சேரும். அதன் பின் நான் பெரும் செல்வந்தனாக அறியப்படுவேன்.

असौ मया हतः शत्रुर्हनिष्ये चापरानपि ।
ईश्वरोऽहमहं भोगी सिद्धोऽहं बलवान्सुखी ॥१४॥

**அஸௌ மயா ஹத: ஶத்ருர் ஹனிஷ்யே சாபரான் அபி**
**ஈஶ்வரோ(அ)ஹம் அஹம் போகீ ஸித்தோ(அ)ஹம்**
**பலவான்ஸுகீ ॥ 14॥**

***இவன் என்னால் கொல்லப்பட்டான். இனி மற்றவர்களையும் கொல்வேன். நான் ஆள்வோன், அனுபவிப்போன், எல்லாம் எய்தப் பெற்றோன், நான் பலவான், இன்பமுடையோன்.***

வெல்லற்கரிய தேவதத்தன் என்னும் எனது பகைவனை நான் கொன்று விட்டேன். இனி மற்றவர்களையும் கொல்வேன், இந்த அற்பமனிதர்களால் என்ன செய்யமுடியும்? எதிலும் எனக்கு நிகரானவன் எவனுமில்லை. எங்ஙனம்? நான் ஆள்வோன், நான் அனுபவிப்போன், எல்லாம் கைவரப் பெற்றோன், பேரன் பேத்திகளையுடையோன், நான் சாதாரண மனிதனல்லன். நான் ஒருவனே வலிமையும் இன்பமுமுடையோன்.

**आढ्योऽभिजनवानस्मि कोऽन्योऽस्ति सदृशो मया ।**
**यक्ष्ये दास्यामि मोदिष्य इत्यज्ञानविमोहिताः ॥ १५॥**

**ஆட்யோ(அ)பிஜனவான் அஸ்மி கோ(அ)ன்யோ (அ)ஸ்தி ஸத்ருஶோ மயா ।**
**யக்ஷ்யே தாஸ்யாமி மோதிஷ்ய இத்யஜ்ஞானவிமோஹிதா: ॥ 15॥**

*நான் செல்வந்தன். உயர் குலத்துதித்தோன், எனக்கு நிகர் யாருளன்? யாகம் செய்வேன்? தானம் செய்வேன், களிப்பேன் எனும் அஞ்ஞானத்தால் மயங்கியோர்.*

நான் செல்வந்தன் - எல்லாச் செல்வங்களும் உடையவன். உயர்குலத்துதித்தோன் - ஏழு தலைமுறைகளாக வேதங்களைக் கற்றுணர்ந்தோர் குடும்பத்தில் பிறந்தவன், இக்காரணத்தாலும் கூட எனக்கு நிகர் எவனுமிலன். யாகங்கள் செய்வதினாலும் கூட நான் பிறரை விஞ்சி நிற்பேன். கலைஞர்களுக்குத் தானம் செய்வேன். மிக்க மகிழ்ச்சியுறுவேன். இதுபோன்ற அவிவேகத் தன்மையுடையோர்.

**अनेकचित्तविभ्रान्ता मोहजालसमावृताः ।**
**प्रसक्ताः कामभोगेषु पतन्ति नरकेऽशुचौ ॥ १६॥**

**அனேகசித்தவிப்ராந்தா மோஹஜாலஸமாவ்ருத்தா: ।**
**ப்ரஸக்தா: காமபோகேஷு பதந்தி நரகே (அ)ஶுசௌ ॥ 16॥**

*பல எண்ணங்களால் மதிமயங்கி மோகமென்னும் வலை வீழ்ந்து, காம நுகர்ச்சியில் அழுந்தி, அருவருப்பான நரகத்தில் வீழ்வார்.*

பல எண்ணங்களால் - மேலே கூறப்பட்டுள்ள பலவிதமான எண்ணங்களால் மதிமயங்கி, மயக்கம் என்பது விவேகமின்மை, அறிவின்மையாகும். இது விடுதலைக்கான வாயிலை அடைப்பதால் வலை போலும் இருக்கின்றது. புலனுகர்ச்சிகளில் பற்றுடையோராய், அதில் அழுந்தி 'வைதரணீ' போன்ற அருவருப்பான நரகத்தில் வீழ்கின்றனர்.

**आत्मसम्भाविताः स्तब्धा धनमानमदान्विताः ।**
**यजन्ते नामयज्ञैस्ते दम्भेनाविधिपूर्वकम् ॥ १७॥**

**ஆத்மஸம்பாவிதா: ஸ்தப்தா தனமானமதான் விதா:**
**யஜந்தே நாமயஜ்ஞைஸ்தே தம்பேனாவிதிபூர்வகம் ॥ 17॥**

*இவர்கள் தற்புகழ்ச்சியுடையோர், கீழ்ப்படியாதோர், செல்வத்தினாலுண்டாகும் கர்வமும், செருக்குமுடையோர், இவர்கள் பகட்டிற்காக விதிகளுக்கு முரணாக பேருக்கு யாகங்கள் செய்கின்றனர்.*

தற்புகழ்ச்சியுடையோர் - நற்குணமெல்லாம் வாய்க்கப் பெற்றவராகத் தம்மை வியத்தல் செய்வோர். அதே சமயம் சான்றோர்களால் மதிக்கப்படாதவர்கள். கீழ்ப்படியாதவர் - வணங்கா இயல்பினர். விதிகளுக்கு முரணாக - விதிக்கப்பட்ட அங்கங்களுக்கும், முறைகளுக்கும் எதிராகப் பெயரளவில் யாகங்கள் செய்கின்றனர்.

**अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं च संश्रिताः ।**
**मामात्मपरदेहेषु प्रद्विषन्तोऽभ्यसूयकाः ॥ १८॥**

**அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் ச ஸம்ஶ்ரிதா: ।**
**மாமாத்மபரதேஹேஷு ப்ரத்விஷந்தோ(அ)ப்யஸூயகா: ॥ 18॥**

*அகந்தையும், வலிமையும், கர்வமும், காமமும், சினமும் உடைய இவர்கள் தம் உடல்களிலும் பிறர் உடல்களிலும் உள்ள எனைப் பகைப்பவராகவும் நல்லோரைக் காணச் சகியாதவராகவும் இருக்கின்றனர்.*

அகந்தை - தன்னிடமில்லாத நற்குணங்கள் எல்லாம் தன்னிடம் உள்ளதாகக் கொண்டு தன்னைத்தான் உயர்வாகக் கருதும் ஆணவமே அகந்தை என்னும் அவித்யையாகும். இதனை நீக்குவது மிகவும் அரிதாகும். இதுவே எல்லாக் குற்றங்களுக்கும் காரணமாகும். வலிமை என்பது காமம் மற்றும் இச்சையோடு கூடி பிறரை இழிவு செய்வதற்குக் காரணமாக இருப்பது. கர்வம் என்பது தர்மத்தை மீறுவதற்குக் காரணமாக அடிமனத்தில் உறைந்திருக்கும் குற்றமாகும். காமம் என்பது பெண்கள் தொடர்புடையதாகும். சினம் என்பது வேண்டாதவற்றைப் பற்றியதாகும். இவர்கள் இதுபோன்றக் குற்றங்களையும், இதைவிட மோசமானக் குற்றங்களையும் உடையவர்கள். மேலும் இவர்கள் தமது உடல்களிலும், பிறர்தம் உடல்களிலும் உறைகின்ற ஈசுவரனாகிய என்னை பகைக்கின்றவர்களாவர். பகைத்தல் என்பதற்குப் பகவானின் கட்டளையை மீறி நடத்தல் என்று பொருளாகும். நல்லோரைக் காணச் சகியாதவர் - நன்னெறி நடப்பவர்தம் நற்குணங்களைப் போற்றாதவர்.

**तानहं द्विषतः क्रूरान्संसारेषु नराधमान् ।**
**क्षिपाम्यजस्रमशुभानासुरीष्वेव योनिषु ॥ १९॥**

தானஹம் த்விஷத: க்ரூரான்ஸம்ஸாரேஷு நராதமான் ।
க்ஷிபாம்யஜஸ்ரம் அஶுபான் ஆஸுரீஷ்வேவ யோனிஷு ॥ 19॥

*பகைவர்களும், கொடியவர்களும், பாவிகளுமான கடைப்பட்ட மனிதர்களை நான் சம்சார உலகில் மீண்டும் மீண்டும் அசுர யோனிகளிலேயே தள்ளுகின்றேன்.*

பகைவர்கள் - நல்வழிக்கு எதிரிகளாகவும், நல்லோரை வெறுப்பவர்களுமாவர். தீவினை புரிபவர்களாதலால் மனிதரில் கடையராவர். பாவிகள் - பாவம் செய்பவர். சம்சார உலகில் - பல நரகங்களில் கிடந்து உழல்வதற்குக் காரணமான சம்சார வாழ்வில். அசுரயோனிகளில் - புலி, சிங்கம் போன்ற கொடிய விலங்குகளின் யோனிகளில் பிறக்குமாறு இவர்களை நான் மீண்டும், மீண்டும் தள்ளுகிறேன்.

आसुरीं योनिमापन्ना मूढा जन्मनि जन्मनि ।
मामप्राप्यैव कौन्तेय ततो यान्त्यधमां गतिम् ॥२०॥

ஆஸுரீம் யோனிம் ஆபன்னா மூடா ஜன்மனி ஜன்மனி
மாம் அப்ராப்யைவ கௌந்தேய ததோ யாந்த்யதமாம் கதிம் ॥ 20॥

*குந்தி மைந்த! அந்த அறிவிலிகள் பிறவிகள் தோறும் அசுரயோனியை அடைந்து மயங்கியவர்களாய் என்னை அடையாமலேயே அதைவிடக் கீழான நிலையை அடைகின்றனர்.*

அசுர யோனியை அடைந்தவர்கள் - ஒவ்வொரு பிறவியிலும் மதிமயங்கியவராய் - விவேகமற்றவர்களாக தமோகுணம் மிகுந்த பிறவிகளிலேயே பிறந்து ஈசுவரனாகிய என்னை அடையாமல் மேலும் மேலும் கீழ் நோக்கியே செல்கின்றனர். என்னை அடைந்தால் உண்மையில் அவர்கள் துயர்ப்படுவதில்லை. எனது உபதேசத்தின் வழி நடக்காத காரணத்தினால் அவர்கள் துன்புறுகின்றனர். இதுவே கருத்தாகும்.

அசுரத் தன்மைகளின் சுருக்கம் இப்போது கூறப்படுகிறது. அசுரத் தன்மையின் வேறுபாடுகள் எல்லாம் அளவிறந்ததாயினும் மூன்று வகையான அதனுள் எல்லாமே அடங்கியிருக்கின்றன. மேலும் எதனை நீக்குவதால் எல்லாம் நீக்கப்பட்டவையாகின்றனவோ, எது எல்லாத் தீமைகட்கும் அடிநாதமாக இருக்கின்றதோ அதனை இப்போது விளக்குகிறார்.

त्रिविधं नरकस्येदं द्वारं नाशनमात्मनः ।
कामः क्रोधस्तथा लोभस्तस्मादेतत्त्रयं त्यजेत् ॥२१॥

த்ரிவிதம் நரகஸ்யேதம் த்வாரம் நாஶனம் ஆத்மன: ।
காம: க்ரோதஸ்ததா லோபஸ் தஸ்மாத் ஏதத்த்ரயம் த்யஜேத் ॥ 21॥

*ஆத்மாவிற்கு நாசம் விளைக்கும் இந்நரக வாயில்கள் மூவகைத்து. அவை காமம், கோபம், லோபம் (விருப்பம், சினம், பேராசை) ஆகும். அதனால் இம்மூன்றையும் விட்டொழிக்க வேண்டும்.*

நரகத்தின் நுழைவாயில்கள் மூன்றாகும். ஒவ்வொன்றும் ஆத்மாவிற்கு நாசம் விளைவிப்பதாகும். அவற்றுள் நுழைந்தால் ஆத்மா நாசமடைகிறான். மானிட வாழ்வின் லட்சியத்தை அடைவதற்குத் தகுதியற்றவனாகிறான். அந்த மூவகை வாயில்கள் யாவை? அவையே காமம், கோபம், லோபம் ஆகும். ஆகவே காமம் முதலிய இம்மூன்றையும் ஒருவன் விட்டொழிக்க வேண்டும்.

அவ்வாறு விட்டொழிப்பது இங்கே போற்றப்படுகின்றது,

**एतैर्विमुक्तः कौन्तेय तमोद्वारैस्त्रिभिर्नरः ।**
**आचरत्यात्मनः श्रेयस्ततो याति परां गतिम् ॥२२॥**

**ஏதம்விமுக்த: கௌந்தேய தமோத்வாரைஸ்த்ரிபிர்நர: ।**
**ஆசரத்யாத்மன: ஶ்ரேயஸ்ததோ யாதி பராம் கதிம் ॥ 22॥**

*குந்தி மைந்த! நரகத்தின் இம்மூன்று வாயில்களிலிருந்தும் விடுபட்டோன் தனக்குத்தான் நன்மை தேடிக் கொள்கிறான். அதனால் பரகதியடைகிறான்.*

துன்பமும், மயக்கமும் நிறைந்த நரகத்தின் மூன்று வாயில்களினின்றும் விடுபட்டோன் என்ன செய்கிறான்? தனக்குத்தான் நன்மை செய்கிறான். இதற்கு முன்னால் அவற்றினால் தடை செய்யப்பட்டதால் அவனால் தனக்கு நன்மை செய்ய முடியவில்லை. இப்போது அத்தடை நீங்கி விட்டதால் தனக்கு அவனால் நன்மை செய்ய முடியும். அவ்வாறு நன்மை செய்வதால் அவன் பரகதி அதாவது முக்தியடைகிறான்.

அசுரத்தன்மை நீங்குதற்கும், நன்மை செய்து கொள்வதற்கும் காரணமாக இருப்பவை சாத்திரங்களாகும். சாத்திரப் பிரமாணத்தினால் இரண்டையும் செய்ய முடியும். வேறுவழிகளில் முடியாது. ஆகவே,

**यः शास्त्रविधिमुत्सृज्य वर्तते कामकारतः ।**
**न स सिद्धिमवाप्नोति न सुखं न परां गतिम् ॥२३॥**

**ய: ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்த்ததே காமகாரத:**
**ந ஸ ஸித்திம் அவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம் ॥ 23॥**

*எவன் சாஸ்திர விதிகளுக்கு முரணாக காமவசப்பட்டு காரியங்கள் செய்கின்றானோ அவன் ஸித்தியடைவதில்லை, இன்பமடைவதில்லை, பரகதியடைவதில்லை.*

சாஸ்திரம் என்பது இவண் வேதங்களாகும். அந்த வேதங்களில் விதிக்கப்பட்டுள்ள செய்வன, தவிர்வன என்பவற்றிற்கு முரணாக காம வசப்பட்டு காரியம் செய்பவன். ஸித்தியை - வாழ்க்கை லட்சியம் ஈடேற்றம் பெறமாட்டான். இன்பத்தை - இவ் உலக இன்பத்தை அடையமாட்டான். பரகதியை - சொர்க்கம் அல்லது மோட்சத்தை அடைய மாட்டான்.

**तस्माच्छास्त्रं प्रमाणं ते कार्याकार्यव्यवस्थितौ ।**
**ज्ञात्वा शास्त्रविधानोक्तं कर्म कर्तुमिहार्हसि ॥२४॥**

**தஸ்மாச்சாஸ்த்ரம் ப்ரமாணம் தே கார்யா கார்யவ்யவஸ்திதௌ ।**
**ஜ்ஞாத்வா ஶாஸ்த்ரவிதாநோக்தம் கர்ம கர்த்துமிஹார்ஹஸி ॥ 24॥**

*ஆகவே, செயத்தக்கது எது, செயத்தகாதது எது என்று தீர்மானிக்க உனக்கு சாஸ்திரமே பிரமாணமாகும். சாஸ்திரத்தில் கூறப்பட்டதை அறிந்து அதனை இங்கு செய்வாயாக.*

ஆகவே செயத்தக்கது எது, செயத்தகாதது எது என்னும் அறிவைப் பெறுவதற்கு உனக்கு சாஸ்திரமே வழிகாட்டி அல்லது கருவியாகும். எனவே சாஸ்திர விதிகளை - கட்டளைகள் மற்றும் தடைகள் - பின்பற்றி உனது கடமையைச் செய்வாயாக. 'இங்கு' என்பது ஒருவன் தனது கடமையைச் செய்வதற்குரிய இடமாகும்.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "தெய்வாசுர சம்பத் விபாக யோகம்" என்னும் பதினாறாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



## அத்தியாயம் பதினேழு

## சிரத்தாத்ரய விபாக யோகம்

'ஆகவே உனக்கு சாஸ்திரமே பிரமாணமாகும்' என்று பகவான் கூறியதானது ஒரு வினாவிற்கு இடமளிக்கிறது.

### अर्जुन उवाच

**ये शास्त्रविधिमुत्सृज्य यजन्ते श्रद्धयान्विता:**
**तेषां निष्ठा तु का कृष्ण सत्त्वमाहो रजस्तम: ॥ १॥**

*அர்ஜுன உவாச*

**யே ஶாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய யஜந்தே ஶ்ரத்தயான்விதா: ।**
**தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்த்வம் ஆஹோ ரஜஸ்தம: ॥ 1॥**

*அர்ஜுனன் கூறினான்*

*'கிருஷ்ணா, சாஸ்திர விதியைப் புறந்தள்ளி யாவர் நம்பிக்கையுடன் வழிபடுகின்றனரோ, அவர்களின் நிலை சாத்விகமா? ராஜஸமா? அல்லது தாமஸமா?'*

யாவர் என்பது இங்கு இன்னார் என்று குறிப்பாகச் சுட்டப்படவில்லை. சுருதி, ஸ்மிருதிகளில் கூறப்பட்டுள்ள விதிமுறைகள் என்னவென்று அறியாது அதே சமயம் பெரியவர்கள் நடந்து கொள்ளும் முறைகளில் மட்டுமே நம்பிக்கை வைத்து தேவர் முதலியவர்களை வழிபடுகின்றார்களோ அவர்களே இங்கு 'யாவர்' என்று கூறப்படுகின்றனர். மாறாக சாஸ்திர விதிகளை அறிந்திருந்தும் அவற்றைப் புறக்கணித்து தேவர்கள் போன்றோரை வழிபடுகின்றார்களோ, அவர்கள் இங்கு குறிப்பிடப்படவில்லை. காரணம் 'அவர்கள் நம்பிக்கையுடன் வழிபடுகின்றனர்' என்று கூறப்படுகின்றனர். தேவர்களை வழிபடுவதற்கு சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள விதிமுறைகளை அறிந்தும், அதில் நம்பிக்கையில்லாததால் அவற்றைப் புறக்கணித்து தேவர்களைத் தமது விருப்பத்திற்கேற்ப வழிபடுகின்றனர் என்பது பொருந்தாது ஆதலினால் முதலில் கூறப்பட்டவர்கள் தான் இங்கு குறிப்பிடப்படுகின்றனர். அவர்களைக் குறிப்பிட்டுத்தான் அர்ஜுனன் இங்கு 'கிருஷ்ணா, இவ்வாறு வழிபடும் அவர்களின் நிலை சாத்விகமா, ராஜஸமா, அல்லது தாமஸமா?' என்று கேட்கின்றான்.

பொதுவாகக் கேட்கப்பட்டக் கேள்வியாயினும் இதற்கு குறிப்பான சில எடுத்துக் காட்டுக்களைக் கூறாது பதிலளிப்பது கடினம் என்பதை அறிந்து பகவான கூறினாா.

श्रीभगवानुवाच

त्रिविधा भवति श्रद्धा देहिनां सा स्वभावजा
सात्त्विकी राजसी चैव तामसी चेति तां श्रृणु ॥२॥

*பகவான் உவாச*

**த்ரிவிதா பவதி ஶ்ரத்தா தேஹினாம் ஸா ஸ்வபாவஜா ।**
**ஸாதத்விகீ ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ஶ்ருணு ॥ 2॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***உடல் பெற்றோர்க்கு இயல்பாக வரும் அந்த நம்பிக்கை சாத்விகம், ராஜஸம், தாமஸம் , என மூவகைப்படும். அதனை நீ கேட்பாயாக.***

எந்த நிலையைப் பற்றி நீ கேட்கின்றாயோ அந்த நிலை மூவகைப்படும். முற்பிறவியில் செய்த நல்வினை, தீவினை, தர்மம், அதர்மம் முதலியவற்றின் பாதிப்பானது மரண தறுவாயில் இயல்பாக வெளிப்படுகின்றது. 'சாத்விகம்' - சத்துவ குணத்தின் பாதிப்பினால் தேவர்களை வழிபடுவதில் நம்பிக்கை வைப்பது. ராஜஸம் - ரஜோ குண பாதிப்பால் யக்ஷர்களையும், ராக்ஷஸர் களையும் வழிபடுவதில் நம்பிக்கை கொள்வது. 'தாமஸம்' தமோ குண பாதிப்பால் பேய், பிசாசுகளை நம்பிக்கையுடன் வழிபடுவதாகும். மூன்று வகையான அந்த நம்பிக்கையை சிரத்தையுடன் கேட்பாயாக.

இந்நம்பிக்கை மூவகைப்படும்.

सत्त्वानुरूपा सर्वस्य श्रद्धा भवति भारत ।
श्रद्धामयोऽयं पुरुषो यो यच्छ्रद्धः स एव सः ॥३॥

**ஸத்த்வானுரூபா ஸர்வஸ்ய ஶ்ரத்தா பவதி பாரத ।**
**ஶ்ரத்தாமயோ(அ)யம் புருஷோ யோ யச்ச்ரத்த: ஸ ஏவ ஸ: ॥ 3॥**

***பாரதா! நம்பிக்கை என்பது ஒவ்வொருவரின் உள்ளியல்புக்கு ஏற்பவே இருக்கின்றது. எவன் எந்த நம்பிக்கையுடையவனோ அவன் அவனாக ஆகின்றான்.***

உயிர்களிடம் காணப்படும் நம்பிக்கையானது சிறப்பான வாசனைகளுடன் கூடிய மனநிலைக்கேற்பவே அமைகின்றது. எதனால் அவ்வாறு? கேட்பாயாக. ஜனனமரணமுடைய வாழ்வில் கிடந்து உழலும்

ஜீவன் பெரும்பாலும் அவனது நம்பிக்கையினாலேயே நிர்ணயிக்கப்படுகிறான். எவ்வாறு? அந்த நம்பிக்கைக்கேற்பவே அவன் அவனாக இருக்கின்றான். (அதற்கேற்ப நடப்பவனாகின்றான்).

எனவே சாத்விக நிலையில் இருக்கிறவன் என்பது தேவர்கள் முதலானோரை வழிபடுவதின் மூலம் அனுமானிக்கப்படுகிறது.

**यजन्ते सात्त्विका देवान्यक्षरक्षांसि राजसा: ।**
**प्रेतान्भूतगणांश्चान्ये यजन्ते तामसा जना: ॥४॥**

**யஜந்தே ஸாத்த்விகா தேவான்யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: ।**
**ப்ரேதான்பூதகணாம்ஶ்சான்யே யஜந்தே தாமஸா ஜனா: ॥ 4॥**

*சாத்விகர்கள் தேவர்களையும், ராஜஸர்கள் யக்ஷர்களையும் ராக்ஷஸர்களையும், தாமஸர்களான மற்றவர்களோ பிரேத, பூத கணங்களையும் வழிபடுகின்றனர்.*

சாத்விகர்கள், அதாவது சத்துவ குணத்தில் நிலைபெற்றவர்கள் தேவர்களை வழிபடுகின்றனர். ராஜஸர்கள் யக்ஷர்களையும், ராக்ஷஸர்களையும் வழிபடுகின்றனர். அவ்வாறே தாமஸர்கள் பிரேதங்களையும், பூத கணங்களையும் வழிபடுகின்றனர்.

(தேவர்கள் - வசுக்கள் முதலானோர். யக்ஷர் - குபேரன் முதலானோர். ராக்ஷஸர் - நைர்ரிதன் முதலானோர். தமது குல தர்மத்தினின்று வழுவிய பிராமணர் முதலானோர் உடல் மாய்ந்த பின்பு காற்று வடிவமான உடலைப் பெறுகின்றனர். இவர்களே பிரேதங்களாவர். இவர்களை வழிபடுபவர்கள் தமது விருப்பங்களை அவர்கள் மூலம் தீர்த்துக் கொள்கின்றனர் - ஆ.)

இவ்வாறு சாத்விக நம்பிக்கையானது சாஸ்திரங்களின் பொது விதியினால் அவர்கள் செய்யும் செயலை வைத்துத் தீர்மானிக்கப்படுகின்றது. சத்துவ குணத்தில் நிலைபெற்று தேவர்களை வழிபடுபவன் ஆயிரத்தில் ஒருவனேயாவான். பெரும்பாலான மனிதர்கள் ரஜோ குணத்திலும், தமோ குணத்திலும் நிலைபெற்றவர்களேயாவர். எவ்வாறு?

**अशास्त्रविहितं घोरं तप्यन्ते ये तपो जना: ।**
**दम्भाहङ्कारसंयुक्ता: कामरागबलान्विता: ॥५॥**

**அஶாஸ்த்ரவிஹிதம் கோரம் தப்யந்தே யே தபோ ஜனா: ।**
**தம்பாஹங்காரஸம்யுக்தா: காமராகபலான்விதா: ॥ 5॥**

*எவர்கள் சாஸ்திரங்களில் கூறப்படாதக் கொடிய தவத்தைப் புரிகின்றனரோ, பகட்டும், அஹங்காரமும் உடையவரோ, காமமும், இச்சையுமுள்ளவரோ.*

சாஸ்திரங்களில் கூறப்படாத விதிகள் - அதாவது சாத்திர விதிகளுக்குப் புறம்பாக, கொடிய தவத்தை - தனக்கும், பிற உயிர்களுக்கும் துன்பத்தை விளைவிக்கும் தவங்களை, புரிகின்றனர் - செய்கின்றனர். இவர்கள் பக ம், அஹங்காரமும் உடையவர்களாவர். காமமும், இச்சையுமுடையோர்- வலிமையானக் காமமும் இச்சையும் உடையவர் அல்லது காமம், இச்சை, மற்றும் வலிமை உடையவர்களாவர்.

कर्शयन्त: शरीरस्थं भूतग्राममचेतस: ।
मां चैवान्त:शरीरस्थं तान्विद्ध्यासुरनिश्चयान् ॥ ६॥

**கர்ஷயந்த: ஶரீரஸ்தம் பூதக்ராமம் அசேதஸ: ।**
**மாம் சைவாந்த: ஶரீரஸ்தம் தான் வித்யாஸுரநிஸ்சயான் ॥ 6॥**

*இம்மதியிலிகள் தம் உடலிலுள்ள பூதத்தொகுதிகளையும், உடலினுள்ளே உறையும் என்னையும் வருத்துகின்றனர். இவரை அஸுர உறுதியுடையவராக அறிக.*

இந்த மதியிலிகள் தமது உடலிலுள்ள புலன்களையும், அவர்களின் செயலுக்கும், எண்ணத்திற்கும் சாட்சியாக இருக்கும் நாராயணனாகிய என்னையும் வருத்துகின்றனர். அதாவது எனது கட்டளையை மீறி நடக்கின்றனர் என்பதாகும். அஸுர குணத்தில் உறுதியுடைய அவர்களை தவிர்க்கும் பொருட்டு அவர்கள் யாரென்று அறிந்து கொள்வாயாக.

இப்போது மூவகை உணவு பற்றி விளக்கப்படுகிறது. அவை சுவை மற்றும் நெய்ப்பசை முதலியவற்றால் வேறுபடுத்தப்படுகின்றன. ஒருவனுக்கு ஒரு உணவின் மீதுள்ள விருப்பத்தைக் கண்டு, அந்த உணவிலுள்ள சத்துவ, ரஜோ, தமோ குணங்களை எடுத்துக் காட்டுவதின்மூலம் அவன் ரஜோ, தமோ குணமுள்ள உணவுகளைத் தவிர்த்து சத்துவ குணம் மிகுந்துள்ள உணவை ஏற்றுக் கொள்ளலாம். அதுபோல் வேள்விகள் போன்றவற்றையும் சத்துவம் முதலிய குணங்களால் இங்கு வேறுபடுத்துகிறார். அதன் மூலம் ஒருவன் ரஜோ, தமோ குணமுடையனவற்றை விலக்கி சத்துவ குணமுடையதை ஏற்றுக் கொள்ளலாம்.

आहारस्त्वपि सर्वस्य त्रिविधो भवति प्रिय: ।
यज्ञस्तपस्तथा दानं तेषां भेतमिमं श्रृणु ॥ ७॥

**ஆஹாரஸ்த்வபி ஸர்வஸ்ய த்ரிவிதோ பவதி ப்ரிய: ।**
**யஜ்ஞஸ் தபஸ் ததா தானம் தேஷாம் பேதம் இமம் ஶ்ருணு ॥ 7॥**

*ஒவ்வொருவருக்கும் விருப்பமான உணவும் மூவகைப்படும். அவ்வாறே யாகமும், தவமும், தானமும் மூவகைப்படும்.*

ஒவ்வொருவருக்கும் - எல்லா உயிர்களுக்கும் மூவகையான உணவு விருப்பமானதாகும். அது போன்றே வேள்வியும், தவமும், தானமும் மூவகைப்படும். இங்கு கூறப்போகும் அவற்றின் வேற்றுமைகளை என்னவென்று அறிவாயாக.

**आयु:सत्त्वबलारोग्य-सुखप्रीतिविवर्धना:**
**रस्या: स्निग्धा: स्थिरा हृद्या-अहारा: सात्त्विकप्रिया: ॥८॥**

**ஆயு:ஸத்த்வபலாரோக்யஸுகப்ரீதிவிவர்தனா: ।**
**ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்த்விகப்ரியா: ॥ 8॥**

***ஆயுள், அறிவு, வலிமை, ஆரோக்கியம், இன்பம், விருப்பம் இவற்றை வளர்ப்பவையாகவும், ரஸமும், பசையும் உடையதாய், சாரம் மிகுந்ததாய், ஒத்துக் கொள்ளக் கூடியதான உணவுகள் சாத்விகர்களுக்கு விருப்பமானவையாகும்.***

ஆயுள், அறிவு பலம், வலிமை, ஆரோக்கியம், இன்பம், விருப்பம் முதலியவற்றை வளர்ப்பவையாகவும், பசையுடையதாகவும், சாரமுடையதாகவும், ஒத்துக் கொள்ளக் கூடியதாகவும் உள்ள உணவு வகைகள் சத்துவ குணமுடையோர்க்கு பெரிதும் விருப்பமானவையாகும்.

**कट्वम्ललवणात्युष्णतीक्ष्णरूक्षविदाहिन: ।**
**आहारा राजसस्येष्टा दु:खशोकामयप्रदा: ॥९॥**

**கட்வம்லலவணாத்யுஷ்ணதீக்ஷ்ணரூக்ஷவிதாஹின:**
**ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:க்கஶோகாமயப்ரதா: ॥ 9॥**

***கசப்பு, புளிப்பு, உப்பு, கடும் சூடு, உறைப்பு, உலர்ந்தன, எரிச்சலுடையன, துன்பம், துயர், நோய் தருவனவாகிய உணவுகள் ரஜோ குணமுடையோர்க்கு விருப்பமானவையாகும்.***

'அதி' என்னும் சொல் 'அதிகமான' என்னும் பொருளில் இங்கு பயன்படுத்தப்பட்டுள்ளது. இதனை அதிகமான கசப்பு, அதிமான புளிப்பு என்று ஒவ்வொன்றுடனும் கூட்டிக் கொள்க. ரஜோ குணமுடையோர்க்குப் பிடித்தமான இந்த உணவுகள் துன்பம், துயரம், பிணி முதலியவற்றிற்குக் காரணமாகும்.

**यातयामं गतरसं पूति पर्युषितं च यत् ।**
**उच्छिष्टमपि चामेध्यं भोजनं तामसप्रियम् ॥१०॥**

**யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத்**
**உச்சிஷ்டம் அபி சாமேத்யம் போஜனம் தாமஸப்ரியம் ॥ 10॥**

*வேகாதது, சுவையற்றது, புளித்துப் போனது, பழையது, எச்சில் செய்தது, அசுத்தமானது இவ்வாறான உணவு தாமஸர்களுக்கு மிகவும் விருப்பமான உணவாகும்.*

வேகாதது - அரைவேக்காடு வெந்தது முழுதும் வேகாதது. சுவையற்றது என்பது ரஸமற்றது அதாவது சாரமற்றது. பழையது -சமைத்து ஓரிரவு முழுவதும் பயன்படுத்தப்படாத உணவு. எச்சில் செய்தது - உண்டு மிகுந்த உணவு. அசுத்தமானது - பூஜைக்கு உதவாதது. இவ்வாறான உண்வுகள் தாமஸனுக்குப் பிடித்தமானவையாகும்.

இப்போது மூவகையான வேள்விகள் பற்றி விளக்கப்படுகிறது.

**अफलाकाङ्क्षिभिर्यज्ञो विधिदृष्टो य इज्यते ।**
**यष्टव्यमेवेति मनः समाधाय स सात्त्विकः ॥ ११॥**

**அபலாகாங்க்ஷிபிர்யஜ்ஞோ விதித்ருஷ்டோ ய இஜ்யதே ।**
**யஷ்டவ்யம் ஏவேதி மன: ஸமாதாய ஸ ஸாத்விக: ॥ 11॥**

*பயனை விரும்பாதவர்களால் கடமை என்று மட்டும் கருதி மனதை ஒருமுகப்படுத்தி விதிகளுக்கேற்ப எந்த வேள்வி செய்யப்படுகின்றதோ அது சாத்விகமாகும்.*

சாஸ்திர விதிகளுக்கேற்ப பயன் கருதாமல், இதைச் செய்வது என் கடமை என்று எந்த வேள்வியானது மனதை ஒருமுகப்படுத்திச் செய்யப்படுகின்றதோ அது சாத்விக வேள்வியாகும்.

**अभिसन्धाय तु फलं दम्भार्थमपि चैव यत् ।**
**इज्यते भरतश्रेष्ठ तं यज्ञं विद्धि राजसम् ॥ १२॥**

**அபிஸந்தாய து பலம் தம்பார்த்தம் அபி சைவ யத் ।**
**இஜ்யதே பரதஶ்ரேஷ்ட தம் யஜ்ஞம் வித்திராஜஸம் ॥ 12॥**

*ஆனால் பயனை எதிர்பார்த்தோ, பகட்டிற்காகவோ எந்த வேள்வி செய்யப்படுகின்றதோ, பரதரிற் சிறந்தோனே அந்த வேள்வி ராஜஸம் என்றறிவாயாக.*

பயனை குறிக்கோளாகக் கொண்டு பகட்டிற்காக எந்த வேள்வி செய்யப்படுகின்றதோ, பரத குலத்திற் சிறந்தோனே அந்த வேள்வி ராஜஸ வேள்வியாகும்.

**विधिहीनमसृष्टान्नं मन्त्रहीनमदक्षिणम् ।**
**श्रद्धाविरहितं यज्ञं तामसं परिचक्षते ॥ १३॥**

**விதிஹீனம் அஸ்ருஷ்டான்னம் மந்த்ரஹீனம் அதக்ஷிணம் ।**
**ஶ்ரத்தாவிரஹிதம் யஜ்ஞம் தாமஸம் பரிசக்ஷதே ॥ 13॥**

*விதிமுறை தவறியது, அன்னதானமற்றது, மந்திரமற்றது, தக்ஷிணையற்றது, நம்பிக்கையின்றிச் செய்யப்படுவது இத்தகைய வேள்வியைத் தாமஸமென்பர்.*

விதிமுறை தவறியது - சாத்திரங்களில் கூறப்பட்டுள்ள விதிமுறைகளுக்கு எதிரானது என்று பொருளாகும். அன்னதானமற்றது - பிராமணர்களுக்கும், ஏழைகளுக்கும் அன்னதானம் செய்யப்படாதது, மந்திரமற்றது - மந்திரங்களைச் சொல்வதிலும், உச்சரிப்பதிலும் பிழை செய்தல், தக்ஷிணையற்றது - புரோகிதர்களுக்குக் கொடுக்க வேண்டிய சன்மானம் கொடுக்கப்படாததாகும். இவ்வாறான வேள்வி தாமஸமாகும்.

இப்போது மூவகைத் தவம் விளக்கப்படுகின்றது.

**देवद्विजगुरुप्राज्ञपूजनं शौचमार्जवम् ।**
**ब्रह्मचर्यमहिंसा च शारीरं तप उच्यते ॥ १४॥**

**தேவத்விஜகுருப்ராஜ்ஞபூஜனம் ஶௌசம் ஆர்ஜவம் ।**
**ப்ரஹ்மச்சர்யம் அஹிம்ஸா ச ஶாரீரம் தப உச்யதே ॥ 14॥**

*தேவர், பிராமணர், பெரியோர், அறிஞர் இவர்களை வழிபடுவதும்; தூய்மையும், நேர்மையும் பிரம்மச்சரியமும் அஹிம்சையும் உடலால் செய்யப்படும் தவம் எனப்படும்.*

தேவர்கள், பிராமணர்கள், பெரியவர்கள், அறிஞர்கள் இவர்களை வழிபடுவது. தூய்மை, பிரம்மச்சரியம், நேர்மை, அஹிம்ஸை இவையெல்லாம் உடலால் செய்யப்படும் தவங்கள் எனப்படுகின்றன. இது உடலை தலைமையாகக் கொண்ட கர்த்தாக்களால் செய்யக் கூடியதாகும். பகவான் மே அதற்குக் காரணங்களாகும்'' என்று இனி கூறுவார். (18-15)

**अनुद्वेगकरं वाक्यं सत्यं प्रियहितं च यत् ।**
**स्वाध्यायाभ्यसनं चैव वाङ्मयं तप उच्यते ॥ १५॥**

**அனுத்வேககரம் வாக்யம் ஸத்யம் ப்ரியஹிதம் ச யத்**
**ஸ்வாத்யாயாப்யஸனம் சைவ வாங்மயம் தப உச்யதே ॥ 15॥**

*கடுமையில்லாததும், உண்மையானதும் இனிமையானதும் இதமளிப்பதுமான வார்த்தை எதுவோ, அதுவும் வேத நூல் ஓதுதலும் வாக்கால் செய்யப்படும் தவமாகும்.*

கடுமையில்லாதது - பிற உயிர்களுக்கு வருத்தமளிக்காதது. அது உண்மையானது. இனிமையானது - பார்க்கப்பட்டப் பயனுடையது (கேட்கும் பொழுதே இனிமை பயப்பது) இதமளிப்பது - பார்க்கப்படாத பயனளிப்பது (முடிவில் நலமளிப்பது).

வாக்கு என்பது கடுமையில்லாதது முதலிய தன்மைகளால் சிறப்பிக்கப்படுகின்றது. இதில் பயன்படுத்தப்பட்டிருக்கும் 'உம்மை' - சிறப்புத் தன்மைகளை ஒருங்கு சேர்க்கும் தன்மையதாம். பிறர்க்கு உறுதி உண்டாகும் பொருட்டுக் கூறப்படும் வாக்கில் கடுமையில்லாதது, உண்மையானது, இனிமையானது, இதமளிப்பது என்பனவற்றுள் ஏதாவது ஒன்றேனும் இரண்டேனும், மூன்றேனும் இல்லையெனில் அது வாக்கால் செய்யப்படும் தவமாகாது.

அதுபோல் உண்மையான வார்த்தையும் மற்றையவற்றுள் ஒன்றேனும், இரண்டேனும், மூன்றேனும் இல்லாத வழி வாக்கால் செய்யப்படும் தவமாகாது. அவ்வாறே இனிமையான வார்த்தையும் மற்றையவற்றுள் ஒன்றேனும், இரண்டேனும், மூன்றேனும் இல்லையென்றால் அது வாக்கால் செய்யப்படும் தவமாகாது. அங்ஙனமே இதமான வார்த்தையும் மற்றையவற்றுள் ஒன்றேனும், இரண்டேனும், மூன்றேனும் இல்லாத வழி வாக்கால் செய்யப்படும் தவமாகாது.

அவ்வாறாயின் அந்தத் தவம் யாது? என்றால் அது உண்மையானது, கடுமையில்லாதது, இனிமையானது, இதமளிப்பது எதுவோ அதுவே வாக்கால் செய்யப்படும் தவமாகும். உதாரணமாக 'அன்பு மைந்த அமைதியுடனிருப்பாயாக. ஓதுதலையும், யோகத்தையும் செய்வாயாக. அதனால் நீ உயர் நலம் எய்துவாய்' என்பதாம். விதிப்படி வேதம் ஓதுவது கூட வாக்கால் செய்யப்படும் தவமேயாகும்.

**मनःप्रसादः सौम्यत्वं मौनमात्मविनिग्रहः ।**
**भावसंशुद्धिरित्येतत्तपो मानसमुच्यते ॥ १६॥**

**மம:ப்ரஸாத: ஸெளம்யத்வம் மௌனம் ஆத்ம விநிக்ரஹ: ।**
**பாவஸம்ஶுத்திர் இத்யேதத்தபோ மானஸம் உச்யதே ॥ 16॥**

***மன அமைதி, நன்மனமுடைமை, மௌனம், தன்னடக்கம், எண்ணத் தூய்மை என்னும் இவை மனத்தவம் எனப்படும்.***

மனஅமைதி - கலக்கமின்றி மனத்தை சாந்தமுடன் வைத்திருத்தல். நன்மனமுடைமை - எல்லா உயிர்களுக்கும் அன்பு செய்தல், முகத்தில் காணப்படும் தெளிவினால் ஊகிக்கக் கூடிய அகத்தின் நிலைமை. மௌனம் - மனவடக்கத்தைத் தொடர்ந்து வரும் வாயடக்கம், காரியத்தைக் கொண்டு காரணம் கூறப்படுகின்றது. தன்னடக்கம் - எல்லாவற்றினின்றும் மனத்தை இழுத்துக் கொள்ளுதல், மௌனம் என்பது பேசாதிருத்தல் என்பதை மட்டுமே சுட்டும் ஆனால் தன்னடக்கம் என்பது பொதுவான [illegible]. எண்ணத்

தூய்மை - உள்ளத்தூய்மை, மற்றவர்களோடு உறவாடுகையில் சூழ்ச்சி செய்யாதிருப்பது.

மனம், வாக்கு, காயம் என்னும் இத்தவங்களை மனிதர்கள் மேற்கொள்ளும்போது சத்துவ குணம் முதலிய குணங்களால் அவர்கள் எவ்வாறு மூவகையாகப் பிரிக்கப்படுகின்றனர் என்பது இப்போது விளக்கப்படுகிறது.

**श्रद्धया परया तप्तं तपस्तत्त्रिविधं नरैः ।**
**अफलाकाङ्क्षिभिर्युक्तैः सात्त्विकं परिचक्षते ॥१७॥**

**ஶ்ரத்தயா பரயா தப்தம் தபஸ்தத்த்ரிவிதம் நரை:**
**அபலாகாங்க்ஷிபிர்யுக்தை: ஸாத்த்விகம் பரிசக்ஷதே ॥ 17॥**

*பயன் கருதாத யோகிகளால், மிக்க நம்பிக்கையுடன் செய்யப்படும் - மனம், வாக்கு, காயம் - மூவகையான அந்தத் தவம் சாத்விகம் என்று கூறுகின்றனர்.*

நம்பிக்கையுடன் - சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள விஷயங்களில் ஆழ்ந்த நம்பிக்கையுடன். மூவகையான - மனம், வாக்கு, காயம் என்னும் மூன்று இடங்களில் செய்யப்படும் தவம். பயன் கருதாது - பயனில் பற்றின்றி மனிதர்களால் செய்யப்படும் தவம் சாத்விகம் என்று ஆன்றோர்களால் கூறப்படுகிறது.

**सत्कारमानपूजार्थं तपो दम्भेन चैव यत् ।**
**क्रियते तदिह प्रोक्तं राजसं चलमध्रुवम् ॥१८॥**

**ஸத்காரமான பூஜார்த்தம் தபோ தம்பேன சைவ யத்**
**க்ரியதே தத் இஹ ப்ரோக்தம் ராஜஸம் சலம் அத்ருவம் ॥ 18॥**

*மரியாதை, மதிப்பு, வழிபாடு இவற்றைக் கருதி ஆடம்பரத்துடன் எந்தத் தவம் செய்யப்படுகின்றதோ அது இங்கே சலனமுடையது, நிலையற்றது, ராஜஸம் எனக் கூறப்படுகின்றது.*

மரியாதை - இப்பிராமணன் ஒரு தபஸ்வி, மகான், என்று கூறுவது மரியாதையின் நிமித்தமாகும். மதிப்பு - இருக்கையிலிருந்து எழுதல், வணங்குதல் என்பதாம். வழிபாடு - கால்களைக் கழுவுதல், மலர்களை இடுதல், விருந்து வைத்தல் என்பதாகும். இவற்றைக் கருதி ஆடம்பரமாகச் செய்யப்படும் தவம் ராஜஸம் என்று கூறப்படும். இத்தவத்தின் பயன் சலனமுடையதும், நிலையற்றதுமாகும்.

**मूढग्राहेणात्मनो यत्पीडया क्रियते तपः ।**
**परस्योत्सादनार्थं वा तत्तामसमुदाहृतम् ॥१९॥**

மூடக்ராஹேணாத்மனோ யத்பீடயா க்ரியதே தப: ।
பரஸ்யோத்ஸாதனார்த்தம் வா தத்தாமஸம் உதாஹ்ருதம் ॥ 19॥

*மூர்க்கத்தனமாக, தன்னைத் துன்புறுத்தியும், பிறர்க்குத் தீமை விளைவிக்கவும் எந்தத் தவம் செய்யப்படுகின்றதோ அது தாமஸம் என்று கூறப்படுகின்றது.*

மூர்க்கத்தனம் - விவேகமற்றப் பிடிவாதம். அது தன்னைத் துன்புறுத்தியும், பிறருக்குத் தீமை விளைவிக்கவும் அதாவது பிறர் அழிவை நாடியும் செய்யப்படுகின்றது. அப்படிப்பட்டத் தவம் தாமஸம் எனப்படுகின்றது.

இப்போது மூவகைத் தானம் பற்றிக் கூறுகின்றார்.

दातव्यमिति यद्दानं दीयतेऽनुपकारिणे ।
देशे काले च पात्रे च तद्दानं सात्त्विकं स्मृतम् ॥२०॥

**தாதவ்யம் இதி யத்தானம் தீயதே (அ)னுபகாரிணே ।**
**தேஶே காலே ச பாத்ரே ச தத்தானம் ஸாத்த்விகம் ஸ்ம்ருதம் ॥ 20॥**

*கொடுத்தல் கடமை என்று கருதி உரிய இடத்தில், உரிய காலத்தில், தகுதியுடைய ஒருவர்க்குக் கைம்மாறு கருதாது எந்தத் தானம் கொடுக்கப்படுகின்றதோ அது சாத்விகம் என்று கருதப்படும்.*

கொடுத்தல் கடமையென்று கருதி கைம்மாறு கருதாது - பதிலுக்கு எந்தவிதமானப் பலனும் எதிர்பாராது. உரிய இடத்தில் - குருக்ஷேத்திரம் போன்ற புனித இடங்களில், உரிய காலத்தில் - சங்கிராந்தி அதாவது சூரியன் ஒரு ராசியினின்று மற்றொரு ராசிக்குச் செல்லும் காலத்தில், தகுதியுடையவருக்கு - வேதங்களையும், அதன் ஆறு அங்கங்களையும் கற்றுத் துறை போகிய ஒருவருக்கு.

यत्तु प्रत्युपकारार्थं फलमुद्दिश्य वा पुनः ।
दीयते च परिक्लिष्टं तद्दानं राजसं स्मृतम् ॥२१॥

**யத் து ப்ரத்யுபகாரார்த்தம் பலம் உத்திஶ்ய வா புன: ।**
**தீயதே ச பரிக்லிஷ்டம் தத்தானம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 21॥**

*மற்று எது கைம்மாறு கருதியும், பயன் கருதியும், வருத்தத்துடனும் கொடுக்கப்படுகின்றதோ அந்தத் தானம் ராஜஸம் எனப்படுகின்றது.*

எது - தானம், கைம்மாறு கருதி - இதைக் கொடுத்து இவனிடமிருந்து இப்பலனைப் பெறலாம் என்று கருதி, பயன் கருதியும் - இதனால் எனக்கு மறுமையில் பயன் விளையும் என்று கருதி, வருத்தத்துடன் - அந்தோ, இவ்வளவு மதிப்புடையதைக் கொடுக்கின்றோமே என்னும் உணர்வுடன், கொடுக்கப்படும் தானம் ராஜஸிகம் எனப்படும்.

अदेशकाले यद्दानमपात्रेभ्यश्च दीयते ।
असत्कृतमवज्ञात तत्तामसमुदाहृतम् ॥ २२॥

அதேஶகாலே யத்தானம் அபாத்ரேப்யஶ்ச தீயதே
அஸத்க்ருதம் அவஜ்ஞாதம் தத்தாமஸம் உதாஹ்ருதம் ॥ 22॥

*தகாத இடத்தில், தகாத காலத்தில், தகுதியற்றோர்க்கு, மதிப்பின்றி இகழ்ச்சியுடன் கொடுக்கப்படும் தானம் எதுவோ அது தாமஸம் எனப்படுகின்றது.*

தகாத இடத்தில் - புண்ணியத்தலம் அல்லாதது, அசுத்தங்களும், அசுத்தமான மனிதர்களும் நிறைந்திருக்கும் இடத்தில். தகாத காலத்தில் - புண்ணியத்தை விளைவிக்காத காலத்தில், சூரியன் ஒரு ராசியினின்று மற்றொரு ராசிக்குச் செல்லாத நாளில். தகுதியற்றோர்க்கு - மூர்க்கர்களுக்கும், திருடர்களுக்கும். மதிப்பின்றி - உரிய இடமும், காலமும் அமைந்திருந்தாலும் இனிய சொல், கால் கழுவுதல், வழிபடுதல் என்பவையின்றி இகழ்ச்சியுடன் கொடுக்கப்படும் தானம் தாமஸம் எனப்படும்.

வேள்வி, தானம், தவம் முதலியவற்றைப் பரிபூரணமாகச் செய்வதற்கு இச்சுலோகம் அருளப்படுகின்றது.

ॐ तत्सदिति निर्देशो ब्रह्मणस्त्रिविधः स्मृतः
ब्राह्मणास्तेन वेदाश्च यज्ञाश्च विहिताः पुरा ॥ २३॥
ஓம் தத்ஸத் இதி நிர்தேஶோ ப்ரஹ்மணஸ்த்ரிவித: ஸ்ம்ருத: ।
ப்ராஹ்மணாஸ்தேன வேதாஸ்ச யஜ்ஞாஸ்ச விஹிதா: புரா ॥ 23॥

*'ஓம், தத், ஸத்' என்னும் மும்மைப் பெயர் பிரம்மத்தைக் குறிப்பதென்பர். அதனால் ஆதியில் பிராமணர்களும், வேதங்களும், வேள்விகளும் படைக்கப்பட்டன.*

'ஓம், தத், ஸத்' என்பவை வேதாந்தங்களில் பிரம்மத்தைக் குறிப்பிடுகின்றனவென்று பிரம்மத்தை அறிந்தவர்களால் கூறப்படுகின்றது. (வேள்வி முதலியவற்றில் குற்றங்கள் நேரின் 'ஓம், தத், ஸத்' என்னும் மூன்று பெயர்களில் ஒன்றை உச்சரிக்க அக்குற்றம் நீங்கும் என்பது பொருள் - ஆ). அந்த மூன்று விதமானப் பெயரினால் ஆதியில் (படைப்புக் காலத்தில் பிரஜாபதியினால்) பிராமணர்களும், வேதங்களும், வேள்விகளும் படைக்கப்பட்டன. இது அப்பெயர்களைப் போற்றுவதற்காகக் கூறப்பட்டது.

तस्मादोमित्युदाहृत्य यज्ञदानतपःक्रियाः ।
प्रवर्तन्ते विधानोक्ताः सततं ब्रह्मवादिनाम् ॥ २४ ॥

**தஸ்மாத் ஓம் இத்யுதாஹ்ருத்ய யஜ்ஞதானதப: க்ரியா: ।**
**ப்ரவர்த்தந்தே விதானோக்தா: ஸததம் ப்ரஹ்ம வாதினாம் ॥ 24॥**

*ஆகவே பிரம்மவாதிகள் விதிப்படிப் புரியும் வேள்வி தானம் தவம் என்னும் கர்மங்கள் எப்போதும் 'ஓம்' என்று உச்சரித்துத் தொடங்கப் பெறுகின்றன.*

அதனால் வேள்வி போன்ற கர்மங்கள் 'ஓம்' என்று உச்சரித்தே தொடங்கப் பெறுகின்றன. இது பிரம்மவாதிகளின் நீண்ட நாள் பழக்கமாகும்.

तदित्यनभिसन्धाय फलं यज्ञतपःक्रियाः ।
दानक्रियाश्च विविधाः क्रियन्ते मोक्षकाङ्क्षिभिः ॥ २५॥

**தத் இத்யனபிஸந்தாய பலம் யஜ்ஞதப:க்ரியா: ।**
**தானக்ரியாஸ்ச விவிதா: க்ரியந்தே மோக்ஷகாங்க்ஷிபி: ॥ 25॥**

*'தத்' என்னும் சொல்லை உச்சரித்துப் பல்வேறு வகையான வேள்விகளும், தவமும், தானமும் முக்தியை நாடுவோரால் பயன் கருதாது செய்யப்படுகின்றன.*

பிரம்மத்தைக் குறிப்பிடும் 'தத்' என்னும் சொல்லை உச்சரித்து பயன்கருதாது வேள்விகளும், தவமும், நிலம், பொன் முதலியவற்றை அளித்தலாகியப் பல்வேறு வகையானத் தானங்களும் முக்தியை நாடுவோரால் செய்யப்படுகின்றன.

'ஓம்' மற்றும் 'தத்' என்னும் சொற்களைப் பயன்படுத்துவது பற்றிக் கூறப்பட்டது. இனி 'ஸத்' என்னும் சொல்லைப் பயன் படுத்துவது பற்றிக் கூறப்படுகிறது.

सद्भावे साधुभावे च सदित्येतत्प्रयुज्यते ।
प्रशस्ते कर्मणि तथा सच्छब्दः पार्थ युज्यते ॥ २६॥

**ஸத் பாவே ஸாதுபாவே ச ஸதித்யேதத்ப்ரயுஜ்யதே ।**
**ப்ரஸஸ்தே கர்மணி ததா ஸச்சப்த: பார்த்த யுஜ்யதே 26॥**

*'ஸத்' என்னும் சொல் 'உள்ளது' என்னும் பொருளிலும், 'நல்லது' என்னும் பொருளிலும் வழங்கப்படுகின்றது. அவ்வாறே பார்த்தா, 'மங்கள கார்யத்தைக்' குறிப்பதற்கும் 'ஸத்' என்னும் சொல் பயன்படுத்தப்படுகின்றது.*

பிரம்மத்தைக் குறிப்பிடும் 'ஸத்' என்னும் சொல் 'உள்ளது' என்னும் பொருளிலும், இல்லாத ஒன்றின் இருப்பிலும், உதாரணமாக மகன் இல்லாத

ஒருவனுக்கு மகன் பிறந்தவுடன் மகன் இருக்கின்றான் என்ற பொருளிலும், 'நல்லது' என்னும் பொருளிலும் அதாவது இதுவரை ஒழுக்கக்கேடனாக இருந்த ஒருவன் இப்போது திருந்தி நல்லவனாக இருக்கின்றான் என்னும் பொருளிலும் வழங்கப்படுகின்றது. மேலும் இந்த 'ஸத்' என்னும் சொல் திருமணம் முதலிய மங்கள காரியத்தைக் குறிப்பிடுவதற்கும் பயன்ப(

यज्ञे तपसि दाने च स्थितिः सदिति चोच्यते ।
कर्म चैव तदर्थीयं सदित्येवाभिधीयते ॥२७॥

**யஜ்ஞே தபஸி தானே ச ஸ்திதி: ஸத் இதி சோச்யதே ।**
**கர்ம சைவ தத் அர்த்தீயம் ஸதித்யேவாபிதீயதே ॥ 27॥**

*வேள்வி, தவம், தானம் இவற்றில் நிலைத்து நிற்றலும் 'ஸத்' என்றே கூறப்படுகின்றது. மேலும் அவற்றிற்குரிய கர்மமும் 'ஸத்' என்றே கூறப்படுகின்றது.*

வேள்வி, தவம், தானம் இவற்றில் நிலைத்து நிற்றலும் 'ஸத்' என்றே அறிஞர்களால் கூறப்படுகின்றது. மேலும் வேள்வி, தவம், தானம் இவற்றிற்குரிய கர்மங்கள் அல்லது இந்த மூன்று நாமங்களும் எவரைக் குறிப்பிடுகின்றனவோ அந்த ஈசுவரனுக்கு அர்ப்பணமாகச் செய்யப்படும் கர்மமும் 'ஸத்' என்றே அழைக்கப்படுகின்றது.

இந்த வேள்வி, தவம், தானம் என்னும் கர்மங்கள் எல்லாம் சாத்துவிகமற்றவையாகவும், குற்றங்குறையுடையவையாகவும் இருந்தபோதிலும் பிரம்மத்தைக் குறிப்பிடும் மூன்று நாமங்களை நம்பிக்கையுடன் பயன்படுத்தி இவை செய்யப்படுவதால் பூரணத்துவமும், சாத்விகமும் உடையனவாகின்றன.

அவற்றையெல்லாம் மிக்க நம்பிக்கையோடு செய்கின்ற காரணத்தினால் அவையெல்லாம் முழுநிறைவு பெறுகின்றன. ஆகவே,

अश्रद्धया हुतं दत्तं तपस्तप्तं कृतं च यत् ।
असदित्युच्यते पार्थ न च तत्प्रेत्य नो इह ॥२८॥

**அஶ்ரத்தயா ஹுதம் தத்தம் தபஸ்தப்தம் க்ருதம் ச யத்**
**அஸத் இதியுச்யதே பார்த்த ந ச தத்ப்ரேத்ய நோ இஹ ॥ 28॥**

*அவ நம்பிக்கையுடன் செய்யப்படும் வேள்வியும், தானமும், தவமும், கர்மமும் 'அஸத்' எனப்படும். பார்த்தா! அது மறுமைக்கும் பயன்படுவதில்லை. இம்மைக்கும் பயன்படுவதில்லை.*

அவநம்பிக்கையோடு, எந்தவேள்வி செய்தாலும், எதைத் தானம் கொடுத்தாலும், எத்தவத்தைச் செய்தாலும், எக்கர்மம் செய்தாலும், அதாவது போற்றுதல், வணங்குதல் முதலிய கர்மம், அவையெல்லாம் என்னை எய்துவதற்குப் புறம்பான வழிகள் ஆதலினால் அவை 'அஸத்' எனப்படுகின்றன. அவை செய்வதற்குப் பெரும் சிரமமுடையவையாக இருந்த போதிலும், அவை மறுமைக்கும் பயன்படுவதில்லை, சான்றோர்களால் இம்மைக்கும் பயன்படுவதில்லை.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "சிரத்தாத்ரய விபாக யோகம்" என்னும் பதினேழாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.



# அத்தியாயம் பதினெட்டு

# மோக்ஷ சந்நியாச யோகம்

கீதையின் சாரம் முழுவதையும், அதுபோல் வேதங்களின் சாரம் முழுவதையும் சுருக்கமாகத் தரவேண்டும் என்னும் நோக்கில் இவ்வத்தியாயம் தொடங்கப்பெறுகின்றது. முந்தைய அத்தியாயங்களுள் கூறப்பட்ட அனைத்து விஷயங்களையும் இந்த ஒரு அத்தியாயத்தில் அறிந்து கொள்ள இயலும். எனினும் அர்ஜுனன் 'சந்நியாஸம்' 'தியாகம்' எனும் இவற்றினிடையே உள்ள வேறுபாட்டையே அறிந்து கொள்ள விரும்புகிறான். அவன் கூறினான் :

अर्जुन उवाच

**संन्यासस्य महाबाहो तत्त्वमिच्छामि वेदितुम्**
**त्यागस्य च हृषीकेश पृथक्केशिनिषूदन ॥ १॥**

*அர்ஜுன உவாச*

**ஸந்ந்யாஸஸ்ய மஹா-பாஹோ தத்த்வம் இச்சாமி வேதிதும்**
**த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேஶ ப்ருதக்கேஶி நிஷூதன ॥ 1॥**

*அர்ஜுனன் கூறினான்*

*பெருந்தோளுடையாய், கேசியென்னும் அசுரனை அழித்தவனே, சந்நியாஸத்தின் தன்மையையும், தியாகத்தின் தன்மையையும் தனித்தனியே அறிந்து கொள்ள விரும்புகிறேன்.*

"பெருந்தோளுடையாய்! 'சந்நியாஸம்' என்னும் சொல்லின் உண்மைப் பொருளையும், 'தியாகம்' எனனும் சொல்லின் உண்மைப் பொருளையும் நான் அறிய விரும்புகிறேன். அதாவது அவற்றினிடையேயுள்ள வேறுபாட்டை நான் அறிந்து கொள்ள விரும்புகிறேன்".

[illegible]ிரை வடிவில் வந்த கேசியென்னும் அசுரனை பகவான் வாசுதேவர் வதம் செய்ததால் அவர் இங்கு அர்ஜுனனால் 'கேசிநிஷூதனா' என்றழைக்கப் படுகின்றார்.

இதற்கு முந்தைய அத்தியாயங்களில் பல்வேறு இடங்களில் 'சந்நியாஸம்' பற்றியும் 'தியாகம்' பற்றியும் பேசப்பட்டுள்ளதெனினும் அவை தெளிவாக விளக்கப்படவில்லை. ஆதலால், பகவான் அதுபற்றி வினவிய

அர்ஜுனனுக்கு அவற்றின் பொருள் விளக்கம் என்னவென்று அருளிச் செய்கின்றார்.

श्रीभगवानुवाच

**काम्यानां कर्मणां न्यासं संन्यासं कवयो विदुः ।**
**सर्वकर्मफलत्यागं प्राहुस्त्यागं विचक्षणाः ॥२॥**

*ஸ்ரீ பகவான் உவாச*

**காம்யானாம் கர்மணாம் ந்யாஸம் ஸந்ந்யாஸம் கவயோ விது: ।**
**ஸர்வகர்மபலத்யாகம் ப்ராஹுஸ்த்யாகம் விசக்ஷணா: ॥ 2॥**

*ஸ்ரீ பகவான் கூறினார்*

***விருப்பத்தின் பேரில் செய்யப்படும் காம்ய கர்மங்களைத் துறப்பது 'சந்நியாஸம்' என்று ஞானிகள் கருதினர். கர்மங்கள் அனைத்தின் பயனையும் துறத்தலை 'தியாகம்' என்று ஆன்றோர் கூறினர்.***

காம்ய கர்மம் என்பது பயன் கருதிச் செய்யப்படும் அசுவமேதயாகம் போன்றவையாகும். 'சந்நியாஸம்' எனனும் சொல்லுக்கு இவ்வாறானக் கர்மங்களைத் துறத்தல் என்று பொருளாகும். இப்படிப்பட்டக் கர்மங்களைச் செய்ய வேண்டிவரும் பொழுது அவற்றைச் செய்யாதிருப்பதே 'சந்நியாஸம்' என்று ஞானிகள் கருதுகின்றனர். செய்ய வேண்டிய நித்ய, நைமித்திகக் கர்மங்களின் பயனைத் துறப்பதே 'தியாகம்' என்று ஆன்றோர் கூறுகின்றனர்.

காம்ய கர்மங்களைத் துறத்தல், அவற்றின் பயன்களைத் துறத்தல் என்றே பொருள் கூற வேண்டும். 'சந்நியாஸம்' 'தியாகம்' என்னும் இரண்டிற்கும் துறத்தல் என்னும் ஒரு பொருள்தான். மற்று 'பானை' மற்றும் 'ஆடை' என்பவற்றிற்கிடையே இருக்கும் பொருள் வேறுபாடு போல் சந்நியாஸத்திற்கும், தியாகத்திற்குமிடையே முற்றும் வேறுபாடு இல்லை. சிறிதளவு வேறுபாடு மட்டுமே உண்டு.

மறுப்பு : நித்திய நைமித்திகக் கர்மங்கட்குப் பயனில்லை என்று கூறுகின்றார்கள். அங்ஙனமாயின் அவற்றின் பயனைத் துறத்தல் என்பது எங்ஙனம்? இது ஒரு மலடி தன் மகனைத் துறத்தல் போன்றதாகும்.

பதில் : அவ்வாறன்று. நித்திய நைமித்திகக் கர்மங்கட்குப் பயன் உண்டு என்றும் "வேண்டப்படுவது வேண்டப்படாதது ..... (18.12) என்றும், "துறவிகட்கு அது இல்லை..... (18.12) என்றும் பகவான் கூறுகின்றார். ஆகவே அவரது கூற்றின்படி துறவிகள் அல்லாதவர்க்கு நித்திய நைமித்திகக் கர்மங்களின் பயன் உண்டாம்.

त्याज्यं दोषवदित्येके कर्म प्राहुर्मनीषिणः
यज्ञदानतपःकर्म न त्याज्यमिति चापरे ॥ ३)॥

த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹுர்மனீஷிண:
யஜ்ஞதானதப:கர்ம ந த்யாஜ்யம் இதி சாபரே ॥ 3॥

*சில அறிஞர்கள் கர்மத்தைத் தீமையெனக் கருதி விட்டுவிட வேண்டும் என்கின்றனர். வேறு சிலர் வேள்வி, தானம், தவம் என்னும் கர்மங்களை விட்டுவிடக் கூடாது என்கின்றனர்.*

தீமையானக் கர்மத்தை விட்டு விடுதல் வேண்டும். காரணம் அவை போன்ற கர்மங்கள் பந்தப்படுத்துபவையாம். அல்லது ஆசை முதலியவற்றை விட்டுவிடுதல் போன்று கர்மங்களையும் விட்டுவிடுதல் வேண்டும். இது சாங்கியர்களின் கொள்கையைப் பின்பற்றும் அறிஞர்களின் கருத்தாகும். இது கர்மத்தில் பற்றுடையக் கர்மிகட்கும் கூடப்பொருந்துவதாகும். எனினும் வேறு சிலரோ, வேள்வி, தானம், தவம் போன்றவற்றை விடக் கூடாது என்கின்றனர்.

இவ்வேறுபாடுகள் கர்மிகளுக்கு மட்டும் பொருந்துமேயன்றி கர்மங்களை விட்டு ஞானத்தில் நிலைத்து நிற்கும் துறவிகட்குப் பொருந்தாது. 'சாங்கியர்களின் ஞானயோகத்தால் எய்துவது'' (3.3) என்று யாவர் கர்மங்களைக் கடந்தவர்களாக இருக்கின்றார்களோ அவர்களுக்கப் பொருந்துவதில்லை.

மறுப்பு : நல்லது. ''யோகிகளின் கர்மயோகத்தால் ..........'' (3.3) என்று முன்னர் கூறப்பெற்றிருந்தும், கீதா சாத்திரத்தின் சுருக்கமாகக் கருதப்படும் இவ்வத்தியாயத்தில் கர்மங்களில் அதிகாரமுள்ள கர்மிகள் எவ்வாறு ஆராயப்படுகின்றனரோ, அவ்வாறே ஞானத்தில் நிலைபெற்றுள்ள ஞானிகளும் ஆராயப்படுகின்றனர் என்று கூறலாமன்றோ?

பதில் : அவ்வாறன்று. அவர்கள் துன்பத்தாலும், மயக்கத்தாலும் கர்மத்தைத் துறப்பதில்லை. ஞானிகள் உடல் வருத்தத்தால் உண்டாகும் துன்பத்தை ஆத்மாவிடம் காண்பதில்லை. காரணம் ஆசை முதலியவை க்ஷேத்திரத்தின் (உடலின்) தன்மையென்று முன்னரே உணர்த்தப்பட்டுள்ளது (13.6) அதனால் அவர்கள் மெய்வருத்தம், துன்பம் எனும் இவற்றின் மீதான அச்சத்தின் காரணமாகக் கர்மத்தைத் துறப்பதில்லை. மேலும் அவர்கள் கர்மத்தை ஆத்மாவிடம் காண்பதில்லை. அதனால் அவர்கள் மயக்கத்தின் காரணமாகவும், நித்ய கர்மத்தைத் துறப்பதில்லை. உண்மையில் அவர்கள் 'கர்மம் குணங்களைச் சேர்ந்தது, நான் எதனையும் செய்வதில்லை' (5.8) என்பதை உணர்ந்து அவற்றைத் துறக்கின்றனர். உண்மை அறிந்தவனால் கர்மங்கள் துறக்கப்படும் விதமானது 'எல்லாக் கர்மங்களையும் மனத்தால் துறந்து' (5-13) என்று கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே கர்மம் செய்வதற்கு உரிமையுள்ள, ஆத்மாவை அறியாத பிறர், அச்சம் மற்றும் மெய்வருத்தத்தின் காரணமாகக் கர்மங்களைத் துறக்கும் பொழுது அவர்கள் தாமஸத் துறவிகளென்றும், ராஜஸத் துறவிகளென்றும் இகழப்படுகின்றனர். ஆத்மாவை

அறியாத கர்மிகள் கர்மத்தின் பயனைத் துறத்தலைப் போற்றுவதற்காகவே இவ்வாறு செய்யப்படுகின்றது. மேலும் குணங்களைக் கடந்த உண்மைத் துறவிகளைக் குறிப்பாகச் சுட்டுமிடத்து 'முயற்சிகள் எல்லாவற்றையும் துறந்தவன்...... மௌனி, மகிழ்ச்சியுடையான், மனையில்லான், ஸ்திரபுத்தியுடையான்' (12-16-19) எனச் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளமையினாலும், மேலும் 'ஞானத்தின் முதிர்ந்த நிலை எது' (18-50) என்று கூறியுள்ளதாலும் ஞானத்தின் நிலைபெற்றத் துறவிகளல்லர் இங்கு பேசப்படுபவர்கள். தாமஸ, ராஜஸ கர்மத்துறவை நோக்குமிடத்து, சத்துவ குணத்தில் கர்மத்தின் பயனைத் துறத்தலே துறவு எனப்படுகின்றது. இங்கு கூறக் கருதியது முக்கிய சந்நியாஸமன்று அதாவது எல்லாக் கர்மங்களையும் துறப்பதாகிய முதன்மையானத் துறவு அன்று.

மறுப்பு: 'உடல் பெற்றவனால் எல்லாக் கர்மங்களையும் முற்றிலும் துறத்தல் இயலாது' (18-11) என்று காரணம் கூறப்பட்டிருப்பதால் இங்கு கூறக் கருதியது முதன்மைத் துறவுதான் என்று வாதிடலாமே.

பதில்: அவ்வாறன்று. காரணம் கூறப்பட்டிருப்பது, புகழ்ச்சியின் பொருட்டேயாகும். உதாரணமாக 'கர்மத்தின் பயனைத் துறப்பதால் அமைதி உண்டாகின்றது' (12-12) எனக் கூறியது கர்மப் பயனைத் துறத்தலைப் புகழ்வதற்குத்தான். மேலும் இது அஞ்ஞானியும், மேலே கூறப்பட்டுள்ள பல்வேறு வழிகளைப் பின்பற்ற இயலாதவனுமாகிய அர்ஜுனனுக்கே கூறப்படுகின்றது. அதனால் தான் 'உடல் பெற்றவனால்' (18-11) எனக் கூறியது கர்மப் பயனைத் துறத்தலைப் புகழும் பொருட்டேயாகும். 'எதனையும் செய்வதுமின்றி, செய்விப்பதுமின்றி இன்புற்றிருக்கின்றான்' (5-13) எனும் கூற்றுக்கு விதிவிலக்குக் கூற எவனொருவனாலும் இயலாது. ஆகவே சந்நியாஸம், தியாகம் என்பவற்றினிடையே உள்ள வேறுபாடுகள், கர்மத்தில் உரிமையுள்ளவர்களுக்கு மட்டுமே உரியவையாகும். மாறாக உண்மை உணர்ந்த ஞானிகளுக்கோ எல்லாக் கர்மங்களையும் துறப்பதாகிய ஞான நிலையில்தான் அதிகாரமேயன்றி பிறவற்றிலன்று. ஆகவே அவர்களுக்கு இவ்வேறுபாடுகள் உரியவையன்று. இதனை நாங்கள் 2.21லும் மூன்றாம் அத்தியாயத்தின் ஆரம்பத்திலும் உறுதி செய்துள்ளோம்.

இனி, இம்மாறுபட்டக் கொள்கைகளில்,

निश्चयं श्रृणु मे तत्र त्यागे भरतसत्तम ।
त्यागो हि पुरुषव्याघ्र त्रिविधः सम्प्रकीर्तितः ॥ ४॥

நிஶ்சயம் ஶ்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம ।
த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்தித: ॥ 4॥

*பரதரிற் சிறந்தோனே, மனிதப் புலியே, அதில் தியாகத்தைப் பற்றிய எனது நிச்சயத்தைக் கேள். தியாகம் மூவகையாகக் கூறப்படுகிறது.*

பரதரிற் சிறந்தோனே. தியாகம், சந்நியாஸம் என்னும் மாறுபட்டக் கொள்கைகளின் நிச்சயத்தை எனது கூற்றின் மூலம் அறிவாயாக. இதிலிருந்து தியாகம், சந்நியாஸம் என்பவற்றின் பொருள் ஒன்றுதான் என உறுதி செய்யப்படுகின்றது. தியாகம் எனப்படும் துறவு தாமஸம் முதலிய குணங்களால் மூவகைப்படும் என்று சாத்திரங்களில் மிகத் தெளிவாகக் கூறப்பட்டுள்ளது. தியாகம், சந்நியாசம் என்னும் சொற்களால் கூறப்படுவதும், தாமஸம் முதலிய குணங்களால் மூவகைப்படுவதுமாகியத் துறவு என்பது ஆத்மாவை அறியாத, கர்மத்தில் உரிமையுள்ளவனுக்கு மட்டுமே உரியதாகுமேயன்றி உண்மை உணர்ந்தவனுக்கு உரியதாகாது. இதிலுள்ள உண்மை என்னவென்று என்னைத் தவிர வேறொருவனால் எடுத்தியம்ப இயலாது. ஆகவே சாத்திரத்தின் உண்மை உபதேசத்தைப் பற்றிய எனது நிச்சயத்தை என்னவென்று அறிவாயாக.

அந்த நிச்சயம் யாது? பகவான் கூறுகிறார்:

**यज्ञदानतपःकर्म न त्याज्यं कार्यमेव तत्**
**यज्ञो दानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥५॥**

**யஜ்ஞதானதப:கர்ம ந த்யாஜ்யம் கார்யம் ஏவ தத் ।**
**யஜ்ஞோ தானம் தபஶ்சைவ பாவனானி மனீஷிணாம் ॥ 5॥**

***வேள்வி, தானம், தவம் என்னும் கர்மங்களை விட்டு விடக்கூடாது. வேள்வியும், தானமும், தவமுமே விவேகிகளுக்கு பரிசுத்தமளிப்பவை.***

வேள்வி, தானம், தவம் என்னும் மூவகைக் கர்மங்களை விட்டுவிடக் கூடாது. அவசியம் செய்தல் வேண்டும். ஏன்? ஏனென்றால் அவை பயனை எதிர்பாராத விவேகிகளுக்குப் பரிசுத்தத்தைச் செய்கின்றன.

**एतान्यपि तु कर्माणि सङ्गं त्यक्त्वा फलानि च ।**
**कर्तव्यानीति मे पार्थ निश्चितं मतमुत्तमम् ॥६॥**

**ஏதான்யபி து கர்மாணி ஸங்கம் த்யக்த்வா பலானி ச**
**கர்தவ்யாநீதி மே பார்த்த நிஸ்சிதம் மதம் உத்தமம் ॥ 6॥**

***ஆனால் பார்த்தா! இக்கர்மங்களைப் பற்றின்றி, பயன் வேண்டாது செய்தல் வேண்டும் என்பது எனது நிச்சயமான உயர்ந்த கொள்கையாகும்.***

பரிசுத்தத்தைச் செய்கின்ற வேள்வி, தானம், தவம் என்னும் இக்கர்மங்களைப் பற்றின்றி (நானே கர்த்தாவாக இருந்து செய்கின்றேன் என்னும் தன் முனைப்பு இன்றி) பயன் கருதாது செய்ய வேண்டும் என்பது எனது நிச்சயமான உயர்ந்த கொள்கையாகும்.

'தியாகத்தைப் பற்றிய எனது நிச்சயத்தைக் கேட்பாயாக' (18.4) என்று கூறி 'இந்தக் கர்மங்களை அவசியம் செய்தல் வேண்டும்' என்பதற்கு அவை பரிசுத்தத்தைச் செய்கின்றன என்ற காரணத்தைக் கூறியதெல்லாம், 'இதுவே எனது நிச்சயமான உயர்ந்த கொள்கை' என்று ஏற்கெனவே கூறப்பட்ட விஷயத்தை முடித்து வைப்பதற்குத் தானேயொழிய புதியதோர் விஷயத்தை ஆரம்பித்து வைப்பதற்கல்ல. காரணம் 'இந்தக் கர்மங்களையும்' என்றது சற்று முன்பு பேசப்பட்ட விஷயத்தைத்தான் குறிப்பிடுகின்றது. 'அபி' (இவற்றையும்) என்னும் சொல்லுக்கு இத்தகையக் கர்மங்களின் மீது பற்று வைத்துப் பயன் கருதி செய்தால் அவை பந்தப்படுத்தும் என்றும் ஆகவே முக்தியை நாடுவோன் எந்தவொரு பற்றுமின்றி அவற்றைச் செய்ய வேண்டும் என்று பொருளாகும். மாறாக, அபி' (இவற்றையும்) என்னும் சொல் பிற செயல்களை (வேள்வி, தானம், தவம் இவற்றைத் தவிர) குறிக்கப் பயன்படுத்தப்படவில்லை.

ஆனால் வேறு சிலரோ, நித்திய கர்மங்களுக்குப் பயன் இல்லை. ஆதலினால், 'பற்றையும், பயன்களையும் விட்டொழித்து' என்று கூறுவதில் பொருளில்லை என்றும் அபி' (இவற்றையும்) என்னும் சொல் நித்ய கர்மங்களிலிருந்து வேறுபட்டக் காம்ய கர்மங்களையும் செய்தல் வேண்டும் என்று குறிப்பிடுவதாகவும், அப்படிக் காம்ய கர்மங்களைச் செய்யும் பொழுது நித்யக் கர்மங்களான வேள்வி, தானம், தவம் இவற்றைப் பற்றிக் கூறவும் வேண்டுமோவென்று விளக்கமளிக்கின்றனர்.

மேற்கூறிய விளக்கம் தவறாம். காரணம் நித்திய கர்மங்களுக்கும் பயனுண்டு. 'வேள்வி, தானம், தவம் முதலியவை பரிசுத்தம் செய்பவை' என்று கூறப்பட்டிருப்பதே இதற்கு ஆதாரமாகும். முக்தியை நாடுவோன், நித்தியக் கர்மங்கள் பந்தத்திற்குக் காரணம் என்று அவற்றைவிட்டு விட விரும்பும் பொழுது அவன் காம்ய கர்மங்களை எவ்வாறு செய்தல் கூடும்? 'காம்ய கர்மம் மிகவும் தாழ்ந்தது' என்று இகழ்ந்துரைக்கப்பட்டுள்ளதாலும், (2.49) 'வேள்வியின் பொருட்டு' (3.9) என்று காம்ய கர்மங்கள் பந்தத்திற்குக் காரணமென்று நிர்ணயிக்கப்பட்டுள்ளதாலும், 'வேதங்கள் முக்குணங்களைப் பற்றியவை' (2.45) 'வேள்விகளால் என்னை வழிபட்டு சோமபானத்தால் பாவம் தேய்ந்தவர்களாய்' (9.20) என்றும், 'புண்ணியம் தீர்ந்ததும், மனித உலகில் புகுகின்றனர்.' (9.21) என்றும், காம்ய கர்மங்கள் பேசப்பட்டுள்ளமையினாலும், காம்ய கர்மங்கள் நிச்சயம் பந்தப்படுத்தும் என்று அறுதியிட்டு உறுதியாக உரைத்துள்ளமையினாலும், காம்ய கர்மங்கள் வெகுதூரத்திற்குத் தள்ளி வைக்கப்பட்டுள்ளன. ஆகவே 'அபி' (இவற்றையும்) என்பது காம்ய கர்மங்களைக் குறிப்பதன்று.

ஆகவே கர்மத்திலே உரிமையுடையவனாய், பந்தத்தினின்று விடுபட விரும்பும் அஞ்ஞானிக்கு,

नियतस्य तु संन्यासः कर्मणो नोपपद्यते ।
मोहात्तस्य परित्यागस्तामसः परिकीर्तितः ॥ ७॥

**நியதஸ்ய து ஸந்ந்யாஸ: கர்மணோ நோபபத்யதே**
**மோஹாத்தஸ்ய பரித்யாகஸ்தாமஸ: பரிகீர்த்தித: ॥ 7॥**

*நித்ய கர்மங்களை விட்டு விடுதல் தகாது. மதிமயக்கத்தால் அவற்றை விடுதல் தாமஸம் எனக் கூறப்படுகின்றது.*

அஞ்ஞானிக்குப் பரிசுத்தத்தைச் செய்வதால், அவசியம் செய்யப்பட வேண்டிய நித்ய கர்மங்களை விட்டுவிடுதல் தகாது. மதிமயக்கத்தின் காரணமாக அவற்றைத் துறப்பது முரணாகும். ஆகவே மதிமயக்கத்தின் காரணமாகத் துறப்பது தாமஸமாகும். மதிமயக்கம் என்பது தமோ குணமாதலின்.

மேலும்,

दु:खमित्येव यत्कर्म कायक्लेशभयात्त्यजेत् ।
स कृत्वा राजसं त्यागं नैव त्यागफलं लभेत् ॥ ८॥

**து:க்கமித்யேவ யத்கர்ம காய க்லேஶபயாத்த்யஜேத்**
**ஸ க்ருத்வா ராஜஸம் த்யாகம் நைவ த்யாகபலம் லபேத் ॥ 8॥**

*துன்பம் என்றே கருதி மெய்வருத்தத்துக்கு அஞ்சி எந்தக் கர்மத்தை ஒருவன் விடுகின்றானோ அவன் ராஜஸமானத்துறவை மேற்கொண்டு துறவின் பயனைப் பெறுவதில்லை.*

மெய்வருத்தம் - உடல் துன்பம் - கருதி ஒருவன் கர்மத்தைத் துறப்பானாகில் அது ராஜஸத் துறவாகும். அதாவது ரஜோ குணத்தின் விளைவாகும். அவன் துறவின் பயனை அதாவது ஞானம் கைவரப் பெற்று எல்லாக் கர்மங்களையும் துறத்தலின் பயனாகிய முக்தியை அடையமாட்டான்.

சாத்விகத் துறவு என்றால் என்ன? பதில் பின்வருமாறு:

कार्यमित्येव यत्कर्म नियतं क्रियतेऽर्जुन ।
सङ्गंत्यक्त्वा फलं चैव स त्याग: सात्त्विको मत: ॥ ९॥

**கார்யமித்யேவ யத்கர்ம நியதம் க்ரியதே(அ)ர்ஜுன**
**ஸங்கம்த்யக்த்வா பலம் சைவ ஸ த்யாக: ஸாத்த்விகோ மத: ॥ 9॥**

*செய்யத்தக்க நித்தியக் கருமத்தை அறிந்து அதில் பற்றையும் பயனையும் துறந்து, எது செய்யப்படுகின்றதோ, அர்ஜுனா! அது சாத்விகத் துறவு எனப்படும்.*

நித்தியக் கர்மங்களுக்குப் பயனுண்டு என்பதற்குப் பகவானின் கூற்றையே நாம் ஆதாரமாகக் கூறியுள்ளோம். அல்லது நித்திய கர்மங்களுக்குச் சுருதிகளில் பயன் கூறப்படவில்லை என்ற போதிலும் அது செய்பவனைப்

பரிசுத்தப்படுத்துகிறது என்னும பயனையும் அதைச் செய்யாததினால் விளையும் பாவத்தைப் போக்குகின்றது என்னும் பயனையும் அது தனக்கு நல்குகின்றது என்று அஞ்ஞானி கருதுகிறான். அவனது அந்த எண்ணத்தையும் பகவான் இச்சுலோகத்தில் நீக்க வேண்டும் என்கிறார். அதனால்தான் 'பற்றையும் பயனையும் துறந்து....' என்று கூறுகிறார். இவ்வாறு பற்றையும், பயனையும் துறப்பது சாத்விகத் துறவாகும். அதாவது சத்துவ குணத்தினாலுண்டாகும் துறவாகும்.

மறுப்பு : கர்ம சந்நியாஸம் மற்றும் தியாகம் மூவகையானது என்று கூறப்படுகிறது. அவற்றுள் தாமஸ, ராஜஸ துறவுகள் பற்றி ஏற்கெனவே கூறப்பட்டு விட்டது. அப்படியென்றால் பற்றையும் பயனையும் துறப்பது எப்படி மூன்றாவதாகக் கூறப்படுகின்றது? இது, மூன்று பிராமணர்கள் வந்தனர், அவர்களில் இருவர் ஆறு சாத்திரங்கள் அறிந்தவர்கள், மூன்றாவது ஆள் க்ஷத்திரியன் என்று கூறுவது போன்றதாகும்.

பதில் : இது தவறன்று. மேலே கூறியது துறவின் பெருமையைப் பற்றிப் பொதுவாகக் கூறியதாகும். கர்மத் துறவிற்கும், பயன் மீது ஆசையைத் துறப்பதற்குமிடையே துறவு என்பது பொதுவாக இருக்கின்றதன்றோ. எனவே கர்மத் துறவை ராஜஸத் துறவு, தாமஸத் துறவு என்று இகழ்ந்துரைக்கும் பொழுது கர்மப் பயன் மீதான ஆசையைத் துறப்பது சாத்விகத் துறவாகப் பாராட்டப்படுகின்றது. அதனால் தான் 'அது சாத்விகத் துறவு' எனப்படும் என்று கூறப்பட்டுள்ளது.

கர்மத்தில் உரிமையுள்ள ஒருவனின் மனம், அவன் அக்கர்மத்தைப் பற்றின்றியும், பயன்கருதாமலும் செய்யும்பொழுது கலக்கமடைவதில்லை. மாறாகப் பரிசுத்தமடைகிறது. இவ்வாறு பரிசுத்தமும், தெளிவும் பெற்றவுடன் அது ஆத்மாவைப் பற்றிச் சிந்திக்கும் தகுதியுடைத்தாகின்றது. இவ்வாறு நித்தியக் கர்மங்களைச் செய்வதின் மூலம் மனத் தெளிவு பெற்று ஆத்ம ஞானம் பெறத் தகுதியுடையவனாக இருக்கும் அவனுக்கு அந்த ஆத்ம ஞானம் எவ்வாறு வருகின்றது அதனைப் பகவான் இப்போது கூறுகிறார்.

**न द्वेष्ट्यकुशलं कर्म कुशले नानुषज्जते ।**
**त्यागी सत्त्वसमाविष्टो मेधावी छिन्नसंशय: ॥१०॥**

**ந த்வேஷ்ட்யகுஶலம் கர்ம குஶலே நானுஷஜ்ஜதே ।**
**த்யாகீ ஸத்த்வஸமாவிஷ்டோ மேதாவீ சின்னஸம்ஶய: ॥ 10॥**

***தியாகியும், சத்துவம் நிறைந்தவனும், அறிவுடையவனும் ஐயமற்றவனுமாகிய ஒருவன் நலம் பயக்காத கர்மத்தை வெறுப்பதில்லை, நலம் பயக்கும் கர்மத்தை விரும்புவதுமில்லை.***

தியாகி நலம் பயக்காத கர்மத்தை - உடலைக் கொடுப்பதின் மூலம் சம்சாரத்திற்குக் காரணமாகிய காம்ய கர்மத்தை - வெறுபப்தில்லை.

'வெறுப்பதில்லை' என்றால் அப்படிப்பட்டக் கர்மத்தைத் தவிர்க்க விரும்புவதில்லை என்று பொருளாகும். 'விரும்புவதுமில்லை' என்றால், 'மனத்தைப் பரிசுத்தம் செய்வது, ஞானமருள்வது, உறுதியளிப்பது இவற்றின் மூலம் முக்திக்குக் காரணமாக இருப்பது' என்று நித்திய கர்மத்தைச் செய்ய விரும்புவதில்லை என்று பொருளாகும். அப்படிப்பட்ட இவன் யார்? பற்றையும், பயனையும் துறந்து நித்திய கர்மத்தைச் செய்பவன் எவனோ அவன் தான் அந்தத் 'தியாகிதான்' இவன். நலம் பயக்காத கர்மத்தை இவன் எப்போது வெறுப்பதில்லை? அங்ஙனமே நலம் பயக்கும் கர்மத்தை இவன் எப்போது விரும்புவதில்லை? ஆத்மா அநாத்மாவைப் பகுத்தறியும் உணர்வைத் தரும் சத்துவ குணம் வியாபிக்கும்பொழுது இவ்வாறு செய்கிறான். அப்போது அவன் ஆத்மஞானம் என்னும் அறிவுடையவனாகிறான். அறிவு பெறுவதினால் அறியாமையினால் உண்டாகும் ஐயம் நீங்கப் பெறுகிறான். அதாவது ஆத்மவடிவில் (தன்னிலையில்) நிற்பதுதான் முடிவான நலம் பயக்கும் என்னும் உறுதியினால் ஐயம் நீங்கப் பெறுகிறான்.

கர்மத்தில் உரிமையுள்ளவன் இவ்வாறு கர்ம யோகத்தால் தன்னைப் படிப்படியாகத் தூய்மை செய்து கொள்கிறான். கர்மங்களற்றதும், பிறப்பு முதலியவை அற்றதுமான ஆத்மாவே தான் என்று உணர்ந்து கொள்கிறான். 'அவன் எல்லாக் கர்மங்களையும் மனத்தால் துறந்து, எதையும் செய்யாதவனாகவும், செய்விக்காதவனாகவும்' (5.13) கர்மமற்ற நிலையாகிய ஞான யோகத்தை பெறுகிறான். இவ்வாறு முற்கூறிய கர்மயோகத்திற்குப் பயன் இச்சுலோகத்தில் கூறப்படுகிறது.

இதற்கு மாறாகக் கர்மத்தில் உரிமையுள்ளவனாய் உடலையே ஆத்மாவாகக் கருதி உடலைச் சுமந்து கொண்டிருப்பவனாகிய அஞ்ஞானியோ, 'ஆத்மாவே கர்த்தா' என்னும் தவறான நம்பிக்கையின் காரணமாக 'நானே கர்த்தா' என்னும் உறுதியான கருத்துடையவனாக இருக்கிறான். இப்படிப்பட்டவனுக்குக் கர்மங்களை முற்றிலும் துறத்தல் சாத்தியமாகாது ஆதலினால் விதித்தக் கர்மங்களைப் பயனைத் துறந்து செய்வதற்கு மட்டுமே உரிமையுடையவனாகிறான். அக்கர்மங்களைத் துறப்பதிலன்று. இக்கருத்துப் பகவானால் பின்வருமாறு கூறப்படுகிறது.

न हि देहभृता शक्यं त्यक्तुं कर्माण्यशेषतः ।
यस्तु कर्मफलत्यागी स त्यागीत्यभिधीयते ॥११॥

**ந ஹி தேஹப்ருதா ஶக்யம் த்யக்தும் கர்மாண்யஶேஷத: ।**
**யஸ்து கர்மபலத்யாகீ ஸ த்யாகீத்யபி தீயதே ॥ 11॥**

***உடல் பெற்றவனால் கர்மங்களை முற்றிலும் துறத்தல் இயலாது. எனினும் கர்மப் பயனை எவன் துறக்கின்றானோ அவனே 'தியாகி' எனப்படுகிறான்.***

உடலையே ஆத்மாவாகக் கருதுபவன் - உடலை சுமப்பவன் - அவனே உடல் பெற்றவனாவான். அதே சமயம் 'எவன் இதனை அழிவற்றதாக' (2.21) என்றெல்லாம் கூறப்பட்ட விவேகி கர்மத்தில் உரிமையுள்ளவன் அல்லன். அதனால் உடல் பெற்ற அந்த அஞ்ஞானியால் கர்மங்களை முற்றிலும் துறந்து விட இயலாது. ஆகவே கர்மத்திற்கு உரியவனாகிய அந்த அஞ்ஞானி நித்திய கர்மங்களைச் செய்கையில், கர்மத்தின் பயன் மீது ஆசையைத் துறந்தானென்றால் அவன் கர்மியாக இருந்த போதிலும் 'தியாகி' என்று கூறப்படுகிறான். இவ்வாறு கூறியது அவனைப் புகழும் பொருட்டென்க. ஆகவே எல்லாக் கர்மங்களையும் துறப்பதென்பது உடலைச் சுமக்காதவனாகவும், உடலே ஆத்மா என்று கருதாதவனாகவும் உண்மையைக் காண்பவனாகவும் இருப்பவனால் தான் முடியும்.

அடுத்து எல்லாக் கர்மங்களையும் துறப்பதனால் எப்பயன் எய்தப் பெறுகிறது? பின்வருமாறு கூறப்படுகிறது.

**अनिष्टमिष्टं मिश्रं च त्रिविधं कर्मणः फलम् ।**
**भवत्यत्यागिनां प्रेत्य न तु संन्यासिनां क्वचित् ॥१२॥**

**அனிஷ்டமிஷ்டம் மிஶ்ரம் ச த்ரிவிதம் கர்மண: பலம் ।**
**பவத்யத்யாகினாம் ப்ரேத்ய ந து ஸந்ந்யாஸினாம் க்வசித் ॥ 12॥**

***தீயது, நல்லது, இரண்டும் கலந்தது, எனும் கர்மத்தின் மூவகைப் பயனும் தியாகிகள் அல்லாதவர்க்கு உண்டாகின்றன. துறவிகளுக்கு ஒருபோதும் அவை உண்டாவதில்லை.***

'தீயது' என்பது நரகம், விலங்கிடை பிறத்தல் முதலிய பயன்களைக் குறிப்பதாகும். 'நல்லது' என்பது தேவர்களிடைப் பிறத்தலாகும். 'கலந்தது' என்பது நல்லதும், தீயதும் கலந்திருக்கும் மனிதப் பிறப்பைக் குறிக்கின்றது. கர்மத்தின் நன்மை, தீமைப் பயன்கள், புறத்தேயுள்ள துணைப் பொருள்களின் (கர்த்தா, கருவி போன்றவற்றின்) செயல்களின் மூலம் உண்டாவதாய், அறியாமையின் விளைவாய், பெரிய மயக்கத்தைத் தருவதாய், இந்திர ஜாலத்திற்கு நிகராய் அகத்திலிருக்கும் ஆத்மாவிற்கு மிக அருகிலிருப்பதுபோல தோன்றுகின்றது. 'பலம்' என்னும் சொல் சாரமற்று மறைந்து போகின்ற ஒன்றைக் குறிப்பிடுகின்றது. தியாகிகள் அல்லாதவர்களுக்கு பரமார்த்த சந்நியாஸிகளல்லாத (கர்மப் பயனைத் துறந்தாலும் கர்மத்தைத் துறக்காத) கர்மிகளான அஞ்ஞானிகளுக்கு இம்மூவகைப் பயனும் அவர்கள் மரணத்திற்குப் பின் உண்டாகின்றது. அதேசமயம் பரமார்த்த சந்நியாஸிகளான பரமஹம்சத் துறவிகளுக்கு அவர்கள் ஞானயோகத்தில் நிலைபெற்றிருப்பதால் மேலே கூறப்பட்டிருக்கும் பயன் எக்காலத்தும் உண்டாவதில்லை. மெய்யறிவில் நிலைத்தலானது உண்மையில் சம்சார விதையை ஒருபோதும் அழிக்கத் தவறுவதில்லை. ஆகவே உண்மையைக் காண்பவனுக்கு மட்டுமே கர்மங்கள் அனைத்தையும் முற்றிலும் துறத்தல் சாத்தியமாகின்றது. செயலும்,

செய்பவனும், பயனும் ஆத்மாவின் மீது அறியாமையினால் ஏற்றப்பட்டுள்ளன. எனவே செயல், செய்பவன், (செய்கின்ற) துணைப் பொருள்களாகிய உடல் போன்றவற்றை ஆத்மாவாகக் கருதும் அஞ்ஞானிக்குக் கர்மமனைத்தையும் துறத்தல் இயலாது.

இவ் உண்மை பின்வரும் சுலோகத்தில் கூறப்படுகிறது.

**पञ्चैतानि महाबाहो कारणानि निबोध मे ।**
**साङ्ख्ये कृतान्ते प्रोक्तानि सिद्धये सर्वकर्मणाम् ॥१३॥**

**பஞ்சைதானி மஹாபாஹோ காரணானி நிபோத மே ।**
**ஸாங்க்யே க்ருதாந்தே ப்ரோக்தானி ஸித்தயே ஸர்வகர்மணாம் ॥ 13॥**

*பெருந்தோளா! கர்மங்களின் முடிவாகிய சாங்கியத்தில் எல்லாக் கர்மங்களின் நிறைவேற்றத்திற்கும் கூறப்பட்டுள்ள ஐந்து காரணங்களையும் என்னிடமிருந்து அறிவாயாக.*

கர்மங்களை நிறைவேற்றுவதற்கு இனி கூறப் போகின்றக் காரணங்களை என்னிடமிருந்து அறிவாயாக என்று கூறியது அர்ஜுனனின் கவனத்தைத் திருப்பவும், அப்பொருள்களின் வேற்றுமையை எடுத்துரைக்கவுமேயாம். அவை இப்போது பாராட்டப்படுகின்றன. வேதாந்தமே சாங்கியமாகும். அதில் அறியப்பட வேண்டிய பொருள்கள் ஏராளமுள்ளன. 'க்ருத-அந்தம்' அதாவது கர்மத்தின் முடிவு. 'எங்கும் பரந்து பெருகியுள்ள நீர் நிலையில் ..... ' (2.46) மற்றும் 'பார்த்த! மீதமின்றி எல்லாக் கர்மங்களும் ஞானத்தில் முடிவு பெறுகின்றன' (4.33) என்பவையெல்லாம் ஆத்ம ஞானம் பிறந்தவுடன் கர்மங்களனைத்தும் ஒழிந்து போதலைக் காட்டுகின்றன. ஆகவே ஆத்ம ஞானத்தைத் தருகின்ற அந்த வேதாந்தத்தில் எல்லாக் கர்மங்களும் முடிவு பெறுவதற்கானக் காரணங்கள் கூறப்பட்டுள்ளன.

அக்காரணங்கள் யாவை? பதில் பின்வருமாறு:

**अधिष्ठानं तथा कर्ता करणं च पृथग्विधम् ।**
**विविधाश्च पृथक्चेष्टा दैवं चैवात्र पञ्चमम् ॥१४॥**

**அதிஷ்டானம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம் ।**
**விவிதாஶ்ச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ॥ 14॥**

***இடம், கர்த்தா, பல்வகைக் கருவிகள், பல்வகைச் செயல்கள், இவற்றில் ஐந்தாவது தெய்வமும்.***

இடம் என்பது விருப்பு, வெறுப்பு, இன்ப, துன்பம், அறிவு முதலியன வெளிப்படுவதற்கு இடமாயிருக்கும் உடலாகும். கர்த்தா என்பவன் வரையறைக்குட்பட்டவன், கர்மப் பலனை அனுபவிப்பவன் ஆவான்.

பல்வகைக் கருவிகள் என்பன ஓசை முதலியவற்றை உணர்வதற்குரிய செவி முதலிய புலன்களாகும். அவை பன்னிரண்டாகும். (உணர்புலன்கள் 5; செயற் புலன்கள் 5, மனம் 1, புத்தி 1) பல்வகைச் செயல்கள் என்பவை உள்மூச்சு, வெளிமூச்சு போன்றவற்றைக் குறிப்பிடுகின்றது. இவற்றில் தெய்வம் என்பது ஐந்தாவதாகும். கண் முதலிய புலன்கள் செயல்படுவதற்குத் துணையாயிருக்கும் சூரியன் போன்ற தேவர்கள்.

शरीरवाङ्मनोभिर्यत्कर्म प्रारभते नरः ।
न्याय्यं वा विपरीतं वा पञ्चैते तस्य हेतवः ॥१५॥

**ஶரீரவாங்மனோபிர்யத்கர்ம ப்ராரபதே நர: ।**
**ந்யாய்யம் வா விபரீதம் வா பஞ்சைதே தஸ்ய ஹேதவ: ॥ 15॥**

*மனிதன் உடலாலும் வாக்காலும், மனத்தாலும், நேரான அல்லது நேர் எதிரான எக்கர்மத்தைச் செய்யினும், அதற்கு இவ் ஐந்தும் காரணங்களாம்.*

ஒருவன் (மெய், மொழி, மனம் எனும்) மூன்று கருவிகளால் நேரான, அதாவது சாத்திரத்திற்கு இயைந்த தர்மமானச் செயல்கள், நேர் எதிரான அதாவது சாத்திரத்திற்கு எதிரான அதர்மச் செயல்கள் எது செய்யினும் அதற்கு, மேலே கூறப்பட்டுள்ளவையே காரணங்களாகும். உயிர் வாழ்தலின் காரணமாக உடலில் உண்டாகும் இமைகளை மூடி திறத்தல் போன்ற அனிச்சைச் செயல்கள் கூட முற்பிறவியில் செய்யப்பட்ட தர்ம, அதர்ம அதாவது நல்வினை, தீவினைகளின் பயனால் விளைந்தவையேயாகும். அதனால் அச்செயல்கள் நேரானது, நேர் எதிரானது என்று அறிந்து கொள்ளப்படுகின்றன. இச்செயல்களுக்கெல்லாம் மேலே கூறப்பட்டுள்ள ஐந்துமே காரணங்களாகும்.

மறுப்பு : இப்போது கர்மமானது ஐந்து காரணங்களால்தான் செய்யப்படுகின்றது இல்லையா. அப்படியாயின் மெய், மொழி, மனம் இவற்றால் கர்மம் செய்யப்படுகின்றது என்று ஏன் கூறவேண்டும்?

பதில் : இது தவறல்ல. விதிக்கப்பட்ட அல்லது விலக்கப்பட்ட எல்லாக் கர்மங்களும் மெய் முதலியவையாகிய மூன்றில் ஒன்றினாலேயே பெரும்பாலும் செய்யப்படுகின்றன. உயிர் வாழ்தலின் குறிகளாகிய பார்த்தல், கேட்டல் போன்றவையும் மெய் முதலியவற்றிற்குத் துணையானவையாகும், இதன் காரணமாகவே எல்லாக் கர்மங்களும், மூவகையாகப் பிரிக்கப்பட்டு மெய்மொழி மனத்தால் செய்யப்படுகின்றன என்று கூறப்படுகின்றன. மேலும் பயன் அனுபவிக்கப்படும் பொழுதும் அப்பயன் இம்மூன்றின் மூலமே முக்கியமாக அனுபவிக்கப்படுகின்றன. அதனால் ஐந்தும் காரணங்கள் என்று கூறப்பட்டதில் எந்தவொரு முரண்பாடுமில்லை.

तत्रैवं सति कर्तारमात्मानं केवलं तु यः ।
पश्यत्यकृतबुद्धित्वान्न स पश्यति दुर्मतिः ॥१६॥

**தத்ரைவம் ஸதி கர்த்தாரம் ஆத்மானம் கேவலம் து ய: ।**
**பஶ்யத்யக்ருதபுத்தித்வான்ன ஸ பஶ்யதி துர்மதி: ॥ 16॥**

***இது இவ்வாறிருக்க தூய்மையான ஆத்மாவைக் கர்த்தாவாகப் புத்திக் குறைவால் எவன் காண்கிறானோ அந்த மூடன் உண்மையைக் காண்பதில்லை.***

இது என்பது இப்போது பேசப்படும் விஷயத்தைக் குறிப்பதாகும். இவ்வாறிருக்க என்பது கர்மமானது மேலேகூறப்பட்டுள்ள ஐந்து காரணங்களின் ஒத்துழைப்பினாலேயே செய்யப்படுகின்றன என்று குறிப்பிடுகின்றது. 'இது இவ்வாறிருக்க' என்பது ஒருவன் ஏன் புத்திக்குறைவுடையவனாக இருக்கிறான் என்னும் காரணத்தைக் குறிப்பிடுவதற்காக இங்கு கூறப்பட்டுள்ளது. கர்மமானது மேற்கூறிய ஐந்து காரணங்களின் ஒத்துழைப்பினால் செய்யப்படுவதாயிருக்க, 'நான் தான் கர்த்தா' என்று அஞ்ஞானி அறியாமையின் காரணமாகப் பரிசுத்த ஆத்மாவைக் கர்த்தாவாகக் காண்கிறான். ஏன் இவ்வாறு காண்கிறான்? வேதாந்தம், குரு உபதேசம், நியாயம், போன்வற்றினால் அவனது புத்தி சீர்திருத்தப்படவில்லை ஆதலின் அவன் இவ்வாறு காண்கிறான். மேலும் ஆத்மாவை உடம்பினின்று வேறாகக் காண்பவன் கூட ஆத்மாவைக் கர்த்தாவாகக் கருதினான் என்றால் அவனும் கூடப் புத்தி சீர்திருத்தம் பெறாதவனேயாவான். அவன் ஆத்மா மற்றும் கர்மத்தின் உண்மைத் தன்மையை அறிந்தவனில்லை என்று பொருளாகும். எனவே அவனது புத்தியானது அவன் பிறப்பு, இறப்பு சுழற்சியில் தொடர்ந்து இருப்பதற்குக் காரணமாக இருப்பதால் அது தீயது, குறைவுடையது, நிந்தனைக்குரியதாகும். திமிரம் என்னும் கண்நோய் உள்ளவனுக்கு ஒரு சந்திரன் பலவாகத் தெரிவது போன்று அல்லது மேகங்கள் ஓடும்பொழுது சந்திரன் ஓடுவதாகக் காண்பது போன்று அல்லது வண்டியில் அமர்ந்திருப்பவன் வண்டி ஓடும்பொழுது தான் ஓடுவதாகக் காண்பது போன்று அவன் காண்பவனாயினும் உண்மையைக் காண்பவனில்லை.

யாருடைய புத்தி சரியானது? யார் நேராகக் காண்கிறான்? பதில் வருமாறு:

**यस्य नाहङ्कृतो भावो बुद्धिर्यस्य न लिप्यते ।**
**हत्वापि स इमाँल्लोकान्न हन्ति न निबध्यते ॥ १७॥**

**யஸ்ய நாஹங்க்ருதோ பாவோ புத்திர்யஸ்ய ந லிப்யதே**
**ஹத்வாபி ஸ இமான்லோகான்ன ஹந்தி ந நிபத்யதே ॥ 17॥**

***நான் என்னும் அகந்தை எவனிடம் இல்லையோ, எவனுடைய புத்தி கறைபடிவதில்லையோ அவன் இவ் உலகத்தாரைக் கொன்றபோதிலும் கொல்வதுமில்லை, பந்தப்படுவதுமில்லை.***

வேதங்களாலும், ஆச்சாரிய உபதேசங்களாலும் நியாயங்களாலும் சீர்திருத்தப்பட்டப் புத்தியுள்ளவனிடம் நான் என்னும் அகந்தை அதாவது 'நான் கர்த்தா' என்னும் எண்ணம் உண்டாவதில்லை. அவித்யையினால் ஆத்மாவிற்குக் கற்பிக்கப்பட்ட உடல் முதலிய இவ் ஐந்துதான் கர்மங்கள் அனைத்தையும் செய்பவை. நான் அல்லன். நான் அவற்றின் கர்மங்களுக்கு சாட்சியாக இருப்பவன் என்று கருதுகிறான். 'நான் மூச்சற்றவன், மனமற்றவன், பரிசுத்தன், அழிவற்றவன், மேலானவன், தனியன், விகாரமற்றவன்' (மு.உ.2-1-2). அவனுடைய புத்தி - அகக்கரணம் - கறைபடிவதில்லை. 'நான் இதனைச் செய்தேன், அதனால் நரகத்தை அடைவேன்' என்று அது மாசடைவதில்லை. அவனே நற்புத்தியுடையவன். அவனே நேராகக் காண்கிறான். அவன் உலகிலுள்ள உயிர்கள் அனைத்தையும் கொன்றாலும் கூட அவன் கொல்வதில்லை. அதனால் உண்டாகும் பாவமும் அவனைப் பற்றுவதில்லை.

மறுப்பு : இது புகழ்ச்சிக்காகக் கூறப்படினும், 'அவன் கொன்றாலும், கொல்வதில்லை' என்று கூறியது முரணில்லையா?

பதில் : முரணன்று. இது லௌகீகப் பார்வைக்கும், ஆன்மீகப் பார்வைக்கும் இடையிலுள்ள வேறுபாடாகும். லௌகீகப் பார்வையில், உடலை ஆத்மாவாகக் கருதுபவன் 'கொல்பவன் நான்' என்று கருதுகிறான். உண்மையை அடிப்படையாகக் கொண்ட ஆன்மீகப் பார்வையில் பகவான் 'அவன் கொல்வதுமில்லை, பந்தப்படுவதுமில்லை' என்கிறார். இவையிரண்டும் நியாயமானவையே.

மறுப்பு : ஆனால் ஆத்மா, உடல் முதலியவற்றுடன் இணைந்து கர்மத்தை நிச்சயமாகச் செய்கின்றது. காரணம் 'தூய்மையான ஆத்மாவைக் கர்த்தாவாகக் கருதுகிறான்' என்பதில் தூய்மையான என்னும் சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதே.

பதில் : இது குற்றமன்று. காரணம் ஆத்மாவிற்கு இயற்கையாகவே விகாரமில்லை. உடல் முதலியவற்றோடு அது ஒருங்கிணைவது சாத்தியமன்று. விகாரமுடைய ஒன்றிற்குத் தான் பிறவற்றோடு ஒருங்கிணைதல் சாத்தியமாகும். அல்லது ஒருங்கிணைவதினாலன்றோ ஒன்று கர்த்தாவாக முடியும். எனவே தனித்திருப்பது ஆத்மாவின் இயல்பாதலினால் 'தூய்மையான' என்னும் சொல் அவ்வியல்பைக் குறிப்பதற்காகவே பயன்படுத்தப்பட்டிருக்கிறது. மேலும், ஆத்மா விகாரமற்றது என்பது சுருதி, ஸ்மிருதிகளினாலும், நியாயங்களினாலும் நன்கறியப்பட்ட ஒன்றன்றோ. 'இது விகாரமற்றது' (2-25) 'குணங்களால்தான் செயல்கள் செய்யப்படுகின்றன' (3-27) 'உடலினுள் இருப்பதாயினும், செயல் புரிவதில்லை' (13-31) என்று கீதையிலேயே ஒருமுறைக்குப் பலமுறை உணர்த்தப்பட்டுள்ளதே. 'இது சிந்திப்பது போன்றும், அசைவது போன்றும்' (பி.உ.4-3-7) என்று சுருதிகளில் கூறப்பட்டுள்ளதே. நியாயத்தின் அடிப்படையில் கூட ராஜமார்க்கமானது (விவாதத்திற்கு அப்பாற்பட்ட விஷயம்) 'ஆத்மா என்னும் மெய்ப்பொருள் உறுப்புக்களற்றது, பிறிதொன்றைச் சாராதது, விகாரமற்றது' என்று கூறியுள்ளதே. ஆத்மாவிற்கு விகாரம் உண்டு

என்று எடுத்துக் கொண்டால் கூட அதனுடைய விகாரம்தான் அதற்கு ஆகுமே ஒழிய, உடல் முதலியன செய்யும் கர்மங்களுக்கு அது கர்த்தாவாகாது. ஒருவனது செயலானது அதனைச் செய்யாத மற்றொருவனைச் சாராதன்றோ. மேலும் அறியாமையினால் ஒன்று ஒருவன் மீது திணிக்கப்பட்டது என்றால் அது உண்மையில் அவனுடையதாகாது. சிப்பி வெள்ளியாகாது. அல்லது சிறுவர்களால் அறியாமையின் காரணமாக ஏற்றப்பட்ட தளம் அல்லது அழுக்குடைமை, ஆகாயத்திற்குரியதாகாது. அதுபோல் உடல் முதலியவற்றின் விகாரமானது அவற்றிற்குரியதாகுமேயன்றி ஆத்மாவிற்குரியதாகாது. எனவே 'நான் எனும் அகந்தையும், புத்தி கறைபடிதலும் இன்மையினால் ஞானி கொல்வதுமில்லை, பந்தப்படுவதுமில்லை' என்று கூறியது சரிதான்.

'இது கொல்வதுமில்லை, கொல்லப்படுவதுமில்லை' (2-19) என்றும், 'பிறப்பதில்லை' (2-20)என்றும் ஆத்மாவிற்கு விகாரமில்லை என்பதை எடுத்துரைத்து, ஞானிக்குக் கர்மத்தில் அதிகாரமில்லை என்பதை 'எவன் இதனை அழிவற்றதாக' (2-21) என்று நூல் தொடக்கத்தில் சுருக்கமாகக் கூறி, கர்மம் ஒழிதலை ஆங்காங்கே இடையில் பல்வேறு இடங்களில் எடுத்துரைத்து இறுதியில் 'அவன் கொல்வதுமில்லை, பந்தப்படுவதுமில்லை' என்று நூலின் உபதேசங்களை இங்கே ஒருங்கு திரட்டிப் பகவான் முடித்து வைக்கிறார். இதன் காரணமாக உடலுடையோன் என்னும் அகந்தை இன்மையினால், துறவிகள் அறியாமையினாலானக் கர்மங்கள் அனைத்தையும் துறந்து விடுகின்றனர். ஆகவே துறவிகளுக்கு 'தீயது, நல்லது இரண்டும் கலந்தது' (18-12) என்னும் மூவகையானக் கர்மப் பயன்கள் உண்டாவதில்லை என்று கூறியது சரியானதே. இதற்கு மாறாக துறவிகள் அல்லாதவர்க்கு இப்பயன்கள் கண்டிப்பாக உண்டாகும். தவிர்க்க முடியாதவையாகும். கீதையின் சாரமானது இவ்வாறு நிறைவு செய்யப்படுகிறது. எனவே அறிஞர்கள் வேதங்கள் அனைத்தின் சாரமாகிய இந்த உபதேசத்தை உய்த்து உணரவேண்டும். அதற்காகவே நாம் இதனை சாத்திரத்திற்கும், நியாயத்திற்கும் இணங்க ஆங்காங்கே பல்வேறு இடங்களில் பிரித்து விளக்கியுள்ளோம்.

எல்லாக் கர்மங்களையும் தூண்டுவது எது? அது இப்போது விளக்கப்படுகிறது.

**ज्ञानं ज्ञेयं परिज्ञाता त्रिविधा कर्मचोदना ।**
**करणं कर्म कर्तेति त्रिविधः कर्मसङ्ग्रहः ॥१८॥**

**ஜ்ஞானம் ஜ்ஞேயம் பரிஜ்ஞாதா த்ரிவிதா கர்மசோதனா**
**கரணம் கர்ம கர்த்தேதி த்ரிவித: கர்மஸங்க்ரஹ: ॥ 18॥**

***கர்மத்தைத் தூண்டுவது அறிவு, அறியப்படும் பொருள், அறிபவன் என மூவகைப்படும். கர்மம் தங்குமிடமானது, கருவி, செயப்படுபொருள், செய்பவன் என மூவகைப்படும்.***

அறிவு என்பது இங்கு பொதுவாக எல்லாவற்றையும் பற்றிய அறிவாகும். அவ்வாறே அறியப்படும் பொருள் என்பதும் இங்கு எல்லாப் பொருள்களையுமே குறிப்பிடுகின்றது. அறிபவன் என்பவன் அறியாமையின் காரணமாக உபாதிகளையுடையவன், அனுபவிப்பவன் ஆவான். இம்மூன்றும் பொதுவாகக் கர்மங்களைத் தூண்டுபவையாகும். அறிவு முதலிய மூன்றும் ஒருங்கு சேரும்பொழுதுதான் ஒன்றை ஏற்றுக் கொள்வதற்காக அல்லது புறக்கணிப்பதற்காக ஒரு செயலைச் செய்வது சாத்தியமாகும். எனவே கர்மமானது உடல் முதலிய ஐந்தினாலும் செய்யப்படுகிறது, மொழி மனம் மெய் என்னும் வேறுபாடுகளுக்கேற்ப மூன்று வகையாகப் பிரிக்கப்படுகிறது. கருவி முதலிய மூன்றினுள் தங்கி நிற்கிறது. புறக்கருவி என்பது செவி முதலியவையாகும். அகக்கருவி என்பது புத்தி முதலியனவாகும். செயப்படுபொருள் என்பது மிகவும் விரும்பப்படும் பொருள், கர்த்தாவின் செய்கையினால் அடையப்படுவது. செய்பவன் என்பவன் கருவிகளைக் கையாள்பவன், வரையறைகள் என்னும் உபாதிகளையுடையவன். ஆகவே கர்மத்திற்குத் தங்குமிடம் மூவகைப்படும்.

இப்போது கர்மம், கருவி, பயன் என்பவை குணங்களின் வடிவமாக இருப்பதினால் சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் குண்ங்களின் அடிப்படையில் அவற்றின் வேற்றுமைகளை விளக்கத் தொடங்குகிறார்.

**ज्ञानं कर्म च कर्ता च त्रिधैव गुणभेदतः ।**
**प्रोच्यते गुणसङ्ख्याने यथावच्छृणु तान्यपि ॥१९॥**

**ஜ்ஞானம் கர்ம ச கர்த்தா ச த்ரிதைவ குணபேதத: ।**
**ப்ரோச்யதே குணஸங்க்யானே யதாவச்ச்ருணு தான்யபி ॥ 19॥**

*அறிவும், செயலும், செய்பவனும் குண சாத்திரத்தில் குணங்களின் வேறுபாட்டினால் மூவகையாகக் கூறப்படுகின்றது. அவற்றையும் உள்ளபடிக் கேட்பாயாக.*

கர்மம் என்பது செயல், தொழில், வினையாகும். இது விரும்பப்படுவதும், கர்மத்தினால் அடையப்படுவதுமான செயப்படுபொருளைக் குறிக்கும் கலைச் சொல் அல்ல. செய்பவன் என்பவன் கர்மங்களைச் செய்யும் கர்த்தா ஆவான். மூவகை என்பது குணங்களுக்குப் புறம்பான வேறு வேற்றுமை எதுவுமில்லை (அறிவு முதலியவற்றில் குணங்களின் அடிப்படையிலான வேற்றுமை தவிர வேறொன்றுமில்லை) என்பதைக் குறிப்பிடுகின்றது. குணங்களின் வேறுபாட்டினால் என்பது சத்துவம் முதலிய குணங்களின் வேறுபாடுகளைக் குறிப்பிடுகின்றது, குணசாஸ்திரம் என்பது கபிலரால் செய்யப்பட்டச் சாத்திர நூல் ஆகும். இந்நூல் குணங்களைப் பற்றியும், அனுபவிக்கும் ஜீவர்களைப் பற்றியும் அறிந்து கொள்வதற்கு ஆதாரமாகத் திகழ்கிறது. பிரம்மத்தைப் பற்றிய விஷயத்தில் இந்நூல் முரண்படுகிறது என்ற போதிலும் கபிலரைப் பின்பற்றும் அடியவர்கள் குணங்கள் மற்றும் குணங்களின் செயல்களை உணர்த்துவதில்

தேர்ந்தவர்கள் ஆதலினால் இனி கூறப் போகும் விஷயத்தைப் பாராட்டும் முகத்தான் அந்நூலும் இங்கு ஏற்றுக் கொள்ளப்படுகிறது. அதனால் அதில் முரண்பாடு எதுவுமில்லை. அறிவு முதலியவற்றையும், குணங்களின் அடிப்படையிலான அவற்றின் வேற்றுமைகளையும், சாத்திரத்திற்கும், நியாயத்திற்கும் ஏற்பக் கேட்பாயாக. அதாவது கூறப்போகும் விஷயத்தில் மனதை ஒருமுகப்படுத்துவதற்காக என்றிவ்வாறு கூறப்படுகின்றது.

இப்போது அறிவு மூவகைப்படும் என்று கூறுகிறார்.

**सर्वभूतेषु येनैकं भावमव्ययमीक्षते ।**
**अविभक्तं विभक्तेषु तज्ज्ञानं विद्धि सात्त्विकम् ॥ २०॥**

**ஸர்வபூதேஷு யேனைகம் பாவம் அவ்யயம் ஈக்ஷதே**
**அவிபக்தம் விபக்தேஷு தஜ்ஜ்ஞானம் வித்தி ஸாத்த்விகம் ॥ 20॥**

*வேறு வேறாகவுள்ள எல்லாப் பொருட்களிலும், மாறுபாடற்றதாகவும், அழிவற்றதாகவும் இருக்கும் ஒரே பொருளை எதனால் காண்கின்றானோ அந்த அறிவை சாத்துவிகம் என்றறிவாயாக.*

அவ்யக்தம் முதல் அசைவற்றப் பொருள்கள் வரை எல்லாவற்றிலும், ஒரே பொருளை - ஒரே ஆத்மாவை. அழிவற்றது - அது தானாகவோ அல்லது தனது இயல்பினாலோ அழிவற்றதாகும். மாறுபாடற்றது - எந்தவிதமான மாற்றத்திற்கும் ஆளாகாதது. அந்த ஆத்மாவானது வேறு வேறாக இருக்கும் உடல்களினுள் வேறுபாடின்றி இருக்கும். அதாவது வேறுபாடற்ற வானம் போன்று இருக்கும். அத்வைதமான ஆத்மாவைப் பற்றிய அந்த நேரான, மெய்யறிவே சாத்துவிகமாகும்.

தர்க்க சாத்திரம் போன்ற துவைத நூல்கள் ராஜஸமானவை, தாமஸமானவையாகும். அதனால் அவை சம்சாரத்தை நேரடியாக நீக்குவதில்லை.

**पृथक्त्वेन तु यज्ज्ञानं नानाभावान्पृथग्विधान् ।**
**वेत्ति सर्वेषु भूतेषु तज्ज्ञानं विद्धि राजसम् ॥ २१॥**

**ப்ருதக்த்வேன து யஜ்ஜ்ஞானம் நானாபாவான்ப்ருதக்விதான் ।**
**வேத்தி ஸர்வேஷு பூதேஷு தஜ்ஜ்ஞானம் வித்தி ராஜஸம் ॥ 21॥**

*எல்லாப் பொருள்களினுள்ளும், வேறுபட்ட வெவ்வேறான ஆத்மாக்களை எந்த அறிவு அறிகின்றதோ அந்த அறிவு ராஜஸம் என்றறிவாயாக.*

வேறுபட்டப் பல்வேறு உடல்களில் வெவ்வேறான ஆத்மாக்களை எந்த அறிவு அறிகின்றதோ அது ராஜஸமாகும். அதாவது ரஜோ குணத்தினா

லானதாகும். அறிவு தானே அறியாது மாறாக அறிவின் வழியே ஒருவன் அறிகிறான் என்று பொருளாகும்.

यत्तु कृत्स्नवदेकस्मिन्कार्ये सक्तमहैतुकम् ।
अतत्त्वार्थवदल्पं च तत्तामसमुदाहृतम् ॥ २२॥

யத்து க்ருத்ஸ்னவதேகஸ்மின்கார்யே ஸக்தமஹைதுகம் ।
அதந்வார்த்தவதல்பம் ச தத்தாமஸமுதாஹ்ருதம் ॥ 22॥

*ஆனால் எது ஏதோ ஒரு உருவில் (ஒரே உடலில்) அதுவே எல்லாம் என்று நியாயத்திற்கு விரோதமாய், உண்மைக்குப் புறம்பாய், அற்பமாய் பற்றுவைக்கின்றதோ அந்த அறிவு தாமஸம் என்று கூறப்படுகின்றது.*

ஒரே உடலில் அல்லது புறத்திலிருக்கும் ஒரே விக்கிரஹத்தில் அதன் அளவிற்கே ஆத்மா அல்லது ஈசுவரன் இருக்கின்றான். அதற்கு மேல் ஏதுவுமில்லை அதுவே எல்லாம் என்று காணும் அறிவு தாமஸ அறிவாகும். உடலினுள் இருக்கும் ஆத்மா அல்லது ஜீவன் உடல் அளவேயாகும் என்பது நிர்வாண ஜைனர்களின் கொள்கையாகும். கடவுள் கல், மரம் இவற்றினாலான விக்கிரஹம்தான் என்பது வேறுசிலர் கொள்கையாகும். இக் கொள்கைகள் நியாயத்திற்கு விரோதமானவையாகும். அவை உண்மைக்குப் புறம்பானவை. அதனால் அற்பமானவையாகும். அவற்றின் பயன் கூட அற்பமானதேயாகும். இப்படிப்பட்ட அறிவு தாமஸ அறிவாகும். தமோ குணம் நிறைந்த பகுத்தறியும் திறனில்லா உயிர்களிடமே தாமஸ அறிவு காணப்படுகின்றது.

இப்போது கர்மம் எவ்வாறு மூவகைத்து என்பது கூறப்படுகின்றது.

नियतं सङ्गरहितमरागद्वेषतः कृतम् ।
अफलप्रेप्सुना कर्म यत्तत्सात्त्विकमुच्यते ॥ २३॥

நியதம் ஸங்கரஹிதமராகத்வேஷத: க்ருதம் ।
அபலப்ரேப்ஸுனா கர்ம யத்தத்ஸாத்விகமுச்யதே ॥ 23॥

*பயன் கருதாது பற்றுதலின்றி விருப்பு வெறுப்பின்றி செய்யப்படும் நித்தியக் கருமம் எதுவோ அது சாத்துவிகம் எனப்படுகின்றது.*

எக்கருமம் விருப்பு வெறுப்பின்றி பயன் கருதாது, அதன் பயன் மீது பற்றின்றி செய்யப்படுகின்றதோ அந்த நித்தியக் கர்மம் சாத்விகக் கர்மம் என்று கூறப்படுகின்றது.

यत्तु कामेप्सुना कर्म साहङ्कारेण वा पुनः ।
क्रियते बहुलायासं तद्राजसमुदाहृतम् ॥ २४॥

யத்து காமேப்ஸுனா கர்ம ஸாஹங்காரேண வா புன: ।
க்ரியதே பஹுலாயாஸம் தத்ராஜஸமுதாஹ்ருதம் ॥ 24॥

*பயனில் இச்சை கொண்டு அகந்தையுடன் மிக்க சிரமத்தின் பேரில் எக்கர்மம் செய்யப்படுகின்றதோ அது ராஜஸம் எனப்படும்.*

பயனில் இச்சை வைத்து அகந்தையுடன் எக்கருமம் மிக்க சிரமத்தின்பேரில் செய்யப்படுகின்றதோ அது ராஜஸம் எனப்படும். அதாவது அகந்தை என்பது இங்கு மெய்யறிவிற்கு எதிரானது என்னும் பொருளில் பயன்படுத்தப்படவில்லை. மாறாக வேதங்களைக் கற்றறிந்த சாதாரண மனிதனிடம் இல்லாதிருக்கும் அகந்தைக்கு எதிராகப் பயன்படுத்தப்பட்டிருக்கிறது. காரணம் ஆத்மாவை அறிந்து உண்மையிலேயே அகந்தை இல்லா ஒருவன் கர்மப் பயனில் பற்று வைப்பதில்லை அல்லது மிகுந்த சிரமத்தின் பேரில் கர்மங்களைச் செய்வதுமில்லை. ஆத்மாவை அறியாதவன் சாத்விகக் கர்மத்தைக் கூட அகந்தையுடன் செய்வானென்றால் ராஜஸ, தாமஸக் கர்மங்களைப் பற்றி என்ன சொல்ல. ஆத்மாவை அறியாதவனாயினும் வேதங்களைக் கற்றறிந்தவன் அகந்தையில்லாதவன் எனப்படுகின்றான். 'இப்பிராமணன் அகந்தையில்லாதவன்,' என்பது உலக வழக்கு. அவனோடு ஒப்பிடும் போது ராஜஸக் கர்மத்தைச் செய்பவன் அகந்தையுடையவன் எனப்படுகின்றான். 'புன:' என்பது இங்கு சுலோகத்தின் முதலடியை மட்டுமே பூர்த்தி செய்கிறது.

अनुबन्धं क्षयं हिंसामनवेक्ष्य च पौरुषम्
मोहादारभ्यते कर्म यत्तत्तामसमुच्यते ॥ २५॥

அனுபந்தம் க்ஷயம் ஹிம்ஸாமனபேக்ஷ்ய ச பௌருஷம் ।
மோஹாதாரப்யதே கர்ம யத்தத்தாமஸமுச்யதே ॥ 25॥

*விளைவையும், இழப்பையும், துன்பத்தையும், திறமையையும் கருத்தில் கொள்ளாது மயக்கத்தால் எக்கர்மம் தொடங்கப் பெறுகின்றதோ அது தாமஸம் எனப்படுகின்றது.*

விளைவு என்பது கர்மத்தினால் உண்டாகும் பயனைக் குறிப்பிடுகின்றது. இழப்பு என்பது ஒரு கர்மத்தைச் செய்வதால் உண்டாகும் சக்தி இழப்பை அல்லது பொருள் இழப்பைக் குறிப்பிடுகின்றது. துன்பம் என்பது உயிர்களுக்கு ஊறு விளைவிப்பதாகும். திறமை என்பது ஒரு கர்மத்தைச் செய்வதில் ஒருவனுக்கு இருக்கும் சாமர்த்தியமாகும். இவற்றைக் கருத்தில் கொள்ளாது மயக்கத்தினால் அதாவது பகுத்தறிவின்மையால் செய்யப்படும் கர்மம் தாமஸக் கர்மமாகும். தமோ குணத்தினால் செய்யப்படுவதாகும்.

இப்போது செயலைச் செய்பவர்களின் வேறுபாடு விளக்கப்படுகிறது.

**मुक्तसङ्गोऽनहंवादी धृत्युत्साहसमन्वित: ।**
**सिद्ध्यसिद्ध्योर्निर्विकार:कर्ता सात्त्विक उच्यते ॥ २६॥**

**முக்தஸங்கோ(அ)னஹம்வாதீ த்ருத்யுத்ஸாஹஸமன்வித: ।**
**ஸித்த்யஸித்த்யோர்நிர்விகார:கர்த்தா ஸாத்த்விக உச்யதே ॥ 26॥**

***பற்றில்லாதவனாய், 'நான்' என்னும் எண்ணமில்லாதவனாய், உறுதியும் ஊக்கமும் உடையவனாய், வெற்றி தோல்வியில் மாறுபாடற்றவனாய் இருக்கும் கர்த்தா சாத்துவிகன் எனப்படுகிறான்.***

பற்றில்லாதவன் என்றால் தான் செய்யும் கர்மத்தின் பயனில் பற்று வைக்காதவன் ஆவான். நான் என்னும் எண்ணமில்லாதவன் என்றால் தன்னை முன்னிலைப்படுத்தாதவன் என்று பொருளாகும். வெற்றி தோல்வியில் மாறுபாடற்றவன் என்றால் சாத்திரங்களையே பிரமாணமாகக் கொண்டு அவற்றில் கூறப்பட்டுள்ளக் கர்மங்களைப் பயனில் பற்று வைக்காதவனாகச் செய்பவன். இப்படிப்பட்டக் கர்த்தா எவனோ அவனே சாத்துவிகன் ஆவான்.

**रागी कर्मफलप्रेप्सुर्लुब्धो हिंसात्मकोऽशुचि: ।**
**हर्षशोकान्वित: कर्ता राजस: परिकीर्तित: ॥ २७॥**

**ராகீ கர்மபலப்ரேப்ஸுர்லுப்தோ ஹிம்ஸாத்மகோ(அ)ஶுசி: ।**
**ஹர்ஷஶோகான்வித: கர்த்தா ராஜஸ: பரிகீர்த்தித: ॥ 27॥**

***வேட்கையுடையவனாய், கர்மப் பயனை வேண்டுவோனாய், பேராசையுடையோனாய், இடர் செய்பவனாய், அசுத்தமானவனாய், மகிழ்ச்சியும், சோகமும் உடையவனாகியக் கர்த்தா ராஜஸன் என்று கூறப்படுகிறான்.***

வேட்கையுடையவன் என்றால் பற்றுடையவன் என்று பொருளாகும். கர்மப் பயனை வேண்டுவோன் என்றால் கர்மப் பயனில் பற்றுடையவன் என்பதாகும். பேராசையுடையோன் என்றால் பிறர் பொருளை நயப்பவன் தனது பொருளை ஒருவருக்கு ஈயாதவன் என்று பொருளாகும், இடர் செய்பவன் என்றால் பிறர்க்கு ஊறு விளைவிப்பவன் என்று பொருளாகும். அசுத்தமானவன் என்றால் புறத்தூய்மை, அகத்தூய்மை இல்லாதவன் என்று பொருளாகும். மகிழ்ச்சி என்பது எண்ணியது எய்தப்பெற்றால் மகிழ்வதாகும். சோகம் என்பது வேண்டாதது வந்துற்றுழியும், விரும்பியதை இழந்தபொழுதும் உண்டாகும் வருத்தம். இத்தன்மையுடையோனுக்கே கர்மநிறைவேற்றத்தால் மகிழ்ச்சியும், நிறைவேறாத பொழுது துக்கமும் உண்டாகும். இப்படிப்பட்டக் கர்த்தா எவனோ அவன் ராஜஸன் எனப்படுகிறான்.

अयुक्तः प्राकृतः स्तब्धः शठोनैष्कृतिकोऽलसः ।
विषादी दीर्घसूत्री च कर्ता तामस उच्यते ॥ २८॥

அயுக்த: ப்ராக்ருத: ஸ்தப்த: ஶடோ நைஷ்க்ருதிகோ(அ)லஸ: ।
விஷாதீ தீர்க்ஸூத்ரீ ச கர்த்தா தாமஸ உச்யதே ॥ 28॥

*ஒருநிலைப்படாதவன், அநாகரிகன், முரடன், வஞ்சகன், பொல்லாதவன், சோம்பேறி, ஏக்கம்பிடித்தவன், காலதாமதம் செய்பவன் தாமஸன் எனப்படுகிறான்.*

ஒருநிலைப்படாதவன் - ஒன்றில் உறுதியாக நில்லாதவன்; அநாகரிகன் - புத்தி தெளியாதவன் குழந்தைத்தனமானவன்; முரடன் - தடிபோன்றவன், ஒருவரைப் பணிந்து வணங்காதவன்; வஞ்சகன் - தனது வலிமையை மறைப்பவன்; பொல்லாதவன் - பிறர் வாழ்க்கையைக் கெடுப்பவன்; சோம்பேறி - செய்ய வேண்டியக் கடமையைச் செய்யாதிருப்பவன்; ஏக்கம் பிடித்தவன் - எப்போதும் அயர்ச்சியுடையவன்; காலதாமதம் செய்பவன் - அவசரமாகச் செய்து முடிக்க வேண்டிய காரியத்தைக் கூடப் பின்னால் செய்யலாம் என்று நாளைக் கடத்துபவன்; ஒருமாதம் ஆனபோதிலும் செய்யாதிருப்பவன்; எவன் இப்படிப்பட்டக் கர்த்தாவோ அவன் தாமஸன் எனப்படுகிறான்.

बुद्धेर्भेदं धृतेश्चैव गुणतस्त्रिविधं शृणु ।
प्रोच्यमानमशेषेण पृथक्त्वेन धनञ्जय ॥ २९॥

புத்தேர் பேதம் த்ருதேஶ்சைவ குணதஸ்த்ரிவிதம் ஶ்ருணு ।
ப்ரோச்யமானம் அஶேஷேண ப்ருதக்த்வேன தனஞ்ஜய ॥ 29॥

*குணங்களுக்கேற்ப புத்தி, தைரியம் இவற்றின் மூவகைப் பிரிவுகளைக் குறைவின்றித் தனித்தனியே கேட்டறிவாய் தனஞ்ஜய.*

சத்துவம் முதலிய குணங்களுக்கேற்ப புத்தி மற்றும் தைரியத்தின் மூவகைப் பிரிவுகளையும் தனஞ்ஜய கேட்பாயாக. இது (இனி கூறப்போவதற்கு இச்சுலோகத்தின் முதற்பாதி) சூத்திரமாகும். குறைவின்றி முழுவதையும், தனித்தனியே, தெளிவாகக் கேட்பாயாக. தனஞ்ஜயன் என்றால் அர்ஜுனன் திக்விஜயம் செய்தபொழுது மனிதர்கள் மற்றும் தேவர்களின் செல்வங்களையெல்லாம் வெற்றியினால் கவர்ந்து வந்தான் அதனால் அவன் தனஞ்ஜயன் என்றழைக்கப்படுகிறான்.

प्रवृत्तिं च निवृत्तिं च कार्याकार्ये भयाभये ।
बन्धं मोक्षं च या वेत्ति बुद्धिः सा पार्थ सात्त्विकी ॥ ३०॥

**ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச கார்யாகார்யே பயாபயே ।**
**பந்தம் மோக்ஷம் ச யா வேத்தி புத்தி: ஸா பார்த்த ஸாத்த்விகீ ॥ 30॥**

*பார்த்தா! செயல், செயலின்மை, செய்யத்தக்கது, தகாதது, அச்சம், அஞ்சாமை, பந்தம், விடுதலை இவற்றைப் பகுத்தறியும் புத்தி எதுவோ அது சாத்துவிகமாம்.*

பிரவ்ருத்தி என்னும் செயல் சம்சார பந்தத்திற்குக் காரணமான கர்ம வழியாகும். நிவ்ருத்தி எனப்படும் செயலின்மையோ அதற்கு நேர்மாறாக முக்திக்கு இட்டுச் செல்லும் துறவு வழியாகும். பந்தம் விடுதலை என்னும் வரியிலேயே இவையும் கூறப்பட்டிருப்தால் செயல் என்பதைக் கர்ம வழியென்றும், செயலின்மையைத் துறவு வழியென்றும் நாம் பொருள் கொள்கிறோம். செய்யத்தக்கது எது? செய்யத்தகாதது எது? சாத்திரங்களில் விதிக்கப்பட்ட, விலக்கப்பட்டக் கர்மங்கள். இடனறிந்து, காலமறிந்து இம்மை, மறுமைக்காகச் செய்ய வேண்டிய கர்மங்கள். அச்சம், அஞ்சாமை என்பவை இம்மை மறுமைப் பயத்திற்கும், பயமின்மைக்கும் காரணங்களாக இருப்பவற்றைக் குறிப்பிடுகின்றன. சாத்துவிகப் புத்தியுடையவன் பந்தம், விடுதலை என்பவற்றை அவற்றின் காரணங்களோடு அறிவான், அறிவு என்பது புத்தி விருத்தி (போக்கு) ஆகும். அதுபோல் தைரியம் என்பதும் புத்தி விருத்தியேயாகும்.

**यया धर्ममधर्मं च कार्यं चाकार्यमेव च ।**
**अयथावत्प्रजानाति बुद्धिः सा पार्थ राजसी ॥ ३१॥**

**யயா தர்மம் அதர்மம் ச கார்யம் சாகார்யம் ஏவ ச**
**அயதாவத்ப்ரஜாநாதி புத்தி: ஸா பார்த்த ராஜஸீ ॥ 31॥**

*தர்மத்தையும், அதர்மத்தையும், செய்யத்தக்கச் செயலையும் செய்யத்தகாதச் செயலையும் உள்ளபடி அறியாத புத்தி, பார்த்தா, ராஜஸமானதாகும்.*

தர்மம் - சாத்திரத்தில் விதிக்கப்பட்டச் செயல்கள்; அதர்மம் - சாத்திரத்தில் விலக்கப்பட்டச் செயல்கள்; செய்யத்தக்கச் செயல், செய்யத்தகாதச் செயல் என்பவை பற்றி முன்னரே (18-30) விளக்கியாகிவிட்டது. உள்ளபடி அறியாது என்றால் தீவிரமாக ஆராய்ந்து அறியாது என்று பொருளாகும். இப்படிப்பட்டப் புத்தி ராஜஸிகமாகும். (இங்கு கூறப்பட்டுள்ள தர்மமும், அதர்மமும், முன்னரே செய்யப்பட்டுத் தமது பயன் வெளிப்படாதிருக்கும் நிலையைக் குறிப்பனவாகும். செய்யத்தக்கது, தகாதது என்பவை கர்மங்களைச் செய்தலையும், செய்யாமையையும் குறிப்பிடுகின்றன. எனவே இதில் கூறியது கூறல் என்னும் குற்றம் இல்லை - ஆ)

अधर्मं धर्ममिति या मन्यते तमसावृता ।
सर्वार्थान्विपरीतांश्च बुद्धिः सा पार्थ तामसी ॥ ३२॥

**அதர்மம்தர்மம் இதி யா மன்யதே தமஸாவ்ருத்தா ।**
**ஸர்வார்த்தான்விபரீதாம்ஶ்ச புத்தி: ஸா பார்த்த தாமஸீ ॥ 32॥**

*இருளால் மூடப்பட்டதாய், அதர்மத்தைத் தர்மமென்று கருதுவதும் எல்லாப் பொருள்களையும் நேருக்கு மாறாகக் காண்பதுமாகிய புத்தி எதுவோ, பார்த்தா! அது தாமஸ புத்தியாகும்.*

அதர்மம் - மறுக்கப்பட்டது; தர்மம் - விதிக்கப்பட்டது; இவற்றை ஒன்றை மற்றொன்றாகக் கருதுவது. எல்லாப் பொருள்களையும் - அறியப்படுகின்ற ஒவ்வொரு பொருளையும் நேர்மாறாகக் காணும் புத்தி எதுவோ அது தாமஸபுத்தியாகும்.

धृत्या यया धारयते मनःप्राणेन्द्रियक्रियाः ।
योगेनाव्यभिचारिण्या धृतिः सा पार्थ सात्त्विकी ॥ ३३॥

**த்ருத்யா யயா தாரயதே மன:ப்ராணேந்த்ரியக்ரியா: ।**
**யோகேனாவ்யபிசாரிண்யா த்ருதி: ஸா பார்த்த ஸாத்த்விகீ ॥ 33॥**

*மனம், உயிர்மூச்சு, புலன்கள் இவற்றின் செயல்கள் முறைபிறழாத எந்த யோகத்தின் உறுதியினால் காக்கப்படுகின்றனவோ அந்த உறுதி சாத்துவிகமாம்.*

முறைபிறழாத (அவ்யபிசாரிண்யா) எனும் சொல்லை உறுதி (த்ருத்யா) என்னும் சொல்லோடு ஒட்டுக. ஒருவன் உறுதியினால் காக்கின்றான் - எவற்றை? மனம், உயிர்மூச்சு, புலன்கள் முதலியவற்றின் செயல்களை சாத்திரத்திற்கு விரோதமானப் பாதையில் செல்லாமல் தடுக்கின்றான். அதனால் அவை சாத்திரத்திற்கு ஒத்திசைவு பெற்றவையாகின்றன. இது 'ஒருமுகப்படுதல்' அல்லது 'சமாதியின்' மூலம் செய்யப்படுகின்றது. அதாவது பிரம்மத்தின் மீது மனம் ஒருமுகப்படுவதின் மூலம் செய்யப்படுகின்றது. முறைபிறழாத உறுதியினால் அதாவது சமாதியில் ஒருமுகப்படுதலை விட்டு நீங்காத உறுதியினால் அவை தடுக்கப்படுகின்றன. இப்படிப்பட்ட உறுதி சாத்துவிகமாகும்.

यया तु धर्मकामार्थान्धृत्या धारयतेऽर्जुन ।
प्रसङ्गेन फलाकाङ्क्षी धृतिः सा पार्थ राजसी ॥ ३४॥

**யயா து தர்மகாமார்த்தான் த்ருத்யா தாரயதே(அ)ர்ஜுன ।**
**ப்ரஸங்கேன பலாகாங்க்ஷீ த்ருதி: ஸா பார்த்த ராஜஸீ ॥ 34॥**

*ஆனால் அர்ஜுனா! பற்றினால் பயனை வேண்டுவோன் அறம் பொருள் இன்பங்களை எந்த உறுதியினால் பேணுகின்றானோ, பார்த்தா! அது ராஜஸமாகும்.*

ஆனால், எந்த உறுதியினால் ஒருவன் அறம்பொருள் இன்பங்களை அவசியம் எய்தப் பெறவேண்டியவைகளாக மனதில் ஏற்றுக்கொண்டு, அவற்றின் பயன்களையும் எப்போதும் வேண்டுபவனாகின்றானோ (அவனது) அந்த உறுதி ராஜஸமாகும்.

**यया स्वप्नं भयं शोकं विषादं मदमेव च ।**
**न विमुञ्चति दुर्मेधा धृतिः सा पार्थ तामसी ॥ ३५॥**

**யயா ஸ்வப்னம் பயம் ஶோகம் விஷாதம் மதம் ஏவ ச ।**
**ந விமுஞ்சதி துர்மேதா த்ருதி: ஸா பார்த்த தாமஸீ ॥ 35॥**

*அறிவிலியானவன் உறக்கத்தையும், அச்சத்தையும், துயரத்தையும், சோர்வையும், செருக்கையும் எதனால் விடுவதில்லையோ பார்த்தா! அந்த உறுதி தாமஸமாகும்.*

அறிவிலியானவன் மதுமிகுத்துண்டவன் போன்றவன். எந்த உறுதியினால் உறக்கம், அச்சம், துயரம், சோர்வு, செருக்கு போன்றவற்றை எப்போதும் செய்ய வேண்டியவைகளாக மனதிற்கொள்கின்றானோ அந்த உறுதி தாமஸமாகும்.

செயல், செயப்படும் பொருள், இவற்றின் குணங்களின் அடிப்படையிலான வேறுபாடுகள் கூறப்பட்டது. இனி அவற்றின் பயன் மற்றும் சுகம் இவற்றிற்கு மூவகை வேறுபாடுகளைக் கூறப்போகிறார்.

**सुखं त्विदानीं त्रिविधं शृणु मे भरतर्षभ ।**
**अभ्यासाद्रमते यत्र दुःखान्तं च निगच्छति ॥ ३६॥**

**ஸுகம் த்விதானீம் த்ரிவிதம் ஶ்ருணு மே பரதர்ஷப ।**
**அப்யாஸாத்ரமதே யத்ர து:க்காந்தம் ச நிகச்சதி ॥ 36॥**

*பாரதக் காளையே! பழக்கத்தினால் ஒருவன் எதில் இன்புறுகின்றானோ, துன்பத்தின் முடிவை எய்துகின்றானோ, அந்த மூவகை இன்பத்தை என்னிடமிருந்து கேட்பாயாக.*

இப்போது நான் கூறப்போகும் மூவகை இன்பத்தைப் பற்றிக் கேட்பாயாக - அவற்றில் மனதை ஒருமுகப்படுத்துவாயாக. மீண்டும் மீண்டும் செய்வதின் காரணமாக உண்டான பழக்கத்தினால் ஒருவன் அதில் இன்பத்தை அனுபவிக்கிறான். அதனால் நிச்சயம் 'துன்பத்தின் முடிவை எய்துகிறான்.'

**यत्तदग्रे विषमिव परिणामेऽमृतोपमम् ।**
**तत्सुखं सात्त्विकं प्रोक्तमात्मबुद्धिप्रसादजम् ॥ ३७॥**

**யத்தத் அக்ரே விஷம் இவ பரிணாமே(அ)ம்ருதோபமம் ।**
**தத்ஸுகம் ஸாத்த்விகம் ப்ரோக்தம் ஆத்மபுத்திப்ரஸாதஜம் ॥ 37॥**

*எது முதலில் நஞ்சு போன்றும் முடிவில் அமிர்தம் போன்றும் உள்ளதோ அந்த இன்பம் சாத்துவிகமாகும். அது ஒருவனது புத்தித் தெளிவில் பிறக்கிறது.*

முதலில் ஞானம், வைராக்கியம், தியானம், சமாதி என்றிவற்றை சாதகம் செய்யத் தொடங்கும் பொழுது மிகுந்த சிரமம் அளிப்பதாக இருப்பதினால் அந்த இன்பம் நஞ்சைப்போல் துன்பமளிப்பதாக உள்ளது. முடிவில் ஞான முதிர்ச்சியும், வைராக்கிய முதிர்ச்சியும் இதுபோன்ற மற்றவையும் எய்தப் பெறும்பொழுது அதே இன்பம் அமிர்தத்தைப் போல் இருக்கின்றது. சுகமளிக்கின்றது. இந்த இன்பம் சாத்துவிகம் என்று அறிஞர்களால் கூறப்படுகின்றது. இது புத்தித் தெளிவிலே பிறக்கின்றது. இத்தெளிவு நீரில் காணப்படும் தெளிவு போன்றதாகும். அல்லது தனது புத்தித் தெளிவினால் (ஆத்மபுத்தி) என்பதற்கு ஆத்மாவைப் பற்றிய அறிவுத் தெளிவினால் உண்டாகிறது என்றும் பொருள் கொள்ளலாம். ஆகவே அந்த இன்பம் சாத்துவிகம் எனப்படுகின்றது.

**विषयेन्द्रियसंयोगाद्यत्तदग्रेऽमृतोपमम् ।**
**परिणामे विषमिव तत्सुखं राजसं स्मृतम् ॥ ३८॥**

**விஷயேந்த்ரிய ஸம்யோகாத் யத்தத்அக்ரே (அ)ம்ருதோபமம் ।**
**பரிணாமே விஷம் இவ தத்ஸுகம் ராஜஸம் ஸ்ம்ருதம் ॥ 38॥**

*புலன்களும் பொருள்களும் இணைவதால் முதலில் அமிர்தம் போன்றும் முடிவில் நஞ்சைப் போன்றும் தோன்றுவது எந்த இன்பமோ, அந்த இன்பம் ராஜஸம் எனப்படும்.*

புலன்களும், அவற்றின் நுகர்பொருள்களும் இணைவதின் மூலம் உண்டாகும் இன்பம் முதலில் அமிர்தம் போன்றும் முடிவில் அது சக்தி, வீரம், அழகு, அறிவு, புத்தி வலிமை, செல்வம், ஊக்கம் என்பவற்றை அழித்து, அதர்மத்திற்குக் காரணமாகி நரகத்திற்கு இட்டுச் செல்வதாலும் நஞ்சு போன்றதாகும். அதனால் அந்த இன்பம் ராஜஸம் எனப்படுகின்றது.

**यदग्रे चानुबन्धे च सुखं मोहनमात्मनः ।**
**निद्रालस्यप्रमादोत्थं तत्तामसमुदाहृतम् ॥ ३९॥**

**யத் அக்ரே சானுபந்தே ச ஸுகம் மோஹனம் ஆத்மன: ।**
**நித்ராலஸ்யப்ரமாதோத்தம் தத் தாமஸம் உதாஹ்ருதம் ॥ 39॥**

*எந்த இன்பம் முதலிலும், முடிவிலும் தன்னை மயக்குவதாய், உறக்கம், சோம்பல், தவறுதல் என்பவற்றிலிருந்து உண்டாகின்றதோ அந்த இன்பம் தாமஸம் எனப்படும்.*

முதலிலும், முடிவிலும் அதாவது முடிவிற்குப் பிறகும் தன்னை மயங்கச் செய்வதாகவும், உறக்கம், சோம்பல், தவறுதல் என்பவற்றிலிருந்து உண்டாவதாகவும் இருக்கின்றதோ அந்த இன்பம் தாமஸம் எனப்படுகின்றது.

இப்போது பேசப்படும் பொருளைப் பின்வரும் சுலோகம் நிறைவு செய்கிறது.

**न तदस्ति पृथिव्यां वा दिवि देवेषु वा पुनः ।**
**सत्त्वं प्रकृतिजैर्मुक्तं यदेभिः स्यात्त्रिभिर्गुणैः ॥४०॥**

**ந தத் அஸ்தி ப்ருதிவ்யாம் வா திவி தேவேஷு வா புன: ।**
**ஸத்த்வம் ப்ரக்ருதிஜைர்முக்தம் யத் ஏபி: ஸ்யாத் த்ரிபிர்குணை: ॥40॥**

*பிரகிருதியினின்று தோன்றும் இம்முக்குணங்களினின்று விடுபட்ட ஓர் உயிர் மண்ணுலகிலேனும் மற்று வானுலகில் தேவர்களிடையிலேனும் எங்குமில்லை.*

மண்ணுலகில் அதாவது உயிருள்ள மனிதர்கள் மற்றும் உயிரற்ற ஜடப் பொருட்களிடையிலும், அங்ஙனமே வானுலகில் தேவர்களிடையிலும் பிரகிருதியில் தோன்றும் சத்துவம் முதலிய முக்குணங்களிலிருந்து விடுபட்ட ஓர் உயிர் எங்குமில்லை.

கர்மம், கர்மத்திற்கானக் கருவி மற்றும் அதன் பயன் இவற்றையுடையதும், சத்துவம், ரஜஸ், தமஸ் என்னும் முக்குணங்களின் வடிவமாயிருப்பதும், அறியாமையினால் கற்பிக்கப்படுவதுமாகிய பிறப்பு, இறப்புடைய வாழ்க்கையானது (சம்சாரம்) அதன் வேருடன் சேர்த்து தீமை பயப்பது என்று கூறப்பட்டது. மேலும் அதனை ஒரு விருக்ஷமாக உருவகம் செய்து 'மேலே வேரும்' (15-1) 'பற்றின்மையாகியக் கோடரியினால் அதனை வெட்டி வீழ்த்தி, பிறகு அந்நிலை தேடப்பட வேண்டும்' (15-3,4) என்றும் கூறப்பட்டது. அப்படிப்பட்ட வாழ்க்கையில் (சம்சாரம்) எல்லாம் முக்குண வடிவமாக இருப்பதால் அதனை நீக்குவது என்பது அரிதினும் அரிதாகும். அதனை எவ்வாறு நீக்குவது என்னும் எண்ணத்தோடும், கீதையின் சாரம் முழுவதையும் முடித்து அருளிச் செய்ய வேண்டும் என்னும் எண்ணத்தோடும் 'எல்லா வேதங்களின் எல்லா ஸ்மிருதிகளின் சாரம் இதுதான், வாழ்க்கையின் லட்சியத்தை அடைய விரும்புவோர் கடைபிடிக்க வேண்டியதும் இதுதான்' என்பதை உணர்த்தும் எண்ணத்தோடும், 'பரந்தபா, பிராமணர், க்ஷத்திரியர், வைசியர்...... '(13.41) என்னும் சுலோகம் தொடங்கப் பெறுகின்றது.

ब्राह्मणक्षत्रियविशां शूद्राणां च परन्तप
कर्माणि प्रविभक्तानि स्वभावप्रभवैर्गुणैः ॥४१॥

ப்ராஹ்மணக்ஷத்ரியவிஶாம் ஶூத்ராணாம் ச பரந்தப
கர்மாணி ப்ரவிபக்தானி ஸ்வபாவ ப்ரபவைர் குணை: ॥ 41॥

*பரந்தபா! பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் இவர்களிடம் சுபாவத்தால் காணப்படும் குணங்களுக்கேற்ப அவரவர்க்குரிய கர்மங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன.*

சூத்திரர்கள் ஒரு பிறப்பாளர் (உபநயனமில்லாதார்) ஆதலினால் வேதங்களைக் கற்க உரியவர்களல்லர். ஆகவே கூட்டுத் தொகையில் அவர்கள் மற்றவர்களோடு சேர்க்கப்படவில்லை. இவர்களின் கர்மங்கள் வெவ்வேறாக வகுக்கப்பட்டிருக்கின்றன. எதற்கேற்ப இவ்வாறு வகுக்கப்பட்டிருக்கின்றன? சுபாவத்தில் காணப்படும் குணங்களுக்கேற்ப. 'சுபாவம்' என்பது ஈசுவரனின் பிரகிருதியாகும். அது முக்குண வடிவான மாயையாகும். இதனைப் பிறப்பிடமாகக் கொண்ட குணங்களுக்கேற்ப அகக் கரணங்களை அடக்குதல் முதுலிய கர்மங்கள் பிராமணர்கள் முதலான நால்வருணத்தாருக்கும் வெவ்வேறு வகையாகப் பிரித்து அமைக்கப்பட்டிருக்கின்றன.

அல்லது பிராமண இயல்பிற்கு சத்துவ குணம் காரணம். க்ஷத்திரிய இயல்பிற்கு சத்துவ குணத்தைக் கீழாகக் கொண்ட ரஜோ குணம் காரணம். வைசிய இயல்பிற்கு தமோ குணத்தைக் கீழாகக் கொண்ட ரஜோ குணம் காரணம். சூத்திர இயல்பிற்கு ரஜோ குணத்தைக் கீழாகக் கொண்ட தமோ குணம் காரணம் என்றும் பொருள் கொள்ளலாம். ஏனெனில் நான்கு இயல்புகளுக்கும் சுபாவமாக முறையே அமைதி, ஆளுமை, முயற்சி, மயக்கம் என்பவை காணப்படுகின்றன.

அல்லது சுபாவம் என்பதற்கு சென்ற பிறவிகளில் உயிர்கள் ஈட்டியதும், இப்பிறவியில் தனது பயனை அளிக்கத் தலைப்பட்டிருப்பதுமான மனப்பாங்கு (வாசனை) என்றும் பொருள் கொள்ளலாம். குணங்கள் இந்த மனப்பாங்கினையே காரணமாகக் கொண்டிருக்கின்றன. குணங்கள் வெளிப்படுவதற்கு எந்தவொரு காரணமுமில்லை என்பது பொருந்தாது ஆதலினால் மனப்பாங்கினை ஒரு வகையில் காரணமாகக் கொள்ளவும். (குணங்கள் வெளிப்படுவதற்கு பிரகிருதி முதற்காரணம்; மனப்பாங்கு (வாசனை) துணைக் காரணமாகும்.-ஆ) இவ்வாறு மனப்பாங்கினைத் துணைக் காரணமாகவும், பிரகிருதியை முதற்காரணமாகவும் கொண்ட சத்துவம், ரஜஸ், தமஸ் என்னுங் குணங்களுக்கேற்ப அமைதி முதலிய கர்மங்கள் வகுக்கப்பட்டிருக்கின்றன.

மறுப்பு : அப்படியானால் பிராமணர் முதலியோர்க்குரிய அமைதி முதலிய கர்மங்கள் சாத்திரங்களினால் பகுக்கப்பட்டு சாத்திரங்களினால் விதிக்கப்பட்டவை இல்லையா? பிறகு ஏன், சத்துவம் முதலிய குணங்களுக்கேற்ப பகுத்து அளிக்கப்பட்டிருக்கின்றன என்று கூற வேண்டும்?

பதில் : இம்மறுப்பில் பொருளில்லை. பிராமணர் முதலியோர்க்கு அமைதி முதலிய கர்மங்கள் சத்துவம் முதலிய குணங்களை அடிப்படையாகக் கொண்டே சாத்திரங்களில் பகுத்து அமைக்கப்பட்டிருக்கின்றன. குணங்களைக் கருதாமல் அவை அமைக்கப்படவில்லை. எனவேதான் கர்மங்கள் சாத்திரங்களினால் பகுக்கப்பட்டிருந்த போதிலும், அவை குணங்களுக்கேற்ப பகுக்கப்பட்டிருக்கின்றனவென்று கூறப்படுகின்றது.

இப்போது அக்கர்மங்கள் யாவை? என்பது கூறப்படுகின்றது :

**शमो दमस्तपः शौचं क्षान्तिरार्जवमेव च ।**
**ज्ञानं विज्ञानमास्तिक्यं ब्रह्मकर्म स्वभावजम् ॥ ४२॥**

**ஶமோ தமஸ்தப: ஶௌசம் க்ஷாந்திர் ஆர்ஜவம் ஏவ ச ।**
**ஜ்ஞானம் விஜ்ஞானம் ஆஸ்திக்யம் ப்ரஹ்மகர்ம ஸ்வபாவஜம் ॥ 42॥**

*அகப்புறக் கரணங்களை அடக்குதல், தவம், தூய்மை, பொறுமை, நேர்மை, ஞானம், அனுபவம், ஆத்திகம் இவையனைத்தும் சுபாவத்தால் பிராமணர்க்குரியக் கர்மங்களாகும்.*

அகக்கரணங்களின் அடக்கம் (ஸமம்) புறக்கரணங்களின் அடக்கம் (தமம்) பற்றி முன்னரே விளக்கியாகிவிட்டது (16-1,2) அங்ஙனமே தவம் எனப்படும் உடல் தவமும் முன்பே விளக்கப்பட்டுள்ளது (17-14, 15,16). அவ்வாறே தூய்மை பற்றியும் முன்பே விளக்கப்பட்டுள்ளது (16-3). பொறுமை என்பது அமைதியாகும். நேர்மை என்பது ஒளிவுமறைவற்றத் தன்மையாகும். ஞானம் என்பது அறிவு, விஞ்ஞானம் என்பது அனுபவம். ஆத்திகம் என்பது இறைவன் இருக்கின்றான் என்று கூறும் சாத்திரங்களில் நம்பிக்கையுடைமையாகும். "சுபாவத்தில் காணப்படும் குணங்களுக்கேற்ப வகுக்கப்பட்டிருக்கின்றன" (18-41) என்று முன்னர் கூறப்பட்டது எதுவோ, அதுவே 'சுபாவத்தால்' என்னும் சொல்லால் கூறப்பட்டிருக்கின்றது.

**शौर्यं तेजो धृतिर्दाक्ष्यं युद्धे चाप्यपलायनम् ।**
**दानमीश्वरभावश्च क्षात्रं कर्म स्वभावजम् ॥ ४३॥**

**ஶௌர்யம் தேஜோ த்ருதிர்தாக்ஷ்யம் யுத்தே சாப்யபலாயனம் ।**
**தானம் ஈஶ்வரபாவஶ்ச க்ஷாத்ரம் கர்ம ஸ்வபாவஜம் ॥ 43॥**

*வீரம், துணிவு, உறுதி, திறமை, போரில் புறங்காட்டாமை, கொடை, ஆளுமை இவை சுபாவத்தில் தோன்றும் க்ஷத்திரியர்களின் கர்மங்களாகும்.*

உறுதி என்பது எந்நிலையிலும் உளம் அழிந்திடாமையாகும். திறமை என்பது இக்கட்டான சமயங்களில் மனம் கலங்காது உடனடியாக அவற்றைக்

கடந்து செல்லும் தன்மையாகும். போரில் புறங்காட்டாமை என்பது யுத்தத்தில் பகைவருக்கு அஞ்சி தப்பி ஓடாமையாகும். கொடை என்பது இரந்தோர்க்கு ஈவதாகும். ஆளுமை என்பது தனது குடிமக்களைத் தனது வலிமையின் மூலம் அடக்கி ஆளும் திறமை. தலைமைத் தன்மையுடைமையாகும். இவையனைத்தும் சுபாவத்தினால் க்ஷத்திரியர்க்குரியக் கடமைகளாகும்.

**कृषिगारक्ष्यवाणिज्यं वैश्यकर्म स्वभावजम् ।**
**परिचर्यात्मकं कर्म शूद्रस्यापि स्वभावजम् ॥ ४४॥**

**க்ருஷி கோரக்ஷ்ய வாணிஜ்யம் வைஶ்யகர்ம ஸ்வபாவஜம் ।**
**ப| கர்ம ஶூத்ரஸ்யாபி ஸ்வபாவஜம் ॥ 44॥**

*ஆநிரைகாத்தல், வணிகம் இவை சுபாவத்தினாலான வைசியர்க்குரியக் கர்மங்களாகும். தொண்டு செய்தல் சுபாவத்தால் சூத்திரர்க்குரியக் கர்மமாம்.*

வேளாண்மை என்பது நிலத்தை உழுது பயிர் செய்தலாகும். ஆநிரை காத்தல் என்பது பசு முதலிய கால்நடைகளை காப்பதாகும். வணிகம் என்பது பொருட்களைக் கொள்முதல் செய்வதும் விற்பதுமாகும். இவையனைத்தும் சுபாவத்தால் வைசியர்க்குரியக் கர்மங்களாகும். பிறர்க்குத் தொண்டு செய்வது, சுபாவத்தால் சூத்திரர்க்குரியக் கர்மமாகும்.

நால் வருணத்தாரும் தத்தமக்குரியக் கர்மங்களை முறையாகவும், ஒழுங்காகவும் செய்யும் பொழுது அவற்றின் பயனாகிய சுவர்க்கம் அடையப் பெறுவர். 'நால்வருணத்தினரும், ஆச்ரமத்தினரும் தத்தமக்கு விதிக்கப்பட்டக் கர்மங்களை முறையாகச் செய்தனரென்றால் மறுமையில் அக்கர்மங்களின் பயன்களை அவர்கள் அனுபவித்து பின்பு மீதமிருக்கும் கர்மத்திற்கேற்ப உயர்தருமம், இனம், குலம், ஆயுள், கல்வி, ஒழுக்கம், செல்வம், இன்பம், ஞானம் இவை பெற்று வளமிக்க நாட்டில் பிறப்பர்' (ஆபஸ்தம்ப தர்ம சூத்திரம் 2-2-2,3) மேலும் புராணங்களிலும் கூட வர்ணத்தார்க்கும், ஆச்ரமத்தார்க்கும் பல உலகங்களையும், பல பயன்களையும் சிறப்பித்துக் கூறப்பட்டுள்ளது. இப்போது கூறப் போகும் பயனுக்கு வேறோர் காரணமுள்ளது.

**स्वे स्वे कर्मण्यभिरतः संसिद्धिं लभते नरः ।**
**स्वकर्मनिरतः सिद्धिं यथा विन्दति तच्छृणु ॥ ४५॥**

**ஸ்வே ஸ்வே கர்மண்யபிரத: ஸம்ஸித்திம் லபதே நர: ।**
**ஸ்வகர்மநிரத: ஸித்திம் யதா விந்ததி தச் ச்ருணு ॥ 45॥**

*தனக்குரியக் கர்மத்தில் நிலைபெற்ற மனிதன் ஸித்தியடைகிறான். தனக்குரியக் கர்மத்தில் நிலைபெற்றவன் எங்ஙனம் ஸித்தி யடைகிறான். அதனைக் கேட்பாயாக.*

தனக்குரிய என்றால் மேலே கூறப்பட்டிருக்கும் வெவ்வேறு கர்மங்களில் தனக்குரியதைச் சார்தலாகும். அத்தகையக் கர்மத்தில் நிலைபெறுவதால் உடல் தூய்மையும், மனத்தூய்மையும் பெற்று, ஸித்தியடைகிறான். ஞான நிஷ்டைக்குத் தகுதி யுடையவனாகிறான். தனக்குரிய கர்மத்தை நிறைவேற்றுவதால் ஒரு மனிதன் ஸித்தியடைவானா? (ஸித்தி என்பதற்கு முக்தி எனறு பொருள் கொண்டதினால் எழுந்த ஐயமே இக்கேள்வியாகும். - ஆ) இல்லை. பிறகு எப்படி? தனக்குரிய கர்மத்தில் நிலைபெற்றவன் எவ்வாறு ஸித்தி அடைகிறான். அதனைக் கேட்பாயாக.

**यत: प्रवृत्तिर्भूतानां येन सर्वमिदं ततम् ।**
**स्वकर्मणा तमभ्यर्च्य सिद्धिं विन्दति मानव: ॥ ४६॥**

**யத: ப்ரவ்ருத்திர் பூதானாம் யேன ஸர்வம் இதம் ததம் ।**
**ஸ்வகர்மணா தம் அப்யர்ச்ய ஸித்திம் விந்ததி மானவ: ॥ 46॥**

*எவனிடமிருந்து பொருள்களெல்லாம் தோன்றுகின்றனவோ, எவனால் இவையனைத்தும் வியாபிக்கப்பட்டிருக்கின்றதோ அவனை தனக்குரிய கர்மத்தால் அருச்சித்து மனிதன் ஸித்தியடைகிறான்.*

அகத்திலிருந்து ஆள்பவனான ஈசுவரனிடமிருந்தே உயிர்கள் எல்லாம் தோன்றுகின்றன. அந்த ஈசுவரனாலேயே இப்பிரபஞ்சமெல்லாம் வியாபிக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஈசுவரனை தனக்குரிய கர்மத்தால் அதாவது ஒவ்வொரு பிரிவினர்க்கும் மேலே கூறப்பட்டிருக்கும் கர்மத்தின் படி வழிபடுபவன் ஞான நிஷ்டை என்னும் ஸித்தியடைகிறான் அதாவது ஞானத்தில் நிலைபெறுவதற்குத் தகுதியுடையவனாகிறான்.

இவ்வாறிருப்பதினால்,

**श्रेयान्स्वधर्मो विगुण: परधर्मात्स्वनुष्ठितात् ।**
**स्वभावनियतं कर्म कुर्वन्नाप्नोति किल्बिषम् ॥ ४७॥**

**ஶ்ரேயான்ஸ்வதர்மோ விகுண: பரதர்மாத்ஸ்வ அனுஷ்டிதாத் ।**
**ஸ்வபாவநியதம் கர்ம குர்வன் நாப்னோதி கில்பிஷம் ॥ 47॥**

*தனக்குரியக் கர்மம் நன்றன்றாயினும், நன்கு செய்யப்பட்டப் பிறர் கர்மத்தை விட மேலாம். சுபாவத்தால் தனக்கமைந்த கர்மத்தைச் செய்பவன் பாவம் எய்துவதில்லை.*

ஒருவனின் சுதர்மம் நன்றன்றாயினும் அதாவது குறையுடையதாயினும், இதிலுள்ள 'ஆயினும்' என்னும் சொல்லை மனதிற் கொள்க. விஷத்தில் புழுத்தப் புழுக்களுக்கு விஷம் தீமை செய்யாததுபோல், 'சுபாவத்தால் தனக்கமைந்த' (18-43, 43, 44) கர்மத்தைச் செய்வதால் ஒருவனுக்குப் பாவம் உண்டாகாது.

விஷத்தில் புழுத்தப் புழுக்களை உவமை கூறியது தனக்குரிய கர்மத்தைச் செய்பவனுக்குப் பாவம் உண்டாகாது என்பதை எடுத்துக் காட்டவே. அதேசமயம் பிறன் கர்மம் பாவத்தை உண்டுபண்ணும். இது தவிர 3.5ல் ஆத்மாவை அறியாதவனால் கணப்பொழுதேனும் கர்மம் செய்யாதிருக்க முடியாது என்று உறுதிசெய்யப்பட்டுள்ளது. ஆகவே,

**सहजं कर्म कौन्तेय सदोषमपि न त्यजेत् ।**
**सर्वारम्भा हि दोषेण धूमेनाग्निरिवावृता: ॥४८॥**

**ஸஹஜம் கர்ம கௌந்தேய ஸதோஷம் அபி ந த்யஜேத் ।**
**ஸர்வாரம்பா ஹி தோஷேண தூமேனாக்னிர் இவாவ்ருதா: ॥ 48॥**

*குந்தி மைந்த! இயல்பால் அமைந்த கர்மம் குற்றமுடையதாயினும் அதனைக் கைவிடக் கூடாது. தீயைப் புகை சூழ்ந்திருப்பது போல் எல்லாக் கர்மங்களையும் குற்றங்கள் சூழ்ந்தே இருக்கின்றன.*

இயல்பால், சுபாவத்தால் தனக்கமைந்தது. அது என்ன? கர்மம் குற்றமுடையதாயினும் அதாவது முக்குணவடிவமாக இருப்பதால் அது குறையுடையதாயினும் அதனை விட்டுவிடக் கூடாது. எல்லாக் கர்மங்களும் - ஒருவனது சுதர்மம் மற்றும் பிறருடைய தர்மங்கள் - முக்குண வடிவமாயிருப்பதால் தீயைப் புகை சூழ்ந்திருப்பது போல் குற்றங்களினால் சூழப்பட்டிருக்கின்றன. அதனால் சுதர்மமாகிய கர்மத்தை விட்டு விட்டு ஒருவன் பிறன் தர்மத்தை நன்கு செய்யினும் அவன் குற்றங்களினின்று தப்ப மாட்டான். மேலும் பிறன் தர்மம் அச்சம் விளைவிப்பதாகும். ஆகவே அறியாமை உடையவனுக்குக் கர்மத்தை முற்றிலும் கைவிடுவது சாத்தியமன்று. அதனால் கர்மத்தை ஒருபோதும் தவிர்த்தல் கூடாது.

கர்மத்தை முற்றிலும் தவிர்த்தல் அரிது என்பதினால் அதைக் கைவிடக் கூடாதா? அல்லது தனக்குரியக் கர்மத்தைத் தவிர்ப்பதால் குற்றம் உண்டாகும் என்பதினால் அதை கைவிடக் கூடாதா?

மறுப்பு : அதனால் என்ன உண்டாகும்?

**பதில் :** முதற்கண் கர்மத்தை முற்றிலும் தவிர்த்தல் அரிது என்பதினால் அதனை கைவிடக் கூடாது என்றால், அங்ஙனம் முற்றிலும் தவிர்ப்பதால் மேன்மையே உண்டாகும்.(சுண்டு விரலால் மலையை தூக்குதல் ஒருவனுக்கு அரிதாகும். ஆனால் அவ்வாறு தூக்கிய பகவான் கிருஷ்ணருக்கு அதனால் மேன்மையே உண்டானது-ஆ)

மறுப்பு : அது உண்மைதான். கர்மத்தை முற்றிலும் தவிர்த்தல் சாத்தியமாகாது என்றால் சாங்கியர்களின் குணங்களைப் போல் ஆத்மா (புருஷன்) எப்போதும் அசைந்து கொண்டிருக்கின்றதா? அல்லது பௌத்தர்களின் கணந்தோறும் அழிவிற்குள்ளாகும் ஐந்து ஸ்கந்தங்கள் (பிரிவுகள்) போன்று செய்கையே செய்யும் பொருளா? (ஆத்மாவா)? இந்த

இரண்டிலும் கர்மத்தை முற்றிலும் தவிர்த்தல் சாத்தியமாகாது. (ஏனெனில் ஆத்மாவின் தன்மை கெடும், விகாரப்படும் ஆதலினால்)

இனி மூன்றாவது ஒரு கோட்பாடு உள்ளது. அது வருமாறு: பொருள் (ஆத்மா) எப்பொழுது தானே செய்கின்றதோ அப்போது அது செயல்படுவதாயிருக்கின்றது. எப்பொழுது செய்யவில்லையோ அப்போது அது செயலற்றதாக இருக்கின்றது. இவ்வாறிருக்கையில் கர்மத்தை முற்றிலும் தவிர்த்தல் சாத்தியமே. இக்கோட்பாட்டில் ஒரு வித்தியாசமுள்ளது. பொருள் (ஆத்மா) எப்போதும் அசைந்து கொண்டிருப்பதன்று. மேலும் செய்கையே தான் செய்யும் பொருள் (ஆத்மா) அன்று. அதனால் நித்தியப் பொருளான ஆத்மாவிற்கு முன் இல்லாத செய்கை புதிதாய் உண்டாகின்றது. ஏற்கெனவே இருக்கின்ற செய்கை இல்லாமல் போகின்றது. அப்பொருள் தூய்மையானதாக சக்தியுடையதாக (அதாவது செய்கையில்லாதது அதே சமயம் முயற்சிக்கு, செய்கைக்குக் காரணமான சக்தியுடையதாக) இருக்கின்றது. அதனால் அதுவே செய்யும் பொருளாக இருக்கின்றது என்பது கணாதரைப் பின்பற்றுவோரின் கோட்பாடாகும். இதில் என்ன குற்றம் உள்ளது?

பதில் : இக்கோட்பாடு பகவானின் உபதேசத்திற்கு எதிராக் இருப்பதால் இது குற்றமுடையதுதான். எப்படி? எப்படியெனில் பகவான் 'இல்லாதது உள்ளதாகாது உள்ளது இல்லாததாகாது....' (2.16) என்று உபதேசித்துள்ளார். கணாதரைப் பின்பற்றியவர்களுக்கன்றோ இல்லாதது உள்ளதாகின்றது, உள்ளது இல்லாததாகின்றது என்னும் கொள்கையுண்டு. அதனால் இக்கொள்கை பகவானின் உபதேசத்திற்கு எதிரானதாகும்.

மறுப்பு : பகவானின் கொள்கைக்கு எதிரானதாயினும் நியாயத்திற்குப் பொருந்தியதாக உள்ளதே. அதனால் என்ன குற்றம்?

பதில் : எல்லாப் பிரமாணங்களுக்கும் எதிராக இருப்பதால் இது குற்றமுடையதுதான்.

மறுப்பு : எப்படி?

பதில் : எப்படியெனில், த்வயணுகம் (த்வயணுகம் என்றால் இரண்டு அணுக்களின் சேர்க்கையாகும்) அல்லது பிற பொருள்கள் உற்பத்திக்கு முன் முற்றிலும் இவ்வாறிருந்தனவென்றாலோ, உற்பத்திக்குப் பிறகு சிறிது காலம் இருந்து மீண்டும் இல்லாதொழிந்தனவென்றாலோ இல்லாதது உள்ளதாகின்றது, உள்ளது இல்லாததாகின்றது. அதாவது இல் பொருள் உள்பொருளாகின்றது, உள்பொருள் இல்பொருளாகின்றது. இதில் இல்பொருள் உள்பொருளாகும்போது உற்பத்திக்கு முன்னர் முயற்கொம்பு போன்றதாகும். மேலும் அது பௌதிகம், அபௌதிகம், நிமித்தம் (ஸமவாயி, அஸமவாயி, நிமித்தம்) என்னும் மூவகைக் காரணங்களைச் சார்ந்து உண்டாகின்றது. அதனால் இல்பொருள் உள்பொருளாகின்றது; காரணத்தையும் வேண்டுகின்றது என்று கூறுவது செல்லாது. இல்பொருளாகிய முயற்கொம்பு போன்றவற்றிற்குப் பொருந்தாது. அதே சமயம் உற்பத்தியாகும் பானை

முதலியவை உள்பொருளின் வடிவமாதலின் அது தோன்றுதற்கு ஒரு காரணம் தேவைப்படுகின்றது என்பதை நம்மால் அறிந்து கொள்ள முடியும்.

மேலும் இல்பொருள் உள்பொருளாகவும், உள்பொருள் இல்பொருளாகவும் இருந்ததென்றால், பிரமாணத்தால் உறுதி செய்யப்படும் பொருள்களின் விஷயத்தில் எவனொருவனுக்கும் நம்பிக்கை உண்டாகாது. ஏனெனில் உள்ளது உள்ளதாகவே இருக்குமென்றோ, இல்லது இல்லதாகவே இருக்குமென்றோ நிச்சயமுண்டாகாது ஆதலின்.

அடுத்து உற்பத்தியாகின்றது என்று த்வயணுகம் போன்ற பொருள்களுக்குக் காரணங்களோடும், உள்ளது என்னும் தன்மையோடும் தொடர்பிருப்பதாகக் கூறுகின்றனர். (கணாதரைப் பின்பற்றுவோர் ஒருபொருள் ஒரு காரியத்திற்காக உண்டாகும்பொழுது அது தன் காரணங்களோடு தொடர்புள்ளதாய், உள்பொருளாக ஆகின்றது என்கின்றனர்.) உற்பத்திக்கு முன் இல்லாததாக இருந்து பின்னர் தனது காரணத்தின் செய்கைகளின் மூலம் ஸமவாயமாகியத் (பிரிக்கமுடியாத) தொடர்பினால் தனது காரணங்களான பரமாணுக்களோடும், உள்ளது எனனும் தன்மையோடும் ஒருங்கு சேர்கின்றது. அங்ஙனம் ஒருங்கு சேரவே தனது காரணத்தோடு பிரிக்க முடியாததாகி உள்பொருளாக ஆகின்றது. இங்கு சில வினாக்கள் கேட்கப்படலாம். அவர்கள் இல்லாத ஒன்றிற்குத் தன் காரணம் என்பது எப்படி இருக்கும்? அல்லது மற்றொன்றோடு எப்படித் தொடர்பு கொள்ளும்? மலடி மகனுக்குத் தன் காரணத்தையாயினும் (பிறத்தற்குரியக் காரணம்) மற்றொன்றோடு கொள்ளும் தொடர்பினையாயினும் உண்மையில் நம்மால் கற்பனையிலும் கருத முடியாதன்றோ.

மறுப்பு : இல்லை. வைசேஷிகர்களால் இல்பொருளுக்குத் தொடர்புண்டு என்று கூறப்படவில்லை. த்வயணுகம் முதலான உள்பொருள்களுக்கன்றோ தொடர்பு கூறப்படுகின்றது.

பதில் : அவ்வாறில்லை. காரணம் தொடர்பிற்கு முன்னர் அவை உள்பொருள்களாக இல்லை. பானை போன்ற பொருட்கள் குயவன், தடி, சக்கரம் முதலியவற்றின் செய்கைக்கு முன்னர் உள்பொருளாக வைசேஷிகர்களால் கொள்ளப்படவில்லை. மேலும், அவர்கள் களிமண்தானே பானையாக உருப்பெறுகின்றது என்பதையும் கொள்ளவில்லை. எனவே இதற்கு ஒரே மாற்று அவர்கள் இல்பொருளே தொடர்பு கொள்கின்றது என்பதை ஒத்துக் கொள்வதேயாகும்.

மறுப்பு : அப்படியாயின் இல்பொருளுக்கும் ஸமவாயமாகியத் (பிரிக்கமுடியாத) தொடர்பு (காரணத்தோடு) உண்டு என்பது ஒன்றும் நியாயத்திற்கு விரோதமாகாது.

பதில் : அப்படியன்று. காரணம் மலடிமகன் போன்ற விஷயத்தில் காணப்படவில்லை. (அபாவம் - இன்மை, இல்பொருள்). 'அபாவம்' என்பது இரண்டிற்கும் பொதுவாக இருந்த போதிலும் பானை முதலியவற்றின் முன் அபாவத்திற்குத்தான் தமது காரணங்களோடுத் தொடர்பு உண்டாகின்றது;

ஆனால் மலடிமகன் போன்றவற்றிற்கு அவ்வாறு தொடர்பு உண்டாவதில்லை என்றால் அபாவங்களுக்கிடையேயுள்ள வேற்றுமை கூறப்படவேண்டும். ஆனால், இது ஒன்றின்மை, இரண்டின்மை, எல்லாம் இன்மை, முன் அபாவம், அழித்தல் அபாவம், முழுதும் அபாவம் என்பவற்றிற்கு இட்டுச் செல்லும். இவற்றிற்கிடையேயுள்ள வேற்றுமையை எடுத்துரைக்க எவனொருவனாலும் இயலாது. அப்படி வேற்றுமையில்லை எனும் அளவில் பானையினுடைய முன் அபாவமே குயவன் முதலிய பொருள்களின் மூலம் பானையாகின்றது; சில்லோடுகள் என்னும் பெயருடையத் தனது காரணமான உள் பொருளோடு தொடர்புடையதாகின்றது. அப்படித் தொடர்பு பெறும்பொழுது உற்பத்தியாதல் முதலிய விஷயங்களுக்குரியதாகின்றது. ஆனால் இரண்டுமே அபாவமாக இருந்தபோதிலும், பானையின் அழித்தல் அபாவமானது. அப்படியில்லை. அதாவது பானையின் முன் அபாவமும், அழித்தல் அபாவமும், இரண்டும் அபாவமாயிருக்க அவற்றுள் முந்தையது பானையாகின்றது, காரணத்தோடு தொடர்பு பெறுகின்றது. உற்பத்தியாதல் முதலிய விஷயங்களுக்குரியதாகின்றது. பிந்தினதோ பானையாவதில்லை. காரணத்தோடு தொடர்பு பெறுவதில்லை. உற்பத்தியாதல் முதலிய விஷயங்களுக்குரியதாவதில்லை என்பது ஒவ்வாது. அழித்தல் அபாவம் முதலிய அபாவங்கள் உற்பத்தியாதல் முதலிய விஷயங்களுக்கு எற்றுணையும் உரியவையன்று. த்வயணுகம் முதலாக வழங்கப்படும் பொருள்களின் முன் அபாவம்தான் உற்பத்தியாதல் முதலிய விஷயங்களுக்கு உரியவை என்பதும் ஒவ்வாது. முழுதும் அபாவமும், அழித்தல் அபாவமும் போல் அபாவமாயிருத்தற்கு வேற்றுமையில்லை ஆதலின், (முன் அபாவமானது அழித்தல் அபாவம் போல் தானும் அபாவமாயிருத்தலால் உற்பத்தியாதல் முதலிய விஷயங்களுக்கு உரியதாகாது - ஆ).

மறுப்பு : ஆனால் நாங்கள் முன் அபாவத்திற்கு, பாவம் (உண்மை, உள்பொருள்) வருவதாகச் சொல்லவில்லையே (இல்பொருளை உள்பொருளாகக் கொள்வதில்லை).

பதில் : அப்படியாயின் உள்ளது உள்ளதாகின்றது. உதாரணமாக பானை பானையாகின்றது; ஆடை ஆடையாகின்றது. இதுவும் கூட இல்பொருள் உள்பொருளாவது போல் பிரமாணங்களுக்கு எதிரானதாகும்.

சாங்கியர்களின் பரிணாமக் கொள்கையும், முன்பு இல்லாதத் தன்மை உண்டாதலையும், ஏற்கெனவே இருக்கின்றத் தன்மை அழிதலையும் கொள்வதினால் வைசேஷிகர்களின் கொள்கையினின்று அது வேறுபடுவதில்லை. ஒருபொருளின் தோற்றம், மறைவு இவற்றை ஏற்றுக் கொண்டாலும் தோற்றம், உள்ளதெனவும், மறைவு இல்லதெனவும் கொள்வதால் முன்னர் கூறியவாறே பிரமாணங்களுக்கு எதிரானதேயாகும். (இக்கொள்கையிலும் உள்பொருள் இல்பொருளாகிறது, இல் பொருள் உள் பொருளாகிறது. இந்த முரண்பாட்டினை ஊகித்து அறிக).

அதனால் உற்பத்தியாதல் முதலான நிலைமைகள் அதன் காரணத்திற்குத்தான் இருக்கின்றன என்பதும் மறுக்கப்படுகின்றது. (இருக்கின்ற

நிலைமை கெட்டு வேறோர் நிலைமை வந்ததென்றால், உள்ளது இல்லதாதலையும், இல்லது உள்ளதாதலையும் அறிந்து கொள்க).

இப்போது மீந்திருக்கும் ஒரே கொள்கையின்படி ஒரே பொருள்தான் மேடையில் பல்வேறு வேடங்களில் தோன்றும் நடிகன்போல் உற்பத்தியாதல், அழிதல் போன்ற தன்மைகளோடு (விகாரங்களுடையப் பல பொருள்களாக) அறியாமையினால் பலவாறு கற்பனை செய்யப்படுகின்றது. உள்ளது எனும் உணர்வு பிறழாமையினாலும், மற்றைய உணர்வுகள் பிறழ்வதினாலும் உண்மைப்பொருள் ஒன்றுதான் உள்ளது எனும் பகவானின் கொள்கையானது "இல்லாதது உள்ளதாவதில்லை" (2-16) என்று இச்சுலோகத்தில் எடுத்தோதப்பட்டது.

மறுப்பு : பிறகு ஆத்மா விகாரமற்றதாயின், கர்மத்தை முற்றும் தவிர்த்தல் சாத்தியமாகாது என்பது எப்படி?

பதில் : குணங்கள் மெய்ப்பொருளாயினும் அல்லது அறியாமையினால் கற்பிக்கப்படுவதாயினும், கர்மம் அல்லது செய்கை அல்லது தொழில் என்பது அவற்றின் தன்மையாகும். அறியாமையினால் அது ஆத்மாவிடம் ஏற்றப்படுகின்றது. அதனால்தான் "அஞ்ஞானியான எவனும் செய்கையை ஒரு கணப்பொழுதேனும் தவிர்ப்பானில்லை" (3-5) என்று கூறப்பட்டது. அதேசமயம் ஞானியோ, ஞானத்தினால் அஞ்ஞானம் நீங்கியவனாதலால், அறியாமையினால் ஏற்றப்பட்டதின் மீதம் அவனிடம் இல்லாததினால், கர்மத்தைத் தவிர்க்கக் கூடியவனாவான். கண்ணில் திமிரம் என்னும் நோயுள்ளவனுக்குத் தெரிந்த இரண்டு சந்திரன் அத்திமிரம் நீங்கியவுடன் தெரியாதன்றோ. அதனால், "எல்லாக் கர்மங்களையும் மனத்தால் துறந்து" (5-13) என்று உபதேசித்ததுப் பொருத்தமுடையதாம். அங்ஙனமே "மனிதன் தனக்குரியக் கர்மத்தில் நிலைபெறுவதால் ஸித்தியடைகிறான்" (18-45) என்பதும் "மனிதன் தனக்குரிய கர்மத்தால் அவனை அருச்சித்து ஸித்தியடைகிறான்" (18-46) என்பதும் பொருத்தமுடையவையே ஆகும்.

கர்மத்தால் எய்தப்படும் எந்த ஸித்தியானது, ஞான நிஷ்டையில் நிலைத்தற்குத் தகுந்த ஸித்தியாகக் கூறப்பட்டதோ அதன் பயனாகிய நைஷ்கர்ம்ய ஸித்தி (கர்மம் நீங்கிய நிலை) என்னும் ஞான நிஷ்டையாகிய ஸித்தியைக் கூறுவதற்காக இச்சலோகம் தொடங்கப் பெறுகின்றது.

**असक्तबुद्धिः सर्वत्र जितात्मा विगतस्पृहः ।**
**नैष्कर्म्यसिद्धिं परमां संन्यासेनाधिगच्छति ॥४९॥**

**அஸக்தபுத்தி: ஸர்வத்ர ஜிஷாத்மா விகதஸ்ப்ருஹ:**
**நைஷ்கர்மயஸித்திம் பரமாம் ஸந்ந்யாஸேனாதிகச்சதி ॥ 49॥**

***எதனிடத்தும் பற்றில்லா புத்தியுடையவனாய், அகக்கரணத்தை வென்று ஆசையற்றவன் நைஷ்கர்ம ஸித்தியை, கர்மம் நீங்கிய நிலையை துறவினால் எய்துகிறான்.***

எவனொருவனது புத்தி அல்லது அந்தக்கரணம் பற்றுவைத்தற்குக் காரணமாகிய மனைவி, மக்கள் முதலானோர் மீது பற்றில்லாததாய், எவன் அகக்கரணத்தை வென்று, உடலின்மீதும் உயிர்வாழ்க்கையின் மீதும் போகத்தின் மீதும் ஆசையில்லாதவனாக இருந்து ஆத்மாவை அறிந்தவனோ அவன் நைஷ்கர்ம்ய ஸித்தி என்னும் கர்மம் நீங்கிய நிலையை எய்தப்பெறுகிறான். கர்மமில்லாப் பிரம்மத்தை ஆத்மாவாக உணர்கின்ற மெய்யுணர்வினால் கர்மங்கள் நீங்கப் பெறுவது நிஷ்கர்மயம் அல்லது நைஷ்கர்ம்யம் அதாவது கர்மமில்லா ஆத்மாவாக கர்மம் நீங்கி நிற்கும் நிலையாகும். இந்நிலை முன்னர் கூறப்பட்ட கர்மத்தால் எய்தப் பெறும் நிலையை விடமேலானதாகும். இது துறவினால், மெய்யறிவினால் அல்லது சகல கர்மத்துறவினால் உடனடியாக எய்தப்படும் விடுதலையாகும். இதுவே "அனைத்துக் கர்மங்களையும் மனத்தால் துறந்து, செய்யாதவனாகவும், செய்விக்காதவனாகவும் இருக்கின்றான்" (5-13) என்று கூறப்பட்டுள்ளது.

முன்னர் கூறப்பட்ட ஈசுவரனை தனக்குரிய கர்மத்தால் வழிபடுவதின் மூலம் எய்தப்படும் ஆத்ம நிஷ்டையில் நிலை பெறுவதாகிய ஸித்தியை எய்தப் பெற்றவன், நைஷ்கர்மய ஸித்தி அல்லது கர்மம் நீங்கிய நிலை அல்லது பரிசுத்தமான ஆத்மாவில் நிலைபெறுவதைத் எதன் மூலம் எய்தப் பெறுகின்றானோ அதனை இப்போது எடுத்துரைக்கிறார்.

**सिद्धिं प्राप्तो यथा ब्रह्म तथाप्नोति निबोध मे ।**
**समासेनैव कौन्तेय निष्ठा ज्ञानस्य या परा ॥५०॥**

**ஸித்திம் ப்ராப்தோ யதா ப்ரஹ்ம ததாப்நோதி நிபோத மே ।**
**ஸமாஸேனைவ கௌந்தேய நிஷ்டா ஜ்ஞானஸ்ய யா பரா ॥ 50॥**

***குந்திமைந்த! ஸித்தியடைந்தவன் எங்ஙனம் ஞானத்தின் முடிந்த எல்லையாகிய பிரம்மத்தை எய்துகிறான் என்பதை என்னிடமிருந்து அறிவாயாக.***

தனக்குரியக் கர்மத்தினால் ஈசுவரைனை வழிபட்டு, அவனது அருளினால் தனது உடலும், புலன்களும் ஞானநிஷ்டைக்கு உரியதாகிய ஸித்தியை எய்தப் பெறுகிறான். இங்கு கூறப்படுவது ஆரம்பத் தகுதியேயன்றி இறுதியாக எய்தப்படும் நிலை அல்ல. இனி கூறப்போகும் இறுதி நிலையை எய்துவதற்கு எடுக்கப்போகும் முயற்சிகளுக்கு இது ஒரு முன்னுரையேயாகும். ஞான நிஷ்டையின் மூலம் பிரம்மத்தை, பரமாத்மாவை எம்முறையினால் எய்த முடியுமோ அதனை உறுதியாக, எனது வார்த்தைகளால் விரிவாகவன்று சுருக்கமாக அறிந்து கொள் என்று கூறுகிறார்.

எம்முறையினால் பிரம்மத்தை அடைகின்றானோ அம்முறையினை அறிந்து கொள் என்று பிரம்மத்தை எய்தும் நிலை மேலே கூறப்பட்டது. அதனை இன்னதென்று உணர்த்தும் முகத்தான் "ஞானத்தின் முடிந்த எல்லை" என்கிறார். நிஷ்டை என்றால் எல்லை, முடிவு என்று பொருளாகும். அது

எப்படிப்பட்டது? ஆத்ம அறிவு எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டது. அது எப்படிப்பட்டது? ஆத்மா எப்படிப்பட்டதோ அப்படிப்பட்டது. அது எப்படிப்பட்டது? பகவானால் விளக்கப்பட்டும், உபநிஷத்துக்களால் உரைக்கப்பட்டும், நியாயங்களினால் நிர்ணயிக்கப்பட்டும் உள்ளதோ அப்படிப்பட்டது.

மறுப்பு : அப்படியாயின் அறிவு அறியப்படும் பொருளின் வடிவத்தையுடையது. ஆனால் ஆத்மாவோ அறியப்படும் பொருளாகவும், உருவத்தையுடையதாகவும் ஓரிடத்தும் கொள்ளப்படவில்லை. (அறிவு அறியப்படும் உருவத்தைக் கொள்வதாலும், ஆத்மா அறியப்படும் பொருளாகாததினாலும், அதற்கு உருவமின்மையாலும், அதற்கு வடிவ ஞானம் செல்லாது என்பதற்கே இம்மறுப்பாகும்).

பதில் : ஆத்மாவிற்கு உருவமுண்டு என்பதை பின்வரும் சுருதிகள் எடுத்துரைக்கின்றன. ''சூரியன் போன்ற நிறமுடையது'' (சுவே. - 3-8); ''ஒளிவடிவமானது'' (சா. 3-14-2); ''தன்னொளி உடையது'' (பி. 4-3-9).

மறுப்பு : அவ்வாறன்று. இவ்வாறு கூறப்பட்டது ஆத்மா இருள்வடிவமானதன்று என்பதை உறுதி செய்வதற்காகவேயாம். ஆத்மாவிற்கு பொருள் வடிவமோ, குணவடிவேமோ இல்லை அதற்கு இருள் வடிவம் மட்டுமே உண்டு என்று கூறப்பட்டப் பொழுது அதனை மறுக்கும் முகத்தான் 'சூரியன் போன்ற நிறமுடையது' என்று கூறப்பட்டது. மேலும் உருவமில்லை என்பது 'ஆத்மா உருவமற்றது' (கட-3-15) என்று குறிப்பாக மறுக்கப்பட்டுள்ளது. ஆத்மா அறிவினால் பற்றப்படும் பொருள் அல்ல (ஆத்மா அறிவினால் பற்றப்படாது) என்பது 'இதன் உருவம் பார்வைக்குப் புலனாவதில்லை. இதனை ஒருவனும் கண்ணால் காணமுடியாது' (சுவே.4-20) 'ஒலியும் ஊறும் (ஸ்பரிசம்) இல்லாதது' (கட-3-15) சுருதிகளில் உறுதி செய்யப்பட்டுள்ளது. எனவே ஆத்மவடிவமான அறிவு உண்டாகும் என்பது ஏற்றுக் கொள்ள முடியாததாகும்.

இவ்வாறிருக்கையில் ஆத்மாவை அறிதல் எங்ஙனம் முடியும்? எந்த அறிவு எந்த விஷயத்தைப் பற்றியதோ அஃதெல்லாம் அதனது (அந்த விஷயத்தின்) உருவமுடையதாக இருக்கின்றது. அறிவு, ஆத்மா இரண்டிற்கும் உருவமில்லையாயின் அதனுடைய தியான நிஷ்டையானது (ஆத்ம அறிவினுடைய தியான முடிவு அல்லது ஆத்மாவை நேரே கண்டுணர்ந்து தேறுவது - ஆ). எங்ஙனம் அமையும்?

பதில் : அவ்வாறன்று. ஆத்மா மிகத் தூய்மையாகவும், மிகத் தெளிவாகவும், மிக நுண்மையாகவும் இருக்கக் கூடியதாகும். புத்தியும் ஆத்மாவைப்போல் மிகத் தூய்மையாக இருப்பதினால் அது ஆத்மாவின் அறிவு வடிவத்தின் சாயலைக் கொள்ளுதல் சாத்தியமாகும். புத்தியின் சாயலுடைத்து மனம், மனதின் சாயலுடையன புலன்கள், புலன்களின் சாயலுடைத்து உடல். (ஆத்மாவிற்கும், புத்திக்கும் தூய்மையாயிருத்தல், தெளிவாயிருத்தல் என்னும் ஒற்றுமைகளிருப்பதினால் ஆத்மசைதன்ய சாயலாய் வியாபிக்கப்பெற்று அறிவின் விகாரத்தையுடையது புத்தி; அந்த ஆத்ம அறிவுச் சாயலோடமைந்த

புத்தியினால் வியாபிக்கப் பெற்றது மனம்; அந்த ஆத்ம அறிவுச் சாயலோடமைந்த மனத்தினால் வியாபிக்கப் பெற்றவை புலன்கள்; அந்த ஆத்ம அறிவுச் சாயலோடமைந்த புலன்களால் வியாபிக்கப் பெற்றது ஸ்தூல உடல் என்பதை அறிந்து கொள்ளவும் – ஆ). ஆகவே பாமர மக்கள் ஸ்தூல உடலையே ஆத்மாவாகக் காண்கின்றனர். உடலையே அறிவென வாதிடும் லோகாயதவாதிகள் அறிவுடைய உடலே ஆத்மாவெனக் கூறுகின்றனர். அதுபோல் சிலர் புலன்களே அறிவென வாதிடுகின்றனர். சிலர் மனமே அறிவென வாதிடுகின்றனர். சிலர் புத்தியே அறிவென வாதிடுகின்றனர். வேறு சிலரோ புத்தியையும் தாண்டி உள்ளே உள்ளதாய் 'அவ்யாக்ருதம்' என்னும் பெயருடையதாய் அவித்யா வடிவமான அவ்யக்தமே ஆத்மா எனக் கொண்டுள்ளனர். புத்தி முதல் உடல் ஈறாகவுள்ள எங்குமே ஆத்ம அறிவுச் சாயலுடையது, (புத்தி முதலியன) ஆத்மாவென மயங்குதற்குக் காரணமாயுள்ளன. ஆகவே ஆத்மாவைப் பற்றிய அறிவை விதிமுகத்தால் உணர்த்துவது அவசியமன்று. அப்படியாயின் எது அவசியம்? என்றால், பெயர், உருவம் முதலிய அநாத்மாக்களை அதாவது ஆத்மா அல்லாதவற்றைப் புறந்தள்ளுவதே அவசியமாகும். அவ்வாறே ஆத்ம சைதன்ய உணர்வு என்னவென்று உணர்த்துவதும் தேவையற்றதாகும். காரணம் அவ் உணர்வு அறியாமையினால் ஏற்றப்பட்ட எல்லாப் பொருள்களின் உருவங்களோடும் சேர்ந்தே உணரப்படுகின்றது. ஆகவே விஞ்ஞானவாதிகளான (எல்லாம் உணர்வுகள் என்னும்) பௌத்தர்கள் உணர்வுகளைத் தவிர வேறொன்றுமில்லையென்றும், அவ் உணர்வுகள் தன்னால் அறியப்பட வேண்டியவையென்றும் அதனால் அவற்றிற்கு வேறோர் பிரமாணம் தேவையில்லையென்றும் கூறுகின்றனர். எனவே அறியாமையினால் பிரம்மத்தின் மீது ஏற்றப்பட்டவற்றைப் புறந்தள்ளுதல் மாத்திரம் நாம் செய்ய வேண்டுமேயன்றி, பிரம்மமானது யாவர்க்கும் நன்கு தெரிந்ததாக இருப்பதால் அதனை உணர்த்துவதற்கு முயல வேண்டாம். இவ்வாறு அது (பிரம்மம்) நன்கு தெரிந்ததாகவும், எளிதில் அறியக் கூடியதாகவும், மிக அருகிலுள்ளதாகவும், ஆத்மாவாகவும் (ஒருவனுக்குத்தான் என்பது எதுவோ அதுவாகவும்) இருந்த போதிலும், அவிவேகிகளான பகுத்தறிவில்லாதார்க்கு, அறியாமையினால் கற்பிக்கப்பட்டப் பெயர், உருவம் என்பவற்றின் பல தோற்றங்களால் புத்தி கவரப் பெற்றவர்க்கு அது தெரியாததாகவும், அறிதற்கு அரியதாகவும், வெகு தூரத்திலிருப்பதாகவும், வேறு பொருளாகவும் தோன்றுகின்றது. இதற்கு மாறாக புறத்தோற்றங்களினின்று புத்தி நீங்கப்பெற்று ஆச்சாரியனது அருளையும், மனத்தெளிவையும் எய்தப் பெற்றவர்க்கு அது இன்பமானதாகவும், நன்கு தெரிந்ததாகவும், எளிதில் அறியக் கூடியதாகவும், மிக அருகிலுள்ளதாகவும் இருப்பது பிரம்மத்தைத் தவிர வேறொன்றுமில்லை. அதனால்தான் ''பிரம்மஞானமானது நேரடியாக அறியக்கூடியது, தர்மத்தினின்று நீங்காதது'' (9-2) என்று கூறப்பட்டுள்ளது.

அடுத்து தம்மை அறிஞராகக் கருதும் சிலர் "ஆத்மாவிற்கு உருவமில்லையாதலால், புத்தி அந்த ஆத்மப் பொருளைப் பற்றாது, மெய்யறிவு நிஷ்டை சாதிக்கத்தக்கதன்று'' என்றும் கூறுகின்றனர். இது உண்மையே.

யாருக்கு என்றால், குருவிடம் தீட்சை பெறாதவர்க்கு, வேதாந்த நூல்களைக் கற்று உணராதவர்க்கு, புறத்திலுள்ள புலனுகர் பொருள்களில் புத்தி முற்றும் அழுந்தப் பெற்றவர்க்கு, பிரம்மாணங்களில் நேரடியாகப் பயிற்சி இல்லாதவர்க்கு மேலே கூறியுள்ளது உண்மையாகும். ஆனால் அதேசமயம், இவர்க்கு மாறானவர்க்கு (குரு தீட்சை போன்றவற்றைப் பெற்றவர்க்கு) உணர்வதும், உணரப்படுவதுமாகிய உலகப் பொருளில் - துவைதப் பொருளில் புத்தி (துவைதம் மெய்யென்னும் எண்ணம் இல்லாதார்க்கு) ஒருசிறிதும் நிலை பெறாதவர்க்கு, ஆத்ம அறிவைத் தவிர வேறோர் உண்மை உணரப்படுவதில்லை. "இது இவ்வாறுதான் உள்ளது வேறுவிதமாகவன்று" (அத்வைதம்தான் மெய்ப்பொருள், துவைதம் அறியாமையினாலானது) என்று எடுத்துக்காட்டியுள்ளோம். பகவானும் அங்ஙனமே "எல்லா உயிர்களுக்கும் எது இரவோ அதில் உண்மையைக் காணும் முனிவன் விழித்திருக்கிறான்" (2-69) என்று கூறியுள்ளார். எனவே புறத்தோற்றங்களின் மீதான பேத புத்தியைத் தவிர்த்தலே ஆத்ம வடிவத்தைப் பற்றுதற்குக் காரணமாகும். ஆத்மாவானது எக்காலத்திலும், யாருக்கும் தெரியாத பொருளன்று, அது அடையவேண்டியதோ, தள்ள வேண்டியதோ அல்லது கொள்ள வேண்டியதோ அன்று. ஆத்மா தெரியாத ஒன்றாயின் தனது நன்மைக்காக ஒருவன் மேற்கொள்ளும் எல்லாச் செயல்களும் வீணேயன்றோ. மேலும், உணர்வில்லாத உடல் போன்றவற்றின் நன்மைக்காக என்று கருதுவதும் தகாது. அவ்வாறே இன்பம் இன்பத்திற்காக, துன்பம் துன்பத்திற்காக என்றும் கருத முடியாது. தவிர வேள்வி போன்ற கர்மங்கள் எல்லாம் ஆத்ம அறிவை எய்துவதையே நோக்கமாகக் கொண்டுள்ளன. ஒருவன் தனது உடலை அறிந்து கொள்ள வேறு பிரமாணம் தேவையில்லாதது போல் உடலைவிட அருகிலிருக்கும் ஆத்மாவை அறிந்து கொள்ளவும் வேறு பிரமாணம் தேவையில்லை. இவ்வாறு ஆத்மஞான நிஷ்டை அதாவது ஆத்ம அறிவில் நிலைபெறுவது பகுத்தறிவுள்ள விவேகிகளுக்கு மிகவும் எளிதாக அமையப் பெறுகிறது என்பது தெளிவாகத் தெரிகின்றது.

எவர்களுக்கு அறிவு உருவமற்றதோ, நேரடியாக உணரப்படாததோ அவர்களுக்கு அறிவின் வழியேதான் அறியப்படும் பொருள் அறியப்படுகின்றது. ஆகவே இன்பம் முதலியன போல் அறிவும் மிக நன்றாக அறியப்படுகின்றது என்பதை அவர்கள் ஏற்றுக் கொள்ள வேண்டும். மேலும் அறிவை அறியப்புகுதல் என்பதும் ஏற்றுக்கொள்ளக் கூடியதன்று. அறிவு தெரியாததாயிருப்பின் அது அறியப்படும் பொருள்போல் அறியப்பட வேண்டியதாகும். பானை முதலியப் பொருள்களை அறிவினால் அறியப் புகுவதுபோல் அறிவையும் பிறிதோர் அறிவினால் அறியவேண்டுமென்றால் அது தேவையில்லை. உண்மை என்னவென்றால் அறிவு என்பது எல்லோர்க்கும் நன்றாகத் தெரிந்ததாக உள்ளது. அவ்வாறே அறியும் பொருளும் எல்லோர்க்கும் நன்றாகத் தெரிந்ததாம். ஆகவே, அறிவை அறிந்து கொள்ள எந்தவொரு முயற்சியும் தேவையில்லை. அநாத்மாவை ஆத்மாவென்று கருதுவதைத்தான் நாம் நீக்க முயலவேண்டும். எனவே, ஞானநிஷ்டையானது எளிதில் எய்தற்குரியதாகும்.

மிகவுயர்ந்த இந்த ஞானநிஷ்டையானது எவ்வாறு எய்தப்படுகிறது?

**बुद्धया विशुद्धया युक्तो धृत्यात्मानं नियम्य च ।**
**शब्दादीन्विषयांस्त्यक्त्वा रागद्वेषौ व्युदस्य च ॥५१॥**

**புத்த்யா விஶுத்தயா யுக்தோ த்ருத்யாத்மானம் நியம்ய ச ।**
**ஶப்தாதீன்விஷயாம்ஸ்த்யக்த்வா ராகத்வேஷௌ வ்யுதஸ்ய ச ॥ 51॥**

*தெளிந்த புத்தியுடையவனாய் தன்னை உறுதியினால் அடக்கி ஒலி முதலிய விஷயங்களை ஒழித்து, விருப்புக்களை விடுத்தும்.*

தெளிந்த என்றால் ஐயந்திரிபற்றது, கள்ளமற்றது என்று பொருளாகும். புத்தியினால் அதாவது நிச்சயம் செய்யும் புத்தியினால் தன்னை அடக்கி - உடல் மற்றும் புலன்களின் சேர்க்கையை வயப்படுத்தி, ஒலி முதலிய விஷயங்களை ஒழித்து என்றால் உடலைப் பேணுவதற்குத் தேவையானப் பொருட்களைத் தவிர அதீதமானப் போகப் பொருட்களைத் தவிர்த்து; விருப்பு வெறுப்புக்களை விடுத்து, அப்படி உடலைப் பேணுவதற்குத் தேவையானப் பொருட்களின் மீது கூட விருப்பு வெறுப்புக்கள் இல்லாது.

பிறகு,

**विविक्तसेवी लघ्वाशी यतवाक्कायमानसः**
**ध्यानयोगपरो नित्यं वैराग्यं समुपाश्रितः ॥५२॥**

**விவிக்தஸேவீ லக்வாஶீ யதவாக்காயமானஸ:**
**த்யானயோகபரோ நித்யம் வைராக்யம் ஸமுபாஶ்ரித: ॥ 52॥**

*தனிமையை நாடுபவனாய், உண்டி சுருங்கியவனாய், மெய்மொழிமனத்தை அடக்கியவனாய், எப்போதும் தியானத்திலும் யோகத்திலும் கருத்துடையவனாய், வைராக்கியம் உடையவனாய்;*

தனிமையை நாடுபவன் என்றால் காடு, ஆற்றங்கரை, மலைக்குகை போன்ற தனிமையான இடங்களை நாடுபவன் ஆவான். உண்டி சுருங்கியவன் (அளவாகவும், உண்டபின் நலம் பயப்பதாகவும், சுத்தமாகவும் உள்ள) எளிய உணவை உண்பவன். இவ்வாறு தனிமையை நாடி எளிய உணவை உண்பது தூக்கத்தை விலக்கி மனத்தைத் தெளியச் செய்கின்றன. ஆகவே இவையிரண்டும் குறிப்பிடப்படுகின்றன. ஞான நிஷ்டைக்குத் தகதியுடையவன் மனம் மொழி மெய்யை அடக்கியவனாக இருத்தல் வேண்டும். இவ்வாறு புலன்கள் அனைத்தும் ஓயப்பெற்றவன் எப்போதும் தியானத்தையும், யோகத்தையும் உயர்ந்தவையாகக் கொண்டு செய்தல் வேண்டும். தியானம் என்றால் ஆத்மவடிவத்தைச் சிந்தித்தல் என்றும், யோகம் என்றால் ஆத்மாவின் மீது மனத்தை ஒருமுகப்படுத்துதல் என்றும் பொருளாகும்.

எப்போதும் என்னும் சொல் மந்திர ஜெபம் முதலிய பிறகாரியங்கள் இல்லை என்பதை உணர்த்துகின்றது. வைராக்கியம் உடையவன் என்றால் இம்மை மறுமைக்குரியப் பொருட்களின் மீது ஆசையற்றவன் என்று பொருளாகும். பின்னர்,

**अहङ्कारं बलं दर्पं कामं क्रोधं परिग्रहम् ।**
**विमुच्य निर्ममः शान्तो ब्रह्मभूयाय कल्पते ॥५३॥**

**அஹங்காரம் பலம் தர்ப்பம் காமம் க்ரோதம் பரிக்ரஹம் ।**
**விமுச்ய நிர்மம: ஶாந்தோ ப்ரஹ்மபூயாய கல்பதே ॥ 53॥**

***அகந்தை, வலிமை, செருக்கு, காமம், சினம் முதலியவற்றையும் உடைமையையும் துறந்து, எனது என்னும் எண்ணம் ஒழிந்து, அமைதியுடையவன் பிரம்மம் ஆவதற்கு உரியவனாகிறான்.***

அகந்தை என்பது அநாத்மாவாகிய உடல் முதலியவற்றை ஆத்மாவாகக் கருதுவதாகும். வலிமை என்பது காமம், ஆசை இவையிரண்டும் இணைந்த வலிமையேயன்றி உடல் போன்ற மற்றவற்றின் வலிமையன்று. இவை (உடல் வலிமை) இயல்பாக இருப்பதினால் இவற்றைத் துறத்தல் இயலாது. செருக்கு என்பது களிப்பிற்குப் பின் வருவது தர்மத்தை மீறச் செய்வது. 'களிப்புடையவன் செருக்கடைகிறான், செருக்கு தர்மத்தை மீறச் செய்கிறது' (ஆபஸ்தம்ப - தர்ம சூத்திரம் 1-13-4) என்று சுருதி கூறுகின்றது. காமம் என்றால் விருப்பமாகும். சினம் என்றால் ஆத்திரமாகும். உடைமை என்பது ஒருவன் மனம் மற்றும் புலன்களுக்குரிய எல்லாக் குற்றங்களையும் முற்றிலும் ஒழித்து விட்டாலும் உடலைப் பேணுவதற்கும் தர்மத்தைக் கடைப்பிடிப்பதற்கும் புறப்பொருட்கள் தேவைப்படுகின்றன. (தனக்கு விருப்பமில்லாவிட்டாலும் தர்மத்தைக் கடைப்பிடிக்கத் தேவைப்படும் பொருட்களை தனக்குச் சொந்தமாகக் கொள்ள வேண்டிவரும்.) இப்படிப்பட்ட உடைமைகளையும் கூடத் துறந்து அவன் பரமஹம்ஸ பரிவ்ராஜனாக மாறுகிறான், அவன் தனது உடல் வாழ்க்கையைக் கூடத் தன்னுடையதாகக் கருதுவதில்லை. அமைதியுடையவன் களிப்பும், கவலையும் அற்றவன் என்று பொருளாகும். இப்படிப்பட்ட ஞான நிஷ்டன் அதாவது ஞானத்தில் நிலைபெற்றவன் எவனோ அவன் பிரம்மமாவதற்கு (பிரம்மத்தை நேரே கண்டுணர்ந்து அதுவாக இருப்பதற்கு) உரியவனாகிறான்.

இவ்வாறு,

**ब्रह्मभूतः प्रसन्नात्मा न शोचति न काङ्क्षति ।**
**समः सर्वेषु भूतेषु मद्भक्तिं लभते पराम् ॥५४॥**

**ப்ரஹ்மபூத: ப்ரஸன்னாத்மா ந ஶோசதி ந காங்க்ஷதி ।**
**ஸம: ஸர்வேஷு பூதேஷு மத்பக்திம் லபதே பராம் ॥ 54॥**

*பிரம்மமானவனாய்த் தான் தெளிந்தவன் வருந்துவதில்லை, விரும்புவதில்லை, எல்லா உயிர்களையும் சமமாகக் கருதி என்னிடத்து மேலான பக்தியை அடைகிறான்.*

பிரம்மமானவனாய், பிரம்மத்தை அடைந்தவனாய் (உயிர் வாழும் காலத்தே தீமைகள் எல்லாம் நீங்கி, எல்லாவற்றினும் உயர்ந்த பேரின்பமாகிய பிரம்மத்தை ஆத்மாவாக அனுபவிப்பனாய்-ஆ) தான் தெளிந்தவன் அதாவது அகத்தினுள்ளிருக்கும் ஆத்மாவினிடத்துத் தெளிவு பெற்றவன் (அனர்த்தங்களெல்லாம் நீங்கப் பெற்றமையினால் ஆத்மாவிடம் பரமானந்தம் உண்டாகப் பெற்ற ஜீவன் முக்தன்.-ஆ) தன்னிடம் ஏதேனும் ஒரு பொருள் இல்லையென்றாலோ அல்லது தன்னிடம் ஏதேனும் குற்றம் இருந்தாலோ அவன் வருந்துவதில்லை. விரும்புவதில்லை. (அவனுக்கு அடைய வேண்டியதொன்றும் இல்லாமையினால் குறையில்லை, நீக்க வேண்டியதொன்றும் இல்லாமையினால் குற்றமுமில்லை) அடையாத பொருளை விரும்புதல் என்பது பிரம்மத்தை அறிந்தவனுக்குப் பொருந்தாது. அதனால்தான் 'அவன் வருந்துவதில்லை, விரும்புவதில்லை' என்று சொல்லப்பட்டிருக்கிறது. 'மகிழ மாட்டான்' என்று மற்றோர் பாடம் உண்டு. எல்லா உயிர்களிடத்தும் சமமானவன் என்றால் அவன் தன்னைப் போன்றே எல்லா உயிர்களின் இன்ப துன்பங்களையும் சமமாகக் காண்கிறான்; அதாவது அவை தன்னைப் பாதிப்பதைப் போலவே மற்றவர்களையும் பாதிப்பதைக் காண்கிறான். அவன் எல்லா உயிர்களிடத்தும் ஒரே ஆத்மாவைப் பார்க்கிறான் எனறு இதற்குப் பொருள் அல்ல. அது அடுத்த சுலோகத்தில் கூறப்படுகிறது. எவன் இத்தகைய ஞான நிஷ்டனோ, ஞானத்தில் நிலைபெற்றவனோ அவன் பரமேசுவரனாகிய என்னிடத்து மிகவுயர்ந்த நான்காவதாகிய பக்தியை ஞானமாகிய பக்தியைப் பெறுகிறான். காரணம் 'நால்வகையான மனிதர்கள் என்னை வழிபடுகின்றனர்' (7-16) என்று முன்னரே கூறப்பட்டுள்ளது.

அதன் பிறகு ஞானமாகிய,

**भक्त्या मामभिजानाति यावान्यश्चास्मि तत्त्वतः ।**
**ततो मां तत्त्वतो ज्ञात्वा विशते तदनन्तरम् ॥५५॥**

**பக்த்யா மாம் அபிஜாநாதி யாவான் யஶ்சாஸ்மி தத்த்வத: ।**
**ததோ மாம் தத்த்வதோ ஜ்ஞாத்வா விஶதே தத் அனந்தரம் ॥ 55॥**

***பக்தியினால் என்னை நான் எவ்வளவுடையேன், யாராக இருக்கின்றேன் என்று உண்மையில் அறிகின்றான். அங்ஙனம் என்னை உண்மையாய் அறிந்து உடனே என்னுள் புகுகின்றான்.***

பக்தியினால் அதாவது ஞானமாகிய பக்தியினால் அவன் பல்வேறு வகையான உபாதிகளால் நான் எவ்வளவுடையேனாக இருக்கின்றேனோ அவ்வளவுடையோனாக அறிகின்றான் மேலும் அவன் என்னை உபாதிகளின் வேற்றுமைகளற்றவனாகவும், பரம புருஷனாகவும் ஆகாயம் போன்று

இருப்பவனாகவும், அத்வைதமாகவும் (இரண்டற்றவனாகவும்) உணர்வு மயமானவனாகவும் (சைதன்யம்) பிறவாதவனாகவும் மூப்பில்லாதவனாகவும் இறவாதவனாகவும், அச்சமில்லாதவனாகவும், அழிவில்லாதவனாகவும், உண்மையில் அறிகின்றான். இவ்வாறு என்னை அறியும் அறிவு பெற்றவுடன் அவன் உடனே என்னுள் புகுகின்றான்.

இங்கு அறிதலும், உட்புகுதலும் வெவ்வேறு செயல்களாகக் கொள்ளப்படவில்லை. புகுதல் என்பது என்ன? அதுவும் ஞானம்தான். ஏனெனில் ஞானத்திற்கு அதைத் தவிர வேறு பயனில்லை. காரணம் 'என்னை க்ஷேத்ரக்ஞனாகவும், அறிவாயாக' (13-2) என்று பகவான் முன்பே கூறியுள்ளார்.

மறுப்பு : 'ஞான நிஷ்டையின் மூலம் என்னை அறிகிறான்' என்று கூறியது முரண்பாடில்லையா. எங்ஙனம் முரண்பாடெனில் ஒரு பொருளைப் பற்றிய அறிவு ஒருவனுக்கு உண்டாகும் பொழுது அக்கணமே அவன் அப்பொருளை அறிந்து விடுகிறான். எனவே ஞானத்தை அடுத்தடுத்துச் செய்தலாகிய ஞான நிஷ்டை அவசியமில்லை. ஆகவே 'அவன் என்னை அறிவினால் அறிகிறானில்லை; மாறாக அறிவு அடுத்தடுத்து வருகின்ற ஞான நிஷ்டையினால் அறிகிறான்' என்று கூறியது முரண்பாடேயாகும்.

பதில் : இதில் முரண்பாடில்லை. அறிவு உண்டாவதற்கும், முதிர்ந்து கனிவதற்கும் காரணமாகி, இடையூறில்லாத ஞானத்தின் முடிவாகிய ஆத்ம அனுபவ நிச்சயம் எதுவோ அதுதான் இங்கே நிஷ்டை என்னும் சொல்லால் வழங்கப்படுகின்றது. சாத்திரம், ஆச்சாரியன் இவர்களின் உபதேசத்தினால் அறிவு பிறப்பதற்கும், அது முதிர்ந்து கனிவதற்கும் காரணமாகவும் அதற்குத் துணையாகவுமுள்ள 'புத்தித் தெளிவு' (18-51) 'பணிவு' (13.7) முதலியவற்றை விழைந்து அவ்உபதேசத்தின் மூலம் பிறந்த அறிவானது 'க்ஷேத்ரக்ஞனும் பரமாத்மாவும் ஒன்று' என்னும் ஞானமானது கர்த்தா, கருவிகள் என்னும் பேத புத்தியினால் அமைகின்ற எல்லாக் கர்மங்களையும் துறப்பதோடுத் தன் ஆத்ம அனுபவ நிச்சய வடிவமாகவும் நிற்பது எதுவோ அதுவே மேலான ஞான நிஷ்டை என்று கூறப்படுகிறது. துயர்ப்படுவோர் முதலியோரது பக்தியை ஒப்பிடும் பொழுது (7-16) இந்த ஞான நிஷ்டையானது மிகவுயர்ந்த நான்காவது பக்தி (7-17) எனக் கூறப்பட்டுள்ளது. இந்த மேலான பக்தியினால் ஒருவன் பகவானை உண்மையில் அறிகிறான், அப்படி அறிந்தவுடன் 'ஈசுவரன் வேறு க்ஷேத்ரக்ஞன் வேறு' என்னும் வேறுபாடானது முற்றிலும் ஒழிகின்றது.எனவே 'ஞான நிஷ்டையாகிய பக்தியினால் என்னை அறிகிறான்' என்று கூறியதில் முரண்பாடில்லை.

இந்த விளக்கத்தினால் மட்டுமே கர்மத்துறவை விதிக்கின்ற உபநிஷத்துக்களும், இதிகாசங்களும், புராணங்களும், ஸ்மிருதிகளுமாகிய சாத்திரங்கள் எல்லாம் பொருளுடையனவாகின்றன. 'அதனை அறிந்து உலக வாழ்க்கையைத் துறந்து இரந்து திரிகின்றனர்,' (பி.உ.3-5-1) 'ஆகவே எத்தவங்களுள்ளும் துறவே மிகச் சிறந்த தவம் என்று கூறுகின்றனர்'. (யா.உ.79) 'துறவே சிறந்தது' (யா.உ.78) 'சந்நியாஸம் என்பது கர்மங்களைத் துறந்திடுதலாம்' வேதங்களையும் இவ்உலகையும், மறுஉலகையும் துறந்து'

(ஆபஸ்தம்ப-தர்ம சூத்திரம் 2-23-13) 'தர்மம், அதர்மம் இரண்டையும் துற' என்பன யாவும் சுருதிமொழிகளாகும். இங்கு கீதையிலும் அதே கருத்துடைய உபதேசங்கள் (5-12) காணக் கிடைக்கின்றன. இம்மொழிகளுக்குப் பொருளில்லை என்பது ஏற்புடைத்தன்று. இது போற்றிக் கூறுகின்ற அர்த்தவாதமுமன்று (போகிற போக்கில் கூறப்பட்டதுமன்று).

மேலும் முக்தியென்பது அகத்திலுள்ள ஆத்மாவின் நிர்விகார வடிவத்தில் நிலைபெறுதல் ஆகும். (ஆதலினால் கர்மத்துறவு அவசியமாகும்) கீழைக் கடலுக்குச் செல்ல விரும்பியவன், மேலைக் கடலுக்குச் செல்பவனின் பாதையில் பயணம் செல்லக்கூடாது. மேலும் ஞான நிஷ்டை என்பது அகத்திலுள்ள ஆத்மாவைப் பற்றியச் சிந்தனையைப் பேணுவதில் இடையறாது ஆழ்ந்துவிடுதலாகும். இது கர்மத்தோடு இணைவது மேலைக் கடல் பாதைபோல் நேர் எதிரானதாகும். இவை யிரண்டிற்குமுள்ள இடைவெளி மலைக்கும் கடுகுக்கும் போல் உள்ளதாகும் என்று அறிஞர்கள் உறுதி செய்துள்ளனர். அதனால் ஞான நிஷ்டையில் நிலைபெறுவதற்கு ஒருவன் கர்மங்களனைத்தையும் முற்றிலும் துறத்தல் வேண்டும்.

தனக்குரிய கர்மத்தால் பகவானை அருச்சித்தலாகிய பக்தியோகத்திற்குப் பயன் ஸித்தியடைதலாகும். அதாவது ஞான நிஷ்டையில் நிலைபெறுதற்கானத் தகுதியை அடைதலாகும். அப்படி எய்தப்படும் ஞான நிஷ்டையின் பயன் முக்தியாகும். இனி பகவானுக்குச் செய்யும் பக்தி யோகமானது (தனக்குரியக் கர்மத்தால் பகவானை அருச்சித்தலானது) கீதையின் இறுதிப்பகுதியான இதில் அதன் உபதேசங்களை உறுதி செய்யும் பொருட்டு போற்றப்படுகின்றது.

**सर्वकर्माण्यपि सदा कुर्वाणो मद्व्यपाश्रयः ।**
**मत्प्रसादादवाप्नोति शाश्वतं पदमव्ययम् ॥५६॥**

**ஸர்வகர்மாண்யபி ஸதா குர்வாணோ மத்வ்யபாஶ்ரய: ।**
**மத்ப்ரஸாதாத் அவாப்நோதி ஶாஶ்வதம் பதம் அவ்யயம் ॥ 56॥**

***எல்லாக் கர்மங்களையும் எப்போதும் செய்து கொண்டிருந்த போதிலும் என்னைச் சரண் புகுந்தோன், எனதருளால் மாறுதலற்ற நித்திய நிலையை அடைகிறான்.***

எல்லாக் கர்மங்களையும் அதாவது விலக்கப்பட்டக் கர்மங்கள் உள்ளிட்ட எல்லாக் கர்மங்களையும் ஒருவன் செய்து கொண்டிருந்த போதிலும் பகவான் வாசுதேவனாகிய என்னைச் சரண் புகுந்து அதாவது அவனது சிந்தனைகள் அனைத்தையும் என்னிடம் ஒரு முகப்படுத்தியவன் எனது அருளினால் மாறுதலற்ற நித்தியமான நிலையை அடைகிறான்.

இவ்வாறிருப்பதினால்,

चेतसा सर्वकर्माणि मयि संन्यस्य मत्परः ।
बुद्धियोगमुपाश्रित्य मच्चित्तः सततं भव ॥५७॥

சேதஸா ஸர்வகர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பர: ।
புத்தியோகம் உபாஶ்ரித்ய மச்சித்த: ஸததம் பவ ॥ 57॥

*எல்லாக் கர்மங்களையும் மனத்தால் எனக்கு அர்ப்பணம் செய்து என்னையே பரமாகக் கொண்டு, புத்தியோகத்தைச் சார்ந்து எப்போதும் என்னிடம் சித்தமுடையவனாய் இருப்பாயாக.*

மனத்தால் அதாவது விவேக புத்தியால் எல்லாக் கர்மங்களையும் 'எதனைச் செய்கின்றனையோ, எதனை உண்கின்றனையோ' (9-27) என்று பகவான் கூறியபடி இம்மை மறுமைக்கான எல்லாக் கர்மங்களையும் என்னிடம் அர்ப்பணம் செய்து என்னையே பரமாகக் கொண்டு, பகவான் வாசுதேவனாகிய என்னை எல்லாவற்றிற்கும் மேலானவனாகக் கொண்டு, புத்தியோகத்தைச் சார்ந்து உறுதியான ஒரு நிலைப்பட்டப் புத்தியுடையவனாய், சித்தத்தை எப்போதும் என்னிடம் வைப்பாயாக, நானே உனது ஒரே அடைக்கலமாக இருப்பதினால் சித்தத்தை எப்போதும் என்னிடம் வைப்பாயாக.

मच्चित्तः सर्वदुर्गाणि मत्प्रसादात्तरिष्यसि ।
अथ चेत्त्वमहङ्कारान्न श्रोष्यसि विनङ्क्ष्यसि ॥५८॥

மச்சித்த: ஸர்வதுர்காணி மத்ப்ரஸாதாத்தரிஷ்யஸி ।
அத சேத்த்வம் அஹங்காரான் ந ஶ்ரோஷ்யஸி விநங்க்ஷ்யஸி ॥ 58॥

*சித்தத்தை என் மீது வைத்து எனதருளால் நீ எல்லாத் தடைகளையும் கடப்பாயாக. அன்றி அகந்தையினால் இதனைக் கேளாயாயின் அழிவுபடுவாய்.*

உனது மனத்தை என்பால் வைத்து, எனது அருளால் பிறந்து, இறந்து உழலுவதற்குக் காரணமாகவும், கடத்தற்கரியனவாகவுமுள்ள எல்லாத் தடைகளையும் கடந்து செல்வாயாக. மாறாக அகந்தையினால், நான் அறிஞன் என்னும் செருக்கினால் நான் கூறியதைக் கேளாயாயின், ஏற்றுக் கொள்ளவும், செயல் படவும் மறுத்தாயென்றால் நீ அழிவிற்காளாவாய்.

'நான் சுதந்திரமானவன். பிறன் கூறியதை நாம் ஏன் செய்ய வேண்டும்' என்றும் எண்ணாதே.

यदहङ्कारमाश्रित्य न योत्स्य इति मन्यसे ।
मिथ्यैष व्यवसायस्ते प्रकृतिस्त्वां नियोक्ष्यति ॥५९॥

யத் அஹங்காரம் ஆஶ்ரித்ய ந யோத்ஸ்ய இதி மன்யஸே ।
மித்யைஷ வ்யவஸாயஸ் தே ப்ரக்ருதிஸ் த்வாம் நியோக்ஷ்யதி ॥ 59॥

*அகந்தையைச் சார்ந்து 'நான் இனி போர் புரியேன்' என்று எண்ணுவாயாகில், உனது அவ் உறுதி வீணாகும். உனது சுபாவம் உன்னைக் கட்டாயம் ஈடுபடுத்தும்.*

அகந்தையைச் சார்ந்து நீ 'நான் இனி போர் புரியேன்' என்று எண்ணுவாயாகில் உனது அவ் உறுதி வீணாகும். ஏனெனில் உனது சுபாவம் - நீ க்ஷத்திரியன் என்னும் உனது இயல்பு உன்னைக் கட்டாயம் போரில் ஈடுபடுத்தும். மேலும், ஏனெனில்,

स्वभावजेन कौन्तेय निबद्धः स्वेन कर्मणा ।
कर्तुं नेच्छसि यन्मोहात्करिष्यस्यवशोऽपि तत् ॥ ६०॥

ஸ்வபாவஜேன கௌந்தேய நிபத்த: ஸ்வேன கர்மணா ।
கர்த்தும் நேச்சஸி யன்மோஹாத் கரிஷ்யஸி அவஶோ அபி தத் ॥ 60॥

*குந்தி மைந்த! இயல்பினாலான தன் கர்மத்தால் கட்டுண்டிருக்கும் நீ, மயக்கத்தால் அதனைச் செய்ய விரும்பாவிடினும், தன் வசமின்றியே அதனைச் செய்வாய்.*

குந்தி மைந்த! இயல்பினாலான - முன்னர் கூறப்பட்டுள்ள வீரம் முதலியவற்றால் (18-43) கட்டுண்டிருக்கும் நீ, மயக்கத்தால் - அவிவேகத்தால், அதனைச் செய்ய - அக்கர்மத்தைச் செய்ய விரும்பாவிடினும், தன்வசமின்றி, கட்டாயத்தின் பேரில் அதனைச் செய்வாய்.

ஏனெனில்,

ईश्वरः सर्वभूतानां हृद्देशेऽर्जुन तिष्ठति ।
भ्रामयन्सर्वभूतानि यन्त्रारूढानि मायया ॥ ६१॥

ஈஶ்வர: ஸர்வபூதானாம் ஹ்ருத்தேஶே (அ)ர்ஜுன திஷ்டதி ।
ப்ராமயன் ஸர்வபூதானி யந்த்ராரூடானி மாயயா ॥ 61॥

*அர்ஜுனா! ஈசுவரன் எல்லா உயிர்களின் உள்ளத்திலும் குடி கொண்டிருக்கின்றான். தனது மாயையினால் எல்லா உயிர்களையும் இயந்திரத்தில் ஏற்றி வைக்கப்பட்டவை (போல) சுழற்றுகின்றான்.*

ஓ அர்ஜுனா! ஈசுவரன் 'ஆளும் வல்லமையுடைய நாராயணன்' எல்லா உயிர்களின் உள்ளங்களிலும் குடி கொண்டிருக்கின்றான். அர்ஜுனன் - உள்ளத் தூய்மையுடையோன், வெண்மையுடையோன், என்று பொருளாகும். 'பகல்

கருமையாயுள்ளது, பகல் (வெண்மை) அர்ஜுனமாயுள்ளது' (ரிக் வேதம் 6.9.1) அவன் எவ்வாறு குடி கொண்டிருக்கின்றான்? இயந்திரத்தில் ஏற்றி வைக்கப்பட்டப் பொம்மைகள் மரத்தினால் செய்யப்பட்ட மரப்பாவைகள் போல் எல்லா உயிர்களும் சுழல்வதற்கு, ஆடுவதற்குக் காரணமாகக் குடிகொண்டிருக்கிறான். இச்சொற்றொடரில் 'போல' (இவ) என்னும் சொல்லை வருவித்துக் கொள்ள வேண்டும்.

**तमेव शरणं गच्छ सर्वभावेन भारत ।**
**तत्प्रसादात्परां शान्तिं स्थानं प्राप्स्यसि शाश्वतम् ॥ ६२॥**

**தம் ஏவ ஶரணம் கச்ச ஸர்வபாவேன பாரத ।**
**தத் ப்ரஸாதாத் பராம் ஶாந்திம் ஸ்தானம் ப்ராப்ஸ்யஸி ஶாஶ்வதம் ॥62॥**

*பாரதா! எவ்வகையானும் அவனையே சரணடைவாய். அவனருளால் நீ பரம சாந்தியும், நித்திய கதியும் அடைவாய்.*

ஓ பாரதா! பிறப்பு இறப்புடைய வாழ்க்கையைத் தொலைக்க அந்த ஈசுவரனையே, எவ்வகையானும் (மனம், மொழி, மெய்யினால்) முற்றிலும் சரணடைவாயாக. அப்போது அவனது அருளினால் நீ உயர்ந்த அமைதியையும், விஷ்ணுவின் பரம பதமாகிய நித்திய நிலையையும் அடைவாய்.

**इति ते ज्ञानमाख्यातं गुह्याद्गुह्यतरं मया ।**
**विमृश्यैतदशेषेण यथेच्छसि तथा कुरु ॥ ६३॥**

**இதி தே ஜ்ஞானம் ஆக்யாதம் குஹ்யாத்குஹ்யதரம் மயா ।**
**விம்ருஶ்யைதத் அஶேஷேண யதேச்சஸி ததா குரு ॥ 63॥**

***இவ்வாறு ரகசியத்திலும் மிக ரகசியமான ஞானம் உனக்கு என்னால் எடுத்துரைக்கப்பட்டது. இதனை முற்றும் ஆய்ந்து நீ எப்படி விரும்புகின்றனையோ அப்படிச் செய்வாயாக.***

என்னால் - முற்றுமுணர்ந்த ஈசுவரனாகிய என்னால், உனக்கு ரகசியத்திலும், மிக ரகசியமான ஞானம் எடுத்துரைக்கப்பட்டது. இதனை - இந்த கீதா சாத்திரத்தை, முற்றும் - உபதேசித்த உபதேசங்கள் அனைத்தையும் ஆய்ந்து பிறகு நீ எவ்வாறு விரும்புகின்றாயோ அவ்வாறு செய்வாயாக.

மீண்டும் நான் கூறப் போவதைக் கேட்பாயாக.

**सर्वगुह्यतमं भूयः शृणु मे परमं वचः ।**
**इष्टोऽसि मे दृढमिति ततो वक्ष्यामि ते हितम् ॥ ६४॥**

ஸர்வகுஹ்யதமம் பூய: ஶ்ருணு மே பரமம் வச: ।
இஷ்டோ(அ)ஸிமே த்ருடம் இதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ॥64॥

*எல்லாவற்றினும் மிக்க ரகசியமான எனது உயர்ந்த வார்த்தையை மீண்டும் கேட்பாயாக. நீ எனது திடமான நண்பன், ஆதலால் உனக்கு நலங் கூறுவேன்.*

ரகசியத்திலும் மிக ரகசியமான எனது உயர்ந்த வார்த்தையை மீண்டும் அடிக்கடிக் கூறப்பட்டதாயினும் கேட்பாயாக. அதனை நான் உனக்கு அச்சத்தின் காரணமாகவோ ஏதேனும் கிடைக்கும் என்ற நப்பாசையின் காரணமாகவோ கூறவில்லை. மாறாக நீ எனது திடமான நண்பன், எனது பிரியத்தினின்று பிறழாத நண்பன் ஆதலினால் உனக்கு நலமானதை, நன்மையானதை அதாவது ஞானத்தைப் பெறுவதற்குரிய சிறந்த வழியைக் கூறுவேன். இந்த ஞானமே நன்மைகள் எல்லாவற்றினும் மேலான நன்மையாம்.

அஃதென்ன? பகவான் கூறுகிறார்:

मन्मना भव मद्भक्तो मद्याजी मां नमस्कुरु ।
मामेवैष्यसि सत्यं ते प्रतिजाने प्रियोऽसि मे ॥ ६५॥

மன்மனா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு ।
மாம் ஏவைஷ்யஸி ஸத்யம் தே ப்ரதிஜ்ஞானே ப்ரியோ(அ)ஸி மே ॥65॥

*என்னிடம் மனதை வைப்பாய், என் பக்தனாவாய், என்னை வழிபடுவாய், என்னை வணங்குவாய், என்னை அடைவாய். உனக்கிது உறுதியுரைத்தேன், நீ எனக்கினியன்.*

என்னிடம் மனதை வைப்பாய். என் பக்தனாவாய், - என்னை நேசிப்பாய், என்னையே வழிபடுவாய். என்னையே வணங்குவாய். - என்னை மட்டும் வணங்குவாய். இவ்வாறு செய்வதின் மூலம் அதாவது வாசுதேவனையே லட்சியமாகவும், வழியாகவும், முடிவாகவும் கொள்வதினால் - என்னை அடைவாய். நீ எனது அன்பிற்குரிய இனிய நண்பன் ஆதலினால் நான் உனக்கு இந்த உண்மையை உறுதியாக உரைக்கின்றேன். இதன் பொருள் என்னவெனில், பகவானின் வார்த்தை சத்தியம் என்றறிந்து, முக்திப் பயன் நிச்சயம் கிடைக்கும் என்று உணர்ந்து ஒருவன் தன்னைப் பகவானிடம் ]ும் அர்ப்பணிக்க வேண்டும் என்பதாம்.

பகவானிடம் தன்னை அர்ப்பணிப்பதாகிய கர்மயோக நிஷ்டையின் இந்தப் பரம ரகசியத்தை இவ்வாறு நிறைவு செய்த பகவான் இனி எல்லா உபநிஷத்துக்களிலும் உரைக்கப்பட்டுள்ள கர்மயோக நிஷ்டையின் பயனாகிய மெய்யுணர்வை எடுத்துரைக்கப் போகிறார்.

सर्वधर्मान्परित्यज्य मामेकं शरणं व्रज ।
अहं त्वा सर्वपापेभ्यो मोक्षयिष्यामि मा शुचः ॥६६॥

**ஸர்வதர்மான் பரித்யஜ்ய மாம் ஏகம் ஶரணம் வ்ரஜ ।**
**அஹம் த்வாம் ஸர்பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா ஶுச: ॥ 66॥**

***தர்மமனைத்தையும் துறந்து விடு, சரணம் எனை நீ அடைந்து விடு, கர்ம வினைகள் பாவங்கள், களைவேன் இனி நீ வருந்தாதே.***

தர்மம் என்னும் சொல் இங்கு அதர்மத்தையும், உள்ளடக்கியதாகும். இங்கு சொல்லக் கருதியது கர்மத்துறவை, கர்மம் நீங்கிய நிலையையேயாகும். பின்வரும் சுருதிகள் கூட இதே கருத்தைத்தான் வலியுறுத்துகின்றன. 'தீயொழுக்கத்தை விடாதவன்' (க.உ.1-2-24) 'தர்மத்தையும் அதர்மத்தையும் துறந்து விடு' (ம.பா.சா.ப.329-40) 'அனைத்துயிர்களின் ஆத்மாவாக எல்லாப் பொருள்களிலும் வியாபித்திருக்கும் ஈசுவரனாகிய என்னை அடைக்கலமாகக் கொள்' இதன் பொருள் 'என்னை அல்லால் வேறொன்று இல்லை என்பதைத் தெளிவாக அறிந்து கொள்' என்பதாம். இதில் நீ அசையா நம்பிக்கையுடையையாயின் அப்போது நான் உனக்கு எனது ஆத்ம ஸ்வரூபத்தை, ஆத்ம நிலையை வெளிப்படுத்தி தர்ம அதர்மக் கட்டுக்களாகிய எல்லாப் பாவங்களின்றும் உன்னை விடுவிப்பேன்'. 'அன்னவர் அகத்தில் தங்கி ஒளிர்கின்ற ஞான விளக்கினால் அறியாமை இருளை அழிக்கின்றேன்' (10-11) என்று முன்பே மேற்கூறியது உறுதி செய்யப்பட்டுள்ளது. எனவே இனி நீ வருந்த வேண்டாம். துயரப்படவேண்டாம் என்பது கருத்தாகும்.

இக்கீதா சாத்திரத்தில் மோக்ஷம் அல்லது பரம நன்மைக்குரிய வழியாக எது நிலைநிறுத்தப்பட்டுள்ளது?

இந்த ஐயம் ஏன்? பின்வரும் உபதேசங்களே ஆதாரமன்றோ. 'எதனை அறிந்து இறவாமையைப் பெறுகின்றானோ' (13-12) 'என்னை உண்மையாய் அறிந்து என்னுள் புகுகின்றான்' (18-55) என்னுமிவை ஞானமொன்றி னாலேயே பரம நன்மை அடையப்படுவதை எடுத்தியம்புகின்றன. 'உனக்குக் கர்மத்திலேதான் அதிகாரம்' (2-47) 'கர்மத்தை மட்டுமே செய்' என்பன கர்மம் செய்வதின் அவசியத்தை உணர்த்துகின்றன. இவ்வாறு ஞானம், கர்மம் எனுமிவை இரண்டும் ஒருங்கிணைவதால் பரம நன்மை, மோக்ஷம் எய்தலாம். அப்போதும் மேலே எழுந்த ஐயம் நீடிக்கவே செய்யும்.

இவ்வினாவினால் உண்டாகும் நன்மை என்ன? என்றால் இவையிரண்டில் எது உறுதியாகப் பரம நன்மைக்குரிய வழியாகும் என்பதை தீர்மானிப்பதாகும். அப்படித் தீர்மானிப்பதற்குப் பரந்த அளவில் ஆய்வு செய்ய வேண்டியது அவசியமாகும்.

ஆத்ம ஞானம் ஒன்றே பரம நன்மைக்குரிய வழியாகும். இது வேற்றுமை உணர்வுகளை நீக்கி முக்தியின் பயனை அளிக்கின்றது. கர்மம், துணைப்

பொருள்கள், கர்மப்பயன் இவற்றிடையிலான வேற்றுமை உணர்வாகிய அறியாமையானது எப்போதும் ஆத்மாவில் உறைந்திருக்கின்றது. 'எனதே கர்மம்' 'எனதே கர்த்தா' 'இப்பயனுக்காக இக்கர்மத்தைச் செய்கிறேன்.' எனுமிவ்வடிவில் அறியாமையானது அநாதி காலந் தொட்டே செயல்பட்டுக் கொண்டிருக்கின்றது. இவ்வறியாமையை நீக்குவது 'அகர்த்தாவாக, கர்மமில்லாதவனாய், பயனில்லாதவனாய், தனியொருவனாக இதோ நான் இருக்கின்றேன், என்னையன்றி வேறொருவன் இல்லை' என்னும் ஆத்மஞானமாகும். இதுவே அறியாமையை நீக்குகின்றது. காரணம் இந்த ஞானம் கர்மத்தில் ஒருவன் ஈடுபடுவதற்குக் காரணமான வேற்றுமை உணர்வுகளை ஒழிக்கின்றது. இப்பத்தியின் ஆரம்பத்தில் 'ஆத்ம ஞானம் ஒன்றே' என்ற சொற்றொடரிலுள்ள ஏகாரமானது பரம நன்மை எய்தப்படுவது கர்மத்தினாலன்று, கர்ம ஞான இணைப்பினாலன்று என்று இரண்டு பக்கங்களையும் விலக்குகின்றது. மேலும் பரம நன்மை என்பது கர்ம நிறைவேற்றத்தின் பயனன்றாம் அதனால் கர்மத்தை அதற்குரிய வழியாகக் கொள்ள முடியாது. நித்தியப் பொருள் கர்மத்தினாலோ, ஞானத்தினாலோ உண்டாவதில்லை.

மறுப்பு : அப்படியாயின் தூய்மையான ஞானத்தினால் பயனில்லை அப்படித்தானே?

பதில் : அப்படியன்று. அது அறியாமையை நீக்குவதினால் முக்தியின் உயர்வாகக் காணப்படுகின்றது. அறியாமை இருளை அகற்றுகின்ற ஞானத்திற்கு முக்தியெனும் பயன் முடிவாகக் காணப்படுகின்றது. அது கயிற்றைப் பாம்பாகக் காணும் அறியாமை இருளை நீக்கும் விளக்குப் போன்றதாகும். பாம்பு எனும் வேற்றுமை உணர்வு நீக்கப்பட்டுக் கயிற்றை மட்டுமே முடிவாகக் கொண்டதன்றோ ஒளியின் பயனாகும். அதுபோன்றதே ஞானமாகும். நெருப்புண்டாக்குவதற்காகக் கட்டையை அறுத்தல், கடைதல், போன்ற செய்கைகளில் கர்த்தா முதலிய துணைப் பொருள்கள் செயல்படும் பொழுது கட்டையை இரண்டாக அறுத்தல், நெருப்புண்டாக்குதல் எனும் இப்பயன்கள் தவிர கர்த்தா முதலிய துணைப் பொருள்கள் வேறு பயன்தரும் மற்றொரு செய்கையில் ஈடுபட இயலாது.

அச்செய்கை வேறோர் பயனைத் தருவதில்லை. அஃதேபோல் ஞான நிஷ்டை என்னும் செய்கையில் அறிபவன் முதலிய துணைப் பொருள்கள் செயல்படும்பொழுது ஆத்ம விடுதலையெனும் பயனைத் தவிர, வேறு பயன் தரும் மற்றொரு செய்கையில் அறிபவன் முதலிய துணைப் பொருள்கள் ஈடுபடுதல் இயலாது. எனவே ஞான நிஷ்டை கர்மத்தோடு இணைதல் நடவாது.

மறுப்பு : உண்ணுதலும், அக்னி ஹோத்ரம் செய்தலும் ஒன்றாக இணைவது போல ஞான நிஷ்டையும் கர்மத்தோடு இணையலாமே?

பதில் : அப்படியன்று. முக்திப் பயன் தரும் ஞான நிஷ்டையில் ஈடுபடுபவன், கர்மப் பயனை வேண்டுவதில்லை. எங்கும்

பெருக்கெடுத்தோடும் நதிக்கரையின் அருகில் சிறு கிணறு தோண்டுவதின் பயன் வேண்டப்படாதது போல் முக்திப் பயன் தரும் ஞானநிஷ்டையில் ஈடுபடுபவன் வேறோர் பயனையோ அதைத் தரும் கர்மத்தையோ விரும்புவதில்லை. நீணிலத்தை ஆளும் பயன்தரும் கர்மத்தில் ஈடுபடுபவன் காணி நிலத்தைப் பயனாகத் தரும் கர்மத்தில் ஈடுபடுவதில்லை. அதை விரும்புவதுமில்லை. ஆகவே பரம நன்மைக்குக் கர்மம் சாதனமன்று; அவ்வாறே ஞானமும், கர்மமும் ஒருங்கிணைதலும் சாதனமாகாது. மேலும் முக்திப் பயன்தரும் ஞானத்திற்குக் கர்மத்தின் உதவி தேவையில்லை. காரணம் அறியாமையை நீக்குவதால் ஞானம் கர்மத்திற்கு எதிரானதாகும். இருளை இருளால் நீக்க முடியாதன்றோ, எனவே ஞானம் ஒன்றுதான் பரம நன்மைக்குரிய ஒரே வழி, சாதனமாகும்.

மறுப்பு : அவ்வாறன்று. நித்தியக் கர்மங்களை விலக்குவதால் பாவமுண்டாகும். ஆனால் முக்தி நித்தியமானதன்றோ. (அதாவது ஞானமொன்றினால்தான் முக்தியடையப்படும் என்பது சரியன்று. ஏனெனில் சுருதிகளில் விதிக்கப்பட்ட நித்தியக் கர்மங்களைச் செய்யாவிடில் நரகத்தையடைதல் போன்ற தீமைகள் உண்டாகும்). மேலும் கர்மத்தினால் முக்தி அடையப் படுவதில்லையென்றால் முக்தி பெறுவதற்குச் சாத்தியமே இல்லையென்றாகிவிடும்.

பதில் : இந்த மறுப்பில் பொருளில்லை. முக்தியாகிய மோக்ஷம் நித்தியமானதாகும். நித்தியக் கர்மங்களைச் செய்வதால் தீமை உண்டாவதில்லை; விலக்கியக் கர்மங்களைச் செய்யாததினால் தேவையற்ற உடல் பெறப்படுவதில்லை; காம்ய கர்மங்களைத் தவிர்ப்பதால் விரும்பப்படும் உடலும் கிடைப்பதில்லை; இப்பொழுது பெற்றுள்ள உடலைத் தந்த கர்மப் பயன்னின் அனுபவிப்பு தீருமளவில் இந்த உடல் மாண்டு போகிறது. பிறிதோர் உடல் உண்டாவதுமில்லை. ஆசை, பற்று முதலியவை இல்லாமையினால் ஆத்ம வடிவமாகத் தான் நிற்றலாகிய முக்தியானது பிறிதோர் முயற்சியின்றியே பெறப்படுகிறது.

மறுப்பு : பல்வேறு பிறவிகளில் செய்யப்பட்டு, சொர்க்கம், நரகம் எய்துதலைப் பயனாகக் கொண்ட இன்னும் பயன்கொடுக்கத் தலைப்படாதக் கர்மங்கள் கழியவில்லையென்றால் என்னவாகும்?

பதில் : அவ்வாறன்று. நித்தியக் கர்மங்களைச் செய்வதில் உண்டாகும் சிரமமும், மெய்வருத்தமும் அக்கர்மங்களின் பயனை அனுபவிப்பதேயாகும். அல்லது நித்தியக் கர்மங்கள் பிராயச்சித்தக் கர்மங்கள் போல் பாவங்களை நீக்குகின்றன. பயன் தரத் தலைப்படாதக் கர்மங்கள் சிரமங்களை அனுபவிப்பதின் மூலம் கழிந்து போனமையினாலும், புதிய கர்மங்களைச் செய்யாமையினாலும் முக்தியென்பது முயற்சியின்றியே பெறப்படுகின்றது.

முடிவான பதில் : இல்லை. இவையனைத்தும் தவறாம். சுருதி, ஞானத்தைத் தவிர முக்திக்கு இட்டுச் செல்லும் மார்க்கம் வேறில்லை என்று மிகத் தெளிவாகக் கூறுகிறது. 'அவனை அறிவதால் மட்டுமே ஒருவன் மரணத்தை வெல்கிறான். அங்கு செல்வதற்கு வேறோர் மார்க்கமில்லை'

(சுவே.உ.3-8) 'தோலைப் போல் ஆகாயத்தைச் சுருட்ட முடியாது' (சுவே.உ.6-20) புராணங்கள் கூட 'ஒருவன் ஞானத்தினாலேயே முக்தியடைகிறான்' என்றே கூறுகின்றன.

மேலும், பயன்தரத் தலைப்படாதப் புண்ணிய கர்மங்கள் கழிந்து போகின்றன என்று கூற முடியாது. பயன்தரத் தலைப்படாத பாவ கர்மங்கள் எவ்வாறு நிலுவையில் இருக்கின்றனவோ, அதுபோல் பயன்தரத் தலைப்படாத புண்ணிய கர்மங்களும் நிலுவையில் இருக்கின்றன. அவை வேறோர் உடலைத் தராமல் கழிந்து போக முடியாதவை ஆதலினால் முக்தி சாத்தியமாகாது.

அடுத்து தர்ம அதர்மங்களுக்குக் காரணமான விருப்பு, வெறுப்பு, மயக்கங்களை அறுத்தல் ஆத்ம ஞானத்தைத் தவிர பிறிதொன்றால் முடியாது. ஆதலின் தர்ம அதர்மங்களை அறுத்தலென்பது சாத்தியமன்று. மேலும் "நித்திய கர்மத்திற்குப் பயன் புண்ணியம்" என்னும் சுருதியினாலும், "தத்தமது கர்மத்தைச் செய்வதினால் வர்ணத்தாரும், ஆச்ரமத்தாரும் அளவிடற்கரிய பரமானந்தம் எய்தப் பெறுகின்றனர்" என்னும் ஸ்மிருதியினாலும் கர்மம் கழிந்து போவதென்பது சாத்தியமாகாது.

இனி சிலர், முற்பிறவிகளில் செய்யப்பட்டப் பாவ கர்மங்களின் பயன்தான், துன்பவடிவமாக இருக்கும் நித்தியகர்மங்கள் என்றும் அவற்றிற்குப் பயன் அவையேயன்றி சுருதிகளில் கூறப்படாமையினால் வேறுபயனில்லை என்றும், ஒருவன் உயிரோடிருப்பதின் காரணமாகவே அவை விதிக்கப் படுகின்றனவென்றும் கூறுகின்றனர். அவ்வாறன்று. பயன்தரக் தலைப்படாதக் கர்மங்கள் பயனைத் தருதல் நடவாது. துன்பப் பயனில் வேறுபாடு என்பதும் கிடையாது. (நித்தியக் கர்மங்களைச் செய்வதினாலுண்டாகும் துன்பங்களில் வேறுபாடு என்பது இல்லை).

முற்பிறவிகளில் செய்யப்பட்டப் பாவகர்மங்களின் பயனே இப்பிறவியில் நித்தியக் கர்மங்களைச் செய்வதிலுண்டாகும் சிரமமாகவும், மெய்வருத்தமாகவும், அனுபவிக்கப்படுகின்றது என்று கூறுவது சரியன்று. இறக்குந்தறுவாயில் பயன்தரத் தலைப்படாதக் கர்மத்தின் பயனானது, வேறோர் கர்மத்தின் பயனாய் பெறப்பட்ட மறுபிறவியில் அனுபவிக்கப்படுகின்றது என்பது பொருந்தாதன்றோ. மேலும் சொர்க்கத்தின் பயனை அனுபவிப்பதற்காக அக்னிஹோத்ரம் முதலிய கர்மங்களால் பெறப்பட்டப் பிறப்பில் நரகப் பயனை அனுபவித்தல் என்பதும் பொருந்தாது.

மற்றும் நித்திய கர்மத்தைச் செய்வதால் உண்டாகும் சிரமம் அல்லது துன்பம், பல்வேறு பாவகர்மங்களின் பயன்களாகிய பல்வேறு துன்பங்களுக்குப் பதிலாகி விடமுடியாது. அது ஒன்றை மட்டுமே பதிலாகக் கொண்டால் ஒருவனிடம் காணப்படும் விருப்பு, வெறுப்பு முதலிய இருமைகளும், நோய்களும், அவனைப் பீடித்தமைக்குக் காரணமில்லாமற்போய்விடும். நித்திய கர்மத்தைச் செய்வதிலுள்ள துன்பம்தான் முன்செய்த பாவகர்மப் பயனென்றால், தலையில் கல்சுமத்தல் போன்றவற்றினால் வரும் துன்பம் போன்றவை முன் செய்த பாவகர்மப் பயன் அன்று எனக் கொள்ள வேண்டும்.

மேலும், நித்தியக் கர்மங்களைச் செய்வதினால் உண்டாகும் சிரமமும், துன்பமும் முன் செய்த பாவகர்மத்தின் பயன் என்று கூறுவது பொருந்தாது. எப்படி? பயன்தரத்தலைப்படாத முன் செய்த பாவகர்மம் கழிவதில்லை. ஆனால், நீயோ "நித்தியக் கர்மங்களைச் செய்வதினால் உண்டாகும் சிரமும் துன்பமுமாகிய பயனானது பயன்தரத்தலைப்பட்ட கர்மத்திற்கேயன்றி பயன்தரத் தலைப்படாதக் கர்மத்திற்கு இல்லை" என்கின்றாய். இனி நீ, முன் செய்யப்பட்ட பாவகர்மங்கள் எல்லாமே பயன்தரத் தலைப்பட்டவைதான் என்று கருதினால், 'நித்திய கர்மங்களைச் செய்வதிலுள்ள சிரமமும், துன்பமுந்தான் பயன்தரத்தலைப்படாத பாவ கர்மங்களின் பயனாகும்' என்று சிறப்பித்துக் கூறியது பொருந்தாது. மேலும் நித்தியக் கர்மங்களை விதித்ததின் நோக்கமும் நிறைவேறாமற் போய்விடும். காரணம் பயன்தரத் தலைப்பட்ட பாவகர்மம் அதனை அனுபவிப்பதின் மூலமே கழிந்திட முடியும்.

சுருதியில் விதிக்கப்பட்ட நித்தியக் கர்மத்திற்குத் துன்பம்தான் பயன் என்றால், அத்துன்பம் நித்தியக் கர்மத்தைச் செய்வதினாலுண்டாகும் துன்பமேயாகும். இது உடற்பயிற்சி போன்றவற்றில் காணப்படும் துன்பம் போன்றதாகும். எனவே அதை வேறு கர்மத்தின் பயன் என்று கூறுவது நியாயமற்றதாகும்.

அடுத்து உயிர்வாழ்தலின் காரணமாகவே நித்தியக் கர்மங்கள் விதிக்கப்படுகின்றன. பிராயச்சித்தக் கர்மங்கள் போல் முன் செய்த பாவகர்மத்தின் பயன் என்று கூறுவது பொருந்தாது. எந்தப் பாவகர்மத்தின் காரணமாக எந்தப் பிராயச்சித்தக் கர்மம் விதிக்கப்பட்டதோ அந்தப் பாவகர்மத்திற்கு அது பயனாவதில்லை. மேலும் அந்தப் பாவகர்மமாகிய காரணத்திற்குத்தான் பிராயச்சித்தக் கர்மத்தைச் செய்வதினால் உண்டாகும் துன்பம் பயன் என்றால் உயிர்வாழ்தலின் காரணமாக விதிக்கப்பட்ட நித்தியக் கர்மங்களைச் செய்வதிலுள்ள சிரமும், துன்பமும் உயிர் வாழ்தல் என்னும் காரணத்திற்குத்தான் பயனாக வேண்டும். காரணம் நித்தியக் கர்மம், பிராயச்சித்தக் கர்மம் இரண்டிற்கும், காரணமே அடிப்படை என்பதில் பேதமில்லையாதலின் (பிராயச்சித்தக் கர்மத்தைச் செய்வதினாலுண்டாகும் துன்பம் அப்பிராயச்சித்தக் கர்மத்திற்குக் காரணமான பாவகர்மத்தின் பயனாகாததுபோல் நித்தியக் கர்மத்தைச் செய்வதினாலுண்டாகும் துன்பம் அந்த நித்தியக் கர்மத்திற்குக் காரணமான உயிர்வாழ்தலின் பயனாகாது.)

மேலும் நித்தியக் கர்மமான அக்னி ஹோத்ரம் போன்றவற்றிற்கும் காம்யகர்மமான அக்னி ஹோத்ரம் போன்றவற்றிற்கும் செய்வதினாலுண்டாகும் துன்பங்கள் ஒன்றாக இருப்பதால் நித்தியக் கர்மத்தைச் செய்வதினாலுண்டாகும் துன்பம் தான் முன் செய்த பாவகர்மத்தின் பயன், காம்ய கர்மத்தைச் செய்வதினாலுண்டாகும் துன்பமன்று என்று கூறுவதற்கு எந்தவொரு காரணமும் கிடையாது. எனவே அத்துன்பமும் முன் செய்த பாவகர்மத்தின் பயனாதல் வேண்டும். அப்படியென்றால் சுருதியில் நித்தியக் கர்மத்திற்குப் பயன் கூறப்படாததினாலும், அது விதிக்கப்பட்டதற்கு வேறொரு காரணம் இல்லாததினாலும் முன் செய்த பாவகர்மத்தின் பயன்தான் நித்தியக் கர்மத்தைச்

செய்வதினாலுண்டாகும் சிரமமும், துன்பமும் என்று கருதுவது தவறாகும். இவ்வாறு நித்தியக் கர்மத்தை விதித்தற்குக் காரணமின்மையால் நித்தியக் கர்மத்தைச் செயவதினாலுண்டாகும் துன்பத்தைத் தவிர அதற்கு வேறோர் பயனுண்டு என்று அனுமானித்தல் வேண்டும். நித்தியக் கர்மத்தைச் செய்வதால் பாவகர்மத்தின் பயன் அனுபவிக்கப்படுகிறது என்று கூறுவது முரண்பாடாகும். இது ஏற்றுக் கொள்ளப்பட்டால், அந்த அனுபவிப்புத்தான் நித்தியக் கர்மத்தின் பயனாகும் என்றும் அதே சமயம் அந்த நித்தியக் கர்மத்திற்குப் பயன் கிடையாது என்றும் கூறுவது மற்றோர் முரண்பாடாகும்.

அடுத்து காம்ய அக்னி ஹோத்ரம் போன்றவற்றைச் செய்யும்பொழுது நித்திய அக்னி ஹோத்ரம் போன்றவையும் அதே சமயத்தில் ஒன்றாகச் செய்யப்பட்டனவாகின்றன. எனவே செய்யப்படும் முறைகள் ஒன்றாக இருப்பதினால் நித்திய அக்னிஹோத்ரம் செய்வதினாலுண்டாகும் துன்பத்தினாலேயே காம்ய அக்னி ஹோத்ரத்தின் பயன் கழிந்து விடுகின்றது. (காம்ய அக்னி ஹோத்ரத்திற்கும் நித்திய அக்னி ஹோத்ரத்திற்கும் செய்கையில் வேறுபாடின்மையால் முந்தினதைச் செய்கின்ற அதே காலத்திலேயே பிந்தியதும் செய்யப்பட்டதாகும். இவ்வாறு காம்யானுஷ்டானமும், நித்தியானுஷ்டானமும் ஒன்றாக இருப்பதால் நித்தியானுஷ்டானத்திலுள்ளத் துன்பத்தினால் முன் செய்த பல கர்மப்பயன் அனுபவிக்கப்படுவது போல் காம்யப்பலனும் அனுபவிக்கப்பட்டதாகின்றது-ஆ) இனி காம்ய அக்னி ஹோத்ரத்திற்கு சொர்க்கம் முதலிய வேறு பயன்உண்டு என்றால் அதைச் செய்வதாலுண்டாகும் துன்பமும் வேறாதல் வேண்டும். ஆனால் அப்படியில்லை. ஏனெனில் நித்திய அக்னி ஹோத்ரத்தைச் செய்வதி னாலுண்டாகும் துன்பமானது காம்ய அக்னி ஹோத்ரத்தைச் செய்வதி னாலுண்டாகும் துன்பத்தினின்று வேறுபடுவதில்லை.

இதற்குப் பிறிதோர் காரணமும் கூறப்படுகின்றது, அதாவது (சாத்திரத்தில்) விதிக்கப்படாத அல்லது விலக்கப்படாதக் கர்மங்களுக்கு உடனடிப் பயனுண்டு. ஆனால் சாத்திரத்தில் விதிக்கப்பட்ட அல்லது விலக்கப்பட்டக் கர்மங்களுக்கு உடனடிப் பயனில்லை. அப்படி உடனடிப் பயன் உள்ளவையாயின் அதனால் சொர்க்கத்திற்குச் செல்லுதல் போன்ற காணப்படாத பயனை வேண்டி எந்தவொரு முயற்சியும் செய்யப்பட மாட்டாது. மேலும் (நித்திய, காம்ய) கர்மங்களின் தன்மையில் வேறுபாடின்மையால் (நித்திய) அக்னிஹோத்ரத்தின் பயன் அதனைச் செய்வதினாலுண்டாகும் துன்பத்தின் மூலம் கழிந்து போகின்றது என்றும் ஆனால் பயனைக் கருதி செய்யப் படுவதால் காம்யத் (அக்னி ஹோத்ரத்)திற்கு சொர்க்கம் முதலிய மேலான பயனுண்டு என்றும் அதனால் நித்தியக் கர்மத்திற்குக் காணப்படாத பயன் கிடையாது என்றும் கூறுவது பொருந்தாது.

எனவே (காம்ய கர்மம் பயனைத் தருவது போல் நித்தியக் கர்மமும் பிதிருலோகத்தையடைதல் போன்ற பயனைத் தருவதால் பாவத்தை நீக்காது) ஞானம் ஒன்றே அறியாமையின் காரணமாகச் செய்யப்படும் நல்வினை, தீவினையை முற்றிலும் அழிக்கின்றது. நித்தியக் கர்மங்கள் அன்று. காரணம்

அறியாமையும், விருப்பமுமே (அவித்யை மற்றும் காமம்) எல்லாக் கர்மங்களுக்கும் விதைகளாகும். இதற்கேற்பவே கர்ம யோகம் அஞ்ஞானிக்குரியது என்றும் கர்மத் துறவுடன் கூடிய ஞான நிஷ்டை ஞானிக்குரியது என்றும் கூறப்பட்டுள்ளது. 'இருவரும் அறிவதில்லை' (2.19) 'இது அழிவற்றதென்றும் நித்தியமானதென்றும் அறிகிறான்' (2.21) 'சாங்கியர்களின் ஞான யோகத்தால், யோகிகளின் கர்மயோகத்தால்' (3-3) 'கர்மத்தில் பற்றுடைய அஞ்ஞானிகளுக்கு' (3-26) 'பெருந்தோள! உண்மை அறிந்தவனோ குணங்கள் குணங்களில் இயல்கின்றனவென்று பற்றுக் கொள்வதில்லை' (3-28) 'எல்லாக் கர்மங்களையும் மனத்தால் துறந்து வீற்றிருக்கின்றான்' (5-13) 'உண்மையறிந்தவன் நான் ஒன்றும் செய்வதில்லை என்று எண்ணக்கடவன்' (5.8) 'யோக நிலையில் ஏற விரும்பும் யோகிக்குக் கர்மமே கருவியாகும்' (6-3) 'அஞ்ஞானிகள் மூவரும் மேலோரே ஆனால் ஞானி நான் தான், இது என் கொள்கையாகும்' (7-18) 'அஞ்ஞானிகளானக் கர்மிகள் போகத்தை விரும்பி, போதலையும், வருதலையும் எய்துகின்றனர். '(9-21) 'என்னிலிருந்து வேறுபடாதவராய், தியானிப்பவராய்' (9-22) 'அவர்கள் எதனால் என்னை அடைகிறார்களோ, அந்த ஞானயோகத்தை அளிக்கின்றேன்' (10-10) அதாவது கர்மிகளான அஞ்ஞானிகள் என்னை அடைவதில்லை என்று ஞானயோகம் நிலைநிறுத்தப்பட்டுள்ளது. எனவே பகவானுக்காகக் கர்மங்களைச் செய்யும் யோகிகள் மேலானவர்களாயினும் கர்மிகளான அஞ்ஞானிகள் கர்மப் பயனைத் துறக்கின்றது வரையுள்ள பிற்பட்டத் தாழ்ந்த சாதனத்தைக் கொண்டவர்களாவர். (12-6,7,8,9,10,11) அதேசமயம் விளக்குவதற்கரிய அழியாப் பொருளை வழிபடுபவர்களோ 'எவ்உயிரையும் பகையாதவனாய்' (12-13) என்பது முதல் அத்தியாயம் முடியும் வரை கூறப்பட்டுள்ள சாதனங்களையும், க்ஷேத்திரத்தைப் பற்றிக் கூறும் அத்தியாயம் தொடங்கி மூன்று அத்தியாயங்களில் கூறப்பட்டுள்ள சாதனங்களையும், உடையவர்களாவர். (13-7,8,9,10,11; 14-22,23,24,25,26; 15-3,4,5) இடம் முதலிய ஐந்து காரணங்களை (18.14) அடிப்படையாகக் கொண்ட எல்லாக் கர்மங்களையும் துறந்து, 'ஆத்மா ஒன்றே அகர்த்தா' எ ஞான நிஷ்டையில் நிலைபெற்று, பகவானது உண்மை நிலையினை உணர்ந்து, 'பகவத் ஸ்வரூபமும், ஆத்மாவும் ஒன்றுதான்' என்பதை அடைக்கலமாகக் கொண்ட பரமஹம்ஸத் துறவிகளுக்கு நன்மை, தீமை, இரண்டும் கலந்தது என்னும் கர்மப்பயன்கள் மூன்றும் உண்டாவதில்லை. ஆனால் இவை துறவிகளல்லாத அஞ்ஞானிகளான கர்மிகளுக்கு உண்டாகின்றன. இதுவே கீதா சாத்திரத்தில் உபதேசிக்கப்பட்டுள்ளக் கடமைகளின் வேறுபாடுகளாகும்.

மறுப்பு : அறியாமையினால்தான் எல்லாக் கர்மங்களும் உண்டாகின்றன என்பது நிறுவ முடியாததாகும்.

பதில் : அப்படியன்று. பிராமணனைக் கொல்லுதல் (பிரம்மஹத்தி) போன்ற விஷயங்களில் அதனை நிறுவ முடியும். நித்தியக் கர்மங்கள் சாத்திரங்களில் கூறப்பட்டவையாயினும் அவை அறியாமையுடையோர்க்கே உரியவையாம். பிராமணனைக் கொல்வதாகிய பாவம் தீமைக்குக் காரணமாகும்

என்று சாத்திரத்தில் விலக்கப்பட்டிருப்பினும் அறியாமை, ஆசை முதலிய குற்றங்கள் உடையவனுக்கு அது உரியதாகின்றது - இல்லையேல் அது அவனுக்குப் பொருந்தாது. அவ்வாறே நித்திய, நைமித்திகக் காம்ய கர்மங்களும் அவனுக்குரியவையாகும்.

மறுப்பு : உடலிலிருந்து ஆத்மா வேறானது என்பதை அறியாதவரை நித்தியக் கர்மத்தை எவனொருவனும் செய்ய மாட்டான் என்றால்.

பதில் : அப்படியன்று. அநாத்மாவினால் (அதாவது ஆத்மா அல்லாத உடலினால்) செய்யப்படும் அசைகின்ற கர்மத்தை 'நான் செய்கின்றேன்' என்னும் எண்ணத்துடன் ஒருவன் செய்வதை நாம் காண்கின்றோமே.

மறுப்பு : உடல் முதலியவற்றின் சேர்க்கையில் உண்டாகும் நான் என்னும் எண்ணமானது உபசார வழக்காகுமேயன்றி (கௌண-ப்ரத்யயம்) அது பொய்ம்மை மயக்கமன்று (மித்யை).

பதில் : இதை ஏற்றுக் கொள்ள முடியாது. அப்படியானால் அதன் செய்கைகளும் உபசார வழக்கு என்றே கொள்ளப்படும்.

மறுப்பு : ஆத்மாவிற்குச் சொந்தமான உடல் முதலியவற்றின் சேர்க்கையில் உண்டாகும் நான் என்னும் எண்ணம் உபசார வழக்காகும். தந்தையைப் பார்த்து 'நீ தானே உனது மகனாக இருக்கின்றாய்' என்று வேதம் கூறுவது போன்றும், நடைமுறை உலகில் இப்பசு எனக்கு உயிராகும்' என்று ஒருவன் கூறுவது போன்றதுமாகும். இது மயக்கமன்று. இதற்கு மாறாக தூணைப் பார்த்து ஒருவன் மனிதன் என மயங்கினால் இரண்டிற்கும் வேற்றுமை அறியாத காரணத்தினால் அது மயக்கமாகும்.

பதில் : உபசார வழக்கினாலுண்டாகும் எண்ணம் முதன்மையான காரியத்திற்குப் பயன்படாது (உண்மைப் பயனைத் தராது); காரணம் உவமை உருபாகிய 'போல' என்பது தொக்கி நிற்பதால் இடத்தைப் (ஒரு பொருளை) புகழ்ந்துரைப்பதற்கே அது பயன்படுத்தப்படுகின்றது. உதாரணமாக 'தேவதத்தன் ஒரு சிங்கம்' என்றும் 'மாணாக்கன் நெருப்பு' என்றும் கூறுவது போன்றதாகும். இதன் மூலம் சிங்கம் போல் கொடுமையும், நெருப்புப் போல் பொன் நிறமும் ஒப்பிட்டுக் கூறப்படுகின்றது. இது கொடுமைக்கு இடமாக இருக்கும் தேவதத்தனையும், பொன் நிறத்திற்கு இடமாயிருக்கும் மாணாக்கனையும் புகழும் பொருட்டாகும். இந்த உபசார வழக்கின் சொல் மற்றும் எண்ணத்தின் காரணமாக உண்மையான சிங்கத்தின் செயலோ, உண்மையான நெருப்பின் செயலோ விளைவதில்லை. ஆனால் மயக்க எண்ணத்தின் பயனால் உண்டாகும் தீமையை ஒருவன் உண்மையிலேயே அனுபவிக்கின்றான்.

மேலும் உபசார வழக்கினால் குறிப்பிடப்படும் தேவதத்தனையும், மாணாக்கனையும் முறையே இவன் சிங்கமில்லை; இவன் நெருப்பில்லை என்பதை ஒருவன் அறிகின்றான். அதே சமயம் ஆத்மாவிற்கும், உடலுக்கும் வேறுபாடு இருந்தபோதிலும், உடல் முதலியவற்றின் சேர்க்கையை 'இது ஆத்மா' இல்லை என்று அஞ்ஞானி முற்கூறியது போல் அறிவதில்லை. ஆகவே

அச்சேர்க்கையினிடத்து 'நான்' என்னும் சொல்லும் 'நான்' என்னும் எண்ணமும் உபசார வழக்கினால் ஆனவையன்று. அதுபோன்றே கௌண ஆத்மாவினால் அதாவது உபசார வழக்கினால் சுட்டப்படும் ஆத்மாவினால் செய்யப்பட்டச் செய்கையானது நான் என்னும் எண்ணத்தினால் குறிப்பிடப்படும் உண்மையான ஆத்மாவினால் செய்யப்பட்டதன்று. உபசார வழக்கினால் குறிப்பிடப்படும் சிங்கம், நெருப்பு முதலியவற்றின் செய்கைகளும் உண்மையான சிங்கத்தாலும், உண்மையான நெருப்பினாலும் செய்யப்பட்டவையாகா. அதுபோல் தேவதத்தனின் கொடுமையையும், மாணாக்கனின் பொன் நிறத்தையும் உண்மையான சிங்கமும், உண்மையான நெருப்பும் செய்வதில்லை. புகழும் பொருட்டே அவை குறிப்பிடப்படுகின்றன.

மற்று தேவதத்தனையும், மாணாக்கனையும் புகழும் பொழுது அவர்கள் 'நான் சிங்கமில்லை' 'நான் நெருப்பில்லை' 'சிங்கத்தின் செய்கை எனதல்ல' நெருப்பின் செய்கை எனதல்ல' என்பதை நன்கறிவார்கள். அதனால் உடல் முதலியவற்றின் சேர்க்கையின் செய்கையானது 'என்னுடையதில்லை' 'உண்மையான ஆத்மாவினுடையதில்லை' என்று எண்ண வேண்டுமேயன்றி 'நானே கர்த்தா' 'எனதே கர்மம்' என்று ஒருவன் கருதக்கூடாது.

அடுத்து ஆத்மா தனது நினைவு, இச்சை, முயற்சியின் காரணமாகக் கர்மத்தைச் செய்கின்றது என்று சிலர் கூறுகின்றனர். இது சரியன்று. காரணம் அவை மயக்கதினின்று வருகின்றன. உண்மையில் நினைவு, இச்சை, முயற்சி, என்னுமிவையெல்லாம் மயக்க உணர்வின் காரணமாக அனுபவிக்கப்பட்ட வேண்டிய, வேண்டாத கர்மப் பயன்களின் வாசனையினின்றே வருகின்றன. எவ்வாறு இப்பிறவியில் தர்மம், அதர்மம் மற்றும் அவற்றின் பயனை அனுபவிப்பது எனுமிவை உடல் முதலியவற்றின் சேர்க்கையை ஆத்மாவாகக் கருதுவதாலும் விருப்பு, வெறுப்பு மற்றும் பிற தன்மைகளாலும் உண்டாகின்றனவோ அவ்வாறே சென்ற பிறவியிலும் அதற்கு முந்திய பிறவியிலும் உண்டாயின. எனவே செல்வதும், வருவதுமாகிய சம்சாரத்திற்கு அறியாமையே காரணமென்றும், அதற்கு ஆதியில்லையென்றும் நாம் அனுமானிக்கின்றோம். அதனால் சம்சார நீக்கமானது கர்மத்துறவோடு கூடிய ஞான நிஷ்டையினாலேயே சாத்தியம் என்பது நிறுவப்படுகிறது.

மேலும் உடலை நான் எனக் கருதுவதற்கு அறியாமை காரணமாதலால் அந்த அறியாமை ஒழியுமிடத்து உடல் ஒழிகின்றது. அதனால் சம்சாரம் நீங்குகின்றது. உடல் முதலியவற்றின் சேர்க்கையை ஆத்மாவாகக் கருதுவது அறியாமையாகும். 'நான் பசுவினின்று வேறானவன்; அதுபோல் பசுவும் என்னிலிருந்து வேறானது' என்பதை அறிகின்ற எவனும் பசுவை 'நான்' எனக் கருதுவதில்லை. ஆனால் அறியாமை மிக்கவனோ பகுத்தறிவின்மையால் தூணை மனிதனாகக் கருதுவது போல் உடல் முதலியவற்றின் சேர்க்கையை 'நான்' என்று கருதுகிறான். பகுத்தறிவுடையவன் அவ்வாறு கருதுவதில்லை.

அடுத்து 'நீ தானே (உனது) மகனாக இருக்கிறாய்' என்று சுருதியில் கூறப்படுவதும் உபசார வழக்கேயாகும் (கௌண ப்ரத்யயம்) அது பிறப்பிப்பது பிறப்பிக்கப்படுவது என்னும் தொடர்பினாலானதாகும். தந்தைக்காக மகன்

உண்ண முடியாதது போல் உண்மை ஆத்மாவின் செய்கையை உபசார வழக்கினாலான ஆத்மாவினால் செய்ய முடியாது. உபசார வழக்கினாலான சிங்கமும் (தேவதத்தனும்) உபசார வழக்கினாலான நெருப்பும் (மாணாக்கனும்) உண்மை சிங்கத்தின், உண்மை நெருப்பின் செய்கையைச் செய்ய முடியாதது போன்றதாகும் இது.

மறுப்பு : மனித அறிவிற்கு எட்டாத விஷயங்களுக்கு சாத்திரம் பிரமாணமாகும். அதனால் ஆத்மா செய்ய வேண்டியக் கர்மமானது உபசார வழக்கினால் ஆத்மாவாகக் கூறப்படும், உடல், புலன்கள் முதலியவற்றால் செய்யப்படுகின்றது எனலாமே.

பதில் : அவ்வாறன்று. காரணம் அந்த ஆத்மாக்கள் அறியாமையினால் உண்டானவையாகும். உடலும், புலன்களும் மற்றுமிவை போன்றவையும் ஆத்மா என்று உபசார வழக்கினால் கூறப்படுபவையன்று. மாறாக மயக்கத்தின் காரணமாகவே அவை ஆத்மாக்களாகக் கருதப்படுகின்றன. மயக்கம் உள்ளவரை அவை ஆத்மாவாகக் கருதப்படும். மயக்கம் ஒழியுமாயின் அவை ஆத்மா என்னும் எண்ணமும் ஒழியும். அறியாமையுடைய சிறுவர்களிடமன்றோ 'நான் உயரமானவன், நான் சிகப்பானவன்' என்று உடல் முதலியவற்றின் சேர்க்கையை நான் என்று கருதும் எண்ணம் காணப்படுகின்றது. இதற்கு மாறாக உடல் முதலியவற்றின் சேர்க்கையினின்று நான் வேறானவன் என்பதை அறியும் விவேகிகள் அப்பொழுது உடல் முதலியவற்றின் சேர்க்கையை நான் என்று கருதுவதில்லை. மயக்கம் தீர்ந்தவழி உடல் முதலியவற்றின் சேர்க்கையை நான் என்று கருதும் எண்ணம் முடிவுறுகின்றது. அதனால் அந்த எண்ணம் மயக்கத்தினாலானதேயன்றி உபசார வழக்கினாலானதன்று. அதுபோல் சிங்கமும் தேவதத்தனும் மாணாக்கனும் நெருப்பும் அவர்களுக்கிடையேயுள்ள வேற்றுமை ஒற்றுமைய்ய உணரும்பொழுது ஒன்று என மனதிற் கருதுவதும், சொல்லால் வழங்குவதும் உபசார வழக்காகக் கொள்ளப்படும். இரண்டு பொருட்களுக்கும் இடையிலுள்ள வேற்றுமையும், ஒற்றுமையும் உணரப்படாத விடத்து அவ்வாறு கொள்ளப்படுவதில்லை.

சாத்திரத்தைப் பிரமாணமாகக் கொண்டு எது கூறப்பட்டதோ (உபசார வழக்கை ஏற்றுக் கொள்ள வேண்டும் என்பது) அதுவும் சரியன்று. சாத்திரம் பிரமாணமாவது மனித அறிவிற்கு எட்டாத விஷயங்களுக்குத்தான். சாத்திரம் பிரமாணமாவது அறிவினால் பிரத்யக்ஷமாக, நேரடியாக அறிய முடியாத அக்னி ஹோத்திரம் போன்றவற்றின் கருவிகளுக்கும், அவற்றின் பயன்களுக்கும் இடையிலுள்ள தொடர்பு முதலியவற்றிற்கேயன்றி அறிவினால் நேரடியாக அறியப்படும் விஷயங்களுக்கன்று. ஏனெனில் நேரடியாக அறிய முடியாத விஷயங்களை சாத்திரங்கள் எடுத்துரைப்பதால் அவை பிரமாணமாகின்றன. ஆகவே உடல் முதலியவற்றின் சேர்க்கையை மயக்கத்தின் காரணமாக உண்டாகும் நான் என்னும் எண்ணத்தை உபசார வழக்காகக் கொள்ள முடியாது. 'தீ குளிரும்' 'தீ இருளைத் தரும்' என்று நூறு சுருதிகள் கூறுமாயின், அது உண்மைக்கு எதிரானது ஆதலினால் வேறு அர்த்தத்தில் அவை கூறப்பட்டதாகக் கொள்ள வேண்டுமேயன்றி, மற்றோர் பிரமாணத்திற்கு

எதிராகவோ, தனது வார்த்தைக்கு எதிராகவோ அதை (அர்த்தத்தை) கொள்ளக் கூடாது.

மறுப்பு : மயக்கத்தின் காரணமாகவே ஒருவன் ஒரு கர்மத்தைச் செய்கிறான். ஆகவே அம்மயக்கம் ஒழிந்தவுடன் கர்மத்தைச் செய்பவன் இல்லாமையினால், சுருதி பிரமாணவதில்லை என்றும் கூறலாமே.

பதில் : அப்படியன்று. பிரம்மவித்யையைப் பொருத்தமட்டில் சுருதி இன்றும் பிரமாணமாக, உண்மையாக இருக்கின்றதே.

மறுப்பு : கர்மத்தை விதிக்கும் சுருதி பிரமாணமாகாதது போல், பிரம்ம வித்யையை உணர்த்தும் சுருதியும் பிரமாணமாகாது என்று கூறலாமே.

பதில் : அப்படிக் கூற முடியாது. (பிரம்ம வித்யையை) நீக்கும் எண்ணம் இருக்க முடியாது. சுருதியின் மூலம் ஆத்மாவை அறிந்தவுடன் உடல் முதலியவற்றின் சேர்க்கைதான் நான் என்று எண்ணும் எண்ணம் எவ்வாறு தொலைகின்றதோ, அதுபோல் ஆத்மாவினிடத்தே உள்ள ஆத்ம அறிவு எதனாலும், எவ்விதத்தாலும் நீக்க முடியாததாகும். தீ உஷ்ணமாகவும், ஒளிமிக்கதாகவும் இருக்கின்றது என்னும் அறிவை நீக்க முடியாதது போல், ஆத்ம அறிவும் அதன் பயனிலிருந்து (அறியாமை இல்லை என்னும் பயனிலிருந்து) நீக்க முடியாதது ஆகும்.

மற்றும் கர்மத்தை வலியுறுத்தும் சுருதி, பிரமாணம் ஆவதில்லை என்பதுமில்லை. ஏனெனில் அது பழைய செயல்களை ஒன்றன் பின் ஒன்றாக நீக்கி அகத்திலிருக்கும் ஆத்மாவை எதிர் கொள்ளும் நோக்கத்தில் புதிய புதிய செயல்களை விதிக்கின்றது. (கர்மகாண்ட சுருதி அநாகரிகமாக சுபாவத்தால் செய்யப்படும் செயல்களைத் தவிர்த்து, வேள்வி முதலிய புதிய செயல்களை விதிக்கின்றது. அவற்றின் மூலம் புத்தியைத் தெளியச் செய்து அகத்திலிருக்கும் ஆத்மாவை எதிர்நோக்குவதற்கான ஊக்கத்தைத் தருகின்றது. எனவே கர்ம காண்ட சுருதியானது வழிவழியாகப் பிரமாணமாகவே இருக்கின்றது). கருவி போலியாக இருந்த போதிலும் பயன் உண்மையாக இருப்பதினால் கருவியும் உண்மையேயாகும். இது அர்த்தாவாதம் விதிக்குத் துணையாக இருப்பது போன்றதாகும். அன்றாட வாழ்க்கையில் கூட ஒரு சிறுவனை அல்லது ஒரு புத்தி சுவாதீனமற்றவனை பால் குடிக்கச் செய்ய வேண்டும் என்பதற்காக, பால் குடித்தால் தலைமுடி நன்கு வளரும் என்று கூறப்படுகின்றது. அல்லது மற்றொரு வகையாகவும் அதைக் கூறலாம். ஆத்ம அறிவு பிறப்பதற்கு முன்பு கர்மகாண்ட சுருதிகள், உடல் அபிமானத்தாலுண்டான பிரத்யக்ஷம் அல்லது நேரடி அறிவு பிரமாணமாதல் போல், பிரத்யக்ஷ பிரமாணங்களாக இருக்கின்றன.

இனி மறுப்பாளர் இவ்வாறு வாதிடலாம் : ஆத்மா தானே நேரடியாகச் செயல்படவில்லை என்ற போதிலும் தான் அருகில் இருப்பதின் மூலம் செயல்படுகின்றது. இதன் மூலம் ஆத்மா உண்மையிலேயே கர்த்தாவாகின்றது. உதாரணமாக போர் வீரர்கள் போரிடும்பொழுது அவர்களின் அரசன் போர் செய்யாதிருந்த போதிலும் அருகில் தான் இருப்பதின் மூலம்

போரிடுபவனாகவே கூறப்படுகிறான். அரசனே வெற்றி பெற்றான், அரசனே தோல்வியுற்றான் என்றும் கூறப்படுகிறான். அவ்வாறே படைத்தளபதி வெறும் வார்த்தைகளாலேயே செயல்படுகிறான். அச்செய்கையின் பயன் அரசனுக்கு அல்லது படைத்தளபதிக்குச் சேர்வதை நாம் காண்கின்றோம். இதற்குப் பிறிதோர் உதாரணம்: வேள்வியை உண்மையில் புரோகிதர்களே செய்தபோதிலும் அதன் எஜமானனே (வேள்வியின் சொந்தக்காரன்) செய்வதாகக் கூறப்படுகின்றது. அதுபோன்றே உடல் முதலியவற்றின் செய்கை, அச்செய்கையின் பயன் ஆத்மாவைச் சேர்வதால் ஆத்மாவினால் செய்யப்பட்டதேயாகும். மற்றோர் உதாரணம்: காந்தம் சிறிய இரும்புத்துண்டை நகரச் செய்கின்றது என்னும் போது, ஒன்றும் செய்யாது இருந்த இடத்திலேயே அசையாது இருக்கும் காந்தம் தான் உண்மையானக் கர்த்தாவாகின்றது. அதுபோல்தான் ஆத்மாவும்.

பதில் : இவ்வாறு கூறுவது பொருந்தாது. ஏனெனில் செய்யாத பொருள் செய்வதாதல், காரகமாதல் வேண்டும். (காரகம் - செய்கையைச் செய்வது)

மறுப்பாளர் : ஆம். காரகம் பல்வேறு வகையுடையதாகும்.

பதில் : அவ்வாறன்று. அரசன் முதலானோர் நேரான கர்த்தாவாக இருப்பதையும் நாம் காண்கின்றோம். அரசன் தனது செய்கையினாலும் நேரடியாகப் போர்புரிகிறான். போர் வீரர்களைப் போரில் ஈடுபட ஏவுதலிலும், அவர்களுக்குக் கூலி கொடுப்பதிலும் அங்ஙனமே வெற்றி, தோல்விகளின் பயனை அனுபவிப்பதிலும் அரசன் உண்மையானக் கர்த்தாவாகின்றான். அஃதே போல் வேள்வியின் எஜமானனும் பிரதான ஹவிஸைக் கொடுப்பதாலும், தட்சிணை கொடுப்பதாலும் உண்மையான கர்த்தாவாகின்றான். ஆகவே செயலில் நேரடியாக ஈடுபடாதப் பொருளை கர்த்தாவாகக் கூறுவது உபசார வழக்கேயாகும். அரசன், எஜமானன் போன்றவர்கள் விஷயத்தில் செயலில் நேரடியாக ஈடுபடுதல் காணப்படவில்லையாயின் அப்போது காந்தம் இரும்பை நகரச் செய்வது போல், அரசனும், எஜமானனும் தாம் அங்கு இருப்பதின் மூலம் கர்த்தாவாகின்றனர் என்றே கருதப்பட வேண்டும். ஆனால் அரசன் முதலியவர்கள் விஷயத்தில் அவர்கள் அங்ஙனம் செயல்படாதிருந்தது காணப்படவில்லை. எனவே இருப்பின் மூலம் கர்த்தாவாதால் உபசார வழக்கேயன்றி உண்மையன்று. இது உண்மையென்றால் அவனுக்கு அக்கர்மப் பயனில் இருக்கும் தொடர்பும் உபசார வழக்கேயாகும். உபசார வழக்கினால் கூறப்படும் கர்த்தாவினால் உண்மையான செயல் செய்யப்படுவதில்லை. எனவே செயல்படாத ஆத்மா உடல் முதலியவற்றின் செய்கையினால் கர்த்தாவும், போக்தாவும் ஆகின்றது என்று கூறுவது நிச்சயம் தவறேயாகும்.

ஆனால் கனவிலும் மாயாஜாலக்காரனின் வித்தையிலும் போல் மயக்கத்தின் காரணமாக இவையெல்லாம் பொருந்தவே செய்கின்றன. இது தவிர, செய்பவனாயிருந்தாலும், அனுபவிப்பவனாயிருந்தாலும் இன்னோரன்ன தீமைகளும் உடல் முதலியவற்றை ஆத்மாவாகக் கருதும் மயக்கத்தின்

தொடர்ச்சி அறுந்து போகும் ஆழ்ந்த நித்திரை, சமாதி போன்றவற்றில் காணப்படவில்லை. ஆகவே மயக்க அறிவினாலானதே இந்த சம்சார மயக்கமாகும். அது உண்மையானதன்று.

எனவே இந்த சம்சார மயக்கமானது மெய்யறிவினால் மட்டுமே முற்றிலும் நீக்கப்படுகின்றது என்பதே முடிவாகும்.

இவ்வத்தியாயத்தில் கீதா சாத்திரத்தின் சாரம் முழுவதையும் நிறைவு செய்து சாத்திரத்தை மேலும் உறுதிப்படுத்துவதற்காக இங்கு சிறப்பாகவும், சுருக்கமாகவும் எடுத்துரைத்தப் பகவான் இப்பொழுது சாத்திரத்தைப் பிறர்க்கு உபதேசிக்கும் ஒழுங்கு முறையைக் கூறப்போகின்றார்.

**इदं ते नातपस्काय नाभक्ताय कदाचन ।**
**न चाशुश्रूषवे वाच्यं न च मां योऽभ्यसूयति ॥ ६७॥**

**இதம் தே நாதபஸ்காய நாபக்தாய கதாசன ।**
**ந சாஶுஶ்ரூஷவே வாச்யம் ந ச மாம் யோ(அ)ப்யஸூயதி ॥ 67॥**

*உனக்கு உபதேசிக்கப்பட்ட இச்சாத்திரத்தை ஒருபோதும் தவமில்லாதோனுக்கும், பக்தியில்லாதோனுக்கும், கேட்க விரும்பாத பணிவிடை செய்யாதோனுக்கும் மற்று என்னை எவன் இகழ்கின்றானோ அவனுக்கும் சொல்லக்கூடாது.*

இச்சாத்திரம் உனது நன்மைக்காகவும், சம்சாரம் அழிதற் பொருட்டாகவும் என்னால் உனக்கு உபதேசிக்கப்பட்டது. 'ந வாச்யம்' - சொல்லக்கூடாது (இதிலுள்ள 'ந' என்பதை ஒதுங்கி நிற்கும் 'வாச்யம்' என்னும் சொல்லோடு கூட்டுக). தவமில்லாதோனுக்கு இதனை எடுத்துச் சொல்லக்கூடாது. அப்படியே தவம் செய்தவனாயினும் குருவினிடத்தும், பகவானிடத்தும் பக்தியில்லாதோனுக்கு எச்சூழ்நிலையிலும் எடுத்துச் சொல்லக்கூடாது. தவமும், பக்தியும் உடையவனாயினும் பணிவிடை செய்யாதோனுக்கு இதனைச் சொல்லக் கூடாது. நான் வசுதேவரின் மைந்தன் என்று என்னை சாதாரண மனிதனாக் கருதி நான் தற்புகழ்ச்சி உடையவனென்றும் ஈசுவரன் அல்லன் என்றும் இகழ்பவன் எவனோ அவனுக்கும் இதனை எடுத்துச் சொல்லக்கூடாது. இதிலிருந்து இச்சாத்திரமானது பகவானை இகழாதவனாகவும், தவமும், பக்தியும் உடையவனாகவும் பணிவிடை செய்பவனாகவும் இருக்கும் ஒருவனுக்கே சொல்லத்தக்கது என்று தெரிகிறது. இப்போது, பல்வேறு இடங்களில் கூறப்பட்டிருப்பது போல் 'ஒன்று தபஸ்விக்குச் சொல்லப்பட வேண்டும் அல்லது புத்திமானுக்குச் சொல்லப்பட வேண்டும்' என்பதிலிருந்து இச்சாத்திரமானது பணிவிடையும், பக்தியுமுடைய தபஸ்விக்காவது அல்லது இவையிரண்டையுமுடைய புத்திமானுக்காவது சொல்லப்பட வேண்டும் என்றாகிறது. அதனால் பணிவிடையும், பக்தியும் இல்லாத தபஸ்விக்கும் சொல்லக்கூடாது. அதுபோல் இவையிரண்டுமில்லாத புத்திமானுக்கும் சொல்லக்கூடாது. நற்குணங்கள் அனைத்தும் உடையவனாயினும், பகவானை

இகழ்ந்து பேசுபவனுக்கும் இதனைச் சொல்லக்கூடாது. இது சாத்திரத்தை உபதேசிக்கும் சம்பிரதாயமாகும். அதாவது ஒழுங்குமுறை விதியாகும்.

அடுத்து பகவான் சாத்திரத்தை பிறர்க்கு உபதேசிப்பவன் எய்தும பயனை எடுத்துரைக்கின்றார்.

**य इमं परमं गुह्यं मद्भक्तेष्वभिधास्यति ।**
**भक्तिं मयि परां कृत्वा मामेवैष्यत्यसंशयः ॥६८॥**

**ய இமம் பரமம் குஹ்யம் மத்பக்தேஷ்வபிதாஸ்யதி ।**
**பக்திம் மயி பராம் க்ருத்வா மாம் ஏவைஷ்யத்யஸம்ஶய: ॥ 68॥**

*எவன் என்னிடம் பரம பக்தி செலுத்தி, இப்பரம ரகசியத்தை எனது பக்தர்களுக்கு எடுத்துரைக்கின்றானோ அவன் என்னை எய்துவான் இதில் ஐயமில்லை.*

கேசவனுக்கும், அர்ஜுனனுக்கும் இடையில் உரையாடல் வடிவில் நடைபெற்ற மிக்க ரகசியமான இந்த நூலை என்மீது பக்தியுடையயோரிடத்து எவன் எடுத்துரைப்பானோ அதாவது நூலையும், நூற்பொருளையும் நான் உனக்கு எடுத்துரைத்து உணர்த்தியது போல் என் பக்தரிடத்து எடுத்துரைத்து உணர்த்துவானோ அவன் உண்மையில் என்னை எய்துவான். இதனை எங்ஙனம் எடுத்துரைப்பான்? 'நான் பகவானுக்குச் செய்யும் தொண்டு என்னவென்றால் கீதையையும், அதன் சாரத்தையும் பகவத் பக்தர்கட்கு உணர்த்துவதேயாகும். பரமகுருவான பகவானுக்கு நான் இந்தப் பக்தித் தொண்டினைச் செய்கின்றேன்' எனும் இவ்வாறான உயர்ந்த பக்தியை என்னிடம் செலுத்தி எடுத்துரைக்க வேண்டும். இதன் மூலம் அவன் எய்தும் பயன், அவன் பகவானை அடைகிறான். அதாவது அவன் முக்தியடைகிறான் என்பதாம்.

மேலும்,

**न च तस्मान्मनुष्येषु कश्चिन्मे प्रियकृत्तमः ।**
**भविता न च मे तस्मादन्यः प्रियतरो भुवि ॥६९॥**

**ந ச தஸ்மான் மனுஷ்யேஷு கஶ்சின்மே ப்ரியக்ருத்தம: ।**
**பவிதா ந ச மே தஸ்மாத் அன்ய: ப்ரியதரோ புவி ॥ 69॥**

*மனிதரில் அவனைக் காட்டிலும் எனக்குப் பிரியமானத் தொண்டு செய்பவன் எவனுமிலன். அவனை விட எனக்குப் பிரியமானவன் இப்புவிமிசை வேறொருவன் இலன்.*

மனிதர்களிடையே இக்கீதா சாத்திரத்தை ஒழுங்குமுறையுடன் எடுத்துரைப்பவனைவிட எனக்குப் பிரியமானத் தொண்டு செய்பவன் எவனும்

இப்போதும் இல்லை. இனி வருங்காலத்திலும் எனக்குப் பிரியமானவன் அவனை விட இவ்வுலகில் வேறொருவன் இலன்.

மற்று எவன்,

**अध्येष्यते च य इमं धर्म्यं संवादमावयोः ।**
**ज्ञानयज्ञेन तेनाहमिष्टः स्यामिति मे मतिः ॥७०॥**

**அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம் ஸம்வாதம் ஆவயோ: ।**
**ஜ்ஞானயஜ்ஞேன தேனாஹம் இஷ்ட: ஸ்யாம் இதி மே மதி ॥ 70॥**

*தர்மத்தினின்று வழுவாத நம்மிருவருடைய உரையாடலை எவன் படிப்பானோ அவனால் நான் ஞானயக்ஞத்தால் பூஜிக்கப் பட்டவனாவேன். இது என் கொள்கை.*

எனக்கும் உனக்கும் இடையே நடைபெற்ற தர்மத்தினின்று வழுவாத இந்த உரையாடலை எவன் படிப்பானோ அவன் என்னை ஞான வேள்வியால் வழிபடுபவனாவான். 'விதி, ஜபம், உபாம்சு, மானஸம்' என்னும் யக்ஞங்களுள் மானஸ யக்ஞமே மிகச் சிறந்ததாகும். அதனால் கீதா சாத்திரத்தைப் படிப்பது மானஸயக்ஞமாக அதாவது மனதினால் செய்யப்படும் வேள்வியாகப் போற்றப்படுகின்றது. (விதியக்ஞம்-உடலால் செய்யப்படும் பிரம்ம யக்ஞாதிகளால் தொழுதல்; ஜபயக்ஞம் - உரத்து உச்சரிக்கப்படும் பாராயணங்களால் தொழுதல், உபாம்சுயக்ஞம் - பிறர்க்குக் கேளாதபடி வாய்க்குள் உச்சரிப்பதின் மூலம் தொழுதல்; மானஸ யக்ஞம் - மனத்தால் தியானித்துத் தொழுதல்.)

இச்சுலோகம் உண்மையானப் பயனை எடுத்துரைப்பதாகவும் நாம் கருதலாம். ஒரு தெய்வத்தைப் பற்றிய ஞான யக்ஞத்தின் அதாவது அத்தெய்வத்தை வழிபடுவதின் பயனுக்கு இணையான பயன் கீதா சாத்திரத்தைப் படிப்பவனுக்கு உண்டாகின்றது என்பதாம்.

**श्रद्धावाननसूयश्च श‍ृणुयादपि यो नरः ।**
**सोऽपि मुक्तः शुभाँल्लोकन्प्राप्नुयात्पुण्यकर्मणाम् ॥७१॥**

**ஶ்ரத்தவான் அனஸூயஶ்ச ஶ்ருணுயாத் அபி யோ நர: ।**
**ஸோ(அ)பி முக்த: ஶுபான்லோகான் ப்ராப்னுயாத் புண்ய கர்மணாம் ॥71॥**

*நம்பிக்கையுடையவனாகவும், காழ்ப்புணர்ச்சியற்றவனாகவும் எந்த மனிதன் இதனைச் செவிமடுக்கவாவது செய்கின்றானோ அவனுங்கூட விடுபட்டவனாய் புண்ணியம் செய்தவர்களுக்குரிய புண்ணிய உலகங்களை எய்துவான்.*

நம்பிக்கையுடையவனாகவும், துவேஷமற்றவனாகவும் இதனை செவிமடுக்கவாவது செய்கின்றானோ அவன் பாவங்களினின்று விடுபட்டு அக்னி ஹோத்திரம் போன்ற புண்ணியக் கர்மங்கள் செய்தவர்களுக்குரிய புண்ணிய உலகங்களை எய்துவான். 'ஆவது' (அபி) என்னும் சொல் இவனுக்கே இப்படியென்றால் இதன் பொருளை நன்குணர்ந்தவன் எத்தகைய மேலான பயனைப் பெறுவான் என்பதைச் சுட்டுகின்றது.

மாணாக்கன் நூற்பொருளை உணர்ந்து கொண்டானா அல்லது உணரவில்லையா என்பதை அறிய வேண்டும் என்பதற்காகப் பின்வரும் வினா எழுப்பப்படுகின்றது. ஒருக்கால் அவன் உணரவில்லையென்றால் அவனுக்கு வேறு வழியில் உணர்த்த வேண்டும் என்பது ஆசிரியன் கருத்தாகும். இது ஒரு ஆசிரியன் கடமை என்னவென்று காட்டுகிறது.

**कच्चिदेतच्छ्रुतं पार्थ त्वयैकाग्रेण चेतसा ।**
**कच्चिदज्ञानसम्मोहः प्रनष्टस्ते धनञ्जय ॥७२॥**

**கச்சித் ஏதச் ச்ருதம் பார்த்த த்வயைகாக்ரேண சேதஸா ।**
**கச்சித் அஜ்ஞான ஸம்மோஹ: ப்ரணஷ்டஸ்தே தனஞ்ஜய ॥ 72॥**

*பார்த்தா! உன்னால் ஒருமுகப்பட்ட மனத்துடன் இது கேட்கப்பட்டதா? தனஞ்ஜய! உனது அஞ்ஞான மயக்கம் அழிந்ததா?*

பார்த்தா! நான் உனக்கு எடுத்துரைத்ததனை ஒருமுகப்பட்ட மனத்தோடு கேட்டனையா? உனது அறியாமையினாலான மயக்கம், பகுத்தறிவின்மை, அவிவேகம் அழிந்ததா? இதற்காகத்தானே இந்த நூலைக் கேட்பதிலே நீயும், எடுத்துரைப்பதிலே நானும் இத்துணை சிரமப்பட்டோம்.

**अर्जुन उवाच**

**नष्टो मोहः स्मृतिर्लब्धा त्वत्प्रसादान्मयाच्युत ।**
**स्थितोऽस्मि गतसन्देहः करिष्ये वचनं तव ॥७३॥**

*அர்ஜுன உவாச*

**நஷ்டோ மோஹ: ஸ்ம்ருதிர்லப்தா த்வத்ப்ரஸாதான்மயாச்யுத ।**
**ஸ்திதோ (அ)ஸ்மி கதஸந்தேஹ: கரிஷ்யே வசனம் தவ ॥ 73॥**

*அர்ஜுனன் கூறினான்*

***மயக்கம் தீர்ந்தது, உன் அருளினாலே அச்சுத! நினைவு கூர்தலும், நான் எய்தினேன், ஐயம் விலகியது, நிலைபெற்றேன், இனி உன் மொழியே என் வழியாம்.***

மயக்கம் என்பது அறியாமையில் பிறப்பது, சம்சார துன்பங்களுக்கெல்லாம் காரணமாவது, கடத்தற்கரிய கடல் போன்றதாகும். நினைவு கூர்தல் என்றால், எதனை எய்தப் பெறுவதால் நெஞ்சத்து முடிச்சுக்களெல்லாம் முற்றும் அவிழ்க்கப் பெறுகின்றனவோ அந்த ஆத்ம உண்மையைப் பற்றிய நினைவாகும். இவையெல்லாம் உனதருளினாலே நான் எய்தப் பெற்றேன் அச்சுதா! இது, இந்நூலை நன்கறிவதின் பயனாக மயக்கம் தீர்தலும் ஆத்ம உண்மையை நினைவு கூர்தலும் அமைகின்றன என்பதை எடுத்துக் காட்டுகின்றது. இவ்வாறே சுருதியிலும் 'ஆத்மாவை அறியாத நான் துயர்ப்படுகின்றேன்,' என்று தொடங்கி ஆத்ம அறிவினால் முடிச்சுக்களெல்லாம் முற்றும் அவிழ்ந்திடுதல் கூறப்பட்டிருக்கின்றது. (சா.உ.7-1-3; 26-2) அதுபோல் 'நெஞ்சத்து முடிச்சு தெறித்திடுகின்றது' (மு.உ.2-2-8) என்றும், 'ஒருமையைக் காண்பவனுக்கு மயக்கமென்ன? துன்பமென்ன?' என்பனவும் சுருதி மொழிகளாம். இப்போது ஐயம் நீங்கியவனாய் உனது ஆணையில் நிலைபெற்றிருக்கின்றேன். இனி உன் மொழியே என் வழியாம் என்றால், உனதருளினால் எனது வாழ்க்கை லட்சியம் ஈடேறியது இனி நான் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை என்று பொருளாகும்.

நூற்பொருள் இங்ஙனம் நிறைவுபெறுகின்றது. இப்போது சஞ்ஜயன் சரிதத்தின் தொடர்ச்சியைக் கூறுகிறான்:

सञ्जय उवाच

**इत्यहं वासुदेवस्य पार्थस्य च महात्मन: ।**
**संवादमिममश्रौषमद्भुतं रोमहर्षणम् ॥७४॥**

*ஸஞ்ஜய உவாச*

**இத்யஹம் வாஸுதேவஸ்ய பார்த்தஸ்ய ச மஹாத்மன: ।**
**ஸம்வாதம் இமம் அஶ்ரௌஷம் அத்புதம் ரோமஹர்ஷணம் ॥ 74॥**

*சஞ்சஜயன் கூறினான்*

***இங்ஙனம் நான் வாசுதேவருக்கும், மகாத்மா பார்த்தனுக்கும் இடையில் நடைபெற்ற அதியற்புதமான புளகந்தரக் கூடிய உரையாடலைக் கேட்டேன்.***

இவ்வாறு நான் வாசுதேவருக்கும், மகாத்மா பார்த்தனுக்கும் இடையில் நடைபெற்ற அதியற்புதமான புகைந்தரக் கூடிய உரையாடலைக் கேட்டேன்.

மேலும் இதனை,

**व्यासप्रसादाच्छ्रुतवानेतद्गुह्यमहं परम् ।**
**योगं योगेश्वरात्कृष्णात्साक्षात्कथयत: स्वयम् ॥७५॥**

**வ்யாஸப்ரஸாதாச்ச்ருதவான் ஏதத் குஹ்யம் அஹம் பரம் ।**
**யோகம் யோகேஶ்வராத்க்ருஷ்ணாத்ஸாக்ஷாத்கதயத: ஸ்வயம் ॥ 75॥**

*வியாசரின் அருளினால் மிக்க ரகசியமான இந்தப் பரம யோகத்தை யோகேசுவரரான கிருஷ்ணர் தாமே எடுத்துரைக்க நான் நேரே கேட்கப் பெற்றவனானேன்.*

வியாசரின் அருளினால் அவரிடமிருந்து பெற்ற திவ்யமான பார்வையினால் இந்தப் பரம யோகத்தை - பல்வேறு யோகங்களைப் பற்றிக் கூறியதினால் இந்த நூலே யோகம் எனப்படுகின்றது அல்லது இந்த உரையாடலையே யோகமாகக் கருதலாம். நான் கேட்டேன் - சீடப் பரம்பரையின் வழியாக அன்று, யோகேசுவரரான கிருஷ்ணர் தாமே கூற நான் நேரடியாகக் கேட்டேன்.

**राजन्संस्मृत्य संस्मृत्य संवादमिममद्भुतम् ।**
**केशवार्जुनयोः पुण्यं हृष्यामि च मुहुर्मुहुः ॥ ७६॥**

**ராஜன் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாதம் இமம் அத்புதம் ।**
**கேஶவார்ஜுனயோ: புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர் முஹு: ॥ 76॥**

*அரசே! கேசவருக்கும் அர்ஜுனனுக்குமிடையே நடைபெற்ற இந்த அற்புதமான புண்ணிய உரையாடலை நினைந்து நினைந்து மேலும் மேலும் மகிழ்கின்றேன்.*

திருதராஷ்டிர மன்னனே! கேசவருக்கும் அர்ஜுனனுக்குமிடையே நடைபெற்ற அற்புதமான புண்ணியம் வாய்ந்த இந்த உரையாடலை - கேட்ட மாத்திரத்தில் எல்லாப் பாவங்களையும நீக்குகின்ற இந்த உரையாடலை - ஒவ்வொரு கணமும் நினைந்து நினைந்து நான் மீண்டும் மீண்டும் மகிழ்கின்றேன்.

**तच्च संस्मृत्य संस्मृत्य रूपमत्यद्भुतं हरेः ।**
**विस्मयो मे महान्राजन्हृष्यामि च पुनः पुनः ॥ ७७॥**

**தச்ச ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ரூபம் அத்யத்புதம் ஹரே: ।**
**விஸ்மயோ மே மஹான்ராஜன்ஹ்ருஷ்யாமி ச புன: புன: ॥ 77॥**

*அரசே! ஹரியின் அந்த அற்புதமான வடிவத்தையும் நினைந்து நினைந்து எனக்கு பெரியதோர் வியப்பு உண்டாகின்றது. மீண்டும் மீண்டும் மகிழ்கின்றேன்.*

அரசே! ஹரியின் அந்த அற்புதமான வடிவத்தையும் - விசுவரூபத்தை - நினைந்து நினைந்து நான் பெரும் வியப்படைகின்றேன். நான் மீண்டும் மீண்டும் மகிழ்கின்றேன்.

விரித்துரைக்க என்ன,

**यत्र योगेश्वरः कृष्णो यत्र पार्थो धनुर्धरः ।**
**तत्र श्रीर्विजयो भूतिर्ध्रुवा नीतिर्मतिर्मम ॥७८॥**

**யத்ர யோகேய்வர: க்ருஷ்ணோ யத்ர பார்த்தோ தனுர்தர:**
**தத்ர ஸ்ரீர் விஜயோ பூதிர் த்ருவா நீதிர் மதிர் மம ॥ 78॥**

*யோகேசுவரனாகிய கிருஷ்ணன் எங்குளனோ, வில்லேந்திய பார்த்தன் எங்குளனோ, அங்கு திருவும், வெற்றியும், ஆக்கமும், நிலைத்த நீதியும் இருக்கும் என்பது எனது கொள்கை.*

எங்கு - எந்தப் பக்கத்தில், யோகேசுவரனாகிய கிருஷ்ணன் - எல்லா யோகங்களுக்கும் ஆதாரமாக இருப்பவன், எல்லா யோகங்களையும், ஆள்பவன்; வில்லேந்திய பார்த்தன் - காண்டீவம் என்னும் வில்லையுடைய பார்த்தனும் உள்ளனரோ, அங்கு - அந்தப் பாண்டவர் பக்கம், திருவும், வெற்றியும் ஆக்கமும் - திருமகளின் நிறைந்த அருளும், நிலைத்த நீதியும் - தவறாத நீதியும் இருக்கும். இது என் முடிவானக் கொள்கையாகும்.

இவ்வாறு மகாபாரதத்தின் பீஷ்ம பர்வத்தில் உபநிஷத்தும், பிரம்ம வித்தையும், யோக சாஸ்திரமும், ஸ்ரீகிருஷ்ணார்ஜுன சம்வாதமுமாகிய ஸ்ரீமத் பகவத் கீதையில் "மோக்ஷ சந்நியாச யோகம்" என்னும் பதினெட்டாம் அத்தியாயம் நிறைவு பெறுகிறது.

ஸ்ரீ கிருஷ்ணார்ப்பனம்

ஓம் தத் ஸத்

ஸ்ரீமத் பகவத் கீதை முற்றும்



# தோடகாஷ்டகம்

அளவில் சாத்திரம் அறிந்தநற் கடலே
வளமிக உபநிடம் மாந்திய நிதியே
உளமிசை நின்திரு வடிகளைத் தொழுதேன்
தளர்வறு சங்கர தேசிக சரணம் 1

கருணையங் கடலே காத்தருள் செய்வாய்
இருவினை வாழ்வின் இடர்தவிர்த் தருள்வாய்
ஒருபொருள் அதனை ஓர்ந்திடு மறிவை
அருள்வாய் சங்கர தேசிக சரணம் 2

உன்னால் உயிர்கள் உயர்ந்தன பெரியோய்
எந்நா ளுமுயர் ஞானத்தில் நிலைத்தோய்
இந்நா ளிறையுயிர் போதம தருள்வாய்
மன்னா சங்கர தேசிக சரணம் 3

மாயிரு ஞாலம் நீயெனும் எண்ணம்
தோய்கின் றதுவே தொடர்கின் றதுவே
பேயெனு மோகப் பெருங்கடல் தவிர்க்கும்
ஞாயிறே சங்கர தேசிக சரணம் 4

எல்லா உயிரும் ஒன்றெனும் நோக்கம்
பல்நாள் பிறவிப் பயன்தரு வதுவாம்
கல்லாக் கடையேன் காத்தருள் செய்வாய்
நல்லோய் சங்கர தேசிக சரணம் 5

உலக முய்ய உன்னுரு மறைத்து
பலநாள் திரிந்து ஒளியாய்த் திகழ்ந்தாய்
வலம்வரு கதிரே மறையருள் குருவே
நலம்தரு சங்கர தேசிக சரணம் 6

குருபுங் கவனே குருவினுக் குருவே
சரிஉனக் கிணையாய் மதியுடை யவர்யார்?
திருவடி சரணம் அடைந்தவர்க் கருளும்
பெருமுனி சங்கர தேசிக சரணம் 7

கற்றவித் தைகளும் கல்வியு முலகில்
உற்றசெல் வங்களும் ஒன்று மிலாதேன்
பெற்றவ ளினுமிகுக் கிருபைய தருள்வாய்
நற்றவ சங்கர தேசிக சரணம் 8

# பகவத் கீதை

## சுலோக முதற்குறிப்பு அகர வரிசை

**ம**



**ய**

ர



ல



வ



ஶ